# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## அயற்சொல் மடலம் – மூன்றாம் பாகம்

# த

**தக்கல்** *takkal,* பெ.(n.) **தத்கால்** பார்க்க; see tatkāl.

**தக்கன்** *takkaṉ,* பெ.(n.) எட்டு (அட்ட)மா நாகத் தொன்று (பிங்); a divine serpent, one of aṣta-mā-nāgam.

*[Skt. takṣa > த. தக்கன்]*

**தக்கிசராயன்** *takkiśarāyaṉ,* பெ.(n.) ஒரு வகை நறுமணப் (வாசனை) பண்டம் (பொன்னம்பர்) (மூ.அ.); a kind of amber.

**தக்கிணாக்கினி** *takkiṇākkiṉi,* பெ.(n.) யாகத் தீ மூன்றனுள் ஒன்று (திருமுரு. 181, உரை); one of the three sacred fires of vēdic sacrifice.

*[Skt. dakṣi-ṇāgni> த. தக்கிணாக்கினி]*

**தக்கியா** *takkiyā,* பெ.(n.) முகமதிய சடங்கா சிரியர் (fakir)களின் இருப்பிடம்; residence for fakirs. (C.G.).

*[Persn. takya > த. தக்கியா]*

**தக்சீர்** *takšīr,* பெ.(n.) குற்றம் (C.G.); guilt, fault, offence, crime.

*[Ar. taqsīr > த. தக்சீர்]*

**தக்சீர்நாமா** *taksīr-nāmā,* பெ.(n.) குற்றப்பத்திரிகை; charge-sheet (C.G.).

*[Ar. taqsir+U. nāmā > த. தக்கசீர்நாமா]*

**தக்பீர்** *takpīr,* பெ.(n.) அல்லாகு அக்பர் என்று முகமதியர் கூறும் வாழ்த்துச் சொல்; exclamation of praise (Muham).

*[Ar. takbir > த. தக்பீர்]*

**தக்ரமானிசம்** *takramāṉišam,* பெ.(n.) மோருடன் உண்ணும் வறுத்த இறைச்சி; meat fried with ghee and eaten with buttermilk. (சா.அக.).

*[Skt. takramānsa > த. தக்ரமானிசம்]*

**தகசில்தார்** *tagašildār,* பெ.(n.) வட்டாட்சியர், மாவட்ட ஆட்சியருக்குக் கீழ் வட்டத்தில் அரசிறை தண்டும் அதிகாரி; a revenue-officer incharge of a taluk under the district collector.

த.வ. வட்டாட்சியர்

*[U. tāhsildār > த. தகசில்தார்]*

**தகரீர்** *tagarīr,* பெ.(n.) முற்காலத்தில் பராமரிப்பு மேற்பார்வையாளர்களுக்குக் கொடுத்து வந்த தரகு; percentage or allowance given in former days to superintendents of public works. (C.G.).

*[Ar. taqlīl > த. தகரீர்]*

**தகவல்** *tagaval,* பெ.(n.) ஒரு நிகழ்வு அல்லது ஒரு பொருள் குறித்த உண்மைச் செய்தி அல்லது அறியப்படும் செய்தி; facts or knowledge provided or learned, information.

த.வ. தரவல்

*[Ar. dhkhal > த. தகவல்]*

**தகாதா** *takātā,* பெ.(n.) 1. குற்றம்; harm. இனி நான் இருந்தாலும் இராவிட்டாலும் தகாதா யாதும் இல்லை (சென்.வ.). 2. வழக்கு (வின்); criminal proceeding, law suit. 3. நெருக்குகை; troublesome importunity in urging the settlement of a claim or payment of a debt, dunning.

த.வ. வழக்கீடு

*[Skt. taqāzā> த. தகாதா]*

**தகீத்து** *tagīttu,* பெ.அ.(adj.) 1. சரியான; correct, true (C.G.). 2. தெளிவான; distinct, clear.

*[Ar. tahqiq > த. தகீத்து]*

**தகீதாய்** *tagītāy,* வி.அ.(adv.) நம்பிக்கையாய்; reliably, as from personal knowledge. *அவன் தகீதாய்ச் சொல்லுகிறான்' (செ.வ.).*

*[Ar. aqida > த. தகீது+ஆய்]*

**தச[1]** *taša,* பெ.(n ) பத்து; ten. *"எண்ணித் தசவென் றிடுகென்றான்" (நள. கலிநீ. 9).*

*[Skt. daša > த. தச]*

**தச[2]** *taša,* வி.(v.) (das என்னும் வடசொல்லின் ஏவல் வடிவம்) 'கடி' என்னும் பொருள் கொண்ட ஒரு வடசொல்; a Sanskrit word meaning 'bite'.

*[Skt. daša > த. தச]*

**தசக்கீரிவன்** *taša-k-kirivan,* பெ.(n.) பத்துத் தலையோன், இராவணன்; Rāvaṇā as ten heads. *"தசக் கிரீவற் கிளையோற்கு" (திவ். பெரியதி. 8, 6, 7).*

*[Skt. dašagriva > த. தசக்கீரிவன்]*

**தசகண்டன்** *taša-kaṇḍan,* பெ.(n.) **தசக் கீரிவன்** பார்க்க (இலக். அ.); see *tasa-k-kirivan.*

*[Skt. taša+தச + கண்டன்]*

**தசகம்** *tašagam,* பெ.(n.) பத்து செய்யுட் கொண்ட பனுவல் (பிரபந்தம்); a poem of ten stanzas.

**த.வ. பதிகம்**

*[Skt. dašaka > த. தசகம்]*

**தசகரம்** *tašakaram,* பெ.(n.) 1. பகல் உறக்கம்; day sleep. 2. காமம்; lust. (சா.அக.)

**தசகாரியம்** *tašakāriyam,* பெ.(n.) 1. மெய் யுருவம் (தத்துவரூபம்), மெய்க்காட்சி (தத்துவதரிசனம்), மெய்த்தூய்மை (தத்துவ சுத்தி), ஆதன் உருவம் (ஆன்மரூபம்), ஆதன் காட்சி (ஆன்ம தரிசனம்), ஆதன்தூய்மை (ஆன்மசுத்தி), சிவனுருவம் (சிவரூபம்), சிவக்காட்சி (சிவதரிசனம்), சிவயோகம், சிவநுகர்ச்சி (சிவயோகம்) என்ற ஆதன் பட்டறிவு (ஆன்மா நுபவ) நிலைகள்; (Saiva), the ten spiritual experiences of the soul in its path towards final deliverance, viz. *tattuva-rūpam, tattuva-tarišanam, tattuva-sutti, ānmārūpam, ānma-darišanam, ānma-sutti, šivarūpam, šiva-darišanam, šivayōgam, šiva-pōgam.* 2. பண்டார சாத்திரத்துள் அம்பலவாண தேசிகர், தட்சிணா மூர்த்தி தேசிகர், சுவாமி நாத தேசிகர் என்ற மூவரால் இயற்றப்பட்ட மூன்று சைவக் கொண்முடிபு (சைவ சித்தாந்த) நூல்கள்; the three saiva siddhānta treatises by *ambalavāṇa-tēsigar, ṭatcināmūrti-tēsigar* and *suvāmināda-tēsigar* (q.v.). 3. சிதம்பர நாத தேசிகர் இயற்றிய சைவக்கொண்முடிவு (சைவ சித்தாந்த) நூல்; a Saiva siddhānta treatise by *sidambaranāda-tēsigar.* 4. மாயாரூபம், மாயாதரிசனம், மாயாசுத்தி, சிவரூபம், சீவதரிசனம், சீவசுத்தி, பிரமரூபம், பிரமதரிசனம், தேக கைவல்லியம், விதேக கைவல்லியம் என்ற அதன் நுகர்வு ஆன்மாநுபவ நிலைகள் (வேதா. தச. கட்.); the ten achievements of the self in its path towards realization, viz. *māyā-rūpam, māyā-tarisaṇam, māyā-sutti, šiva-rūpam, šiva-tarisaṇam, šiva-sutti, pirama-rūpam, pirama-tarisaṇam, tēkakai valliyam, vitēkakaivalliyam.*

**த.வ. பதின் கருமம்**

*[Skt. daša > த. தச]*

**தசகுணம்** *tašaguṇam,* பெ.(n.) பதின்மடங்கு; ten times. (சா.அக.).

*[Skt. dasa > த. தச+குணம்]*

**தசசீலம்** *tašašilam,* பெ.(n.) புத்தத் துறவி களுக்கான பத்து வகையான ஒழுக்க நெறிகள் (மணிமே. 21, 57, உரை); (Buddh) the ten kinds of moral and austere- practices prescribed for Buddhist ascetics.

*[Skt. dasā+šila > த. தசசீலம்]*

**தசதானம்** *tašadāṇam,* பெ.(n.) பார்ப்பனர் (பிராமணர்)களுக்கு நன்னாட்களில் தருகின்ற மாடு (பசு), நிலம் (பூமி) எள், பொன், நெய், ஆடை, வெல்லம், நெல், வெள்ளி, உப்பு என்ற பத்து வகைக் கொடைகள்; gifts to brahmins made on ceremonial occasions of ten

**தசபந்தம்** *tašabandam,* பெ.(n.) 1. செலுத்த வேண்டும் வரியிற் பத்திலொன்றை குளம் வெட்டல் முதலிய பொதுச் செயல் (தருமங்) களை நடத்தும் பொருட்டு நீக்குகை (W.G.); deduction of 1/10 of the land-tax to compensate for some public work, as the construction of a tank. 2. **தசபந்தவினாம்** பார்க்க; see *tasabandavinām.*

*[Skt. daša > த. தசம்]*

**தசபந்தவினாம்** *tašabandavinām,* பெ.(n.) பொதுச் செயல் (தருமங்)கள் நடப்பதற்காகத் தீர்வை குறைத்து விடப்பட்ட மானியம் (C.G.); grant of land at a favourable assessment of grant of land-revenue given on account of some work of public utility rendered by the grantee.

**தசபலன்** *tašapalan,* பெ.(n.) புத்தன் (மணிமே. 29, 26, உரை); Buddha, as fortified by *tasa-bāramidai.*

*[Skt. daša > த. தசம்]*

**தசபாரமிதை** *tašabāramidai,* பெ.(n.) புத்த பதவிக்குரிய தானம், குணம் (சீலம்), பொறுமை (க்ஷமை), வீரியம், ஊழ்கம் (தியானம்), பிரஞ்ஞை, வழிவகை (உபாயம்), இரக்கம் (தயை), பயன் (பலம்), அறிவு (ஞானம்) என்ற பத்துக் குணச் சிறப்பு (விசேடங்)கள் (மணிமே. 26, 45, உரை); the ten transcendental virtues necessary for buddhahood viz. *tānam, cīlam, kṣamai, viriyam, tiyānam, pirannai, upāyam, tayay, palam, ñānam.*

**தசபின்னம்** *tašabinnam,* பெ.(n.) **தசாமிசம்** பார்க்க; (mod); see *tašāmišam.*

**தசமச்சபாடாணம்** *tašamacca-pādāṇam,* பெ.(n.) கச்சால நஞ்சு; a kind of arsenic. (சா.அக.).

**தசமப்புள்ளி** *tašama-p-pulli,* பெ.(n.) முழு எண்ணை அடுத்து, மதிப்பில் ஒன்றைவிடக் குறைந்த எண்ணைப் பதின்ம (தசம)ப் பகுதிகளாகப் பிரித்துக் காட்ட இடப்படும் புள்ளி; decimal point.

**த.வ. பதின்புள்ளி**

*[Skt. dašama >த. சமம் + புள்ளி]*

**தசம்** *tašam,* பெ.(n.) பத்து; ten. *"தசநான் கெய்திய பணை மரு ணோன்றாள்" (நெடுநல். 115).*

*[Skt. dasa > த. தசம்]*

**தசமபாகம்** *tašamabāgam,* பெ.(n.) 1. பத்தில் ஒரு பங்கு; 1/10 of a share, *2. நாடிக் கணியத்தில் ஒரு பகுதி;* a portion of nādi astrology (சா.அக.).

*[Skt. dašama > த. தசமம்+பாகம்]*

**தசமம்** *tašamam,* பெ.(n.) பத்தவாது; tenth. *"தசமஸ்கந்தம்".*

*[Skt. dašama > த. தசமம்]*

**தசமன்** *tašaman,* பெ.(n.) உயிர்; soul. (சா.அக.).

**தசமா** *tašamā,* பெ.(n.) உறுதிப் படுத்தப்பட்ட மனித வாழ்நாள் (ஆயுள்) நூறு ஆண்டின் இறுதி பாகம்; the 10th and the last stage of the prescribed human life (from 91 to 100 years). (சா.அக.)

*[Skt. dasama > த. தசமா]*

**தசமாசியம்** *tašamāšiyam,* பெ.(n.) பத்து மாதக் குழந்தை; full term foetus, 10 months foetus. (சா.அக.)

*[Skt. dasa, māša > த. தசமாசியம்]*

**தசமி** *tasami,* பெ.(n.) 1. பத்தாம் நாள் (திதி); the tenth lunar day of the bright or dark fortnight. *"உளம் விரும்புந் தசமிதனி லுகுற்று மானால்" (சேதுபு. துரா. 30).* 2. பத்தாம் நாளி (தசமியி)ல் உண்ணும் பணியாரம்; a kind of bread, eaten especially in tasami.

*[Skt. dašami > த. தசமி]*

**தசமித்திரம்** *tašamittiram,* பெ.(n.) பத்து வகைத் துணைச் சரக்குகள்; the ten friendly drugs.

1. வெண்ணெய்–butter. 2. செங்காரம்–borax. 3. குன்றி–jeweller's bead. 4. வெல்லம்–jaggery. 5. ஆமணக்கு–castor seed. 6. பழம்–lime fruit. 7. தேன்–honey. 8. அளி–sweet liquor. 9. காடி –fermented liquor, vinegar. 10. புறாவின் எச்சம் – doves excreta.(சா.அக.)

*[Skt. dasa+mitra > த. தசமித்திரம்]*

**தசமுகநதி** *tašamuganadi,* பெ.(n.) கங்கை (பிங்.); the ganges.

*[Skt. dašan+ த.muga+nati > த. தசமுகநதி]*

**தசமுகவுதயாக்கினி** *tašamugavuda-yākkini,* பெ.(n.) காய்ச்சல் ஏற்படும் பொழுது கொடுக்கும் ஓர் ஆயுர்வேத மருந்து; an ayurvedic medicine prescribed for fevers. (சா.அக.)

**தசமுகன்** *tašamugan,* பெ.(n.) பத்துத் தலையுடையவன் (இராவணன்); Rāvaṇan. *"தசமுகனெரிதா ஒன்று சண்பையான்" (தேவா. 141, 9).*

*[Skt. daša > த. தச+முகன்]*

பிள்ளைப்பருவத்தில் இராவணன் கழுத்தில் அணிவித்த தொண் (நவ) மணி மாலையில் ஒவ்வொரு மணியிலும் அவன் முகம் தெரிந்ததால் மொத்தம் பத்து முகம் எனக் கருதியிட்ட பெயர் தசமுகன் என "பவுமசரிய" என்னும் சமண இராமாயண நூலில் கூறப்பட்டுள்ளது.

**தசமூலக்கசாயம்** *tašamūla-k-kašāyam,* பெ.(n.) 1. பத்து வகை மருந்து வேர்களைக் கொண்டு உருவாக்கும் கருக்கு; decoction prepared from the roots of ten plants. 2. **தசமூலம்** பார்க்க; see *tašamūlam.* (சா.அக.)

*[Skt daša > த. தசம்+மூலம்+Skt. kaša > த. கசாயம்]*

**தசமூலம்** *tašamūlam,* பெ.(n.) கண்டங்கத்தரி, சிறு வழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி, வில்வம், பெருங்குமிழ், தழுதாழை, பாதிரி, வாகை என்ற பத்து மருந்து வேர்கள் (பதார்த்த. 498); the ten medicinal roots viz. *kaṇtaṅ-kattari, siruvaḻutuṇai, suṟumalli, perumalli, neruñji, vilvam, peruṅkumiḻ, taḻutāḻai, pātiri, vākai.*



*[Skt. dašam > த. தசம்+மூலம்]*

**தசமொழி** *tašamoḻi,* பெ.(n.) மோசே வரையறுத்த (விதித்த) பத்துக்கட்டளைகள்; the decalogue, ten commandments. (Chr.).

*[Skt. daša > த. தசம் + மொழி]*

**தசரதன்** *tašaradan,* பெ.(n.) அயோத்தி மன்னன்; the king of Ayōdhya.

**தசரா** *tašarā,* பெ.(n.) காளி (துர்க்கை)யின் பொருட்டு மாளய காருவாவை (அமாவாசையை) அடுத்து நிகழ்த்தப்படும் பத்துநாட் பண்டிகை; a festival of 10 days in honour of durgā in the bright fortnight immediately after mālaya amāvāsai.

*[Skt. daša-rātra > த. தசரா]*

**தசராத்திரஞாதி** *taša-rāttira-ñādi,* பெ.(n.) பத்துநாள் தீட்டுக் காத்தற்குரிய ஏழு தலைமுறைக்குட்பட்ட வழிக்கு உரிமைப் பங்காளி; agnatic relations within the 7th degree, as persons for whom pollution for 10 days is ordained on occasions of birth and death.

**தசராத்திரம்** *tašarāttiram,* பெ.(n.) பத்து நாள்; ten days. (சா.அக.)

**தசரிப்பு** *tašarippu,* பெ.(n.) இலவயம், அன்பளிப்பு (இனாம்) (வின்.); reward, present.

*[Ar. tashrif > த. தசரிப்பு]*

**தசவந்தம்** *tašavandam,* பெ.(n.) தசபந்தம் பார்க்க; see tasapandam. (S.I.I.III, 161). *"தசவந்தங் காலளவு கூலியும்".*

**தசவருக்கம்** *tašavarukkam*, பெ.(n.) பிறப்பு காலச் சக்கரத்தை ஒரை (இராசி), பிறப்போரை, திரேக்காணம், சத்தமாங்கிசம், நவாங்கிசம், தசாங்கிசம், துவாதசாங்கிசம், கலாங்கிசம், திரிசாங்கிசம், சட்டியாங்கிசம் எனப் பத்து வகையாகப் பிரிக்கும் பிரிவு; ten fold division of horoscope. viz. *irāsi, ōrai, tirēkkāṇam, cattamāṅkisam, navāṅ kisam, tasāṅkisam, tuvālā-sāṅkisam, kalāṅkisam, tiriṅsāṅkisam, saṣtiyāṅkisam.*

**தசவவதாரன்** *tašavavadāraṉ*, பெ.(n.) (பத்து தோற்றரவு எடுத்தவன்) திருமால் (பிங்.); Viṣṇu.

[Skt. *daša+avatārin* > த. *தசவவதாரன்*]

**தசவாயு** *tašavāyu*, பெ.(n.) பத்து வகை வளிகள் (பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்) (பிங்.); the ten vital airs of the body viz. *pirāṇaṉ, apāṉaṉ, utāṉaṉ, viyāṉaṉ, camāṉaṉ, nākaṉ, kūrmaṉ, kirukaraṉ, tēvatattaṉ, taṉañcayaṉ.*

[Skt. *dasa+vāyu* > த. *தசவாயு*]

**தசவாயுக்கள்** *tašavāyukkaḷ*, பெ.(n.) பத்து வளிகள் (தசவாயுக்கள்) கையின் ஐந்து விரல்களில் தங்கி நிற்கும் பத்து வகை வளி (வாயு)க்கள்; the ten vital airs found to prevail in the five fingers. (சா.அக.)

[Skt. *dasa+vāu* > த. *தசவாயு. 'கள்' பன்மையீறு*]

**தசனப்பொடி** *tašaṉa-p-poḍi*, பெ.(n.) கருநிறம் உள்ள பற்பொடி வகைகள் (வின்.); a black tooth powder which colours and strengthens the teeth.

[Skt. *dašana* > த. *தசனம்*]

**தசனம்** *tašaṉam*, பெ.(n.) 1. பல் (பிங்.); tooth. 2. மலை முடி (யாழ்.அக.); peak, summit. 3. கவசம் (பிங்.); armour.

[Skt. *dašana* > த. *தசனம்*]

**தசனவாசம்** *tašaṉavāšam*, பெ.(n.) உதடு; lip.

**தசனாஞ்சு** *tašaṉāñju*, பெ.(n.) பல்லை மூடிக் கொண்டிருக்கும் மினுமினுப்பான ஒரு பொருள்; enamel of tooth. (சா.அக.).

த.வ. பற்காரை

**தசனோற்பவம்** *tašaṉōṟpavam*, பெ.(n.) பல் முளைக்கை (பைஷஜ. 264); dentition, teething.

த.வ. முளைப்பு

[Skt. *dašan(a)+udbhava* > த. *தசனோற்பவம்*]

**தசா** *tašā*, பெ.(n.) கோளை (கிரகத்தை)ப் பொறுத்த ஊழ்வினை (விதி)ப் பயன்; the fate of man as depending on the position of planets. (சா.அக.).

த.வ. கோளுறுவினைப்பயன்

**தசாக்கரி** *tašā-k-kari*, பெ.(n.) பண்வகை (சிலப். 13, 112, உரை); a melody.

[Skt. *dašukṣari* > த. *தசாக்கரி*]

**தசாகம்** *tasāgam*, பெ.(n.) இறந்தவர்க்குப் பத்தாம் நாட் செய்யுஞ் சடங்கு (Brāh.); ceremony on the tenth day after a person's death.

த.வ. பத்தாம்நாள் நடப்பு

[Skt. *dašaha* > த. *தசாகம்*]

**தசாங்கத்தயல்** *tasāṅga-t-tayal*, பெ.(n.) ஆசிரிய மண்டிலத்(விருத்)தால் அரசிய லுறுப்புகள் பத்தனையும் பாடும் பனுவல் (பிரபந்த) வகை (தொன். 283, உரை); a poem in āširiyam metre celebrating the ten constituents of a kingdom, one of 96 pirabandam.

த.வ. ஆசிரியப்பதினம்

[Skt. *dasa+aṅga* > த. *தசாங்கம் + இயல்*]

**தசாங்கப்பத்து** *tasāṅga-p-pattu*, பெ.(n.) நேரிசை வெண்பாவால் அரசியலுறுப்புகள்

பத்தனையும் பாடும் பனுவல் (பிரபந்த) வகை (இலக். வி. 840); a panegyric poem in *nēriśai-veṇbā* celebrating the ten constituents of a kingdom one of 96 pirabantam (q.v.).

*[Skt. dasa+aṅga > த. தசாங்கம்+பத்து]*

**தசாங்கம்[1]** *taśāṅgam,* பெ.(n.) 1. பெயர், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி (திருவாச.); யானை, நாடு, ஊர், ஆறு, மலை, குதிரை, தேர், முரசு, தார், கொடி (திவா & பிங்.); யானை, நாடு, ஊர், ஆறு, மலை, குதிரை, செங்கோல், முரசு, தார், கொடி (வெண்பாப்.); யானை, நாடு, ஊர், ஆறு, மலை, குதிரை, தானை, முரசு, தார், கொடி (சூடா.) என்று பலவகையாகக் கூறும் பத்து அரசியலுறுப்புகள்; the ten constituents of a kingdom, viz. *nāmam, nāḍu, ūr, āṟu, malai, ūrdi, paḍai, murasu, tār, koḍi,* according to *tiruvāsagam, yāṉai, kudirai, tēr,* instread of *nāmam, ūrdi, paḍai,* according to *tivāgaram* and *piṅgalantai, yāṉai, kudirai, ceṅgōl,* instead of *nāmam, ūrdi, paḍai* according to *veṇbā-p-pāṭṭiyal, yāṉai, kudirai, tāṉai* instead of *nāmam ūrdi, paḍai,* according to *cūḍamaṇi.* 2. பத்து வகை நறுமணப் பொருள் (திரவியங்)களா லாகிய பொடி; incense prepared from ten aromatic substances, used in worship.

*[Skt. dasāṅga > த. தசாங்கம்]*

**தசாங்கம்[2]** *tasāṅgam,* பெ.(n.) உடம்பின் பத்து உறுப்புகளினின்று பிறக்கும் மேகநோய்; a kind of veneral disease emanating from the affection of ten organs in the human system.

**தசாங்கிசம்** *taśāṅgiśam,* பெ.(n.) 1. ஓரை (இராசி)யைப் பத்தாகப் பிரித்துக் கோள் (கிரகங்)களின் நிலையைக் குறிக்குச் சக்கரம் (சோதிட. சிந். 123); a horoscopical chart wherein the position of each planet is determined by dividing its rāci into ten parts, one of *tasa-varukkam.* 2. **தசாமிசம்** பார்க்க; see *tasāmiśam.*

**தசாசந்தி** *taśā-śandi,* பெ.(n.) கோள் திசைகளின் சந்திப்பு; junction of the regnal periods of two planets.

*[Skt. daśā > த. தசா]*

**தசாட்சரி** *tasāṭcari,* பெ.(n.) **தசாக்கரி** பார்க்க (சங்.அக.); see *tasā-k-kari.*

**தசாண்டக்கூறு** *taśāṇḍa-k-kūṟu,* பெ.(n.) ஐந்து வகைப் பறவைகளாகிய கருடன், கோழி, மயில், குருவி, காக்கை ஆகியவற்றின் முட்டை களும், ஊர்வனவாகிய உடும்பு, அளுங்கு, ஆமை, முதலை, பாம்பு ஆகியவற்றின் முட்டை களும் ஆக இருபது முட்டைகளைக் கொண்டு உருவாக்கும் எண்ணெய் (தைலம்) அல்லது மெழுகு; a medicated oil or wax like preparation made from the eggs of five birds such as bramini kite, fowl, peacock, sparrow and crow and those of reptiles such as guana, biwalve fish, tortoise, alligator and snake. (சா.அக.).

*[Skt. dasa+aṇḍa > த. தசாண்டம் + கூறு]*

**தசாண்டம்** *taśāṇḍam,* பெ.(n.) மயில், கருடன், அடைக்கலங் குருவி, செம்போத்து, அளுங்கு, உடும்பு, முதலை முதலியவற்றின் பத்து வகை முட்டை; the eggs of ten different kind of birds and reptiles - peacock, bramani kite, Indian house sparrow, shall fish, guana, alligator etc. (சா.அக.).

*[Skt. dasa+aṇḍa > த. தசாண்டம்]*

**தசாதரு** *taśā-taru,* பெ.(n.) குதிரைச் சுழிகள் பத்து (அசுவ. 17); ten marks of horses.

**தசாநாதன்** *tasānādaṉ,* பெ.(n.) 1. திசைக்குத் தலைமை கொள்ளும் கோள்; the reigning planet of a particular period. 2. நல்ல கோள் நிலை (தசாபலன்); benign influence of a planet.

*[Skt. daśa+nāda > த. தசாநாதன்]*

**தசாப்தம்** *tašāpdam,* பெ.(n.) (அ.வ.) பத்து ஆண்டுக் காலம்; decade. *'இரண்டு தசாப்தங்களில் பல அரசியல் மாற்றங்கள் ஏற்பட்டு விட்டன'.*

*[Skt. dasa+abda > த. தசாப்தம்]*

**தசாபலன்** *tašāpalan,* பெ.(n.) கோள் ஆட்சிக்காலத்தின் பலன்; influence of a planet in its regnal period.

*[Skt. daša > த. தசா]*

**தசாம்சம்** *tašāmšam,* பெ.(n.) 1. பத்திலொரு பாகம்; a tenth part.

த.வ. பதின்மம்

*[Skt. dašan+amša > த. தசாமிசம்]*

**தசார்** *tašār,* பெ. (n.) அணியம் (யாழ்.அக.); ready.

*[Persn. tayar > த. தசார்]*

**தசாவதாரம்** *tašāvadāram,* பெ.(n.) மீன், ஆமை, பன்றி, மாந்த அரிமா (நரசிங்கம்), வாமனம், பரசுராமன், இராமன், பலராமன், கண்ணன் (கிருட்டிணன்), குதிரை (கல்கி) என்னும் திருமாலின் பத்துப் பிறப்புகள் (பிங்.); the ten avatars of Visnu viz. *matsyam, kūrmam, varāgam, narasiṅgam, vāmanan, parasurāman, rāman, balarāman, kiruṭṭinan, kalki.*

த.வ. ஒன்பான் தோற்றரவு

*[Skt. dašan+avatāra > த. தசாவதாரம்]*

**தசாவதானம்** *tašāvadānam,* பெ.(n.) ஒரே நேரத்தில் நிகழும் (பத்து) செயல்களைக் கவனித்து நினைவில் இருத்தும் கலைத் திறமை; the skill of responding to (ten) tasks performed simultaneously.

த.வ. பதின்திறன்

**தசாவதானி** *tašāvadāni,* பெ.(n.) தசாவதானம் செய்பவர்; one who performs tašāvadānam.

த.வ. பதின்திறனாளர், பதின் கவனகர்

**தசானன்** *tašānan,* பெ.(n.) **தசமுகன்** பார்க்க (யாழ்.அக.); see *tašamugan.*

**தசியு** *tasiyu,* பெ.(n.) 1. மண்ணின் மைந்தரான ஆரியரல்லாத இந்திய இனத்தார்; a non-Aryan natives of India.

*[Skt. dasyu > த. தசியு]*

**தசிரதேவதை** *taširadēvadai,* பெ.(n.) இரட்டை (அசுவினி)த் தேவர் (யாழ்.அக.); Ašvini the twin-gods.

**தசேந்திரியம்** *tašēndiriyam,* பெ.(n.) கன்மேந்திரியம் ஐந்தும் ஞானேந்திரியமைந்துங் கூடிய பத்து புலன் (இந்திரியங்)கள் (யாழ்.அக.); the ten organs of the human body consisting of the five *kanmēntiriyam* and five *ñanēntiriyam.*

**தசோபநிடதம்** *tasōbaniḍadam,* பெ.(n.) ஈசம், கேனம், கடம், பிரசினம், முண்டகம், மாண்டுக்கியம், தைத்தீரியம், ஐத்திரேயம், சாந்தோக்கியம், பிருகதாரணியம் என்ற பத்துச் சிறப்புடைய உபநிடதங்கள்; ten important upanishads, viz. *īšam, kēnam, kāṭam, piracinam, munṭakam, mānṭūkkiyam, taṭṭiriyam, aitarēyam, eāntōkkiyam, pirukatāraniyam.*

**தசோபநிசத்து** *tasōpa-nisattu,* பெ.(n.) **தசோபநிடதம்** பார்க்க; see *tasōba-niḍadam.*

**தஞ்சகம்** *tañjagam,* பெ.(n.) காய்ச்சலினால் உடம்பின் மேற்காணும் தழும்புகள்; eruptions or purple spots which appear on the skin in malignant fevers. (சா.அக.)

**தட்சணகெளளி** *taṭšaṇakauḷi,* பெ.(n.) மங்களமாக வலது பக்கத்தில் இருந்து பலுக்கும் பல்லி; lizard chirping from the right side which is considered auspicious. (சா.அக.)

**தட்சணநட்சத்திரராசி** *taṭcaṇa-naṭcattira-rāši,* பெ.(n.) ஓரை (இராசி) மண்டல விண்மீன்

(நட்சத்திரங்)களுக்குத் தென்பாலுள்ள விண்மீன் (நட்சத்திரத்) தொகுதி; the southern constellations.

**தட்சணநீர்** *tatcananir,* பெ.(n.) தென் நாட்டு (பூமி) நீர், அதாவது காவேரி; water of the south i.e. the river cauvery. (சா.அக.)

*[Skt. tatšana>த. தட்சண + நீர்]*

**தட்சணப்புல்** *tatcana-p-pul,* பெ.(n.) சாணப்புல்; deccany grass. (சா.அக.)

*[Skt. tatšana>த. தட்சணம் + புல்]*

**தட்சணபத்திரி** *tatcana-pattiri,* பெ.(n.) 1. ஒட்டொட்டுப்புல்; sticking grass. 2. சாணம்; deccany grass as distinguished from bengal grass. (சா.அக.)

**தட்சணம்** *tatcanam,* பெ.(n.) 1. உடனே; instantaneously. 2. வலப்பக்கம்; right side (சா.அக.)

**தட்சணாமூர்த்தி** *tatcanā-mūrtti,* பெ.(n.) **தட்சிணாமூர்த்தி** பார்க்க (சங்.அக.); see *tatsināmūrtti.*

**தட்சணை** *tatcanai,* பெ.(n.) **தட்சிணை** பார்க்க (இ.வ.); see *tatcinai.*

**தட்சன்** *tatcan,* பெ.(n.) 1. சேவல்; cock. 2. நெருப்பு; fire. 3. பரத்தைகளிடம் உறவு கொள்பவன்; sexual attraction towards other woman. (சா.அக.)

**தட்சாயம்** *tatcāyam,* பெ.(n.) கருடன்; brahminury kite. (சா.அக.)

**தட்சிகம்** *tatcigam,* பெ.(n.) வலப்பக்கம்; right side. (சா.அக.)

**தட்சிணபூமி** *tatcinabūmi,* பெ.(n.) நில வுருண்டையின் (பூகோளத்தின்) தென் குளிர் (சீதள) பாகம்; antarctic zone. (mod.)

**தட்சிணம்** *tatcinam,* பெ.(n.) 1. தெற்கு; south. 2. வலப்பக்கம்; right side. 3. **காளாமுகம்** பார்க்க; see *kāļāmukam* (சி.சி.2, 73 சிவாக்.).

4. தாராளம் (யாழ்.அக.); liberality. 5. விவேகம் (யாழ்.அக.); discrimination.

*[Skt. dakṣiṇa > த. தட்சிணம்]*

**தட்சிணமார்க்கம்** *tatcina-mārkkam,* பெ.(n.) காளாமுகம், மாநோன்பை (மாவிரதத்தை)ப் பெரும்பாலும் ஒத்த சிவனியத்தின் உட்பகுதி; one of the minor systems of saivaism closely allied to māviradam.

**தட்சிணாக்கினி** *tatcinā-k-kini,* பெ.(n.) **தக்கிணாக்கினி** பார்க்க; see *takkinā-k-kini.*

**தட்சிணாட்சம்** *tatcināṭcam,* பெ.(n.) நில வுருண்டையின் (பூகோளத்தின்) தென்பாகம்; south latitude (Mod.).

**தட்சிணாபந்தம்** *tatcinābandam,* பெ.(n.) மூன்று வகைப் பாகங்களில் ஒன்று; one of the three kinds of bondage. (சா.அக.).

**தட்சிணாமூர்த்தம்** *tatcinā-mūrttam,* பெ.(n.) சிவன் தென்புறமாக அமர்ந்து நான்முக (பிரம) குழந்தைகளாகிய சனகர். முதலிய (சன காதியர்) நால்வருக்கும் அருளிய திருவுருவம்; the posture of Šiva facing the south and instructing the four sons of Brahma.

*[Skt. dakṣina+mūrtta > த. தட்சிணா மூர்த்தம்]*

**தட்சிணாமூர்த்தி** *tatcinā-mūrtti,* பெ.(n.) 1. தென்முக மாயிருக்கும் சிவனுருவம் (திருவிளை. பாயி. 13); šiva facing the south. 2. அகத்தியர் (வின்.); Agastya, as dwelling in the south. 3. நூற்றெட்டுபநிடதங்களுள் ஒன்று; an upaniṣad, one of 108.

**தட்சிணாமூர்த்திதேசிகர்** *tatcinā-mūrtti-tēsigar,* பெ.(n.) பண்டார நூல் (சாத்திரங்) களுள் இரண்டு நூல் செய்தவரும் திருவாவடு துறை மட (யாதீன)த்தைச் சார்ந்தவருமாகிய ஒரு சிவனியத் துறவி; a Saiva ascetic of the *tiru-vāvaḍu-turai-y-ātinam,* author of two works in *paṇḍāra-sāttiram.*

**தட்சிணாயனம்** *tatcināyanam,* பெ.(n.) கடகம் (ஆடி) முதல் ஞாயிறு (சூரியன்) தெற்கு முகமாகச் செல்லும் ஆறு மாத காலம்; period of the sun's southward passage extending for six months from āḍi.

**தட்சிணாவசரம்** *tatcināvašaram,* பெ.(n.) குழந்தை கருப்பையில் வலது பக்கம் உலாவல்; moving in the right part of the womb as foetus. (சா.அக.)

**தட்சிணாவர்த்தம்** *tatcināvarttam,* பெ.(n.) 1. வலம்புரிச் சங்கு; conch shell having its spiral twisted forwards on the right side. 2. பெண்ணின் கொப்பூழ்; woman's naval. (சா.அக.).



**தட்சிணை** *tatcinai,* பெ.(n.) 1. குரு முதலிய பெரியோர்க்குக் கொடுக்கும் பொருள்; offering or fee to a guru, school master, etc. 2. தன்னக் கட்டுதல்; bribe, inducement, used in contempt. 3. தண்டனை (சிட்சை) (யாழ்ப்); discipline, punishment.

**தட்சியராசன்** *tatciyarāšan,* பெ.(n.) பொன்னம்பர்; gold coloured amber. (சா.அக.)

**தண்டிலம்** *tandilam,* பெ.(n.) 1. வேள்வி செய்வதற்குத் தெரிந்தெடுத்து(நியமித்து)க் கொண்ட இடம் (சீவக.2464,உரை); place designed for the sacrificial fire. 2. சிவபூசைக்குத் தெரிந்தெடுத்து(நியமித்து)க் கொண்ட இடம்; place designed for worshipping Siva. "தண்டிலந்தனினும் பகர்தரு மிலிங்க மூர்த்தியினும் (காஞ்சிப்பு. சனற்கு.20).

[*Skt. sthandila* > *த. தண்டிலம்*]

**தண்டுலம்** *tandulam,* பெ.(n.) அரிசி; rice. "தண்டுலம் விரித்துநற்றருப்பை சாத்தியே" (கம்பரா.கடிமண.85).

[*Skt. tandula* > *த. தண்டுலம்*]

**தணிக்கை** *tanikkai,* பெ.(n.) கண்காணிப்பு; audit, investigation.

[*Ar. tanqiya* > *த. தணிக்கை*]

**தத்கால்** *tatkal,* பெ.(n.) விரைந்த உடனடித் தேவை கருதி தரப்படும் முன்னுரிமை, முன்னுரிமைப் பயணச்சீட்டு; preference or travel ticket given on the basis of immediate and urgent need.

த.வ. உடனடி

**தத்தாங்காரம்** *tattāngāram,* பெ.(n.) மாநரகங்களுள் ஒன்று (சி.போ.பா.2,3,பக். 203); a hell, one of *mānaragam.*

**தத்தாத்திரேயம்** *tattā-t-tirēyam,* பெ.(n.) நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; an upanisad one of 108.

**தத்தாபகாரம்** *tattāpakāram,* பெ.(n.) நன்கொடையைத் திரும்பப்பெறும் கரிசு (பாவம்); the sin of taking back what was once given as gift.

**தத்தியோதனம்** *tatti-y-ōdanam,* பெ.(n.) தயிர்ச் சோறு (கொ.வ.); a delicious preparation of boiled rice mixed with curds.

[*Skt. dadhi+ōdana* > *த. தத்தியோதனம்*]

**தத்துப்புத்திரன்** *tattu-p-puttiran,* பெ.(n.) ஏற்றுக்கொண்ட மகன் (சுவிகாரப் புத்திரன்); adopted son.

த. ஏற்புமகன்

[*Skt. datta* > *த. தத்து+புத்திரன்*]

**தத்துவசம்பிரதம்** *tattuva-šambiradam,* பெ.(n.) ஒரு பூதத்தில் வேறொரு பூதந்

தோற்றுவிக்கும் மகேந்திர சாலவித்தை (சௌந்தரிய, ஆனந். 30, உரை); magic art by which one of the five elements is made to appear from another.

**தத்துவசுத்தி** *tattuva-šutti,* பெ.(n.) முப்பத்து ஆறு மெய்ம்மை (தத்துவங்) கட்கும் (ஆன்மா) ஆதன் தொடர்பாக ஏற்படும் பட்டறிவு (அனுபவ) நிலை; spiritual experience of the soul not influenced by the thirty six constituent priciples of the body by knowing itself to be a different entity. (சா.அக.)

**தத்துவஞானம்** *tattuvañāṉam,* பெ.(n.) 1. கடவுளை அறியும் அறிவு; knowledge of the deity. 2. மெய்ம்மை (தத்துவங்)களை அறியும் அறிவு (ஞானம்); spiritual knowledge of the constituent parts of the body. (சா.அக.)

**தத்துவத்திரயம்** *tattuvattirayam,* பெ.(n.) 1. மூவகை மெய்ம்மை (தத்துவங்)களாகிய ஆத்துமம், சிவம், வித்தியம்; the three classes of faculties or power. 2. மூவகை உண்மைப் பொருள்கள்; the metaphysical triad viz; god, spirit and matter. (சா.அக.)

**தத்துவதரிசனம்**[1] *tattuvadarišaṉam,* பெ.(n.) பதின்கருமத்தொன்று; a spiritual experience of the soul, one of *taša-kāriyam.*

**தத்துவதரிசனம்**[2] *tattuvadarišaṉam,* பெ.(n.) மூலப் பொருள்களாகிய முப்பத்து ஆறு மெய்ம்ம (தத்துவ)ங்களும் மாயையின் செயலால் தோன்றிய பருப்பொருள்கள் என்று ஆன்மா தன்னறிவிலே விளங்கக் காணும் பட்டறிவு நிலை; (šaiva.) a spiritual experience of the soul in which it realises that the 36 tattvas or real are the outcome of māyā and are inert matter, one of the tasa-kāriyam.

**தத்துவதரிசனம்**[3] *tattuvadarišaṉam,* பெ.(n.) அறிவு (ஞான)க் காட்சி; real vision. (சா.அக.)

**தத்துவபிரகாசவியாக்கினம்** *tattuva-pirakāšaviyākkiṉam,* பெ.(n.) சுந்தரா னந்த சித்தரால் கற்பிக்கப்பட்ட அறிவு (ஞான)ச் செய்தி; a treatise on spiritual wisdom by Sundarānda siddhar. (சா.அக.)

**தத்துவபிரசாதம்** *tattuvapirašādam,* பெ.(n.) ஒரு மறை மந்திரம்; a vedic mantram. (சா.அக.)

**தத்துவம்** *tattuvam,* பெ.(n.) 1. இயல்பு; nature. 2. இயற்கை; the essential or real nature of things. 3. பரம்பொருள்; the universal soul. 4. உடம்பின் தொழில்கள்; the doings and functions of the body. 5. முப்பிணியின் தொழில்கள் (வாதபித்த சிலேட்டும தத்துவங்கள்); the functions of three humours (vatha, pitha and kapha) wind, bile and phlegm. (சா.அக.). 6. 96 மெய்ம்மை (தத்துவங்)கள்; the 96 tatvas postulated by the siddhar's school which are the constituent principles in nature.

**தத்துவமசி** *tattuvamaši,* பெ.(n.) "அது" நீயாயிருக்கிறாய் என்னும் பொருள் கொண்ட மறைச் சொற்றொடர் (வேத வாக்கியம்); the vedic quotation "that thou are".

**தத்துவரூபம்**[1] *tattuvarūbam,* பெ.(n.) உண்மை வடிவம்; true figure. (சா.அக.)

**தத்துவரூபம்**[2] *tattuvarūbam,* பெ.(n.) மெய்ம்மை (தத்துவங்)களின் குணங்களை ஆன்மா காணும் ஓர் பட்டறிவு நிலை; a spiritual experience of the soul in which it is cognizant of the operations of the 36 tatvas. (சா.அக.)

த.வ. மெய்ம்மைப்பட்டறிவு

*[Skt. tatva > த. தத்துவம்]*

*உருவம் >**Skt.** rūpa > த. ரூபம்*

**தத்துவலயசமாதி** *tattuvalayaśamādi,* பெ.(n.) ஆன்ம மெய்ம்மை (தத்துவங்) களையும் அவற்றின் செய்கைகளையும் அறிந்த அறிஞன். (சா.அக.); spiritual experienced mystic.

**தத்துவாத்துவா** *tattuvāttuvā,* பெ.(n.) ஆறு அத்துவாக்களுள் முப்பத்தாறு தத்துவங் களாகிய அத்துவா வகை; tattuvas or reals as path to salvation, one of six attuvā (q.v.). *"தத்துவாத்துவா முதலான தெல்லாம்" (சி.சி.8,6, மறைஞா.).*

**தத்துவாதி** *tattuvādi,* பெ.(n.) மாத்துவ அந்தணர் ; a sect of Brahmins who hold the doctrines of *Madhvācārya.*

**தத்துவாதீதன்** *tattuvādidan,* பெ.(n.) மெய்ம்மை (தத்துவங்) கடந்த பரம் பொருள் (சி.சி.2, 73, சிவாக்.); god, as trascending all reals.

**தத்துவார்த்தம்** *tattuvārttam,* பெ.(n.) மெய்ப்பொருள் முறையான தன்மை; philosophical nature. *'நீங்கள் கூறும் தத்துவார்த்தமான பொருளில் அவர் இந்தக் கவிதையை எழுதவில்லை'.*

*[Skt. tatva+artha > த. தத்துவார்த்தம்]*

**தத்துவான்மா** *tattuvāṇmā,* பெ.(n.) நுண்ணுடலை (சூக்குமதேகத்தை)ப் பற்றி நிற்கும் ஆன்மா (சி.போ.பா.6,2, பக். 317); state of the soul when it is associated with the subtle body.

**தத்பரம்** *tatparam,* பெ.(n.) ஒன்றில் முப்பது விநாடி; 1/30 of a second. (சா.அக.)

*[Skt. tatpara > த. தத்பரம்]*

**தத்பூர்வம்** *tatpūrvam,* பெ.(n.) முதலில் ஏற்படுவது; happening for the first time. (சா.அக.)

*[Skt. tatpūrva> த. தத்பூர்வம்]*

**தத்போதம்** *tatpōdam,* பெ.(n.) உண்மையறிவு; knowledge or understanding of truth. (சா.அக.)

**தத்ரூபம்** *tatrūbam,* பெ.(n.) முழுதும் ஒற்றுமையான வடிவு; ஒருமையுறுத்தோற்றம் exact resemblance. *'காட்சி அதன் தத்ரூபமாயிருக்கும்' (கொ.வ.).*

*[Skt. tatrūpa > த. தத்ரூபம்]*

**ததகாமேந்தினி** *tatakāmēndiṉi,* பெ.(n.) தேற்றான் கொட்டை; water clearing nut. (சா.அக.)

**ததபத்திரி** *tata-pattiri,* பெ.(n.) வாழை (மலை.); plantain, musa.

**ததாத்து** *tatāttu,* இடை.(int.) அங்ஙனமே ஆகுக எனப் பொருள்படும் ஒரு வடமொழி வாழ்த்துத் தொடர் (Brah.); a Sanskrit expression meaning 'amen', 'so be it'.

**ததுமல்** *tadumal,* பெ.(n.) 1. தெளிவு இல்லாமல் குழம்பி இருக்கை; that which is confusion. 2. கூட்டம்; crowd.

**ததேகத்தியானம்** *tatēka-t-tiyāṉam,* பெ.(n.) ஒன்றையே இடைவிடாது எண்ணுகை (சிந்திக்கை) (Brah.); concentrated meditation on one and the same subject.

**ததேகநிட்டை**[1] *tatēka-niṭṭai,* பெ.(n.) **ததேகத்தியானம்** (வின்.) பார்க்க; see *tatēka-t-tiyāṉam.*

**ததேகநிட்டை**[2] *tadēkaniṭṭai,* பெ.(n.) 1. அசைவற ஊழ்கத்தி (தியானத்தி)லிருத்தல்; being absorbed in contemplation or meditation without disturbance of mind. (சா.அக.)

**தந்தக்கட்டி** *tanda-k-kaṭṭi,* பெ.(n.) 1. **தந்த சூலை** (இ.வ.) பார்க்க; see *tanda-cūlai.* 2. பல்லில் உண்டாகும் கட்டி; an abcess on the gum of the teeth gumabcess, gum-boil.

**தந்தக்கட்டில்** *tanda-k-kaṭṭil,* பெ.(n.) 11. யானை மருப்பினாலியன்ற கட்டில்; ivory cot. 2. உயர்ந்த கட்டில் (இ.வ.); any fashionable cot.

**தந்தக்கிருமி** *tanda-k-kirumi,* பெ.(n.) பற்களிடையே தோன்றும் நுண்ணுயிரி, பற்பூச்சி; worm found in the tooth. (சா.அக.)

த.வ. பற்புழு

**தந்தக்குறி** *tanda-k-kuri,* பெ.(n.) புணர்ச்சி காலத்தில் பல்லால் உண்டான அடையாளம் (கொக்கோ); marks made by the teeth of the lover on the limbs of his beloved.

த.வ. பற்குறி

**தந்தகபாலிகாநோய்** *tanda-kabāligā-nōy,* பெ.(n.) பற்களின் முனைகள் தேய்ந்து வெடித்துப் பொடிப்பொடியாக உதிரும் நோய்; a disease in which the edges of the teeth are softened cracked and sometimes crushed and dropped in pieces of particles.

**தந்தகரானநோய்** *tanda-karāṉa-nōy,* பெ.(n.) பல்லீறுகள் தேய்ந்து பற்களை வெளியில் சாய்க்கும் ஒருவகைப் பல்நோய்; a diseases in which the gums are eaten away leaving the teeth exposed to its full length.

*[Skt. danda> த. தந்தகரானம் + நோய்]*

**தந்தகரிசம்** *tandakarišam,* பெ.(n.) சுண்ணாம்பு; lime. (சா.அக.)

**தந்தகரிசனம்** *tanda-karišaṉam,* பெ.(n.) சுண்ணாம்பு; lime, calcium carbonate.

*[Skt. danda> த. தந்தம் + கரிசனம்]*

**தந்தகரிடநோய்** *tanda-kariḍa-nōy,* பெ.(n.) பல்நோய் வகை; a disease of the teeth.

*[Skt. danda> த.தந்தகரிடம் + நோய்]*

**தந்தகரிநோய்** *tandakari-nōy,* பெ.(n.) பல்நோய்; a disease of the teeth.

*[Skt. danda> த.தந்தகரி + நோய்]*

**தந்தச்சீப்பு** *tanda-c-cīppu,* பெ.(n.) மருப்பு அல்லது கொம்பினாற் செய்த சீப்பு; comb of horn of ivory.

*[Skt. danda> த.தந்தம் + சீப்பு]*

**தந்தசம்** *tandašam,* பெ.(n.) 1. பல்லீறு; gum of teeth. 2. யானைக் கொம்பு; elephant tusk.

த.வ. தந்தச்சதை

**தந்தசருக்கராரோகம்** *tandašaru-k-karārōgam,* பெ.(n.) பற்களின் பின்புறத்தில் சுண்ணாம்பு அல்லது காரையைப் போல் கரடு கட்டியிருக்கும் செதில்கள்; a hard reddish crust or a concretion which is sometimes formed behind the teeth; tartar on the teeth, the teeth become as rough as gravels. (சா.அக.)

**தந்தசருக்கரை** *tanda-šarukkarai,* பெ.(n.) பல் ஊத்தை (சீவரட்.); tartar on the teeth.

த.வ. பற்காறை

*[Skt. danda> த.தந்தம் + சருக்கரை]*

**தந்தசருக்கரைநோய்** *tanda-šarukkarai-nōy,* பெ.(n.) பற்களின் பின்புறம் கரடு கூட்டிய செதில்கள் போன்ற காறை; a hard reddish crust, which is sometimes formed behind the teeth.

*[Skt. danda> த.தந்தம் + சருக்கரை + நோய்]*

**தந்தசியாவகரோகம்** *tandašiyāva-garōgam,* பெ.(n.) பற்களை நீலம் அல்லது கருப்பு நிறமாகச் செய்யுமோர் நோய்; a disease in which the teeth are rendered black or blue. (சா.அக.)

**தந்தசுடிகரோகம்** *tandašuḍiga-rōgam,* பெ.(n.) பல்லீறுகள் வீங்கிச் சிறு ஓட்டைகளை உண்டாக்கும் ஒரு வகை நோய்; a disease of the teeth marked by swelling of the gums and small holes in the teeth. (சா.அக.)

**தந்தசுத்தி** *tandašutti,* பெ.(n.) பல் விளக்குதல்; cleaning the teeth. (சா.அக.)

**தந்தசூகம்** *tanda-šūgam,* பெ.(n.) 1. பாம்பு(வின்) ; snake. 2. பாம்புகள் நிரம்பிய நிரையம் (நரகம்) (சேது 4. துனுக்கோ 4); a hell infested with serpents. 3. நச்சுயிர் reptile.

**தந்தசூகன்** *tanda-šugaṉ,* பெ.(n.) 1. கொடியவன் (யாழ்.அக.); malignant person.

**தந்தசூலை** *tanda-šūlai,* பெ.(n.) 1. பல்வலி (இங்.வை. 369); tooth-ache, inflammation of the dental pulp, odontalgia. 2. பல் நரம்பில் உண்டாகும் குத்தல் நோய்; a nervous pain experienced in the gum of the teeth. (சா.அக.)

*[Skt. danda> த. தந்தம் + சூலை]*

**தந்தத்தையுதிரப்பண்ணி** *tandattaiyudirap paṉṉi,* பெ.(n.) தில்லை மரம்; tiger's sparge. (சா.அக.)

**தந்ததி** *tandadi* பெ.(n.) மரபுவழி; lineage. இரவி சிரிகண்டன் தந்ததிப் (பிரகிருதியாய் T.A.S. ii 175).

**தந்தந்தண்ணீர்** *tandantaṉṉīr,* பெ.(n.) எலும்பை நீர்மமாக்கவுதவும் கரைசல் (அஸ்திபேதி); a solvent reducing bones into liquid. (சா.அக.)

*[Skt. danda> த. தந்தம் + தண்ணீர்]*

**தந்தமூலம்** *tanda-mūlam,* பெ.(n.) பல்வேர்; root of the tooth.

*[Skt. danda> த. தந்தம் + மூலம்]*

**தந்தயோடதம்** *tanda-y-ōḍadam,* பெ.(n.) 1. பல், உதடு போன்றவற்றின் தொடர்பு; relation to teeth and the lip-dentilabial.

**தந்தரூடி** *tanda-rūḍi,* பெ.(n.) பல்வேர் புண்ணாகித் தீநாற்றம் வீசும் நோய்; a disease of the teeth marked by ulceration at the root followed by a discharge of pus and blood with fetid smell-Pyorrhoea.

**தந்தவாயு** *tandavāyu,* பெ.(n.) 1. பல்வலி; tooth pain. 2. பல்லின் நரம்பிற்குள் காணும் குத்தல் நோய்; a nervous plain experienced in the gum of the teeth. (சா.அக.)

**தந்தவித்திருதி** *tandavittirudi,* பெ.(n.) பல்லின் உட்புறம் அல்லது வெளிப்புறத்துச் சதையில் வீக்கமான கட்டிகளை உண்டாக்கும் ஒரு வகை நோய்; a disease of the teeth in which abcesses or boils are developed in the front or the rear side of the gum attended with much swelling. (சா.அக.)

**தந்தவிதர்ப்பம்** *tanda-vidarppam,* பெ.(n.) பல்லாட்டம்; a disease which is consequent upon the friction of the gums marked by the appearance of violent swelling.

**தந்தவைத்தியம்** *tandavaittiyam,* பெ.(n.) பல்லைப் பிடுங்குதல், பல் கட்டல், பல் தூய்மைப் படுத்தல் முதலியவற்றுடன் பற்களில் ஏற்படும் நோய்களுக்குச் செய்யும் மருத்துவம்; the art of curing dental complaints along with the act of extracting the teeth, repairing or replacing them when decayed, cleaning etc. (சா.அக.)

**தந்தவைத்தியன்** *tandavaittiyaṉ,* பெ.(n.) பற்களின் நோய்க்கு மருத்துவம் செய்பவன்; one whose occupation is not only to treat tooth complaints but also to clean, extract repair and replace them when necessary. (சா.அக.).

த.வ. பல்மருத்துவன்

**தந்தவைதர்ப்பம்** *tanda-vaidarppam,* பெ.(n.) அழற்சியினாலேற்படும் பல்லாட்டம்; looseness of the teeth through external injury.

**தந்தி¹** *tandi,* பெ.(n.) 1. ஆண் யானை, களிறு (பிங்.); male elephant. *"தந்தியும் பிடிகளுந் தடங்க ணோக்கின" (கம்பரா. சித்திரக் கூட : 43).* 2. பாம்பு (நச்சுப் பற்களையுடையது); snake, as having fangs. *"தந்தி நஞ்சுந் தலைக் கொளச் சாய்ந்தவர்" (கந்தபு. சயந்தன்கனவு. 21).*

*[Skt. dantin > த. தந்தி]*

**தந்தி²** *tandi,* பெ.(n.) 1. கம்பி; wire. *"நார் தந்திமிடையப் பின்னி" (தைலவ. பாயி. 22).* 2. யாழ் நரம்பு (வின்.); catgut, string of a musical instrument. 3. நரம்பு; sinew, tendon. 4. தொலைவரி (மின் கம்பி வழி யனுப்புஞ் செய்தி); telegram. 5. யாழ் (பிங்.); lute.

த.வ. தொலைவரி

*[Skt. tantri > த. தந்தி]*

**தந்தி³** *tandi,* பெ.(n.) நரம்புக் கயிறு; tendon. (சா.அக.)

**தந்திக்கம்பி** *tandi-k-kambi,* பெ.(n.) 1. வீணை முதலியவற்றின் நரம்பு; string of a lute. 2. தொலைவரி அல்லது தொலைபேசிக் கம்பி; telegraph or telephone wire.

*[Skt. dandi> த. தந்தி+கம்பி]*

**தந்திகொடு-த்தல்** *tandi-kodu-,* செ.கு.வி.(v.i.) ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு விரைவாக) கம்பி வழியாகச் செய்தி அனுப்புதல்; to send a telegram, wire. *'மும்பை போய்ச் சேர்ந்ததும் உடனே தந்திக்கொடு'.*

த.வ. தொலைவரி தருதல்

*[Skt. dandi> த.தந்தி + கொடு-,]*

**தந்திபூட்டு-தல்** *tandi-pūṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) வீணை, யாழ் முதலியவற்றிற்குக் கம்பி யமைத்தல் (வின்.); to fit up with strings, as in a lute.

*[Skt. dandi> த.தந்தி + பூட்டு-,]*

**தந்திபேசல்** *tandi-pēšal,* தொ.பெ.(vbl.n.) நாடியடித்தல்; beating of the pulse.

*[Skt. dandi > த.தந்தி + பேசு + அல் – அல் = தொ.பொ.ஈறு]*

**தந்திபேசு-தல்** *tandi-pēšu-,* 5 செ.கு.வி.(v.i.) **தந்தியடி¹-த்தல் பார்க்க;** see tandi-y-adi¹-.

**தந்திபோல்தெரித்தல்** *tandi-pōl-terittal,* பெ.(n.) விட்டு விட்டுச் சுரீர் என நோதல்; a sort of pain experienced in hemicrania.

**தந்திமுறுக்கு-தல்** *tandi-muṟukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) யாழ் நரம்பை இறுக்குதல்; to tighten the lute-string.

**தந்திமுறுக்குதல்** *tandi-muṟukku,* பெ.(n.) நரம்பிற்குச் சுறுசுறுப்பையுண்டாக்கல்; stimulating the nerves.

*[Skt. dandi> த. தந்தி + முறுக்குதல்]*

**தந்தியடி¹-த்தல்** *tandi-y-aḍi,* 4 செ.கு.வி.(v.i.) தொலைவரிச் செய்தியனுப்புதல்; to send a telegram, wire.

*[Skt. dandi > த. தந்தி+அடி-,]*

**தந்தியடி²-த்தல்** *tandi-y-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) வீணை, யாழ் முதலியவனவற்றில் மீட்டும் மெல்லிய கம்பியை மேலுங்கீழுமாக அசைப்பது போன்று ஆட்டுதல்; to tremble.

*[Skt. dandi> த.தந்தி + அடி-,]*

**தந்தியடி³-த்தல்** *tandi-y-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) நாடிபேசல்; to beat the pulse.

*[Skt. dandi> த.தந்தி + அடி-,]*

**தந்தியம்¹** *tandiyam,* பெ.(n.) பல்லடுக்கு; filth in the teeth.

*[Skt. dandi > த.தந்தி > தந்தியம்]*

**தந்தியம்²** *tandiyam,* பெ.(n.) முலைப்பால்; woman's breast milk.

**தந்தியறுதல்** *tandi-y-aṟudal,* பெ.(n.) 1. நாடி விழல்; dropping of the pulse. 2. நரம்பு வீழ்ச்சி; nervous break down.

*[Skt. dandi> த. தந்தி + அறுதல்]*

**தந்தியாரிட்டம்** *tandi-yāriṭṭam,* பெ.(n.) மூல நோய்க்கான ஆயுள் வேத மருந்து; an āyurvēdic wine prescribed for piles.

**தந்தியூசிவன்னச்சேலை** *tandi-y-ūši-v-vaṉṉa-c-cēlai,* பெ.(n.) கம்பியூசி போலும்

மெல்லிய கோடுகள் அமைக்கப் பெற்ற, புடைவை வகை (இ.வ.); a kind of saree with needle-like stripes.

**தந்திரம்** *tandiram,* பெ.(n.) யாழ் நரம்பு (வின்.); wire or string of a lute.

**தந்திரயுக்தி**[1] *tandirayukti,* பெ.(n.) குறியீடு; குழூஉக்குறி; technical terms, code word. (சா.அக.)

**தந்திரயுக்தி**[2] *tandirayukti,* பெ.(n.) மந்திர நூலின் அறிவினால் அமைக்கப்படும் பொருள்; anything or substance created or formed by secrets revealed by Tantric science. (சா.அக.)

**தந்திராகமம்** *tandirāgamam,* பெ.(n.) எந்திர மந்திரங்களைப் பற்றிச் சொல்லும் தோன்றியத்(ஆகமம்)தின் ஓர் பிரிவாகிய தந்திரம்; one of the divisions of the Agama philosophy treating on rites, operation of diagrams etc. (சா.அக.)

**தந்திராணுசாரணை** *tandirāṇušāraṇai,* பெ.(n.) கல்வி (தந்திர) நூலைப் பின்பற்றி நடப்பது; following the authority of the Tantrams. (சா.அக.)

**தந்திரி** *tandiri,* பெ.(n.) யாழ் நரம்பு; string of musical instruments. *"வீணைத் தந்திரியும்" (பிரமோத். 2, 62).*

**தந்திரிகம்** *tandirigam,* பெ.(n.) தந்திரிகரம் பார்க்க; see tandiri-garam.

**தந்திரிகரம்** *tandiri-garam,* பெ.(n.) செங்கோட்டியாழ் உறுப்புகளில் ஒன்று; a part of *seṅgōṭṭiyāḷ.* *"செங்கோட்டி யாழிற்றத் திரிகரத் தொடு" (சிலப். 13 : 107).*

**தந்திரிகை** *tandirigai,* பெ.(n.) கம்பி; wire. *"தந்திரிகை சுற்றி" (தைலவ. தைல. 41).*

**தந்திவன்னம்** *tandi-vaṉṉam,* பெ.(n.) **தந்தியூசிவன்னச்சேலை** (இ.வ.) பார்க்க; see *tandi-y-ūši-vaṉṉa-c-cēlai.*

**தந்துபாவம்** *tandubāvam,* பெ.(n.) விலங்கு – நிலத்திணை ஆகியவற்றில் கட்டியாக உறையக்கூடிய கசிவு ஊனீர்; fibrin. (சா.அக.)

**தந்துமாத்திரிகம்** *tandumāttirigam,* பெ.(n.) நார்த்தசைகள் உருவாக்கக்கூடிய உயிரணு; fibroblasto. (சா.அக.)

**தந்துமேகம்** *tandumēgam,* பெ.(n.) அடிவயிறு நொந்து, வீணா தண்டத்தின் அடியில் விம்மி விருவிருப்பை உண்டாக்கி ஆண்குறி வழியாய்ச் சளியைப் போல் ஒழுகும் ஒரு வகை நோய்; a transparent mucous wiry discharge from the urethra. (சா.அக.)

**தநம்** *tanam,* பெ.(n.) சந்தனம்; saldal wood. (சா.அக.)

**தநு** *tanu,* பெ.(n.) உடல்; body.

*[Skt. tanu > த. தநு.]*

**தநுச்சாயை** *tanuccāyai,* பெ.(n.) உடம்பின் நிழல்; shadow of ones body. (சா.அக.)

**தநுத்துவசம்** *danuttuvašam,* பெ.(n.) சிறு நெல்லிச் செடி; Indian goose berry shrub. (சா.அக.)

**தநுத்துவசை** *danuttuvašai,* பெ.(n.) **தநுத்துவசம்** பார்க்க; see *danuttuvašam.* (சா.அக.)

**தநுபம்** *danupam,* பெ.(n.) வெண்ணெய்; butter. (சா.அக.)

**தநுவாயு** *tanuvāyu,* பெ.(n.) தாள்கிட்டி; lock jaw. (சா.அக.)

**தநூநபம்** *tanūnabam,* பெ.(n.) நெய்; ghee, clarified butter. (சா.அக.)

**தநூருகம்** *tanūrubam,* பெ.(n.) மயிர்; hair. (சா.அக.)

**தப்சீல்** *tapšīl,* பெ.(n.) **தப்சீல்வார்** பார்க்க (C.G.); see *tapsilvār.*

*[Ar. tafsil > த. தப்சீல்]*

**தப்சில்வார்** *tapšilvār,* பெ.(n.) விளக்க (விவர)க் குறிப்பு (C.G.); particulars, details of an account and the like, schedule.

**தப்டர்தோட்டம்** *tapḍar-tōṭṭam,* பெ.(n.) **டப்டர்தோட்டம்** பார்க்க(R.T.); see *ṭapṭar-tōṭṭam.*

**தப்தர்** *taptar,* பெ.(n.) 1. துணியிற் கட்டி வைக்கும் ஆவணம்; record, register, account, official statement, report, bundle of written documents tied together in a cloth. 2. ஆவணங்களைப் பேணி வைக்கும் அலுவலகம்; record office.

த.வ. பொதியாவணம்

*[Persn. daftar > த. தப்தர்]*

**தப்தர்பந்து** *taptarpandu,* பெ.(n.) **தப்தரங்கு மாத்தா** பார்க்க (C.G.); see *taptaraṅ-gumāttā.*

**தப்தரங்குமாத்தா** *taptaraṅkumāttā,* பெ.(n.) ஆவணங்களைப் பாதுகாத்துப் பேணும் உதவியாளர்; record keeper.

*[Persn. daftar+gumasta>த. தப்தரங்குமாத்தா]*

**தப்தீல்** *taptīl,* பெ.(n.) மாறுகை (C.G.); change, alteration, substitution.

**தப்பீக்** *tappīk,* பெ.(n.) ஊரில் பொது குடிகளுக்கேனும் மானியம் மிகுதியாகக் கொண்டவர்களுக்கேனும் அலுவலர்கள் இடும் வரி (R.T.); extra contribution imposed by the village officers on all the villagers or on those who hold a greater portion of the rent-free lands.

**தப்புதோத்திரம்** *tappu-tōttiram,* பெ.(n.) முகமன் (முகத்துதி) (இ.வ.); flattery.

**தப்ரீக்** *taprīk,* பெ.(n.) சிற்றூர் அலுவலரால் சிற்றூருக்கு வரையறு (விதி)க்கப்படும் அதிகவரி; any extra contribution which the village officers, suomoto, used to impose on the villagers.

**தபசில்** *tapasil,* பெ.(n.) **தப்சீல்** பார்க்க; see *tapsīl.*

*[Ar. tafsil > த. தபசில்]*

**தபசுநாள்சுத்தபோசனம்** *tapašu-nāḷ-cutta-pōšaṉam,* பெ.(n.) தவசுநாளிற் கொள்ளும் நோன்பு (விரதம்); lent fast.

**தபதி** *tapadi,* பெ.(n.) சிற்பி, கம்மியன்(பிங்.); sculptor, statuary. *"தபதியர் யாவரும் வியந்தார்" (பாரத. இந்திர. 12).*

*[Skt. sthapati > ஸ்தபதி > த. தபதி]*

**தபநதநயை** *tapanatanayai,* பெ.(n.) வன்னி மரம்; the suma tree. (சா.அக.)

**தபம்பண்ணல்** *tabampaṇṇal,* பெ.(n.) தவம் மேற்கொள்ளல் (தவசு பண்ணுதல்); leading an anstre life, to make penance. (சா.அக.)

*[தவி > தவம் > Skt. tapas > த. தபம்]*

**தபலா** *tabalā,* பெ.(n.) **தபளா** பார்க்க (இ.வ.); see *tabaḷā.*

**தபலை** *tapalai,* பெ.(n.) ஏனவகை; a kind of metal vessel. "தம்பிக்கை யென்றுந் தவலையென்றும் (விறலிவிடு 747).

*[தவலை > தபலை]*

**தபளா** *tabaḷā,* பெ.(n.) மத்தள வகை (இ.வ.); a kind of tabret.

*[Ar. tabal> த. தபளா]*



**தபனன்** *tapaṉaṉ,* பெ.(n.) 1. கொடுவேலி; plumbago. 2. நெருப்பு; fire. 3. கதிரவன்; sun. (சா.அக.)

**தபா** *tabā,* பெ.(n.) தடவை; time, occasion, turn. *'இரண்டு தபா வந்து போனான்'. (இ.வ.).*

த.வ. தடலை

*[Ar. dafa > த. தபா]*

**தபாக்கினி** *tapā-k-kiṉi,* பெ.(n.) **தபோக்கினி** (வின்.) பார்க்க; see *tapōkkiṉi.*

**தபாகா** *tapākā,* பெ.(n.) அரிசி; topioca. (சா.அக.)

**தபாத்தியம்** *tabāttiyam,* பெ.(n.) மாரிகாலம்; rainy season. (சா.அக.)

**தபாது** *tabātu,* பெ.(n.) **தபாவத்து** பார்க்க (வின்.); see *tabāvattu.* 2. தவறு (யாழ்.அக.); mistake.

**தபாய்-த்தல்** *tapāy-,* செ.கு.வி.(v.i.) 1. ஏமாற்றுதல்; to deceive. 2. **சதாய்** பார்க்க (இ.வ.); see *sadāy.*

**தபால்** *tabāl,* பெ.(n.) 1. அஞ்சல்; post, mail, tapal. 2. கெடி; regular stopping-place in route, stage.

*[U. tappāl > த. தபால்]*

**தபால்மாடு** *tabāl-mādu,* பெ.(n.) பயண வண்டிக்குரிய கெடிமாடு; relay of bullocks, as in journey by stage.

*[U. tappāl > த. தபால் + மாடு]*

**தபால்வண்டி** *tabāl-vaṇḍi,* பெ.(n.) கெடிவைத்துச் செல்லும் பயண வண்டி (இ.வ.); stage-coach.

த.வ. எல்லை அஞ்சல் வண்டி

*[U. tappāl > த. தபால் + வண்டி]*

**தபாலதிபர்** *tabāladibar,* பெ.(n.) (இலங்.) அஞ்சல் நிலைய அதிகாரி; postmaster.

*[U. tappāl > த. தபால் + அதிபர்]*

**தபாவத்து** *tapāvattu,* பெ.(n.) ஏமாற்றுகை; cheating, defrauding (C.G.).

**தபாற்கட்டளை** *tabāṟ-kaṭṭaḷai,* பெ.(n.) (இலங்.) அஞ்சல் ஆணை; postal order.

*[U. tappāl > த. தபால் + கட்டளை]*

**தபாற்காரன்** *tabāṟ-kāraṉ,* பெ.(n.) 1. கடிதத்தை அஞ்சலிற் கொண்டு செல்லுவோன். 2. அஞ்சல் (தபாற்) கடிதங் கொடுப்போன்; postman.

த.வ. அஞ்சலன்

*[U. tappāl > த. தபால்+காரன்]*

**தபானாக்கினி** *tapāṉā-k-kiṉi,* பெ.(n.) செங்கொட்டை; marking nut. (சா.அக.)

**தபிலா** *tabiḷā,* பெ.(n.) **தபளா** (இ.வ.) பார்க்க; see *tapaḷā.*

**தபேதார்** *tapēdār,* பெ.(n.) தலைமை ஏவலாள்; head peon.

த.வ. முதன்மை ஏவலர்

*[Persn. daftardār > த. தபேதார்]*

**தபேலா** *tabēlā,* பெ.(n.) விரல்களாலும் உள்ளங்கையாலும் தட்டி வாசிக்கப்படும் அரைக்கோள வடிவில் ஒன்றும் நீள் உருளை வடிவில் ஒன்றுமாக அமைந்த இசைக் கருவி; tabla. *'தமிழ்த் திரைப்படங்களில் தபேலாவைக் கொண்டு இசைக்கப்பட்ட பாடல்கள் இன்றும், என்றும் கேட்பதற்கு இனிமையாக இருக்கும்?'*

*[Ar. tabal > த. தபேலா]*

**தபோக்கினி** *tabōkkiṉi,* பெ.(n.) 1. தவத்தால் தோன்றும் கனல்; fire of austere penance. 2. தவஞ் செய்தற்கு வளர்க்கும் தீ; fire kindled for doing penance.

*[Skt. tapōgni > த. தபோக்கினி]*

**தபோயக்கியம்** *tabōyakkiyam,* பெ.(n.) ஐவகை வேள்விகளுளொன்று (சிவதரு. ஐவகை, 1, உரை); one of pañja-yāgam.

**தபோவனம்** *tabōvaṉam,* பெ.(n.) தவம் செய்யும் காடு; forest where ascetics

perform penance. *'அம்முனிப் பெருங் கடவுளுந் தபோவன மடைந்தனன்' (பாரத. சம்ப. 30).*

*[த. தவ > Skt. tapō-vana > த. தபோவனம்]*

**தம்** *tam,* பெ.(n.) 1. மூச்சடக்குகை; holding the breath. 2. மூச்சு; breath. "அவன் தம் பிடிக்கிறான்".

**தம்பதி** *tambadi,* பெ.(n.) கணவனும் மனைவியும் (சூடா.); Wedded couple, husband and wife.

த.வ. இணையர்

*[Skt. dampati > த. தம்பதி]*

**தம்பவகம்** *tambavagam,* பெ.(n.) விலாமிச்சை வேர்; lime tree root. (சா.அக.)

**தம்பனக்குளிகை**[1] *tambaṉa-k-kuḷigai,* பெ.(n.) புணர்ச்சியின் போது உயிர்ப்புச் சத்துக் கூடவும் வீணாக விந்து ஒழுகுவதைத் தடுக்கவும் குங்குமப்பூ, அபினி, அரத்திப் பழம் (ஆப்பிள்) விதை ஆகியவற்றுடன் சாதிக்காயைச் சேர்த்து தேன் விட்டு அரைத்து மாலை ஆறுமணிக்குச் சாப்பிடக் கொடுக்கும் கடலை யளவு மாத்திரை; a Bengal gram size pill made of suffron, opium, seed of apple nutmug grind with honey and is given during being six 'o' clock to increase the vitality, consolidate the semen and prevent it from flowing out during intercourse. (சா.அக.)

த.வ. கட்டு குளிகை

*[Skt. tambaṉa > த. தம்பனம் + குளிகை]*

**தம்பனக்குளிகை**[2] *tambaṉa-k-kuḷigai,* பெ.(n.) துமுக்கி (துப்பாக்கி) அல்லது குண்டடி கத்தி வெட்டுக் காயங்களுக்கும் உடம்பு இடங் கொடாது இருக்க வேண்டியும் வானத்தில் அசைவற நிறுத்தச் செய்யவும் பயன்படுத்தும் ஒரு வகை மாத்திரை; a kind of magical pill by which the body is made a proof to gun shot wounds, to render impenetrable to kinfe cut etc., so as not to sustain any injury on the body and it also enables one to remain motionless in the region of the sky. (சா.அக.)

**தம்பி-த்தல்** *tambi-,* செ.குன்றாவி.(v.t.) வளி (வாயு) அல்லது மூச்சை அடக்குதல்; to suppress breath or respiration. (சா.அக.)

**தம்பிக்கச்செய்தல்** *tambikka-c-ceydal,* பெ.(n.) 1. அசைவறச் செய்தல்; causing to become motion less. 2. நிறுத்துதல்; causing to stop. 3. நெருப்பிற்கு ஓடாமற்படிச் செய்தல்; causing a body not to evaporate before fire. 4. வாயு நிறுத்தல்; stopping the respiration. (சா.அக.)

*[Skt. stambh > த. தம்பிக்க + செய்தல்]*

**தம்போலி** *tambōli,* பெ.(n.) வச்சிரப்படை (ஆயுதம்) (சங்.அக.); thunderbolt.

**தம்மத்திகாயம்** *tammattikāyam,* பெ.(n.) ஐவகை (பஞ்சாத்திரம்) மறைப்பொருள்களுள் மீனுக்கு நீர்போல உயிரினது கமனத்துக்குச் சாதனமான (திரவியம்) பொருள்; (Jaina) that which helps the Jiva associated with pudgala or matter to progress, just as water helps on the movement of a fish, one of *pañcāstikāyam.*

**தமனியமாக்கல்** *tamaṉiyamākkal,* பெ.(n.) பொன்னாக்கல்; making into gold. (சா.அக.)

**தமாம்** *tamām,* பெ.(n.) முழுவதும் (வின்.); whole, entireness, completeness.

*[U. tamām > த. தமாம்]*

**தமான்** *tamāṉ,* பெ.(n.) 1. காற்சட்டை; longtrousers. 2. மூர் என்னுஞ் வகுப்பார் அணியும் அங்கி வகை (வின்.); a kind of cloak worn by moors.

*[U. tamān > த. தமான்]*

**தமாசு** *tamāsu,* பெ.(n.) சிரிப்பை வரவழைத்தல், நகைச்சுவை; humour, joke. *'அவன்*

*எப்போதும் தமாசாகப் பேசிக் கொண்டிருப்பான்?', 'அவர் தமாசு செய்கிறார், புரியவில்லையா?'* 2. சிரிப்பூட்டக்கூடிய வகையில் சுவாரசியமாக நிகழ்வது; வேடிக்கை; fun, amusement. *'தமாசு பார்க்க வந்ததைப் போல கூட்டம் அவனைச் சுற்றி நின்றது'.* 3. (–ஆன) விளையாட்டான போக்கியல் அமையும் தன்மை; being playfull, being funny. *'பழகுவதைப் பார்த்துத் தமாசான நபர் என்று நினைத்து ஏமாந்து விடாதே'.*

**தமாசாவரி** *tamāṣā-vari,* பெ.(n.) கேளிக்கைவரி; entertainment tax.

**தமிசிரம்** *tamiśiram,* பெ.(n.) 1. இருள்; darkness. 2. குறைவு (யாழ்.அக.); deficiency.

*[Skt. tamisra > த. தமிசிரம்]*

**தமோமணி** *tamōmaṇi,* பெ.(n.) மின்மினிப் பூச்சி; firefly. (சா.அக.)

**தமோமயம்** *tamōmayam,* பெ.(n.) இருளடைந்த மனம்; the mind enveloped with darkness. (சா.அக.)

**தமோவிகாரம்** *tamōvigāram,* பெ.(n.) நோய்; disease. (சா.அக.)

**தயவு** *tayavu,* பெ.(n.) 1. அருள்; grace, mercy, compassion. *"கண்டித் தொடையான் தயவுடையான்" (சிவரக. நைமிசா. 47).* 2. அன்பு; love, passion. *"தாசி மேல் வைத்தேன் தயவு நான்" (விறலிவிடு. 106).* 3. இறைப் பற்று; piety. *"உயர் தயவினினையுமவர்" (திருப்போ. சந். பெரியகட். 2:2).* 4. பிறர் கொடை யுள்ளத்துடன் நடப்பதால் கிடைக்கும் ஆதரவு; favour that one wins or receives. *'உங்களுடைய தயவினால் இன்று நல்ல நிலையில் இருக்கிறேன்' (உ.வ.)*

**த.வ. கனிவு, அருளிப்பு**

*[Skt. dayā > த. தயவு]*

**தயவுதாட்சண்யம்** *tayavu-tāṭcaṇyam,* பெ.(n.) ஈவிரக்கம்; pity or consideration.

*[Skt. dayā+tāṭcaṇya > த. தயவுதாட்சண்யம்]*

**தயனியம்** *tayaṉiyam,* பெ.(n.) இரங்கத்தக்கது; that which deserves one's pity. *"தயனியக்கவி பாடுவோம்" (தமிழ்நா. 231).*

*[Skt. dayaniya > த. தயனியம்]*

**தயா** *tayā,* பெ.(n.) அன்பு, அருள்; love, grace. *"தாயிற் தயாவுடைய தம்பெருமான்" (திருவாச. 13..3).*

*[Skt. dayā > த. தயா]*

**தயாகரம்** *tayāgaram,* பெ.(n.) இரக்கம்; pity.

**தயாகரன்** *tayāgaraṉ,* பெ.(n.) அருளுணர்வு மிக்கவன்; store - house of mercy.

*[Skt. dāy+ākara > த. தயாகரன்]*

**தயாதருமம்** *tayā-tarimam,* பெ.(n.) அருளாகிய அறம்; duty of love and mercy towards others. *"அவனுக்குத் தயாதருமத்தை உபதேசஞ் செய்து" (மணிமே. 11: 10 உரை).*

**தயாநிதி** *tayā-nidi,* பெ.(n.) அருட்செல்வர்; benevolent, merciful. *"இன்னருள் சேர் தயாநிதியே" (திருவாலவா. 24..3).*

**தயாபம்** *tayābam,* பெ.(n.) அருள் (புதுவை); grace, mercy.

**தயாபரன்** *tayā-baraṉ,* பெ.(n.) 1. கடவுள் (தயை மிக்கவன்); God, as all merciful. *"தானேயாகிய தயாபரனெம்மிறை" (திரவாச. 2:96).* 2. **தயாசீலன்** பார்க்க; see *tayā-śīlaṉ.*

*[Skt. dayāpara > த. தயாபரன்]*

**தயாபாரமிதை** *tayā-bāramidai,* பெ.(n.) அருண் மிகுகையாகிய பாரமிதை (மணிமே. 26, 455, உரை); the transcendental virtue of universal love, one of taca-pāraimitai.

**தயார்** *tayār,* பெ.(n.) 1. அணியம், ஆயத்தம்; readiness, preparedness. 2. (ஒருவர்)

மனத்தளவில் அல்லது செயல் அளவில் உடனடியாக ஒன்றைச் செய்யத் தகுந்தவாறு இருக்கும் நிலை / (ஒன்று) உடனடியாகப் பயன்படுத்தக்கூடிய அளவில் இருக்கிற நிலை; (state of) preparedness / (kept in) readiness. *'சண்டையை மறந்து அமைதியாகச் செல்ல நான் தயார்', 'வெளியே புறப்படத் தயாராகிவிட்டான்', 'மெழுகு வர்த்தியைத் தயாராக எடுத்து வை, எந்த நேரத்திலும் மின்சாரம் போய் விடலாம்'.*

**த.வ. அணியம்**

*[U. taiyar > த. தயார்]*

**தயாரி–த்தல்** *tayāri-,* செ.குன்றாவி.(v.t.) 1. பயன்பாட்டுக்கு ஏற்ற வகையில் உருவாக்குதல், உண்டு பண்ணுதல்; to produce, manufacture (goods, articles). *'வண்டிகளுக்கான உதிரிப் பாகங்களை தயாரிக்கும் தொழிற்சாலை', 'காற்றாலைகளைக் கொண்டு மின்சாரம் தயாரிக்கலாம்'.* 2. (உணவு) சமைத்தல், குளம்பி(காப்பி), தேநீர் முதலியவை) போடுதல்; to cook (food), make (coffee, etc.). *'பல வகை உணவுகள் நொடியில் தயாரிக்கப்பட்டு விட்டன'.* 3. (கட்டுரை, திட்டம் போன்றவற்றை) எழுதி அல்லது வரைந்து உருவாக்குதல்; to write (a letter, etc.); draw up (a plan, etc.). *'ஒரு கட்டுரை தயாரித்துக் கொண்டிருக்கிறேன்'.*

*[U. taiyar > த. தயார் > தயாரி]*

**தயாரிப்பாளர்** *tayārippāḷar,* பெ.(n.) 1. பொருள்களை உருவாக்குபவர், உண்டு பண்ணுபவர்; manufacturer, producer (of goods). *'திரைப்படத் தயாரிப்பாளர் சங்கம்'.* 2. திரைப்படம், நாடகம் போன்றவற்றை உருவாக்குவதில் ஆளுவ (நிர்வாக)ப் பொறுப்பையும், பொருட் (நிதிச்) செலவையும் ஏற்பவர்; producer (of a film or play). *'இந்தப் படத்தினால் தயாரிப்பாளருக்குப் பெரும் இழப்பு'.*

**த.வ. ஆக்குநர்**

*[U. taiyar > த. தயார் > தயாரிப்பு + ஆளர்]*

**தயாரிப்பு** *tayārippu,* பெ.(n.) 1. பொருளை உருவாக்கல்; the act of producing or manufacturing. *'இன்றியமையான மருந்துப் பொருள்களின் தயாரிப்புச் செலவு அதிகரித்துவிட்டது'.* 2. உருவாக்கப்பட்ட பொருள்; product. *'எங்கள் நிறுவனத்தின் தயாரிப்புகளை நீங்கள் நம்பி வாங்கலாம்'.* 3. (திரைப்படம், நாடகம் போன்றவற்றை) உருவாக்கும் செயல்; production (of a flim, etc.). *'இந்தத் திரைப்படத்தின் தயாரிப்பில் உதவிய அனைவருக்கும் நன்றி'.*

**த.வ. உருவாக்கம், ஆக்கம்**

*[U. taiyar > த. தயார் > தயாரிப்பு]*

**தயாவிருத்தி** *tayāvirutti,* பெ.(n.) அருளொடு புரியும் செயல்களுள் பிறர்க்குப் பொருள் வரவில் உவப்பு, பிறர் செல்வம் பொறுக்கை, பிறர்செயற் பாட்டிற்கு உடன்படல், தீமைக் கஞ்சல், பிறர் செயற்பாடு முடிக்கவிரைதல், பிறர் ஐயம் தீர்க்கை, நன்மை கடைப்பிடிக்கை, பிறர் துயர்க் கிரங்கல் என்ற எண்வகைச் செயல்கள் அல்லது உயிர்த்தொடர்பான ஏழும் உடம்புத் தொடர்பான ஏழுமான 14 செயல்கள் (களாபாடனம், வியதாகரம் நீர்க்கத தண்டனம், சந்தேக வாரணம், அன்னிய குணசகனம், பரதிருதுானயோகம், பரார்த்த தேவப் பிரார்த்திதம், அன்னம், பானம், அம்பரம், மந்திரம், தாசபாலனம், காராமயத்திரித மோசனம், சவச்சேமம்); acts of beneficence eight in number viz. *piṟarkku-p-poruḷ varavil-uvappu, piṟarselvam-poṟukkai, piṟalkarumattiṟkuḍaṉpaḍal, tīmai-k-kañjal, piṟar-karumam muḍikka-viraigai, piṟar aiyantīrkkai, naṉmai-kaḍai-p-piḍikkai, piṟar tuyar-k-kiraṅgal* or 14 in number, seven relating to the soul and seven relating to body, viz. *kaḷāpāḍāṉaṉ, viyatāgaram, nirkkadaṇḍaṉam, sandēgavāraṇam, aṉṉiyaguṇasagaṉav, paratirutuṉayōgam, parārtta dēvappirārttidam, āṉṉam,*

*pāṉam, ambaram, mandiram, dāša pālaṉam, kārāmayattiru dayamōsaṉam, savaccēmam.*

*[Skt. dayā-vridhi > த. தயாவிருத்தி]*

**தயாளசிந்தை** *tayāḷa-šindai,* பெ.(n.) பரந்த மனப்பான்மை; large heartendness. *'கலைவாணர் மிகுந்த தயாளச்சிந்தை படைத்தவர்' (உ.வ.)*

த.வ. இரக்ககுணம்

**தயாளம்** *tayāḷam,* பெ.(n.) 1. ஈகம், தாராளம்; liberal. *'அவர் மிகுந்த தயாளகுணம் உடையவர்' (உ.வ.).* 2. பெருந்தன்மை; generosity. *'அவருடைய தயாளத்தைப் பாராட்டாதவர்களே இல்லை' (உ.வ.)*

த.வ. பெருந்தகைமை

*[Skt. tayālu > த. தயாளம்]*

**தயாளன்** *tayāḷaṉ,* பெ.(n.) தாராளக் குணம் கொண்டவன்; one who has liberal mind.

*[Skt. dayālu > த. தயாளம் > தயாளன்]*

**தயிலக்காப்பு** *tayila-k-kāppu,* பெ.(n.) கடவுள் திருமேனிக்கு எண்ணெய் சாத்துகை (கோயிலொ. 8); smearing an idol with oil.

*[Skt. taila > த. தயிலம்+காப்பு]*

**தயிலகாதனம்** *tayila-gādaṉam,* பெ.(n.) நஞ்ச நெய்; ghee prepared with aconite.

**தயிலகித்தம்** *tayilagittam,* பெ.(n.) பிண்ணாக்கு; oil-cake.

**தயிலச்சிக்கல்** *tayila-c-cikkal,* பெ.(n.) எண்ணெய் அடியில் தங்கும் கசடு; the deposit found in stagnating oil. (சா.அக.)

த.வ. எண்ணெய்க்கசடு

*[Skt. taila > த. தயிலம்+சிக்கல்]*

**தயிலப்பீப்பிலிகை** *tayilappīppiligai,* பெ.(n.) எண்ணெய்ப் பசையுள்ள எறும்பு; oily ant. (சா.அக.)

**தயிலபீதம்** *tayila-pīdam,* பெ.(n.) அத்திப் பிசின் (மலை.); milk of the fig tree.

*[Skt. taila+pīta > த. தயிலபீதம்]*

**தயிலம்** *tayilam,* பெ.(n.) 1. வடித்த மருந் தெண்ணெய் (சூடா.); ointment, medicated oil, balm. 2. எண்ணெய்; oil.

த.வ. நெய்மம்

*[Skt. taila > த. தயிலம்]*

**தயிலம்காய்ச்சு-தல்** *tayilam-kāyccu-,* செ.கு.வி. (v.i.) எண்ணெய் உருவாக்கல் (தயாரித்தல்); to prepare medicated oil. (சா.அக.)

*[Skt. taila > த. தயிலம் + காய்ச்சு-,]*

**தயிலம்தேய்-த்தல்** *tayilam-tēy-,* செ.கு.வி. (v.i.) நோய் கொண்ட இடத்தை மருந்து எண்ணெயால் உடம்பில் தேய்த்தல்; to rub medicated oil on the affected part of the body. (சா.அக.)

*[Skt. taila > த. தயிலம் + தேய்-,]*

**தயிலமாட்டு-தல்** *tayilam-āṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.) பிணத்தை எண்ணெயிட்டுக் கெடாமற் காத்தல்; to embalm preserve in medicated oil, as a corpse.

**தயிலமாடு-தல்** *tayilam-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. செக்காட்டி எண்ணெயெடுத்தல் (யாழ்.அக.); to extract oil from oil-seeds, in an oil-press. 2. எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல்; to besmear one's body with oil.

*[Skt. taila > த. தயிலம் + ஆடு-,]*

**தயிலமாலி** *tayilamāli,* பெ.(n.) எண்ணெய்த் திரி; oil wick. (சா.அக.)

**தயிலமிறக்கு-தல்** *tayilam-iṟakku-,* 5 செ.கு.வி.(v.i.) பொருள்களினின்று நெய்மம் எடுத்தல்; to extract essence.

*[Skt. taila > த. தயிலம் + இறக்கு-,]*

**தயிலமெடு-த்தல்** *tayilameḍu-,* செ.குன்றாவி (v.t.) நிலைத்திணை (தாவரம்) அல்லது தாது வகைகளினின்று எண்ணெய் சாறம் எடுத்தல்; extracting oil from oily substances whether of vegetable or mineral kingdom. (சா.அக.)

*[Skt. taila > த. தயிலம் + எடு-,]*

**தயிலமெரி–த்தல்** *tayilam-eri-,* 4 செ.குன்றாவி. (v.i.) சுடரெண்ணெய் இறக்குதல்; to prepare šuḍareṉṉey. 2. மருந்தெண்ணெய் காய்ச் சுதல்; to heat and prepare medicated oil.

*[Skt. taila > த. தயிலம் + எரி-,]*

**தயிலவருணம்** *tayila-varuṇam,* பெ.(n.) தேன்; honey.

**தயிலவாரிப்பிரசாதனம்** *tayilavāri-p-piraśādaṉam,* பெ.(n.) தேற்றான் கொட்டை; water clearing nut.

**தயிலவினையாளன்** *tayila-viṉaiyāḷaṉ,* பெ.(n.) செக்கான் (சேக்கிழார் 4 : 36); oil-monger.

*[Skt. taila > த. தயிலம் + வினையாளன்]*

**தயினாத்து** *tayiṉāttu,* பெ.(n.) 1. அமர்த்தம்; appointment. 2. ஊழியம்; attendance. *"ஒத்தாசைக்காரன் வீட்டில் தயினாத்துக்கு இரண்டு பேர்" (தாசில்தார்நா. 13).*

**தர்க்கம்** *tarkkam,* பெ.(n.) வினாவிடையாக நாடகவரங்கில் பாடும் பாடல்; duet, song in the form of a dialogue, sung alternated by two characters in a play.

*[த. தருக்கம் > Skt. tarka > த. தர்க்கம்]*

**தர்க்கம்** *tarkkam,* பெ.(n.) 1. தருக்கம், வாக்குவாதம்; discussion (in the nature of an argument), dispute. *'காலையில் மனைவியோடு சின்ன தர்க்கம்', '*புதிய நாடக உத்தியைப் பற்றி அவர்களுக்கு இடையே தர்க்கம் நடந்தது'. 2. காரணகாரிய அடிப்படையில் படிப்படியாக தருக்கம் அமைத்து ஒன்றை நிறுவும் முறை; logic.

**த.வ. எதிராடல், நேராடல்**

*[த. தருக்கம் > Skt. tarka > த. தர்க்கம்]*

**தர்க்கரீதியில்** *tarkkarīdiyil,* வி.எ.(adv.) காரணகாரிய அடிப்படையில்; logically.

*[Skt. tarka+rīti > த. தர்க்கரீதி]*

**தர்க்காத்து** *tar-k-kāttu,* பெ.(n.) நில முதலிய பெறற் பொருட்டு அரசாங்கத்தார்க்குச் செய்து கொள்ளும் வேண்டுகோள் (விண்ணப்பம்) (R.T.); tender, representation or petition, as for an assignment of land, for the cultivation of land, for farming any brach of the revenue, application, as for an appointment.

**த.வ. விழைவு மடல்**

*[U. darkhāst > த. தர்க்காத்து]*

**தர்க்காத்துதார்** *tar-k-kāttudār,* பெ.(n.) தர்க்காத்துப் பெற மனு கொடுப்போன்; one who applies to Government for assignment of lands, one who makes a darkhast, petitioner.

*[U. darkhāst-dār > த. தர்காத்துதார்]*

**தர்க்காத்துமனு** *tarkkāttumaṉu,* பெ.(n.) பயன்படுத்தாத கரம்பு நிலத்தைத் தனக்குக் கொடுக்கும் படி கேட்கும் முறையீடு (விண்ணப்பம்); petition for assignment of waste lands.

*[U. darkhast > த. தர்காத்து+மனு]*

**தர்கா** *targā,* பெ.(n.) பள்ளிவாசல்; mosque, shrine of a muhammadan saint, place of religious resort and prayer.

*[U. dargāli > த. தர்கா]*

**தர்க்கி–த்தல்** *tarkki-,* செ.குன்றாவி.(v.t.) உரையாடல்; to argue, dispute, discuss.

*[த. தருக்கம் > Skt. tarka > த. தர்க்க – தர்க்கி-,]*

**தர்கியகரம்** *tarkiyakaram,* பெ.(n.) உப்பு வாயு; nitrogen. (சா.அக.)

**தர்கியசம்** *tarkiyasam,* பெ.(n.) நச்சு வளி; a gas unfit for respiration formerly known as nitrogen. (சா.அக.)

**தர்க்கியம்** *tarkkiyam,* பெ.(n.) பொட்டிலுப்பு; nitre. (சா.அக.)

**தர்க்கியாமிலம்** *tarkkiyāmilam,* பெ.(n.) வெடியுப்பு எரிநீர்; nitric acid. (சா.அக.)

**தர்க்கு** *tarkku,* பெ.(n.) புலி; tiger. (சா.அக.)

**தர்க்குமயம்** *tarkkumayam,* பெ.(n.) நூல் திரிக்கும் ஊசியின் வடிவம்; a pin in the shape of a spindle. (சா.அச.)

**தர்ச்சனி** *tarccaṉi,* பெ.(n.) சுட்டு விரல்; fore-finger. *"தர்ச்சனி யாதிதனிற் செறிக்க" (சைவச. பொ. 153).*

*[Skt. tarjanī > த. தர்ச்சனி]*

**தர்சசிராத்தம்** *tarśaśirāttam,* பெ.(n.) முன்னோரைக் குறித்து காருவாவில் செய்யுஞ் சடங்கு; (Brah.) sraddha performed on new-moon day.

*[Skt. darśa+śrādha > த. தர்சசிராத்தம்]*

**தர்சனம்** *tarśaṉam,* பெ.(n.) தரிசனம், பார்க்க; see darišanam.

**தர்சனவுண்டியல்** *tarsaṉavuṇḍiyal,* பெ.(n.) பார்த்தவுடன் தொகை செலுத்த வேண்டிய உண்டியல்; hundi payable at sight.

**தர்ணா**[1] *tarṇā,* பெ.(n.) கடன் கொண்டவன், வரி பாக்கிதாரன் இவர்கள் வாயிலில் உட்கார்ந்து கொண்டு அவர் கொடுக்க வேண்டியதை நெருக்கிக் கேட்கை; forcing payment as of a debt, by sitting at the door of a debtor's house.

*[U. darānā > த. தர்ணா]*

**தர்ணா**[2] *tarṇā,* பெ.(n.) (அலுவலகத்தின் முன் அல்லது ஒரு பொது இடத்தில் கோரிக்கை களைத் தீர்க்குமாறு கோரி) வழி மறித்து முழக்கம் எழுப்பி நடத்தும் போராட்டம்; மறியல்; picketing. *'தண்ணீர்ச் சிக்கலைத் தீர்க்கக் கோரிச் சாலையில் உட்கார்ந்து பெண்கள் தர்ணா நடத்தினார்கள்'.*

த.வ. மறியல்

**தர்தூது** *tartūdu,* பெ.(n.) முயற்சி; exertion, endeavour, contrivance. *'அதரற்கு வேண்டிய தர்தூது செய்யச் சொல்லியும்'* (P.T.L. 180).

**தர்ப்பகெந்தி** *tarppakendi,* பெ.(n.) தலைச்சூடு வெள்ளி; an unknown drug said to be capable of binding mercury. (சா.அக.)

**தர்ப்பீத்து** *tarppīttu,* பெ.(n.) 1. பயிற்சி; education practice, training. 2. ஒழுக்கம்; conduct, character. "தர்ப்பீது கெட்டவன்".

*[U. tarbiyat > த. தர்ப்பீத்து]*

**தரளம்** *taraḷam,* பெ.(n.) 1. நடுக்கம் (உரி.நி); tremulousness. 2. முத்து (பிங்.); pearl. *"வாரித்தரள நகை செய்து (சிலப்.7,38).* 3. உருட்சி (சூடா.); globularity.

*[த. திரள் > Skt. dayāpara > த. தயாபரன்]*

**தரன்** *taraṉ,* பெ.(n.) 1. தரிப்பவன் (கங்காதரன்); one who wears or supports, used as the second member of sanskrit compounds. 2. எண்வசுக்களுள் ஒருவன் (பிங்.); a Vasu, one of a.sta-vacukkal.

*[Skt. dhara > த. தரன்]*

**தரா**[1] *tarā,* பெ.(n.) எட்டுப்பாகம் செம்பும் ஐந்து பாகம் காரீயமுங் கலந்த ஒரு மாழை (உலோகம்); alloy of 8 parts of copper to 5 of tin, used for making metal vessels. *"புகழ்தராப் போக்கில்லை" (சினேந்.169).*

**தரா**[2] *tarā,* பெ.(n.) திராய் (தைலவ.தைல.76); Indian chick weed.

**தரா**[3] *tarā,* பெ.(n.) பூமி (தராபதி); earth.

*[Skt. dharā > த. தரா]*

**தரா**[4] *tarā,* பெ.(n.) சங்கு (அக.நி.); conch.

*[Skt. darā > த. தரா]*

**தராங்கம்** *tarāṅgam,* பெ.(n.) மலை (யாழ்.அக.); mountain.

*[Skt. dharā+aṅga > த. தராங்கம்]*

**தராசம்** *tarāśam,* பெ.(n.) 1. வயிரக் குணங்களுள் ஒன்று; a quality in diamonds. *"இலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமும்" (சிலப்.14,180,உரை).* 2. மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்று (சிலப்.14,184,உரை); a plaw in emeralds, one of eight Marakata-k-kuṟṟam.

*[Skt. trāsa > த. தராசம்]*

**தராசு** *tarāšu,* பெ.(n.) 1. நிறைகோல்; Balance. "தராசினிறுத்த பின்" (திருமந்.2918). 2. எண்ணூறு பலவளவு; a measure of weight - 800 palams. 3. துலாவிராசி; libra in the zodiac. *4. தாழி (பரணி) (சூடா.);* the second nakṣatra.

*[U. tarāzu > த. தராசு]*

**தராசுக்காசு** *tarāšu-k-kāšu,* பெ.(n.) கிழக்கிந்தியா காலத்தில் மும்பை மாநிலத்தில் வழங்கி வந்த செப்பு காசு; old copper coins with the figure of weighing - scales on one side, issued by the east Indian company for use in Bombay.

**தராசுக்குண்டு** *tarāšu-k-kuṇḍu,* பெ.(n.) நிறை கல்; weight.

*[U. tarāzu > த. தராசு+குண்டு]*

**தராசுக்கொடி** *tarāšu-k-koḍi,* பெ.(n.) 1. பெருமருந்து; Indian birthwort. 2. முல்லை; wild jasmine.

**தராசுக்கோல்** *tarāšu-k-kōl,* பெ.(n.) துலாக்கோல்; beam

*[U. tarāzu > த. தராசு+கோல்]*

**தராசுத்தட்டு** *tarāšu-t-taṭṭu,* பெ.(n.) துலாத் தட்டு; scales of a balance.

*[U. tarāzu > த. தராசு+தட்டு]*

**தராதரம்[1]** *tarādaram,* பெ.(n.) மலை; mountain. *"கடதராதர நிகர் (இரகு.குலமு.1).*

**தராதரம்[2]** *tarādaram,* பெ.(n.) ஏற்றத்தாழ்வு; distinction of rank, place, class or other particulars. *"தராதரந்தெரிந்து" (திருவிளை. திருமண.94). 2. நிலைப்பாடு;* status, position.

த.வ. தகுதி

**தராப்பு** *tarāppu,* பெ.(n.) கப்பலின் வெளியே வைக்கப்பட்டிருக்கும் ஏணி; accommodation ladder.

*[Ar. taraf > த. தராப்பு]*

**தராப்புப்பண்ணு-தல்** *tarāppu-paṇṇu-,* செ.குன்றாவி.(v.t.) வைப்பகத்தில் போட்டிருந்த வைப்புப் பொருளைத் திரும்ப வாங்கிக் கொள்ளுதல் (chetti); to draw from a bank as a deposit.

*[E. draw > த. தராப்பு + பண்ணு-,]*

**தராபதி** *tarā-padi,* பெ.(n.) அரசன்; king, ruler. *"இவர்குலத் தராபதி காண்" (கம்பரா. குலமுறை.1).*

*[Skt. dhara-pati > த. தராபதி]*

**தரி[1]-த்தல்** *tari-,* பெ.(n.) 11 செ.கு.வி. (v.i.). 1. நிலைபெற்று நிற்றல்; to stop, stand still. தரியாதே ஓடா நின்றது (4.வெ.11. ஆண்பாற்.7,உரை). 2. இருப்புக் கொள்ளுதல்; to abide. "வணிகன் கண்டவன்தரித்து" (கடம்ப.4.இலீலா.53). 3. ஊன்றி நிற்றல்; to stand firm, to be firm. வேர் தரித்திருக்கிறது.

*[Skt. dhr > த. தரி-,]*

**தரி[2]-த்தல்** *tari-,* 11 செ.கு.வி. (v.t.) 1. அணிதல்; to invest, put on, as dress, flowers, etc. *"ஆபரணந் தரித்தாள்".* 2. தாங்குதல்; to keep, support, carry. "உமையோர் பாகந் தரித்தானை (தேவா–4442,2). 3. பொறுத்தல்; to bear patiently, endur, "தார்க்குவளை கண்டு தரியா விவன் முகத்துக் கார்க்குவளை. (4.வெ.12.பெண்பாற்.11). 4. அடக்கிக் கொள்ளுதல்; to control. *"மருதரைத் தரியா தேத்துவார்" (தேவா.447,4).* 5. மறவாது உள்ளத்துக் கொள்ளுதல்; to remember, bear in mind. கல்விகளையும் அவற்றின் பொருட் கேள்விகளையுங் கற்றுந் தரித்தும் (சிலப்.9,30,உரை). 6. தாம்பூலம் தின்னுதல்; to chew, as betel. *"தாம்பூலந் தரிக்க வேண்டும்.*

*[Skt. dhr > த. தரி-,]*

**தரிசனம்[1]** *tarišaṇam,* பெ.(n.) 1. பார்வை; view, auspicious sight, perception. 2. கண்; eye. 3. தோற்றம்; appearance. 4. தெய்வம் அல்லது பெரியோர்களைக் காண்கை; sight as of a great person, a deity. *"தரிசன முந் தீர்ந்து" (ஞானவா. மாவலி. 48).* 5. கனவு முதலிய தோற்றம் (வின்.); dream, vision, trance, supernatural appearance. 6. கண்ணாடி; mirror, looking-glass. 7. மதக் கொள்கை;

religious doctrine: "நமது தரிசனத்துக் கடியபட்டவாற்றால் தேனுண்டலைப் பரிகரிக்க (சிலப், 10, 85, உரை).

த.வ. காட்சி

*[Skt. darśana > த. தரிசனம்]*

**தரிசனம்[2]** *tariśaṉam*, பெ.(n.) நூற்றெட்டுபநிட தங்களுள் ஒன்று; an upaniṣad, one of 108.

*[Skt. jābāladarśana > த. தரிசனம்]*

**தரிசனவேதி** *tariśaṉa-vēdi*, பெ.(n.) தாழ்ந்த மாழை (உலோகங்)களை உயர்ந்த மாழை (உலோகங்)களாக மாற்றவல்ல பச்சிலை வகை; an alchemic drug.

*[Skt. darśana+bhēdin > த. தரிசனவேதி]*

**தரிசனாவரணியம்** *tariśaṉā-varaṉiyam*, பெ.(n.) எண் குற்றத்துள் உண்மைக் கொள்கையைக் காணவொட்டாமல் தடுக்கும் செயல் (சிலப். 10, 177, உரை); the karma which prevents the vision of the true faith, one of *eṉ-kuṟṟam*. (q.v.).

*[Skt. darśanāvaraṉiya > த. தரிசனாவரணியம்]*

**தரிசனீயம்** *tariśaṉīyam*, பெ.(n.) காட்சிக் கினியது; that which is sight-worthy.

*[Skt. darsanīya > த. தரிசனீயம்]*

**தரிசனை** *tariśaṉai*, பெ.(n.) 1. காட்சி; sight. 2. அறிகை; understanding. *"பாவனா தரிசனை கருதியுய்த்து" (மணிமே. 30, 258).* 3. கண்ணாடி; mirror.

*[Skt. darśana > த. தரிசனை]*

**தரிசி[1]-த்தல்** *tariśi*, செ.குன்றாவி.(v.t.) கடவுளர், பெரியோர்கள், புண்ணிய விடத்தையுங் காணுதல்; to see behold, to obtain sight, as of an idol a great person a sacred place.

*[Skt. drs > த. தரிசி-,]*

**தரிசில்** *tariśil*, பெ.(n.) 1. கதப்பைப் புல்லை எரித்ததினாலாகிய சாம்பல் உப்பு; a salt obtained by burning the bearded grass into ashes. 2. உவருப்பு, இரலியுப்பு, இந்துப்பு என்று குழூஉக்குறி (பரிபாஷை)யாக உரோக முனிவன் 200 இல் பாடியுள்ளதும் மூன்று மாதத்தில் பிண்டத்தினின்று உருவாக்கியது மான ஒரு பிண்டமுப்பு; a mystic salt prepared from the foetus of three months by a secret process, it is known by different hidden names as codified in the treatise of Roma Rishi 200. 3. பூநீறு; fuller's earth. 4. மூவுப்பு; the mystic three salts used in alchemy. (சா.அக.)

**தரிசு** *tariśu*, பெ.(n.) வேளாண்மை செய்யப்படாத நிலம்; land lying waste or follow. "தரிசு கிடந்த தரையை (ஈடு,2,7,4).

த.வ. கரம்பு,

*[U. tar > த. தரிசு]*

**தரித்திரம்** *tarittiram*, பெ.(n.) வறுமை (பிங்.); poerty, want, destitution.

*[Skt. daridra > த. தரித்திரம்]*

**தரித்திரம்பிடி-த்தல்** *tarittiram-piḍi-*, செ.கு.வி.(v.i.) 1. வறுமையடைதல் (வின்.); to become poor. 2. கறுமியாயிருத்தல் (இ.வ.); to be stingy.

*[Skt. daridra > த. தரித்திரம் + பிடி-,]*

**தரிபீத்செய்-தல்** *taribīt-sey-*, செ.குன்றாவி. (v.t.) பழக்குதல்; to train up, as a novice.

*[[Skt. taru > த. தரிபீத் + செய்-,]*

**தரிம்விலா** *tarimvilā*, வி.அ.(adv.) இது தொடர்பாய் என்னும் பொருள்படும்படி கடிதத் திலெழுதும் வக்கணை (C.G.83); in this connection, afterwards subsequently, herinafter used in official correspondance to connect the substance of the communication with the salutation with which is usually opens.

*[U. darmiyām > த. தரிம்விலா]*

**தரியாபத்து** *tariyāpattu,* பெ.(n.) 1. உசாவல்; enquiry, investigation. 2. கண்டு பிடிக்கை; discovery, detection. 3. வழக்கு (திருநெல். வழ); dispute.

*[U. daryāf > த. தரியாபத்து]*

**தரியாமை** *tariyāmai,* பெ.(n.) கொள்ளாமை, கருப்பந்தாங்காமை; not conceiving as pregnancy. (சா.அக.)

*[Skt. dhr > த. தரி] 'ஆ' எ.ம.இ.நி.*

**தரீப்பு** *tarīppu,* பெ.(n.) 1. தீர்மானம்; deter mination. 2. தீர்வைப்பட்டியல்; tariff, list or table of duties upon merchandise. (வின்.G.512).

*[U. tarīf > த. தரீப்பு]*

**தரு**[1] *taru,* பெ.(n.) மரக்கலப்பாய் இறக்குகை; striking of sail.

**தரு**[2] *taru,* பெ.(n.) 1. மரம்; tree. "தருவனத்துள்" (கம்பரா.கையடைப்.10). 2. கற்பக மரம்; the karpakam tree of svarga. "தரு நிலை (மணி.5,114).

*[Skt. taru > த. தரு]*

**தரு**[3] *taru,* பெ.(n.) 1. இசைப்பாட்டு வகை (இராமநா.பாலகா); a stage - song in a peculiar metre and tune. 2. ஒரு வகைச் சந்தம் (வின்.); meaningless syllable sung to a tune as an interlude, formed of the letters. த்,ந்,ன் combined with a long or short vowel.

**தருசாரம்** *taru-šāram,* பெ.(n.) கருப்பூரம் (சங்.அக.). (மரத்தின் சாரமாயுள்ளது); camphor, as the essence of a tree.

*[Skt. taru+sāra > த. தருசாரம்]*

**தருக்கபரிபாசை** *tarukka-paripāšai,* பெ.(n.) தருக்க பரிபாசை, பார்க்க; see tarukka-paripācai.

**தருக்கல்** *tarukkal,* பெ.(n.) 1. ஒரு வகை நாகக்கல்; zinc spar. 2. சூடாலைக் கல்; zinc ore. (சா.அக.)

**தருசணி** *tarušaṇi,* பெ.(n.) விலைமகள்; prostitute. (சா.அக.)

**தருணதை** *taruṇadai,* பெ.(n.) 1. கற்றாழை; aloe. 2. மங்கை பருவமுள்ள பெண்; a girl between 12 and 13 years of age. 3. பதினாறு அகவை (வயது) தொடங்கி முப்பது அகவை (வயது) வரையுள்ள பருவப்பெண்; woman's age 16 and 30 years. 4. ஓர் செடி; rosa alba. (சா.அக.)

**தருணம்** *taruṇam,* பெ.(n.) 1. இளமை; prime of life youthfulness. "தருண வஞ்சிக் கொம்பு" (கம்பரா.தைலமாட்டு). 2. ஏற்ற வேளை; right time, proper season. "வெஞ்சமா தொடர்ந்த தத்தருணமாம் (சங்.அக.); 3. நல்லெண்ணம்; good intention. "தருணங் கெட்டவன்". 4. பெருஞ்சீரகம் (மலை.); chinese anise. 5. ஆமணக்கு (மூ.அ.); castor.

*[Skt. taruṇa > த. தருணம்]*

**தருணன்** *taruṇaṉ,* பெ.(n.) இளைஞன்; youth man. *"அறவுந்தருண னறவும்விருத்தன்" (சைவச.ஆசா.16).*

*[Skt. taruṇa > த. தருணன்]*

**தருணி** *taruṇi,* பெ.(n.) 1. இளமைப் பருவ முடையவள்; young woman. 2. 16 முதல் 30 ஆண்டு வரையுள்ள மகளிர் பருவம் (திவா.); the period from the 16th to the 30th year in the lifetime of a woman.

**தருப்பகசிலேட்டுமம்** *taruppaga-silēṭṭumam,* பெ.(n.) உடம்பைக் காப்பாற்ற வேண்டி (அமைந்த) ஐந்து பிரிவாகிய கோழையில் (சிலேட்டுமத்தில்) தலையி (சிரசி)லுள்ள ஒரு பகுதி; one of the five phlegms. (சா.அக.)

**தருப்பணம்**[1] *taruppaṇam,* பெ.(n.) 1. தேவர் களுக்கும், முனிவர்களுக்கும், முன்னோ ருக்கும் இறுக்கும் நீர்க்கடன்; libations of water to gods, munivars and manes.

2. உணவு; food, refreshment. *"தருப்பணப் பிண்டியும்" (திவா. 11).* 3. அவல்; fried paddy pestled and cleaned. *"கருப்புக் கட்டியொடு தருப்பணங் கூட்டி" (பெருங். உஞ்சைக். 40, 129).*

*[Skt. tarpaṇa > த. தருப்பணம்]*

**தருப்பணம்[2]** *taruppaṇam,* பெ.(n.) கண்ணாடி (பிங்.); mirror.

*[Skt. darpaṇa > த. தருப்பணம்]*

**தருப்பாக்கிரம்** *taru-p-pākkiram,* பெ.(n.) தருப்பை நுனி; spike of darbha grass. *"நெய்க்குள்ளே விடுகிற தருப்பாக்கிரத்தை" (சீவக. 2465 உரை).*

*[Skt. darbhāgra > த. தருப்பாக்கிரம்]*

**தருமக்கட்டை** *taruma-k-kaṭṭai,* பெ.(n.) 1. பிறர் தருமத்தால் வாழும் ஏதிலியர் (ஆதரவற்றோர்); orphan, as supported by charity. 2. ஆவுரிஞ்சு தறி; rubbing post for cattle, set up as a charity.

*[Skt. dharma > த. தருமம்+கட்டை]*

**தருமக்கல்** *taruma-k-kal,* பெ.(n.) ஒருவன் செய்த அறச்செயல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு (இ.வ.); memorial slab inscribed with the charitable deeds of a person.

த.வ. கொடைக்கல்

*[Skt. dharma > த. தருமம் + கல்]*

**தருமக்குரல்** *taruma-k-kural,* பெ.(n.) இலவய உணவுக்காக விடுக்கப்படும் பொது அழைப்பு; general call or invitation, as in a free distribution food.

த.வ. அறவிளி

*[Skt. dharma > த. தருமம் + குரல்]*

**தருமக்கொள்ளி** *taruma-k-koḷḷi,* பெ.(n.) அறநிலையத்தார் செய்யும் ஈமக்கடன்; cremation, in charity, of a person who dies homeless.

த.வ. அறக்கொள்ளி

*[Skt. dharma > த. தருமம் + கொள்ளி]*

**தருமக்கோள்** *taruma-k-kōḷ,* பெ.(n.) மறைமுகமாகச் செய்த குற்றத்தைக் குறிப்பாக வெளிப்படுத்தல் (யாழ்ப்.); indirect information as to a secred crime.

த.வ. அறக்கோள்

*[Skt. dharma > த. தருமம் + கோள்]*

**தருமகருத்தா** *taruma-karuttā,* பெ.(n.) 1. அறங்காவலர், திருக்கோயில் ஆட்சித் தலைவர்; manager or trustee of a Hindu temple. 2. அற முரைப்பவர், நீதியரசர் (R.T.); judge, arbitrator, magistrate.

**தருமகாரியம்** *taruma-kāriyam,* பெ.(n.) அறச்செயல்; act of charity.

*[Skt. dharma > த. தருமம் + காரியம்]*

**தருமச்சேட்டை** *taruma-c-cēṭṭai,* பெ.(n.) நெற்களத்தில் ஏழைகட்குக் கொடுக்க வேண்டி முறத்தில் தனியே வைக்கப்பட்டுள்ள கூலம்; corn set apart in a winnowing fan at the threshing - floor to be given to the poor.

*[Skt. dharma > த. தருமம் + சேட்டை]*

**தருமசக்கரம்** *taruma-cakkaram,* பெ.(n.) அறவாழி; Buddham and Jaina - the wheel of Dharmam. *"தருமசக்கர முருட்டினன் வருவோன்" (மணிமே. 10.. 26).*

*[Skt. dharma > த. தரும(ம்) + சக்கரம்]*

**தருமசங்கடம்** *taruma-saṅgaḍam,* பெ.(n.) மாறுபட்ட இரண்டு கடமைகளுள், எதனை முடிப்பது என்று தெரியாத நிலைமை, அறத் தடுமாற்றம்; difficulty of discerning which of two contradictory duties is proper.

த.வ. இரண்டுங்கெட்டான் நிலை, அறத்தடுமாற்றம்

*[Skt. dharma > த. தரும(ம்) + சங்கடம்]*

**தருமசத்திரம்** *taruma-cattiram,* பெ.(n.) தருமசாலை பார்க்க; see *taruma-sālai.*

மறுவ. அன்ன சத்திரம்

**தருமசபை** *taruma-šabai,* பெ.(n.) முறை மன்றம்; council of arbitrators, court of justice, tribunal.

*த. அவை > சவை >*

*[Skt. dharma > த. தருமம் + சபை]*

**தருமசாட்சி** *taruma-sāṭci,* பெ.(n.) அறமன்றத் தாரால் அழைக்கப்பட்டுக் கேட்கப்படும் சான்று (இ.வ.); king's evidence, court witness. 2. அறமகளறியக் கூறுஞ்சாட்சி; testimony given in the name of the Goddess of virtue.

**தருமசாதனம்** *taruma-šādaṉam,* பெ.(n.) அறச் செயலைக் குறிக்குஞ் செப்புப் பட்டயம்; deed of endowment inscribed on a copper-plate.

த.வ. அறப்பட்டயம்

**தருமசாலி** *taruma-šāli,* பெ.(n.) அறவோன்; charitable person.

*[Skt. dharma > த. தரும(ம்) + சாலி]*

**தருமசாலை** *taruma-šālai,* பெ.(n.) வழிப் போக்கருக்கு இலவயமாக உணவு வழங்கும் சாவடி; rest-house for travellers with free provision for food.

*[Skt. dharma > த. தரும(ம்) + சாலை]*

**தருமசிந்தை** *taruma-šindai,* பெ.(n.) அறம் புரியும் எண்ணம்; charitable or virtuous disposition.

த.வ. கொடையுள்ளம்

*[Skt. dharma > த. தரும(ம்) + சிந்தை]*

**தருமசீலன்** *taruma-silaṉ,* பெ.(n.) **தருமசாலி** பார்க்க; see *taruma-sāli.*

**தருமத்தியானம்** *taruma-t-tiyāṉam,* பெ.(n.) ஆதனின் இயல்பு, அதன் இன்ப துன்ப உணர்வு; அது நல்வழியடைதலைத் தடுக்கும் தடைகள், அது முடிவில் நிலையாய இன்பத்தை எய்துகை ஆகிய மெய்ப் பொருளைப் பற்றிய உணர்வு; (Jaina.) knowledge of the nature of the soul. its experience of good and evil. the impediments in its progress and its final attainment of enternal bliss.

**தருமதாயம்** *taruma-dāyam,* பெ.(n.) அறத்திற்காக விடும் இறையிலி நிலம் (W.G.137); inam granted for any charitable purpose; property or funds bequeathed and dedicated to pious uses.

*[Skt. dharma > த. தரும + தாயம்]*

**தருமதானம்** *taruma-dāṉam,* பெ.(n.) சமய நடை முறைப்படி செய்யும் கொடை; charity according to prescribed texts. *"எங்கோள் முற்பவத்திற் புண்ணியத்தையுந் தரும தானத்தையுஞ் செய்தோ னாதலின" (சிலப். 15 : 30, உரை).*

*[Skt. dharma > த. தருமம்]*

**தருமதேவதை** *taruma-dēvadai,* பெ.(n.) 1. இயக்கி (சூடா.); Jaina Goddess of benevolence. 2. எமன்; Yaman. *"தனைப் பயந்த நற்றரும தேவதை திருவருளால்" (பாரத. நச்சுப். 47).*

*[Skt. dharma > த. தரும(ம்) + தேவதை]*

**தருமநீதி** *taruma-nīdi,* பெ.(n.) சட்ட நூல்களில் கூறப்படும் அறம்; justice as based on the legal codes.

த.வ. அறமுறை

**தருமநூல்** *taruma-nūl,* பெ.(n.) மனு, அத்திரி, விண்டு, வாசிட்டம், யமம், ஆபத்தம்பம், யாஞ்ஞவற்கியம், பராசரம், ஆங்கிரசம், உசனம், காத்தியாயனம், சம்வர்த்தம், வியாசம், பிரகற்பதி, சங்கலிதம், சாதாதபம், கௌதமம், தக்கம் எனப்பதினெண் வகைப்பட்ட அறநூல் (பிங்.); ancient text books on kind law in Sanskrit 18 in number viz. maṉu, attiri, viṇtu, vāciṭṭam, yamam, āpattambam, yāññavaṟgiyam, parāsaram, āṅgirasam, usaṉam, kāttiyāyaṉam, samvarttam, viyāsam, piragaṟpati, saṅgalidam, sādādabam, gaudamam, takkam.

த.வ. அறநூல்

*[Skt. dharma > த. தரும(ம்) + நூல்]*

**தருமநூற்பிரிவு** *taruma-nūr-pirivu,* பெ.(n.) ஆசாரம், விவகாரம், பிராயச்சித்தம் எனத் தரும சாத்திரம் கூறும் மூன்று பகுதிகள்; sections in the legal treatise, numbering three viz. ācāram, vivakāram, pirāyaccittam.

*[Skt. dharma > த. தரும(ம்) + நூல்+பிரிவு]*

**தருமப்பத்தினி** *taruma-p-pattini,* பெ.(n.) கணவனோடு உடனிருந்து வைதீகச் செயல் களை நடத்துதற்குரிய இல்லறக்கிழத்தி; legitimate wife entitled to take part along with her husband in all rituals.

**தருமப்பிரபு** *taruma-p-pirabu,* பெ.(n.) மிகுதியாக அறம் புரிவோன்; benefactor benevolent lord.

**தருமப்பிள்ளை** *taruma-p-pillai,* பெ.(n.) கழைக் கூத்தரின் வளர்ப்புப் பிள்ளை (வின்.); one brought up by public charity in the profession of pole-dancing.

*[Skt. dharma > த. தருமம் + பிள்ளை]*

**தருமபீடிகை** *taruma-pīdigai,* பெ.(n.) புத்தரது இணையடி அமைந்த இருக்கை-மேடை; pedestal bearing Buddha's feet, worshipped in many places. *"புரையோ ரேத்துந் தரும பீடிகை தோன்றியது (மணிமே. 8 : 63).*

*[Skt. dharma> த. தரும(ம்) + பீடிகை]*

**தருமபுத்திரன்** *taruma-puttiran,* பெ.(n.) 1. மாபாரதக் கதையில் பாண்டவர்களுள் மூத்தவன்; the eldest of the pāṇḍavās of Mahābāratham. 2. முறைப்படி மணந்து கொண்ட மனைவியின் மகன்; lawful son, son of legally wedded wife.

*[Skt. dharma > த. தரும + புத்திரன்]*

**தருமபுரம்** *taruma-puram,* பெ.(n.) 1. கூற்றுவன் நகர்; city of yaman. 2. தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறைக்கு அருகில் இருக்கும் புகழ்மிக்க சிவமடமுள்ள ஒரு சோணாட்டு ஊர்; a Šiva shrine near Mayilāḍuturai, Thañjāvūr district, famous for šaiva mutt.

*[Skt. dharma > த. தரும + புரம்]*

**தருமம்** *tarumam,* பெ.(n.) 1. நற்செயல் (பிங்.); virtuous deed. 2. விதி (உரி.நி.); statute, ordinance law, sacred law. 3. தருமநூல் (உரி.நி.) பார்க்க; see tarumanūl. 4. ஒழுக்கம் (உரி.நி.); usage, practice, customary observance or prescribed conduct. 5. கடமை; duty. 6. நீதி; justice, righteousness. "பொருந்து மென்கை தருமமோ" (பாரத.சூதுபோர்.186). 7. தான முதலிய அறம்; charity, benevolence.

**தருமமன்று** *taruma-manru,* பெ.(n.) அற (நீதி) மன்றம்; court of justice. *"ஓரடியிடாமற் றடுத்து வா தரும மன்றுள்" (திருவாலவா. 41, 10).*

த.வ. அறமன்றம்

*[škt. dharma > த.தரும + மன்று]*

**தருமமுதல்வன்** *taruma-mudalvan,* பெ.(n.) அருகக் கடவுள்; Arhat. *"சித்தன் பகவன் தரும முதல்வன்" (சிலப். 10 : 178).*

*[škt. dharma> த.தரும + முதல்வன்]*

**தருமமூர்த்தி** *taruma-mūrtti,* பெ.(n.) அறமே உருவானவன்; embodiment of dharma. *"நந்தமாலவாய்த் தரும மூர்த்தி" (திருவாலவா. 20, 8).*

**தருமராசன்** *taruma-rāšan,* பெ.(n.) 1. தருமன் (சூடா.) பார்க்க; see taruman. *"விண்ணிடைத் தருமராசன் விரும்பினால் விலக்குவாரார்" (தேவா. 523 : 2).* 2. பாலை (மலை.); silvery-leaved ape flower.

**தருமவாகனன்** *taruma-vāgaṉaṉ,* பெ.(n.) தரும வடிவான காளையை, ஊர்தியாகக் கொண்ட சிவன் (யாழ்.அக.); Šivaṉ, as riding on bull which is Tarumam personified.

**தருமவாசனம்** *taruma-v-āsaṉam,* பெ.(n.) முறை மன்றம்; court. *"தருமவா, சனத்திலேற" (திருவாலவா. 41, 13).*

**தருமவாடி** *taruma-vāḍi,* பெ.(n.) ஈகைக் கூடம்; place in which alms are given.

*[Skt. dharma > த. தரும + வாடி]*

**தருமவான்** *taruma-vāṉ,* பெ.(n.) அற நோக்குடையோன்; charitable and virtuous man. *"தணிகைவாழ் தருமவானையே" (அருட்பா.5, பணித்திறஞ் சாலாமை, 1).*

**தருமவினைஞர்** *taruma-viṉaiñar,* பெ.(n.) அறப்புறங்களை மேற்பார்க்கும் அரசு அலுவலர்கள்; officers in charge of charities. *"தரும வினைஞருந் தந்திர வினைஞரும்" (சிலப். 26 : 41).*

*[ தரும(ம்) + வினைஞர்]*

வினை > வினைஞர்.

**தருமவுபாயம்** *taruma-v-ubāyam,* பெ.(n.) கொடுத்த கடனை வாங்கும் பொருட்டுக் கடன்காரன் வீட்டு வாயிலிற் பழிகிடக்கும் முறைமை; dharma a mode of extorting payment or complainant or creditor sitting at the debetors door and there remaining without tasting food till his demand shall be complied with (R.F.).

**த.வ. அறப்பாடு**

**தருமவைத்தியசாலை** *taruma-vaittiya-sālai,* பெ.(n.) இலவய மருத்துவமனை, பணமின்றி மருத்துவம் செய்யுமிடம்; hospital of free dispensory.

**த.வ. அறமருத்துவச்சாலை**

*[Skt. dharma+vaidya>த. தருமவைத்திய(ம்) +சாலை]*

*[த. சாலை > Skt.சாலா]*

**தருமவைத்தியம்** *taruma-vaittiyam,* பெ.(n.) பணம் வாங்காது இலவயமாச் செய்யும் மருத்துவம்; free medical treatment. (சா.அக.).

*[Skt. dharma+vaidya>த. தருமவைத்தியம்]*

**தருமன்** *tarumaṉ,* பெ.(n.) 1. அறக் கடவுள்; God of justice and righteousness. *"தருமன் றண்ணளியால்" (சீவக. 160).* 2. காலன் (எமன்) (பிங்.); yamaṉ. *"தருமனு மடங்கலும்" (பரிபா. 2.).* 3. பாண்டவர்களுள் மூத்தவன்; elder brother of Pāndavars. *"தருமனித்தனை நாட்செய்த தருமமும் பொய்யோ" (பாரத. சூது. 191).* 4. புத்தன் (பிங்.); Buddhan. 5. அருகன்; Arhat. *"தருமன் பொருளன்" (சிலப். 10 : 178).* 6. திருக்குறளுரை காரருள் ஒருவர்; one of the commentators on kuṟal. *"தருமர் மணக்குடவர்" (தனிப்பா.)*

*[Skt. dharma > த. தரும]*

**தருமாசனத்தார்** *tarumā-šaṉattār,* பெ.(n.) நடுவர்கள்; judges. *"அறங்கூறுந் தருமா சனத்தார் உரைக்கும் நடுவு நிலைமை" (சிலப். 5 : 135, உரை).*

**த.வ. அறங்கூறு அவையத்தார்**

**தருமாத்திகாயம்** *tarumāttigāyam,* பெ.(n.) அறவழி நடக்கத் தேவையான பொருள்; money required to live in the righteous way. *"தருமாததி காயந் தானெங்கு முளதாய்" (மணிமே. 27 : 187).*

**தருமி** *tarumi,* பெ.(n.) கொடையாளி, புரவலன்; munificence person.

*[Skt. dharmi(n) > த. தருமி]*

**தரோகா** *tarōkā,* பெ.(n.) பொய்; falsehood.

**த.வ. இரண்டகம்**

*[U. darōgh > த. தரோகா]*

**தல்லால்** *tallāl,* பெ.(n.) தரகுக்காரன்; broker, intermediary.

**தலவகாரம்** *talavakāram,* பெ.(n.) சாமவேத உட்பிரிவு (சாகை)களுள் ஒன்று; a reseension

of the *sānma-vēda.* *"தலவகார சரணத்தார்க்கு" (T.A.S.I.S, 3).*

**தலாக்** *talāk,* பெ.(n.) மனைவியை விலக்குகை (நிராகரிக்கை) (முகமதிய); divorce.

*[U. talāq > த. தலாக்]*

**தலாசி** *talāsi,* பெ.(n.) உசாவல் (விசாரணை) (C.G.); enquiry, detection.

**தலாயத்து** *talāyattu,* பெ.(n.) வில்லைச் சேவகன்; liveried attendant, peon.

**தலால்** *talāl,* பெ.(n.) தரகன் (C.G.); broker.

*[U. dallāl > த. தலால்]*

**தலாலி** *talāli,* பெ.(n.) தரகு; brokerage.

*[U. dallāli > த. தலாலி]*

**தவளம்** *tavaḷam,* பெ.(n.) 1. வெள்ளைக் கோடா சூரி; a virulent type of arsenic. 2. பற்பம்; calcined powder. 3. வெள்ளைக் கரு; white of the egg albumin. 4. சாம்பல் நிறம்; ash colour. (சா.அக.)

**தளகர்த்தர்** *taḷakarttar,* பெ.(n.) தளபதி; general (of an army). *"இராணுவத்தில் தளகர்த்தர் முக்கிய முடிவுகளை எடுப்பதுண்டு".*

த.வ. படைத்தலைவர்

**தற்காலம்** *taṟ-kālam,* பெ.(n.) 1. நிகழ்காலம்; present time. "தற்காலமதை நோவனோ". (தாயு.பரிபூரண.7). 2. குறித்த காலம்; exact or precise time of an action or occurrence.

த.வ. இற்றைக்காலம்

*[Skt. tat-kāla > த. தற்காலம்]*

**தற்சமயம்**[1] *taṟ-šamayam,* பெ.(n.) 1. குறித்த வேளை (வின்.); particular juncture, exact moment required. 2. உற்ற வேளை (சங்.அக.); best opportunity favourable juncture.

த.வ. இற்றைப்பொழுது, இவ்வேளை

**தற்சமயம்**[2] *taṟ-šamayam,* வி.எ..(adv.) இப்பொழுது; at present.

**தற்சனி** *taṟ-caṉi,* பெ.(n.) சுட்டுவிரல்; fore finger. "சிறுவிர றன்னி னின்றுந் தற்சனியளவும்" (காசிக.சிவச.அக்கினி 22).

*[Skt. tarjani > த. தற்சனி]*

**தற்புருடம்** *taṟpuruḍam,* பெ.(n.) சிவனைம் முகத்துள் கிழக்கு நோக்கியிருப்பது (சைவச.பொது.334); a face of šiva which is turned eastward, one of civaṉ-ai-m-mukam.

**தன்மவாரியப்பெருமக்கள்** *taṉma-vāriya-p-perumakkaḷ,* பெ.(n.) அறநிலையங்களை மேற்பார்வைப் பார்க்கும் அவையோர் (S.I.I.iii.10). Officers of incharge of charities.

**தன்மவிசேடவிபரீதசாதனம்** *taṉma-višēḍa-vibarīda-šādaṉam,* பெ.(n.) விருத்த வேதப்போலி நான்கனுள் கூறப்பட்ட ஏது, பக்கத்தின் விசேடத்தன்மையைக் குறிக்காது அதனை வியாபகப் பொருளென்று தவறி நினைக்குமாறு செய்வது (மணிமே. 29, 277); a fallacious middle term which fails to denote the particular quality of the minor term so as to make it appear to belong to a spicies of wider denotation, one of four *virutta-v-ētu-p-pōli.*

**தன்மிச்சொரூபவிபரீதசாதனம்** *taṉmi-c-corūba-vibarīda-šādaṉam,* பெ.(n.) விருத்த வேதப்போலி நான்கனுள் கூறப்பட்ட ஏது, பக்கத்தில் ஒருபோதும் இல்லாமிருப்பது (மணிமே. 29, 278); a fallacious middle term which does not at all exist in the minor term, one of four virutta-v-ēta-p-pōli.

**தன்மிட்டன்** *taṉmiṭṭaṉ,* பெ.(n.) 1. நன்னெறியில் நிற்பவன்; virtuous person. *"தன்மிட்ட னாயவந்த யயாதிக்கு" (உத்தரரா. இலவண.*

*33).* 2. கொடை மனமுள்ளவன் (கொ.வ.); charitable person.

**தன்மிவிசேடவிபரீதசாதனம்** *tanmi-viśēda-vibarīda-śādanam,* பெ.(n.) விருத்த வேதப்போலி நான்களுள் கூறப்பட்ட ஏது, பக்கத்தின் விசேடத்தன்மையைக் குறிக்காது அதனை வியாப்பியப் பொருளென்று தவறி நினைக்குமாறு செய்வது (மணிமே. 29, 279); a fallacious middle term which fails to denote the particular quality of the minor term and restricts its denotation, one of four virutta-ēdu-p-pōli.

**தன்யன்** *tanyan,* பெ.(n.) நல்வினையாளன், பேற்றாளன்; fortunate person.

**தன்யாசி** *tanyāśi,* பெ.(n.) **தன்னியாசி** பார்க்க; see *tanniyāśi.*

**தன்மாதிகாயம்** *tanmādikāyam,* பெ.(n.) ஆன்மாவானது நல்வினை தீவினைக்கு ஏற்றாற் போல் மரணத்திற்குப் பிறகு தானே மாற்றிக் கொண்ட உடம்பு; the body assumed by the soul of its own accord suitable to the past karma the death of its previous body. (சா.அக.)

**தன்யம்** *tanyam,* பெ.(n.) பெண் முலை; female breast. (சா.அக.)

**தன்வந்தரி** *tanvandari,* பெ.(n.) தேவ மருத்துவன்; the physician of the gods. "தன்வந்தரி பகவான் உருவமாகி நல் லமுதுறை கடத்தொடு முதித்தான்" (பாகவத.மாயவ.30).

**தன்வந்தரிமால்** *tanvandari-māl,* பெ.(n.) மருத்துவமனை; hospital. "அரமனைத் தன்வந்தரிமால் வைத்தியருள்" (தஞ்.சர.iii.88).

**தன்னியாசி** *tanniyāśi,* பெ.(n.) ஒரு வகை அராகம் (பரத.இராக.56); a specific melody type.

*[Skt. dhanāsrī > த. தன்னியாசி]*

**தனசுதானம்** *tana-śudānam,* பெ.(n.) பிறப்பியத்தின்படி பிறப்பு ஓரையிலிருந்து இரண்டாம் இடமாகிய செல்வத்தைக் குறிக்குமிடம்; second house from the ascendant, as indicating wealth (Astrol.)

*[Skt. dhana+sthāna > த. தனசுதானம்.]*

**தனதன்** *tanadan,* பெ. (n.) 1. குபேரன் (செல்வந்தன்); kubera (திவா.). 2. ஈகையாளன்; liberal person (w.).

*[Skt. dhana-da > த. தனதன்.]*

**தனநிசேபம்** *tana-niśēbam,* பெ.(n.) ஏழு செல்வங்களுள் ஒன்றை மண்ணுக்கடியில் புதைத்து வைத்தல்; storing treasure under earth, one of *capta-cantānam* (q.v.).

*[Skt. dhana-ni-kṣēpa > த. தனநிசேபம்.]*

**தனபாரம்** *tanabāram,* பெ.(n.) கொங்கைச் சுமை; breast-weight, well-developed breast. *"அதிபார தனபார வதிரூப மலர்மானை யனையாய்" (அரிச்.பு. விவாக. 218).*

*[Skt. stana+bhāra > த. தனபாரம்.]*

**தனம்¹** *tanam,* பெ.(n.) 1. செல்வம் (வின்.); wealth, property, substance. 2. பொன் (பிங்.); gold. 3. முத்திரை; seal. 4. உத்திரம்; beam across roofing. 5. கூட்டற்கணக்கு; addition.

*[Skt. stana > த. தனம்.]*

**தனம்²** *tanam,* பெ.(n.) முலை; woman's breast. "அரும்பெருந் தனத்தை வேட்டாண் டின வளை "விற்பான் வந்தோன்" (திருவாலவா.23,15).

*[Skt. stana > த. தனம்.]*

**தனரோகம்** *taṉa-rōgam,* பெ.(n.) பால் வழியும் துளைகள் அடைப்பட்டு அதனால் ஏற்படும் நோய்; a disease in which the milk carrying ducts remain closed in the breast of a multipara, a disease of the mammary gland (சா.அக.).

*[Skt. stana+rōga > த. தனரோகம்.]*

**தனலட்சுமி** *taṉa-lāṭcumi,* பெ.(n.) செல்வமாகிய திரு; goddess of wealth.

*[Skt. dhana+laksmi > த. தனலட்சுமி.]*

**தனவான்** *taṉavāṉ,* பெ.(n.) செல்வன்; wealthy man. "நெடிய தனவானாத லரிது (அறப்சத.)

*[Skt. dhana-vān > த. தனவான்.]*

**தனவிபாகம்** *taṉavibāgam,* பெ.(n.) கீழ்வாய் இலக்கக் கூறுபாடு; metric analysis (சா.அக.).

**தனாதிபதி** *taṉādipadi,* பெ.(n.) **தனவான்** (வின்.) பார்க்க; see *taṉavāṉ.*

*[Skt. dhana+adhi+pati> த. தனாதிபதி.]*

**தனாபியம்** *taṉābiyam,* பெ. (n.) பெருமுன்னை; broad leaved premna-premna latifolia (சா.அக.).

**தனிகம்** *taṉigam,* பெ.(n.) **தனிகா** (மலை.) பார்க்க; see *taṉigā.*

*[Skt. dhanikā > த. தனிகம்.]*

**தனிகன்** *taṉikaṉ,* பெ.(n.) செல்வன் (இ.வ.); rich man (colloq.).

*[Skt. dhanika > த. தனிகன்.]*

**தனிகா** *taṉikā,* பெ.(n.) **கொத்தமல்லி**

*[Skt. dhanikā > த. தனிகா.]*

**தனிட்டாபஞ்சமி** *taṉiṭṭā-pañjami,* பெ.(n.) தாம் நிலவொடு கூடியிருக்குங்கால் ஒரு வீட்டில் மரணம் நேர்ந்தால் பின்னர் அங்கு வாழ்வார்க்குத் தீங்கு விளைப்பனவாகக் கருதப்படும் அவிட்டம் முதலிய ஐந்து நாண்மீன்கள்; five stars commencing from aviṭṭam, believed to portend further evil to the occupants of a house, if death occurs when the moon is in conjunction with any one of them.

*[Skt. dhaniṣṭhā+pancami >த.தனிட்டா பஞ்சமி]*

**தனுசநாசினி** *taṉuša-nāšiṉi,* பெ.(n.) நஞ்சுக் கடியைக் குணப்படுத்தல்; curing poisonous bite or sting. 2. ஒரு பூச்சி; a kind of insect (சா.அக.).

**தனுசம்** *taṉušam,* பெ.(n.) 1. பாம்புக் கடிவாய்; the spot bitten by a snake. 2. கொட்டும் பூச்சி; stinging insect. 3. ஆடுமாடுகளைக் கடிக்கும் ஈ; gad fly. 4. உடம்பு மூட்டு; joint of the body (சா.அக.).

**தனுசமூலம்** *taṉuša-mūlam,* பெ.(n.) 1. காரவேர்; pungent root. 2. முருங்கை மரம்; drum stick tree (சா.அக.).

**தனுசன்**[1] *taṉušaṉ,* பெ.(n.) மகன்; son (வின்.).

*[Skt. tanu-ja > த. தனுசன்.]*

**தனுசன்**[2] *taṉusaṉ,* பெ.(n.) அசுரன் (தனுவினிடம் தோன்றியவன்); *Asura*, as descended from *Danu*. *"சம்புவன் சம்பு மாலியெனும் பெயர்த்தனுசர் தம்மை" (பாரத.நிவாத.27).*

*[Skt. dhanu-ja > த. தனுசன்.]*

**தனுசு** *taṉušu,* பெ.(n.) **தனு**[3] பார்க்க; see *taṉu.*

*[Skt. dhanus > த. தனுசு.]*

**தனுசுகோடி** *taṉušu-kōḍi,* பெ.(n.) இராமேசுவரத்திற்குத் தென்கிழக்காக நீண்ட தரைமுனையிலுள்ள புகழ்பெற்ற தூயநீராடும் துறைகள்; the promontory in the south-east of and the bay enclosed thereby, being one of the most sacred places in India.

**த.வ. கோடிக்கரை**

*[Skt. dhanus > த. தனுசு+கோடி.]*

**தனுசோணிதம்** *tanu-šōṇidam,* பெ.(n.) மருளூமத்தை; burrweed xanthium orientale (சா.அக.).

**தனுட்டிரதந்தம்** *tanuṭṭira-tantam,* பெ.(n.) பன்றிக்கொம்பு; hog's horn (சா.அக.).

**தனுட்டிரம்** *tanuṭṭiram,* பெ.(n.) பெரிய பல்; large tooth (சா.அக.).

**தனுட்டிரவிடம்** *tanuṭṭira-viḍam,* பெ.(n.) பல்லின் நஞ்சு; venom in the teeth of a lizard (சா.அக.).

**தனுத்தம்பவாதம்** *tanuttambavādam,* பெ. (n.) உடம்பை வில்லைப் போல் வளைக்கும் ஓர் வகை ஊதை வலிப்பு, இது வளியினால் உடம்பை உள்ளாகவும் வெளிப்புறமாகவும் வளைக்கும், ஆகவே, இது பின்னிசிவு, முன்னிசிவு என இரு வகைப்படும்; a form of tetanic spasm or spasmatic contraction in which the enraged vayu bends the body like a bow, it consists of two different types according to the bending of the body of the patient internally (forwards) or externally (backwards). If internally it is known as empros-thotomus and if externally opisthotomus (சா.அக.).

**தனுப்பாடாணம்** *tanu-p-pāḍāṇam,* பெ.(n.) வைப்பு நஞ்சு; a mineral poison.

*[Skt. dhanus+pāsāṇam>த. தனுப்பாடாணம்]*

**தனுப்பீசம்** *tanu-p-pīsam,* பெ.(n.) தம்பலப்பூச்சி (யாழ்.அக.); cochoneal insect coccus cacti scarlet moth.

*[Skt. dhanus+bīja > த. தனுப்பீசம்.]*

**தனுமத்தியம்** *tanumattiyam,* பெ.(n.) இடுப்பு; (body middle) waist (சா.அக.).

**தனுமானசி** *tanumāṉasi,* பெ.(n.) இவ்வுலகப்பற்றுகளிலிருந்து அறுபட்டிருக்கும் மனநிலை (வேதா.சூ.147); the state of non-attachment of the mind towards worldly pleasures.

*[Skt. tanu-mānasa > த. தனுமானசி.]*

**தனுர்மாசம்** *tanur-mācam,* பெ.(n.) சிலை (மார்கழி) மாதம்; month of *Mārkaḻi* (December-January).

*[Skt. dhanus+māša > த. தனுர்மாசம்.]*

**தனுவெலும்பு** *tanu-v-elumbu,* பெ.(n.) நாவைத் தாங்கி, குரல் வளைக்கு மேலே முன் கழுத்தில் புடைப்பாகவும், வளைந்தும் ஒடுங்கிய சிறுவெலும்பு; the protuberance just above the larnyx and the root of the tongue on the fore-part of the throat - *Adamisapple* (சா.அக.).

**தாக்கல்** *tākkal,* பெ.(n.) 1. கணக்கிற் பதிவு; entry in an account. 2. தரவு; giving of a notice, reference. 3. தன்வயப்படுத்துகை; taking possession, occupancy.

*[U. dākhila > த. தாக்கல்]*

**தாக்கீது**[1] *tākkīdu,* பெ.(n.) (ஒரு செயல் பற்றி முறைமன்றத்தின் அல்லது அரசின்) எழுத்து மூலமான ஆணை; summons; order. *"நீதிமன்றத்தால் அனுப்பப்பட்ட தாக்கீதைப் பெற மறுப்பது குற்றமாகும். ஒப்பந்தப் புள்ளிகள் மூலம்தான் பாடப் புத்தகங்கள் அச்சடிக்க வேண்டுமென்று அரசு தாக்கீது பிறப்பித்துள்ளது" (இ.வ.).*

**தாக்கீது**[2] *tākkīdu,* பெ.(n.) உத்தரவு; injunction, command, order (W.G.).

*[U. tākīd > த. தாக்கீது.]*

**தாகத்து** *tākattu,* பெ.(n.) ஆற்றல் (P.T.L.); power, ability.

*[Ar. tāqat > த. தாகத்து.]*

**தாகீது** *tākītu,* பெ.(n.) **தாக்கீது** பார்க்க; see *tākkīdu.*

*[U. tākīd > த. தாகீது.]*

**தாசநம்பி** *tāśa-nambi,* பெ.(n.) இறைவனுக் கருகில் நின்று தீவட்டிப்பந்தம் பிடிப்பவன்; (Vaiṣn); torch-bearer near the deity in procession.

*[Skt. dāsa > த. தாச+நம்பி.]*

**தாசபாலனம்** *tāsa-pālaṉam,* பெ.(n.) பதினான்கு அருள்புரியும் செயல்களுள் ஒன்றான அடிமைகளைக் காத்தல் (வின்.); protection of slaves and dependents; one of 14 *tayā-virutti.*

*[Skt. dāsa+ த. தாச+பாலனம்.]*

**தாசமார்க்கம்** *tāśmārkkam,* பெ.(n.) ஒழுக்கம்; conduct, good behaviour.

**தாசன்**[3] *tāśaṉ,* பெ.(n.) 1. (சில தொடர்களில்) ஒரு கடவுளைத் தீவிரமாக வழிபடுபவன்; fervent devotee (of a deity). *காளிதாசன், சக்திதாசன், கண்ணதாசன்.* 2. (வாழ்வியல் வழிகாட்டியாக கருதப்படும் ஒருவரின்) வழிநடப்பவர்; ardent follower or admirer. *நான் பாரதியின் தாசன்* (க்ரியா.).

**தாசா** *tāśā,* பெ.(n.) 1. புதியது; that which is new or fresh. 2. புத்துணர்ச்சி; enthusiasm, vivacity. 3. ஆற்றுகை; comfort. 4. பயிற்சி; training.

*[U. tāzā > த. தாசா.]*

**தாசாகலம்** *tāśā-kalam,* பெ.(n.) மடல் முதலியவற்றில் கையெழுத்திட்டபின் சேர்க்கும் குறிப்பு (C.G.); postscript.

*[Skt. taja > த. தாசா+கலம்.]*

**தாசாபண்ணு-தல்** *tāśā-paṇṇu-,* செ.கு.வி. (v.i.) 1. பிறன் துன்பப்படுங் காலத்து ஆற்றுதல்; to refresh; to comfort one in sorrow. 2. பயிற்சி செய்வித்தல்; to train. 3. இன்சொற்களால் வயப்படுத்துதல் (கொ.வ.); to coax, flatter; to appease, conciliate by kind words or deeds.

*[Skt. taja > த. தாசா+பண்ணு-.]*

**தாசாபிரதி** *tāsā-piradi,* பெ.(n.) தெளிவானபடி (C.G.); faircopy.

*[Skt. taja+prati > த. தாசாபிரதி.]*

**தாசாமசாலா** *tāśā-maśālā,* பெ.(n.) ஊக்கமடையும் பொருட்டுக் குதிரைக்குக் கொடுக்கும் மருந்து வகை (அசுவசா.136); a medicinal preparation to instil spirit in horses.

*[U. tāzā+masāla > த. தாசாமசாலா.]*

**தாசியநாமம்** *tāśiya-nāmam,* பெ.(n.) தூய்மைப்படுத்தும் சமயவைப்பின் (சடங்கு) போது சமய ஆசிரியர் தரும் பெயர்; *(vaisn);* name given to a devotee at the time of his religious initiation by his guru.

*[Skt. dāsya+namam > த. தாசியநாமம்.]*

**தாசியம்** *tāsiyam,* பெ.(n.) **தாசத்துவம்** பார்க்க; see *tāśattuvam.*

*[Skt. dasya > த. தாசியம்.]*

**தாசில்தார்** *tāsildār,* பெ.(n.) மாவட்ட ஆட்சியரின் கீழுள்ள வட்ட அரசிறை வருவாய்த்துறை அதிகாரி; a revenue officer incharge of a taluk under the district collector.

*[U. tāhsīldār > த. தாசில்தார்.]*

**தாசீல்** *tāśīl,* பெ.(n.) **தாசில்** பார்க்க; see *tāsil.*

*[U. tahsīl > த. தாசீல்.]*

**தாசுயநாமம்** *tāśuya-nāmam,* பெ.(n.) குருவினால் சீடனுக்கு இடப்பட்ட அடிமைப் பெயர்; *vaiṣn.* a name given to a disciple by his guru.

*[Skt. dāsya-nāmā > த. தாசுயநாமம்.]*

**தாட்சண்யம்** *tāṭśaṇyam,* பெ.(n.) உயிர்களுக்காகக் கொள்ளும் இரக்கம்; பரிவு; consideration (for s.o. or sth.). முதியவர் என்பதற்காகக் கொஞ்சம் தாட்சண்யம் காட்டக் கூடாதா? (இ.வ.).

**தாட்சணைச்சீட்டு** *tāṭcaṇai-c-cīṭṭu,* பெ.(n.) தன்மேற் கடன் பொறுத்தற்கு ஏற்கும் குறிப்புச் சீட்டு (Pond.); accommodation bill.

*[Skt. dāṭsaṇa > த. தாட்சணைச்சீட்டு.]*

**தாட்சாயணி** *tāṭcāyaṇi,* பெ.(n.) மலைமகள்; *Pārvadi,* as daughter of Daksa. *"தக்கன்றன் குமாரி தாட்சாயணி" (மச்சபு.கவுரிநாம.11).*

*[Skt. dākṣāyaṇī > த. தாட்சாயணி.]*

**தாட்சிணியம்** *tāṭciṇiyam,* பெ.(n.) 1. கண்ணோட்டம்; kindness, benignity, kind feelings. 2. இரக்கம்; mercifulness, compassion. 3. ஒருதலை பக்கம்; partiality. 4. மதிப்புரவு; courtesy, politeness.

*[Skt. dākṣiṇya > த. தாட்சிணியம்.]*

**தாட்டிகம்** *tāṭṭigam,* பெ.(n.) 1. மும்முரமாய்; vehemence, insolvence, pride. 2. ஆற்றல்; strength, power, authority.

*[Skt. dhārsṭya > த. தாட்டிகம்.]*

**தாட்டிகன்** *tāṭṭigaṉ,* பெ.(n.) 1. கொடுமைக் காரன்; proud autocrat. *"தந்தியெல்லா முண்டாக்குந் தாஷ்டிகா" (பணவிடு.278).* செல்வாக்குள்ளவன் (வின்.); powerful, influential person.

*[Skt. dhārsṭika > த. தாட்டிகன்.]*

**தாட்டியம்** *tāṭṭiyam,* பெ.(n.) காரெள்; black gingelly seed (சா.அக.).

**தாடிமபட்சணம்** *tāṭima-paṭcaṇam,* பெ.(n.) கிளி (யாழ்.அக.); parrot, as fond of pomegranates. *(மாதுளைப் பழம் தின்பது).*

*[Skt. dādima-thaksana >த. தாடிமபட்சணம்.]*

**தாத்திரியாதிகசாயம்** *tāttiriyāti-kasāyam,* பெ.(n.) நெல்லி வற்றலோடு மற்ற கடைச் சரக்குகளையும் சேர்த்து இறக்கும் வடிநீர்; decoction extracted from a mixture of dried indian gooseberry, with a few other bazaar drugs (சா.அக.).

த.வ. நெல்லிக்கருக்கு

**தாத்திரியாதிசூரணம்** *tāttiriyāti-šūraṇam,* பெ.(n.) பித்தச் சூலைக்குக் கொடுக்கும். வாழ்நாள் மறைமருந்து. நெல்லி வற்றல் சூரணத்துடன் தேன் கலந்து அல்லது கடுக்காய் தோல் சூரணத்தில் வெல்லம் நெய் கலந்து சாப்பிடுவது; an ayurvedic medicine containing either gooseberry or gallnut powder. The former is given with honey late with jaggery and ghee for rheumatic pain caused by heat (சா.அக.).

த.வ. நெல்லித்தூளம்

**தாத்திரேயகி** *tāttirēyagi,* பெ.(n.) பால் கொடுக்கும் பெண், முலைத்தாய்; a nurse engaged to suckle an infant-wet nurse (சா.அக.).

**தாத்து** *tāttu,* பெ.(n.) 1. நியாயம்; justice. 2. முறையீடு; complaint, representation.

*[U. dād > த. தாத்து.]*

**தாத்பரியம்** *tātpariyam,* பெ.(n.) (ஒன்றினுடைய) நோக்கம் அல்லது பொருள்; purpose, meaning. *"திருமணச் சடங்கின் தாத்பரியத்தைப் புரிந்துகொள்ளவில்லை" (இ.வ.).*

**தாதச்சி** *tātacci,* பெ.(n.) துறவிப்பெண் (யாழ்.அக.); a female ascetic.

*[Skt. dāsa >த. தாதச்சி.]*

**தாதமார்க்கம்** *tāda-mārkkam,* பெ.(n.) 1. ஒழுக்கம்; conduct, good behaviour. 2. சிவனை உருவவடிவமாகக் கோயிலில் வைத்து வழிபடுகை (சி.போ.பா.8, 1, பக்.359); (Saiva.) first of the four-fold means of attaining salvation, which consists in worshipping God in form in a temple. 3. பிச்சை (பிங்.); alms.

*[Skt. dāsa+mārga > த. தாதமார்க்கம்.]*

**தாதர்த்தியேசதுர்த்தி** *tādartidyē-saturtti,* பெ.(n.) பொருட்டுப் பொருளில் வரும் நான்காம் வேற்றுமை (பி.வி.16, உரை); (Gram.) fourth case denoting purpose.

*[Skt. tādarthyē-caturthī > த.தாதர்த்தியே சதுர்த்தி]*

**தாதான்மியசக்தி** *tādāṉmiya-sakti,* பெ.(n.) சிவபெருமானை ஒருபோதும் விட்டு நீங்காத படைப்பாற்றல்; Inseparable *kriyā šakti* of *šiva.*

*[Skt. tādānmnya+sakti> த.தாதான்மாய சக்தி]*

**தாதான்மியம்** *tādāṉmiyam,* பெ. (n.) ஒன்றுபட்டிருக்கை; identity, unity, sameness. *"தாதான்மிய மொன்றுறும் பரிசு" (பிரபுலிங்வி மலை47).*

த.வ. ஒன்றிப்பு

*[Skt. tādānmy > த. தாதான்மியம்.]*

**தாதானம்** *tādāṉam,* பெ.(n.) கரிக்குருவி; kin crow (சங்.அக.).

த.வ. காரி

*[Skt. tātana > த. தாதானம்.]*

**தாதிராசகம்** *tādi-rāšagam,* பெ.(n.) ஒளிநீர் (தாது); semen (சா.அக.).

**தாதுகல்பம்** *tādu-kalpam,* பெ.(n.) மாழை அல்லாதது; any of the elements which are non metalic in the chemical sense (சா.அக.).

**தாபரம்** *tābaram,* பெ.(n.) 1. மரப்பொது (சூடா.); vegetable kingdom. 2. அசையாப்பொருள்; category of the immovables. *"சங்கமந்தாபரங்க டத்தங்கன் மத்துக்கீடா" (சி.சி.2, 41).* 3. இடம் (பிங்.); place, location, habitation. 4. நிலம் (அக.நி.); Earth. 5. மலை (அக.நி.); mountain. 6. உடல் (சூடா.); body.7. கோயில் (அக.நி.); temple. 8. இலிங்கம் (Saiva.); *linga,* as fixed and immovable. (நிலையாகப் பிரதிட்டிக்கப்படுவது) *"தாபர மணலாற் கூப்பி" (தேவா.192, 3).* 9. உறுதி (சூடா.); stability, steadiness. 10. பற்றுக் கோடு; shelter, support, prop. *"மருதூர ளென்றாம் பரமே" (மருதூரந்.60).* 11. ஆதாரம்; basis, foundation (யாழ்.அக.).

*[Skt. sthāvara > த. தாபரம்.]*

**தாபிதா** *tābitā,* பெ.(n.) பட்டாடை (C.G.); silk cloth.

*[U. tāfiā > த. தாபிதா.]*

**தாபே** *tābē,* பெ.(n.) 1. சார்ந்தவன்; dependant, follower. 2. வசம்; charge, custody.

*[U. tābē > த. தாபே.]*

**தாபேதார்** *tābēdār,* பெ.(n.) சார்ந்தவன் (C.G.); department, follower, subordinate.

*[U. tābē-dār > த. தாபேதார்.]*

**தாம்** *tām,* பெ.(n.) விலை (C.G.); price.

*[U. dām > த. தாம்.]*

**தாமசபதார்த்தம்** *tāmaša-padārttam,* பெ.(n.) செரியாமையை மிகுதிப்படுத்தும் உணவு பொருள்; stupefying food (சா.அக.).

த.வ. செரியா உண்டி

**தாமசம்** *tāmašam,* பெ.(n.) 1. சோம்பல் பண்பு; quality of being dull. 2. மனிதப் பண்புகள் மூன்றனுளொன்று; one of the three inherent qualities of man- Tamasic. 3. மடமை; want of knowledge - *Nescience.* 4. இருள் மயக்கம், இது தூக்கத்தை மூட்டும்; principle of illusion sleeps sets in (சா.அக.).

**தாமாசா[1]** *tāmāšā,* பெ.(n.) சரிக்குச்சரி (வின்.); average.

*[U. dāmāsāh > த. தாமாசா.]*

**தாமாசா[2]** *tāmāšā,* பெ.(n.) 1. களிப்பு; show, pomp. 2. காட்சி; spectable, sight. 3. வேடிக்கை; sport, fun.

*[U. dāmāsāh > த. தாமாசா.]*

**தாமாசு** *tāmāšu,* பெ.(n.) சரியாகப் பகிர்ந்து கொடுக்கை (W.G.); fair and equitable distribution (R.F.).

*[U. dāmāsāhi > த. தாமாசு.]*

**தாமான்** *tāmāṉ,* பெ.(n.) கப்பற் பின் பக்கத்துக் கயிறு; (Naut.) lower back rope of a dhoney sail, back clew line.

**தாயித்து** *tāyittu,* பெ.(n.) 1. மந்திரத்தகடு அடங்கிய அணி; small gold or silver case worn on the person as amulet; cylindrical talisman. 2. அணி வகை (இ.வ.); an ornament.

*[U. tāit > த. தாயித்து.]*

**தார்சா** *tārcā,* பெ.(n.) மொட்டைமாடி; terraced roof.

*[E. terrace > த. தார்சா.]*

**தார்சு** *tārcu,* பெ.(n.) **தார்சா** பார்க்க; see *tārcā.*

**தார்சுக்கட்டிடம்** *tārcu-k-kaṭṭiḍam,* பெ.(n.) மெத்தை வீடு (Tj.); storied house.

*[E. tārcu + த. கட்டிடம்.]*

**தார்ட்டாந்திகம்** *tārṭṭāndigam,* பெ.(n.) 1. தாட்டாந்திகம் பார்க்க; see *tāṭṭāndigam.* 2. உபமேயம்; that which is illustrated by an example or simile. *"தரு திருட்டாந்த முந்தாட்டாந்திகமும்" (சங்கற்ப.11, அடி.35).*

*[Skt. dārsṭāntika > த. தாட்டாந்திகம்.]*

**தார்த்தராட்டிரர்** *tārttarāṭṭirar,* பெ.(n.) திருதராட்டிரன் மகன்களாகிய துரியோதனாதியர்; kaurava princes, the sons of *Dhṛtarāṣṭra.* *"வெம்பரித்தேர்த்தார்த்தராட்டிரர்" (பாரததிரௌ.98).*

*[Skt. Dhārtarāṣṭra > த. தார்த்தராட்டிரர்.]*

**தார்மரம்** *tārmaram,* பெ.(n.) மரவகை (M.M.294); scotch pine, l.tr., pinus sylvestris.

*[E. tar> த. தார்+மரம்.]*

**தார்மிகன்** *tārmigaṉ,* பெ.(n.) அறச் சிந்தனை உள்ளவன்; charitable person, generous man. *"சில தார்மிகர் அவ்வளவிலேயே செல்லுகிறார்கள்" (திவ். திருப்பா.அவ.பக்.16).*

த.வ. அறவோன்

*[Skt. dhārmika > த. தார்மிகன்.]*

**தாரணயோகம்** *tāraṇa-yōgam,* பெ.(n.) ஆழ்ந்த உள்ளொடுக்கம் (தியானம்); deep devotion (சா.அக.).

**தாரணா** *tāraṇā,* பெ.(n.) மூச்சடக்கி மனத்தை ஒரு வழிப்படுத்தல்; concentration of mind joined with the retention or breath (சா.அக.).

**தாரணாசத்தி** *tāraṇā-šatti,* பெ.(n.) 1. குலிச சத்தி; power of amulet. 2. தியானசத்தி; power of concentration

**தாரப்பிரம்** *tārappiram,* பெ.(n.) கற்பூரம்; camphor (சா.அக.).

**தாரா[1]** *tārā,* பெ.(n.) (விண்மீன்); star.

**தாரா[2]** *tārā,* பெ.(n.) ஒரு சமணப் பெண் தெய்வம் (நீலகேசி.236, உரை); a jaina Goddess.

*[Skt. tārā > த. தாரா.]*

**தாராப்பூடு** *tārā-p-pūḍu,* பெ.(n.) நாரத்தை; bitter orange-citrus auvantium (சா.அக.).

**தாரிசம்** *tārisam,* பெ.(n.) 1. ஒப்பந்தம்; agreement, consent, union. *"தாரிசம் பண்ணினான்".* 2. செப்பமானது; reasonableness, as of price. *"தாரிசமாய் விற்கிறான்".*

**தாரித்திரம்** *tārittiram,* பெ.(n.) வறுமை (பிங்.); poverty, want, destitution.

*[Skt. daridra > த. தாரித்திரம்.]*

**தாரித்திரியம்** *tārittiriyam,* பெ.(n.) **தரித்திரம்** பார்க்க; see *tarittiram.* *"நோயுற்ற தாரித்திய நன்றுகாண்" (குமரேச.சத.52).*

**தாரிப்பு** *tārippu,* பெ.(n.) 1. மதிப்பு (வின்.); estimation, guess. 2. தாங்கிப் பேசுகை; recommendation, commendation. 3. மேம்படச் செய்கை; causing to excel; encouraging, as a pupil. *"அவனைத் தாரிப்புப் பண்ணினான்" (வின்.).*

**தாரிவியாதிகியாழம்** *tāriviyādi-kiyāḻam,* பெ.(n.) மரமஞ்சள், சீந்தில் கொடி, கடுகுரோகினி, வசம்பு, மஞ்சிட்டி, வேப்பீர்க்கு, திரிபலை சம எடை கொண்டு கசாயம் வைத்து சகல குட்டத்திற்கும் குடிக்க கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து; an ayurvedic decoction of tree turmeric moon creeper, black hellebore, sweet flag, Indian madder, mid rib or margosa leaf and the three myrobalams (சா.அக.).

**தாரெண்ணெய்** *tār-eṉṉey,* பெ.(n.) கெட்டியான நீர்வடிவ கரிநெய் (தார்) (உ.வ.); liquid tar.

**த.வ. கருங்கசடு**

*[E. tar > த. தார்+எண்ணெய்.]*

**தாரோகா** *tārōgā,* பெ.(n.) காவற்காரர் தலைவன் (வின்.); superintendent of peons.

*[U. dārōgha > த. தாரோகா.]*

**தாலகேதனன்** *tāla-kēdaṉaṉ,* பெ.(n.) 1. பலராமன்; *Balarāma.* 2. வீடுமன் (பீசுமர்); Bhisma (பனையின் உருவம் எழுதிய கொடியையுடையோன்); Lit. he who has palmyra-banner.

*[Skt. tāla+ketaṉa> த. காலகேதனன்.]*

**தாலகேது** *tāla-kētu,* பெ.(n.) **தாலகேதனன்** பார்க்க; see *tāla-kēdaṉaṉ.* *"தாள கேதுவையுஞ் சேர... கொண்டு நீ செல்க" (பாரத.வாசு.17).*

*[Skt. tāla+kēdu > த. தாலகேது.]*

**தாலபீசநியாயம்** *tāla-pīsa-niyāyam,* பெ.(n.) விதையும் முளையும் போல எது முந்தியது என்று கூற முடியாத நிலை; the *nyāya of* reasoning in a circle, as wheather seed comes from the plant or plant from the seed.

*[Skt. tāla + த. பீசநியாயம்.]*

**தாலம்** *tālam,* பெ.(n.) மூன்று பிடிகொண்ட நீட்டலளவு (சுக்கிரநீதி.197); a lineal measure of three hands.

*[Skt. tāla > த. தாலம்.]*

**தாலிம்கானா** *tālim-kāṉā,* பெ.(n.) சிலம்பம் பயிலும் இடம் (தட்சிண.சிந்.சரித்திரம், பக்.224); fencing ground.

*[Skt. tālīm+kāṉā > த. தாலிம்கானா.]*

**தாலீபாகம்** *tālībāgam,* பெ.(n.) இந்து சமயச் சட்டங்களைக் கூறும் பழைய வடமொழி நூலாகிய சுமிருதியில் விதிக்கப்பட்டதும் இல்வாழ்வோர் காருவா முழுநிலா நடப்பு செய்யப்படுவதுமான (சடங்கு) வகை; new and full moon ceremonies enjoined by smrti to be performed by a house holder. *"தாலீபாகம் பண்ணவும்" (சி.சி.8, 3, மறை.).*

*[Skt. sthālīpāka > த. தாலீபாகம்.]*

**தாலீபுலாகநியாயம்** *tālī-pulāka-niyāyam,* பெ.(n.) ஒரு பானைச் சோற்றிற்கு ஓர் அவிழைப் பதம் பார்ப்பது போல ஒன்றன் ஒரு புடைத்தன்மையிலிருந்து அதன் முழு நிலையையும் அறியும் நெறி (சிவசம.24); the

*nyāya* of boiled rice in a cooking vessel, illustrating the principle that the condition of the whole may be inferred from that of a part.

த.வ. பானைச் சோற்று நெறி

*[Skt. sthālī+pulāka+nyāya>த.தாலீ புலாக நியாயம்.]*

**தாலுக்கா** *tālukkā,* பெ.(n.) **தாலுகா**[1] பார்க்க; see *tālukā* (C.G.).

**தாலுகா** *tālukā,* பெ.(n.) 1. உரிமை (C.G.); connection dependence, possession, property. 2. தீர்வை தண்டும் பொருட்டுப் பிரிக்கப்படும் சிறிய வட்டம்; dependency, revenue subdivision, convenient division of a district for purposes of revenue administration. 3. முறைமன்றம் (யாழ்.அக.); court of justice.

*[U. ta-allu-ka > த. தாலுகா.]*

**தாவரஉண்ணி** *tāvara-unni,* பெ.(n.) நிலத்திணைகளை உணவாக உண்ணும் உயிரினம்; herbivore .

**தாவரஎண்ணெய்** *tāvara-enney,* பெ.(n.) தேங்காய், கடலை, எள் முதலியவற்றில் இருந்து எடுக்கப்படும் நெய்மம்; oil extracted from coconut, groundnut, etc. vegetable oil.

**தாவரசங்கமம்** *tāvara-šaṅgamam,* பெ. (n.) 1. இயங்குதிணை நிலைத்திணை வகை; the category of the movable and the immovable. *"தாவர சங்கம மென்னுந் தன்மைய" (கம்பரா.குக.1).* 2. வீட்டுப் பண்டங்களான அசையும் பொருளும் நிலம் வீடு முதலிய அசையாப் பொருள்களும்; (Legal) movable and immovable property.3. சிவபிரானது திருமேனிகளாகக் கருதப்படும் இலிங்கமும் அடியார்களும் (வின்.); lingam and devotees of *Šiva,* as the fixed and movable forms sof *Šiva.*

த.வ. இயங்கு

*[Skt. sthāvara+jaṅgama>த.தாவரசங்கமம்.]*

**தாவரசங்கமவிடம்** *tāvara-šaṅgama-viḍam,* பெ.(n.) 1. செடிமரங்கள், விலங்குகளின் நஞ்சு, இது ஊமத்தை வித்தினால் குணப்படும்; vegetable and animal poison as opposed to mineral poison. 2. தாது நஞ்சு இது ஊமத்தை வித்தினால் குணப்படும்; dhatura seed cures those poisons (சா.அக.).

**தாவரசாத்திரம்** *tāvara-šāttiram,* பெ.(n.) பூண்டுகளைப் பற்றிய நூல்; science of plants botany - *Phytology* (சா.அக.).

**தாவரசாத்திரி** *tāvara-šāttiri,* பெ.(n.) 1. மரம், செடி, கொடி பற்றிய புலமை பெற்றவன்; one skilled in botany-botanist. 2. மூலிகை அறிஞன்; an early botanist who used to collect, sell or administer plants of herbs - *Herbalist* (சா.அக.).

**தாவரசாம்பல்** *tāvara-šāmbal,* பெ.(n.) 1. பூண்டுகளை எரிப்பதனால் கிடைக்கும் சாம்பல்; ash obtained by burning plants. 2. காரச்சாம்பல்; ash containing potash or soda or both (சா.அக.).

**தாவரசாலம்** *tāvara-šālam,* பெ.(n.) பூஞ்செடி முதலிய பிரிவுகளைப் பற்றிய நூல்; a work containing a descriptive enueration of plants or vegetable species of a particular place-Flora (சா.அக.).

**தாவரசாரம்** *tāvara-šāram,* பெ.(n.) பூண்டுகளை எரித்தெடுத்த ஓர்வகைச் சாரம்; vegetable alkali, obtained by burning plants (சா.அக.).

**தாவரத்தியலி** *tāvara-t-tiyali,* பெ.(n.) பேராமுட்டி; fragrant pavonia-*Pavonia odorata* (சா.அக.).

**தாவரதத்துவநூல்** *tāvaratattuva-nūl,* பெ.(n.) பூண்டுகளின் தன்மை அமைப்பு, விளையு முறை, தொழில், வகுப்பு முதலியவைகளைப் பற்றிக் கூறும் நூல்; the science which treats of the form, structure and tissues of plants, the laws which regulate their growth, functions and their classification etc. - botany (சா.அக.).

**தாவரதாதுவிடம்** *tāvaratādu-viḍam,* பெ. (n.) மாழைகளிலும், பயிர் வகைகளிலும் உள்ள நஞ்சுகள்; mineral and vegetable poisons (சா.அக.).

**தாவரநூல்** *tāvara-nūl,* பெ. (n.) நிலைத்திணைப் பற்றிப் பொதுவாகக் கூறும் நூல்; the science of vegetable kingdom in general (சா.அக.).

*[Skt. sthāvara > த. தாவரம்+நூல்.]*

**தாவரம்** *tāvaram,* பெ. (n.) 1. நிலைத்திணை; category of immovables, opp. to *caṅgamam. "செல்லாஅநின்றவித் தாவர சங்கமத்துள்" (திருவாச.1, 30).* 2. வீடு போன்ற அசையாப் பொருள்; (Leg.) immovable property, as house. 3. மரப்பொது (சூடா.); the vegetable kingdom. 4. அடிப்படை; basis, foundation. 5. இடம் (சங்.அக.); place, habitation. 6. உடல் (சூடா.); body, as the abode of the soul. 7. இலிங்கம்; (Saiva.) lingam. *"சங்க மவடிவிற்குக் கூறிப்போந்த இயல்பில்லாத தாவரவடிவின்" (சி.போ.சிற்.12, 3, 2, உரை).* 8. உறுதி (வின்.); stability, steadiness.

*[Skt. sthāvara > த. தாவரம்.]*

**தாவரவியல்** *tāvaraviyal,* பெ.(n.) மரம், செடி, கொடிகளைப் பற்றி விவரிக்கும் அறிவியல் துறை; botany.

**த.வ. நிலைத்திணையியல்**

*[Skt. sthāvara > த. தாவரம் +இயல்]*

**தாவரவியல்பூங்கா** *tāvaraviyal-pūṅgā,* பெ.(n.) (அரிதாகக் காணப்படுபவை உட்பட) பல வகையான பயிரிகளைக் காட்சிக்காக வளர்க்கப்படும் தோட்டம்; botanical garden.

**தாவா** *tāvā,* பெ.(n.) 1. (பிராது) முறையீடு முதலியன; complaint, petition. 2. தடை; objection, obstruction.

*[U. dāvā > த. தாவா.]*

**தாவாதார்** *tāvādār,* பெ.(n.) முறையீட்டாளர் (வாதி); complaint, plaintiff (Loc.).

*[U. dāvā-dār > த. தாவாதார்.]*

**தாளா**[1] *tāḷā,* பெ.(n.) ஒப்பு (C.G.); comparison.

*[U. dāḷā > த. தாளா.]*

**தாற்காலிகம்** *tāṟkāligam,* பெ. (n.) குறுங்காலம்; that which is temporary, occassional.

*[Skt. tātkālika > த. தாற்காலிகம்.]*

**தாற்பரியம்பண்ணு-தல்** *tāṟpariyam-paṇṇu-,* செ. குன்றாவி.(v.t) 1. விளக்கிச் சொல்லுதல் (யாழ்.அக.); to explain, expound. 2. புகழ்ந்து பேசுதல் (வின்.); to applaud, as performances; to magnify, as one's talents.

*[Skt. tātparya > த.தாற்பரியம் +-,]*

**தாற்பரியமானவன்** *tāṟpariyamāṉavaṉ,* பெ. (n.) மதிப்புள்ளவன் (வின்.); person held in high esteem.

*[Skt. tātparya >த.தாற்பரிய+ஆனவன்.]*

**தாறு** *tāṟu,* பெ.(n.) கீலெண்ணெய் (பாண்டி.); tar.

*[E. tar > த. தாறு.]*

**தானக்கோல்** *tāṉa-k-kōl,* பெ.(n.) யாழ் நரம்புகளைத் தெறிக்க பயன்படுத்துங் கருவி; instrument used in playing *yāḻ.*

"நரம்பு ஏழும்...தானக் கோலின் அகப்பட்டு" (கலித்.8, உரை).

[Skt. sthāna > த. தானம்+கோல்.]

**தானசாசனம்** *tāṉa-sāsaṉam,* பெ.(n.) கொடை கொடுத்ததற்குரிய ஆவணம்; instrument of gift.

த.வ. கொடையாவணம்

[Skt. dāna+šāšana > த. தானசாசனம்.]

**தானசீலம்** *tāṉa-šīlam,* பெ.(n.) கொடைத் தன்மை (யாழ்.அக.); liberality.

[Skt. dāna+ šīla > த. தானசீலம்.]

**தானசீலன்** *tāṉa-šīlaṉ,* பெ.(n.) ஈகையாளன்; liberal, charitable man.

[Skt. dāna+šīla > த. தானசீலன்.]

**தானசுத்தி** *tāṉa-sutti,* பெ.(n.) ஐவகைத் தூய்மைப்படுத்தலில்பூசையிடத்தை மந்திரத்தால் தூய்மைப்படுத்தல் (சைவச.502, உரை); (*šaiva*) purification of the place of worship, one of *pañca-cutti.*

[Skt. sthāna + šuddhi > த. தானசுத்தி]

**தானசூரன்** *tāṉa-šūraṉ,* பெ.(n.) பெருங்கொடையாளன் (சிலப்.15, 181, உரை); one who is heroically charitable.

[Skt. dāna+šūra > த. தானசூரன்.]

**தானத்தார்** *tāṉattār,* பெ.(n.) கோவிலதிகாரிகள் (I.M.P.Cg.214); temple trustees.

[Skt. sthāna > த. தானத்தார்.]

**தானதருமம்** *tāṉa-tarumam,* பெ.(n.) ஈகை (வின்.); charity, charitableness.

[Skt. dāna+dharma > த. தானதருமம்.]

**தானதாய்** *tāṉa-tāy,* பெ.(n.) ஒலிக்கருவிகள்; (Mus.) leading instrument, as determining the pitch of other instruments.

த.வ. ஒலிகாணி

[Skt. tāna+sthāyin > த. தானதாய்.]

**தானப்பதி** *tāṉa-p-padi,* பெ.(n.) கோயில் முகவர் (இ.வ.); agent of a temple.

[Skt. sthāna > த. தானம் + பதி.]

**தானப்பரீட்சை** *tāṉa-p-parīṭcai,* பெ.(n.) மருத்துவர்கள் ஆராய்ச்சியினால் நோயாளிகளிடம் கவனிக்க வேண்டிய பல வகை குறிகள்; studying of various symptoms exhibited by patients - diagnosis (சா.அக.).

**தானப்பெருக்கம்** *tāṉa-p-perukkam,* பெ.(n.) 1. பத்து நூறு ஆயிரம் முதலிய எண்களாற் பெருக்குகை; multiplication of numbers by ten and its multiples, as dist. fr. *kuḻi-p-perukkam.* 2. மனக்கோட்டை கட்டுகை; idle imagining, building castles in the air. "என்ன, தானப் பெருக்கம் செய்கிறாய்?" (இ.வ.).

[Skt.sthana > த.தானம் + பெருக்கம்.]

**தானபத்திரம்** *tāṉa-pattiram,* பெ. (n.) கொடை கொடுத்தற்குரிய ஆவணம்; instrument of gift.

த.வ. கொடையாவணம்

[Skt. dāna+pattira > த. தானப்பத்திரம்.]

**தானபந்தி** *tāṉa-pandi,* பெ.(n.) விளைச்சல் மதிப்பீடு (சோதனை) (W.G.); estimated value of the standing crops in a field.

[Skt. sthāna > த. தானம்+பந்தி.]

**தானம்பாடு-தல்** *tāṉam-pāḍu-,* செ.கு.வி. (v.i.) ஒரு பண்ணை தாளத்திற்காகச் மிகுதியாக விரித்துப் பாடுதல்; to elaborate a tune rapidly to the accompaniment of *tāḷam.*

[Skt. tāna > த. தானம் + பாடு-தல்.]

**தானவண்ணம்** *tāṉa-vaṇṇam,* பெ.(n.) ஒருவகை இசைப்பாட்டு (வின்.); a kind of musical composition.

[Skt.tāna+ த. தானம் + வண்ணம்.]

**தானவிச்சை** *tāṉa-viccai,* பெ.(n.) அறிவுக் கூறு; the sources of knowledge. *"பதினெட்டாகிய தானவிச்சையும்" (பெருங்.வத்தவ.3, 64).*

**தானாதிகாரி** *tāṉādikāri,* பெ. (n.) அறக்கட்டளை அதிகாரி; superintendent of charities, as of a royal household.

*[Skt. dāna+adhikārin > த. தானாதிகாரி.]*

**தானாதிபதி** *tāṉādipadi,* பெ.(n.) 1. அமைச்சர்; minister. *"அதிபுத்தியுத்தி யுண்டாயினோன் றானாதிபதி யாகுவான்" (அறப்.சத.85).* 2. நடுநிலையானவன்; mediator (Loc.).

*[Skt. sthāna+adhipati > த. தானாபதி.]*

**தானாந்தராயம்** *tāṉāndarāyam,* பெ.(n.) (Jaina.) கொடையளித்தற்கு நேருந்தடை (சீவக.308, உரை); impediment or obstacle to the making of gifts.

*[Skt. dāna+antarāya > த. தானாந்தராயம்.]*

**தானாபத்தியம்** *tāṉāpattiyam,* பெ.(n.) 1. தூது (வின்.); office of an ambassador. 2. இணக்கம் உண்டுபண்ணுபவர் அலுவலகம் நடுநிலையானவன் (இ.வ.); office of mediator. 3. ஆசாரிய பதவி (இ.வ.); office of a priest.

*[Skt. sthāna-patya > த. தானாபத்தியம்.]*

**தானாபதி** *tāṉāpadi,* பெ.(n.) 1. படைத் தலைவன்; commander. *"தானாபதிகளொடு சமர்க்கிளையாத தளகர்த்தரும்" (அறப்.சத.82).* 2. தூதன்; *"விந்தைபுரி தானாபதி" (திருவேங்.சத.89) (வின்.).* 3. அரசர்க்கும் அவர் தேவியர்க்கும் இடைநின்று செய்தியறிவிக்கும் அந்தப்புரத்துத் தூதி (Rd.); woman who carries messages between the king and queen in a palace.

*[Skt. sthāna-pati > த. தானாபதி.]*

**தானியராசன்** *tāṉiya-rāšaṉ,* பெ.(n.) கோதுமை; wheat, a kind of grains (சா.அக.).

**தானு** *tāṉu,* பெ.(n.) காற்று; wind (சா.அக.).

**தானுவனமூலி** *tāṉuvaṉa-mūli,* பெ.(n.) ஊர்க்கள்ளி; a kind of spurge-sarcostemma intermedium (சா.அக.).

**தானைப்புழு** *tāṉai-p-puḻu,* பெ. (n.) மலவாயிலிருந்து கொண்டு அரிக்கும் ஓர் வகைப்புழு; a kind worm in the rectum (சா.அக.).

**திக்கம்** *tikkam,* பெ.(n.) இளயானை (யாழ்.அக.); young elephant.

*[Skt. dhikka>த. திக்கம்]*

**திக்கயம்** *tikkayam,* பெ.(n.) திசையானை; elephants of eight directions. *"தீண்டரிய வெம்மையொடு திக்கயங்க ளெனவே" (சீவக.1794).*

*[Skt. dik+gaja >த. திக்கயம்.]*

**திக்கரன்** *tikkaraṉ,* பெ.(n.) இளைஞன் (யாழ்.அக.); boy.

*[Skt. dikkara > த. திக்கரன்.]*

**திக்கரி[1]-த்தல்** *tikkari-,* 4 செ.கு.வி. (v.i.) புறக்கணித்தல்; to treat with contempt to shun. *"சினத்துப்பொற் பொருப்பை... திக்கரித்து" (திருப்பு.427).*

*[Skt. dhikkr > த. திக்கரி-]*

**திகர்** *tigar,* பெ.எ.(adj.) வேறு; another, different. *"திகர் சில்லா" (இ.வ.).*

*[U. digar > த. திகர்.]*

**திகரடியாயிருத்தல்** *tigaraḍiyāyiruttal,* பெ.(n.) திணறுதல்; feeling difficulty to breath freely being choked (சா.அக.).

**திகளர்** *tigaḷar,* பெ.(n.) கன்னடதேசத்தார் தமிழருக்கு வழங்கும் பெயர் (இ.வ.); the appellation by which the *Karnāṭakas* style the Tamilians.

*[K. tiguḷar > த. திகளர்.]

**திகாந்தம்** *tigāndam,* பெ.(n.) அடிவானம் (M.Navi.53); horizon.

*[Skt. dig-anta > த. திகாந்தம்.]*

**திகாம்பரன்** *tigāmbaraṉ,* பெ.(n.) ஆடை களற்ற துறவி; naked mendicant (சா.அக.).

**திகிரிக்குள்கலந்தசிலை** *tigirikkuḷ-kalanda-šilai,* பெ.(n.) மாந்துளிர்க்கல்; red stone red ochre (சா.அக.).

**திகிரிக்குளடுக்கும்பச்சை** *tigiri-k-kuḷaḍukkum-paccai,* பெ.(n.) பைம்மணி பச்சை; emerald (சா.அக.).

**திகில்** *tigil,* பெ.(n.) பேரச்சம்; fright, terror, sudden fear, panic, alarm.

*க. திகில்; தெ. திகுலு.*

**திகில்படு-தல்** *tigil-paḍu-,* செ.கு.வி.(v.i.) பேரச்சங் கொள்ளுதல்; to start with sudden fear; to be struck with fear.

*[K. digil > த. திகில்+படு-.]*

**திகில்பிடித்தல்** *tigil-piḍi-ttal,* பெ.(n.) பேரச்சம் கொள்ளுகை (இ.வ.); being taken with sudden fright.

*[K. digil>த.திகில்+பிடி-,]*

**திகிலடி** *tigilaḍi,* பெ.(n.) **திகில்** பார்க்க; see *tigil.*

**திகேசம்** *tigēšam,* பெ.(n.) முல்லைக் குருந்து; (சா.அக.).

**திசனிதசாதி** *tišaṉida-šādi,* பெ.(n.) நால்வகை ஆண்குலத்திலொன்று; one of the four classes of men divided according to lust (சா.அக.).

**திசா** *tišā,* பெ.(n.) கால் நீண்ட பருந்து; long legged eagle - *Aquila hastata* (சா.அக.).

**திசாரகம்** *tišāragam,* பெ.(n.) தும்பி; a bettle of the pterois genus (சா.அக.).

**திசித்துவம்** *tišittuvam,* பெ.(n.) 1. கருப்பத்தில் குழந்தையைத் தாங்கிக் கவர்ந்து கொண்டிருக்கும் மென்படலப் பை. இது பேற்றிற்குப் பின் வெளிதள்ளும்; a membrane of uterus in women and in certain animals produced during gestation and thrown offer parturition. 2. கருப்பையில் சினையைத் தாங்கியுள்ள சவ்வு; a part of decidua which is raflected upon and surrounds the ovum- *membrana deci* (சா.அக.).

**திசுவறிவிளக்கம்** *tišuvaṟiviḷakkam,* பெ.(n.) 1. உயிர் மரபு அல்லது நிலைத்திணை மரபுகளின் மூலத்தைப்பற்றி சொல்லும் நூல்; the science relating to the tissues of animal or vegetable kingdom. 2. உயிர்த் தாதுவைப் பிரிவினைப் பாகமாகச் சொல்லும் நூல்; the science regarding the minute structure and composition of animal tissues - Histology (சா.அக.).

**திட்சு** *tiṭšu,* பெ.(n.) கரும்பு; sugar (சா.அக.).

**திட்டகன்மம்** *tiṭṭa-kaṉmam,* பெ.(n.) அரசர் பகைவர் முதலியோரால் இப்பிறவியில் உண்டாகும் துன்பம் (சிவப்பிர.2, 19, பக்.213, உரை); miseries experienced in this life from kings, enemies, etc.

த.வ. பிறவியிலுறு துயர்

*[Skt. drsta +kanma > த. திட்டகன்மம்.]*

**திட்டத்துய்மன்** *tiṭṭa-t-tuymaṉ,* பெ.(n.) திரௌபதியின் உடன்பிறந்தவன்; brother of *Draupadī* (பாரத.முதற்போர்.15).

*[Skt. Dhrasṭadyumna > த. திட்டத்துய்மன்.]*

**திட்டமாகச்சேர்த்தல்** *tiṭṭamāga-c-cērttal,* பெ.(n.) செவ்வையாக அல்லது அளவுப்படி கூட்டுகை; mixing well and proportionately (சா.அக.).

**திட்டாந்தரம்** *tiṭṭāndaram,* பெ. (n.); எடுத்துக்காட்டு illustration, example.

*"வகையமையடுக்களை போற்றிட்டாந்தம்" (மணி.29, 61).*

*[Skt. drsṭānta+ > த. திட்டாந்தரம்.]*

**திட்டாந்தவாபாசம்** *tiṭṭānda-v-āpāšam,* பெ.(n.) இயைபில்லாத எடுத்துக்காட்டு; a fallacious illustration. *பக்கப் போலியு மேதுப் போலியுந் திட்டாந்தப் போலியுமாம் (மணிமே.29, 326).*

*[Skt. drsṭānta+vābāsa > த. திட்டாந்தவா பாசம்.]*

**திட்டித்தம்பம்** *tiṭṭi-t-tambam,* பெ.(n.) 64 கலைகளில் ஒன்றாகிய கண்கட்டுக் கலை வித்தை; the act of fascinating the eyes or suspending the sight which is regarded as one of the 64 of the ancient arts and science (சா.அக.).

த.வ. கண்கட்டுக்கலை

**திட்டித்தோசம்** *tiṭṭi-t-tōšam,* பெ.(n.) கண்ணேறு; evil eyes (சா.அக.).

**திட்டிதோசக்கிராணி** *tiṭṭidōša-k-kirāṇi,* பெ.(n.) கண்ணேறுவினால் உண்டாகும் வயிற்றுப்போக்கு; diarrhoea caused by evil eyes (சா.அக.).

**திடகாத்திரசாலி** *tiḍagāttirašāli,* பெ.(n.) வலுவுடையவன்; a man who is vitally strong (சா.அக.).

**திடகாத்திரதேகி** *tiḍagāttiradēgi,* பெ.(n.) வன்மையுடைய உடம்பை உடையவன்; person with strong body (சா.அக.).

**திடகாத்திரம்** *tiḍagāttiram,* பெ.(n.) வலுவுள்ள உடம்பு; body vitally strong (சா.அக.).

த.வ. கட்டுடல்

**திடசரீரம்** *tiḍasarīram,* பெ. (n.) **திடகாத்திரம்** பார்க்க; see *tiḍagāttiram* (சா.அக.).

**திடப்பிரஞ்ஞன்** *tiḍa-p-piraññan,* பெ.(n.) உயிர்முத்தன் (யாழ்.அக.); a soul liberated while yet in this life.

*[Skt. drḍha-praiña > த. திடப்பிரஞ்ஞன்.]*

**திடபத்தி** *tiḍa-patti,* பெ.(n.) உறுதியான பற்று (யாழ்.அக.); firm devotion, strong faith.

**திடபரம்** *tiḍaparam,* பெ.(n.) மனத்தின் வல்லமை; strength of mind (சா.அக.).

**திடபுருசன்** *tiḍa-purušan,* பெ.(n.) ஆற்றல் மிகுந்தவன் (கொ.வ.); strong well-built person. *"தேகவலியுள்ளவன் தாண்டுபரி தாண்டு திடசாயிலலி" (தனிப்பா.i, 362, 100).*

*[Skt. drḍha+ puruṣa > த. திடபுருசன்.]*

**திடமோகனம்** *tiḍa-mōganam,* பெ.(n.) முளரிப்பூ (ரோசாப்பூ); rose flower (சா.அக.).

**திடர்** *tiḍar,* பெ.(n.) திண்மையான அடிப்படையில் நிலைநிறுத்தப்பட்டவர்; one whose existence is established by soundest of proofs. *"நினைவரியவர்... நின்றவெந்திடரே" (திவ்.திருவாய்.1, 1, 6).*

*[Skt. drḍha > த. திடர்.]*

**திடவீரியம்** *tiḍa-vīriyam,* பெ.(n.) வட்டச்சாரணை; a kind of trianthma (சா.அக.).

**திடனற்ற** *tiḍanaṟṟa,* பெ.(n.) வலிமையற்ற; weak (சா.அக.).

**திண்டிபிராட்சம்** *tiṇḍi-pirāṭcam,* பெ.(n.) **திண்டிராவிச்சி** பார்க்க; see *tiṇḍirā-vicci* (சா.அக.).

**திண்டிராட்சி** *tiṇḍirāṭci,* பெ.(n.) **திண்டிராவிச்சி** பார்க்க; see *tiṇḍirāvicci* (சா.அக.).

**திண்டிராவிச்சி** *tiṇḍirāvicci,* பெ.(n.) செப்பு சதுரக்கள்ளி; a variety of milk hedge-*Euphorbia genus* (சா.அக.).



**திண்டேல்** *tiṇḍēl,* பெ.(n.) கப்பலைக் கண்காணிப்பவன் (Naut.) boatswain, mate.

*[U. tandel > த. திண்டேல்.]*

**தித்தகாருட்டி** *tittagāruṭṭi,* பெ.(n.) சிறுவழுதலை; wild Indian brinjal solanus indicum (typica) (சா.அக.).

**தித்தசம்** *tittaśam,* பெ. (n.) பேய்ப்புடல்; wild snake gourd-*Trichosanthes cucumerina* (சா.அக.).

**தித்ததாது** *tittatādu,* பெ.(n.) உடம்பிலுள்ள கசப்பு பொருள்; bitter elementary (சா.அக.).

**தித்தபத்திரி** *tittapattiri,* பெ.(n.) கசப்பிலை; bitter leaf (சா.அக.).

**தித்தபத்திரேதி** *tittapattirēdi,* பெ.(n.) சீரகம் (சாசி); cummin seed (சா.அக.).

**தித்தபித்தரோகம்** *tittapittarōgam,* பெ.(n.) வாய் கசந்து, இருமலுடன் நெஞ்சிற் கோழை. கண்சூழலல் முதலிய குறிகள் காட்டும் பித்தநோய்; *a disease caused by vitiation* of heat humour characterised by bitter taste inthe mouth, cough with phelgm in the throat, whirling eyes etc. (சா.அக.).

**தித்தமரிசம்** *tittamariśam,* பெ.(n.) தேற்றான் விதை; water clearing nut-strychnos potatorum (சா.அக.).

**தித்தரோகணி** *tittarōgaṇi,* பெ. (n.) 1. கொம்மட்டி; a watermelon. 2. தும்மற்பூடு; sneezewort-*Arteniesia scermititoria* (சா.அக.).

**தித்தவல்லி** *tittavalli,* பெ.(n.) மருள்; hyacinth aloe *Sansevira roxburghiana* (சா.அக.).

**தித்தாமிர்தம்** *tittāmirdam,* பெ. (n.) சீந்தில்; moon creeper - *menispermum glabrum* (சா.அக.).

**தித்து** *tittu,* பெ.(n.) சோமன்சோடு (j.); suit of clothes.

*[U. dust > த. தித்து.]*

**தித** *tida,* பெ.(n.) 1. பீதரோகணி; an unknown plant. 2. வட்டத்திருப்பி; Indian pareira-*cissamplelos pareira* (சா.அக.).

**திதகம்** *titagam,* பெ.(n.) மலைவேம்பு; wild neem - *Melia composita* (சா.அக.).

**திதசுதாபகம்** *tidaśu-tābagam,* பெ.(n.) தன்னிலைக்கு மீளுகை (வின்.); elasticity, tendency to return to a former position.

*[Skt. sthita+ stapaga > த. திதசுதாபகம்.]*

**திதத்தாபகம்** *titattābagam,* பெ.(n.) 1. தன்னிலைக்கு மீளுந்தன்மை; the state or returning to the form which it is bent, tendency of returning to former position when pulied, rebounding. 2. சவ்வுத் தன்மை; elasticity (சா.அக.).

**திதன்** *tidan,* பெ.(n.) 1. மனவுறுதியுடையவன்; one who is firm in mind. "திதனாயெவரு மறியாத பொருளைத் தெரிந்து கொண்டு" (பகவற்கீதை, 3.31). 2. திடமானது; that which is firm.

**திதாம்** *tidām,* பெ.(n.) பீதரோகணி, கண்ணுக்கிடுமோர் மூலி; an unknown plant useful in eye disease (சா.அக.).

**திதி**[1] *tiḍi,* பெ.(n.) 1. நினைவு நாள்; celestial day. 2. பிறைக்காலம்; lunar day of different lengths i.e. 15 days after new moon - phases of the moon (சா.அக.).

த.வ. பிறைநிலை, பிறை நாள்

**திதி**[2] *tiḍi,* பெ.(n.) 1. உவா நாள் (பிங்.); lunar day. 2. இறந்த நாளில் முன்னோர்க்கு ஆண்டுதோறுஞ் செய்யும் நீத்தார்க் கடன்; ceremony performed in honour of a deceased person on the anniversary of his death.

[**Skt.** *tithi* > த. *திதி.*]

**திதி**[3] *tiḍi,* பெ.(n.) 1. நிலைபேறு (பிங்.); steadfastness, stability, permanence. *"திதியுறச் சின்மொழி செவியிற் செப்பினான்" (பாரத.இரா.94).* 2. காப்பு; preservation. 3. வளர்ச்சி (அக.நி.); growth, increase. *"திதிவாய்மதி" (வெங்கைக்.62).* 4. நிலைமை (கொ.வ.); state, condition. 5. செல்வவளம்; wealth; good circumstances. *"அவனுக்கு நல்ல திதி யிருக்கிறது" (வின்.).* 6. மதிப்பு (வின்.); honour, dignity. 7. இருப்பு; existence. *செனனதிதி மரணங்கள் (வின்.).*

[**Skt.** *sthiti* > த. *திதி.*]

**திதி-த்தல்**[4] *tiḍi,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. காத்தல் (சூடா.); to preserve, sustain. *"உல கெலாந் திதிக்கு மையன்" (உபதேசகா. சிவவிரத.375).* 2. கட்டுதல்; to construct, build. *"திதித்தவில்" (தைலவ.தைல.).*

[**Skt.** *sthiti* > த. *திதி.*]

**திதி**[5] *tiḍi,* பெ.(n.) காசியபன் மனைவியும் அசுரர் மருத்து இவர்களின் தாயுமாகியவள்; the wife of *Kāśyapa*and mother of Asuras and Maruts. *"மைக்கருங்கட் டிதி யென்பாள்" (கம்பரா.சடாயு.25).*

[**Skt.** *diti* > த. *திதி.*]

**திதிகர்த்தா** *tiḍi-karttā,* பெ.(n.) திருமால்; *Viṣṇu*, as the preserver. (காத்தற் கடவுள்). *"திதிகர்த்தாத்தானாய்" (பிரபோத. 45, 2).*

த.வ. காப்பிறை

[**Skt.** *sthiti+karttā* > த. *திதிகர்த்தா.*]

**திதிகாலம்** *tiḍi-kālam,* பெ.(n.) வாழ்நாள் (வின்.); life time.

[*திதி + காலம்.*]

[**Skt.** *sthiti* > த. *திதி.*]

**திதிகேயம்** *tiḍikēyam,* பெ.(n.) மயில்; peacock fowl-*vitex alata* (சா.அக.).

**திதிகொடு-த்தல்** *tiḍi-kōḍu-,* செ.குன்றாவி. (v.t.) ஒருவர் இறந்த ஆண்டு முடிவில் அவருக்குப் படையல் செய்தல்; to perform the anniversary ceremony of a deceased person. *"தந்தை தாய்க்குத் திதி கொடுத்தான்" (நன்.விருத்.298, உரை).*

[**Skt.** *tithi* > த. *திதி+கொடு.*]

**திதிகொள்(ளு)-தல்** *tiḍi-koḷ-,* செ.கு.வி.(v.i.) சூரியமாதத்தில் ஒரே திதி இருமுறை வரும்போது ஒன்றனை நீத்தார் கடன் முதலியவற்றுக்குக் கொள்ளுதல் (வின்.); to choose one of two similar *titi* occurring in a solar month for performing ceremonies, etc.

**திதிசர்** *tiḍišar,* பெ.(n.) திதியின் மகனான அசுரர் (வின்.); Asuras, as sons of diti.

[**Skt.** *diti-ja* > த. *திதிசர்.*]

**திதிசுதர்** *tiḍi-šudar,* பெ.(n.) **திதிசர்** பார்க்க; see *tidišar.*

[**Skt.** *diti+sudar* > த. *திதிசுதர்.*]

**திதிட்சயம்** *tiḍi-ṭ-sayam,* பெ.(n.) 1. காருவா (வின்.); new moon day. 2. திதியின் முழுக்காலமும் ஆத்தியந்த வியாபகம் அறுபது நாழிகைக்குக் குறைந் திருப்பது (பஞ்.); the occasion when the

total duration of a titi is less than sixty *nāḻigai.*

*[Skt. tithi+ksaya > த. திதிட்சயம்.]*

**திதிட்சை** *tiditcai,* பெ.(n.) அமைதிச் செல்வம் ஆறில் ஒன்றாகிய பொறுமை; patience, endurance, one of *camāti-caṭka-camputtu* (q.v.).

த.வ. பொறுமை

*[Skt. titiksā > த. திதிட்சை.]*

**திதித்திரயம்** *tidi-t-tirayam,* பெ.(n.) மூன்று பிறை நாட்கள் ஒரு நாளிற் கூடுவது (விதான.குணாகுண.109); the solar day having three titi.

*[Skt. tithi+traya > த. திதித்திரயம்.]*

**திதித்துவம்** *tidittuvam,* பெ.(n.) நோன்பு, வழிபாடு (விரதம் அனுட்டானம்) முதலிய வற்றைக் காட்டும் காலக் குறிப்பு (வின்.); a calendar which marks the dates of all the prescribed fasts, religious observances, etc.

*[Skt. tithi-tva > த. திதித்துவம்.]*

**திதித்துவயம்** *tidi-t-tuvayam,* பெ.(n.) இரண்டு இறந்த நாட் கடன்கள் செய்தற் குரியதாகிய ஒரே நாள் (பஞ்.); the solar day having two titi in which the ceremonies of both are performed.

*[Skt. tithi+dvaya > த. திதித்துவயம்.]*

**திதிநாடி** *tidi-nāḍi,* பெ.(n.) கோள்மறைவு நாழிகைக் காலம் (வின்.); duration of an eclipse in *nāḻikai.*

*[Skt. tithi > த. திதி + நாடி.]*

**திதிநிச்சயம்** *tidi-niccayam,* பெ.(n.) சடங்கு செய்தற்குரிய நாளைத் தீர்மானிக்கை (வின்.); determination of the correct titi for any ceremony.

த.வ. பிறைக்கால வரையறை

*[Skt. tithi+niš-caya > த. திதிநிச்சயம்.]*

**திதிபண்ணு-தல்** *tidi-paṇṇu-,* செ.கு.வி. (v.i.) **திதிகொடு-த்தல்** பார்க்க; see *titi-koḍi.*

*[Skt. titi > த. திதி+பண்ணு-,]*

**திதிபத்திரம்** *tidi-pattiram,* பெ.(n.) ஐந்தியம் (பஞ்சாங்கம்) (இ.வ.); Hindu almanac.

த.வ. ஐந்தியம்

*[Skt.tithi+patra>த.திதிபத்திரம்.]*

**திதிபரன்** *tidi-paraṉ,* பெ.(n.) **திருமால்** (காத்தற் கடவுள்); Viṣṇu, as the preserver.

*[Skt. sthiti+para > த. திதிபரன்.]*

**திதிபுதல்வர்** *tidi-pudalvar,* பெ.(n.) **திதிசர்** பார்க்க; see *titicar. "திதிபுதல்வர்" (திருவாலவா.கடவுள்வா.12).*

*[Skt. didi> த. திதி+புதல்வர்.]*

**திதீட்சை**[1] *tidīṭcai,* பெ.(n.) **திதிட்சை** பார்க்க; see *titiṭcai.*

*[Skt. titiksā > த. திதீட்சை.]*

**திதீட்சை**[2] *tidīṭšai,* பெ.(n.) உள்ளொடுக்கம் (தேகநிட்டை); spiritual contemplation fixing the mind on one object-concentration (சா.அக.).

த.வ. ஊழ்கநிலை

**திப்பியவனிதம்** *tippiyavaṉidam,* பெ.(n.) சிவப்பம்மான் பச்சரிசி; red spurge (சா.அக.).

த.வ. செவ்வம்மான் பச்சரிசி

**திபதிசம்** *tipatišam,* பெ.(n.) வாலுளுவை; climbing staff plant, intellect tree-*Celastrus paniculata* (சா.அக.).

**திபதிச்சம்** *tipaticcam,* பெ.(n.) **திபதிசம்** பார்க்க; see *tipatisam* (சா.அக.).

**திபதீசம்** *tipatīšam,* பெ.(n.) **திபதிசம்** பார்க்க; see *tibatišam* (சா.அக.).

**திபனாசாதி** *tibaṉā-šādi,* பெ.(n.) காமநுகர்வு அடிப்படையில் ஆண்களை நான்கு பகுப்பாகப் பிரித்தலில் ஒன்று; one of the four classes of men divided according to lust (சா.அக.).

**திம்மாக்கு** *timmākku,* பெ.(n.) வீண் பெருமை (இ.வ.); conceit, arrogance, haughtiness.

*[U. dimāg > த. திம்மாக்கு.]*

**திமாகு** *timāgu,* பெ.(n.) **திம்மாக்கு** (இ.வ.) பார்க்க; see *timmākku.*

*[U. dimāg > த. திமாகு.]*

**திமிலகுமிலம்** *timila-kumilam,* பெ.(n.) 1. இரைச்சல்; noise, stir, bustle. 2.மகிழ்ச்சி; joy, mirth, joviality. 3. மிகுதி; abundance, plenty. 4. மிகைச் செலவாளித் தனம்; extravagance.

**தியக்கிநீர்** *tiyakki-nīr,* பெ.(n.) 1. பனிக் குடத்து நீர்; amniotic fluid liquor amni. 2. வழலை நாதம்; fuller's earth (சா.அக.).

**தியதி** *tiyati,* பெ.(n.) நாள்; date. *"கற்கடக ஞாயிற்று அஞ்சாந்தியதியும்" (T.A.S.i, 252).*

*[Skt. tithi > த. தியதி.]*

**தியந்தி** *tiyanti,* பெ.(n.) **திராய்** (மலை.) பார்க்க; see *tirāy.*

*[Skt. trāyantī > த. தியந்தி.]*

**தியாகம்** *tiyāgam,* பெ. (n.) 1. கைவிடுகை; abandonment, desertion. 2. கொடை (பிங்.); offering, gift, donation, present. 3. பிறர்பொருட்டுத் தன்னலமிழக்குந் தன்மை; spirit of self sacrifice.

**த.வ. ஈகம்**

*[Skt. tyāga > த. தியாகம்.]*

**தியாகமுரசு** *tiyāga-murašu,* பெ.(n.) அரசர்க்குரிய மும்முரசுகளுள் கொடை யளித்தலைக் குறித்தற்கு முழங்கும் முரசம்; trumpet sounded on occasions of royal bounty, one of mummurasam, *"இடி போலுந் தியாகமுரசு முழங்கப் பூண்களை வரையாமற் கொடுத்து" (சீவக,2599, உரை).*

**த.வ. கொடைமுரசு**

*[Skt. tyāga+murasu > த. தியாகமுரசு.]*

**தியாகர்** *tiyāgar,* பெ.(n.) **தியாகராசர்** பார்க்க; see *tiyāgarāšar.*

**தியாகராசர்** *tiyāga-rāšar,* பெ.(n.) திருவாரூர்ச் சிவபெருமான்; šiva, as worshipped in *Tiruvārūr.*

*[Skt. tyāga-rāja > த. தியாகராசர்.]*

**தியாகி**[1] *tiyāgi,* பெ.(n.) தன்னலம் கருதாதவர்; one who sacrifices (for a public cause).

**தியாகி**[2] *tiyāgi,* பெ.(n.) 1. கொடையாளி (பிங்.); liberal giver, donor. 2. பிறர் பொருட்டுத் தன்னலந் துறப்போன்; one who sacrfices his self-interest.

*[Skt. tyāgin > த. தியாகி.]*

**தியாகையர்** *tiyāgaiyar,* பெ.(n.) தெலுங்கில் இசைப்பாடல்கள் இயற்றியவரும் திருவை யாற்றில் வாழ்ந்தவருமான ஓர் இசைவாணர்; a great musical composer in Telugu, native of *Tiruvāiyar.*

**தியாச்சியம்** *tiyācciyam,* பெ.(n.) 1. விடத் தக்கது; that which ought to be given up. 2. ஒவ்வொரு விண்மீனிலும் நல்வினைக்குத் தகாததென்று கருதி விலக்கப்படும் 3 3/4 நாழிகையளவுள்ள காலம்; duration of an hour and a half in an asterism which is deemed unsuited for auspicious deeds.

*[Skt. tyājya > த. தியாச்சியம்.]*

**தியாத்துவம்** *tiyāttuvam,* பெ.(n.) உள்ளொடுக்கம் (தியானம்) (யாழ்.அக.); contemplation, meditation.

*[Skt. dhyā-tattva > த. தியாத்துவம்.]*

**தியாதன்** *tiyādaṉ,* பெ.(n.) நினைக்கப் பட்டவன்; he who is thought of or meditated upon. *"தனக்கு நாயகனின் மையால் தியாத நாயகனாக மானதத்தான் நோக்கி" (சிலப்.8, 24, உரை).*

*[Skt. dhyāta > த. தியாதன்.]*

**தியாமம்** *tiyāmam,* பெ.(n.) 1. அறுகு (மலை.); harialligrass. 2. இருவேரி; cuscus grass, Anatherium muricatum.

**தியானச்சுலோகம்** *tiyāṉa-c-culōgam,* பெ. (n.) அகவழிபாடு (தியானஞ்) செய்யுந் தெய்வத்தின் வடிவம் முதலியவற்றைப் பற்றிக் கூறும் வடமொழி செய்யுள்; Sanskrit verse describing the form, etc., of the deity contemplated in a mantra.

*[Skt.dhyāna+ślōka>த.தியானச்சுலோகம்.]*

**தியானசமாதி** *tiyāṉa-samādi,* பெ.(n.) ஒக நிலையில் ஒன்று; one of the postures in yoga practice, i.e. sitting in deep and silent contemplation (சா.அக.).

த.வ. அடக்கநோன்பு

**தியானநானம்** *tiyāṉa-nāṉam,* பெ.(n.) அமுதமாக ஒன்றித்து முழுகுகை; (தத்துவப். 51); (Śaiva.) bathing in water imagining it to be amirtam.

**தியானம்** *tiyāṉam,* பெ.(n.) 1. மனத்தை அலைபாய விடாமல் ஒருமுகப்படுத்துவது, ஊழ்கம், தவநிலை (பிங்.); meditation. தியானம் உடலுக்கு நல்லது, முனிவர் தியானத்தில் இருக்கிறார். (இ.வ.). 2. எண் வகைத் தவ நிலையில் (அட்டாங்க யோகத்தில்) ஒன்றான இடையறாச் சிந்தனை (பிங்.); (*Yōga*) steady, uninterrupted contemplation of an object, one of *aṣṭāṅgayōkam.*

த.வ. ஊழ்கம், தவம்

*[Skt. dhyāna > த. தியானம்.]*

**தியானமுத்திரை** *tiyāṉa-muttirai,* பெ.(n.) சிவஓகத்தில் உட்கார்ந்து இருப்பதற்காக அமைத்துக் கொள்ளும் ஒரு வகை நிலைமை; a prescribed attitude or posture, when meditation upon deity, in yoga practice (சா.அக.).

*[Skt. dhyāna > த. தியானம் + முத்திரை.]*



**தியானயாகம்** *tiyāṉa-yāgam,* பெ.(n.) ஐவகை வேள்வியுள் வழிபாடு செய்தலாகிய வேள்வி (சிவதரு.ஐவகை.1, உரை); religious meditation, considered as a form of sacrifice, one of *ai-vakai-yākam.*

*[Skt. dhyāna+yāga > த. தியானயாகம்.]*

**தியானவான்** *tiyāṉavāṉ,* பெ.(n.) **தியானி** பார்க்க; see *tiyāṉi.*

*[Skt. dhyān-avān > த. தியானவான்.]*

**தியானவிந்து** *tiyāṉa-vindu,* பெ.(n.) நூற்றெட்டுப நிடதங்களுள் ஒன்று; an upanisad, one of 108.

*[Skt. dhyāna-bindu > த. தியானவிந்து.]*

**தியானவேள்வி** *tiyāṉa-vēḷvi,* பெ.(n.) **தியானயாகம்** பார்க்க; see *tiyāṉa-yāgam* (சி.சி.8, 23, சிவஞா.).

*[Skt. dhyāna > த. தியானம்+ வேள்வி.]*

**தியானி**[1] *tiyāṉi,* பெ.(n.) விடாது இறை ஊழ்கம் செய்வோன்; one engaged in uninterrupted religious meditation.

த.வ. ஊழ்கத்தன்

*[Skt. dhyānin > த.தியானி.]*

**தியானி²-த்தல்** *tiyāṉi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒன்றை விடாது ஊழ்கம் செய்தல்; to meditate, contemplate, to give undivided attention to a deity, an object, etc. *"அமுதலிங்கத்தைத் தியானித்து" (திருவானைக்.வாங்.2).*

த.வ. ஊழ்கமொன்றல்

*[Skt. dhyāna > த. தியானி-.]*

**தியானித்தல்** *tiyāṉittal,* தொ.பெ.(vbl.n.) சிந்தித்தல்; meditating (சா.அக.).

**தியானிப்பு** *tiyāṉippu,* பெ.(n.) ஊழ்கம் (தியானம்); meditation (சா.அக.).

த.வ. ஒன்றிப்பு, ஒன்றல்

**தியுகம்** *tiyugam,* பெ.(n.) பறவை; bird (சா.அக.).

**தியுகாரி** *tiyugāri,* பெ.(n.) காக்கை; crow (சா.அக.).

**தியுதம்** *tiyutam,* பெ.(n.) **தியுதி** பார்க்க; see *tiyuti* (யாழ்.அக.).

*[Skt. dyōta > த. தியுதம்.]*

**தியுதி** *tiyuti,* பெ.(n.) 1. ஒளி; light (யாழ்.அக.). 2. ஒளிக்கீற்று; ray of light.

*[Skt. dyuti > த. தியுதி.]*

**தியுமணி** *tiyumaṇi,* பெ.(n.) ஞாயிறு; sun (யாழ்.அக.).

*[Skt. dyu-mani > த. தியுமணி.]*

**தியூசணாதிலோகம்** *tiyūšaṇādi-lōgam,* பெ.(n.) மேக குட்டத்திற்குக் கொடுக்கும் ஆயுள்வேத மருந்து; an ayurvedic medicine given for some skin affection (சா.அக.).

**தியூதம்** *tiyūdam,* பெ.(n.) சூதாட்டம் (சங்.அக.); dice-play gambling.

*[Skt. dyūta > த. தியூதம்.]*

**தியேசேயே** *tiyēšēyē,* பெ.(n.) மரமஞ்சள் (மலை.); tree turmeric.

**தியோதம்** *tiyōtam,* பெ.(n.) 1. ஒளி; light (யாழ்.அக.). 2. வெயில்; sunshine.

*[Skt. dyōta > த. தியோதம்.]*

**திரக்கிரசம்** *tirakkirasam,* பெ. (n.) கண்வலி (யாழ்.அக.); eyesore.

*[Skt. tiraskṛta > த. திரக்கிரசம்.]*

**திரகலாதிகம்** *tiragalādigam,* பெ.(n.) காளான்; mushroom-pungus (சா.அக.).

**திரசர்** *tirašar,* பெ.(n.) மருத்துவமனை மருத்துவருக்கு உதவி செய்யும் வேலைக்காரன் (இ.வ.); dresser.

*[E. dresser > த. திரசர்.]*

**திரசரேணு** *tirašarēṇu,* பெ.(n.) அணுத்தூசி; the mote or atom moving in the sun beam considered as an ideal weight either of the lowest denomination or equal to three invisible atoms (சா.அக.).

**திரசாதிசூரன்** *tirašādišūraṉ,* பெ. (n.) வீரம் எனும் வேதியியல் பொருள்; corrosive sublimate - *mercuric chloride* (சா.அக.).

**திரசுகரி-த்தல்** *tirašukari-,* செ.குன்றாவி. (v.t.) 1. அவமதித்தல்; to despise. 2. மறைத்தல்; to coneal, cover. 3. விலக்குதல்; to reject, set aside.

த.வ. புறக்கணித்தல்

*[Skt. tiraskāra > த. திரசுகரி-.]*

**திரசுகாரம்** *tirašukāram,* பெ.(n.) 1. அவமதிப்பு; contempt, disrepect. 2. மறைக்கை; concealment. 3. விலக்குகை; rejection.

த.வ. புறக்கணிப்பு

*[Skt. tiraskāra > த. திரசுகாரம்.]*

**திரணகிருமி** *tiraṇa-kirumi,* பெ.(n.) சன்ன உயிரி(கிருமி); thin worm (சா.அக.).

**திரணக்கிரகி** *tiraṇa-k-kiragi,* பெ.(n.) கற்பூரமணி (அ) பொன்னம்பர்; amber-succinum (சா.அக.).

**திரணபூலிகம்** *tiraṇa-pūligam,* பெ.(n.) கருவழித்தல்; human abortion (சா.அக.).

**திரணம்** *tiraṇam,* பெ.(n.) ஒரு நோய்; a disease (சா.அக.).

**திரணமண்டலி** *tiraṇa-maṇḍali,* பெ.(n.) புல்விரியன் பாம்பு; grass viper, grass adder (சா.அக.).



**திரணமிருதம்** *tiraṇa-mirudam,* பெ.(n.) கண்பூ; cataract of the eye (சா.அக.).

த.வ. கண்புரை

**திரணாக்கியன்** *tiraṇākkiyaṉ,* பெ. (n.) ஒரு சித்தன், குறத்திக்குப் பிறந்தவன்; a Siddhar, son of Jamath agni born to kurathi (சா.அக.).

**திரணாக்கினி** *tiraṇākkiṉi,* பெ.(n.) புல் நெருப்பு; grass fire (சா.அக.).

**திரணிக்கல்** *tiraṇikkal,* பெ.(n.) காகச்சிலை, அதாவது காக்கைக் கல் இது உபரசச் சரக்கில் ஒன்று; black load stone-magnetic oxide of iron, it is one of the 120 kinds of natural substances enumerated in Tamil medical science (சா.அக.).

**திரத்துவம்** *tirattuvam,* பெ.(n.) நிலைப்பு; fixedness, stability, permanence. *"திரத்துவமா நிறைந்தான்" (ஞானவா. தாசூ.50).*

*[Skt. sthira-tva > த. திரத்துவம்.]*

**திரநட்சத்திரம்** *tira-naṭcattiram,* பெ.(n.) நற்செயல்கள் தொடங்குதற்குரிய உருள் (உரோகிணி), மானேறு (உத்திரம்), கடைக்குளம் (உத்திராடம்), பிற்கொழுங்கால் (உத்திரட்டாதி) நாள்கள் (விதான. பஞ்சாங்க.20, உரை); the naksatras, *urōkiṇi, uttiram, uttirāḍam* and *uttiraṭṭāti,* auspicious for works of long stading nature.

*[Skt. sthira+nakṣatra> த. திரநட்சத்திரம்.]*

**திரப்சம்** *tirapšam,* பெ.(n.) கொஞ்சம் (கொ.வ.); small quantity.

*[Skt. drapsa > த. திரப்சம்.]*

**திரப்படு-தல்** *tira-p-paḍu-,* செ.கு.வி.(v.i.) உறுதிப்படுதல்; to be fixed, firm, permanent, steady.

*[Skt. sthira > த. திரப்படு-.]*

**திரப்பியம்** *tirappiyam,* பெ.(n.) **திரவியம்** பார்க்க; see *tiraviyam. "பிம்முதலாகுந் திரப்பியத்தில்" (விரசோ.தத்தி.4).*

*[Skt. dravya > த. திரப்பியம்.]*

**திரப்புசம்** *tirappušam,* பெ.(n.) 1. **கக்கரி** பார்க்க; see *kakkari.* 2. கத்திரி (மலை); brinjal.

*[Skt. trapusa > த. திரப்புசம்.]*

**திரபம்** *tirapam,* பெ.(n.) நாணம் (யாழ்.அக.); shame, bashfulness.

*[Skt. trapā > த. திரபம்.]*

**திரபிபுவலி** *tirapipuvali,* பெ.(n.) வங்க மணல்; lead mixed with sand-leadore (சா.அக.).

**திரபு** *tirabu,* பெ.(n.) 1. தகரம்; tin. *"திரபுத்தனை... எடுக்குமிழுதையும்" (சிவதரு.பாவ.24).* 2. நிரய வகை; hell. *"உழுத்ததசை திரபு வெனச் செப்புநவும்" (சிவதரு.சுவர்.115).*

*[Skt. trapu > த. திரபு.]*

**திரபுட்பம்** *tiraputpam,* பெ. (n.) **திரிபுலம்** பார்க்க; see *tiripulam.*

*[Skt. trapuṣa > த. திரபுட்பம்.]*

**திரபுட்பவம்** *tiraputpavam,* பெ.(n.) சிறுவிடு கொள்; a kind of gram (சா.அக.).

**திரபுலம்** *tirapulam,* பெ.(n.) துத்தநாகம் (யாழ்.அக.); zinc.

*[Skt. trapula > த. திரபுலம்.]*

**திரபொருள்** *tira-poruḷ,* பெ.(n.) நிலையான பொருள்; fixed body (சா.அக.).

**திரம்** *tiram,* பெ.(n.) நிலம் (இலக்.அக.); earth.

*[Skt. sthirā > த. திரம்.]*

**திரமம்** *tiramam,* பெ.(n.) பழைய கிரேக்க நாணய வகை (T.A.S.iv, 30); an ancient Greek coin, used in India.

*[G.K. drakme > த. திரமம்.]*

**திரமாதம்** *tira-mādam,* பெ.(n.) நிலை நிற்க வேண்டும் செயல்களைத் தொடங்குவதற்கு ஏற்றனவாகக் கருதப்படும் ஞாயிறு இருக்கும் விடை (வைகாசி) மடங்கல் (ஆவணி) நளி (கார்த்திகை) கும்பம் (மாசி) ஆகிய மாதங்கள் (வின்.); the four months in which the sun is in *tira-rāśi,* viz., *vaigāci, āvaṇi, kārttigai, māśi.*

*[Skt. sthira> த. திர+மாதம்.]*

**திரமிடம்** *tiramiḍam,* பெ.(n.) **திரமிளம்** பார்க்க; see *tiramiḷam.*

*[Skt. dramiḍa > த. திரமிடம்.]*

**திரமிளம்** *tiramiḷam,* பெ.(n.) 1. திராவிடம்; south India. 2. தமிழ் மொழி (பி.வி.2, உரை); Tamil language.

*[Skt. dramiḍa > த. திரமிளம்.]*

**திரயப்பிணிகடம்** *tiraya-p-piṇikaḍam,* பெ.(n.) 1. பருத்தவுடம்பு; fat body. 2. பரு(தூல)வுடம்பு; corporeal or material body as opposed to spiritual body (சா.அக.).

**திரயம்** *tirayam,* பெ.(n.) மூன்று; three (ஈஷ்ணாத்திரயம்).

*[Skt. traya > த. திரயம்.]*

**திரயம்பகன்** *tirayambagaṉ,* பெ.(n.) சிவபெருமான் முக்கண்ணுள்ளீ; śiva, as three-eyed. *"தாதை யெனுந் திரயம்பகன்" (கந்தபு.உபதேசப.20).*

*[Skt. tryambaka > த. திரயம்பகன்.]*

**திரயமுகம்** *tiraya-mugam,* பெ.(n.) கோள் முதலியவற்றின் குறுக்குப் பார்வை (விதான. பஞ்சாங்க.19); (Astrol.) transverse aspect, as of planets.

*[Skt. tiryaṅ-mukha > த. திரயமுகம்.]*

**திரயாங்கநமசுகாரம்** *tirayāṅga-namaśukāram,* பெ. (n.) தலையிலே இரண்டு கைகளையும் குவித்து வணங்குகை (சிவாலயதரிசனவிதி, பக்.11); rendering obeisance by folding both hands over one's head.

*[Skt. tryāṅga+namaskāram>த. திரயாங்க நமசுகாரம்.]*

**திரயாங்கம்** *tirayāṅgam,* பெ.(n.) நாள், கிழமை விண்மீன்களைக் காட்டும் குறிப்பு (கொ.வ.); calendar showing the three elements, titi, *vāram* and *naṭcattiram.*

*[Skt. traya+aṅga > த. திரயாங்கம்.]*

**திரயோதசி** *tirayōdaśi,* பெ.(n.) கரும் வெண்பக்கங்களில் வரும் பதின்மூன்றாம் நாள்; the 13th titi of the waxing or waning moon. *"திங்க டிரயோதசி யாதிரையும் வந்து செறிந்திடும்" (சிவரக. அபுத்தி.23).*

*[Skt. trayōdaśī > த. திரயோதசி.]*

**திரராசி** *tira-rāśi,* பெ.(n.) நிலைநிற்க வேண்டுஞ் செயல்களைத் தொடங்குதற்கு ஏற்றனவாகக் கருதப்படும் விடை (இடபம்), மடங்கல் (சிங்கம்), நளி (விருச்சிகம்), கும்பம்

என்ற ஓரைகள் (விதான.மரபி.5, உரை); (Astrol.) the four signs of the zodiac, auspicious for works of lond-standing nature, viz., *iḍapam, ciṅgam, viruccigam, kumbam.*

*[Skt. sthira+rāśi > த. திரராசி.]*

**திரலிங்கம்** *tira-liṅgam,* பெ.(n.) பரார்த்த லிங்கம் (சங்.அக.); a kind of *liṅga.*

*[Skt. sthira+liṅgam > த. திரலிங்கம்.]*

**திரவகம்** *tiravagam,* பெ.(n.) நாசியிலிருந்து குருதி சிந்தல்; bleeding from the nostruls, nosebleed-*Epistaxis* (சா.அக.).

**திரவகாரி** *tiravagāri,* பெ. (n.) உமிழ் நீரைப்பெருக்கும் மருந்து; medicine promoting the flow of saliva-salivant - *Sialogogue* (சா.அக.).

**திரவகாரிகள்** *tirava-kārigaḷ,* பெ.(n.) வாயில் உமிழ் நீரை மிகுதிப்படுத்தும் மருந்துகள் (பைஷஜ.13); sialogogues, agents to promote the flow of saliva.

*[Skt. dravakārin > த. திரவகாரிகள்.]*

**திரவச்சத்து** *tirava-c-cattu,* பெ.(n.) குழம்பு; liquid extract, tincture (சா.அக.).

**திரவசுவேதம்** *tirava-śuvēdam,* பெ.(n.) வேதுபிடித்தல்; medicated bath (சா.அக.).

**திரவணம்** *tiravaṇam,* பெ.(n.) வெப்பம்; heat (சா.அக.).

**திரவணாங்கம்** *tiravaṇāṅgam,* பெ.(n.) உருக்குப்பதம்; melting point (சா.அக.).

**திரவத்திரவியம்** *tirava-t-tiraviyam,* பெ.(n.) நீர்மப்பொருள்கள்; fluid substance (சா.அக.).

**திரவத்துங்கம்** *tirava-t-tuṅgam,* பெ. (n.) 1. ஒரு பொருள் இயற்கையாகவோ, செயற்கையாகவோ நீர்மத் தன்மையடையும் நிலைமை; a natural or artificial fluid condition of a substance. 2. நீர்த் தன்மையும் கசிவும்; fluidity and wetness (சா.அக.).

**திரவத்துவம்** *tiravattuvam,* பெ.(n.) நீர்மப் பொருள்களின் நெகிழ்ச்சித் தன்மை; flowing property of liquids. *"திரவத்துவஞ் சினேகம்" (பிரபோத.42, 2).*

**திரவந்திசம்** *tiravandiśam,* பெ.(n.) ஒரு பூடு; a plant - *Anthericum tuberosum* (சா.அக.).

**திரவபதார்த்தம்** *tiravapadārttam,* பெ.(n.) **திரவத்திரவியம்** பார்க்க; see *tirava-t-tiraviyam* (சா.அக.).

**திரவம்**[1] *tiravam,* பெ.(n.) 1. நீர் முதலிய வற்றின் ஓடுந் தன்மை (வின்.); flowing property of liquids. 2. கசிவு (வின்.); oozing of liquids. 3. சாறு (வின்.); juice, essence. 4. நீர்மம்; liquid (தைலவ. தைல.).

*[Skt. drava > த. திரவம்.]*

**திரவம்**[2] *tiravam,* பெ.(n.) 1. சாறம்; essence. 2. புளிமநீர்; acid. 3. கருப்பையிலிருந்து வடியும் குருதி; blood discharged from the womb (சா.அக.).

**திரவாதாரம்** *tiravādāram,* பெ.(n.) நீர்மப் பொருளைக் கொள்ளும் ஏனம்; fluid holder (சா.அக.).

**திரவாதி** *tiravādi,* பெ.(n.) காட்டாமணக்கு (வின்.); physic nut.

**திரவாரம்** *tiravāram,* பெ.(n.) காரிக்கிழமை (பஞ்.); saturday.

*[Skt. sthiravāra > த. திரவாரம்.]*

**திரவி** *tiravi,* பெ.(n.) 1. சாறு; juice. 2. இதளியம் (பாதரசம்); mercury (சா.அக.).

**திரவிணம்** *tiraviṇam,* பெ.(n.) வெப்பம்; heat (சா.அக.).

**திரவித்தல்** *tiravittal,* பெ.(n.) 1. நீர்பொசியப் பண்ணல்; making water to ooze out. 2. நீர் வடித்தல்; drawing out fluid from anything as ascities (பெருவயிறு) (சா.அக.).

**திரவித்தை** *tiravittai,* பெ.(n.) பொன்னாக்கல் கல்வி; the art of transmuting mercury into gold (சா.அக.).

**திரவியகுணசாத்திரம்** *tiraviya-kuṇa sāttiram,* பெ.(n.) கறியுணவுகளின் பண்பு களைக் கூறும் நூல்; that branch of medical science which treats of quality acttion etc. of drugs employed in medicine materia medica (சா.அக.).

**திரவியசம்பத்து** *tiraviya-šampattu,* பெ. (n.) பேறு; riches.

*[Skt. dravya+sampad > த. திரவிய சம்பத்து.]*

**திரவியசுத்தி**[1] *tiraviya-šutti,* பெ. (n.) 1. கடவுளின் அருளால் சுத்தியுள் ஒன்றாய், தன்னை மறந்து முன்வினைப் பயனாகிய எல்லாச் செயல்களும் கடவுளின் அருளால் உண்டாவன என்று நோக்குகை (கட்டளைக்.228); (*Šaiva.*) seeing things in the light of divine grace, suppressing one's self and interpreting all experiences which are fruit of karma as acts of divine grace, one of *Pañca-cutti,* q.v. 2. ஐந்தூய்மையுள் மந்திர நீரைத் தெளித்துப் பொருள்களை தூய்மை செய்வது (சைவச.502, உரை); (Tantra.) purification of articles which consists in sprinkling sanctified water on articles of worship, one of *pañca-cutti.* (சைவச.502, உரை).

*[Skt. dravya+šuddhi > த. திரவியசுத்தி.]*

**திரவியசுத்தி**[2] *tiraviyašutti,* பெ.(n.) ஐந்து வகை குற்ற நீங்கியியல்களுள் ஒன்று (பஞ்ச சுத்தியிலொன்று); one of the five methods of cleansing medicines or purifications of drugs this should not be confounded with the ஐந்தூய்மை (பஞ்ச சுத்த) (purification) practised among the sheivas (சா.அக.).

**திரவியசுதானம்** *tiraviya-šudāṉam,* பெ.(n.) தனசுதானம் பிறப்பியத்தில் பிறப்பு ஓரையிலிருந்து இரண்டாம் வீடு; second house from the ascendant (Astrol.).

*[Skt. dravya > த. திரவியசுதானம்.]*

**திரவியப்பட்டை** *tiraviya-p-paṭṭai,* பெ.(n.) திரு மஞ்சனப் பட்டை (இ.வ.); bark of the lodhra tree.

*[Skt. dravya > த. திரவியம் + பட்டை.]*

**திரவியம்** *tiraviyam,* பெ.(n.) 1. இயற்கை யாகவே கிடைக்கும் மூலப்பொருட்கள்; elementary substances that are obtained in nature. 2. பொருள்; substance. *"பெரிது மிகை நற் றிரவியமே" (ஞானவா.தேவபூ.52).* 3. சொத்து; property. *"தேடுந் திரவியமும்" (தாயு.பராபர.233).* 4. பொன் (சூடா.); gold. 5. தருக்க நூல்களில் கூறப்படும் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் ஆகிய மூலப்பொருள்கள்; (Log.) elementary substances, numbering nine, viz., *pirutuvi, appu, tēyu, vāyu, ākāyam, kālam, tikku, āṉmā, maṉam.*

*[Skt. dravya > த. திரவியம்.]*

**திராசிலை** *tirāšilai,* பெ.(n.) இயற்கையில் கிடைக்கும் பொருட்களுள் ஒன்று; one of the 120 kinds of natural substances (சா.அக.).

**திராட்சக்காடி** *tirāṭcakkāḍi,* பெ.(n.) 1. கொடி முந்திரியில் (திராட்சை) இருந்து வடிக்கும் புளிப்பு; fermented juice from the fruit of grape vine-grapes vinegar. 2. கொடி

முந்திரி மது; an intoxicated liquor obtained from the fermented juice of grapes-vine (சா.அக.).

**திராட்சசர்க்கரை** *tirāṭca-šarkkarai,* பெ.(n.) 1. குருதியிலும் கருப்பு ஈரலிலும் சிறிதளவாய்க் காணப்படும் ஒரு வகை சருக்கரை; grape sugar-glucose. 2. கொடிமுந்திரி சாற்றி னின்று வடித்தெடுக்கும் சருக்கரை; a variety of sugar extracted from grape-Grape sugar, it is less sweet than sugarcane (சா.அக.).

**திராட்சாசவம்** *tirāṭcāšavam,* பெ.(n.) 1. உலர்ந்த கொடி முந்திரிப் பழத்தின் வடிநீர் எடுத்து வெல்லத்துடன் கலந்து கரைத்து, புளிக்க வைத்து பிறகு அதினின்று வடிக்கும் ஒரு வகையான மருந்து; a tincture prepared from the decoction of raisins combined with jaggery by allowing it to ferment for a sufficient period (சா.அக.).

**திராட்சாரிட்டம்** *tirāṭcāriṭṭam,* பெ.(n.) இது தேன், சருக்கரை, கொடி முந்திரி வடிநீர் இவைகளுடன் சில நறுமண நீர்மங்கள் கலந்த ஒரு மதுவகை, இது நோயினால் இளைத்தவர் களுக்குச் சுறுசுறுப்பை உண்டாக்கும்; a drink analogous to wine prepared with honey, sugar and decoction of raisin with the addition of a few aromatics. it is used as a stimulant in exhausting diseases (சா.அக.).

**திராட்சாபாகம்** *tirāṭcā-pāgam,* பெ.(n.) கொடி முந்திரி சாறு போல துய்ப்பதற்கு எளிதான செய்யுள் நடை; (poet) transparant simplicity of style, as of a poem whose beauty can be drunk in as easily as the juice of grapes.

*[Skt. drākṣā+pākam > த. திராட்சாபாகம்.]*

**திராட்சியுப்பு** *tirāṭciyuppu,* பெ.(n.) கொடி முந்திரிச்சாற்றைப் புளிக்க வைக்குங்கால் அதினின்று இறக்கும் காரவுப்பு; a crystalline salt deposited during fermentation of the juice of grapes-turtrate of potash - potassae turtrat, acid turtrate of potash-Acidum turtaricum (சா.அக.).

**திராட்சை** *tirāṭcai,* பெ.(n.) கொடிவகை; common grape vine, 1. cl., vitis vinifera.

த.வ. கொடிமுந்திரி

*[Skt. drākṣā > த. திராட்சை.]*



**திராட்சைசாராயம்** *tirāṭšai-šārāyam,* பெ.(n.) கொடி முந்திரி சாற்றினின்று வாலை யிலிட்டிறக்கி வடித்த காரமான மதுவகை, இதனால் ஊதை பித்த தீவினை. உடம் பழற்சிபோம், அரத்தம் பெருகும் காமத்தை யுண்டாக்கும்; an ardent spirit distilled from wine-brandy (சா.அக.).

*[Skt. drākṣa > த. திராட்சை+சாராயம்.]*

**திராட்சைரசம்** *tirāṭcai-rašam,* பெ.(n.) சீமைச் சாராயம்; wine prepared from the fermented juice of grapes (சா.அக.).

**திராட்டு** *tirāṭṭu,* பெ.(n.) 1. குதிரை நடை வகை (இ.வ.); trot. 2. நெருக்கடி நிலைமை (உ.வ.); difficult situation.

*[E. trot > த. திராட்டு.]*

**திராணம்** *tirāṇam,* பெ.(n.) உறை (யாழ்.அக.); sheath, cover.

*[Skt. trāṇa > த. திராணம்.]*

**திராணியின்மை** *tirāṇiyiṉmai,* பெ.(n.) வலிமையற்றவன்; weakness (சா.அக.).

**திராபம்** *tirābam,* பெ.(n.) 1. வானம்; sky. 2. சேறு; mire. 3. மூடன்; idiot.

*[Skt. drāpa > த. திராபம்.]*

**திராபை** *tirābai,* பெ.(n.) 1. பயனற்றவன்; fool, good-for nothing fellow. 2. பயனற்றது; worthless stuff. *"அவன் வாங்கி வந்த பொருள் சுத்தத் திராபை".*

*[Skt. drāpa > த. திராபை.]*

**திராய்** *tirāy,* பெ.(n.) **திராவி** பார்க்க; see *tirāvi.*

*[Port. trava > த. திராய்².]*

**திராய்க்கம்பம்** *tirāy-k-kambam,* பெ.(n.) உத்தரம் (இ.வ.); beam, as supporting joists.

*[திராய்+கம்பம்.]*

*[Port. trava > த. திராய்.]*

**திராயந்தி** *tirāyandi,* பெ.(n.) கம்பந்திராய் ; a kind of wild chickweed (மலை.).

**திராயந்தி** *tirāyandi,* பெ.(n.) 1. கம்பந்திராய்; a species of indian chick weed- *Phurmaceum genus.* 2. பிரமிய வழுக்கை; thymeleaved gratiola - *Gratiola monieri* (சா.அக.).

**திராவகநீர்** *tirāvaga-nīr,* பெ.(n.) **திராவகரசம்** (பாண்டி.) பார்க்க; see *tirāvaga-rasam.*

**திராவகநீறு** *tirāvaga-nīṟu,* பெ.(n.) வெடியுப்புச் சுண்ணம் (வின்.); precipitate of nitre or sulphur.

*[Skt. drāvaka > த. திராவகம் + நீறு.]*

**திராவகப்பிரியை** *tirāvaga-p-piriyai,* பெ.(n.) எரிநீரில் கொழுமையால் செழித்து வளரும் பூண்டு அல்லது பூச்சிகள்; any individual plant or micro or ganisms that grow well in the highly acid media-*Acidophile* (சா.அக.).

**திராவகப்புளிப்பு** *tirāvaga-p-puḷippu,* பெ.(n.) காரப் புளிப்பு; extreme sourness causing iritation, sourness sharp or biting to the taste (சா.அக.).

*[Skt. drāvaka > த. திராவகம் + புளிப்பு.]*

**திராவகம்**[1] *tirāvagam,* பெ.(n.) 1. மருத்துச் சரக்குகளினின்று இறக்கப்படும் சத்து நீர்; tincture, distilled spirit, strong liquor, mineral acid. 2. காந்தக்கல்; load stone. 3. செயநீர்; a medical liquid preparation. 4. வாலையினின்றிறக்கிய தாதுப்புளிப்பு; distilled mineral acid (சா.அக.).

த.வ. எரிநீரம், நீர்மம்

*[Skt. drāvaka > த. திராவகம்.]*

**திராவகமயக்கம்** *tirāvaga-mayakkam,* பெ.(n.) உடம்பினில் புளிப்புச் சத்து அதிகமாக ஏற்படுவதனால் உண்டாகும் மயக்கம்; giddiness caused by excess of sourness in the system (சா.அக.).

*[Skt. drāvaka > த. திராவகம் + மயக்கம்.]*

**திராவகமருந்து** *tirāvaga-marundu,* பெ.(n.) எரி நீரின் உதவியைக் கொண்டு செய்யப்படும் மருந்து; medicine prepared with the aid of acids (சா.அக.).

*[Skt. drāvaka > த. திராவக(ம்) + மருந்து.]*

**திராவகரசம்** *tirāvaga-rašam,* பெ.(n.) காயகற்ப மருந்து (பாண்டி.); elixir.

*[Skt. drāvaka+rasam > த. திராவகரசம்.]*

**திராவகரம்** *tirāvagaram,* பெ.(n.) 1. ஓர் வகை வெண்காரம்; a kind of borax. 2. ஓர் உருக்கு மருந்து; a flux to assist the fusion of metals. 3. வாய்நீர்; saliva as over flowing (சா.அக.).

**திராவணஞ்செய்–தல்** *tirāvaṇañ-jey-,* செ.குன்றாவி.(v.t.) ஓட்டுதல்; to drive, remove. *"துயரைத் திராவணஞ்செய் யிலகுகருணை" (திருக்காளத்.4, 5, 51).*

*[Skt. drāvaṇa > த. திராவணம் + செய்–.]*

**திராவம்புரி–தல்** *tirāvam-puri-,* செ.குன்றாவி. (v.t.) உருக்குதல்; to melt. *"எவற்றினையுந் திராவம் புரியுந் தொழிலாலும்" (திருக்காளத்.பு. 5, 50).*

*[Skt. drāva > த. திராவம்+புரி–தல்.]*

**திராவி** *tirāvi,* பெ.(n.) துலாக்கட்டை; joist.

*[Port. trava > த. திராவி.]*

**திராவிடப்பிரபந்தம்** *tirāvida-p-pirapandam,* பெ.(n.) **திவ்வியப்பிரபந்தம்** பார்க்க; see *tivviyappirapandam; vaisṇava* sacred poems by the *āḻvārs.*

*[Skt. drāvida+pirapantam > த. திராவிடப் பிரபந்தம்.]*

**திராவிடப்பிராமணர்** *tirāvida-p-pirāmaṇar,* பெ.(n.) விந்திய மலைக்குத் தெற்கில் குடியேறிய தென்னிந்தியப் பார்ப்பனர்; Brahmins living south of the vindhya range, dist. fr. *Kauṭa-p-pirāmaṇar.*

*[Skt. drāvida+pirāmaṇar > த. திராவிடப் பிராமணர்.]*

விந்திய மலைக்கு வடக்கில் குடியேறி வாழ்வோரை கௌட பிராமணர் என்பதும் தெற்கில் குடியேறியவரைத் திராவிட பிராமணர் என்பதும் வழக்கம்.

**திராவிடம்** *tirāviḍam,* பெ.(n.) 1. தமிழ், தமிழ்நாடு; Tamil, the Tamil country. 2. தமிழ்நாடு (திராவிடம்), ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம் என்று ஐந்து (பஞ்ச) திராவிட மாநிலங்கள்; south india, south of vindhya, including the five provinces, *tirāviḍam, āntiram, kaṉṉaḍam, makārāṭṭiram*and *kūrccaram.* 3. தமிழ் மொழி; the Tamil language. *"திராவிடத்திலே வந்ததா விவகரிப்பேன்" (தாயு.சித்தர்.10).* 4. தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய தென் திராவிட மொழிகளும் மற்றும் வட திராவிட மொழிகளும்; vernacular tongues of the inhabitants of S.India, Tamil, Telugu, Kanarese, Malayalam, *Tuḷu,* etc. and languages of Dravidian family spoken in central and North India.

*[த. தமிழம் > Skt. drāviḍa > த. திராவிடம்.]*

**திராவிடவேதம்** *tirāviḍa-vētam,* பெ.(n.) **தமிழ்வேதம்** பார்க்க ; see *tamiḻvēdam.*

*[Skt. drāviḍa+vēda > த. திராவிடவேதம்.]*

**திரி** *tiri,* பெ.(n.) பெண்; woman (யாழ்.அக.).

*[Skt. stri > த. திரி.]*

**திரிகம்** *tirigam,* பெ.(n.) 1. முதுகெலும்புக்குக் கீழுள்ள முச்சந்தி; the sacral region. 2. இரண்டு காரை எலும்புகளும் மார்பு எலும்போடு கூடியது; the meeting of the two clavicles with the breast bone. 3. மூன்று கூடியது; that which constitutes three (சா.அக.).

**திரிகர்த்தம்** *tiri-karttam,* பெ.(n.) ஐம்பத்தாறு நாடுகளுள் வடக்கில் லூதியானா, பாதியாலா பகுதிகளையும், தெற்கில் பாலைவனப் பகுதியையும் கொண்டதும், சத்லட்சு சரசுவதி ஆறுகளுக்கு இடையிலுள்ளதுமான நாடு (பாரத.இராச.51); An arid country between the sutlej and the sarasvati rivers, containing Ludhiana and Patiala on the north and some portion of the desert on the south, one of 56 *tēcam.*

*[Skt. trigarta > த. திரிகர்த்தம்.]*

**திரிகரணசுத்தி** *tirigaraṇa-sutti,* பெ.(n.) மனம், மொழி, மெய்த்தூய்மை; purety or chasteness in thought, word and deed (சா.அக.).

**திரிகரணம்** *tiri-karaṇam,* பெ.(n.) மனம், சொல், காயம் என்ற மூன்று கருவிகள்; the three organs, viz., *maṉam, vākku, kayam* (குமர.பிர.கந்தர்.9).

*[Skt. tri-karaṇa > த. திரிகரணம்.]*

**திரிகாண்டம்** *tirikāṇḍam,* பெ.(n.) கொங் கணவர் செய்த மூன்று காண்ட மடங்கிய ஓர்

ஊதை காவியம்; the three chapters on alchemy compiled by a great siddha named *Konganavar.* (சா.அக.).

**திரிகாலஞானம்** *tiri-kāla-ñāṉam,* பெ.(n.) முக்காலவுணர்ச்சி (சிலப்.10, 167, அரும்.); knowledge of the part, the present and the future.

*[Skt. tri-kāla-ñāṉam > த. திரிகாலஞானம்.]*

**திரிகாலம்** *tiri-kālam,* பெ.(n.) 1. காலை, உச்சி, மாலை என்று முப்பகுதி நாட்காலம்; the three parts of the day, viz.., *kālai, ucci, mālai* (S.I.I.i, 78). 2. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற முக்காலங்கள் (Gram.); time, of three kinds, viz., *irappu, nikaḻvu, etirvu.*

*[Skt. tri- > த. திரி + காலம்.]*

**திரிகாயம்** *tirigāyam,* பெ.(n.) பெருங்காயம், மிளகு, பூண்டு என மூன்று வகைக் காயப் பொருள்;the three alternatives prescribed for parturition or child birth-*asafoetida, black pepper and garlic* (சா.அக.).

**திரிகாரசிகம்** *tirigārašigam,* பெ.(n.) மூன்று துவர்ப்பு பொருள்கள், சுக்கு, அதிவிடயம், கோரை; the three astrigent drugs-dry ginger, atee, and musta (சா.அக.).

**திரிகாரம்** *tirigāram,* பெ.(n.) மூன்று காரம், படிகாரம், வெண்காரம், சவர்க்காரம்; the three karams viz., alum, borax and soap (சா.அக.).

*[Skt. tri > த. திரி + காரம்.]*

**திரிகாலக்கியானம்** *tirikālakkiyāṉam,* பெ.(n.) முக்காலம் உணரும் அறிவு; knowledge of knowing the past, prest and future (சா.அக.).

**திரிகிருதம்** *tirikirudam,* பெ.(n.) மூன்று வகை நெய்ச் சத்து, வெண்ணெய், எண்ணெய், கொழுப்பு; the three kinds of oleum-clarified butter, gingelly oil and curd (சா.அக.).

**திரிகினம்** *tirikiṉam,* பெ.(n.) அரைப்பதமான புலாலை (மாமிசத்தை) உட்கொள்வதால் உடலில் உண்டாகும் நுண்ணுயிர் (கிருமி) வகை; nematoid worm produced from eating meat insuffienciетly cooked,. *Trichina Spiralis.*

*[E. trichina > த. திரிகினம்.]*

**திரிகுணசல்** *tiriguṇašal,* பெ.(n.) தாளகம், செம்மஞ்சுள்ளி, கெந்தி ஆக மூன்று பொருள் களையும் கொண்டது. இது சத்திநாதப் பொருள்களைச் சேர்ந்த இனம்; a compound of three drugs viz., orpiment, red arsenic and sulphur (சா.அக.).

**திரிகுணம்** *tiri-guṇam,* பெ.(n.) அன்பு, வெகுளி, மயக்கம் (சத்துவம், இராசதம், தாமதம்) என்று மூவகைக் குணங்கள்; the three fundamental qualities, viz., *cattuvam, irācatam, tāmatam.*

*[Skt. tri> த. திரி + குணம்.]*

**திரிகூடம்** *tiri-kūḍam,* பெ.(n.) 1. ஒரு மலை; a sacred mountain. *"திரிகூடமென்னுந் துங்க வெங்கிரியின்" (இரகு.திக்.224).* 2. திருக் குற்றால மலை (மூன்று சிகரங்களை யுடையது) (குற்றால.தல.);

*[Skt. tri > த. திரி + கூடம்.]*

**திரிகோணம்** *tirigōṇam,* பெ.(n.) 1. முக் கோணம்; triangle. 2. பெண்குறி; female genital (சா.அக.).

*[Skt. tri > த. திரி + கோணம்.]*

**திரிகோணவுப்பு** *tirigōṇa-v-uppu,* பெ.(n.) ஒரு வகை உப்பு (சத்தியுப்பு); a kind of salt (சா.அக.).

**திரிச்சிரமம்** *tiri-c-ciramam,* பெ.(n.) முக்கால வழிபாடு; daily prayer in the morning, noon and evening.

*[Skt. tri+srama > த. திரிச்சிரமம்.]*

**திரிசரம்** *tiri-šaram,* பெ.(n.) மூன்று கொத்துக் களுடைய மாலை; three stringed necklace. *"திரிசரம் பஞ்சசரம் ஸப்தசரம் என்றாப்போல*

*சொல்லுகிற... முத்து வடங்களையும்" (திவ்.அமலனாதி.10, வ்யா.பக்.10).*

*[Skt. tri-sara > த. திரிசரம்.]*

**திரிசரேணு** *tirišarēṇu,* பெ.(n.) காணக்கூடிய நிறையளவில் மிக நுண்ணியதெனக் கருதப் படுவதும் சாளரவாசலில் சூரிய கிரணத் திற்றோன்றும் துகள் வடிவானதும் ஆகிய அணு (சிவதரு.கோபுரவி.3, உரை); Mote or dust moving in a sunbeam, considered as an ideal weight of the lowest denomination.

*[Skt. trasa-rēṇu > த. திரிசரேணு.]*

**திரிசாகபத்திரம்** *tirišāga-pattiram,* பெ.(n.) வில்வம்; Indian bael (சங்.அக.).

*[Skt. tri-šākha-patra > த. திரிசாகபத்திரம்.]*

**திரிசிகி** *tirišigi,* பெ.(n.) நூற்றெட்டுபநிட தங்களுள் ஒன்று; an upanisad, one of 108.

*[Skt. tri-šikhī > த. திரிசிகி.]*

**திரிசிகை** *tiri-šigai,* பெ.(n.) சூலம்; trident. *"திரிசிகையுங்கையும் வாளும்" (சிவதரு. கோபு.111).*

*[Skt. tri-sigai > த. திரிசிகை.]*

**திரிசிரபுரம்** *tirišira-puram,* பெ.(n.) **திருச்சிராப் பள்ளி**; *Tirucciräppalli.*

*[Skt. trišira+puram > த. திரிசிரபுரம்.]*

**திரிசியம்** *tirišiyam,* பெ.(n.) மாயாகாரியமான சடப்பொருள் (வேதா.சூ.25); matter, as an object of perception.

*[Skt. dršya > த. திரிசியம்.]*

**திரிசியை** *tirišiyai,* பெ.(n.) ஓர் கணிதக்கோடு; (lit.) sine of three or $90^0$ radius (சா.அக.).

**திரிசிரசாதி** *tiricira-šādi,* பெ.(n.) தாளத்துக் குரிய சாதி ஐந்தனுள் மூன்று அட்சர காலங் கொண்ட பிரிவு (பாரத.தாள.47, உரை); (Mus.) a sub-division of time-measure consisting of three *aksara-kālam*, one of five *cāti*, q.v.

*[Skt. tryasra+cati > த. திரிசிரசாதி.]*

**திரிசூலம்** *tiri-šūlam,* பெ.(n.) முத்தலைச்சூலம்; trident. *"தண்டாயுதமுந் திரிசூலமும் விழத்தாக்கி" (கந்தரல.25).*

*[Skt. tri-šūla > த. திரிசூலம்.]*



**திரிசூலமுத்திரை** *tiri-šūla-muttirai,* பெ.(n.) கைமுத்திரை வகை (சைவாநு.பி.20); (*Šaiva.*) a hand-pose.

*[Skt. rtri-šūla+muttirai > த. திரிசூல முத்திரை.]*

**திரிசூலன்** *tiri-šūlaṉ,* பெ.(n.) எமன்; Yama, as having a trident. (திரிசூலமுடையவன்) *"எருமைகடவு கடியகொடிய திரிசூலன்" (திருப்பு.118).*

*[Skt. tri-šūla > த. திரிசூலன்.]*

**திரிதகர்மம்** *tirita-karmam,* பெ.(n.) கண்ணி லிருந்து நீர்வடியும் வரை நாசி நுனியைப் பார்த்துக் கொண்டிருக்கை (யோகஞானா.34); (*Yōga*) gazing at the tip of one's nose till tears gather in the eyes.

*[Skt. dhrta+karmam > த. திரிகர்மம்.]*

**திரிதடம்** *tiritaḍam,* பெ.(n.) உட்காதிலிருக்கும் வளைவுள்ள மூன்று குழல்கள்; the three semi circular or ear vessels, the three long canals of the labrinth (சா.அக.).

**திரிதண்டசன்னியாசி** *tiri-taṇḍa-saṉṉiyāši,* பெ.(n.) முக்கோல் தாங்கும் வைணவத் துறவி;

*vaisnava* ascetic who carries a *tiri-tantam.*

*[Skt. tri-danda+sanni-yāsi > த. திரதண்ட சன்னியாசி.]*

**திரிதண்டம்** *tiri-tandam,* பெ.(n.) வைணவ சன்னியாசிகள் கையில் தாங்கும் முக்கோல்; trident staff carried by *Vaisnava* ascetics.

*[Skt. tri > த. திரி+தண்டம்.]*



**திரிதியை** *tiritiyai,* பெ.(n.) கரும்பக்கம் வெண்பக்கங்களில் (கிருட்டிண சுக்கில பட்சங்களில்) வரும் மூன்றாம் பிறை நிலை; third titi in the bright or the dark fortnight.

*[Skt. tritiyā > த. திரிதியை.]*

**திரிதீர்க்கம்** *tiri-tirkkam,* பெ.(n.) திருமண (கலியாண)ப் பொருத்தம் பத்தனுள் மணமக்கள் நாண் மீன்களின் (நட்சத்திரங் களின்) பொருத்த வகை (விதான.கடிமண.9); a kind of agreement between the naksatras of the bridegroom and bride, one of ten *kaliyāna-p-poruttam.*

*[Skt. stri-dirgha > த. திரிதீர்க்கம்.]*

**திரிதேகம்** *tiridēgam,* பெ.(n.) பருவுடல், நுண்ணுடல் காரண உடல் எனும் மூவுடம்பு, (தூலம், சூக்குமம், காரணம்); the three fold nature of the body viz., physical or material, subtle or abstract (sentient soul) and casual unmaterial soul (சா.அக.).

**திரிதோடசமனம்** *tiridōdaśamanam,* பெ.(n.) தயிர்; curdled milk (சா.அக.).

**திரிதோடசமனி** *tiritōdaśamani,* பெ.(n.) ஊதை, பித்தம், கோழை ஆகிய குணங்களைச் சமன்படுத்தும் மூலிகைகள்; drugs capable of regulating the three humours in the system (சா.அக.).

**திரிதோடசன்னி** *tiritōda-śanni,* பெ.(n.) ஊதை, மஞ்ச, கோழை ஆகிய குற்றத்தினால் உடம்புக்கு ஏற்படும் ஒரு வகை வலிப்பு; a kind of apoplexy attend with its due to the disorder of all the three humours of the body (சா.அக.).

**திரிநாடி** *tiri-nādi,* பெ.(n.) மூன்று வகையான நாடி; the three kinds of pulse to the three humours in the system (சா.அக.).

*[Skt. trit > த. திரி+நாடி.]*

**திரிபங்கம்** *tiri-bangam,* பெ.(n.) முத்திறமாக உடம்பை வளைத்து நிற்கும் நிழல் (பிம்பங்)களின் நிலை; a kind of graceful posture in images with three bendings.

*[Skt. tri-bhanga > த. திரிபங்கம்.]*

**திரிபங்கி** *tiri-bangi,* பெ.(n.) 1. ஒரு செய்யுளாய் நின்றே ஒரு பொருள் பயப்பதன்றி அதுவே மூன்று செய்யுளாய்ப் பிரிந்து முடிந்து வெவ்வேறு பொருள் பயக்கத் தக்கதாகவும் பாடும் சித்திர கவிவகை (தண்டி.95, உரை); a stanza curiously wrought so that it may be divided into three stanzas, each with a different mening, one of *cittira-kavi,* q.v. 2. **திரிபங்கம்** பார்க்க; see *tiribangam.* *"வெள்கிய திரிபங்கியுடன்" (அழகர்கலம்.1).*

**திரிபதகை** *tiri-padagai,* பெ.(n.) கங்கை (திவா.); the ganges. *"இதழி திரிபதகை தலைபொதி சடையர்" (திருவாலவா. கடவுள்.12).*

*[Skt. tri-patha-gā > த. திரிபதகை.]*

**திரிபதாகை** *tiripadāgai,* பெ.(n.) அணிவிரலும் பெரு விரலுங் குஞ்சித்து நிற்ப ஏனை விரல்களை நிமிரநிறுத்தும் இணையாவினைக் கை வகை (சிலப்.3, 18, உரை); gesture with one hand in which the thumb and the ring-finger are bent while the rest are held upright, one of 33 *iṇaivā-viṇai-k-kai.*

*[Skt. tri-patākā > த. திரிபதாகை.]*



**திரிபதார்த்தம்** *tiri-padārttam,* பெ.(n.) கடவுள், உயிர், பற்று (பதி, பசு, பாசம்) என்ற மூவகை நிலைப் பொருள்கள் (சி.சி.8, 27, ஞானப்.); (Saiva) the three eternal verities in the universe, viz., *pati, pašu, pāšam.*

*[Skt. tri-padārtha > த. திரிபதார்த்தம்.]*

**திரிபாத்விபூதிமகாநாராயணம்** *tiripāt-vipūti-makā-nārāyaṇam,* பெ.(n.) நூற்றெட்டுபநிடதங்களுள் ஒன்று; an upanisad, one of 108.

*[Skt. tripād-vibhūti-mahānārāyaṇa > த. திரிபாத்விபூதிமகாநாராயணம்.]*

**திரிபாதம்** *tiripādam,* பெ.(n.) வாலுளுவை யரிசி; intellect tree (சா.அக.).

**திரிபாதி** *tiripādi,* பெ.(n.) சிறுபுள்ளடி; bird's foot-*Hedys arum* (சா.அக.).

**திரிபிடகம்** *tiripiḍagam,* பெ.(n.) சூத்திர பிடகம், வினயபிடகம், அபிதர்மபிடகம் என்ற மூன்று வகைப்பட்ட புத்தத்தோன்றிய (பௌத்தாகம)த் தொகுதி (மணிமே.26, 66, அரும்.); the three collections of Buddhist sacred writings, viz., *Cūttira-pitakam, viṇaya-piṭakam, apitarmapiṭakam.*

*[Skt. tri-piṭaka > த. திரிபிடகம்.]*

**திரிபுண்டரம்** *tiri-puṇḍaram,* பெ.(n.) சைவர் நெற்றியில் திருநீர் அணியும் மூவரி கொண்ட குறி; saivaite mark in three horizontal lines made on the forehead with holy ashes.

*[Skt. tri-puṇḍra > த. திரிபுண்டரம்.]*

**திரிபுரசுந்தரி** *tiripura-šundari,* பெ.(n.) பார்வதி; *pārvati* (அபிரா.).

*[Skt. tri-pura > த. திரிபுரசுந்தரி.]*

**திரிபுரதகனன்** *tiripura-tagaṇaṉ,* பெ.(n.) சிவபெருமான் (திரிபுரத்தை எரித்தவன்); Siva, as the who burnt tiripuram.

*[Skt. tri-pura+tagaṇaṉ > த. திரிபுரதகனன்.]*

**திரிபுரம்** *tiripuram,* பெ.(n.) சிவனால் எரிக்கப் பட்டதாக தொன்மத்தில் (புராணத்தில்) கூறப் படும்,° வானில் உலவிய பொன், வெள்ளி, இரும்புக்கோட்டை நகரங்கள் ; the thre aerial cities of gold, silver and iron burnt by Siva. *திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும்" (இறை.பாயி.).*

*[Skt. tri-pura > த. திரிபுரம்.]*

**திரிபுராதாபினி** *tiripurādāpiṇi,* பெ.(n.) நூற்றெட்டுபநிடதங்களுள் ஒன்று; an upanisad, one of 108.

*[Skt. tripurā-tāpana > த. திரிபுராதாபினி.]*

**திரிபுராதிசெந்தூரம்** *tiripurātisendūram,* பெ.(n.) உடம்பு சூடு குறைவு, செரியாமைக்குக் கொடுக்கும் ஒரு செந்தூரம்; a red coloured oxidised medicine given to cure indigestion, loss of appetite etc. (சா.அக.).

**திரிபுரை** *tiri-purai,* பெ.(n.) 1. பார்வதி; *Pārvati. "திரிபுரை யிங்கு வந்திருந்தால்" (சிவரக. கணபதியு.13).* 2. நூற்றெட்டுப நிடதங்களுள் ஒன்று; an upanisad, one of 108.

*[Skt. tri-purā > த. திரிபுரை.]*

**திரிபுவனசக்கரவர்த்தி** *tiribuvana-cakkaravartti,* பெ.(n.) வடமொழிச் செல்வாக்கால் சோழர்களுக்கு இடைக்காலத்தில் இடப்பட்ட பட்டப்பெயர்; (insc.) a title assumed by the Chola Kings as a result of sanskritisation.

த.வ. மூவுலகக் கோவேந்தன்

*[Skt. tri-bhuvana > த. திரிபுவன சக்கரவர்த்தி]*

**திரிபுவனதிலகம்** *tiribuvana-tilagam,* பெ.(n.) ஒரு பழைய கணித நூல் (கணக்கதி.5, உரை); an ancient mathematical treatise.

*[Skt. tribuvana+tilagam > த. திரிபுவன திலகம்]*

**திரிமதம்** *tirimadam,* பெ.(n.) மூன்று மயக்குமூலி, சடாமாஞ்சி, சித்திர மூலம், வாயு விலங்கம்; the three nalotics valerian root, plumbago, embelia ribes (சா.அக.).

**திரிமதுரம்** *tirimaduram,* பெ.(n.) மூன்று வகை (வித) சுவை பொருட்கள்: தேன், இன்பண்டம் (சர்க்கரை), நெய்; three sweet substances - honey, sugar and ghee (சா.அக.).

**திரிமலம்** *tiri-malam,* பெ.(n.) மும்மலம்; the three impurities of souls. *"திரிமலங்க ளறுத்து" (சி.சி.12, 1).*

*[Skt. tri+malam > த. திரிமலம்.]*

**திரிமழுகம்** *tirimalugam,* பெ.(n.) பால், நெய், தேன்; milk, clarified butter and honey (சா.அக.).

**திரிமனம்** *tirimanam,* பெ.(n.) நினைவு, புத்தி, அறிவு; thoughts, understanding and knowledge (சா.அக.).

**திரிமாத்திரை** *tiri-māttirai,* பெ.(n.) துணைத் தாளம் ஐந்தனுள் ஒன்று (பரத.தாள.3); (Mus.) a variety of time-measure, one of five *upa-tālam*, q.v.

*[Skt. tri > த. திரி + மாத்திரை.]*

**திரிமூர்த்தி** *tirimūrtti,* பெ.(n.) 1. இரும்பு (அயம்), காந்தம், மண்டூரம்; iron, magnet and hydrated oxide of iron. 2. நான்முகன், திருமால், சிவன் இம்மூன்று பெயரும் குறிக்கும் அன்றியும் முறையே காலம், நீர், நெருப்பு இவற்றையும் குறிக்கும்; the three names signify the three qualities. It is also said to refer time water and fire respectively (சா.அக.).

**திரிமூலம்** *tiri-mūlam,* பெ.(n.) திப்பிலி, சித்திரம், கண்டு மூலம் என்ற மூவகை வேர்கள் (சங்.அக.); the three kinds of roots or plants, viz., *tippali, cittiram, kantu-mūlam.*

*[Skt. tri > த. திரி + மூலம்.]*

**திரியங்முகம்** *tiriyan-mugam,* பெ.(n.) கோள் (கிரகங்)களின் குறுக்குப் பார்வை; (Astrol.) transverse aspect, as of planets.

*[Skt. tiryan-mukha > த. திரியங்முகம்.]*

**திரியம்பகம்** *tiriyambagam,* பெ.(n.) சிவன்வில்; śiva's bow. *"சுடர்க்கடவுடன் பல்லிறுத்தவன் வலிக்கமை திரியம்பக மெனும் வில்" (கம்பரா.நட்புக்.7).*

*[Skt. tryambaka > த. திரியம்பகம்.]*

**திரியாகதசுரம்** *tiriyāgadašuram,* பெ.(n.) மூன்று நாளைக்கொரு முறை வரும் காய்ச்சல், முறைக் காய்ச்சல்; fever returning every third day, tertian fever (சா.அக.).

**திரியாயுடம்** *tiriyāyudam,* பெ.(n.) வாணாளை நீடிக்கச் செய்யும் மந்திர வகை; a mantra believed to grant long life. *"பின்னருந் திரயாவுடந் திரியம்பக மனுவால்" (காஞ்சிப்பு. களற்.15).*

*[Skt. tryāyusa > த. திரியாயுடம்.]*

**திரிலவங்கம்** *tirilavangam,* பெ.(n.) சிறு நாகப்பூ, செண்பகப்பூ, கிராம்பு என்ற மூவகை மணப் பண்டம் (சங்.அக.); the three aromatic spices, viz., *cirunāgappū, cenbagappū, kirāmbu.*

*[Skt. tri+lavangam > த. திரிலவங்கம்.]*

**திரிலிங்கம்** *tiriliṅgam,* பெ.(n.) சுண்டுவிரல் மோதிரவிரல் நடுவிரல்களை வளைத்துப் பெருவிரல் நுனியையும் கூட்டி மணிக்கட்டை வளைத்துக் காட்டும் நளினமான கைவகைக் குறிப்பு (பரத.பாவ.36); (*Nāṭya*) hand-pose in which the tips of all the finger except the forefinger are bent and touch one another and the wrist is slightly bent, one of the 23 *kara-laṭcaṇam*, q.v.

*[Skt. strī-liṅga > த. திரிலிங்கம்.]*

**திரிலோகக்கலவை** *tiri-lōga-k-kalavai,* பெ.(n.) மூன்று வகையான மாழை (உலோகம்) பொன், வெள்ளி, செம்பு இவற்றின் கலப்பு; an alloy of gold, silver and copper (சா.அக.).

**திரிவிக்கிரமன்**[1] *tirivikkiramaṉ,* பெ.(n.) 1. ஒரு மருத்துவ நூலாசிரியன்; a medical author. 2. ஒரு மருந்துக் கலப்பு; the name of a mixture (சா.அக.).

**திரிவிக்கிரமன்**[2] *tirivikkiramaṉ,* பெ.(n.) 1. திருமால்; *Viṣṇu*, as one who measured the world in three strides. (மூன்றடியால் உலகமளந்தவன்). *"திரிவிக்கிரமன் செந்தாமரைக் காணம்மான்" (திவ்.திருவாய்.2, 7, 7).* 2. சூரியன் (பிங்.); sun.

*[Skt. tri-vikrama > த. திரிவிக்கிரமன்.]*

**திரிவிருத்தி** *tiri-virutti,* பெ.(n.) கடுக்காய் வகை (பதார்த்த.969); species of chebulic myrobalan.

**திரிவேணிசங்கமம்** *tirivēṇi-šaṅgamam,* பெ.(n.) அலகாபாத்து அருகில் பிரயாகையில் கங்கை, யமுனை, சரசுவதி (அந்தர் வாகினியான) என்னும் மூன்று ஆறுகள் கூடுமிடம் (யாழ்.அக.); confluence of the Ganges with the Jamna and the subterrancan Sarasvati near Allahabad.

*[Skt. tri-vēṇi+caṅkamam > த. திரிவேணி சங்கமம்.]*

**திரீலிங்கம்** *tirī-liṅgam,* பெ.(n.) பெண்பால்; feminine gender (Gram.). *"ஆண்பால் பெண்பால் அலிப்பால் என்னுமிம்மூன்றும் புல்லிங்கம், திரீலிங்கம், நபுஞ்சகலிங்கம் எனவாம்" (பி.வி.44).*

*[Skt. strī-liṅga > த. திரீலிங்கம்.]*

**திருசியம்** *tirušiyam,* பெ.(n.) 1. கண்ணுக்குத் தோன்றுவது; that which is visible anything perceived by the eye. 2. கண்; eye (சா.அக.).

**திருட்டசன்மம்** *tiruṭṭa-šaṉmam,* பெ.(n.) இம்மை; the present birth. *"திருஷ்டஜன்ம போக்கியம்" (சி.சி.4, 40, சிவாக்.).*

*[Skt. drsṭa-janman > த. திருட்டசன்மம்.]*

**திருட்டபோக்கியம்** *tiruṭṭa-pōkkiyam,* பெ.(n.) இம்மையிற்செய்த கருமங்களின் பலனைக் கொள்ளுகை (அனுபவிக்கை) (சி.சி.2, 39, ஞானப்.); effects of actions done in this birth.

*[Skt. drsṭa+bhōgya > த. திருட்டபோக்கியம்.]*

**திருட்டாந்தம்** *tiruṭṭāndam,* பெ.(n.) எடுத்துக் காட்டு (உதாரணம்); example, illustration.

*[Skt. drsṭ-ānta > த. திருட்டாந்தம்.]*

**திருட்டி-த்தல்** *tiruṭṭi-,* 11 செ.குன்றாவி.(v.t.) கண்ணுக்குப் புலனாதல்; to become visible. *"திருட்டித்த வாலமன் மதனொரு பாலிருக்க" (சீதக்.118).*

*[Skt. drsṭi > த. திருட்டி-.]*

**திருட்டி** *tiruṭṭi,* பெ.(n.) 1. கண்; eye. 2. கரு விழியின் நடுவேயுள்ள சிறிய புள்ளி (பிந்து) போன்ற பாகம், பாவை; the aperture in the



middle of the iris, pupil. 3. அறிவு; intellect. 4. பாம்பு; snake. 5. பார்வை; sight. 6. கருவிழியின் மையத் திலுள்ள ஒளி பகுதி; the point of clearest vision at the centre of retina-macula lutea. 7. நஞ்சு; poison. 8. கெட்டப் பார்வை; evil sight. 9. மெய் யறிவால் பார்த்தல்; viewing with mental eye. 10. தினை; millet (சா.அக.).

**திருட்டிக்கழி-த்தல்** *tirutti-k-kali-,* செ.கு.வி. (v.i.) நீக்குவினையால் கண்ணூறு போக்குதல்; to dispel the supposed effects of the evil eye by ceremonial rites.

த.வ. கண்ணேறு கழித்தல்

*[Skt. drsti > த. திருட்டி + கழி-.]*

**திருட்டிக்கழிப்பு** *tirutti-k-kalippu,* பெ.(n.) கெட்ட பார்வையால் நேர்ந்த தீவினையை நீக்குகை; (in magic) a ceremony for removing an ill or evil effect caused by evil eyes (சா.அக.).

**திருட்டிசாத்திரம்** *tirutti-šāttiram,* பெ.(n.) கண்ணின் ஒளியையும் பார்வையையும் பற்றிக் கூறும் நூல்; the science that treats of lights and vision - optics (சா.அக.).

**திருட்டிசுற்று-தல்** *tirutti-šurru-,* செ.கு.வி. (v.i.) கண்ணேறு கழித்தற் பொருட்டுச் சில பண்டங்களைச் சுற்றுதல் (இ.வ.); to wave specified articles round a person, to avert the evil eye.

*[Skt. drsti> த. திருட்டி + சுற்று-.]*

**திருட்டிதோடம்** *tirutti-tōdam,* பெ.(n.) கெட்ட பார்வையாலேற்படும் குற்றம்; evil effects caused by evil eyes (சா.அக.).

த.வ. கண்ணேறு துகடம்

**திருட்டிபரிகாரம்** *tirutti-parigāram,* பெ.(n.) கண்ணேறு பட்டதாலுண்டாந் தீங்கினை நீக்குகை (உ.வ.); averting of the evil eye.

த.வ. கண்ணேறு கழிப்பு

*[Skt. drsti+parikāram > த. திருட்டி பரிகாரம்.]*

**திருட்டிமாவிளக்கு** *tirutti-mā-vilakku,* பெ.(n.) பெண்ணுக்குக் கண்ணேறு நீக்க வினையாகச் சல்லடையில் வைத்துச் சுற்றும் மாவிளக்கு (இ.வ.); small lamps of flour - paste placed on a sieve and waved before a girl in the ceremony of her puberscence with a view to avert the evil eye.

*[Skt. drsti > த. திருட்டி + மா விளக்கு.]*

**திருட்டிவிடம்** *tirutti-vidam,* பெ.(n.) பார்வையால் நஞ்சுமிழும் ஒரு பாம்பு (மணிமேகலை); snake causing poison by mere sight (சா.அக.). *"திருஷ்டிவிஷம் போலே காணில் முடிவன்" (ஈடு, 4, 9, 7).*

*[Skt. drsti+visam > த. திருட்டிவிடம்.]*

**திருட்டிவித்தை** *tirutti-vittai,* பெ.(n.) கண்ணைப் பற்றிய நூல்; science of vision-optics.

**திருணபஞ்சமூலம்** *tiruna-panjamūlam,* பெ.(n.) ஐந்து வகை வேர்க்கூட்டு; நாணல், தர்ப்பை, பரும்பு, நெற்பயிர், வெள்ளறுகு; a group of five roots, consisting that of koosa grass, sugarcane, paddy, white doob (சா.அக.).

**திருணம்**[1] *tirunam,* பெ.(n.) 1. உலர்ந்த புல் (பிங்.); piece of straw. 2. வில் (யாழ்.அக.); bow.

*[Skt. trna > த. திருணம்.]*

**திருணம்**[2] *tirunam,* பெ.(n.) தேள் (யாழ்.அக.); scorpion.

*[Skt. drōna > த. திருணம்.]*

**திருணம்**[3] *tirunam,* பெ.(n.) தேனீ (யாழ்.அக.); bee.

**திருதம்** *tirutam,* பெ.(n.) தாளவகை; a fast - moving time measure (Mus.).

*[Skt. druta > த. திருதம்.]*

**திருதி¹** *tiruti,* பெ.(n.) 1. உறுதி; firmness, boldness. *"இத்தகைய யாவ ததுவென் றிருதியாமால்" (பிரபோத.27, 82).* 2. துணை (சது.); help, assistance. 3. மனநோன்பி ருபத்தேழுனுள் ஒன்று (யோகம்); (Astron.) a division of time one of 27 *yōgam.*

*[Skt. dhrti > த. திருதி.]*

**திருதி²** *tiruti,* பெ.(n.) 1. எரிநீர் (திராவகம்); tincture. 2. ஊட்டம், ஆற்றல் (சத்து); extract.

*[Skt. druti > த. திருதி.]*

**திருதி³** *tiruti,* பெ.(n.) விரைவு (இ.வ.); haste.

*[Skt. druta > த. திருதி.]*

**திருதி⁴** *tiruti,* பெ.(n.) 1. செய் மருந்தைப் பனியில் வைத்து, செயநீரைப் போல் செய்யுமோர் ஆயுள்வேத முறை; (in medicine) an ayurvedic process by which a prepared medicine is exposed to night's dew converting it to a pungent liquid. 2. ஓர் மீன்; a kind of fish. 3. தோல்; skin (சா.அக.).

**திருதிமை** *tirutimai,* பெ.(n.) மனத்திட்பம்; boldness, courage, strength of will. *"திருதிமையா லைவரையுங் காவலேவி" (தேவா.812, 8).*

*[Skt. dhrti+mai > த. திருதிமை.]*

**திருதியை** *tirutiyai,* பெ.(n.) 1. மூன்றாம் நாள் (திதி); the third titi of the bright or dark fortnight. 2. மூன்றாம் வேற்றுமை (பி.வி.6); (Gram.) instrumental case.

*[Skt. trtiyā > த. திருதியை.]*

**திருப்தி** *tirupti,* பெ.(n.) மனநிறைவு; satisfaction.

த.வ. பொந்திகை, தணிவு, நிறைவு

*[Skt. trpti> த. திருப்தி.]*

**திருப்பரம்** *tirupparam,* பெ.(n.) சோறு; cooked rice (சா.அக.).

**திருப்பிரம்** *tiruppiram,* பெ.(n.) நெய்; clarified butter, ghee (சா.அக.).

**திரேக்காணாதிபன்** *tirēkkāṇādipaṉ,* பெ.(n.) குறித்த நாளுக்குரிய உடைமையான வான்கோள்; (குறித்த திரேக்காணத்தின் அதிபதியாகிய கிரகம்); (Astrol.) the planet presiding over a particular *tirēkkāṇam.*

**திரேகம்** *tirēgam,* பெ.(n.) 1. உடல்; body. 2. மூன்று; three (சா.அக.).

**திரேதாக்கினி** *tirētākkiṉi,* பெ.(n.) முத்தீ; the triple at a sacrifice.

*[Skt. trētāgni > த. திரேதாக்கினி.]*

**திரேதாயுகம்** *tirēdā-yugam,* பெ.(n.) நான்கு யுகங்களுள் 1296000 ஆண்டுகள் கொண்ட இரண்டாம் யுகம் (திவ்.திருநெடுந்.வ்யா.3); *trētā* yuga or age, consisting of 1,296,000 solar years, second of four yukam, q.v.

*[Skt. trētā+yuga > த. திரேதாயுகம்.]*

**திரேதை** *tirēdai,* பெ.(n.) **திரேதாயுகம்** பார்க்க; see *tirētāyugam.* *"திரேதைக்கண் வளையுரு வாய்த் திகழ்ந்தான்" (திவ். திருநெடுந்.3).*

**திரைலோக்கியம்** *tirailōkkiyam,* பெ.(n.) 1. மூவுலகம்; the three worlds. *"திரைலோக்கிய சுந்தரன்" (திருவிசைப். கருவூர்த்.5).* 2. பேரழகுள்ளது; that which is very fine, often used ironically. *"அவன் செய்த காரியம் திரைலோக்கியமா யிருக்கிறது" (உ.வ.).*

**திரோதகம்¹** *tirōdagam,* பெ.(n.) மறைத்தலைச் செய்வது; that which causes obscurity. *"அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொடுநிற்றலான்" (சி.போ.பா.4, 2).*

*[Skt. tirōdhaka > த. திரோதகம்.]*

**திரோதகம்²** *tirōtagam,* பெ.(n.) மறைத் தலைச் செய்வது; that which causes

obscurity. "அதுதான் ஞான திரோதமாய் மறைத்துக் கொடுநிற்றலான்" (சி.போ.பா.4, 2).

*[Skt. tirōdhaka > த. திரோதகம்.]*

**திரோதம்** *tirōdam,* பெ.(n.) 1. மறைக்கை; concealment, obscuration. "இருட்டி ரோதம் புரிந்தாங்கு" (திருப்போ. சந்.மாலை. 69). 2. **திரோதானசத்தி** பார்க்க; see *tirōtāṉa-satti* (சிவப்பிர.உண்மை.42).

*[Skt. tirōdha > த. திரோதம்.]*

**திரோபவம்** *tirōbavam,* பெ.(n.) 1. ஐந்து கிருத்தியங்களுள் ஒன்றாய் ஆவிஉரு தன் கன்மம் முடியும் வரையில் உலகானுபவங்களில் உழன்று மயங்கும்படி உண்மையை மறைத் தலைச் செய்யும் சிவபெருமானது அருட் செயல்; (Šaiva.) function of veiling or darkening, designed to keep the souls engrossed in the experiences of the world until their karma is completely worked out, one of *pañca-kiruttiyam.* 2. மறைகை; vanishing, dis-appearance. "செவ்வருட் குறியி லீசன்றிரோபவஞ் செய்தான்" (சேதுபு. சங்கரபா.102).

*[Skt. tirō-bhava > த. திரோபவம்.]*

**திரௌபதி** *traupadi,* பெ.(n.) பாண்டவர் ஐவரின் மனைவி (துருபதனுடைய மகள்); the wife of the five *Pāṇḍava* brothers, as daughter of Drupada, king of *Pāñcāla* country. "திரௌபதி மாலையிட்ட சருக்கம்" (பாரத.).

**தில்பசந்து** *til-pašandu,* பெ.(n.) ஒருயர்ந்த ஒட்டு மாம்பழ வகை (G.Sm.D.I. i, 235); a kind of superior mango.

*[U. dilpasand > த. தில்பசந்து.]*

**திலகம்** *tilagam,* பெ.(n.) 1. நெற்றிப்பொட்டு; a small circular mark on forehead. "திலகந்தொடும்... திருநுதல்" (நற்.62). 2. சிறந்தது; that which is excellent, eminent. "திலக நீண்முடித் தோடு" (சீவக.246).



**திலகை** *tilagai,* பெ.(n.) எள்ளுப்போற் கருநிறமுள்ள மான்மத (கத்தூரி) வகை (பதார்த்த.1081); musk, black like sesame, one of five kinds of *kastūri.*

*[Skt. tilakā > த. திலகை.]*

**திலதக்கலித்துறை** *tilada-k-kalitturai,* பெ.(n.) கட்டளைக் கலித்துறை வகை (தஞ்சைவா.1, உரை); a kind of *kaṭṭaḷai-k-kalitturai* verse.

*[Skt. tilaka+kalitturai > த. திலதக்கலித் துறை]*

**திலதண்டுலம்** *tila-taṇḍulam,* பெ.(n.) 1. எள்ளுடன் கலந்த அரிசி; mixture of sesame and rice. 2. சுரத காலத்துப் புரியும் எண் வகையாலிங்கனத்துள் ஒன்று (கொக்கோ.5,43); a mode of sexual embrace, one of *eṇ-vakai-y-āliṅkaṉam.*

*[Skt. tila+'aṇṭulam > த. திலதண்டுலம்.]*

**திலதண்டுலகம்** *tilataṇḍulagam,* பெ.(n.) அரிசியும் எள்ளும் கலந்தது போல் நாயகியும் நாயகனும் ஒருவரை ஒருவர் தழுவுதல்; fixed embrace in which both man and woman lie face to face and embrace so closely like a mixture of rice and sesamum seeds tha the arms and thighs of one are encircled by those of the other (சா.அக.).

**திலதம்** *tiladam,* பெ.(n.) **திலகம்** பார்க்க; see *tilagam.* "தெரிமுத்தஞ் சேர்ந்த திலதம்" (கலித்.92).

*[Skt. tilaka > த. திலதம்.]*

**திலதமிடல்** *tiladamiḍal,* பெ.(n.) பொட்டிடல், சந்தனம் அல்லது மந்திர மை; wearing dot

between eye brows as sandal paste or magic paint (சா.அக.).

**திலதர்ப்பணம்** *tila-tarppaṇam,* பெ.(n.) மூதாதையர் பொருட்டு எள்ளுந் தண்ணீரும் கலந்திறைக்கும் நீர்க்கடன்; libations of sesame and water offered to the manes.

*[Skt. tila+tarppaṇam > த. திலதர்ப்பணம்.]*

**திலதவசீகரம்** *tilata-vaśikaram,* பெ.(n.) மாயவித்தையால் விரும்பியவர்களை வசப் படுத்திக் கொள்ளுகை; power of fascinating persons by wearing a magic tilka on one's forehead (குற்றா.குற.116, 2.).

*[Skt. tilaka+tarppaṇam > த. திலத வசீகரம்.]*

**திலதைலம்** *tila-tailam,* பெ.(n.) நல் லெண்ணெய்; gingelly oil.

*[Skt. tila+tailam > த. திலதைலம்.]*

**திலப்பொறி** *tila-p-poṟi,* பெ.(n.) எள்ளிட் டாட்டும் செக்கு; oil press. *"திலப்பொறி யிலிட்டனர் திரிப்பவும்" (யசோதா.5, 33).*

*[Skt. tilapoṟi > த. திலப்பொறி.]*



**திலம்** *tilam,* பெ.(n.) எள்ளு (பிங்.); sesamum indicum.

*[த. நுல்(எள்)–தில் > Skt. tila > த. திலம்.]*

**திலுப்புலு** *tilu-p-pulu,* பெ.(n.) முப்பது என்றதனைக் குறிக்கும் குழூஉக்குறி; (J.) thrity, a slang term.

*[Skt. tri+p+pulu> த. திலுப்புலு.]*

**திலோதகம்** *tilōdagam,* பெ.(n.) எள்ளும், நீரும், இது நீர்ப்படையலுக்காக உதவுவது; a symbolical combination of gingelly seed and water used in ceremony for the dead or of ones forefathers who are no more (சா.அக.).

**திவ்விய** *tivviya,* வி.எ.(adj.) இனிய; sweet. *"தேன்றரு மாரிபோன்று திவ்விய கிளவி தம்மால்" (சீவக.581).*

*[Skt. tiviya > த. திவ்விய.]*

**திவ்வியதொனி** *tivviya-doṉi,* பெ.(n.) தேவர்கள் அருகக் கடவுள் முன்பு செய்யும் ஆரவாரத்தொனி (சீவக.3013, உரை); (Jaina.) shouts of celestials in the presence of Arhat.

*[Skt. divya+toṉi > த. திவ்வியத்தொனி.]*

**திவ்வியதேசம்** *tivviya-tēšam,* பெ.(n.) ஆழ்வார்களாற் பாடப்பட்ட திருப்பதிகள்; *(Vaiṣṇ.) Visṇu* shrines sung by *Aḻvārs.*

*[Skt. divya+tēcam > த. திவ்வியதேசம்.]*

**திவ்வியநாமசங்கீர்த்தனம்** *tivviya-nāma-šaṅgirttaṉam,* பெ.(n.) பாடகர் பலர் விளக்கைச் சுற்றி நடனம் செய்து கடவுளின் திருப்பெயர்(நாமங்)களைச் சொல்லிப் புகழ்ந்து பாடுகை; praising and singing a god's name while dancing around a lamp placed in the middle of a hall.

*[Skt. divya+nāma+caṅkirttaṉam> த. திவ்வியநாமசங்கீர்த்தனம்]*

**திவ்வியநானம்** *tivviya-nāṉam,* பெ.(n.) நீராடல் ஏழனுள் வெய்யில் காயும்பொழுது பெய்யும் மழையில் செய்யும் நீராடல் (வின்.); bathing in the rain during sunshine, one of seven *snāṉam.*

*[Skt. divya+snāṉam > த. திவ்விய ஸ்நானம்.]*

**திவ்வியப்பிரபந்தம்** *tivviya-p-pirapandam,* பெ.(n.) ஆழ்வார் பன்னிருவரும் அருளிச் செய்ததும் நாலாயிரஞ் செய்யுள் கொண்டது மான தொகுதி; collection of 4000 stanzas composed by 12 *vaisṇava* saints.

த.வ. தும்யபெரும்பனுவல்

*[Skt. divya+p+pirapantam > த. திவ்வியப் பிரபந்தம்.]*

**திவ்வியம்** *tivviyam,* பெ.(n.) 1. தெய்வத் தன்மையுள்ளது; divinity, anything celestial or god-like. 2. மேலானது (உ.வ.); that which is excellent, supreme. 3. சந்தனவகை (யாழ்.அக.); a kind of sandal.

த.வ. துய்யம், தேவிகம்

*[Skt. divya > த. திவ்வியம்.]*

**திவ்வியமணி** *tivviya-maṇi,* பெ.(n.) மேளகர்த்தாக்களுளொன்று (சங்.சந்.47); (Mus.) a primary *rāga.*

*[Skt. divya > த. திவ்விய+மணி.]*

**திவ்வியமுத்திரை** *tivviya-muttirai,* பெ.(n.) கட்டை விரலும் மோதிரவிரலுஞ் சேர்ந்த முத்திரை (செந்.10, 426); a finger-pose in



which, the ring-finger and the thumb are joined.

*[Skt. divya > த. திவ்விய+முத்திரை.]*

**திவ்வியவராடி** *tivviya-varāḍi,* பெ.(n.) குறிஞ்சிப்பண் வகை (பிங்.); a melody type of the *kuriñji* class (Mus.).

*[Skt. divya+varāti > த. திவ்வியவராடி.]*

**திவ்வியவுணவு** *tivviyavuṇavu,* பெ.(n.) நேர்த்தியான உணவு; delicious food (சா.அக.).

த.வ. தூய உணவு

*[Skt. divya > த. திவ்வியம் + உணவு.]*

**திவ்வியாகந்தம்** *tivviyāgandam,* பெ.(n.) பேரேலம்; large cardamom (சா.அக.).

**திவ்வியாசாரம்** *tivviyāšāram,* பெ.(n.) குங்குலியம்; Indian dammer shorca robusta.

**திவ்வியாஞ்சனம்** *tivviyāñjaṇam,* பெ.(n.) நளிரி நீர் காய்ச்சல்களுக்கு ஆயுள்வேத முறையில் உருவாக்கிய கண்ணிற்கிடும் கலிங்கம்; an eye salve prepared as per ayurvedic process to be used in delirious fever (சா.அக.).

**திவ்வியாத்திரம்** *tivviyāttiram,* பெ.(n.) தெய்வப்படைக்கருவிகள்; weapons. *"திவ்வியாத்திர மோட்டியே" (வரத.பாகவத. நாரசிங்க.157).*

*[Skt. divya+yāttiram > த. திவ்வியாத்திரம்.]*

**திவ்வியாபரணம்** *tivviyābaraṇam,* பெ.(n.) அரசர் முதலியோர் அணியும் சிறந்த அணிகலன் (வின்.); superior ornaments worn by a sacred or royal personage.

*[Skt. divya+paraṇam > த. திவ்வியா பரணம்.]*

**திவசம்** *tivašam,* பெ.(n.) 1. பகல்; day time (பிங்.). 2. நாள்; day. *"இத்திவசத்தின் முடித்தும்" (கம்பரா.நாகபா.171).* 3. இறந்த நாட்கடன்; anniversary commemorative of a person's death. *"எத்திவசமும் புசித்திவ் வுலகை வஞ்சிக்குந் திருடர்" (பிரபோத.11, 5).*

*[Skt. divasa > த. திவசம்.]*

**திவம்** *tivam,* பெ.(n.) 1. பரமபதம்; heaven. *"திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி" (திவ்.திருவாய்.10, 3, 10).* 2. வானம்; sky (யாழ்.அக.).

*[Skt. div > த. திவம்.]*

**திவாணம்** *tivāṇam,* பெ.(n.) 1. முகம்மதிய அரசாங்கம்; Muhammadan government. *"காலந் திவாணமான தினாலே" (திருப்பணி.*

*மதுரைத்த.10).* 2. கோயில் வருவாயிலிருந்து செய்யப்படுஞ் செலவு; expenditure from temple funds. *'அது திவாணத்து உத்ஸவம்'.*

*[U. divāni > த. திவாணம்.]*

**திவாந்தகாலம்** *tivānda-kālam,* பெ.(n.) மாலை; evening. *"தினகரன் றிவாந்த காலத்திற் சேர்த்திய வினவொளி" (இரகு. திக்கு.1).*

*[Skt. divā+anta > த. திவாந்த+காலம்.]*

**திவாராத்திரி** *tivārāttiri,* பெ.(n.) பகலுமிரவும் (யாழ்.அக.); day and night.

*[Skt. divā+rāttiri > த. திவாராத்திரி.]*

**திவால்** *tivāl,* பெ.(n.) கடனிறுக்கச் ஆற்றலற்ற (சத்தியற்ற) நொடிவுநிலை; bankruptcy, insolvency. **த.வ. நொடிவு**

*[U. divālā > த. திவால்.]*

**திவாலர்சி** *tivāl-arši,* பெ.(n.) நொடிவாளர் மனு (Mod.); petition in bankruptcy, insolvency petition.

*[U. divālā+arzi > த. திவாலர்சி.]*

**திவாலா** *tivālā,* பெ.(n.) **திவால்** பார்க்க; see *tivāl.*

**திவாலெடு-த்தல்** *tivāl-edu-,* செ.கு.வி.(v.i.) நொடிந்தவராதல் (C.G.); to become a bankrupt; to seek the benefit of the insolvency act.

*[U. divālā+ > த. திவாலா+எடு-.]*

**திவான்** *tivān,* பெ.(n.) 1. முதல் அமைச்சர்; Prime Minister, chief officer of a native state. 2. அரசிறை யதிகாரி; head officer of the revenue or financial department (R.F.).

*[U. diwān > த. திவான்.]*

**திவான்பகதூர்** *tivān-bagadūr,* பெ.(n.) அரசாங்கத்தார் வழங்கும் ஒரு பட்டப் பெயர் (இக்.வ.); dewan bahadur, a title conferred by Government.

*[U. diwān + bahadur > த. திவான்பகதூர்.]*

**திவானி** *tivāṉi,* பெ.(n.) முறை (நீதி)மன்றம் (நியாயஸ்தலம்) (வின்.); place of justice.

**திவி** *tivi,* பெ.(n.) மேல் உலகம்; Indra's heaven. *"தரையொடு தவிதல நலிதரு" (தேவா.568, 2).*

*[Skt. divi > த. திவி.]*

**திவிகண்டம்** *tiviganḍam,* பெ.(n.) ஓர் வகை செம் மஞ்சுள்ளி, இது சிறிது சிவப்பாகவும் பச்சையாகவும் கனமுள்ளதாகவும் இருக்கும்; impure trisulphate of arsenic little red and green in colour and heavy (சா.அக.).

**திவிதிராட்சம்** *tivi-tirāṭcam,* பெ.(n.) கொடி முந்திரிகை (மலை.); common grape vine.

*[Skt. divya+drāksā > த. திவிதிராட்சம்.]*

**திற்றி** *tiṟṟi,* பெ.(n.) இறைச்சி; meat (சா.அக.).

**திறாங்கு** *tiṟāṅgu,* பெ.(n.) கதவடை தாழ் (j.); bolt.

*[Fr. triangle > த. திறாங்கு.]*

**திறாம்** *tiṟām,* பெ.(n.) 1. அறுபது துளிகொண்ட ஒரு நீரளவு; fluid dram = 60 drops. 2. ஒரு நிறுத்தலளவை; dram in apothecaries weight = 5/16 tola.

*[E. drām > த. திறாம்.]*

**திறாவல்** *tiṟāval,* பெ.(n.) கலிமி பாய் மரத்துக்குப் பிற்பக்கமாய்க் கோசுபறுவான் பூம் என்ற உத்திரத்தில் விரிக்கப்படும் பாய் (M.Navi.251); spanker.

**தினக்காய்ச்சல்** *tiṉa-k-kāyccal,* பெ.(n.) 1. விடாத காய்ச்சல்; hectic fever occuring daily. 2. அன்றாடம் வரும் காய்ச்சல்; a fever whose paroxysms every day - Quotidian fever (சா.அக.).

**த.வ. நாட்காய்ச்சல்**

**தினக்கிரமவலங்காரம்** *tiṉa-k-kirama-v-alaṅgāram,* பெ.(n.) தேரையர் செய்தவோர் தமிழ் மருத்துவ நூல்; a treatise in medicine in daily practice compiled by Teraiyar in Tamil (சா.அக.).

**தினகரன்** *tiṉa-garaṉ,* பெ.(n.) சூரியன் (பிங்.) (பகலைச் செய்வோன்); sun, as maker of the day. *"தினகரனை யனைய" (கம்பரா. மூலபல. 163).*

*[Skt. dina-kara > த. தினகரன்.]*



**தினகவி** *tiṉa-kavi,* பெ.(n.) 1. அரசன் திருவோலக்க மண்டபத்தில் உட்காரும் போதும் எழுந்திருக்கும் போதும் பாடும் பாட்டு; poem in praise of a king at the beginning and close of his durbar. 2. நாட்கவி பாடுவோன்; poet who composes *tiṉa-kavi.*

*[Skt. dina+kavi > த. தினகவி.]*

**தினசரி** *tiṉa-šari,* பெ.(n.) 1. நாட்செயல்; daily occupation, daily routine of business. 2. நாட்குறிப்பு (வி.எ.); account or journal of the day, diary. 3. **தினந்தோறும்** பார்க்க; see *tiṉandōṟum. "அவன் தினசரி வருகிறான்".*

*[Skt. dina+caryā > த. தினசரி.]*

**தினசரிதக்காரன்** *tiṉa-šarita-k-kāraṉ,* பெ.(n.) நாட்குறிப்பு எழுதுவோன் (பணவிடு.20); diarist.

*[Skt. dina+saritam+kāran > த. தினசரிதக்காரன்.]*

**தினசரிபத்திரிகை** *tiṉašari-pattirigai,* பெ.(n.) நாளேடு; daily newspaper.

த.வ. நாளேடு

*[Skt. dina+caryā+pattirikai > த. தினசரி பத்திரிகை.]*

**தினசேடம்** *tiṉa-šēḍam,* பெ.(n.) ஆண்டு எச்சத்திற்கும் (சேசத்திற்கும்) கோள்சுற்றில் குறைந்த நாட்களுக்கும் உள்ள வேறுபாடு (வின்.); (Astron.) difference between the *varuṭa-cēsam* and the next less number of days in Parivirutti tables.

*[Skt. dina+sēsam > த. தினசேடம்.]*

**தினத்திரயம்** *tiṉa-t-tirayam,* பெ.(n.) மூன்று விண்மீன்கள் வரும் நாள் (விதான. குணாகுண.109); day when three naksatras are in conjunction with the moon.

*[Skt. dina+traya > த. தினத்திரயம்.]*

**தினந்தோறும்** *tiṉan-dōṟum,* பெ.(n.) ஒவ்வொரு நாளும்; daily. *"தினந்தோறு முள்ளுருகிச் சீர்பாடு மன்பர்" (அருட்பா.ii, நெஞ்சுறு.18).*

த.வ. நாள்தோறும்

*[Skt. dinam > த. தினம்+தோறும்.]*

**தினநாதன்** *tiṉa-nādaṉ,* பெ.(n.) ஞாயிறு (சூரியன்); sun, as lord of the day. (நாளுக்குத் தலைவன்). *தினநாதன் றனயர் தம்பால்" (பாரத.திரௌ. 86).*

*[Skt. dina+nātha> த. தினநாதன்.]*

**தினப்படி** *tiṉappaḍi,* பெ.(n.) 1. நாட்படித்தரம்; daily allowance. 2. **தினந்தோறும்** பார்க்க; see *tiṉantōṟum.*

*[Skt. dina > த. தினம்+படி.]*

**தினப்பிரமாணம்** *tiṉa-p-piramāṇam,* பெ.(n.) கோளின் பணி தொடக்கத்திலிருந்து இறுதிவரையில் அளவிடும் நாட்பொழுது; (Astron.) time measured from the rising of a planet to its setting.

*[Skt. dina+piramāṇam > த. தினப் பிரமாணம்.]*

**தினப்பிரளயம்** *tiṉa-p-piraḷayam,* பெ.(n.) நான்முகனது வாணாளில் ஒருநாளின் முடிவில் உண்டாகும் ஊழிக்காலம் (வின்.); cosmic dissolution at the close of each aeon, as ending one day of Brahma.

*[Skt. dina+piralayam > த. தினப்பிரளயம்.]*

**தினப்பொருத்தம்** *tiṉa-p-poruttam,* பெ.(n.) விண்மீன்கள் பொருத்தம் (விதான.கடிமண.5); (Astrol.) a correspondence between the naksatras of the prospective bride and bridegroom.

*[Skt. dina+ > த. தினம் + பொருத்தம்]*

**தினபலன்** *tiṉa-palaṉ,* பெ.(n.) ஒரு நாளின் பிறை நிலை (திதி) வாரங்களின் சங்கியை களுடன் வாழ்நாள் விண்மீன் முதல் அந்நாளின் விண்மீன் வரை எண்ணி வந்த தொகையைக் கூட்டி வருந்தொகையை ஒன்பதால் வகுத்து வந்த மிச்சத்தால் அறியும் நற்பலன் (பெரிய வரு.204); (Astrol.) the advantage or disadvantage of a day to a person, deduced from the remainder got by dividing by ning the sum of its number counted from the first day of the week and that of its titi counted from the first titi and that of its naksatra counted from his *caṉma-naṭcattiram.*

*[Skt. dina+palaṉ > த. தினபலன்.]*

**தினம்** *tiṉam,* பெ.(n.) 1. நாள் (பிங்.); day of 24 hours. 2. பகல் (பிங்.); day time. 3. விண்மீன்; constellation. *"சித்திரைத் தினத்து" (திருவாலவா.1, 33).* 2. **தினந் தோறும்** பார்க்க; see *tiṉandōṟum. "தினம் வந்து கொண்டிருந்தான்".*

*[Skt. dina > த. தினம்.]*

**தினமணி** *tiṉa-maṇi,* பெ.(n.) சூரியன்; sun. *"தினமணி யெனப்படும்... கெழுமணி" (சிவப்.பிர.பெரியநா.1).*

*[Skt. dina+maṇi> த. தினமணி.]*

**தினமானம்** *tiṉa-māṉam,* பெ.(n.) 1. கலி ஆண்டு தொடங்கிக் கணித்த நாள் எண்ணிக்கை; (Astron.) number of days that elapsed from the beginning of the *kali-yuga.* 2. **தினந்தோறும்** பார்க்க; see *tiṉantōṟum.*

*[Skt. dina > த. தினம்+மானம்.]*

**தினமிருத்து** *tiṉamiruttu,* பெ.(n.) அத்தம் அவிட்டங்களின் முதற்கால், விசாகம் திருவாதிரைகளில் இரண்டாங்கால், ஆயிலியம் உத்திரட்டாதிகளின் மூன்றாங் கால், பரணி மூலங்களின் நாலாங்கால் என்ற கெடுங் கால வகை (விதான.குணாகுண.20); (Astrol.) first quarter of the period when the moon is in conjunction with attam and *aviṭṭam,* the second quarter of that when she is in conjunction with *vicākam* and *tiruvātirai,* the third quarter of that when she is in conjunction with *āyiliam* and *uttiraṭṭati,* and the fourth quarter of that when she is in conjunction with parani and *mūlam,* considered in auspicious.

*[Skt. dina+miruttu > த. தினமிருத்து.]*

**தினிகை** *tiṉigai,* பெ.(n.) நாட்கூலி (யாழ்.அக.); daily wage.

*[Skt. dini+kai > த. தினிகை.]*

**தினிசு** *tiṉišu,* பெ.(n.) பொருளின் தரம் (தைலவ.தைல.22); kind, sort, grade.

*[U. jinis > த. தினிசு.]*

**தினுசு** *tiṉušu,* பெ.(n.) **தினிசு** பார்க்க; see *tiṉišu.*

*[U. jinis > த. தினுசு.]*

**தீ** *ti,* பெ.(n.) சூழ்ச்சி (உபாயம்) வழி; (யாழ்.அக.), way, means of escape.

*[Skt.dhī > த. தீ]*

**தீக்கதி** *ti-k-kati,* பெ.(n.) 1. அளறு (நரகம்); hell, as a world of evil, "தினையேனும் தீக்கதிக்கட் செயலாளர்" (திவ்.இயற்.1,65). 2. கொடிய விதி; evil fate.

*[Skt.dhī+kāti > த. தீக்கதி]*

**தீக்கை** *dīkkai,* பெ.(n.) தீட்சை பார்க்க; see *tītcai.* "இஃது இருவர் தீக்கையுங் கூறிற்று" (சீவக. 2634, உரை)

த.வ. நோன்புறுதி

*[Skt.dīkṣā > த. தீக்கை]*

**தீட்சணம்** *tītcaṇam* பெ.(n.) 1. கடுமை (உக்கிரம்); fiercemess. "தீட்சணமான வெயில்" 2. உறைப்பு; pungency. 3. கூர்மை; sharpness, acuteness, as of the intellect. "தீட்சண புத்தியுள்ளவன். 4. ஆய்தம் (ஆயுதம்) (யாழ். அக.); weapon. 5. இரும்பு (யாழ். அக); iron 6. கொள்ளைநோய் (யாழ். அக.); epidemic. 7. சாவு (மரணம்) (யாழ்.அக.); death 8. கஞ்சாங்கோரை, 1, (மலை); white basil 9. மிளகு (தைலவ.தைல); pepper.

*[Skt.tīkṣṇa > த. தீட்சணம்]*

**தீட்சாகுரு** *dītca-guru,* பெ.(n.) ஒருவனுக்கு நோன்புறுதி (தீட்சை செய்விக்கும்) செய்விக்கும் குரு; Guru who performs the initiation ceremony of tītcai.

*[Skt.dīkṣā> த. தீட்சா]*

**தீட்சாநாமம்** *tītcaṇāmam,* பெ.(n.) நோன் புறுதி (தீட்சை) எடுத்துக் கொள்ளும்போது கொள்ளும் பெயர்; (šaiva)name given to a person on taking *tītcai,* dist. fr., piḷḷai-t-tiru-nāmam.

*[Skt.dīkṣā+nāmān> த. தீட்சாநாமம்]*

**தீட்சி–த்தல்** *tītci-,* 11 செ.கு.வி. (V.t.) நோக்கம், உற்றறிவு அல்லது தொடுகை (பரிசம்), அறிவுரை அல்லது கற்பிப்பு (உபதேசம்) முதலிய வற்றால் அருள்புரிந்து குரு நோன்புறுதி (தீட்சை) செய்வித்தல் (வின்.); to impart spiritual illumination to a disciple by look, touch or teaching as in a religious initiation by a guru.

*[Skt.dīkṣ> த. தீட்சி–த்தல்]*

**தீட்சிதர்** *dītcidar,* பெ.(n.) 1. வேள்வி (யாகம்) செய்தோர்; those who have performed vēdic sacrifices. 2. வேள்வி (யாகம்) பண்ணின பார்ப்பான் (பிராமணர்) அல்லது அவர் வழியினர் தாங்கும் பட்டப்பெயர்; a title assumed by Brahmins who have performed vēdic sacrifices, or their descendants. 3. மனவுறுதி (சங்கற்பம்) கொண்டவர்; those who have undertaken a vow. 4. தில்லை மூவாயிரவர்; Brahmin temple - priests at Chidambaram. 5. சமயநோன்பு (தீட்சை) பெற்றோர்; persons who have received religious initiation.

*[Skt.dīkṣita> த. தீட்சிதர்]*

**தீட்சை** *dītcai,* பெ.(n.) 1. உறுதியுரைப்பு (அ) நோன்பு (விரதம்); vow, solemn resolution. 2. சமய தீட்சை, விசேடதீட்சை, நிருவாண தீட்சை என்ற முத்திறப்பட்ட சைவசமயச் சடங்குகள்; (Saiva)initiation of a disciple into the mysteries of the šaiva religion, of three stages, viz., camaya-tītcai. 3. நயன தீட்சை, பரிசதீட்சை, மானசதீட்சை, வாசகதீட்சை, சாத்திரதீட்சை, யோகதீட்சை, ஔத்திரதீட்சை என்ற எழுவகையான சைவசமயச் சடங்குகள். (சைவச. ஆசாரி 65, உரை.); (Saiva)ways of religious initiation and purification of disciples by a guru, of seven kinds, viz., nayaṉa-tītcai, pariša-tītcai, māṉaša-tītcai, vācāka-tītcai, cāttira-tītcai, yōka-tītcai, auttiri-tītcai 4. குறித்த காலத்தின் முடிவு வரை மயிர்வளர்க்கை;

allowing the hair to grow for a specified period, as after marriage, during wife's pregnancy, etc.

த.வ. அருளிப்பு

*[Skt. dīkṣā> த. தீட்சை]*

**தீட்சைக்குறை** *tītcai-k-kuṟai* பெ.(n.) சைவ சமயத்துக்குரித்தான நோன்பு (தீட்சை) செய்துகொள்ளுகை. (உ.வ.); initiation into the mysteries of šaiva religion.

*[Skt. dīkṣā> த. தீட்சை+குறை]*

**தீட்சைகேள்--தல்** (தீட்சை கேட்டல்) *tītcai-kēḷ-,* செ.கு.வி. (v.i.) குருவினிட மிருந்து நோன்புறுதி (தீட்சை) பெறுதல் (வின்.) to receive religious initiation from a guru.

*[Skt. dīkṣā> த. தீட்சை+கேள்]*

**தீத்தானம்** *tī-t-tāṉam,* பெ.(n.) தலைவனது இயற்பெயரின் நான்கைந்தாம் எழுத்துகள் பனுவில் (பிரபந்த) முதலில் வரப்பாடுதலாகிய கேடு விளைவிக்குஞ் செய்யுட்டானம். (பிங்.) ; the use, as the initial letter in a eulogistic poem, of the fourth or the fifth letter of the name of its hero, considered inauspicious.

**தீப்தம்** *tīptam,* பெ.(n.) அராகவகையு (ராகம்)ளொன்று. (பரத.இராக.47.); (Mus.) a classs of rāgas.

*[Skt. dīpta> த. தீப்தம்]*

**தீபகம்** *dībagam,* பெ.(n.) 1. விளக்கு; lamp, light 2. தீவகம்[1](தண்டி.38,உரை) பார்க்க; see tēvagam; 3. பார்வை விலங்கு; decoying bird or beast. "ஒரு தீபகம்போல் வருமண்ணல்" (திருவிளை.வாலு.46)

*[Skt. dīpaka> த. தீபகம்]*

**தீபகமருந்து** *tīpagamarundu,* பெ.(n.) வலிமை உண்டாக்கும் மருந்து; any drug or medicine which tends to bone the system *(சா.அக.).*

**தீபகற்பூரம்** *dīpa-garppūram* பெ.(n.) ஆரத்தி எரியணம் (வின்.); camphor used as incense.

*[Skt. dīpa+karpūra> த. தீபகற்பூரம்]*

**தீபசாலம்** *tīpašālam,* பெ.(n.) 1. ஒளிவிடும் மரம்; burning bush, luminous tree in the dark or during nights *(சா.அக.)*

**தீபபுடம்** *dīpa-puḍam,* பெ.(n.) சித்தஞ்செய்த மருந்தை மண்ணால் மூடி சோறு பதமாகும் நேரமளவு அடுப்பினுள் வைத்தெடுக்கும் புடம்; the process off calcination in which a medicine is covered with mud and heated in an oven for as long a time as it will take to preparee boiled rice.

*[Skt. dīpa> த. தீபம்+புடம்]*

**தீபம்** *dībam,* பெ.(n.) 1. விளக்கு; lamp, light. "தூபநற் றீபம் வைம்மின்" (திருவாச. 9,1) 2. விளக்குத்தண்டு (பிங்.); lamp-stand. 3. சோதிநாள் (பிங்.); the fifteenth nakṣatra 4. தீபமரம் பார்க்க; see dīpamaram.

*"சிந்துரந் திலகற் றீபம்" (இரகு.ஆற்று.11)*

*[த. தீபம் Skt. dīpa> த. தீபம்]*

**தீபமரம்** *dīpa-maram,* பெ.(n.) சுடரொளி மரம் (சோதிவிருட்சம்) (பெரியபு. கண்ணப்ப. 131.); phosphorescent tree.

*[Skt. dīpa> த. தீபம்+மரம்]*

**தீபமாலை** *dība-mālai,* பெ.(n.) சரவிளக்கு (S.I.I.V,273); row of lights, as in a chandelier.

*[Skt. dīpa> த. தீபம்+மாலை]*



**தீபனம்** *dīpaṉam,* பெ.(n.) 1. அதிகப்படுத்துவது; stimulant, exciting agent. "இசையுங் கூத்தும் காமத்திற்குத் தீபனமாகலின்" (சீவக.2597, உரை) 2. பசி; hunger "கூர்த்த

தீபனங்கூடக் குறுகினார்க்கு" (சிவதருபாவ.79) 3. உணவு (J.); eatables food. 4. மஞ்சள் (யாழ்.அக.); turmeric.

*[Skt. dipana> த. தீபனம்]*

**தீபனியவர்க்கம்** *dibaniyavarkkam,* பெ.(n.) 1. உணவு செரிமானம் அடைய வைக்கும் மருந்துகள் மிளகு, திப்பிலி, சிக்கிரமூலவேர், சுக்கு, வேராள், பெருங்காயம், ஓமம்; drugs that induce appetite, e.g. black pepper, long pepper, root of plumbage, dried ginger, marking nut. *(சா.அக.)*

**தீபாக்கினி** *dibākkini,* பெ.(n.) ஆயுர் வேதாக்கினி மூன்றனுள் இரண்டு விரல் கனமுள்ள ஒரு விறகால் எரிக்கும் எரிப்புத் திட்டம் (வைஷஜ.4.) ; fire lighted with a chip of fuel two fingers thick, one of three āyurvētākkini.

*[Skt. dipa+agni> த. தீபாக்கினி]*

**தீபாரதனை** *dibāradanai,* பெ.(n.) சுடர் ஏற்றி தெய்வச்சிலை முன் சுழற்றிக் காட்டுதல்; waving lamps before an idol.

*[Skt. dipa+ā-rādhana> த. தீபாரதனை]*

**தீபாவளி** *dipāvali,* பெ.(n.) துலாம் (ஐப்பசி) திங்களிற் கரும்பக்கத்தில் (கிருட்டிணபட்சம் பதினான்காம்) நாள் வைகறையில் மங்கள நீராடிக் கொண்டாடப்படும் பெரும் பண்டிகை; a festive celebration on the night of the 14th day of the dark fortnight at moon-rise in the month of Aippaši, believed to be observed from Naicka period of Telugu Chieftains in Tamil nadu..

**த.வ. விளக்கணி விழா**

*[Skt. dipāvali> த. தீபாவளி . ஆவளி=வரிசை]*

நாயக்க மன்னர் காலத்தில் தமிழ்நாட்டில் அறிமுகமான மாலியப் (வைணவ) பண்டிகை. நளி (கார்த்திகை) மாதத்தில் ஒளி விளக்கு (கார்த்திகை தீபம்) ஏற்றுவது 2000 ஆண்டுகளுக்கு மேற்பட்ட, பண்டைத் தமிழ் மரபார்ந்த வழிபாட்டு விழா.

**தீபாவளி[2]** *dipāvali,* பெ.(n.) பண நொடிவு (திவால்); insolvent.

**தீபிகை** *dipigai,* பெ.(n.) விளக்கு (சங்.அக.); lamp.

**த.வ. விளக்கு**

*[Skt. dipikā> த. தீபிகை]*

**தீபிகைத்தைலம்** *dibigaittilam,* பெ.(n.) பெரும் ஐம்மூல எண்ணெய்; காதிற்கு விடும் துளியெண்ணெய்; ear drops off hot oil this is generally prepared by taking panchamoolam. *(சா.அக.)*

**தீர்க்கசத்திரம்** *dirkka-šattiram,* பெ.(n.) பன்னிரண்டாண்டுகட்குமேல் நடைபெறும் வேள்வி (யாகம்); sacrifice extending over more than 12 years. "தீர்க்கசத்திரமாக நடத்தினர்" (சேதுபு.இலக்கும.7).

**த.வ. மீப்பன்னீராட்டை வேள்வி**

*[Skt. dir-gha-satra> த. தீர்க்கசத்திரம்]*

**தீர்க்கசதுரம்** *dirkka-šaduram,* பெ.(n.) கோணங்களொத்தும் பக்கங்கள் ஒவ்வாதது மான நாற்கோட்டுருவம்; rectangle.

*[Skt. dirgha> த. தீர்கம்+சதுரம்]*

**தீர்க்கசந்தி** *dirkka-šandi,* பெ.(n.) ஓர் உயிர் தன்னினத்துயிரோடு புணரும்போது அவ்விரண்டும் அவ்வினத்து நெட்டுயிராக மாறும். வடமொழிச்சந்தி; (Gram.) coalescence of two like vowels into a long vowel of the same class in Sanskrit.

*[Skt. dirgha+த. சந்தி]*

**தீர்க்கசுமங்கலி** *dirkka-šumangali,* பெ.(n.) நன்மங்கலையாய் (சுமங்கலை) நெடுங்காலம் வாழ்பவள்; Woman blessed with a long and happy married life, a term used in benediction.

**த.வ. வாழ்வரசி, முற்றிலையாள்**

*[Skt. dirgha+su-mangali> த. தீர்க்கசுமங்கலி]*

**தீர்க்கதண்டன்** *dirkka-tandan* பெ.(n.) நெடுஞ்சாண்கிடை வணக்கம் (சாட்டாங்க நிலை); a form of obeisance or homage

which consists in prostrating at full length with the arms extended.

**தீர்க்கதரிசி** *dirkka-darisi,* பெ.(n.) முற்காண் பறிவுடையவன் (தீர்க்கதரிசனமுடையவன்); seer, prophet. "தீர்க்கதரிசி யாமெவனா னீயில் வுறையுள் சேர்வுற்றாய்" (ஞானவா. பசுண்.42).

*[Skt. dirgha+darsin> த. தீர்க்கதரிசி]*

**தீர்க்கதிருட்டி** *dirkka-dirutti,* பெ.(n.) 1. முற்காண்டல்; foresight. 2. காணி (ஞானி); sagacious person, wise man.

**த.வ. முன்னெடு நோக்கு, அறிவன்**

*[Skt. dirgha+drsti > த. தீர்க்கதிருட்டி]*

**தீர்க்கம்** *dirkkam,* பெ.(n.) 1. நீட்சி; length in space or time. 2. நெட்டெழுத்து; long vowl. 'கூறு மிரச்சுவந் தீர்க்கம்" (பி.வி.5). 3. உறுதி முடிவு (சூடா); decision, positiveness, certainty. 4. பெருமித (கம்பீரம்)த்தோற்றம்; majestic appearance. "மெழுகு பிள்ளையார் போல யானிருந்த தீர்க்க மறியீரோ" (விறலிவிடு.987). 5. அறிவுத்தெளிவும் ஈர்ப்புள்ள (வசீகரம்) தோற்றம்; intelligent and attractive expression, as of face. 6. பிறப்பு (சன்) ஓரைக்கு (லக்கினம்) 6,7–ஆம் ஓரைகள் (இராசி) (யாழ்.அக.); (astrol) the 6th and 7th houses from the ascendant. 7. நிறைவு (பூரணம்) (யாழ்.அக.); perfection, completeness. 8. துணிகரச் செயல்; daring act. "தீர்க்கஞ்செய்ய அஞ்ச மாட்டான்" (நாஞ்.) 9. தெளிவு (யாழ்.அக.); clearness.

*[Skt. dirga> த. தீர்க்கம்]*

**தீர்க்கம்போடு–தல்** *dirkkam pōdu-,* செ.கு.வி. (v.intr.) நெட்டெழுத்தின் நீட்சிக் குறி வரைதல்; to write the mark of length of a long vowel.

*[Skt. dirgha> த. தீர்க்கம்+போடு-,]*

**தீர்க்கரேகை** *tirkkarēgai,* பெ.(n.) (நிலநடுக் கோட்டிலிருந்து தொலைவைக் கணக்கிடும் முறையில்) நிலவுருண்டை மேற்பரப்பில் வடக்கிலிருந்து தெற்கில் செல்வதாக வரைந்துள்ள கோடு; line of longitude. *(க்ரியா)*

**த.வ. நெடுவரை**

**தீர்க்கரோகி** *tirkka rōgi,* பெ.(n.) 1. நறுஞ் சோந்தி; உப்பை வைரமாக்கிக் காட்டும் செடி; an unknown plant capable of consolidating common salt. *(சா.அக.)*

**தீர்க்கவசனம்** *dirkka-vasanam,* பெ.(n.) 1. உறுதிமொழி (யாழ்.அக.); definite promise.

*[Skt. dirgha +vacana> த. தீர்க்கவசனம்]*

**தீர்க்காயுசு** *dirkkāyusu,* பெ.(n.) 1. தீர்க்காயுள் பார்க்க; see dirkkāyuḷ. 2. காக்கை (யாழ்.அக.); crow. 3. என்றும் பதினாறன் (மார்க்கண்டன்) (யாழ்.அக.); Mārkkaṇṭaṉ.

*[Skt. dirghāyus> த. தீர்க்காயுசு]*

**தீர்க்காயுள்** *dirkkāyul,* பெ.(n.) நீண்ட ஆயுள்; long life.

**த.வ. நீடுவாழ்வு**

*[Skt. dirghāyus> த. தீர்க்காயுள்]*

**தீர்க்காலோசனை** *dirkkālōsanai,* பெ.(n.) ஆழ்ந்த சிந்தனை; deep counsel.

**த.வ. நீள் நினைவு, நெட்டோர்ப்பு**

*[Skt. dirghā+yōjanā> த. தீர்க்காலோசனை]*

**தீர்த்தக்கரை** *tirtta-k-karai,* பெ.(n.) தூய நீர்த்துறை; sacred bathing ghat.

*[Skt. tirtha> த. தீர்த்தம்+கரை]*

**தீர்த்தக்காரர்** *tirtta-k-kārar,* பெ.(n.) கோயில் பூசைக்குப் பின் கடவுளின் (சுவாமி) பெயரால் வழங்கப்படும் நன்னீர் (தீர்த்தம்) முன்னர்ப் பெறும் உரிமையாளர் (Vaisn); persons having the right to receive tirttam first after worship of an idol in a temple.

*[Skt. tirtha> த. தீர்த்தம்+காரர்]*

**தீர்த்தகட்டம்** *tirtta-kaṭṭam,* பெ.(n.) நீராடும் கட்டம் (ஸ்நாநகட்டம்); bathing ghat.

*[Skt. tirtha-ghaṭṭa> த. தீர்த்தகட்டம்]*

**தீர்த்தகர்** *tirttakar,* பெ.(n.) தீர்த்தகரார் (யாழ்.அக.) பார்க்க; see tirttakarar.

**தீர்த்தகரர்** *tirtta-karar,* பெ.(n.) 1. தீர்த்தங்கரர் பார்க்க; see tirttaṉkarar. "திருமொழியருளுந் தீர்த்தகரர்களே துயர்கடீர்ப்பார்" (யசோதர. 1,49). 2. தூய்மையானவர் (பரிசுத்தர்); holy person. "பேதைகாள் தீர்த்தகர ராமின் திரிந்து" (திவ்.இயற்.2,14).

*[Skt. tirtha-kara> த. தீர்த்தகரர்]*

**தீர்த்தகவி** *tirtta-kavi,* பெ.(n.) திருமண் அணிந்து (தரித்து) கொள்ளும்போது நீர் வைத்துக்கொள்ள உதவும் தேங்காயோட்டுக் கல். (Vaiṣṇ); cup made of coconut shell used by *Vaiṣṇavaites* to hold water for preparing paste for their caste - marks.

*[Skt. tirtha+kavi> த. தீர்த்தகவி]*

**தீர்த்தங்கரர்** *tirttaṅgarar,* பெ.(n.) சைனருள் அருகபதவியடைந்த விருசபர், அசிதர், சம்பவர், அபிநந்தனர், சுமதி, பத்மபிரபர், சுபார்சுவர், சந்திரபிரபர், புட்(ஷ்)பதந்தர் அல்லது சுவிதி, சீதளர், சிரேயாஞ்சர், வாசுபூச்சியர், விமலர், அநந்தர், தர்மர், சாந்தி, கிரந்து அல்லது குந்து, அரர், மல்லி, முனிசுவ்விரதர், நமி, நேமி, பார்சுவர், வர்த்தமானர் என்ற இருபத்து நால்வர். (திருக்கலம். காப்பு, உரை); Jaina Arhats, 24 in number, viz., Viruṣapar, Acitar, Campavar, Apinantaṉar, Cumati, Patmapirapar, Cupārcuvar, Cantirapirapar, Puṣpatantar or Cuviti, Cītaḷar, Cirēyāñjar, Vācupūcciyar, Vimalar, Anantar, Tarmar, Cānti, Kirantu or Kuntu, Arar, Malli, Muṉi: Cuv-viratar, Nami, Nēmi, Pārcuvar, Varttamāṉar.

த.வ. தூய நீரவர்

*[Skt. tirthakara> த. தீர்த்தங்கரர்]*

**தீர்த்தங்கொடு-த்தல்** *tirttaṅ-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) கோயிலில் கடவுளின் பெயரால் அளிக்கப்படும் துய்யநீர் அளித்தல்; to distribute water with which the chief idol of a temple has been bathed. 2. திருநாள் முடிவில் அடியார்கள் நீராடும்படி கடவுள் நீர்த்துறையில் நீராடும்படிச் செய்தல்; to take bath, as an idol, at sacred waters at the close of a festival, the devotees bathing there immediately.

*[Skt. tirtha> த. தீர்த்தம்+கொடு-,]*

**தீர்த்தநீர்** *tirtta-nir,* பெ.(n.) புண்ணிய நீர்; sacred water, "தீர்த்த நீர் பூவொடு பெய்து" (பு.வெ.6,27.)

*[Skt. tirtha> த. தீர்த்தம்+நீர்]*

**தீர்த்தம்** *tirttam,* பெ.(n.) 1. முழுத்தூய்மை; ceremonial purity. "தீர்த்த முக்கண் முதல்வனை" (தேவா.584,9.) 2. நீர் (சூடா); water, drinking - water. "பாததீர்த்தம் பருகினான்" (காஞ்சிப்பு, திருமண.59). 3. புண்ணிய நீர்த்துறை; sacred bathing - ghat. "குமரித் தீர்த்த மரீஇய வேட்கையின்" (பெருங்.உஞ்சைக். 36,236) 4. அடியார்கட்கு வழங்கப்படும் வழிபாட்டு நீர்; water used in worshipping an idol and distributed to devotee. 5. திருப்பாதநீர் (தீர்த்தம்); water used in washing the feet of great men as gurus. 7. திருவிழா. (சூடா); temple festival. 8. சமண மதத் தோன்றிய நூல்; (Jaina.) sacred books. 9. தீர்த்தவாரி பார்க்க; see tirttavāri. "தீர்த்தத்தினன் றிராத் திருமாலையைப்பாடி" (ஈ.டு.5,10,6). 10. தீ (யாழ்.அக.); fire. 11. வேள்வி (யாகம்) (யாழ்.அக.); sacrifice. 12. பிறப்பு (யாழ்.அக.) birth. 13. பெண்குறி (யாழ்.அக.); female organ.

*[Skt. tirtha> த. தீர்த்தம்]*

**தீர்த்தயாத்திரை** *tirtta-yāttirai,* பெ.(n.) நந் நீர்த்துறைகளில் நீராடச் செல்லும் செலவு (பிரயாணஞ் செல்லுகை) (குறள், 586, உரை.); pilgrimage to sacred bathing ghats. (எ.கா.) கங்கை, காவிரி போன்ற ஆறுகளுக்குத் தீர்த்த யாத்திரை செல்லல்.

த.வ. நீராடற் செலவு

*[Skt. tirtha+yātrā>த. தீர்த்தயாத்திரை]*

**தீர்த்தவாரி** *tirtta-vāri,* பெ.(n.) 1. திருவிழா முதலில் இறைவனுக்கு நடைபெறும் நீராட்டு கொண்டாட்டம் (நீராட்டுற்சவம்); bathing of an idol in a river or tank at the close of a festival. 2. தீர்த்தவேதி. 2. (இ.வ.) பார்க்க; see tirttavēdi.

*[Skt. tirtha+wāri>த. தீர்த்தவாரி]*

**தீர்த்தவேதி** *tirtta-vēdi,* பெ.(n.) 1. திருமுழுக்கு மேடை; a seat on which an idol is kept and bathed. 2. இறைவனின் திருமுழுக்கு நீர் விழும்படி வைக்கப்படும் ஏனம் (பாத்திரம்.); receptacle for the water with which an idol has been bathed. "தீர்த்த வேதி வெண்சங்கு தர்ப்பணம்" (பிரபோத.11,32).

*[Skt. tirtha+vēdi>த. தீர்த்தவேதி]*

**தீர்த்தன்** *tirttan,* பெ.(n.) முழுத் தூய்மையன்; holy person. "புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்" (மணி.5,98). 2. கடவுள்; God. "தீர்த்தனற்றில்லை" (திருவாச.7,12), "தீர்த்த னுலகளந்த சேவடி மேல்" (திவ். திருவாய்.2,8,6). 3. தகைஞன் (அருகன்) (சூடா.); Arhat. 4. குரு (பிங்.); guru.

*[Skt. tirtha>த. தீர்த்தன்]*

**தீரசங்கராபரணம்** *tiraśankarābaranam,* பெ.(n.) மேளகர்த்தாக்களுள் ஒன்றான அரும்பாலை (சங்கராபரணம்) (பரத.ராக. 104.); (Mus) cankarāparanam, a primary rāgā.

*[Skt. dhira+śankarābharana> த. தீரசங்கராபரணம்]*

**தீரம்[1]** *tiram,* பெ.(n.) 1. துணிவு (தைரியம்); courage, valour. "தீரத்தினாற்றுறவு சேராமல்" (தாயு.பராபர.271). 2. வலி (சூடா); strength, vigour, power. 3. அறிவு (யாழ்.அக.); intelligence.

த.வ. திறன்

*[Skt. dhira>த. தீரம்]*

**தீரம்[2]** *tiram,* பெ.(n.) 1. கரை; shore, bank. "தீரமும் வையையுஞ் சேர்கின்ற கண்கவின்" (பரிபா 22,35). 2. செய்வரம்பு (பிங்.); dyke, as of a paddy field. 3. அம்பு (யாழ்.அக.); arrow.

*[Skt. tira>த. தீரம்]*

**தீரவாசம்** *tira-vāśam,* பெ.(n.) ஆற்று (நதி) பாய்ச்சலுள்ள இடம்; tract adjoining a river. "அவனுக்குத் தீரவாசத்தில் நாலுகோட்டை நிலமுண்டு".

*[Skt. tira-vāsa>த. தீரவாசம்]*

**தீவகச்சாந்தி** *tivaga-c-cāndi,* பெ.(n.) பண்டைக்காலத்தில் காவிரிப்பூம்பட்டிணத்தில் நடைபெற்று வந்த இந்திர விழா; an ancient festival celebrated to propitiate Indra at kāviri-p-pūm-pattinam. "தீவகச்சாந்தி செய்தரு நன்னாள்" (மணி.1,35.).

*[Skt. dvipaka+śānti>த. தீவகச்சாந்தி]*

**தீவகம்[1]** *tivagam,* பெ.(n.) 1. விளக்கு; lighted lamp, flame. 2. முதனிலைத் தீவகம், இடைநிலைத் தீவகம், கடைநிலைத் தீவகம் என மூவகைப்பட்டு ஒரு சொல் ஓரிடத் தினின்று பலவிடத்துஞ் சென்று பொருள் விளக்கும் அணி (தண்டி.38.); (Rhet.) figure of speech in which a word is constructed with other words preceding or succeeding of three varieties, viz., mutanilai-t-tivakam, itainillai-t-tivakam, katainilai-t-tivakam. 3. பார்வை விலங்கு; decoy-bird, decoy beast. "தீவகமாமென வருவாய் வந்து" (சிவப்பிர.பாயி.8).

*[Skt. dipaka>த. தீவகம்]*

**தீவகம்**[2] *tivagam*, பெ.(n.) தீவு; island. "தீவகச் சாந்தி" (மணி 2,3).

*[Skt.dvipaka>த. தீவகம்]*

**தீவம்** *tivam*, பெ.(n.) விளக்கு; lamp. "செம் பொற் றீவங்க ளுமலிதர" (கோயிற்பு. திருவிழா.30).

*[Skt.dipa>த. தீவம்]*

**தீவரம்** *tivam*, பெ.(n.) தீவு; island. "இலங்கா தீவத்து" (மணி.28,107.)

*[Skt.dvipa>த. தீவம்]*

**தீவி**[1] *tivi*, பெ.(n.) புலி (உநி.நி.); tiger.

*[Skt.dvipin>த. தீவி]*



**தீவி**[2] *tivi*, பெ.(n.) பறவை (பட்சி) வகை (சங்.அக.); a bird.

**தீவிகை** *tivigai*, பெ.(n.) விளக்கு; lamp. "மீன் குழாத்தி னெங்குந் தீவிகை" (சீவக.2325).

*[Skt.dipikā>த. தீவிகை]*

**தீவிரச்சிகிச்சைப் பிரிவு** *tiviracckiccaipirivu*, பெ.(n.) மருத்துவமனையில் சிக்கலா (ஆபத்தா)ன நிலையில் உள்ள நோயாளி களுக்கு இடை விடாத கவனிப்பும் பண்டுவமும் (சிகிச்சை) வழங்கும் பிரிவு; intensive care unit (in a hospital) *(க்ரியா.)*

த.வ. கடுங்கவன மருத்துவப் பிரிவு

**தீவிரம்** *tiviram*, பெ.(n.) 1. விரைவு (உ.வ.); speed, celerity. 2. பெருங்கோபம் (சூடா.); fury, rag. 3. கதிரவன் பற்றுகை (சூரிய கிரணம்) (பிங்.); sun's ray. 4. கொடுமை; intensity, severity. "வெயில் தீவிர மாயிருக்கிறது". 5. உறைப்பு; pungency, sharpness. குழம்பு தீவிரமாயிருக்கிறது". 6. ஒரு அளறு (நரகம்). a hell. "அறக்கொடிய தீவிரமே" (சிவதரு.சுவர்க்க.126).

*[Skt.tivra>த. தீவிரம்]*

**தீவிரவாதம்** *tiviravādam*, பெ.(n.) (சட்டப் படியான வழிகளைப் பின்பற்றாமல்) சிக்கல் களுக்குத் தீர்வு காண வன்முறையை மேற்கொள்ளும் போக்கு; extremism.

த.வ. கொடும்போக்கு, வன்முறை

**தீவிரவாதி** *tiviravādi*, பெ.(n.) தீவிரப்போக்கை (வாதத்தை)க் கடைப்பிடிப்பவர்; extremism. *(க்ரியா]*

த.வ. வன்முறையாளன்

**தீவிளி** *tivili*, பெ.(n.) தீபாவளி பார்க்க; see tipāvaḷi.

*[Skt.dipāvaḷi >த. தீவிளி]*

**தீனதயாளு** *tiṉa-dayāḷu*, பெ.(n.) எளியா ரிடத்தும் அருளுள்ளவன்; one who is compassionate to the poor.

த.வ. எளியார்க்கருளி

*[Skt.dina-dayālu>த. தீனதயாளு]*

**தீனபந்து** *tiṉa-bandu*, பெ.(n.) 1. எளியார்க் கன்பன்; a friend of the poor. invalid. 2. கடவுள்; god.

*[Skt.dina-bandhu>த. தீனபந்து]*

**தீனம்** *tiṉam*, பெ.(n.) நட்பு (யாழ்.அக.).; friendship.

*[Skt.adhina>த. தீனம்]*

**துக்கக்காரன்** *tukkakkāraṉ*, பெ.(n.) இழவு வீட்டுக்காரன் (வின்.); mourner.

*[Skt.duḥkha>த. துக்கம் + காரன்]*

**துக்கக்கேடு** *tikkakkēḍu*, பெ.(n.) துக்கம், 1 பார்க்க; see tukkam,1. "சொன்னால் வெட்கக்கேடு, அழுதால் துக்கக்கேடு".

*[Skt.duḥkha>த. துக்கம்+கேடு]*

**துக்கங்கேள்-தல் (துக்கங்கேட்டல்)** *tukkaṅkēḷ-,* செ.குன்றா.வி. (v.t.) இழவு கேட்டல்; to comfort mourners, condole with.

*[Skt.duḥkha>த. துக்கம்+கேள்-]*

**துக்கச்சல்லா** *dukka-c-callā,* பெ.(n.) துயர் (துக்கம்) அடையாளமாகக் கட்டிக்கொள்ளும் கறுப்புத்துணி (பாண்டி); crepe.

*[Skt.duḥkha+cēla>த. துக்கச்சல்லா]*

**துக்கசாகரம்** *tukka-šāgaram,* பெ. (n.) பெருந்துயர் (துயர்க்கடல்); overwhelming grief, as an ocean of grief.

*[Skt.duḥkha>த. துக்கசாகரம்]*

**துக்கசுரம்** *tukkašuram,* பெ. (n.) 1. பிதற்றல், அழுதல் முதலிய குணங்களைக் காட்டும் ஒரு வகைக் காய்ச்சல்; a kind of fever attended with the sympony of raving crying. *(சா.அக.)*

**துக்கநாடகம்** *dukkanāḍagam,* பெ. (n.) துன்ப (துக்க)மான முடிவையடையும் நாடக வகை (பாண்டி.); tragedy.

த.வ. துன்பியல் நாடகம்

*[Skt.duḥkha>த. துக்கம்+நாடகம்]*

**துக்கநிவர்த்தி** *tukkanivartti,* பெ. (n.) துக்க நிவாரணம் பார்க்க; see tukkanivāraṇam.

*[Skt.duḥkha+ni-vṛtti>த. துக்கநிவர்த்தி]*

**துக்கநிவாரணம்** *tukka-nivāraṇam,* பெ. (n.) 1. துன்ப நீக்கம்; deliverance from all ills. 2. வாய்மை நான்கனுள் அவாவற்று நிற்கும் நிலையே துயரநீக்கமாகிய வீடு என்ற அறிவமதக் (பௌத்தம்) கொள்கை. (மணிமே.2,65, உரை.); (Buddh.) the doctrine that the extinction of desire is the sure means of deliverance and cessation of pain, one of four vāymai,q.v.

த.வ. துயர் துடைப்பு, துயர் தணிப்பு

*[Skt.duḥkha+ni-vāraṇa>த. துக்கநிவாரணம்]*

**துக்கநிவாரணமார்க்கம்** *tukka-nivāraṇamārkkam,* பெ. (n.) வாய்மை நான்கனுள் பற்றறுவதே துயர் நிலை - வீட்டுக்குரிய (துக்க நிவாரணம்) வழியென்ற அறிவ மதத்தின் (பௌத்த மதம்) கொள்கை. (மணிமே.2,66-7,உரை.); (Buddh.) the doctrine that the path that leads to the extinction of desire and thereby of pain, one of four vāymai,q.v.

*[Skt.duḥkha+ nivārṇa marga > த. துக்கநிவாரண மார்க்கம்]*

**துக்கம்**[1] *tukkam,* பெ. (n.) 1. துன்பம் (சூடா.); sorrrow, distress, affliction. "துக்கமித் தொடர்ச்சியென்றே (கம்பரா. கும்பகருண.142.) ; 2. அளறு (நரகம்.) (வின்.) hell. 3. நோய் (யாழ்.அக.); disease; 4. வாய்மை நான்கனுள் உலகப் பிறப்பே துக்கமென்று கூறும் அறிவமதக் (பௌத்த மதம்) கொள்கை. (மணிமே. 2,64,உரை.); (Buddh.) the doctrine that existence is painful, one of four vāymai,q.v.

*[Skt.duḥkha>த. துக்கம்[1]]*

**துக்கம்**[2] *tukkam,* பெ. (n.) வானம் (ஆகாசம்); sky. "நிலந்துக்க நீர்வளி தீயானான்" (தேவா.844,3).

*[Skt.dyu+kha>த. துக்கம்[2]]*

**துக்கர்** *tukkar,* பெ. (n.) எலும்புருக்கி நோயுடையவர்; consumptive patients. "துக்கர் துருநாமர்" (சிறுபஞ்.76.)

*[Skt.duḥkha>த. துக்கர்]*

**துக்கரம்** *tukkaram,* பெ. (n.) செய்தற்கரியது; that which is difficult to be made or done. "துக்கரமான கொன்றைத் தொடையலால் வளைத்தவாறும்" (பாரத.பதின் மூ.161.)

*[Skt.duṣ-kara>த. துக்கரம்]*

**துக்கராகம்** *tukka-rāgam,* பெ. (n.) 1.இழவுக்குரிய பண் (யாழ்.அக.); mournful tune. 2. பாலையாழ்த்திறவகை (பிங்.); (Mus.)

ancient secondary melody type of pālaiclass.

*[Skt.duḥkha+rāga>த. துக்கராகம்]*

*[த. அராகம் >Skt.rāga]*

**துக்கவீடு** *tukka-vīḍu,* பெ. (n.) இழவு கொண்டாடும் வீடு; house of mourning.

*[Skt.duḥkha> த. துக்கம் + வீடு]*

**துக்கவுன்மத்தம்** *tukkauṉmattam,* பெ. (n.) துயரம் மிகுதியானால் ஏற்படும் மனநோய்; depression of spirits induced by grief. It takes the form of an insanity marked by abnormal inhibitation of mental and bodily activity. (சா.அக.)

*[Skt.duḥkha+unmath>த. துக்கவுன்மத்தம்]*

**துக்காதீதம்** *tukkātīdam,* பெ. (n.) மனமகிழ்வு, வளமை, செழுமை (சுகம்.) (யாழ்.அக.); pleasure, happiness.

த.வ. இன்பநுகர்வு, நற்பேறு

*[Skt.duḥkha+atīta>த. துக்காதீதம்]*

**துக்கடா**[1] *tukkaḍā,* பெ. (n.) 1. சிறுதுண்டு (இ.வ.); piece, bit. 2. உணவிற்குரிய பச்சடி முதலிய தீனி வகை (இ.வ.); any relish.

*[H.tukra>த. துக்கடா]*

**துக்கடா**[2] *tukkaḍā,* பெ.எ. (adj.) இழிவான (அற்பம்); insignificant. "துக்கடா வேலை".

*[Skt.tukra>த. துக்கடா]*

**துக்காணி**[1] *tukkāṇi,* பெ.(n.) இரண்டு அல்லது நான்கு சல்லி (தம்படி) மதிப்பு கொண்ட சிறு செப்புக்காசு (நாணயம்); a small copper coin = 2 or 4 pies. "துக்காணிப் பொட்டுமிட்டு" (திருக்கூட்டச் சத. MSS.)

*[U.duggāni>த. துக்காணி]*

**துக்காணி**[2] *tukkāṇi,* பெ.(n.) கடைக்குரியது (இ.வ.); that which pertains to a shop.

*[U.dukāni>த. துக்காணி]*

**துக்கி**[1]**-த்தல்** *tukki-,* செ.கு.வி. (v.i.) மனம் வருந்துதல்; to sorrow, mourn, to be in distress.

த.வ. துயருறுதல்

*[Skt.duḥkha>த. துக்கி[1]-,]*

**துக்கி**[2] *tukki,* பெ. (n.) துக்கிதன் பார்க்க; see tukkidaṉ. "துகியாயிருக்கிறதும் துக்கியா யிருக்கிறதும்... சுபாவங்காணும்" (சி.சி.2,5, மறைஞா.)

*[Skt.duḥkhin>த. துக்கி[2]]*

**துக்கிரி** *tukkiri,* பெ. (n.) (வ.வ.) 1. (மனத் துயரம் விளைவிக்கும் வகையில்) விரும்பத் தகாதது அல்லது கெடுதல் நிகழலாம் என்று உணர்த்தும் வகையான (விதமான) அன்மங்கலத் (அமங்கலம்) தன்மை; inauspiciousness. "திடீரென்று நான் இறந்துவிட்டால் என்ன செய்வாய்? என்று கேட்டதற்கு எதற்கு இந்தத் துக்கிரிப்பேச்சு என்று கடிந்து கொண்டாள்." 2. கெடுதல் விளைவதற்குக் காரணமாகக் கருதப்படும் ஆள் (நபர்); one who is thought to bring bad luck. "இந்தத் துக்கிரி பிறந்ததிலிருந்து வியாபாரத்தில் பயங்கர நட்டம்". (இ.வ.).

**துக்கை** *tukkai,* பெ. (n.) காளி; Durgā. "துக்கைபட்டி பிடாரிபட்ட" (S.I.I.1,91).

*[Skt.durgā>த. துக்கை[1]]*

**துக்கோற்பத்தி** *tukkōṟpatti,* பெ. (n.) வாய்மை நான்கனுள் அவாவே துயரத்திற்குக் காரண மென்று கூறும் அறிவமதக் (பௌத்தம்) கொள்கை (மணி.); (Buddh.) the doctrine that desire is the cause of pain, one of four vāymai.

*[Skt.du.hkha+ut-patti>த. துக்கோற்பத்தி]*

**துச்சனம்** *tuccaṉam,* பெ. (n.) தீயகுணம் (துட்டத்தனம்) நெல்லை; viciousness, mischievous disposition.

த.வ. அரம்பத்தனம், துடுக்கு

*[Skt.dur-jana>த. துச்சனம்]*

**துச்சாரி** *tuccāri,* பெ. (n.) தீயநடத்தையோன்; licentious person, profligate. "துச்சாரி நீகண்ட வின்ப மெனக்கெனைத்தாற் கூறு (நாலடி.84).

*[Skt.duś-cārin>த. துச்சாரி]*

**துச்சோதனன்** *tuccōdanan*, பெ. (n.) துரியோதனன் பார்க்க; see turiyōdanan. "சுழலைபெரிதுடைத்துச்சோதனனை" (திவ்.பெரியாழ்.1,8,5).

*[Skt. Dur-yō-dhana> த. துச்சோதனன்]*

**துசாரோகணம்** *tušārōganam*, பெ. (n.) கோவிலின் கொடியேற்றம்; ceremonial hoisting of the flag in a temple, at the commencement of the annual festival. "காணுந் துசாரோகணஞ் செய்து" (கடம்ப. உலா,52).

*[Skt. dhvaja-ā-rōhaṇa> த. துசாரோகணம்]*

**துசாவந்தி** *tušāvandi*, பெ. (n.) ஒரு வகை அராகம் (இராகம்.) (இ.வ.); (Mus.) a rāga.

*[Skt. dhvajāvanti> த. துசாவந்தி]*

**துட்டக்கிளவி** *tuṭṭa-k-kiḷavi*, பெ. (n.) தீச்சொல்; bad words. "துட்டக்கிளவி பெட்டவை பயிற்றி" (பெருங்.உஞ்சைக்.40,82).

*[Skt. duṣṭa> த. துட்டம்+கிளவி]*

**துட்டகண்டகன்** *tuṭṭa-kaṇḍagan*, பெ. (n.) 1. மிகக்கொடியவன்; hard-heartedman. 2. பிறரைக் கசக்கி வேலை வாங்குவோன்; sweater.

*[Skt. duṣṭa-kaṇṭaka> த. துட்டகண்டகன்]*

**துட்டகம்** *tuṭṭagam*, பெ. (n.) பொல்லாங்கு (யாழ்.அக.); wickedness.

*[Skt. duṣṭa> த. துட்டகம்]*

**துட்டத்தனம்** *tuṭṭa-t-tanam*, பெ. (n.) தீக்குணம்; mischievous disposition.

*[Skt. duṣṭa> த. துட்டம்+தனம்]*

**துட்டதேவதை** *tuṭṭa-tēvadai*, பெ. (n.) மாடன் காட்டேரி முதலிய கொடுந் தெய்வங்கள்; malignant deity. "பலிகொடுத்தேன் கர்ம துட்டதேவதைகளில்லை" (தாயு.கருணாகர.8).

*[Skt. duṣṭa-dēvatā> த. துட்டதேவதை]*

**துட்டநிக்கிரகம்** *tuṭṭa-nikkiragam*, பெ. (n.) தீயோரையழிக்கை; destruction of the wicked. "துட்ட நிக்கரகஞ் செய்யத் தோன்றலார் தோன்றாநிற்பர்" (குற்றா.தல. தக்கன் வேள்விச்.128).

*[Skt. duṣṭa+ni-graha> த. துட்டநிக்கிரகம்]*

**துட்டம்**[1] *tuṭṭam*, பெ. (n.) 1. தீமை; evil. 2. பச்சைக் கல் (மரகத) குற்றங்களுள் ஒன்று; flaw in emeralds. "துட்டமே தோடமூர்ச் சிதமே" (திருவிளை. மாணிக்.68). 3. இகழத்தக்கத்து (நிந்தித்தல்) (நீலகேசி, 530. உரை); that which is censurable.

*[Skt. duṣṭa> த. துட்டம்]*

**துட்டன்** *tuṭṭan*, பெ. (n.) 1. தீயோன்; wicked, mischievous fellow. "துட்டனைத் துட்டுத் தீர்த்து" (தேவா.1194,10). 2. தேள் (சூடா) ; scorpion.

*[Skt. duṣṭa> த. துட்டன்]*

**துட்டி**[1] *tuṭṭi*, பெ. (n.) 1. சாத்துன்பம்; death 2. இழவு வருத்தம் (துக்கம்) வினாவுதல் (விசாரித்தல்); condolence.

த.வ. சாவுழித்துயர்

*[Skt. duṣṭi> த. துட்டி]*

**துட்டி**[2] *tuṭṭi*, பெ. (n.) 1. சாதீட்டு; pollution from death. 2. சாதுயர்; calamity from death.

*[Skt. duṣṭi> த. துட்டி[2]]*

**துட்டி**[3] *tuṭṭi*, பெ. (n.) கெட்டவள்; wicked mischievous woman. "காமக்குரோதம் விளைத்திடு துட்டிகள்" (திருப்பு.451).

**துட்டு**[1] *tuṭṭu*, பெ. (n.) மாழைக்காசு; metal coin.

**துட்டு**[2] *tuṭṭu*, பெ. (n.) தீமை; wickedness, mischief "துட்டனைத் துட்டுத் தீர்த்து" (தேவா.1194,10).

*[Skt. duṣṭa> த. துட்டு[2]]*

**துட்டை** *tuṭṭai*, பெ. (n.) 1. கற்பில்லாதவள் (சூடா.); profligate, unchaste woman.

2. கட்டுக்கடங்காதவள்; termagant, turbulent woman.

*[Skt.dușța> த. துட்டை]*

**துட்பதம்** *tuțpadam,* பெ. (n.) பாசாங்கு; pretension. "துட்பதத்துட எழுதிடுஞ் சுயோதனன்" (பாரத.வாரணா.13).

த.வ. போலி நடிப்பு

*[Skt.duș-pada> த. துட்பதம்]*

**துட்பரிசம்** *dutpariśam,* பெ. (n.) சிறுகாஞ் சொறி (தைலவ.தைல.76); small climbing nettle.

*[Skt.dus-sparaśa> த. துட்பரிசம்]*

**துட்பிரச்சாரம்** *tuțpiraccāram,* பெ. (n.) (அ.வ.) தவறான கருத்துகளை ஏற்படுத்த பொய்யான செய்திகளைப் பரப்பிச் செய்யப்படும் செய்திப் பரப்பல்; false propaganda, slander, campaign. "தன்னைப் பற்றி நடந்து வரும் துஷ்பிரச்சாரத்தைப் பற்றிக் கவலைப் படவில்லை என்றார் கல்லூரி முதல்வர். முறையாகத் தேர்தலில் வெற்றி பெற்றவரைப் பற்றி துஷ்பிரச்சாரம் செய்கிறார்களே?. *(இ.வ.)*

**துடிதலோகம்** *tuțida-lōgam,* பெ. (n.) அறிவமத (பௌத்தம்) நூல் கூறும் தேவருலகத்தில் (தேவலோகம்) ஒன்று; (Buddh.) a celestial world. "துடித லோகத்து மிக்கோன் பாதம்" (மணிமே.12,73).

*[Skt.tușita+lōka> த. துடிதலோகம்]*

**துணியா** *tuṇiyā,* பெ. (n.) நாடு (வின்.); country, district.

*[U.duniyā> த. துணியா]*

**துணிவினந்தரம்** *tuṇivin-andaram,* பெ. (n.) முன்சொன்ன நற்பொருளை யொழித்துப் பிறிதொரு பொருளை மொழிகை (த.நி.போ. சங்கற்ப.2.); stating a theory different from one's own former theory.

**துத்தபாடாணம்** *tuttapāḍāṇam,* பெ. (n.) வைப்பு நஞ்சு (பிறவிப்பாடாணம்) வகை (வின்.); a mineral poison.

*[Skt.tuttha+pāṣāra > த. துத்தபாடாணம்]*

**துத்து** *tuttu,* பெ. (n.) அணிகலன் (ஆபரணம்); ornament. "துஸ்துதினுசுகள் வாரியாகத் தந்த" (கனம் கிருஷ்ணையர். கீரத்.51).

**துதசிரம்** *tuta-śiram,* பெ. (n.) பேய்பிடித்தவர் போலத் தலையை ஆட்டும் நளிநய வகை; (பரத பாவ.72.); (Nāṭya) the act of moving the head round in imitation of one who is possessed.

*[Skt.dhuta+śiras> த. துதசிரம்]*

**துதமுகம்** *tuta-mugam,* பெ. (n.) முகநளிநயம் (அபிநயம்) பதினான்கனுள் வேண்டாமை குறித்தற்கு இடம் வலமாகத் தலையை யாட்டுகை. (சது.); (Nāṭya) shaking one's head in refusal, one of 14 muka-v-apiṉayam.

*[Skt.dhuta > த. துதம்+முகம்]*

**துதாங்கனம்** *tutāṅganam,* பெ. (n.) தூயவொழுக்கம்; good habits. துன்ப வர்க்குத் துதாங்கனத் தொன்றுமே" (நீலகேசி, 316).

**துதாங்கு** *tutāṅgu,* பெ. (n.) துதாங்கனம் பார்க்க; see tutāṅganam. "துதாங்கென் றாத்தர் சொன்னவ" (நீலகேசி, 356).

**துதி¹** *tudi,* பெ. (n.) 1. வழிபாட்டுப்பா (தோத்திரம்.) (சூடா.); praise, eulogy. "துதிவாய் தொறுங் கொளும்... வெங்கை" (வெங்கைக்கோ.62) 2. புகழ்; fame. "துதியறு பிறவி" (கம்பரா. சடாயு–வுயிர் 193).

*[Skt.stuti> த. துதி¹]*

**துதி²–த்தல்** *tudi-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. புகழ்தல் (சூடா.); to praise, eulogise, to flatter. "விண்ணோடு மண்ணுந் துதித்தாலும்"

(திருவாச.7,10) 2. தொழுதல். (உரி.நி.); to worship 3. நினைத்தல்; to think "கனவிலும் அதைத் துதிக்கமாட்டேன்" (வின்.)

*[Skt.stuti > த. துதி² -]*

**துதிகை** *tudigai,* பெ. (n.) துதியை 1 பார்க்க; see tudiyai, 1. "துதிகைப் பிறைபோலுந் தோற்றச் சேய் தன்னை" (இரகு.இந்து.62).

*[Skt.dvitīyā> த. துதிகை]*

**துதிநிந்தை** *tudi-nindai,* பெ. (n.) இகழா விகழ்ச்சி (யாழ்.அக.); censure or ridicule under the garb of praise.

*[Skt.stuti+nindā> த. துதிநிந்தை]*

**துதிபாடி** *tudipāḍi,* பெ. (n.) (ஒருவரை) புகழ்பாடுபவர்; sycophant, flatterer. "அமைச்சர்கள் துதிபாடிகளுக்கு இடம் கொடுக்கக்கூடாது". *(க்ரியா)*

த.வ. புகழ்பாடி

**துதிபாடு-தல்** *tudipāḍu,* செ.குன்றாவி. (v.t.) (தான் பயன் அடைவதற்காகப் பதவியில் இருப்ப வர்களை அல்லது செல்வம் படைத்த வர்களை) புகழ்ந்து பேசுதல்; to sing the praises of, flatter (the powerful and the rich to gain advantage)."தலைவர்களைத் துதிபாடவே தொண்டர்களுக்கு நேரம் இல்லை!/ தனி நபருக்குத் துதிபாடும் வழக்கம் ஒழிய வேண்டும்". *(இ.வ.)*

*[Skt.stuti> த. துதி+பாடு]*

**துதியரிசி** *tudi-y-ariśi,* பெ. (n.) வழிபாட்டுக்குரிய செஞ்சாந்து (குங்குமம்) கலந்த அரிசி (சோபனாட்சதை) (தைலவ. தைல.); saffron - stained rice, used in benediction.

த.வ. மங்கலஅரிசி

*[Skt.stuti> த. துதி+அரிசி]*

**துதியை** *tudiyai,* பெ. (n.) 1. வெண்பக்கம் (சுக்கிலம்) அல்லது கரும்பக்கம் (கிருட்டிண பட்சங்களில்) இரண்டாம் பிறை நிலை (திதி); second day of the bright or dark fortnight."துதியைத் திங்கள் கண்டெனா" (இரசு.தேனுவ.122) 2. இரண்டாம் வேற்றுமை (வி.வி.6); (Gram.) second case.

*[Skt.dvitīyā> த. துதியை]*

**துதிவாதம்** *tudi-vādam,* பெ. (n.) புகழுரை; panegyric, word of praise. "அர்த்தவாத துதிவாதங்களுக்கும் அப்பொருள் கூடாமை யால்" (சிவசம.35).

*[Skt.stuti-vāda> த. துதிவாதம்]*

**துந்தரோகம்** *tundarōgam,* பெ. (n.) செரி மானமின்மையால் (அசீரணம்) உண்டாகும் குழந்தை நோய் வகை. (சீவரட்.23.); a disease of children caused by indigestion.

*[Skt.tunda+rōga> த. துந்தரோகம்]*

**துந்திரோகம்** *tundi-rōgam,* பெ. (n.) பெருவயிறு நோய் (மகோதரம்) (தைலவ.தைல 97.); a disease of the abdomen, dropsy.

*[Skt.tundi+rōga> த. துந்திரோகம்]*

**துந்நிமித்தம்** *tun-nimittam,* பெ. (n.) தீக்குறி (அபசகுணம்); evil omen. "இவனைக் கண்டாலுந் துந்நிமிதித்தம் என்பார்" (சிலப்.16,112,உரை).

*[Skt.durnimitta> த. துந்நிமித்தம்]*

**துந்நெறி** *tun-neri,* பெ. (n.) தீயவழி (துன்மார்க்கம்); evil conduct. "துந்நெறிப் பாவப்பயன்" (திருக்காளத்.4.29,28).

*[Skt.dur> த. துன்+நெறி]*

**துப்பட்டா** *tuppaṭṭa,* பெ. (n.) 1. துப்பட்டி (வின்.) பார்க்க; see tuppaṭṭi. 2. மேலுக்கு அணியும் விலையுயர்ந்த நல்லாடை (கொ.வ.); a fine cloth worn by men over their shoulders.

த.வ. நல்லாடை

*[H.do-paṭṭah> த. துப்பட்டா]*

**துப்பாக்கி** *tuppākki,* பெ. (n.) 1. குறி நோக்கிச் சுடுங் கருவி; musket, gun. 2. கதிர்த் தலையைக் கத்தரித்து வீழ்த்தும் நெற்பயிர் நோய். (இ.வ.); blight affecting paddy, making its ears fall as if cut off.

த.வ. துமுக்கி

*[Turk.tupak> த. துப்பாக்கி]*

**துபாசி** *tubāši*, பெ. (n.) 1. இடைநின்று மொழி பெயர்த்துச் சொல்லுவோன்; interpreter. 2. ஐரோப்பியரின் வணிகத்தில் (வியாபாரம்) இடைநின்று பேசும் இந்தியத் தரகன்; Indian agent attached to an European mercantile firm, acting as broker.

[*U.dobhāshiya*> *த. துபாசி*]

**துபாரா** *tupārā*, பெ. (n.) இரு முறை (C.G.); twice, double.

[*U.dubārsā*> *த. துபாரா*]

**தும்சம்** *tumšam*, பெ. (n.) அழிவு; destruction.

[*Skt.dhvaṃsa*> *த. தும்சம்*]

**தும்பாலா** *tumbālā*, பெ. (n.) அரசுவரி நீக்கிய ஆணை (உத்தரவு) (R.T.); an order giving up the government share of produce.

[*U.dumbāi*> *த. தும்பாலா*]

**துமாலா** *tumālā*, பெ. (n.) வெள்ளி அல்லது பொன் ஒள்ளிழைக்கரை (சரிகை) இழுக்குந் தொழிலின் கடைசிச் செயல் (வின்.); a final process in lengthening gold or silver threads.

**துயோதகம்** *tuyōdagam*, பெ. (n.) ஒரு சொல்லின் ஆற்றலால் வெளிப்படத்தோன்றும் பொருளின்றி அதன் இயைபுபட்ட பொருள் சிறப்புக் குறிப்பிற் தோன்றுகை (தொல்.சொல். குறிப்.பக்.240.); (Gram.) hinting at a meaning other than the natural meaning of a word.

[*Skt.dyōtaka*> *த. துயோதகம்*]

**துர்** *tur*, இடை. (part.) தீமைப் பொருளைக் குறிக்கும் ஒரு வடமொழி பெயர் வினை முன்னொட்டு (உபசருக்கம்); Sanskrit prefix signifying evil, bad.

[*Skt.dur*> *த. துர்*]

**துர்க்கடம்** *turkkaḍam*, பெ. (n.) இடர்ப்பாடு; untoward circumstances, troubles. "துர்க்கடத்தில் மாட்டிக்கொண்டேன்". (நாஞ்.)

[*Skt.dur-ghaṭa*> *த. துர்க்கடம்*]

**துர்க்கதன்** *turkkadaṉ*, பெ. (n.) வறியவன்; poor, destitute person. "இரந்து ஜீவிக்கும்படி துர்க்கதராவர்கள்" (ஈடு,4,1,1.)

[*Skt.dur-gata*> *த. துர்க்கதன்*]

**துர்க்கதி** *tur-k-kadi*, பெ. (n.) 1. கெட்ட நிலைமை; evil life, bad conduct. 2. வறுமை; poverty. 3. அளறு (நரகம்); hell.

[*Skt.dur-gati*> *த. துர்க்கதி*]

**துர்க்கந்தம்** *tur-k-kandam*, பெ. (n.) கெட்ட நாற்றம் (தீவிர); bad smell, stink.

[*Skt.dur-gan-dha*> *த. துர்க்கந்தம்*]

**துர்க்கம்** *turkkam*, பெ. (n.) அரண் (உரி.நி.); fortress, hill-fort, stronghold. "பலமான துர்க்கமும்" (அறப்.சத.82).

[*Skt.durga*> *த. துர்க்கம்*]

**துர்க்கருமம்** *tur-k-karumam*, பெ. (n.) தீச்செயல்; evil action.

[*Skt.duṣ-karman*> *த. துர்க்கருமம்*]

**துர்க்காதேவி** *turkkā-dēvi*, பெ. (n.) காளி; Durga. "பேய்மிக்க படையினையுமுடைய துர்க்காதேவி" (பு.வெ.1,20,உரை.)

[*Skt.Durgā*> *த. துர்க்கா+தேவி*]

**துர்க்காபூசை** *turkkā-pūšai*, பெ. (n.) தொள்ளிரா (நவராத்திரி) காலத்து மூன்று நாள் துர்க்காதேவியின் பொருட்டு நடத்தப் பெறும் வழிபாடு (ஆராதனை); worship of *Durgā* for three days during *navarāttiri* festival.

[*Skt.Durgā* > *த. துர்க்கா+பூசை*]

**துர்க்கிரகம்** *turkkiragam*, பெ. (n.) 1. நோயை உண்டாக்கும் பேய்; a demon causing illness. 2. வலிப்பு; spasm. 3. குரக்கை; cramps. *(சா.அக.)*

**துர்க்குணம்** *tur-k-kuṇam*, பெ. (n.) தீக்குணம்; evil disposition. "துர்க்குணக் கடற்

சோங்கன்ன பாவியேற்கு" (தாயு. பொன்னை.6).

*[Skt.dur-guṇa> த. துர்+குணம்]*

**துர்க்குறி** *tur-k-kuṟi,* பெ. (n.) 1. தீபுள்குறி (நிமித்தம்); evil omen; bad sign. 2. கேட்டைக் குறிக்கும் அடையாளம்; unfavourable symptom. 3. சென்றவிடங்களில் தீமை விளைவிக்கக் கூடிய போகூழ் கொண்டவன்; person of such ill - luck as to bring misfortune wherever he goes.

*[Skt.dur> த. துர்+குறி]*

**துர்க்கை**[1] *turkkai,* பெ. (n.) 1. சிவன் தேவியும் பாலை நிலத்தெய்வமுமாகிய பெண் தெய்வம் (பிங்.); Durgā, goddess of the desert tract, consort of Siva. "துர்க்கை மரக்காலின் மேனின் றாடினாள்" (சிலப்.6,58,அரும்.) 2. கணை நாள் (பூரநாள்) (திவா.); the 11th nakṣatra.

**த.வ. கொற்றவை**

*[Skt.Durgā> த. துர்க்கை]*

**துர்க்கை**[2] *turkkai,* பெ. (n.) புகழானி (மகமதியர்) கல்லறையிடம் (சமாதி) (வின்.); tomb or shrine of a Muhammadan saint.

*[Persn.dargāh+> த. துர்கை]*

**துர்ச்சனன்** *tur-c-caṉaṉ,* பெ. (n.) தீயோன்; wicked person. "துர்ச்சனருக் கங்க முழுதும் விடமே யாம்" (நீதிவெண்.18).

*[Skt.dur-jana> த. துர்ச்சனன்]*

**துர்ச்செய்கை** *tur-c-ceygai,* பெ. (n.) தீச்செயல்; evil action.

*[Skt.dur> த. துர்+செய்கை]*

**துர்ச்சொப்பனம்** *tur-c-coppaṉam,* பெ. (n.) தீக்கனா; evil ominous dream.

*[Skt.dur+svapna> த. துர்ச்சொப்பனம்]*

**துர்த்தசை** *tur-t-taśai,* பெ. (n.) கெட்ட காலம்; evil times.

*[Skt.durdaśā> த. துர்+தசை]*

**துர்த்தமன்** *turttamaṉ,* பெ. (n.) கொடுமையன் (தூர்த்தன்) (யாழ்.அக.); a dissolute person.

*[Skt.durdama> த. துர்த்தமன்]*

**துர்த்தானம்** *tur-t-tāṉam,* பெ. (n.) பெறுவது கரிசு என்று கருதப்படுங்கொடை. (பகவத் கீதை.மானமி.11.); a gift whose acceptance is sinful.

*[Skt.dur+sthāna> த. துர்த்தானம்]*

**துர்த்தினம்** *tur-t-tiṉam,* பெ. (n.) 1. தீயநாள்; inauspicious, unlucky day. "கருதிய விருந்துடனுண்ணாத தனியுணவு, காணு மதுவே துர்த்தினம்" (திருவேங்.சத.39). 2. கதிரவன் பற்றுகையன்றி (சூரிய கிரகணம்) முகில் மூட்டமுள்ள (மேகமூட்டம்) நாள்; dark, cloudy day.

*[Skt.dur-dina> த. துர்த்தினம்]*

**துர்நாற்றம்** *turnāṟṟam,* பெ. (n.) பொறுத்துக் கொள்ள முடியாத நாற்றம், வீச்சம்; foul smell, stink. *(க்ரியா)*

*[Skt.dur> த. துர்+நாற்றம்]*

**துர்நிமித்தம்** *tur-nimittam,* பெ. (n.) துர்க்குறி பார்க்க; see durkkuṟi.

*[Skt.dur+ni-mitta>த. துர்நிமித்தம்]*

**துர்நீர்** *tur-nīr,* பெ. (n.) உடலிலுள்ள கெட்ட நீர்; serous fluid.

*[Skt.dur> த. துர்+நீர்]*

**துர்ப்பலம்** *turppalam,* பெ. (n.) 1. வலிவின்மை; weakness, feebleness. 2. தாழ்நிலை (வின்.); reduced circumstances.

*[Skt.dur-bala> த. துர்ப்பலம்]*

**துர்ப்பாக்கியம்** *tur-p-pākkiyam,* பெ. (n.) போகூழ் (துரதிர்ட்டம்); misfortune, ill-luck.

**த.வ. தீயபேறு**

*[Skt.dur-bhāgya> த. துர்ப்பாக்கியம்]*

**துர்ப்புத்தி** *turpputti,* பெ. (n.) 1. கெடுமதி; evil mind. 2. தீயகொள்கை; evil doctrine.

"பாதகர் வஞ்சித் துலகிற் பறபலர்க்கத் துர்ப்புத்தி பயிற்றல் செய்தார்" (பிரபோத.13,20). 3. கெடுமதியுடையவ-ன்-ள்; evil - minded person. துர்ப்போதனை (உவ.) பார்க்க; see durppōdaṉai

*[Skt.dur-buddhi> த. துர்ப்புத்தி]*

**துர்ப்போதனை** *tur-p-pōdaṉai,* பெ. (n.) தீய அறிவுரை (உபதேசம்); bad counsel, evil advice, instigation. "ஒவி றுர்ப்போதனை யெனும் வேல்" (பிரபோத.34.11)

*[Skt.dur-bōdhana> த. துர்ப்போதனை]*

**துர்மணம்** *tur-maṇam,* பெ. (n.) கெட்ட நாற்றம்; bad smell.

*[Skt.dur> த. துர்+மணம்]*

**துர்மதி** *tur-madi,* பெ. (n.) 1. துர்ப்புத்தி, 2 பார்க்க; see durputti. 2. ஆண்டு (வருடம்) அறுபதனுள் ஐம்பத்தைந்தாவது; the 55th year of the jupiter cycle.

*[Skt.dur-mati> த. துர்மதி]*

**துர்மந்திரி** *tur-mandiri,* பெ. (n.) (கெட்ட அமைச்சன்) தீய தூண்டுகை (துர்போதனை) செய்வோன்; one who gives evil counsel, as a bad minister.

*[Skt.dur-mantrin> த. துர்மந்திரி]*

**துர்மரணம்** *tur-maraṇam,* பெ. (n.) நோயி னாலன்றித் தற்கொலை முதலிய வற்றால் நேரும் சாவு (மரணம்); unnatural death, as by drowning or hanging oneself, murder, etc. "பழித்த துர்மரண மாவார்" (குமரேச. சத.62).

த.வ. தீய இறப்பு

*[Skt.dur-maraṇa> த. துர்மரணம்]*

**துர்மலம்** *turmalam,* பெ. (n.) 1. மும்மலம்; ஆணவம்; மாயை, காமியம்; the three evil passions inherent in man egoism, dilusion and lost. 2. மலம்; faeces. *(சா.அக.)*

**துர்லபம்** *turlabam,* பெ. (n.) பெறுதற் கருமையானது; rarity, that which is difficult to obtain.

*[Skt.dur-labha> த. துர்லபம்]*

**துர்வர்ணம்** *turvarṇam,* பெ. (n.) 1. வெள்ளி; silver. 2. நோய்களின் கெட்ட குறிகளைக் காட்டும் பலவிதமான நிறங்கள்; presetation of different colours in the body by the patient according to the nature of disease which is considered as a bad symptom. *(சா.அக.)*

**துர்வாசன்** *turvāśaṉ,* பெ. (n.) எளிதிற் சினம் (கோபங்)கொள்பவரென்று பேர் பெற்ற ஒரு முனிவர்; a Ṛṣi known for his irascibility.

*[Skt.durvāsa> த. துர்வாசன்]*

**துர்வாதம்** *tur-vādam,* பெ. (n.) நேர்மையற்ற எடுத்துரைப்பு (வாதம்); vain disputation, unreasonable argument.

*[Skt.dur+vāda> த. துர்வாதம்]*

**துர்வாயகம்** *turvāyagam,* பெ. (n.) வசவு; abusive language. "பிராமணரைத் துர் வாயகம் பறைகில்" (T.A.S.iii,195).

*[Skt.dur-vācaka> த. துர்வாயகம்]*

**துரகம்** *turagam,* பெ. (n.) 1. குதிரை; horse. "துரகவாய் கீண்டதுழாய் முடியாய்" (திவ்.இயற்.3,47) 2. குதிரைபற் பாடாணம் (பாஷாணம்) (யாழ்.அக.); a mineral poison. 3. குதிரைத்தறி; a wooden contrivance for closing a breach in an embankment. "தட்டுவார் துரகங்கொடு தாங்குவார்" (அரிச்.4.நாட்டுச்.30).

*[Skt.tura-ga> த. துரகம்]*

**துரகமேதம்** *turagamēdam,* பெ. (n.) பரிவேள்வி (அசுவமேதம்); a vēdicsacrifice. "சுத்தனானது தான் பண்ணுந் துரகமே தத்தாலென்றான்" (உத்தரரா.அசுவ.8).

*[Skt.turaga-mēdha> த. துரகமேதம்]*

**துரங்கவதனன்** *turagavadanaṉ,* பெ. (n.) (குதிரை முகத்தோன்) கின்னரன்; a kinnara, celestial musician, as horse - faced.

*[Skt. turaṅga-vadana> த. துரங்கவதனன்]*

**துரங்கவேள்வி** *turaṅga-vēḷvi,* பெ. (n.) பரிவேள்வி (அசுவமேதம்); a vēdic sacrifice. "இராசசூயமுந் துரங்கவேள்வியும் பேல்வன அரசர்க்குரிய வேள்வியாம்" (தொல்.பொ.75, உரை, பக்.249).

*[Skt. tura-ga> த. துரங்கம்+வேள்வி]*

**துரதிருட்டம்** *turatiruttam,* பெ. (n.) தீயபேறு (துர்ப்பாக்கியம்); ill-luck, misfortune.

*[Skt. dur-adrṣṭa> த. துரதிருட்டம்]*

**துரந்தரி** *turandari,* பெ. (n.) பொறுப்பு கொண்டுள்ளவள் (வகிப்பவள்); woman who assumes a responsibility. "இமயத் துரைராச துரந்தரி தன்றிருமுன்" (சிவரக. நந்திகண.8).

*[Skt. dhuran-dhaa> த. துரந்தரி]*

**துரந்தரிகன்** *turandarigaṉ,* பெ. (n.) துரந்தரன்; see turandaran. "சூராதிசூர துரந்தரிகன்" (கொண்டல்விடு..320).

*[Skt. dhurandhara> த. துரந்தரிகன்]*

**துரபிமானம்** *tur-abimāṉam,* பெ. (n.) 1. முறையற்ற அன்பு (தகாதவிடத்து வைக்கப் பட்ட பிரியம்); unworthy love. 2. வீண் செருக்கு; vanity, false prides. "நுமது துரபிமானத்தின் பெருமை வியக்கற் பாலது" (சித்.மரபுகண்.21). 3. வெறுப்பு (இ.வ.); hatred.

*[Skt. dur-abhimāna> த. துரபிமானம்]*

**துராக்கிரகம்** *tur-ākkiragam,* பெ. (n.) 1. தேவையற்ற பற்று (வீணபிமானம்) (இ.வ.); false pride, vanity. 2. வீண் பகை (Madr.); unreasonable, groundless hatred. 3. அதிக ஆசை (இ.வ.); covetousness.

*[Skt. dur-āgraha> த. துராக்கிரகம்]*

**துராகதம்** *turākadam,* பெ. (n.) துராகிருதம் பார்க்க; see turākirudam. "ஆகாவி துராகதம் புரிவார் கன்னியர்கள்" (தனிப்பா; i,366,110).

**துராகிருதம்** *turākirudam,* பெ. (n.) 1. கெட்ட நடத்தை; misconduct, misdemeanour, misbehavious. 2. வலுக்கட்டாயக் (பலவ ந்தம்) கற்பழிப்பு; ravishing, outrage. "அவளைத் துராகிருதம் பண்ணினான்" 3. துன்புறுத்தல் (நிந்தை); abuse. 4. உரிமை யில்லாவிடத்து வலிய நிகழ்த்துஞ் செயல்; a deed done by force in violation of a right.

*[Skt. dur-ā-krta> த. துராகிருதம்]*

**துராசர்** *turāšar,* பெ. (n.) கெட்ட ஆசை யுடையவர்; persons having evil desire. "துராசரன்பிலர்" (பாரத.சஞ்சய.9.)

*[Skt. dur-āšā> த. துராசர்]*

**துராசாரம்** *turāšāram,* பெ. (n.) 1. தீயொழுக்கம்; depravity, vicious life, evil ways. 2. மதிப்பின்மை (அவமரியாதை) (வின்.) 3. ஒழுக்கக்கேடு (ஆசாரக்கேடு); violation of the rules of religion, of caste or of country.

*[Skt. dur-ācāra> த. துராசாரம்]*

**துராசை** *turāšai,* பெ. (n.) பொருந்தாகாமம் (தகாத இச்சை); evil desire, lust, covetousness. "துராசையெனும் பால்பருகி" (ஞானவா. உத்தால,11).

*[Skt. dur-āšā> த. துராசை]*

**துராத்தியம்** *turāttiyam,* பெ. (n.) ஏழைமை (யாழ்.அக.); poverty.

*[Skt. dur-āḍhya> த. துராத்தியம்]*

**துராத்துமா** *turāttumā,* பெ. (n.) தீயோன்; evil - mined person, scoundrel, villain.

*[Skt. dur-ātmā> த. துராத்துமா]*

**துராதுரை** *turāturai,* பெ. (n.) துரைகளுக் கெல்லாம் தலைவன் (அதிபதி); overlord, lord of lords. "துராதுரைக் கிணையுண்டோடி" (கனம் கிருட்டிணயர், கீர்த்.50).

**துராய்** *turāy,* பெ. (n.) முத்து முதலியவற்றால் அமைக்கப்பட்ட தலையணி வகை; an ornament for the head made of pearls, etc. "சொருக்கழகு முத்துத் துராயழகும்" (விறலிவிடு.)

*[U.turā> த. துராய்]*

**துராரம்பம்** *turārambam,* பெ. (n.) தீச்செயல்; evil deed. "துராரம்பங்க டீக்குணங்கள்" (ஞானவா.பசுண்.79).

*[Skt.dur-ārambha> த. துராரம்பம்]*

**துராலோசனை** *tur-ālōšanai,* பெ. (n.) தீய சிந்தனை (யோசனை); bad counsel, evil advice.

*[Skt.dur-ā-lōcanā> த. துராலோசனை]*

**துரிதம்**[1] *turitam,* பெ. (n.) 1. வேகம்; speed, quickness, expedition. "துரிதமான் நேரிற் போனான்" (கம்பரா.தைல.54). 2 ஆடல் பாடல்களில் தாள விரைவு; a quick movement in singing or dancing. "துரிதமாக்கள் விளம்பித நெறிவழாமைக் கந்தர்ப்ப மகளிராடும்" (கம்பரா.ஊர்தேடு. 106). 3. தாளத்தின் கால மாறுபாட்டில் (பேதம்) 8192 கணங்கொண்டது. (பரத.தாள.27.); (Mus.) one of the ten varieties of kalām, Which consists of 8192 kaṇam. 4. தாளத்தின் உறுப்பு (அங்கம்) வகையுள் இரண்டு அசரகாலங் கொண்டது. (பரத.தாள.35.); (Mus.) a variety of arikam, which consists of two akṣara-kāalam. 5. விரைந்த செலவினதாகிய இலய வகை (பரத.தாள.51.); (Mus.) a variety of ilayai, having a quick pace.

*[Skt.druta> த. துரிதம்]*

**துரிதம்**[2] *turitam,* பெ. (n.) 1. கரிசு, அறங்கடை (பாவம்) (சூடா.); vice, wickedness, sin, tarpitude. 2. கலக்கம் (சூடா.); agitation of mind, perturbation, confussion. 3. கேடு (வின்.); destruction, ruin, annihilation.

*[Skt.durita> த. துரிதம்]*

**துரிதம்போடு-தல்** *turidam-pōḍu,* செ.கு.வி. (v.i.) 1. காலவிரைவுபட நடித்தல்; to dance with a quick step. 2. தேவையற்ற (தகாத) ஒன்றை அடிக்கடி கேட்டு வற்புறுத்துதல்; (J.); to persist in an improper request.

*[Skt.durita> த. துரிதம்+போடு-]*

**துரிதமடித்தல்** *turidamaḍittal,* பெ. (n.) காலவிரைவுபட மத்தளமடித்தல் (வின்.); to beat drums to the quickest movement.

*[Skt.druta> த. துரிதம்+அடித்தல்]*

**துரியச்சந்தி** *turiya-c-candi,* பெ. (n.) இரவிற் செய்யும்படி விதிக்கப்பட்டுள்ள ஒழுக்கம் (அனுட்டானம்); (Saiva.) religious rites ordained to be performed after nightfall. "முடித்துநற் றுரியச் சந்தி" (தசகா.குருபூ.5).

**துரியசிவன்** *turiya-šivan,* பெ. (n.) மும்மூர்த்திகட்கும் கடந்த நிலையான (அதீதம்) சிவபெருமான். (இ.வ.); (Saiva.) Siva, as the supreme lord.

*[Skt.turya> த. துரியம்+சிவன்]*

**துரியத்தானம்** *turiya--t-tāṉam,* பெ. (n.) ஆதன் (ஆன்மா) துரிய நிலையில் அடங்கு தற்குரிய உந்திப் பேரிடம் (பிரதேசம்); a mystic region near the navel into which the soul retires in its turiyam stage. "துரியத்தானம் எனப்படும் உந்தியில்" (சி.போ.சிற்.4,3,பக்.99).

*[Skt.turya+šthāna> த. துரியத்தானம்]*

**துரியபாகம்** *turiyapāgam,* பெ. (n.) கால்பங்கு; one fourth portion.

**துரியாசிரமம்** *turiyāśiramam,* பெ. (n.) நாலாவது தவமனை (ஆசிரமம்), துறவுநிலை (சன்னியாசம்); asceticism, as the fourth stage.

*[Skt. turya+śrama> த. துரியாசிரமம்]*

**துரியாதீதத்தானம்** *turiyātīta-t-tāṉam,* பெ. (n.) ஆதன் (ஆன்மா) துரியாதீத முறையில் ஒழுங்குதற்குரிய அடிப்படை (மூலாதாரம்) நிலை அல்லது இடம் (ஸ்தானம்) சி.கோ.சிற்.4,3,பக். 99); the mūlātāram into which the soul retires in its turiyātītam stage.

*[Skt. turyātīta+sthāna> த. துரியாதீதத்தானம்]*

**துரியாதீதநிலை** *turiyātītanilai,* பெ. (n.) ஆன்மாவின் தூய்மை நிலை; the highest state of purity of the soul. *(சா.அக.)*

**துரியாதீதம்** *turiyādīdam,* பெ. (n.) 1. அடிப்படையில் (மூலாதாரம்) ஆதன் (ஆன்மா) தங்கி அவிச்சை மாத்திரையை நுகரும் (விசய்கரிக்கும்) ஐந்தாம் ஆதன் (ஆன்மா) நிலை, (சி.போ.பா.4,3,பக்.278,புதுப்.); (Saiva.) the transcendent fifth state of the soul in which it is in the mūlātāram, and is cognizant of aviccai alone. 2. நூற்றெட்டு மறைமங்களுள் (உபநிடதம்)ஒன்று; an upaniṣad, one of 108.

*[Skt. turyātīta> த. துரியாதீதம்]*

**துருக்கன்** *turukkaṉ,* பெ. (n.) 1. துருக்கி தேசத்தான்; native of Turkey. "துருக்கர்தர வந்த... வயப்பரிகள்[3] (கம்பரா.வரைக்.13). 2. முகமதியன் (அக.நி); Muhammadan.

*[Skt. turuṣka> த. துருக்கன்]*

**துருக்கி** *turukki,* பெ. (n.) 1. ஒரு நாடு; the country of Turkey. 2. துருக்கிதேயத்துக் குதிரை (வின்.); a large Turkish horse.

*[Skt. turuṣka> த. துருக்கி]*

**துருச்செய்-தல்** *turu-c-cey-,* செ.குன்றாவி. (v.t.) ஓரந் தைத்தல் (இ.வ.); to overcast in sewing.

*[E. through> த. துரு+செய்-,]*

**துருச்சொல்லு-தல்** *turu-c-collu-,* செ.குன்றா.வி. (v.t.) ஒரு வகை முறையில் மறை (வேதம்) ஓதுதல்; to recite a vēdic text in a particular mode. "சூத்திரத்திலும் சூத்திரா ரணத்திலுந் துருச்சொல்லி" (T.A.S.i,8).

**துருத்தி** *turutti,* பெ. (n.) தீய (துட்டப்) பெண்(சூடா); bad woman.

*[Skt. dhūrtā> த. துருத்தி[6]]*

**துருதம்** *turudam,* பெ. (n.) துரிதம்[1] (வின்.); quickness.

*[Skt. druta> த. துருதம்]*

**துருப்பு[1]** *turuppu,* பெ. (n.) படை (சேனை); troop, army. "துருப்புக்குஞ் சரியேறி" (தனிப்பா.i, 381,28).

*[Skt. troop> த. துருப்பு]*

**துருப்பு[2]** *turuppu,* பெ. (n.) அட்டையாட்டத்துக் குறிப்புத்தாள் (சீட்டுத்துருப்பு) (இக்.வ); trump in card game.

*[E. trump> த. துருப்பு[2]]*

**துருபதன்** *turupadaṉ,* பெ. (n.) திரௌபதியின் தந்தையாகிய பாஞ்சாலதேசத்தரசன்; a king of pāñcāla, father of Draupadi. "துங்கவேற் றுருபதன்றான் சூழ்ந்தது சொல்லலுற்றாம்" (பாரத.திரௌபதி மா.1).

*[Skt. Drupada> த. துருபதன்]*

**துருவ மண்டலம்** *turuva-maṇḍalam,* பெ. (n.) ஏழு (சப்த) மண்டலங்களுள் ஒன்றாகிய துருவப்பகுதி; region of the pole-star, one of capta-maṇṭalam.

*[Skt. dhruva> த. துருவம்+மண்டலம்]*

**துருவாசம்** *turuvāšam,* பெ. (n.) துணைத் தொன்மம் (உபபுராணம்) பதினெட்டனுள் ஒன்று (பிங்.); a seondary purāṇa, oneof18 upapurāṇam.

*[Skt.Durvāsa> த. துருவாசம்]*

**துருவாட்சரம்** *turuvāṭšaram,* பெ. (n.) மேழவோரையிலிருந்து (மேஷம்) கோள்களுக் குள்ள (கிரகம்) தொலைவு (தூர)வளவு (வின்.); the longitudinal distance of the sun or a planet from the first point of aries, at the end of synodic periods.

**துருவை** *turuvai,* பெ. (n.) 1. இசைப்பாட்டு (கீதம்) உறுப்பு நான்கனுள் ஒன்று. (சிலப்.3,150, உரை.); (Mus.) a particular piece in a musical composition, one of four kīta-v-uṟuppu. 2. மலைமகள் (பார்வதி); Pārvadī. "பிரகிரு கிதுருவையேகை" (கூர்மபு.திருக்.20).

*[Skt.dhruvā> த. துருவை]*

**துரோகம்** *turōgam,* பெ. (n.) 1. தீங்கு; harm, evil. 2. பெருங்கேடு (பாதகம்); crime, heinous offence, wrong, sin. 3. இராசத்துரோகம், சுவாமித்துரோகம், குருத்துரோகம், இனத் துரோகம், பிதிர்த்துரோகம் என்ற ஐவகை நன்றியில் செய்கை; perfidy, treason, treachery, ingratitude, of which there are five kinds, viz., irāša-t-turōgam, cuvāmi-t-turōgam, kuru-t-turōgam, iṉa-t-turōgam, pitir-t-turōgam. 4. ஏமாற்றுகை (இ.வ.); cheating, deceiving.

த.வ. இரண்டகம்

*[Skt.drōha> த. துரோகம்]*

**துரோகி** *turōgi,* பெ. (n.) 1. நம்பிக்கை இரண்டகம் (துரோகம்) செய்பவன்; betrayer, treacherous person, traitor. 2. கொடும்பாவி (யாழ்.அக.); sinner. 3. ஏமாற்றுவோன் (இ.வ.); cheat. 4. இரக்கமற்றவன் (வின்.); merciless, crruel, hard-hearted person.

த.வ. இரண்டகன்

*[Skt.drōhin> த. துரோகி]*

**துரோணம்**[1] *turōṇam,* பெ. (n.) 1. பதக்கு (பிங்.); a measure off capacity = 2 marakkāl. "துரோணந் தேனெய்" (சேதுபு.சங்கர.75). 2. எழுவான் முகிலில் (சத்தமேகம்) மண் செறியும் முகில் (மேகம்) (திவா.); a mythical cloud which rains sand, one of catta-mēgam. 3. காக்கை (பிங்.); crow, raven. 4. சரபப்புள் (திவா.); a fabulous eight - legged bird. 5. தும்பை வகை (பிங்.); a kind of white dead nettle. "துன்னிய துரோண வெண் மலரைச் சூட்டுவார்" (செவ்வந்தி,4.இந்திரச். 20). 6. தேக்கு (அக.நி.); teak. 7. கிணற் றருகிலுள்ள நீர்நிலை (வின்.); reservoir near a well. 8. தொன்னை (இ.வ.); cup.

*[Skt.drōna> த. துரோணம்]*

**துரோணம்**[2] *turōṇam,* பெ. (n.) 1. வில் (திவா.); bow. 2. வில் ஓரை (தனுராசி.) (சூடா.); sagittarius in the zodiaz.

*[Skt.druṇa> த. துரோணம்]*

**துரோணாசாரியன்** *turōṇāšāriyaṉ,* பெ. (n.) குருகுலத்தரசரின் வில்லாசிரியர்; a warrior who taught archery to Pāṇḍavasand Kurus. "துகளறு கேள்வித் துரோண வாசிரியன்" (பாரத.பதினொ.2).

*[Skt.Drōṇa> த. துரோணன்]*

**துரௌபதி** *turaubadi,* பெ. (n.) பாண்டவர் மனைவி; Draupadi, wife of the five Pāṇḍava princes.

*[Skt.Draupadi> த. துரௌபதி]*

**துலாகாவரிசுநானம்** *tulā-kāvari-šunāṉam,* பெ. (n.) துலை திங்களின் (ஐப்பசி மாதம்) சிறப்பு நாளில் காவிரியிற் செய்யப்படும் நீராட்டம்; bathing in the Kāvēri duringthe monthofAippaci, considered meritorious.

**துலாதானம்** *tulā-tāṉam,* பெ. (n.) துலா புருடதானம் பார்க்க; see tulāpuruḍatāṉam. "சாற்றருந் துலாதானம்" (சிவரக.தேவர் முறை.19).

*[Skt.tulā+sthāna> த. துலாதானம்]*

**துலாந்திரம்** *tulāndiram,* பெ. (n.) நீர் முதலியவற்றை ஏனத்தில் (பாத்திரம்) இட்டு கயிற்றால் அந்த ஏனம் (பாத்திரம்) தீயிற்படும்படி செய்து காய்ச்சும் ஒரு கருவி. (வின்.); a contrivance for boiling things.

*[Skt.dōlā+yantra> த. துலாந்திரம்]*

**துலாப்பாயசம்** *tulā-p-pāyaśam,* பெ. (n.) கோயில் படையலமுது (நைவேத்தியம்) வகை. (நாஞ்சி); a kind of rice-preparation offered in temples.

*[Skt.tulā+pāyasa> த. துலாப்பாயசம்]*

**துலாபாரம்** *tulā-bāram,* பெ. (n.) 1. பார்ப்பானுக்குத் (பிராமணன்) தானம் செய்யும் பொருட்டு அரசன் போன்றோர் ஒரு தட்டில் பொன்னும் ஒரு தட்டிற் றாமுமாக இருந்து பொன்னிறுக்குஞ் சடங்கு; ceremony of weighing a great person like a king against gold, which is then offered as a gift to Brahmins. "துலாபுருடமண்டபங் கட்டித் துலாபாரந் தூக்கி" (கோயிலொ.12). (I.M.P.Tj.412). 2. துலா புருடதானம் பார்க்க; see tulapurudatāṉam. அவன் துலாபாரம் வாங்கினான்.

*[Skt.tulā+bhāra> த. துலாபாரம்]*

**துலாபாரவரி** *tulābāravari,* பெ. (n.) வரிவகை (S.I.I.vii,403); a tax.

*[Skt.tulābhara> த.துலாபாரம்+வரி]*

**துலாபுருடதானம்** *tulā-puruḍa-tāṉam,* பெ. (n.) ஒருவன் தனது நிறையுள்ள பொன்னைப் பார்ப்பானுக்குக் கொடுக்கும் கொடை (கோயிலொ.); ceremonial gift of Brahmins of gold equal to a person's weight.

*[Skt.tula+puruṣa> த. துலாபுருடன்+தானம்]*

**துலாபுருடம்** *tullā-puruḍam,* பெ. (n.) துலாபுருடதானம் பார்க்க; see tulā puruḍatāṉam. "மூதறிவுடைய நீரார் மொழி துலாபுருடமென்பார்" (கூர்மபு.தான.19).

*[Skt.tulā+puruṣa> த. துலாபுருடம்]*

**துலாபுருடமண்டபம்** *tulā-puruḍa-maṇ-ḍabam,* பெ. (n.) துலைபாரம் ஏறும் மண்டபம்; a hall where tulābāram, is conducted.

*[Skt.tulā+puruṣa> த. துலாபுருடன்+மண்டபம்]*

**துலாவிசுவம்** *tulā-viśuvam,* பெ. (n.) துலாம் ஓரையில் (ராசி) கதிரவன் புகுங்காலம்; autumnal equinoctial point whence the apparent course of the sun turns from north to south; the first point of libra.

*[Skt.tulā+viṣuva> த. துலாவிசுவம்]*

**துலுக்கச்செவ்வந்தி** *tulukka-c-cevvandi,* பெ. (n.) செடி வகை (வின்.); African marigold.

*[Skt.turuṣka> த. துலுக்கம்+செவ்வந்தி]*

**துலுக்கன்** *tulukkaṉ,* பெ. (n.) துருக்கி நாட்டினன்; Mussalman, Turk. "டில்லீ சுவரனான துலுக்கன்" (கோயிலொ.21).

*[Skt.turuṣka> த. துலுக்கன்]*

**துலுக்காணம்** *tulukkāṇam,* பெ. (n.) 1. துருக்கித்(ஸ்)தானம் என்ற நாடு; Turkestan, as the original home of the Turks. "மக்க மராடந் துலுக்காண மெச்சி" (குற்றா.குற.60;1); 2. துருக்க அரசாண்மை (ராஜ்யம்) (வின்.); Muhammadan dominion. 3. கட்டரங்கு (சதுரங்கம்) விளையாட்டு வகை (வின்.); a game of chess. 4. துருக்கத் தொடர்பானது (வின்.); anything Turkish.

*[Skt.turuṣka> த. துலுக்காணம்]*

**துலுக்காணியம்** *tulukkāṇiyam,* பெ. (n.) துலுக்காவணம் பார்க்க; see tulukkāvaṇam. "இப்படித் துலுக்காணியமாக இருக்கும் நாளையில்" (மதுரைத்தல.பக்.2).

**துலுக்காவணம்** *tulukkā-v-aṇam,* பெ. (n.) துருக்க அரசாட்சி; Muhammadan rule. "துலுக்காவணத்திலே அக்கினி பாதையால் சேதமாகையாலே" (கோயிலொ.138).

**துவக்கு** *tuvakku,* பெ. (n.) துமுக்கி (துப்பாக்கி) *(யாழ்ப்.)*; gun, firelock, musket.

*[Turk.tupāk> த. துவக்கு]*

**துவசங்கட்டு-தல்** *tuvašaṅ-kaṭṭu-,* செ.கு.வி. (v.i.) 1. வெற்றி முதலியன குறிப்பதற்குக் கொடியேற்றுதல்; to hoist a flag, erect a banner, as a challenge or as a sign of victory. 2. முயன்று நிற்றல்; to set about a thing with the utmost zeal and energy, especially in a bad cause. 3. எதிராளியாய் நிற்றல் (உ.வ.); to be defiant.

*[Skt.dhvja> த. துவசம்+கட்டு-,]*

**துவசத்தம்பம்** *tuvaša-t-tambam,* பெ. (n.) கோயிற் கொடிக்கம்பம்; flag - staff in a temple, pillar or columnerected before a temple having a vertical wooden frame at the top to represent a flag.

*[Skt.dhvaja+tamba> த. துவசத்தம்பம்]*

**துவசம்** *tuvašam,* பெ. (n.) 1. கொடி (பிங்.); banner, flag. "துவசமார் தொல்லமருள்" (கம்பரா.சரபங்கர்.26.) 2. அடையாளம்; sign. 3. ஆண்குறி; virile membrum. 4. மரவுரி (இலக்.அக.); bark, used, as dress. 5. கள்ளுக்கடை முதலியவற்றில் அவ்வவ் வாணிபம் (வியாபாரம்) குறிக்க சமைக்கும் குறி; the sign of any trade, especially of a tavern.

*[Skt.dhvaja> த. துவசம்]*

**துவசாரோகணம்** *tuvašārōgaṇam,* பெ. (n.) 1. கோயில் திருவிழாத் தொடக்கத்தில் நிகழும் கொடியேற்றம். 2. தொடக்கம் (ஆரம்பம்) (உ.வ.); beginning.

*[Skt.dhvaja+ārōhaṇa> த. துவசாரோகணம்]*

**துவசாவரோகணம்** *tuvašāvaṛogaṇam,* பெ. (n.) கோயில் திருவிழா இறுதியில் நிகழும் கொடியிறக்கம்; ceremonial lowering of flag in a temple at the commencement of the annual festival.

*[Skt.dhvaja+avarōhaṇa> த. துவசாவரோகணம்]*

**துவட்டா** *tuvaṭṭā,* பெ. (n.) தெய்வத்தச் சனாகிய விசுவகருமன்; Višvakarmā, the architect of the gods. "துவட்டா வீன்ற தனயன்" (திருவிளை.இந்திரன்–பழி.8).

*[Skt.Tvaṣṭā> த. துவட்டா]*

**துவந்தன்** *tuvandaṉ,* பெ. (n.) துவந்துவ துக்கத்திற்கு இடமாயிருப்பவன்; person subject to tuvantuva - tukkam. "ஐயா துவந்தனை நாயேனை" (அஷ்டப். திருவேங்கடத்தந்.14).

*[Skt.dvandva> த. துவந்தன்]*

**துவந்தனை** *tuvandaṉai,* பெ. (n.) 1. பந்தம்; bondage. "துவந்தனைப் பிறப்பையு பிறப்பையும்" (பாரத. கிருட்.77). 2. தடை; hindrance "எத்துவந்தனைகளு நீக்கி" (அருட்பா, vi,சற்குருமணி 8). 3. வேதனை (வின்.); *vexation.*

*[Skt.dvandva> த. துவந்தனை]*

**துவந்தி-த்தல்** *tuvandi-,* 4 செ.குன்றா.வி. (v.t.) தொடர்புறுதல்; to get bound up or attached "அவிரோதமாக ஒன்றை யொன்று துவந்தித்துத் தோன்றுமென்று சொன்னது" (சி.சி.2,65,சிவாக்.).

*[Skt.dvandva> த. துவந்தி-]*

**துவந்துவசமாசம்** *tuvanduva-šamāšam,* பெ. (n.) உம்மைத்தொகை (வீரசோ.தொகை. 2,உரை); a copulative compound.

*[Skt.dvandva+samāsa> த. துவந்துவசமாசம்]*

**துவந்துவதுக்கம்** *tuvanduvadukkam,* பெ. (n.) நலதுன்பம் (சுகதுக்கம்) பருவகால மாறுதல் (சீதோஷ்ணம்) என்பன போன்று தம்முன் மாறுபட்ட இரு வகை நிலைகளாலுண்டாகும் துன்பம்; distress from pairs of opposite

conditions or qualities, such as cukatukkam, *cītōṣṇam.*

*[Skt.dvandva+duhkha> த. துவந்துவம்+துக்கம்]*

**துவந்துவம்** *tuvanduvam,* பெ. (n.) 1. இரட்டை; two, pair, couple, as male and female, brace. 2. தம்முள் மாறுபட்ட இரு வகை நிலை; pair of opposites, as cold and heat, profit and loss, joy and sorrow. "துவந்துவங்கடுய்மை செய்து" (திருவாச. 40,3). 3. துவந்துவ சமாசம் (வீரசோ. தொகை.2) பார்க்க: *see tuvanduva šamāšam.* 4. நோய்களின் பிணைப்பு; complication, as of disease. "வியாதி துவந்துவப் பட்டுக் காண்கிறது". 5. சண்டை; fight, duel.; அவனுக்கும் இவனுக்கும் துவந்துவம்". 6. ஐயம் (சந்தேகம்); doubt. "காரிய முடிவு துவந்துவமாயிருக்கிறது" 7. தொடர்பு; union, connection. "அவனுக்கு அவளோடு துவந்துவமுண்டு. 8. பழவினைத் தொடர்பு. (இ.வ.); karma.

*[Skt.dvandva> த. துவந்துவம்]*

**துவம்[1]** *tuvam,* பெ. (n.) அசையாநிலை; fixedness, immutability, stability, permanence. "துவமிகு முனிவரோடு" (பாரத.பதினெட்டாம்.126).

*[Skt.dhruva> த. துவம்[1]]*

**துவம்[2]** *tuvam,* பெ. (n.) இரண்டு (தைலவதைல.); two.

*[Skt.dvi> த. துவம்[2]]*

**துவம்[3]** *tuvam,* பெ. (n.) பண்புணர்த்தும் ஒரு வடமொழி ஈறு (விகுதி); a Sanskrit suffix in abstract nouns. "சந்தத்துவம்போலெனச்சாற்றிடுதல்" (மணி.29,273).

*[Skt.tva> த. துவம்[3]]*

**துவம்சம்** *tuvamšam,* பெ. (n.) (அ.வ.) அழிவு, நாசம்; destruction (utter) ruin. "மாடு வயலில் புகுந்து பயிர்களைத் துவம்சம் செய்தது / விமானங்கள் குண்டு வீசி நகரம் இருந்ததே தெரியாதபடி துவம்சம் செய்து விட்டன". *(க்ரியா)*

**துவயம்** *tuvayam,* பெ. (n.) 1. இரண்டு; two. "மாதத்துவயம்" 2. இரண்டு சொற்றொடரிய (வாக்கிய)மாய் திருமாலைப் பற்றி அமைந்த மந்திர சிறப்பு (விசேடம்); (Vaiṣṇ)a mantra of two sentences.

*[Skt.dvaya> த. துவயம்]*

**துவரிதம்** *tuvaritam,* பெ. (n.) விரைவு (உ.வ.); rapidity, quickness.

*[Skt.tvarita> த. துவரிதம்]*

**துவரிதன்** *tuvaritaṉ,* பெ. (n.) விரைந்து தொழிலியற்றுவோன்; quick, active person. "துவரிதனுடைய பராஸக்தியில்" (திவ். திருவாய்.6,1,பன்னீ.ப்ர.).

*[Skt.tvarita> த. துவரிதன்]*

**துவா** *tuvā,* பெ. (n.) தொழுகை (இ.வ.); Prayer.

*[Ar.duā> த. துவா]*

**துவாசந்தி** *tuvāšandi,* பெ. (n.) ஒரு வகை அராகம்; (Mus.) a kind of tune.

*[Skt.dhruvāsandhi> த. துவாசந்தி]*

**துவாட்சரி** *tuvāṭcari,* பெ. (n.) இரண்டு இனவெழுத்துக்களால் (வர்க்கம்) இயன்ற செய்யுள் வகை (யாழ்.அக.); a stanza formed only of two series of vowel-consonants.

*[Skt.dvyakṣarī> த. துவாட்சரி]*

**துவாட்டரம்** *tuvāṭṭaram,* பெ. (n.) 1. ஒன்றுக்கும் உதவாதவ–ன்–ள்; useless, good - for - nothing person. 2. அருவருக்கத்தக்க பொருள்; ugly disgusting thing.

**துவாட்டிரம்** *tuvāṭṭiram,* பெ. (n.) இரவு 15 முழுத்தத்துள் (முகூர்த்தம்) பதினான்காவது (விதான.குணாகுண.73,உரை); the 14th of 15 divisions of night.

*[Skt.tvvāṣṭra> த. துவாட்டிரம்]*

**துவாதசாந்தம்** *tuvādašāndam,* பெ. (n.) 1. உச்சிக்கு மேல் பன்னிரண்டு விரலகலம் (அங்குலம்) உள்ளதாகக் கருதப்படும் ஓகவிடம் (யோகஸ்தானம்.); (Yōga) a mystic centre which is believed to be 12 in above the

crown. "துவாதசாந்தப் பெருவெளி" (குமர. பிடி.மீனாட்.பிள்ளை.42.) 2. ஒகத்தில் (யோகம்) பன்னிரண்டாமவத்தை (வின்.); (yōga.) the 12th and last stage of experience of the soul in yōga practice.

*[Skt. dvāda-šānta> த. துவாதசாந்தம்]*

**துவாதசி** *tuvādaši,* பெ. (n.) பன்னிரண்டாம் நாள் (திதி.); the 12th day of the lunar fortnight. "மான்மகிழுந் துவாதசியில்" (சேதுபு.துராசா. 33).

*[Skt. dvādaši> த. துவாதசி]*

**துவாபரயுகம்** *tuvāparayugam,* பெ. (n.) 8,64,000 ஆண்டுகள் (வருடம்) கொண்ட மூன்றாம் ஊழி (யுகம்.); the third of the four yugas, consisting of 8,64,000 years.

*[Skt. dvāpara+yuga> த. துவாபரம்+யுகம்]*

**துவாய்** *tuvāy,* பெ. (n.) (இலங்.) (துடைக்கும்) துண்டு, துணித்துண்டு (துவாலை); towel. "துவாயால் முகத்தைத் துடைத்துக் கொண்டான்". *(க்ரியா)*

*[E. towal> த. துவாய்]*

**துவாரகாபுரி** *tuvārakāpuri,* பெ. (n.) துவாரகை பார்க்க; see tuvāragai.

*(துவாரகை+புரி)*

**துவாரகை** *tuvāragai,* பெ. (n.) 1. குசராத்தில் இருங்கோவேள் பாண்டிய மரபினரால் 49 தலைமுறைகளாக ஆளப்பட்டதும் கி.மு.ஏழாம் நூற்றாண்டு வரை தமிழர் வாழிடமாக இருந்ததுமாகிய செம்புருக்கி வார்த்த கோட்டை சூழ்ந்த துவரை மாநகர்; Tuwarai capital of Irunkōvēḷ Pandyas before 700 B.C. in Gujarat. 2. ஆரியர் வரவுக்குப் பின் சத்தபுரியு ளொன்றாயதும் கடலாற் கொள்ளப் பட்டதென்று கருதப்படுவதும் கண்ண பெருமான் (பிரான்) அரசு புரிந்ததாகக் கருதப்படுவதுமான நகரம்; the capital of Krṣṇa on the western side of Gujarat, supposed to have been submerged by the sea, one of catta-puri, q.v.

*[Skt. dvārakā> த. துவாரகை]*

**துவாரசமுத்திரம்** *tuvārašamugttiram,* பெ. (n.) தற்காலம் அளெபீடு என வழங்கும் வல்லாளவரசர் தலைநகர் (Insc.); Dōrasamudra, capital of the Hoysala Ballālās, founded in the 12th century, modern Halebid in Mysore.

**துவாரசாகை** *tuvārašāgai,* பெ. (n.) மடக்குக் கதவு (யாழ்.அக.); folding door.

*[Skt. dvāra+šākhā> த. துவாரசாகை]*

**துவாரபாலகர்** *tuvāra-bālagar,* பெ. (n.) 1. வாயில் காப்போர்; door keepers, warderns. 2. கோயிலின் வாயில் காவற் றெய்வங்கள்; deitiess guarding the inner shrine of a Hindu temple. "துவாரபாலகர் எழுவராவார்" (சைவச.பொது.498,உரை).

**துவாரபாலர்** *tuvāra-bālar* பெ. (n.) துவாரபாலகர் பார்க்க; see tuvārabālagar. "தண்டலி றுவாரபாலர் சயனொரு விசயனென் பார்க்கு" (மச்சபு.உத்த.1,10).

**துவாரபிண்டி** *tuvāra-piṇḍi* பெ. (n.) வாசற்படி (யாழ்.அக.); door - step.

**துவாரம்** *tuvāram* பெ. (n.) 1. துளை (திவா.); hole, opening, slit, perforation. 2. மனை வாயில் (பிங்.); gateway, main entrance. 3. வழி; passage, avenue, outlet. 4. மூலம்; instrumentality, means.

*[Skt. dvāra> த. துவாரம்]*

**துவாரமண்டபம்** *tuvāramaṇḍabam,* பெ. (n.) கோயிலின் உள்மண்டபம் (M.M.); inner porch of a temple.

(துவாரம்+மண்டபம்)

*[Skt. dvāra> த. துவாரம்]*

**துவாரா** *tuvārā*, வி.எ. (adv.) மூலமாய்; through, by means of. "ஞானேந்திரியத் துவாரா வஸ்துக்களை யறிவது" (சி.சி.1, அளவை.சிவாக்.).

*[Skt. dvāra> த. துவாரா]*

**துவாரை** *tuvārai*, பெ. (n.) துவாரகை பார்க்க; see tuvāragai. "ஆயனும் புறகிட வவன்றுவாரையும்" (சிவதரு.சென்ன.55).

*[Skt. dvārakā> த. துவாரை]*

**துவிகு** *tuviku*, பெ. (n.) எண் தொடர்ந்தியன்ற பண்புத்தொகை (பி.வி.20.); a kind of panbuttogai in which the first member is a numeral.

*[Skt. dvigu> த. துவிகு]*

**துவிச்சக்கரவண்டி** *tuvi-c-cakkara-vandi*, பெ. (n.) மிதிவண்டி, ஈருருளி; bicycle.

*[Skt. dvi> த. துவி+சக்கரவண்டி]*



**துவிதம்¹** *tuvidam*, பெ. (n.) இருமை; doubleness, quality. "துவிதமோ சிற்றறிவது" (தாயு.மௌனகுரு.10).

*[Skt. dvitā> த. துவிதம்¹]*

**துவிதம்²** *tuvidam*, பெ. (n.) துவைதம் பார்க்க; see tuvaidam.

*[Skt. dvaita> த. துவிதம்²]*

**துவிதா** *tuvita*, வி.எ. (adv.) இரு வகையாக; in two ways. "துவிதா சத்திருபாதத்தாற் கழிப்பன் மலம்" (சி.சி.8,2).

*[Skt. dvēdhā> த. துவிதா]*

**துவிதியை** *tuvitiyai* பெ. (n.) 1. இரண்டாந்திதி (பெரியவரு.); the second day of a bright or dark fortnight. 2. இரண்டாம் வேற்றுமை; (Gram.) second case. 3. கோஆமணகம் (ரோசனை) (தைலவ.தைல.); bezoar.

*[Skt. dvitīyā> த. துவிதியை]*

**துவிபதை** *tuvi-padai*, பெ. (n.) இசைப்பலகை; a kind of musical composition. "கட்கா துவிபதை திரிபதை தண்டகம் முதலியன" (கோபாலகிருஷ்ணபாரதி.86).

*[Skt. dvi-pada> த. துவிபதை]*

**துவிபாசிகன்** *tuvipāšigan*, பெ. (n.) 1. இடை நின்று மொழி பெயர்த்துச் சொல்லுவோன்; interpreter. 2. ஐரோப்பியரின் வாணிகத்தில் (வியாபாரம்) இடை நின்றுதவும் இந்தியத் தரகன்; Indian agent attached to a European mercantile firm, acting as broker.

*[Skt. dvi-bhāṣika> த. துவிபாசிகன்]*

**துவிவேசரை** *tuvivēšarai*, பெ. (n.) இரண்டு கோவேறு கழுதைகளால் இழுக்கப்படும் வண்டி வகை (யாழ்.அக.); a kind of carriage drawn by two mules.

*[Skt. dvi-vēšara> த. துவிவேசரை]*

**துவேசம்** *tuvēšam*, பெ. (n.) 1. பகை; hatred, enmity. 2. வெறுப்பு; aversion, dislike.

*[Skt. dvēṣa> த. துவேசம்]*

**துவேசி¹-த்தல்** *tuvēši-*, 11.செ.குன்றா.வி. (v.t.) 1. பகைத்தல்; to hate. 2. வெறுத்தல்; to dislike, to be averse to.

*[Skt. dvēṣa> த. துவேசி-]*

**துவேசி**[2] *tuvēśi*, பெ. (n.) 1. பகைவன்; enemy. 2. வெறுப்பவன்; one who abhors.

*[Skt. dvēṣin> த. துவேசி[2]]*

**துவைதம்**[1] *tuvaidam*, பெ. (n.) மத்துவா சாரியரால் பரப்புரை(பிரச்சாரம்) செய்யப் பெற்றதும் சிற்றுயிரும் (சீவான்மா) பரமான் மாவும் வேறு வேறெனக் கொள்ளப்படுவது மாகிய சமயம்; dualism, the doctrine that the supreme soul is essentially different from the human soul and from the material world, expounded by Madhvācārya, opp. to attuvaidam.

*[Skt. dvaita> த. துவைதம்[1]]*

**துவைதம்**[2] *tuvaidam*, பெ. (n.) துவை தீபாவம், 2 பார்க்க; see tuvaitīpāvam,2. "தடத்திரு மன்னவர் தம்மின் மாறு கொண் டிடப்பொது விருத்தலே துவைதமென்பரால்" (இரகு. திக்குவி.22).

*[Skt. dvidhā> த. துவைதம்[2]]*

**துவைதி** *tuvaidi*, பெ. (n.) இருமைக் (துவைதம்) கொள்கையைப் பின்பற்றுபவன்; follower of the doctrine of śrī Madhvācārya.

*[Skt. dvaiti> த. துவைதி]*

**துவைதீபாவம்** *tuvaitīpāvam*, பெ. (n.) 1. தனக்கு மேம்பட்ட பகைவரின் படைகளைப் பலவிடங்களிலிருந்து தாக்குமாறு தன் படைகளை (சேனை) கூட்டங்கூட்டமாகப் பிரித்துவைக்கை. (சுக்கிர நீதி, 334); dividing one's army into small groups for encountering a superior enemy at different points. 2. பகைவரிருவரைத் தம்முட் பொருமாறு செய்து இருவருக்கும் நட்பாக நடித்துத்தான் பொதுப்பட விருக்கை; keeping apparently friendly relationship with two of one's enemies who are with two of one's enemies who are fighting with each other.

*[Skt. dvai-bhībhāva> த. துவைதீபாவம்]*

**துன்மதி** *tuṉ-madi*, பெ. (n.) 1. மூடம்; folly. "கண்டுகொள்ளார் தொண்டர் துன்மதியால்" (தேவா.414,6). 2. கெடுமதி; ill-nature, wickedness. 3. தீயோன்; wicked person. "சுடுதியைத் துகிலிடைப் பொதிந்த துன்மதி" (கம்பரா.விபீடண.47). 4. வடமொழியாளர் ஆண்டு (வருடம்) அறுபதனுள் ஐம்பத்தைந் தாவது; the 55th year of the jupiter cycle.

*[Skt. dur+mati> த. துன்மதி]*

**துன்மரணம்** *tuṉ-maraṉam*, பெ. (n.) நோயினாலன்றித் தற்கொலை முதலிய வற்றால் நேரும் சாவு (மரணம்); unnatural death. "துன்மரணம் புக்கிறந்தோர்" (குற்றா. நல.வடவருவி.46).

*[Skt. dur+maraṇa> த. துன்மரணம்]*

**துன்மார்க்கம்** *tuṉ-mārkkam*, பெ. (n.) தீநெறி; evil life, vicious course of conduct, vice, immorality. "வாய் வாதமிட்டுலறி வருந்து கின்ற துன்மார்க்கத்தை" (அருட்பா, அவலத்தமுங்கல்,2).

த.வ. தீவழி

*[Skt. dur+mārga> த. துன்மார்க்கம்]*

**துன்மார்க்கன்** *tuṉ-mārkkaṉ*, பெ. (n.) தீநெறியோன்; vicious man. "சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்கனேனையும்" (தாயு. சின்மயா.26).

*[Skt. dur+mārga> த. துன்மார்க்கன்]*

**துன்முகன்** *tuṉmugaṉ*, பெ. (n.) 1. குதிரை; horse. 2. சிங்கம்; lion.

*[Skt. dur-mukha> த. துன்முகன்]*

**துன்முகி** *tuṉmugi*, பெ. (n.) 1. தீய முகத் தோற்றமுள்ளவன்; wicked - looking person. 2. வடமொழியாளர் ஆண்டு (வருடம்) அறுபதனுள் முப்பதாவது; the 30th year of the jupiter cycle.

*[Skt. dur+mukhin> த. துன்முகி]*

**துன்னிமித்தம்** *tunnimittam*, பெ. (n.) தீக்குறி (அபசகுனம்); ill omen. "துன்னிமித்தங்களெங்கணும் வரத் தொடர்வ" (கம்பரா.யுத்த.மந்திரப்.95).

*[Skt.dur+ni-mitta> த. துன்னிமித்தம்]*

**துன்னீதி** *tunnidi*, பெ. (n.) துன்னெறி (யாழ்.அக.) பார்க்க; see tunneri.

*[Skt.dur+niti> த. துன்னீதி]*

**தூசணம்**[1] *tūšaṇam*, பெ. (n.) 1. இகழ்ச்சி (நிந்தை); abuse, calumny, contumely, insult. 2. வசைச் சொல் (நிந்தைச்சொல்); abusive language. 3. அவையல்கிளவி (அசப்பியம்) சொல். (வின்.); obscenity, ribaldry, vulgarity. 4. தெய்வத்தை இகழுதல் (தேவதூஷணம்) (chr.); blasphemy. 5. கண்டனம்; criticism, blame.

*[Skt.dūṣaṇa> த. தூசணம்]*

**தூசணம்**[2] *tūšaṇaṉ*, பெ. (n.) இராவணன் தம்பி முறையான அரக்கன்; a Rākṣasa, a cousin of Rāvaṇa.

*[Skt.Dūṣaṇa> த. தூசணன்]*

**தூசணன்**[3] *tūšaṇaṉ*, பெ. (n.) பிறரைப் பழிப்போன் (நிந்தித்தல்); reviler, one who abuses another. "தூசணன் சண்டாளன்" (நீதிசாரம்,98).

*[Skt.dūṣaṇa> த. தூசணன்]*

**தூசனம்** *tūšaṇam*, பெ. (n.) வசைச் (நிந்தை) சொல்; abusive language. "தூசனஞ் சொல்லுந் தொழுத்தைமாரும்" (திவ்.பெரியாழ்.2,9,8.)

*[Skt.dūṣaṇa> த. தூசனம்]*

**தூசி–த்தல்** *tūši-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. பழித்தல்; to revile, calumniate, slander. 2. இறைவனைப் பழித்தல் (கிறித்து); to blaspheme, vilify sacred things.

*[Skt.dūṣ> த. தூசி–த்தல்]*

**தூசியாதி** *tūšiyādi*, பெ. (n.) கந்தகம் கலந்த ஒரு வகை நஞ்சு (அஞ்சனபாஷாணம்.); a poisonous compound of sulphate of antimony. *(சா.அ.)*

**தூடணம்** *tūḍaṇam*, பெ. (n.) வழு, குற்றம்; defect, fault. "அவ்வியாத்தி அதிவியாத்தி அசம்பவம் என்னும் தூடணங்களும்" (இலக்.வி.897,உரை).

*[Skt.dūṣaṇa> த. தூடணம்]*

**தூடணன்** *tūḍaṇaṉ*, பெ. (n.) இராவணன் தம்பி முறையான அரக்கன்; a Rākṣasa. "தூடணன் நிரிசிராத் தோன்ற லாதியர்" (கம்பரா.கரன்.51). ]

*[Skt.dūṣaṇa> த. தூடணன்]*

**தூடிதம்** *tūḍidam*, பெ. (n.) கெடுக்கப்பட்டது; that which is spoiled or made dirty. "மலத்தாற் றூடிதமென் மூத்திரத்துவம்" (சிவதரு.பரிகார.6).

*[Skt.dūṣita> த. தூடிதம்]*

**தூபக்கால்** *dūba-k-kāl*, பெ. (n.) நறும்புகைக் காட்டுங் (தூபம்) கருவி; censer - stand. "பெருந்தகைய தூபக்கா ரீபக்கால்" (திருவிளை.மூர்த்திவி.28).

*[Skt.dhūpa> த. தூபம்+கால்]*

**தூபங்காட்டு–தல்** *dūbaṅkāṭṭu-*, செ.கு.வி. (v.i.) 1. கடவுள் முதலியோர்க்கு நறும்புகை காட்டுதல்; to offer incense, as before an idol. 2. படையலமுது (நிவேதனம்) செய்தல் (இ.வ.); to make an offering.

*[Skt.dhūpa> த. தூபம்+காட்டு]*

**தூபம்** *dūbam*, பெ. (n.) 1. நறும்புகை; incense, fragrant smoke, aromatic vapour. "சலம்பூவொடு தூபமறந்தறியேன்" (தேவா.946,6). 2. புகை; smoke, fume. "தூபமுற்றிய காரிருள்" (கம்பரா.கைகேசி சூழ்.61). 3. நெருப்பு; fire. "அழலுந் தூபமின்றி"

(இரகு.திக்குவி.139). 4. நிமிர்ந்த நடுவிரலும் சுட்டுவிரலும் பாதிப்பட வளைய நிற்கும் இணையாவினைக்கை வகை. (சிலப்.3,18, உரை.); (Nātya) a gesture with one hand in which the fore finger and the middle finger are united and half bent. 5. கடம்பு² (பிங்.); common cadamba. 6. வெள்ளைக் குந்துருக்கம் (L); piny varnish. 7. நீண்ட மர வகை (L); white piny varnish, vatica roxburghiana. 8. கருங்குங்குலியம்; black.

*[Skt. dhūpa> த. தூபம்]*

**தூபம் போடு-தல்** *tūbam-pōḍu-*, செ.கு.வி. (v.i.) சினப் பரப்பரப்பு (ஆவேசம்) வருவதற்கு நறும்புகை (தூபம்) விடுதல் (உ.வ.); to burn incense invoking a spirit to possess a person or reveal itss presence in him. 2. முகமன் (இச்சகம்) பேசுதல்; to talk in flattering terms. 3. தூண்டிவிடுதல் (உ.வ.); to incite, stirup.

*[Skt. dhūpa> த. தூபம்+போடு-,]*

**தூபயோகம்** *tūba-yōgam*, பெ. (n.) செவ்வாயின் மீத்தலைவனுக்கும் (மிசாதிபதி), திங்கள் பிறப்போரையின் தலைவனுக்கும் (சநதிரலக்கினாதிபதி) ஐந்து ஒன்பதிற வெள்ளிக்கோளிருக்கப் (சுக்கிரன்) பத்தா மிடத்தில் காரிக்கோள் (சனி) உச்சமா யிருந்தலால் உண்டாம் நல்ஓகம் (சுபயோகம்) (சங்.அக.சோதிடக்கடல்); (Astrol.) an ausicious yōga, in which the house occupied by venus is the fifth house from that occupied by the lord of Mars' Navāṃša,and ninth from that occupied by the Moon in the Rāši diagram with saturn in exaltation in the tenth house from the ascendant. 2. ஓரையின் அதிபதி (இலக் கினாதிபதி) நின்ற அங்கிசத்தின் தலைவன் (அதிபதி) ஐந்தா மிடத்திலிருக்க அதனை வெள்ளிக்கோள் (சுக்கிரன்.) பார்க்கில் வரும் ஓகம் (யோகம்); (Astrol.) an auspicious Yōga inwhichthelordofthe Navāṃša occupied by the lord of the ascendant stands in the fifth house from the ascendant, with venus aspecting it.

**தூபவருக்கம்** *tūbavarukkam*, பெ. (n.) நறும் புகையுண்டாக்குதற்கு உரிய பண்டத்தொகுதி (வின்.); articles of incense.

*[Skt. dhūpa+varga> த. தூபவருக்கம்]*

**தூபாரத்தி** *tūbāratti*, பெ. (n.) 1. நறும்புகை (தூபம்) காட்டுகை; offering of incense. 2. தூபக்கால் பார்க்க; see dūbakkāl.

*[Skt. dhūpa+arātrikā> த. தூபாரத்தி]*

**தூபி** *tūbi*, பெ. (n.) 1. கோபுரத்தின் உயரம் (விமான சிகரம்.); Pinnacle, as of a tower, temple, palace, etc., finial. 2. கோபுரம்,; tower. "தூல லிங்கமாந் தூபி" (சைவச. பொது.127). 3. மலைமுகடு (மலைச்சிகரம்); mountain peak. "தூபிச் செம்பொன் வியன் மணி-கஞலும் வேரம்" (கந்தபு.நகரழி.5.) 4. உச்சி (யாழ்.அக.); top, roof, as of a house.

*[Skt. stūpa > த. தூபி]*

**தூபிகை** *tūbigai*, பெ. (n.) தூபி பார்க்க; see dūbi. "தூபிகைச் சூளிகை பலபல தொட்டு வீசினான்". (கந்தபு.நகரழி.22).

*[Skt. stūpikā> த. தூபிகை]*

**தூம்பிரரோகம்** *tūmbira-rōgam*, பெ. (n.) கண்களிற் புகைகம்மியதுபோலச் செய்யும் நோய் வகை. (சீவரட்.257); an eye-disease.

*[Skt. dhūmra+roga> த. தூம்பிரரோகம்]*

**தூமம்** *tūmam*, பெ. (n.) 1. புகை; smoke. "தூமவே லரக்கர்" (கம்பரா.வேள்வி.49). 2. நறும் புகை மணம்; perfume. "தூமங்கமழ் பூந்துகில்" (சீவக.1070). 3. நறும்புகை (தூபம்) கலசம்; censer. "பொங்கு தூமக் கொழு மென் புகை" (சீவக.2592). 4. தூமபுடம் பார்க்க; see dūmapuḍam. "வெங்கதிர்மே னான்கிராசி பன்மூன்று விளங்குபாகந் தங்கிடத் தூமம்"

(விதான.குணாகுண.54). 5. மட்கலஞ்சுடுஞ் சூளை (யாழ்.அக.); potter's kiln. 6. தூமகேது பார்க்க; see tūmakēdu. "தூமந் தோன்றினும்" (புறநா.117). 7. இறந்தவர்கள் வாழும் உலகத்துக்கு (பிதிர்லோகம்) போகும் வழியில் முதலிற் சந்திக்கும் ஒரு கடவுள் (தேவதை); a deity first met with on the way to the world of the manes. தூமாதி மார்க்கம். 8. மரவகை (பைஷஜ); entire leaved tree of heaven. 9. கொடி வகை (L.); bristy trifoliate vine.

*[Skt.dhūma > த. தூமம்]*

**தூர்ச்சடி** *tūrccaḍi*, பெ. (n.) பாரமான சடை தரித்த சிவன்; Siva, as wearing heavy matted locks. "யூதிகாத்துவாரப் பதிவயிற் றூர்ச்சடியெனவும்" (காஞ்சிப்பு.இருபத்.106).

*[Skt.Dhūrjaṭi > த. தூர்ச்சடி]*

**தூர்ணகம்** *tūrṇagam*, பெ. (n.) காசுமீர தேசத்து நெல்; a species of paddy grown in Kashmir. *(சா.அ.)*

**தூர்த்தன்** *tūrttaṉ*, பெ. (n.) 1. காமவெறியன் (திவா.); debauchee, libertine. 2. பரத்தமை கொண்டொழுகுவோன்; a dissolute man fond of prostitutes. "விடருந் தூர்த்தரும்" (மணிமே.14,61). 3. கொடியோன்; wicked person. "தூர்த்தர் மூவெயிலெய்து" (தேவா.628,3).

*[Skt.dhūrta > த. தூர்த்தன்]*

**தூரதிருட்டிக்கண்ணாடி** *tūratirutti-k-kaṇṇāḍi*, பெ. (n.) தூரத்துப் பொருளை அண்மையில் (சமீபம்) காட்டுங் கருவி. (இக்.வ.); telescope.

த.வ. தொலைநோக்காடி

*[Skt.dūra+dṛṣṭi > த. தூரதிருட்டி]*

**தூலகன்மம்** *tūla kaṉmam*, பெ. (n.) மனம் மொழி மெய்களாற் (மனோவாக் காயம்) செய்யப்படும் கருமம் (கன்மம்) (சி.சி.2,13, மறைஞா.); acts performed through the mind. speech and body.

*[Skt.sthūla+karman > த. தூலகன்மம்]*

**தூலசகளத்துவம்** *tūlaša-kaḷattuvam*, பெ. (n.) தூய்மைத்(சுத்தாசுத்தம்) தத்துவம் ஏழனுள் ஆதனுக்குப் (ஆன்மா) பகுத்தறிவைத் தருந்தத்துவம் (சி.சி.1:65,ஞானப்..); (Saiva.) a category.

**தூலசரீரம்** *tūla-šarīram*, பெ. (n.) 1. நுண்மையான (சூட்சுமம்) உடலைப் (சரீரம்) போர்த்திருக்கும் ஐந்து (பஞ்ச) பூத திரிபாக்கத்தால் (பரிணாமம்) உண்டான உடல் (சரீரம்) (சைவவி.7.); gross material body with which the subtle body is invested. 2. பருத்தவுடல்; stout body.

த.வ. மெய்யுடல், பருவுடல்

*[Skt.sthūla+šarīra > த. தூலசரீரம்]*

**தூலசித்து** *tūla-cittu*, பெ. (n.) சிற்றுயிர் (சீவான்மா); individual soul. "உயிர் தூலசித்தாதலின்" (சி.சி.7,3,சிவஞா.).

*[Skt.sthūla+cit> த. தூலசித்து]*

**தூலதேகம்** *tūladēgam*, பெ. (n.) தூல சரீரம் பார்க்க; see tūla šarīram. "தூலதேகமே யன்றிவண் சூக்கும வுடலும்" (திருவானைக். திருமால்.7).

த.வ. பருவுடல்

*[Skt.sthūla+dēha> த. தூலதேகம்]*

**தூலபஞ்சகிருத்தியம்** *tūla-pañja-kiruttiyam*, பெ. (n.) இறைவன் புடவிகளிடம் (சராசரம்) ஐங்கடவுள்களைக் கொண்டு (பஞ்சமூர்த்தி) செய்விக்கும் ஐந்தொழில்கள் (சி.சி.1,65. ஞானப்.); the five acts of šivaperformed through the agency of his five manifest forms.viz. ஐந்தொழில்கள்: சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம்.

**தூலபஞ்சாக்கரம்** *tūla-pañjakkaram*, பெ. (n.) **தூலபஞ்சாட்சரம்** பார்க்க; see tūla-

pañjātšaram. "சூக்கும பஞ்சாக்கரமே தூலபஞ்சாக்கரரூபமாக நிற்பன" (சி.போ.பா. 4,1, பக்.258).

*[Skt.sthūla+pañcākṣara> த. தூலபஞ்சாக்கரம்]*

**தூலபஞ்சாட்சரம்** *tūla-pañjātšaram*, பெ. (n.) சிவபெருமானை அதிதெய்வமாகக் கொண்டதும் "நமசிவாய, என்ற ஐந்து எழுத்துகளாலானதுமான மந்திரம்"; (Saiva) the sacred mantra of Siva.

*[Skt.sthūla+pañcākṣara> த. தூலபஞ்சாட்சரம்]*

**தூலபூதம்** *tūla-būdam*, பெ. (n.) கண்ணுக்குப் புலனாகும் ஐந்து (பஞ்ச) பூதங்கள்; the gross elements. "தூலமான வைம்பூதமுந் தோற்றுவித்து" (திருக்காளத்.பு.உலகின்றோ.8).

*[Skt.sthūla> த. தூலம்+பூதம்]*

**தூலபோதம்** *tūla-pōdam*, பெ. (n.) கண்ணுக்குப் புலப்படும் வடிவு; the visible body. "தூலபோதம் வருந்து பரமந்திரமாம்" (தத்துவப்.பாயி.2).

*[Skt.sthūla+perh.bōdha> த. தூலபோதம்]*

**தூலம்** *tūlam*, பெ. (n.) 1. பருமை; grossness, tangibility. "தூலமா முருவினுக்குச் சூக்கும முதல்" (சி.சி.2,50). 2. கண்ணுக்குப் புலனாவது; gross, tangible materials, palpable essence, opp. to cūṭcumam. "சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்து" (திருவாச.3,10). 3. பொதுமை; vague generality, outline. "தூலமாக விடைகூறி" (சி.போ.சிற்.) 4. உத்திரம்; beam of a house. "தூலத்தின் பேரில் அல்லது இறப்பில்" (சினேந்.170,உரை). 5. நெற்போரடிக்குங் கோல்; threshing instrument, flail. 6. வானம் (ஆகாயம்.) (யாழ்.அக.); sky.

*[Skt.sthūla> த. தூலம்]*

**தூலலிங்கம்** *tūla-lingam*, பெ. (n.) 1. கோபுரம்; temple tower, as a huge form of lingam. "தூலலிங்கமாந் தூபி" (சைவச.பொது.127). 2. சிவாலயம்; temple of šiva shrine. "தூலலிங்கமாகிய ஆலயமெனவே சூக்குமமாகிய சிவலிங்கம் எனப்பெறும்" (சி.சி.12,1, மறைஞா.).

*[Skt.sthūla+linga> த. தூலலிங்கம்]*

**தூலாருந்ததி நியாயம்** *tūlāruntati-niyāyam*, பெ. (n.) நுண்மையான அருந்ததி விண்மீனைக்காட்ட (நட்சத்திரம்) அதன் அருகிலுள்ள பெரிய விண்மீன் (நட்சத்திரம்) களைக் கொண்டு குறிப்பிடுதல் போல நுண்பொருளை விளக்குதற்கு அதன் சம்பந்தமான பருப்பொருளைக் கொண்டு குறிப்பிட்டுணர்த்தும் நெறி; nyaya in illustration of indicating that which is obscure by reference to a plain fact closely allied to it, as the star Arundhati is pointed out by a reference to the bigger star near it. "சுபக்கத்தைச் சிறப்பு வகையான் அறியலுறுவார்க்குத் தூலாருந்ததி நியாயம் பற்றி அதனைச் சிறந்தெடுத்தோதுதல்" (சி.போ.பா.6,2,பக்.318).

**தூலி-த்தல்** *tūli-*, 4 செ.கு.வி. (v.i). 1. பருத்தல்; to grow stout, bulky or corpulent. அவன் தேகம் தூலித்து விட்டது. 2. பெருகுதல்; to increase, abound. "தூலிக்கும் வினைகள்" (ஞானவா.தாம.15).

*[Skt.sthūla> த. தூலி-த்தல்]*

**தெரிசம்** *terišam*, பெ. (n.) காருவா (அமாவாசை); new moon. "இரட்டிய தெரிசஞ் சேர்ந்த மலமதியொழித்து" (திருவிளை.இந்திரன்முடி.9).

*[Skt.darša> த. தெரிசம்]*

**தெரிசனம்** *terišanam*, பெ. (n.) 1. பார்வை; auspicious sight, perception, view. 2. கண் (குருபரம்.); eye. 3. தோற்றம்; appearance. "சுவாமிதரிசனம் அழகாயிருந்தது". 4. தெய்வம் அல்லது பெரியோர்களைக் காண்கை; sight as of a great person, a deity. "தரிசனமுந் தீர்ந்து" (ஞானவா.

மாவலி.48). 5. கனவு (சொப்பனம்) முதலிய தோற்றம் (வின்.); dream, vision, trance, supernatural appearance. 6. கண்ணாடி; mirror, looking - glass. 7. மதக் கொள்கை; religious doctrine. "நமது தரிசனத்துக் கடியயப்பட்ட வாற்றால் தேனுண் டலைப் பரிகரிக்க" (சிலப்.10,85, உரை).

*[Skt. darśana> த. தெரிசனம்]*

**தெரிசனவேதி** *terišaṉavēdi*, பெ. (n.) தாழ்ந்த மாழை (உலோகங்)களை உயர்ந்த மாழை (உலோகங்)களாக மாற்றவல்ல பச்சிலை வகை; an alchemic agent. "தெரிசனவேதி கண்ட சீருணம்போல" (சேதுபு.வேதாள.71).

*[Skt. darśana+bhēdin> த. தெரிசனவேதி]*

**தெரிசனை** *terišaṉai*, பெ. (n.) 1. காட்சி (உ.வ.); auspicious sight. 2. தர்சன வுண்டியல்; (Mercant.); hundi payable at sight.

*[Skt. darśana> த. தெரிசனை]*

**தெரிசி–த்தல்** *teriši-*, 4 செ.குன்றாவி. (v.t.) கடவுளர் பெரியோர்களையும் நல்வினைப்பயன் அளிக்கும் இடத்தையும் (புண்ணியதலம்) காணுதல்; to see, behold, to obtain sight, as of an idol, a great person, a sacred place.

*[Skt. dṛš> த. தரிசி > தெரிசி–]*

**தேக்சா** *tēkšā*, பெ. (n.) ஒரு வகைக் கிடாரம்; a cauldron.

*[U. tēksā> த. தேக்சா]*

**தேகக்கட்டளை** *tēgakkaṭṭaḷai*, பெ. (n.) 1. உடம்பின் ஒழுங்கு அதாவது உடம்பையடுத்த ஊதை பித்தங் கோழையா(வாதபித்த சிலேட்டுமமா)கிய முக்குணங்களின் பண்பு (கிரமம்); the characteristics of the three humours in the human system. 2. உடம்பின் தத்துவக் கட்டளை; the philosophical conceptions on the structure of human body.

**தேகக்கட்டு** *tēga-k-kaṭṭu*, பெ. (n.) 1. உடம்பின் திடம்; the robustness of the body. 2. தளர்வற்ற உடலமைப்பு; strong - built constitution.

*[Skt. dēha> த. தேகம்+கட்டு]*

**தேகக்கட்டுவிடல்** *tēgakkaṭṭuviḍal*, பெ. (n.) உடம்பின் திடம் கெடுதல் (அ) குறைதல்; decaying of the build or robustness of the body.

*[Skt. dēha> த. தேகம்+கட்டுவிடல்]*

**தேகசம்பந்தம்** *tēga-šambandam*, பெ. (n.) 1. உறவு; blood relationship. இனி நம்மிருவர்க்கும் தேகசம்பந்த மொழிய அர்த்தசம்பந்தமில்லை. 2. புணர்ச்சி (உ.வ.); copulation.

**தேகநாளம்** *tēganāḷam*, பெ. (n.) காரி ரத்தத்தை உடம்பின் பல பகுதிகளினின்று இருதயத்தின் வலது பக்கத்திற்கு திருப்பி விடும் ஓர் குழல்; one of those blood vessels which return impure blood to the right side of the heart.

**தேகநிதானம்** *tēganitāṉam*, பெ. (n.) 1. நோயின் பூர்வரூபம்; premonitory symptoms of the disease. 2. நோய்களின் குணங்களை விவரிக்கும் ஓர் வடமொழி நூல்; an Ayurvedic science determining the quality of diseases.

**தேகப்பயிற்சி** *tēga-p-payiṟci*, பெ. (n.) உடம்பின் வலுவிற்கும் (ஆரோக்கியத்திற்கும்) பலப்படுத்தவும் வேண்டி, தினப்படி பயிலுதல்; the art or practice of taking exercise for health and strength callesthenic performances.

த.வ. உடற்பயிற்சி

**தேகபரிவர்த்தம்** *tēgaparivarttam*, பெ. (n.) இருதயத்தினின்று கண்டரை வழியாய்ப் பிரிந்து உடம்பு முழுவதும் செவ்விரத்தமாய்ப் பரவி மறுபடியும் நாளங்கள் வழியாய்

காரிரத்தமாக இருதயத்திற்கு செல்லும் சுற்றோட்டம்; the circulation of the blood from the heart through aorta and other arteries throughout the body and back through the veins.

**தேகபலம்** *tēga-palam*, பெ. (n.) 1. உடல் வலிமை; strength of the body. 2. குருவி; Indian sparrow, so called from its giving strength and vigour to the system when consumed. 3. மஞ்சள்; turmeric.

**தேகபலவீனம்** *tēga-palavīṉam*, பெ. (n.) உடம்பின் வலிமைக் குறைபாடு; bodily weakness, physical debility.

**தேகம்** *tēgam*, பெ. (n.) உடம்பு (சூடா); body.

*[Skt. dēha> த. தேகம்]*

**தேகமூறல்** *tēgamūṟal*, பெ. (n.) உடம்பு வளமாதல்; growing stout through nourishment.

**தேகமெலிவு** *tēgamelivu*, பெ. (n.) உடம்பிளைப்பு; general or physical debility general weakness.

**தேகவமைப்புநூல்** *tēga-v-amaippu-nūl*, பெ. (n.) 1. உடம்பின் கட்டுப்பாட்டை கூறும் நூல்; that branch of science dealing with the physiological structure of the body-physiology.

**தேகளிதீபநியாயம்** *tēgaḷi-tīpa-niyāyam*, பெ. (n.) இடைகழியில் வைத்த விளக்கு இருபுறமும் ஒளிவீசுவது போல ஒரு பொருள் இடை யினின்று இரண்டிடத்தும் பயின்று வரும் நெறி; nyāya of the lamp at *tēkaḷ*, illustrating how one abject serves simultaneously a two-fold purpose as the lamp at *tēkaḷi* lights the portions on either side.

**தேகாத்துமவாதம்** *tēgāttuma-vātam*, பெ. (n.) உடலே ஆதன் (ஆன்மா) என்று கூறும் சாருவாகமதம்; materialism that identifies the soul with the body.

*[Skt. dēha+ātma+vāta> த. தேகாத்துமவாதம்]*

**தேகாதனம்** *tēgādaṉam*, பெ. (n.) கையின் மேற் கை மலரவிரியவும் கண்கள் நுனி மூக்கைப் பார்க்கவும் அமையும் ஓக இருக்கை (யோகாசன) வகை. (தத்துவப்.107,உரை); cyogal sitting posture with the back of one hand placed against the palm of the other the eyes being fixed at the tip of the nose.

*[Skt. dēhāsana> த. தேகாதனம்]*

**தேகாப்பியாசம்** *tēgāppiyāšam*, பெ. (n.) 1. உடம்பின் பயிற்சி; bodily or physical exercise. 2. அடயோகத்திற்கு உடம்பின் உழைப்பு; bodily exercise indispensible or Hutha yoga.

த.வ. உடற்பயிற்சி

**தேகாரோக்கியம்** *tēgārōkkiyam*, பெ. (n.) உடம்பின் நலநிலைமை; healthy condition of the body.

**தேகான்மவாதி** *tēgāṉma-vādi*, பெ. (n.) தேகாத்தும ஊதை (வாத)க் கொள்கையினன் (சி.போ. பா.பக்.36.புதுப்.); a follower of the doctrine of tēkāttumavādam

*[Skt. dēha+atma> த. தேகான்மாவாதி]*

**தேகி**[1] *tēgi*, பெ. (n.) 1. ஆதன்; soul. "தேகமுந் தேகியும் (திருமந்.1785). 2. புல்லுருவி (மலை); joneysuckle mistletoe, loranthus.

*[Skt. dēhin> த. தேகி]*

**தேகி**[2] *tēgi*, பெ. (n.) 1. உடம்பை உடையவன்; any person embodied. 2. புல்லூரி; parasitic plant. 3. சீவாத்துமா; individual soul or life.

*[Skt. dēhin> த. தேகி]*

**தேகியெனல்** *tēgi-y-eṉal*, பெ. (n.) ஈ என இரத்தற் குறிப்பு; expr. signifying one's request for alms. "ஐயந் தேகியெனச் செப்பி" (சைவச.பொது.366).

**தேசசு** *tēšašu*, பெ. (n.) 1. ஒளி; splendour. 2. கண் விளக்கம்; clearness of the eyes. 3. உடம்பின் வனப்பு; the heating and strengthening faculty of the human frame seated in the bile. 4. விந்து; semen virile. 5. உயிர் (பிராண) வலிவு; vital power.

**தேசத்துரோகி** *tēša-t-turōki*, பெ. (n.) நாட்டைக் காட்டிக் கொடுப்பவன், நாட்டுக்குத் தீமை செய்பவன்; traitor.

த.வ. தாயகக்கயவன்

**தேசப்படம்** *tēša-p-paḍam*, பெ. (n.) நாட்டின் அரசியல், நில அமைப்பைக் காட்டும் படம்; map (of a country).

த.வ. நாட்டுப்படம்

**தேசபக்தன்** *tēšapaktaṉ*, பெ. (n.) நாட்டின் மீது அதிகப் பற்றுடையவன்; patriot. விடுதலைப் போராட்ட காலத்தில் தேசபக்தர்கள் (நாட்டுப் பற்றுடையவர்கள்) நாடு கடத்தப்பட்டார்கள்.

**தேசபக்தி** *tēšapakti*, பெ. (n.) நாட்டுப்பற்று; patriotism, love for one's country.

**தேசம்** *tēšam*, பெ. (n.) 1. நாடு; country. *அவர் வாழ்நாள் முழுவதும் தேசத்திற்குத் தொண்டு செய்தார்.* 2. (நாட்டின்) பகுதி; பிரிவு; principality, land, region. *எங்களுக்கு வடதேசம்.*

**தேசமுகி** *tēša-mugi*, பெ. (n.) அரசிறையதிகாரி (யாழ்.அக.); head of the revenue department.

*[Skt. dēša+mukhya> த. தேசமுகி]*

**தேசா** *tēša*, பெ. (n.) ஒரு பண் (வின்); a melody-type.

*[Skt. dēšākhya> த. தேசா]*

**தேசாசாரம்** *tēšašāram*, பெ. (n.) நாட்டு வழக்கம்; customs, usages and manners of a country.

*[Skt. dēšācāra> த. தேசாசாரம்]*

**தேசாந்தரம்** *tēšandaram*, பெ. (n.) 1. அயல் நாடு; foreign country. 2. நிலநடுக்கோட்டின் தொலைவு; (Astron.) terrestrial longitude, distance of any two meridians on the face of the earth. 3. நிலநடுக்கோட்டின் தொலைவை கணிப்புச் செய்ய உதவும் கணனபாகம் (வின்.); (Astron.) allowance for a planet's proper motion while passing from the first meridian to that of a given place; allowance for longitude.

**தேசாந்தரரேகை** *tēšāndara-rēgai*, பெ. (n.) ஒருத்தியின் மங்கள நாண் (தாலி) வலிமையைக் குறிப்பதாகக் கருதப்படும் உள்ளங்கை வரி (இரேகை) வகை. (திருவாரூ.குற.); a distinctive mark in the palm of a woman, believed to denote a long period of married life.

**தேசாந்திரம்** *tēšandiram*, பெ. (n.) நோக்கம் எதுவுமின்றி நாட்டின் பல இடங்களுக்கும் தன் விருப்பப்படி செல்லும் பயணம்; moving about places free from responsibilities. *தேசாந்திரம் போகிறேன் என்று கிழவர் கிளம்பிவிட்டார்.* (இ.வ.)

**தேசாபிமானம்** *tēšābimāṉam*, பெ. (n.) தாய் (நாட்டுப்) பற்று; love of one's country.

*[Skt. dēša+abhimāna> த. தேசாபிமானம்]*

**தேசிகப்பிரபந்தம்** *tēšiga-p-pirapandam*, பெ. (n.) வேதாந்த தேசிகர் தமிழில் இயற்றிய பனுவல் (பிரபந்தம்) தொகுதி; Tamil poems composed by vēdānda-dēšikar.

*[Skt. dēšika+pra-bandha> த. தேசிகப்பிரபந்தம்]*

**தேசிகம்**[1] *tēšigam*, பெ. (n.) 1. அவ்வந்நாட்டுச் சொல்; provincialism, local idiom, word peculiar to a province. 2. அயல்நாட்டுச் சொல்; foreign terms introduced into a language. *"தேசிகச் சொல்லோடு செறிவடமொழியினை"* (பி.வி.2,உரை). 3. இயற்சொல், திரிசொல், திசைச்சொல்,

வடசொல் என இசைப்பாடல்களில் வரும் சொற்பயன்பாடு (சிலப்.3:47, உரை.); (mus) the use of iyarcol, tiricol, ticaiccol and vaṭacol. 4. கூத்துவகை (அக.நி.); a kind of dance. 5. சிந்தகம் (இந்துத்தானி) போன்ற அயல் நாட்டுப்பண்; foreign melody-type as Hindustani.

*[Skt. dēšika> த. தேசிகம்]*

**தேசிகம்²** *tēšigam*, பெ. (n.) 1. ஒளி; light, lustre, brightness. *"பல்லினைத் தேசிகம் படத்துடைத்து"* (சீவக.1480). 2. பொன் (பிங்.); gold. 3. அழகு (பிங்.); beauty.

*[Skt. tējas> த. தேசிகம்²]*

**தேசிகன்** *tēšigaṉ*, பெ. (n.) 1. குரு (பிங்.); spiritual teacher preceptor. *"முன்னர்த் தேசிகர்ப் பிழைத்து"* (கம்பரா.மிதிலை.109). 2. சிவணிய (சிவ)ச் சமய (சைவம்) குருக்கள் வகுப்பினருள் ஒரு சாரான்; title of a section of Non-Brahmin briestly caste. *"வாய்மைதரு தியாகராச தேசிகனே" (இலக்.பி.பதிகம்). 3. மடாதிபதிக்கு வழங்கும் பட்டப் பெயர்;* title of the head of a mutt. *"அம்பலவாண தேசிகன்"* (மீனாட்.பிர. ஸ்ரீஅம்.பிள்.1). 4. தந்தை (பிதா.); father. *"தேசிகன் வரங்குறை படுத்திடா"* (காஞ்சிப்பு. இரேணு.13) 5. மனம் போன போக்கில் சுற்றித் திரிபவன் (தேசாந்தரி) (பிங்.); traveller, wanderer, foreigner. 6. வணிகன் (பிங்.); merchant. 7. வேதாந்த தேசிகர்; a VaiṣṇavaĀcārya. 8. ஆசிரியன் (உபாத்தி யாயன்); teacher. *"எங்கள் தேசிகனடிப்பான்"* (பெரியபு.திருமுறைகண்டபு.5).

*[Skt. dēšika> த. தேசிகன்]*

**தேசூரஞ்சு** *tēšūraṉju*, பெ. (n.) 1. வேட்டியின் ஓரத்தில் அமைக்குங் கரைவகை; a kind of straight broder of red colour about one or more inches in breadth, woven along the selvedge of men's cloths.

**தேசூரான்வேட்டி** *tēšūrāṉ-vēṭṭi*, பெ. (n.) காஞ்சீபுரம் பட்டுக்கரை வேட்டி; cloth with crushed - strawberry-coloured silk broder.

**தேசோமயம்** *tēšōmayam*, பெ. (n.) 1. பேரொளி; splendour, light, brilliance. *"அறிவான தெய்வமே தேசோமயானந்தமே" (தாயு. தேசோ.).* 2. அழகு (யாழ்.அக.); beauty.

*[Skt. tējō-maya> த. தேசோமயம்]*

**தேதி** *tēti*, பெ. (n.) மாதத்தின் ஒரு பகுதியாகிய நாள்; date, day of the month. *"மாசித் திங்களில் முதற்றேதியில்" (சீவக.493,உரை).*

த.வ. பக்கல்

*[Skt. tithi> த. தேதி]*

**தேதிமழை** *tēdi-maḻai*, பெ. (n.) ஐந்திய நூலில் (பஞ்சாங்கம்) குறிப்பிட்டுள்ள நாளிற் பெய்யும் மழை (உ.வ.); rain that falls on the date specified in the calendar.

த.வ. பக்கல்மழை

*[Skt. tithi > த. தேதி + மழை]*

**தேனு¹** *tēṉu*, பெ. (n.) 1. ஆன்; cow. 2. எருமை; buffalo. 3. குதிரை; horse. 4. கறவை ஆன்; milch cow.



**தேனு²** *tēṉu*, பெ. (n.) களவு (சூடா.); theft, robbery.

*[Skt. stēna> த. தேனு]*

**தைத்தியர்** *taittiyar*, பெ. (n.) திதி என்பவளின் பிள்ளைகளும் பதினெண்கணத்துள் ஒரு வகையினருமான அரக்கர் (பிங்.); Asuras, as sons of Diti, one of patinenkanam.

*[Skt. daitya> த. தைத்தியர்]*

**தைத்தியன்** *taittiyan*, பெ. (n.) உடம்பு அல்லது உடலுறுப்பு (அவயவம்) பருத்தவன்; man with a body of great size giant.

**தைத்திரியன்** *taittiriyan*, பெ. (n.) எசுர் வேதத்தில் தைத்திரிய சாகையைச் சேர்ந்தவன்; a follower of the Taittiriya recension of the yajur-vēda. *"ஐந்தழ லோம்பு தைத்திரியன்"* (திவ்.பெரியதி. 5.5.9).

*[Skt. taittiriya> த. தைத்திரியன்]*

**தைத்திரீயசம்மிதை** *taittiriyaśammidai*, பெ. (n.) தைத்திரேயே முனிவரால் (ரிஷி) செய்யப்பட்ட ஓர் ஆயுள் வேத நூல்; an Ayurvedic science compiled by Thithreya sage.

**தைரியம்** *tairiyam*, பெ. (n.) மனத்துணிவு; courage, self-confidence.

*[Skt. dhairya> த. தைரியம்]*

**தைலம்** *tailam*, பெ. (n.) 1. நல்லெண்ணெய் (சூடா.); sesame oil. 2. ஆமணக்கெண்ணெய் (மூ.அ.); castor oil. 3. எண்ணெய்; oil, unguent. 4. மண(வாசனை)ப் பண்டங்களு ளொன்று (சிலப்.14,108,உரை.); fragrant oil. 5. கூட் டெண்ணெய் (வின்); essential vegetable oil, balsam, medicinal oil. 6. மரச்சத்து (வின்.); sap of a tree or plant.

*[நல் (எண்)-தில் >தில்ம் > Skt. taila> த. தைலம்]*

**தைலமாட்டு-தல்** *tailam-āttu*, 5 செ.கு.வி. (v.i.) 1. எண்ணெய்க்காப்பிடுதல்; to anoint the head or body. 2. உடலை எண்ணெய்யால் சேமித்து வைத்தல்; to preserve a corpse by immersing it in oil, embalm. "தைலமாட்டு படலம்" (கம்பரா.).

**தைவிகம்** *taivigam*, பெ. (n.) 1. கடவுள் தன்மையுள்ளது; the supernatural; that which relates to the gods. *"புத்தகமிங்கு நண்ணும் புதுமை தைவிகமாம்"* (திருவாத. பு.திருவடி.17). 2. **ஆதிதைவிகம்** பார்க்க; see ātitaivikam. *"தைவிக மாதிய மூன்றில்"* (சிவதரு.கோபு.62). 3. **தைவிகலிங்கம்** பார்க்க; see taivikalingam. "சயம்புவுந் தைவிகமும்" (சைவச.பொது.431).

**தைனாத்து** *tainattu*, பெ. (n.) 1. பணியமர்த்தம்; appointment. 2. வேலையாள்; peon, personal attendant.

*[U. tainät> த. தைனாத்து]*

**தைனாத்துச்சேவகன்** *taināttu-c-cēvagan*, பெ. (n.) தொழில் கற்றுக்கொள்ளும் பொருட்டுச் சம்பளமில்லாமல் வேலை பார்க்குஞ் சேவகன் (வின்.); a volunteer peon.

**தைனியம்** *tainiyam*, பெ. (n.) 1. எளிமை; poverty, affliction, depression. 2. கீழ்மை (வின்.); meanness. 3. இவறன்மை (உலோபம்) (வின்.); covetousness.

*[Skt. dainya> த. தைனியம்]*

**தோகம்**[1] *tōgam*, பெ. (n.) குழந்தை; child.

*[Skt. tōkā> த. தோகம்]*

**தோகம்**[2] *tōgam*, பெ. (n.) சிறுமை (சூடா.); smallness, minuteness, trifle.

*[Skt. stōka> த. தோகம்]*

**தோகம்**[3] *tōgam*, பெ. (n.) வருத்தம் (துக்கம்); grief. *"தோக மொருமிக்கத் தந்தீர்"* (இராமநா.உயுத்.60).

*[Perh. drōha> த. தோகம்]*

**தோகம்**[4] *tōgam*, பெ. (n.) பால்; milk.

*[Skt. dōha> த. தோகம்]*

**தோசம்** *tōśam*, பெ. (n.) 1. குற்றம்; fault. 2. பாவம்; sin, guilt. 3. குறை; defect, lack. 4. நாடிக்கொதிப்பு; disorder of the humours of the body. 5. கண்ணேறு முதலானவற்றால்

வருந்தீங்கு; illness believed to be due to the evil eye.

[Skt. dōṣa> த. தோசம்]

**தோட்டா** *tōṭṭa*, பெ. (n.) வெடிமருந்துச் சுருள்; cartridge, wadding.

[U. tōṭa> த. தோட்டா]

**தோடம்** *tōḍam*, பெ. (n.) **தோசம்** பார்க்க; see see tōṣam. *"ஐம் பூதத்தாலே யலக்கழிந்த தோடமற".* (தாயு.எந்நாட்.தத்துவ.1).

**தோடமூர்ச்சிதம்** *tōḍa-mūrccidam*, பெ. (n.) பசுமைநிறங் காட்டும் மரகதக் குற்ற வகை (திருவிளை.மாணிக்.68); a flaw in emerald giving the colour of grass.

**தோடலேசம்** *tōḍa-lēśam*, பெ. (n.) தாமரை யிலை நிறங் காட்டும் மரகதக் குற்றவகை (திருவிளை.மாணிக்.68); a flaw in emerald giving the colour of lotus leaf.

[Skt. dōṣa+lēśa> த. தோடலேசம்]

**தோத்திரம்** *tōttiram*, பெ. (n.) 1. புகழ்ச்சி; praise, laudation, eulogy, panegyric. 2. வணக்கமொழி, வழிபாடு; words of salutation. *"இருக்கொடு தோத்திர மியம்பினர்"* (திருவாச.20.4). 3. **தோத்திரப் பாட்டு** பார்க்க; see tōttirappāṭṭu.

[Skt. stōtra> த. தோத்திரம்]

**தோத்திரி-த்தல்** *tōttiri*, 4 செ.குன்றாவி (v.t.) புகழ்தல்; to praise, extol, belaud. *"எளிய ரேந்துயருமிறுத் தருளென்று தோத்திரித்தார்"* (விநாயகபு.75.336).

[Skt. stōtra> த. தோத்தரி]

**தோப்பறா** *tōppaṟā*, பெ. (n.) 1. குதிரைக்குக் கொள்ளுவைக்கும் பை; leather bag used in feeding horses. 2. நீரிறைக்கும், தோலான கருவி வகை; leather bucket for drawing water.

[U. tōbrā> த. தோப்பறா]

**தோயசம்** *tōyasam*, பெ. (n.) தாமரை (சங்.அக.); lotus.

[Skt. tōya-ja> த. தோயசம்]

**தௌட்டியம்** *tauṭṭiyam*, பெ. (n.) தீச்செயல் (உ.வ.); mischievousness.

[Skt. dauṣṭya> த. தௌஷ்டியம்]

**தௌத்தியம்**[1] *tauttiyam*, பெ. (n.) 1. தூது; message, mission. 2. ஒருத்தியைக் கூட்டிவிடுகை; pimping pandering.

[Skt. dautya> த. தௌத்தியம்]

**தௌத்தியம்**[2] *tauttiyam*, பெ. (n.) போற்றி, புகழ் (யாழ்.அக.); praise.

[Skt. stautya> த. தௌத்தியம்]

**தௌதிகம்** *tautigam*, பெ. (n.) முத்து (மூ.அ.); pearls.

[Skt. tautika> த. தௌதிகம்]

**தௌமியன்** *taumiyaṉ*, பெ. (n.) பாண்டவர் கரணக் குரு (புரோகிதன்); the priest of the *pāṇḍavas. "தௌமியமுனியைக் கண்டு"* (பாரத.திரௌபதி.9).

[Skt. dhaumya> த. தௌமியன்]

**தௌர்ப்பல்லியம்** *taurppalliyam*, பெ. (n.) வலுவின்மை; weakness of mind or body.

[Skt. daurbalya> த. தௌர்ப்பல்லியம்]

**தௌலேயம்** *taulēyam*, பெ. (n.) ஆமை (மூ.அ.); turtle.



**தௌவாரிகன்** *tauvārikaṉ*, பெ. (n.) வாயில் காப்போன் (சங்.அக.); doorkeeper.

[Skt. dauvārika> த. தௌவாரிகன்]



**நக்சா** *nakšā,* பெ.(n.) படம் (C.G. 57); picture, plan, map.

*[Ar. naqsha > த. நக்சா]*

**நக்த்சமாகர்சு** *nakt-šamākaršu* பெ.(n.) கருவூலக் குறிப்பேடு (C.G); account of cash receipts and disbursements.

*[Ar. naqdi-jamā + karšu > த. நக்த்சமாகர்சு]*

**நக்தி** *nakti* பெ.(n.) கருவூலம் (C.G.145); treasury.

*[Ar. naqdi > த. நக்தி]*

**நக்திகுமாசுதா** *nakti-kumāšutā* பெ.(n.) கருவூலக்கணக்கர் (C.G.145); treasury clerk, cash - keeper.

**நக்திசிட்டா** *nakti-šiṭṭā,* பெ.(n.) கருவூலத்தில் வருமானத்தைப் பதிவு செய்யும் பதிவேடு (C.G. 145); account showing cash receipts in a treasury.

*[Ar. naqdi+ciṭṭā > த. நக்திசிட்டா]*

**நகத்** *nakat,* பெ. (n.) கைப்பணம் (ரொக்கம்); ready money, cash.

*[Ar. naqad > த. நகத்]*

**நகத்துசாமீன்** *nakattu-šāmīṉ,* பெ. (n.) பிணையத் தொகை; cash security.

*[Ar.naqad + jāmin > த. நகத்துசாமீன்]*

**நகத்பாபு** *nakat-pāpu,* பெ. (n.) மீன் பிடித்தல், வேளாளர்களல்லாதார் குடியிருப்பு, தென்னை மாபுளி முதலியவுள்ள தோட்டம் இவற்றுக்கு வாங்கப்படும் வரி (R.T); a tax on tank fishery, on the houses of those not engaged in agriculture and on coconut, mango and tamarind topes.

*[Ar.naqad + bāb > த. நகத்பாபு]*

**நகதா** *nakatā,* பெ. (n.) காக்காய்ச்சரிகை நூல் (இ.வ); Imitation lace-thread.

**நகதி** *nakati,* பெ. (n.) 1. பணக்காரன்; person having ready money. 2. பொற்கட்டி முதலியன; bullion, gold or silver in the mass. 3. பணமாகச் செலுத்தும் நிலத்தீர்வை (R.T); land revenue in money. 4. **நக்தி** (C.G) பார்க்க; see *nakti.*

*[U. naqdi > த. நகதி]*

**நகரோபாந்தம்** *nakarōpāndam,* பெ. (n.) நகரெல்லை (யாழ். அக.); outskirts of a city.

*[Skt. nagarōpānta > த. நகரோபாந்தம்]*

**நகரௌடதி** *nakar-auṭadi,* பெ. (n.) வாழை (சங். அக.); plantain tree.

**நகல்** *nakal,* பெ. (n.) படி (உவ); duplicate, copy.

த.வ. நிகரி

*[U. naql > த. நகல்]*

**நகுசன்** *nakušaṉ,* பெ. (n.) 100 குதிரைவேள்வி செய்ததற்குப் பயனாக இந்திரப்பட்டம் பெற்றுச் சிவிகையேறிச் செல்லுகையில் அச்சிவிகை காவுவோருள் ஒருவரான அகத்தியரால் சாவிக் கப்பட்டுப் பாம்புருவமடைந்த (நிலவு) சந்திர குலத்தரசன்; a king of the lunar race who obtained possession of Indra's throne as a reward for having performed 100 horse - sacrifices, offended Agastya, one of his palanguin - bearers, and was cursed by him and turned into a serpent.

*[Skt. Nahuṣa > த. நகுசன்]*

**நசிந்தா** *našindā,* பெ. (n.) கணக்கர் (C.G.); accountant, clerk.

*[U. nawī-sindah > த. நசிந்தா]*

**நசீப்** *našīp,* பெ. (n.) 1. ஊழ்; fate, destiny 2. ஆகூழ்; good luck, fortune.

*[U. naṣīb > த. நசீப்]*

**நட்சத்திர ஆபீசு** *naṭšattira-āpīšu,* பெ. (n.) வான்மண்டலத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் தலம் (இக்.வ.); observatory.

த. வ. வானாய்வுக் கூடம்

*[Skt. nakṣatra+E. office > த. நட்சத்திர ஆபீசு]*

**நட்சத்திரக்குறி** *natšattira-k-kuri*, பெ. (n.) அச்சுப்பதிப்பில் விண்மீன் வடிவமைந்த குறிப்படையாளம்; asterisk.

த. வ. விண்மீன்குறி

**நட்சத்திரகன்** *natšattirakan*, பெ. (n.) **நட்சத்திரையன்** பார்க்க; see *natšattiraiyan*.

**நட்சத்திரசக்கரம்** *natšattira-šakkaram*, பெ. (n.) 1. விண்மீன் மண்டலம்(யாழ். அக.); stellar sphere. 2. நிலவு மண்டலத்திற்குரிய உடுக்குழு (நட்சத்திரங்கள்) (வின்); (Astrol) group of lunar asterisms forming the lunar zodiac. 3. கலப்பைச் சக்கரம் முதலியன போலக் கணிய (சோதிட) கணனத்துக்குரிய சக்கர வகை; (Astrol) diagrams for astrological calculations, as *kalappai-c-cakkaram* etc.

*[Skt. naksatra > த. நட்சத்திரம்+சக்கரம்]*

**நட்சத்திரசாலை** *natšattira-šālai*, பெ. (n.) வானத்திற்செல்லும் கதிரவன் நாண்மீன்கள் முதலியவற்றைப் பார்த்துக் கணிக்குங்களம்; observatory.

த. வ. உடுக்கணிப்புக் களம்

*[நட்சத்திரம் + சாலை]*

*[Skt. nakṣatra > த. நட்சத்திரசாலை]*

**நட்சத்திரசீரகம்** *natšattira-šīragam*, பெ. (n.) பெருஞ்சீரகம் (மூ.அ); common anise.

**நட்சத்திரதீபம்** *natšattira-tibam*, பெ. (n.) ஒரு வகை விளக்கு (வின்.); a kind of lamp.

த. வ. உடுவிளக்கு

*[Skt. nakṣatra+dipa>த. நட்சத்திரதீபம்]*

**நட்சத்திரநேமி** *natšattira-nēmi*, பெ. (n.) 1. நிலவு; moon. 2. திருமால்; Viṣṇu. 3. துருவவிண்மீன்; the pole star.

*[Skt. nakṣatra + nēmi> த. நட்சத்திரநேமி]*

**நட்சத்திரப்பணி** *natšattira-p-pani*, பெ. (n.) ஒருவகை மேற் (விதான)கட்டு; a kind of ornamentation in a canopy.

**நட்சத்திரப்பப்பளி** *natšattira-p-pappali*, பெ. (n.) புடைவை வகை; a kind of saree.

*[Skt. nakṣatra+pappali>த. நட்சத்திரப்பப்பளி]*

**நட்சத்திரப்பிரமாணம்** *natšattira-p-piramāṇam*, பெ. (n.) விண்மீனின் (நட்சத்திரத்தின்) அளவு (வின்); the dimension of a star.

*[Skt. nakṣatra + piramāṇam> த. நட்சத்திரப்பிரமாணம் ]*

**நட்சத்திரப்பொருத்தம்** *natšattira-p-poruttam*, பெ. (n.) பத்துவகைக் கலியாணப் பொருத்தங்களுள் மணமக்களின் பிறப்பு ஓரைகளின் (வதூவரர்களின் சென்ம நட்சத்திரங்களின்) இசைவு (சோதிட. சிந். 195); (Astrol.)a correspondence or affinity between the asterisms of nativity of the prospective bride and bridegroom one of ten *kaliyāṇa-p-poruttam*.

த. வ. நாள்மீன் பொருத்தம்

*[Skt. nakṣatra > த. நட்சத்திரம்]*

**நட்சத்திரபதம்** *natšattira-padam*, பெ. (n.) விண்மீன் (நட்சத்திர) பதவி; the region of the stars. "சந்திரபதத்துக்கு மேலே நூறாயிரக் காதமாறு உண்டிறே நட்சத்திரபதம்" (திவ். திருநெடுந். 5. வியா.)

த. வ. விண்மீன் பதவி

*[Skt. naksatra > த. நட்சத்திரம்]*

**நட்சத்திரபதவி** *natšattira-padavi*, பெ. (n.) 1. விண்மீன் வானம்; starry sky. 2. அறம் புரிந்தோரில் ஒரு வகையினர் தம் மரணத்தின் பின் அடையும் விண்மீன் மண்டலம்; region of stars, as the abode of those who have done certain deeds of religious merit. 3. அறத்தின் பயனாக மறுமையில் விண்மீனாய் விளங்குபவர்களின் நிலை; state of the soul becoming a star as a result of certain deeds of religious merit.

த. வ. உடுமண்டலப்பதவி

*[Skt. nakṣatra> த. நட்சத்திரம்]*

**நட்சத்திரம்** *natšattiram*, பெ. (n.) 1. விண்மீன் கூட்டம் வானமண்டலத்தில் தோன்றும் வானமீன்; star (in astronemy) a special

form of constellation called aferism in the moon's path; star in general. 2. (அசுவினி, பரணி, கார்த்திகை, உரோகிணி, மிருகசீரிடம், திருவாதிரை, புனர்பூசம், பூரம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதையம், பூரட்டாதி, உத்திரட்டாதி, இரேவதி என்னும், இருபத்தேழு நாண்மீன்; (Astron) Lunar consellation 27 in number. viz., acuviṉi, paraṇi, kārttikai, urōkiṉi, mirukacīriṭam, tiruvātirai, puṉarpūcam, pūcam, āyiliyam, makam, pūram, uttiram, astam, cittirai, cuvāti, vicākam, aṉuṣam, kēṭṭai, mūlam, pūrāṭam, uttirāṭam, tiruvōṇam, aciṭṭam, cataiyam, pūaṭṭāti, uttiraṭṭāti, irēvati. 3. திங்கள், நாண்மீனில் தங்கிச்செல்லுங் காலம்; period during which the moon is passing through an asterism.

த. வ. நாண்மீன், உடு.

*[Skt. nakṣatra>த. நட்சத்திரம்]*

**நட்சத்திரமண்டலம்** *naṭšattiramaṇḍalam,* பெ. (n.) விண்மீன் வட்டம் (வின்); the starry heavens.

த. வ. உடுமண்டலம்

*[Skt. nakṣatra > த. நட்சத்திரம்]*

**நட்சத்திரமாதம்** *naṭšattira-mātam,* பெ. (n.) அசுவினி முதல் இருபத்தேழு நட்சத்திரங் களைக் கொண்டு கணிக்கப்படும் மாதம் (விதான. குணாகுண. 80 உரை); sidereal month.

*[Skt. nakṣatra > த. நட்சத்திரம்]*

**நட்சத்திரமாலை** *naṭšattiramālai,* பெ. (n.) 1. விண்மீன் கூட்டம்; constellation, star group. 2. நிலவுக்குரித்தான 27 விண் மீன்கள் (வின்); lunar zodiac. 3. நட் சத்திர வீதி பார்க்க; see natcattiraviti. 4. விண்மீன் களைப் பற்றிக் கூறும் ஒரு கணிய நூல் (வின்); a treatise on the lunar constellations. 5. இருபத்தேழு பாடல் கொண்ட சிற்றிலக்கிய வகை; a poem of twenty seven stanzas.

த. வ. உடுமாலை

**நட்சத்திரமீன்** *naṭcattiramīṉ,* பெ.(n.) ஒரு வகைக் கடல் மீன்; a kind of sea fish - star fist.

த. வ. உடுமீன்

**நட்சத்திரவாணம்** *naṭcattira-vāṇam,* பெ. (n.) வானவெடிப்பு (ஆகாசவாண) வகை; a kind of rocket.

த. வ. உடுவாணம்

*[Skt. nakṣatra+bāṇa >த. நட்சத்திரவாணம்]*

**நட்சத்திரவீதி** *naṭšattira-vīdi,* பெ. (n.) 1. நிலவு உலாவும் வானவழி; moons's path in the zodiac. 2. விண்மீன்கள் செறிந்து தோன்றும் பால்வீதி மண்டலம்; the milky way.

**நட்சத்திரையன்** *naṭcattiraiyaṉ,* பெ. (n.) 1. விசுவாமித்திரர்கடனைக் கொடுக்கும்படி அரிச்சந்திரனை வருத்தியவனான பார்ப் பனன்; the Brahmin who harassed Hariścandra to pay his dues to Viśvāmitra. 2. கடன்மீட்டுவதிற் கொடியோன் (உ.வ.); a cruel oppressor, dun.

த. வ. கொடுங்கேடன்

**நட்டசந்திரன்** *naṭṭacandiraṉ,* பெ. (n.) தேய்பிறை; (C.G.); waning moon.

*[Skt. nasṭa > த. நட்ட(ன்)]*

**நட்டப்படுத்து-தல்** *naṭṭa-p-paḍuttu-,* 5. செ.கு.வி. (v.i.) அழிவு உண்டாக்குதல் (வின்); to cause damage, involve in loss.

*[Skt. nasṭam > த. நட்டம்]*

**நட்டம்** *naṭṭam,* பெ. (n.) 1. இழப்பு; loss, damage 2. அழிவு (வின்); ruin, destruction.

*[Skt. nasṭa > த. நட்டம்]*

**நட்டமிறு-த்தல்** *naṭṭam-iru-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சேதத்திற்கு ஈடு கொடுத்தல்; to make good a loss, indemnify.

த. வ. ஈடுதரல்

*[Skt. nasṭam> த. நட்டம்]*

**நட்டவாளி** *natta-v-āḷi* பெ. (n.) 1. நட்டப் பட்டவன்; one who sustains loss, loser.

த. வ. **இழப்பாளி**

**நட்டை** *nattai* பெ. (n.) 1. புலக்குறும்பு, குறும்பு; mischief. 2. கண்டனம்; criticism, censure.

*[Skt. nastai > த. நட்டை]*

**நதி** *nadi* பெ.(n.) ஆறு (திவா.); river.

*[Skt. nadi > த. நதி]*

**நதிக்குதிரை** *nadi-k-kudirai* பெ.(n.) நீர்யானை; hippopotamus.

*[நதி + குதிரை]*

**நதிகேள்வன்** *nadi-kēḷvaṉ* பெ.(n.) ஆறுகளின் நாயகனான வருணன் (பிங்.); Varuṇa, as Lord of the Rivers.

*[நதி + கேள்வன்]*

**நதிசரம்** *nadi-šaram* பெ.(n.) ஆற்றுச்சார்பாகப் பிறந்த யானை (திவா.); elephant born and bred up on the banks of a river.

*[நதி + சரம்]*

**நதிதீரம்** *nadi-tiram* பெ.(n.) ஆற்றங்கரை; bank of a river.

*[நதி + தீரம்]*

**நதிமூலம்** *nadi-mūlam* பெ.(n.) ஆறு தோன்றும் இடம்; source of river.

*[நதி + மூலம்]*

**நதிமாதுருகம்** *nadi-mādurugam* பெ.(n.) ஆற்றுப் பாய்ச்சலுள்ள நிலம்; land irrigated by a river. *"நதிமாதுருகம் இரண்டு பூ விளைகையாலே" (ஈடு. 1: 1: 1, ஜீ).*

*[Skt. nadi+mātṛka > த. நதிமாதுருகம்]*

**நதிவடம்** *nadivaḍam* பெ.(n.) கருப்பு ஆலமரம் (மூ.அ.); black banyan tree.

**நபம்** *nabam* பெ.(n.) 1. வானம் (சூடா.); sky. *"நபமுகில்" (பாரத. சடா. 8).* 2. மடங்கல் (ஆவணி) மாதம்; the month Āvani = August - september. 3. கார்காலம் (இலக். அக.); rainy season.

*[Skt. nabhas > த. நபம்]*

**நபர்**[1] *nabar* பெ.(n.) மாந்தன், ஆள்; person, individual. *'குற்றம் சாட்டப்பட்ட நபரைத் துறையினர் தேடி வருகிறார்கள்', 'இந்தக் கடிதத்தைக் கொண்டுவரும் நபரிடம் பணத்தைக் கொடுக்கவும்'. (இ.வ.)*

த.வ. **ஆள்**

*[U. nafar > த. நபர்]*

**நபர்கதி** *nabar-kadi* கு.வி.எ.(adv.) ஒவ்வொரு வருக்கு; individually.

த.வ. **ஆள்வாரி**

*[U. nafar+gatti > த. நபர்கதி]*

**நபர்கதிபைசல்** *nabar-kadi-paišal* பெ.(n.) ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக செய்யும் முடிவு (C.G.); individual settlement.

*[நபர்கதி + பைசல்]*

**நபர்சாமீன்** *nabar-sāmīn* பெ.(n.) ஆட் பிணை (C.G.); personal security.

*[Skt. nafar+zāmin > த.நபர்சாமீன்]*

**நபனம்** *nabaṉam* பெ.(n.) 1. நீராட்டம்; bathing. *"விதியின்மை நபனமாடி" (சிவப். பிரபந். இட்ட. அபிஷே. 9).* 2. திருமுழுக்காட்டுப் (அபிடேகப்) பொருளைத் தூய்மை செய்யுஞ் சடங்கு; ceremony of purifying articles used in bathing an idol. *"சம்புரோக்கணநபனம்" (திருவானைக். கோச்செங். 40).*

*[Skt. snapana > த. நபனம்]*

**நபனமண்டபம்** *nabaṉa-maṇḍabam* பெ.(n.) கருவறைக்கு (கர்ப்ப கிருகத்துக்கு) முன்னே யுள்ள திருமஞ்சன மண்டபம் (Ins.); that portion of a temple in front of the inner sanctuary, where the *napaṉam* ceremony, is performed.

*[Skt. snapana > த. நபனமண்டபம்]*

**நபா** *nabā* பெ.(n.) ஊதியம் (இலாபம்)(C.G.); profit, gain, advantage.

*[U. nafā > த. நபா]*

**நபாபு** *nabābu,* பெ.(n.) மொகலாய வரசரின் கீழமைந்த ஆளுநர் (இராசப் பிரதிநிதி) முதலானோர்; Nabob, Muhammadan official or governor under the great Mogul. 2. முகமதியர்க்கு அரசாங்கத்தாரால் வழங்கப் படும் பட்டங்களிலொன்று; a little conferred on Muhammadan gentlemen of distinction.

*[U. nawāb > த. நபாபு]*

**நபி** *nabi,* பெ.(n.) வருவதுரைப்பவர் (தீர்க்கதரிசி) (யாழ்.அக.); prophet. 2. முகம்மது; Muhammad, as the Prophet.

த.வ. **கணியர்**

*[U. nabī> த. நபி]*

**நபிலம்** *nabilam,* பெ.(n.) கொள்; horse gram - Dolichos biflorus. (சா.அக.)

**நபுஞ்சகம்** *nabuñjagam,* பெ.(n.) 1. **நபுஞ்சகன்** (யாழ்.அக.) பார்க்க; see *nabuñjagan.* 2. ஆண்டன்மையின்மை; impotency. 3. **நபுஞ்சகலிங்கம்** பார்க்க; see *nabuñjaga-lingam.*

*[Skt. na-pumsaka > த. நபுஞ்சகம்]*

**நபுஞ்சகலிங்கம்** *nabuñjaga-lingam,* பெ.(n.) அலிப்பால் (பி.வி.44, உரை); neuter gender.

*[Skt. na-pumsaka+linga > த. நபுஞ்சக லிங்கம்]*

**நபுஞ்சகவேதம்** *nabuñjaga-vēdam,* பெ.(n.) ஓர் அலி மற்றோர் அலியின் நட்பை விரும்புவதான குற்றம்; the fault which consists in the desire of a neuter for the companionship of another neuter.

*[Skt. napumsaka-vēda > த. நபுஞ்சக வேதம்]*

**நபுஞ்சகன்** *nabuñjagan,* பெ.(n.) ஆண்தன்மை இழந்தவன்; man who is impotent. 2. அலி(பிங்);hermaphrodite.

*[Skt. na-pumsaka > த. நபுஞ்சகன்.]*

**நபுரி** *naburi,* பெ.(n.) ஒருவகைக் கஞ்சக்கருவி (தாளம்) (அபி.சிந்); cymbals.

*[U. nafiri > த. நபுரி]*

**நபுரு** *naburu,* பெ.(n.) நபர் பார்க்க; see nabar.

*[U. nafar > த. நபுரு]*

**நபோமணி** *nabō-mani,* பெ.(n.) விண்ணின் மணியாகிய கதிரவன் (யாழ்.அக.); the Sun, as the gem of the sky.

*[Skt. nabhō-mani > த. நபோமணி]*

**நபோரேணு** *nabōrēnu,* பெ.(n.) அணு (யாழ்.அக.); atom.

*[Skt. nabhō-rēnu > த. நபோரேணு]*

**நம்** *nam,* பெ.(n.) வணக்கம்; worship, reverential bow.

*[Skt. nam > த. நம்]*

**நம்தா** *namtā,* பெ.(n.) சேணத்தின் அடி மெத்தை; Belt or wollen saddle-cloth.

*[U. namdā > த. நம்தா]*

**நம்பர்** *nambar,* பெ.(n.)1.எண்; number. 2. வழக்கு; dispute. கோர்ட்டில் எனக்கு நம்பர் இருக்கிறது.

*[E. number > த. நம்பர்]*

**நம்பர்பண்ணு–தல்** *nambar-pannu-,* 5 செ.கு.வி.(v.i) வழக்கிடுதல்; to file a suit.

*[நம்பர் + பண்ணுதல்]*

**நம்பர் போடு–தல்** *nambar-pōdu-,* 20 செ.கு.வி.(v.i) **நம்பர் பண்ணு–தல்** பார்க்க; see *nambar pannu-.*

*[நம்பர் + போடு–தல்]*

**நமசுகரி–த்தல்** *namašukari-,* 4 செ.கு.வி.(v.i.) கைகூப்பி அல்லது காலில் விழுந்து வணங்குதல்; mode of showing respect with folded hands or by prostrating. *தம்பதிகளைப் பார்த்து 'தாத்தாவை வணங்குங்கள்' என்று கூற அவர்கள் அவர் காலைத் தொடக் குனிந்தனர்.*

*[Skt. namaskāra > நமஸ்கரி > த. நமசுகரி – > நமசுகரி–த்தல்]*

**நமசுகாரபாகுடம்** *namašukāra-pāguḍam,* பெ.(n.) சமண வழிபாட்டு நூல்; books of Jaina hymns.

*[நமசுகாரம் + பாகுடம்]*

**நமசுகாரம்** *namašu-kāram,* பெ.(n.) வணக்கம்; reverential bow, worship, adoration by bowing or prostration.

*[Skt. namas > த. நமசுகாரம்]*

**நமசுகாரமண்டபம்** *namašukāra-manḍabam,* பெ.(n.) வணக்கம் செய்வதற் காக அமைத்த மண்டபம் (T.A.S.vi. 63); a mandabam in front of the central shrine of a temple, for devotees to perform *namaskāram.*

*[நமசுகாரம் + மண்டபம்]*

**நமாசு** *nāmāšu,* பெ.(n.) முகமதியர் தொழுகை; prayer in a mosque.

*[U. namas > த. நமாசு]*

**நமூது** *namūdu,* பெ.(n.) 1. மெய்ப்பிப்பு, சான்று, கரி; proof, evidence. 2. பொறுப்பாளி; responsible person. *"இந்தச் செயலுக்கு அவன் தான் நமூது".* 3. நமோது பார்க்க; see *namōdu.*

*[U. namūd > த. நமூது]*

**நமோது** *namōdu,* பெ.(n.) விளத்தக்குறிப்பு; that which is particularised, entered as in an account.

*[U. namūd > த. நமோது]*

**நயச்சென்னை** *naya-c-cennai,* பெ.(n.) செந்தினை; red millet. (சா.அக.)

**நயனக்கத்தி** *nayaṉa-k-katti,* பெ.(n.) கண்ணிற்குள் அறுவை செய்தவற்காக பயன் கொள்ளும் கத்தி; a surgical knife or other instrument used in the operation of the eyes. (சா.அக.)

*[ நயனம் + கத்தி ]*

**நயனக்குறி** *nayaṉa-k-kuṟi,* பெ.(n.) 1. கண்ணோயினால் ஏற்படும் குறிகள்; symptoms occuring in diseases of the eye. 2. கண்ணினால் காட்டும் சைகைகள்; gestures of the eye as in love. 3. நோயி னால் கண்ணில் தோன்றும் குறிகள்; the symptoms that appear in the eye due to the disease eg. yellow eyes in jaundice, pale eyes in anemia. (சா.அக.)

*[ நயனம் + குறி ]*

**நயனகத்தூரி** *nayaṉa-kattūri,* பெ.(n.) 1. ஒரு வகைக் கண் மருந்து; eye-salve, ointment for the eye. 2. இன்பமானது; that which is refreshing, soft and pleasant, as medicine for the eye.

*[Skt. nayana +kastūri > த. நயனகத்தூரி]*

**நயனகாசப்படலம்** *nayaṉakāša-p-paḍalam,* பெ.(n.) கண் மேலேற்படும் படல நோய்; a film over the eyes. (சா.அக.)

**நயனகாசம்** *nayaṉa-kāšam,* பெ.(n.) கண் மேற்படர்சதை; film over the eye.

*[Skt. nayana-kāša > த. நயனகாசம்]*

**நயனசஞ்சீவி** *nayaṉa-šañjīvi,* பெ.(n.) தூதுவளை; three lobed night shade - Solanum trilobatum. 2. கண்ணிற்குப் பயன்படும் (சஞ்சீவியைப் போன்ற) சிறந்த மருந்து; a reputed application for the eyes. (சா.அக.)

*[நயனம் + சஞ்சீவி]*

**நயனசாணம்** *nayaṉa-šāṇam,* பெ.(n.) நயகுஞ்சனம்; ointment for the eye. (சா.அக.)

*[நயனம் + சாணம்]*

**நயனசூலை** *nayaṉa-šūlai,* பெ.(n.) கண்குத்தல் நோய்; stabbing pain in the eyes. (சா.அக.)**நயக்கன்** *nayakkaṉ,* பெ.(n.) நாய்; dog. (சா.அக.)

**நயனத்தரிப்புகண்** *nayaṉa-t-tarippu-kaṇ,* பெ.(n.) கண் நமைச்சல்; irritation of the eyes. (சா.அக.)

**நயனத்தாபிதம்** *nayaṉa-t-tāpidam,* பெ.(n.) கண்ணிற்கேற்படும் அழற்சி; inflammation of the eye ophthalmitis. (சா.அக.)

**நயனப்பத்திரி** *nayaṉa-p-pattiri,* பெ.(n.) வட்டசாரணை, இதன் இலைகள், கண் மருத்துவத்திற்குப் பயன்படுவதால் பெற்ற பெயர்; rounded mucronate - leaved trianthemaorgia trianthemodes. It is so called because of its usefulness in ophthalmia and other diseases of the eye. (சா.அக.)

**நயனப்பரிகாரம்** *nayaṉa-p-parigāram,* பெ.(n.) கண் வைத்தியன்; one skilled in the treatment of eye diseases - Oclist. (சா.அக.)

**நயனப்பிரபந்தம்** *nayaṉa-p-pirabandam,* பெ.(n.) கடைக்கண்; outer corner of the eye. (சா.அக.)

**நயநட்டம்** *nayanaṭṭam,* பெ.(n.) வருவாய் இழப்பு; profit and loss.

*[நயம் + நட்டம்]*

**நயமாலி** *nayamāli,* பெ.(n.) மனோசிலை, இது விளைவு பாடாணம்; arsenicum bisulphuretum. (சா.அக.)

**நயனகாசம்** *nayaṉa-kāsam,* பெ.(n.) கண்மேற் படர்சதை; film over the eye.

*[Skt. nayana-kāśa > த. நயனகாசம்]*

**நயனகாசப்படலம்** *nayaṉakāsa-p-paḍalam,* பெ.(n.) கண் மேலேற்படும் படல நோய்; a film over the eyes. (சா.அக.)

**நயனசஞ்சீவி** *nayaṉa-sañjīvi,* பெ.(n.) தூதுவளை; three lobed night shade - solanum trilobatum. 2. கண்ணிற்குப் பயன்படும் சஞ்சீவியைப் போன்ற சிறந்த மருந்து; a reputed application for eyes. (சா.அக.)

**நயனம்** *nayaṉam,* பெ.(n.) 1. கண்; eye in general. 2. கண்மணி; pupil of the eye. (சா.அக.)

**நயனமாலை** *nayaṉa-mālai,* பெ.(n.) அக்கமணி (உருத்திராட்ச)மாலை; garlands of elaeocarpus bead. *"வனைதரு நயன மாலை" (பிரபோத். 12, 6).*

*[Skt. nāyaṉam > த. நயனமாலை]*



**நயனமோக்கம்** *nayaṉa-mōkkam,* பெ.(n.) சிற்பி, சிலைகள் முதலியவற்றிற்குக் கண்ணைத் திறந்து விடுதல்; chise or forming the eye.

*[Skt. nayaṉa-mōṭsam > த. நயனமோக்கம்]*

**நயனரோகம்** *nayaṉa-rōgam,* பெ.(n.) 1. கண் நோய்; a disease of the eye - *ophthalmia.* 2. கண்ணில் அரத்தால் அறுப்பது போல் வலிகாணும் ஓர் நோய்; an eye disease characterised by sawing pain in the eyes. (சா.அக.)

*[Skt. nayaṉa > த. நயனரோகம்]*

**நயனவிதி** *nayaṉa-vidi,* பெ.(n.) கண் மருத்துவ நூல்; treatise dealing with eye-diseases.

*[Skt. nayaṉa > த. நயனம் + விதி]*

**நரகம்** *naragam,* பெ.(n.) 1. கொடுமையும் துன்பங்களும் நிறைந்த உலகம்; hell. *இதனால் எனக்கு நரகம் கிடைக்கும் என்றால் நான் போவேன்.* 2. துன்பமயமானது; unbearable misery hell. *"அடிப்படைத் தேவைக்கும் (அவத்தை) தொல்லைப்படுகிற நரக வாழ்க்கை".*

**நரகாவத்தை** *naragā-vattai,* பெ.(n.) நிரயத் துன்பம் (நரகலோகம்); hellish torture.

*[Skt. naraka > த. நரகாவத்தை]*

**நவ** *nava,* பெ.அ. (adj.) பழமையிலிருந்து விடுபட்டுப் புதுமையை நோக்கிய (புதிய); modern. *நவ பாரதம் / நவ நாகரிகம்.*

**நவக்கிரகசெபம்** *nava-k-kiraga-šebam,* பெ.(n.) மனிதர்க்கு உண்டாகும் தீமைகளை விலக்குவதற்காக (சூரியாதி) ஒன்பது கோள் மீன்களையும் (கிரகங்களையும்) மந்திர பூர்வமாக உருவேற்றி (செபித்து) வேண்டிக் கொள்ளுதல்; propitiating the nine planets by mantras, with a view to avert their evil effects.

*[Skt. nava+graha+japa > த. நவக்கிரகசெபம்]*

**நவக்கிரகத்தும்பை** *nava-k-kiraga-t-tumbai,* பெ.(n.) தன்னுடைய உருவை அடிக்கடி மாற்றக்கூடிய தும்பை; a kind of leucas plant capable of changing its form frequently.(சா.அக.)

**நவக்கிரகதோசம்** *nava-k-kiragadōšam,* பெ.(n.) 1. குழந்தைகளுக்கு ஒன்பான் கோள் மீன்கள் கோளாறினாலேற்படும் ஒன்பது வகை நோய்கள்; the nine kinds of diseases of infants life which are attributed to the influences of the nine malignant stars or demons. 2. ஒன்பது கோள்மீன்கள். கதிரவன், நிலா, செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி, கரும்பாம்பு, செம்பாம்பு; the nine planets viz. Sun, Moon, Mars, Mercury, Jupiter, Venus, Saturn, Rahu and Kēthu. (சா.அக.)

**நவக்கிரகம்[1]** *nava-k-kiragam,* பெ.(n.) தாளகம்; orpiment. (சா.அக.)

**நவக்கிரகம்[2]** *nava-k-kiragam,* பெ.(n.) 1. கதிரவன், திங்கள், செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி, கரும்பாம்பு, செம்பாம்பு ஆகிய ஒன்பது கோள்மீன்கள்; nine planets (supposed to govern one's destiny). 2. சிவக் கோவில்களில் ஒரே பீடத்தில் ஒன்றை ஒன்று பார்க்காமல் நிற்கும், மேற்குறிப்பிட்ட ஒன்பது கோள்மீன்களின் சிலைகள்; nine deities presiding over the nine planets (placed in different directions on a base in Saiva temples).

*[Skt. navan > த. நவக்கிரகம்]*

**நவக்கிரகவாதி** *nava-k-kiraga-vādi,* பெ.(n.) ஒன்பான்கோள் மீன்களே படைப்பு முதலிய முத்தொழிற்கும் மூலகாரணமென கூறும் சமயத்தினன் (த.நி.போ. 285); follower of the doctrine that the creation, preservation and destruction of universe are caused by nava-k-kiragam.

*[நவக்கிரகம் + வாதி]*

**நவகண்டம்** *nava-kaṇḍam,* பெ.(n.) கீழ்பால் விதேகம், மேல் பால் விதேகம், வட பால் விதேகம், தென்பால் விதேகம், வடபாலி ரேபதம், தென்பாலிரேபதம், வடபாற்பரதம், தென்பாற் பரதம், மத்திம கண்டம் என நிலவுலகப் பிரிவாயமைந்துள்ள ஒன்பது கண்டங்கள் (பிங்.); the nine continents of the earth. *"நவகண்டபூமிப் பரப்பை" (தாயு. சின்மயா. 11).*

*[நவ + கண்டம்]*

*[Skt. navan + த. கண்டம்]*

**நவகதிர்** *navakadir,* பெ.(n.) ஆசிவகரது சமயநூல் (மணிமே. 27, 112, உரை); scriptures of the Ajivaka sect.

*[Skt. navan + த. நவன்+கதிர்]*

**நவகருமம்** *navakarumam,* பெ.(n.) புதுப் பிக்கும் வேலை; renovation, repairs.

*[Skt. nava > த. நவ+கருமம்]*

**நவகம்** *navagam,* பெ.(n.) ஒன்பது; nine. (சா.அக.)

**நவகிரகக்கிசம்** *nava-k-kiraga-k-kisam,* பெ.(n.) ஒன்பது கோள்மீன்களைப் பற்றிய ஒரு மந்திர வினை நூல். (சா.அக.); a magic science book on the nine planets.

**நவகிருத்தியம்** *nava-kiruttiyam,* பெ.(n.) புதிதாய்க் கண்டது; discovery.

*[நவ + கிருத்தியம்]*

**நவகெந்தி** *navakendi,* பெ.(n.) ஒன்பான் கெந்திக் கல்; brim stone. (சா.அக.)

**நவகோசாதிபதி** *navakōsādipadi,* பெ.(n.) கட்டளை இடம் (ஆக்கினை); one of the six mystic centres in the cerebral region. (சா.அக.)

**நவகோடிசித்தபுரம்** *nava-kōḍi-šittapuram,* பெ.(n.) திருவாவடுதுறையென்னும் ஊர் (சங்.அக.); *Tiruvāvaḍuduṟai.*

*[Skt. navan > த. நவ+கோடிசித்தபுரம்]*

**நவகோடிசித்தர்** *navakōḍi-šittar,* பெ.(n.) ஒன்பது வகைச் சித்தர் கூட்டம்; the assembly of nine classes of šiddhars who were skilful in medicine.

*[Skt. nava > த. நவ+கோடிசித்தர்]*

**நவகோணத்தாள்** *nava-kōṇattāḷ,* பெ.(n.) மலைமகள்; Pārvati. *"நவகோணத் தாட்கிறையை" (சிவரக. தேவர்முனிவர். 1).*

**நவச்சங்கு** *nava-c-caṅgu,* பெ.(n.) முள்சங்கு; a kind a conch with thorn like elevations on its surface. (சா.அக.)

**நவச்சாரஆக்கிராணம்** *nava-c-cāra-ākkirāṇam,* பெ.(n.) மூக்கினால் முகரும் காரவுப்பு; smelling salt of volatile. (சா.அக.)

**நவச்சாரக்கட்டு** *nava-c-cāra-k-kaṭṭu,* பெ.(n.) இறுகச் செய்த எவட்சாரம்; concentrated sal ammoniac.

*[Skt. navaccāram + த. கட்டு > த. நவச்சாரக்கட்டு]*

**நவச்சாரக்கிராணம்** *nava-c-cāra-k-kirāṇam,* பெ.(n.) மோத்தற்குரிய எவட்சார வுப்பு; volatile sal-ammoniac.

*[நவச்சாரம் + கிராணம்]*

*[Skt. navaccaram > த. நவச்சாரம்]*

**நவச்சாரச்சுண்ணம்** *nava-c-cāra-c-cuṇṇam,* பெ.(n.) ஆங்கிலேய முறைப்படி செய்த ஒரு வகை எவட்சாரவுப்பு; carbonate of ammonia ($2NH_4$-$OZCo_2$). *"நெஞ் செரிச்சல், வயிற்றுவலி, சுரம், சொறி, பக்க வலி (பாரிச வாயு), நீரிழிவு முதலிய நோய்களுக்குப் பயன்படும். மேலும் வெந்நீர் குளியலில் இதைச் சேர்க்கலாம். இதன் ஆவியை மூச்சுத் திணறலுக்கும் மூர்ச்சைக்கும் பயன் படுத்தலாம்.* (சா.அக.)

**நவச்சாரத்தண்ணீர்** *nava-c-cāra-t-taṇṇīr,* பெ.(n.) எவட்சாரங் கரைத்த தண்ணீர்; water of Ammonia-Aqua amoniac. (சா.அக.)

**நவச்சாரப்பதங்கம்** *nava-c-cāra-p-padaṅgam,* பெ.(n.) ஒரு வகை எவட் (நவச்)சாரப் புளிப்பு; salammonac turned into a sublimate. (சா.அக.).

**நவச்சாரப்பற்று** *nava-c-cāra-p-paṟṟu,* பெ.(n.) எவட்சாரத்தினால் மாழைகள் ஒன்றுடனொன்று பொருந்துமாறு செய்யும் பற்றாசு; a solder, metallic cement.

*[நவச்சாரம் + பற்று]*

**நவச்சாரம்** *nava-c-cāram,* பெ.(n.) பள பளப்பான வெள்ளை நிறமும் காரத் தன்மையும் உடைய உப்பு; ammonium chloride.

**நவச்சாரமெழுகு** *nava-c-cāra-meḻugu,* பெ.(n.) பொன் மணல்; gold ore. (சா.அக.)

**நவச்சாரவாயு** *nava-c-cāra-vāyu,* பெ.(n.) நீலச்சாயச் சாலையிலும், தோல் பதப்படுத்து மிடத்திலும் உண்டாகிற காற்று (வாயு); a product of the purification of animal matter or the gas, evolved in indigo factories and tanneries Ammonia gas. (சா.அக.)

**நவச்சி** *navacci,* பெ.(n.) எவட்சாரம்; nitre-Nitrate of potash. (சா.அக.)

**நவசக்தி** *nava-šakti,* பெ.(n.) ஒன்பது வலிமைகள் (சத்திகள்); the personified female energies or faculties. (சா.அக.)

1. பார்ப்பனி; eneray of Brahma. 2. கார்த்திகை; eneray of Subramania. 3. இந்திராணி; eneray of Indira. 4. மலைமகள்; eneray of Shiva, the great Lord. 5. நரசிம்மி; eneray of the first originent. 6. ரௌத்திரி; eneray of Rudra. 7. வராகி; eneray of Vishnu in the form of boar. 8. வைணவி; eneray of Vishnu.

**நவசாரத்தான்** *nava-šāra-t-tāṉ,* பெ.(n.) பொன்மணல்; gold ore. (சா.அக.).

**நவசாரம்** *nava-sāram,* பெ.(n.) ஒன்பது நீரின் சாரம்; salammoniac turned into wax or prepared to form like wax. (சா.அக.)

**நவசாரவுப்பு** *navašāra-v-uppu,* பெ.(n.) நவசாரத்திலிருந்து எடுக்கப்பட்ட உப்பு; carbonate of ammonia.

*[Skt. navaksaram > த. நவசாரவுப்பு]*

**நவசித்தர்** *nava-šittar,* பெ.(n.) காய சித்தி யடைந்த ஒன்பது சித்தர்கள்; the nine famous 'Siddhars' exempted from infirmities of old age. (சா.அக.).

**நவசிந்தாமணிலேகியம்** *nava-šindāmaṇi-lēgiyam,* பெ.(n.) தாம்பூர செந்தூரத்துடன் துணைப் பருகமாக (அனுபானமாக)க் கொள்ளும் அகத்தியர் 300–ல் சொல்லியுள்ள ஓர் வகை இளகியம்; a kind of electuary taken as a vehicle along with calcined red oxide of copper as contemplated in Aasthiyas wook 300. (சா.அக.)

**நவசுரேபாங்குசரசம்** *navašurēpāṅgu-šarašam,* பெ.(n.) சுரத்தைப் போக்கி வியர்வையையுண்டாக்கும் ஒரு ஆயுர் வேத மருந்து; an Ayurvedic medicine which causes more sweating and cures fever. (சா.அக.)

**நவசூதிகை** *nava-šūdigai,* பெ.(n.) ஈன்றணிமையுள்ளவள்; a woman recently delivered of a child.

*[Skt. nava+šūtikā > த. நவசூதிகை]*

**நவத்தம்** *navattam,* பெ.(n.) சடாமாஞ்சில்; Indian spikenard - *Cyprus stoloniferus.* (சா.அக.)

**நவத்தாழை** *navattāḷai,* பெ.(n.) நத்தைக் கூடு; snail shell. (சா.அக.)

**நவத்துவாரம்** *nava-t-tuvāram,* பெ.(n.) தொண்டொளை (கண்கள், மூக்குத் தொளைகள், காதுகள், வாய், மலவாய்த் தொளை, குறித்தொளை என்னும் ஒன்பது உடல் வாயில்களாம் தொளைகள் (வின்.); the nine apertures of the body viz. two eyes, two nostrils, two ears, mouth, anus and meatus urinarius.

*[நவம் + துவாரம்]*

தொண்டு = ஒன்பது. தொண் + தொளை > தொண்டொளை.

**நவதளம்** *nava-taḷam,* பெ.(n.) தாமரைத்தளிர் (சங்.அக.); tender lotus-leaf.

*[Skt. nava > த. நவ(ம்) + தளம்]*

**நவதா** *navadā,* பெ.(n.) யானையின் மேல் அமைக்கப்படும் இருக்கை (தவிசு) (யாழ்.அக.); howdah on an elephant.

*[Skt. navada > த. நவதா]*

**நவதானியம்** *nava-dāṉiyam,* பெ.(n.) தொண்தவசம் (அவரை, உளுந்து, எள், கடலை, கொள்ளு, கோதுமை, துவரை, நெல், பாசிப்பயறு ஆகிய ஒன்பது வகை தவசங்கள்; nine kinds of grains, viz. beans, blackgram, sesame, bengalgram, horsegram, wheat, red gram, paddy, green gram.

*[நவ + தானியம்]*

**நவதாரணை** *nava-tāraṇai,* பெ.(n.) 1. தொண்கவனவூழ்கம். (நாமதாரணை, அக்கரதாரணை, செய்யுட்டாரணை, சதுரங்க தாரணை, சித்திரத்தாரணை, வயிரத்தாரணை, வாயுத்தாரணை, நிறைவுகுறைவாகிய வெண் பொருட்டாரணை, வத்துத்தாரணை யென்னும் ஒன்பது அவதான வகைகள்) (யாப்.வி.96. பக்.

516) (திவா.); the nine modes in the art of concentrated meditation. 2. ஒகத்தில் ஒன்பது வகைப்பட்ட மனோதாரணை; the nine kinds of meditation practised by yogins.

[Skt. nava-dhāranā > த. நவதாரணை]

**நவதாலி** *nava-tāli,* பெ.(n.) தொண்கோள் சாந்தியாக விளக்கிடு கல்யாணத்தில் சிறுமிக்குக் கட்டும் ஒரு வகைத் தாலி (இ.வ.); the tali tied round the neck of girls, on the occasion of viḷakku-kalyāṇam in propitiation of nava-k-kirakam.

[நவம் + தாலி]

[Skt. navan+த. தாலி > த. நவதாலி]

**நவதாளம்** *nava-tāḷam,* பெ.(n.) தொண்டாளம். (அரிதாளம், அருமதாளம், சமதாளம், சயதாளம், சித்திரதாளம், துருதாளம், நிவிர்த்ததாளம், படிமதாளம், விடதாளம் என்ற ஒன்பது வகைத் தாளம்" (பரத. தாள. 6); ninekindsoftime-measure, viz. aritalam, arumatālam, šāmatalam, šayatalam, šittiratalam, turuvatalam, nivirttatalam, patimatālam, viṭatāḷam.

[நவ(ம்) + தாளம்]

[Skt. nava > த. நவம் + த. தாளம்]

**நவதாளகம்** *nava-tāḷāgam,* பெ.(n.) இனிப்புப் புளி; sweet tamarind. (சா.அக.).

[நவம் + நாகம்]

**நவதி**[1] *navadi,* பெ.(n.) பொடுதலை; creeping vervain - Lippia nodiflora alias verbina nodiflera. (சா.அக.)

**நவதி**[2] *navadi,* பெ.(n.) தொண்ணூறு (யாழ்.அக.); ninety.

[Skt. navadi > த. நவதி]

**நவதிகை** *navadigai,* பெ.(n.) தூரியக்கோல் (யாழ்.அக.); brush.

[Skt. navadikā > த. நவதிகை]

**நவதீர்த்தம்** *nava-tirttam,* பெ.(n.) தொண்ணீர்க்குளம், கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, சிந்து, காவேரி, கோதாவரி, சோனை, துங்கபத்திரை என்னும் ஒன்பது நற்பேறு தரும் நீர், நீர்த்தம்; the nine sacred rivers of the Hindus. *"கங்கை நதியாதி நவதீர்த்தக் கரை நாட்டுள்" (சைவச. ஆசாரிய. 2).*

[Skt. nava > த. நவ+தீர்த்தம்]

**நவதை** *navadai,* பெ.(n.) புதுமை (யாழ்.அக.); newness, freshness.

[Skt. nava > த. நவதை]

**நவநாகம்**[1] *nava-nāgam,* பெ.(n.) ஓமம் (மலை.); bishop's weed.

[நவம் + நாகம்]

**நவநாகம்**[2] *nava-nāgam,* பெ.(n.) அட்ட (எட்டு) மாநாகமும் ஆதி (முதல்)சேடனும் ஆகிய ஒன்பது மகா நாகங்கள் (வின்.); the nine serpents of the nether world comprising *aṣṭa-mā-nāgam* and *ādicēḍaṉ.*

[Skt. navan > த. நவநாகம்]

**நவநாணயம்** *navanāṇayam,* பெ.(n.) புதுவழக்கம் (யாழ்.அக.); new practice, innovation.

[Skt. nava+nāṇaka > த. நவநாணயம்]

**நவநாதசித்தர்** *nava-nāda-šittar,* பெ.(n.) சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அனாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்க நாதர் ஆகிய முதன்மைச் சித்தர் ஒன்பதின்மர்; the nine principal šittars, viz. cattiyanatar, šatokanatar, Atinātar, Anatinatar, vakulinatar, matankanatar, maccentira-natar, katentiranatar, korakkanatar. *"நவநாத சித்தர்களுமுன்னட் பினை விரும்புவார்" (தாயு. மௌன. 7).*

[Skt. navan > த. நவநாதசித்தர்]

**நவநாதசித்தத்தைலம்** *nava-nāda-šitta-t-tailam,* பெ.(n.) கையாந்தகரை, ஆடாதோடை, நொச்சி, ஊமத்தை, சதுரக்கள்ளி, கண்டங் கத்திரி, ஆமணக்கு, தழுதாழை, எருக்கு ஆக

ஒன்பது சரக்குகளைக் கொண்டு சம எடை கொண்டு மற்றும் சில கடைச் சரக்குகளையும் சேர்த்து நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், வேப்பெண்ணையும் கூட்டிக் காய்ச்சிய நெய்மம் (தைலம்), இது தலை முழுகவும், ஊதை வலிக்குத் தேய்க் கவும் உதவும்; a bathing and smearing oil for vadha diseases prepared with the juices of nine herbs, and three oils as mentioned above along with some bazaar drugs. (சா.அக.)

**நவநாதரசம்** *nava-nādarašam,* பெ.(n.) எலும்பைப் பற்றிய காய்ச்சலுக்கு கொடுக்கப் படும் ஓர் ஆயுள் வேத மருந்து; an Ayurvedic medicine given for fevers affecting the bones. (சா.அக.)

**நவநிதி** *nava-nidi,* பெ.(n.) தொண்ணிதி; பதுமம், மாபதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், நந்தம், நீலம், கர்வம் ஆகிய ஒன்பது வகைப்பட்ட பெருஞ்செல்வம்; the nine treasures of kubēra. *"பிங்கலன்றானருள் பெருக நவநிதியும்" (சேதுபு. துராசா. 20) (பிங்.).*

*[Skt. navanidi > த. நவநிதி]*

**நவநீதகம்** *nava-nīdagam,* பெ.(n.) 1. நெய்; ghee, melted butter. 2. ஒரு வகை கந்தகம்; sulphur of a particular kind. (சா.அக.)

**நவநீதசெயநீர்** *navanīda-šeyanīr,* பெ.(n.) தலைப்பிண்டச் செயநீர்; a strong pungent liquid extracted from the first born foetus. (சா.அக.)

**நவநீதசோரன்** *nava-nīda-šōran,* பெ.(n.) கண்ணபிரான் (யாழ்.அக.); Krishna as butter - stealer.

*[நவம் + நீதம் + சோரன்]*

**நவநீதநீர்** *navanīdanīr,* பெ.(n.) தூய நீர்; nutritional fluid. (சா.அக.)

**நவநீதப்பூடு** *nava-nīda-p-pūḍu,* பெ.(n.) மூளையின் மாங்கிசம்; brain tissue - Cerebrin. (சா.அக.)

**நவநீதம்**[1] *nava-nīdam,* பெ.(n.) 1. புது வெண்ணெய்; fresh butter. 2. ஆவின் வெண்ணெய்; butter collected from cow's milk. 3. புத்துருக்கு நெய்; freshly melted ghee. 4. தண்ணீரின் அடியில் நிற்கும் வண்டல்; fine sediment at the bottom of water. (சா.அக.)

**நவநீதம்**[2] *navanīdam,* பெ.(n.) மேள கர்த்தாக்களுளொன்று (சங்.சந். 47); a primary rāga.

*[நவம் + நீதம்]*

**நவநீதபாகம்** *navanīdabāgam,* பெ.(n.) எளிதிற் பொருளுணர்தற்குரிய செய்யுணடை (யாழ்.அக.); transparent simplicity of style.

*[நவம் + நீதம் + பாகம்]*

**நவநீதபாகு** *nava-nīdabāgu,* பெ.(n.) மூளையின் பாகைப் போன்ற நீர்; a syrup like liquid derived from the brain.

**நவநீதம்பண்ணல்** *nava-nīdam-paṇṇal,* பெ.(n.) வெண்ணெயைப் போல் செய்தல்; making as fine as butter, making an emulsion. (சா.அக.)

**நவநீதமருவிப்பாய்தல்** *nava-nīda-maruvi-p-pāydal,* பெ.(n.) வெண்ணெயைப் போலாதல்; becoming an oily mass like butter - Emulsion. (சா.அக.)

**நவநீதரசம்** *nava-nīdarasam,* பெ.(n.) 1. இதளியத்தோடு சாரம், வீரம், சிப்பி நீர், சேங்கொட்டை இட்டு உருக்கும் வெண்ணெய்; a glutinous mercury. 2. இதளிய (சுத்தரச)த்தினின்று செய்யும் 10 வகை இதளியச் சத்துக்களிலொன்று; one of the 10 kinds of mercury preparations as contemplated in sidha medicine. it is capable of transmating inferier metals into gold and rejuvenating the human body. (சா.அக.)

**நவநீதி** *nava-nīdi*, பெ.(n.) வெண்ணெய்; butter. (சா.அக.)

**நவப்பிரமர்** *nava-p-piramar*, பெ.(n.) மரீசி, பிருகு, அங்கிரா, கிரது, புலகன், புலத்தியன், தக்கன், வசிட்டன், அத்தரி என்ற ஒன்பது படைப்பு கடவுள்; the nine creators. viz. *mariši, pirugu, aṅgirā, kiratu, pulakaṉ, pulattiyaṉ, takkaṉ, vašiṭṭaṉ, attiri*

*[நவம் + பிரமர்]*

**நவப்பிரமவுயிர்** *nava-p-pirama-v-uyir*, பெ.(n.) தூயநீர் (சுத்தசலம்); amniotic fluid *Liquoramni*. (சா.அக.)

**நவப்பிரேதம்** *nava-p-pirēdam*, பெ.(n.) எண்டிக்கும் மேலிடமுமாகிய ஒன்பது திசை களையும் காவல் புரியும் பூதங்கள் (வின்.); the nine demons who are believed to protect the eight cardinal points, and the zenith.

**நவப்பீரிதி** *nava-p-pīridi*, பெ.(n.) வெடியுப்பு (சங்.அக.); salt petre.

*[நவம் + பீரிதி]*

**நவபண்டம்** *nava-paṇḍam*, பெ.(n.) கோதுமை, நெல், துவரை, பயறு, கடலை, அவரை, எள், உளுந்து, கொள் ஆகிய ஒன்பது வகைத் தவசங்கள் (வின்.); the nine kinds of grain.

*[Skt. navan > த. நவபண்டம்]*

**நவபதார்த்தம்** *nava-patārttam*, பெ.(n.) சீவம், அசீவம், புண்ணியம், பாவம், ஆசிரவம், சம்வரை, நீர்ச்சரை, பந்தம், மோட்சம் என ஒன்பது வகைப்பட்ட சைன மத தத்துவங்கள் (சீவக. 2814, உரை); the nine categories or fundamental realities. civam, acivam, punniyam, povam, aciravam, camurai, niraccarai, pantam, motcam.

*[Skt. navan > த. நவ + பதார்த்தம்]*

**நவபந்தனம்** *navabandaṉam*, பெ.(n.) உடம்பி லுள்ள ஒன்பது வாயில்களையும் அடக்குதல்; suppressing the action of the nine appertures in the body. (சா.அக.)

**நவபல்லவம்** *nava-pallavam*, பெ.(n.) 1. தளிர்; tender leaf. 2. இலையாமணக்கு; a kind of castor plant. (சா.அக.)

**நவபாண்டம்** *nava-pāṇḍam*, பெ.(n.) புதுப்பானை (இ.வ.); new pots.

*[Skt. nava > த. நவ + பாண்டம்]*

**நவபாசாணம்** *navapāšāṇam*, பெ.(n.) தெண்ணச்சு; கடற்கரை நீரில் அமைக்கப் பெற்ற நவக்கிரகச் சிலைகளை உடையதும் இராமநாதபுரத்தையடுத்துள்ளதும் யாத் திரைக்குரிய தலமுமான தேவிபட்டணம் என்ற ஊர்; Devipattanam a place of pilgrimage near Ramnad, having nine large stones representing the nine planets, fixed in shallow water along the seashore.

*[Skt. navan > த. நவ + பாசாணம்]*

**நவபாடாணம்** *nava-pāḍāṇam*, பெ.(n.) கடையில் விற்கப்படும் ஒன்பது வகைப் பாடாணங்கள்; the nine kinds poisons generally sold in bazars. (சா.அக.)

**நவபுண்ணியம்** *nava-puṇṇiyam*, பெ.(n.) எதிர்கொளல், பணிதல், இருக்கையீதல், கால்கழுவல், அருச்சித்தல், நறுமண புகை ஊட்டல் (தூபங் கொடுத்தல்), தீபங்காட்டல், புகழ்தல், உண்டியீதல் என ஒன்பது வகைப்பட்ட விருந்தோம்பல் செயல்கள் (யாழ்.அக.); the nine acts of hospitality shown to an honoured guest.

*[Skt. nava > த. நவ + புண்ணியம்]*

**நவபூசாவந்தம்** *nava-pūšāvandam*, பெ.(n.) ஒன்பது முகமுடைய கடுக்கன் வகை (வின்.); nine-faced ear ring.

*[Skt. navan > த. நவ + பூசாவந்தம்]*

**நவபேதமூர்த்தம்** *navapēda-mūrttam*, பெ.(n.) சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், ஈசன், உருத்திரன், மால், அயன் என்ற ஒன்பது வகையான சிவபேதம் (சி.சி.2, 74); the nine

manifestations of siva (viz., *civam, catti, nātam, vintu, cācivam, ican, uruttiran, māl, āyan*).

*[Skt. navan > த. நவ + பேதமூர்த்தம்]*

**நவம்[1]** *navam,* பெ.(n.) 1. புதுமை (பிங்.); freshness, novelty. *"நவமாய செஞ்சுடர் நல்குதலும்" (திருவாச. 11, 4).* 2. நட்பு (திவா.); friendship, affection. 3. நிலம் (அந.நி.); earth.

*[Skt. nava > த. நவம்]*

**நவம்[2]** *navam,* பெ.(n.) 1. பாம்பு; snake. 2. சாரணை; one styled trianthema - Trian thema monogyna. 3. மாரிக்காலம்; rainy season. 4. புதுமை; novelty. (சா.அக.)

**நவம்[3]** *navam,* பெ.(n.) ஒன்பது (பிங்.); the number nine.

*[Skt. navan > த. நவம்]*

**நவம்[4]** *navam,* பெ.(n.) கார்காலம் (பிங்.); winter.

*[Skt. nabhas> த. நவம்]*

**நவமணி** *navamaṇi,* பெ.(n.) தொண்மணி. கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராகம், வைடூரியம், வயிரம் ஆகிய ஒன்பது வகை அரத்தனங்கள் (திவா.); the nine gems or precious stones. viz., *kōmētagakam, nīlam, pavaḷam, maragatam, māṇikkam, muttu, purutarākam, vaiḍūriyam, vairam.*

*[Skt. navan > த. நவம் + மணி]*

**நவமணிச்சிந்தூரம்** *nava-maṇi-c-cindūram,* பெ.(n.) வீரம், பூரம், இலிங்கம், கந்தகம், படிகாரம், வெண்காரம், எவட் (நவா)ச் சாரம், வெடியுப்பு, அயம் ஆகிய இவ்வொன்பது சரக்கு களைப் புடமிட்ட சிந்தூரம்; red oxide obtained by calcining the following nine drugs corresive sublimate, sub chloride of mercury, vermillion, sulphur, alum, borax, salammoniac, nitre and iron. (சா.அக.).

**நவமணிமாலை** *navamaṇi-mālai,* பெ.(n.) 1, தொண்மணி மாலை; a necklace of the nine gems. *"அணிகிளர் மாடவீதி நச்சரவுச் சியாட்கு நவமணி மாலைமானும்" (குற்றா. தல. நகரச்சருக். 13).* 2. ஒன்பது பாவகையால் ஈறு தொடக்கி(அந்தாதி)யாக இயற்றப்படும் ஒரு பிரபந்தம் (இலக். வி. 837); a poem of nine verses of various metres in antādi.

*[நவமணி + மாலை]*

**நவமல்லி** *navamalli,* பெ.(n.) சித்தினி இன (சாதி)ப்பெண்; one of the four classes of woman divided according to lust. (சா.அக.)

**நவமாதம்** *navamādam,* பெ.(n.) ஒன்பது மாதம்; nine month. (சா.அக.)

**நவமாலி** *navamāli,* பெ.(n.) மனோசிலை (சங்.அக.); realgar.

*[Skt. navamali > த. நவமாலி]*

**நவமாலிகம்** *nava-māligam,* பெ.(n.) இரட்டை மல்லிகை; jasminum sambac (double flowered). (சா.அக.)

**நவமி[1]** *navami,* பெ.(n.) உவா ஒன்பது; the ninth lunar day after the new or full moon.

**நவமி[2]** *navami,* பெ.(n.) காருவா (அமாவாசை) அல்லது வெள்ளுவா (பௌர்ணமி) கழிந்த ஒன்பதாவது நாள்; the ninth lunar day after the new moon and after the full moon. *"நவமிதனி விழைத்திடுமேல்கு (சேதுபு. துரா. 29).*

*[Skt. navami > த. நவமி]*

**நவமுகில்** *nava-mukil,* பெ.(n.) சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலம், துரோணம், காளம், நீலம், வாருணம், வாயுவம், தமம் ஆகிய ஒன்பது வகை மேகங்கள் (வின்.); the nine kinds of clouds viz. *camvarttam, āvarttam, putkalam, turonam, kalam, nīlam, vāruṇam, vāyuvam, tamam.*

*[Skt. navan > த. நவமுகில்]*

**நவமூர்த்திமெழுகு** *nava-mūrtti-meḻugu,* பெ.(n.) எவட் (நவாச்)சாரம், வீரம், பூரம், கௌரி, தாரம், இலிங்கம், வெள்ளை, வெடியுப்பு, கறிப்பு ஆகிய இவ்வொன்பதையும் ஒவ்வொன்றாக நாதத்தினால் 9 நாள் மெழுகைப் போல் அரைத்துத் திரட்டி வைத்துக் கொள்ளும் ஒரு வகை மருந்து; a wax like preparation or medicine obtained by grinding for nine days the following nine drugs first separately and then all to gether with Natham a prepared fluid-salammoniac, corrosive sublimate subchloride of mercury golden arsenic, yellow orpiment vermillion white arsenic, nitre, common salt they must be grinded till they obtain the wax like consistency. (சா.அக.)

**நவமூலம்** *navamūlam,* பெ.(n.) மூளை மூலம், இரத்தமூலம், சீழ்மூலம், உள்மூலம் முதலிய ஒன்பது வகை நோய்கள்; the nine varieties of piles. (சா.அக.)

**நவமை** *navamai,* பெ.(n.) குற்றம்; defect, fault.

*"நவமை நீங்கிய நற்றவன்" (கம்பரா. அகத். 31).*

**நவர்** *navar,* பெ.(n.) ஆள் (இ.வ.); person.

*[U. nafar > த. நவர்]*

**நவர்சிட்டா** *navar-šiṭṭā,* பெ.(n.) பேர்வாரி வரிக்கணக்கு (சிட்டா); revenue account of holdings with assessment arranged under the names of the holders.

*[U. nafar > த. நவ+சிட்டா]*

**நவரங்கப்பணி** *navaraṅga-p-paṇi,* பெ.(n.) கோயில் மேற்கூரை (விதானம்) வேலைகளில் ஒரு வகை (நாஞ்.); a kind of ornamentation in a canopy.

*[U. nava+raṅga > த. நவரங்கப்பணி]*

**நவரங்கப்பளி** *navaraṅgapa-p-paḷi,* பெ.(n.) புடைவை வகை; a kind of saree.

*[Skt. nava+ranga > த. நவரங்கபப்பளி]*

**நவரசம்**[1] *navarašam,* பெ.(n.) 1. தொண்சுவை, ஒன்பது வகைச் சுவை; the nine kinds of juices or essences. 2. வாலை உப்பு; quintessence of salt. (சா.அக.)

**நவரசம்**[2] *nava-rašam,* பெ.(n.) (தொண்சுவை) ஒப்பனை (சிங்காரம்), ஆசியம், கருணை, சினம், வீரம், பயம், அருவருப்பு, அற்புதம், சாந்தம் (அமைதி) ஆகிய ஒன்பது வகை நூற்சுவைகள் (திவா.); the nine sentiments or emotions prevailing in a literary work, chiefly poetry or drama viz. *šinkāram, āšiyam, karṇai, irauttiram, vīram, bayam, kuṟcai, aṟpudam, šāndam.* (வடமொழியில் குறிப்பிடப்படும் ஒன்பது வகையான மெய்ப்பாடுகள்).

*[Skt. navan+(Rhet.) > த. நவரசம்]*

*[நவ + ரசம்]*

**நவரசமெழுகு** *navarasa-meḻugu,* பெ.(n.) இராசபிளவை போக்கும் மருந்து; a waxy medicine that cures diabetic carbuncle. (சா.அக.)

**நவரங்கம்** *nava-raṅgam,* பெ.(n.) 1. நாடக சாலை (பிங்.); theatre. 2. கோயில் நடுவரங்கம் கோயிலிலுள்ள முதன்மை மண்டபம் (இ.வ.); central hall of a temple.

*[Skt. nava+raṅga > த. நவரங்கம்]*

**நவரத்தினவைப்பு** *nava-rattiṉa-vaippu,* பெ.(n.) ஒன்பது வகை அரத்தினங்களைச் செய்யும் வைப்பு முறையைப் பற்றிச் சொல்லும் மருத்துவ நூல்; a treatise on medicine compiled by siddha named Sattaimuni dealing with the artificial process of making the nine gems synthetically together with their qualities and uses in medicine. (சா.அக.)

**நவவரிகை** *nava-varigai,* பெ.(n.) புதுமணப் பெண் (யாழ்.அக.); a woman recently married.

*[Skt. navavarikā > த. நவவரிகை]*

**நவவாயில்** *navavāyil,* பெ.(n.) ஒன்பது (நவத்துளை வாரம்); the nine gates or openings in the human system. (சா.அக.)

*[நவம் + வாயில்]*

**நவவானோர்கள்** *nava-vāṉōrgaḷ,* பெ.(n.) கிறித்தவ மதத்தில் வழங்கும் ஒன்பது வகைப்பட்ட தேவகணங்கள் (வின்.); nine choirs of celestial spirits.

*[Skt. nava > த. நவ + வானோர்கள்]*

**நவவியாகரணம்** *nava-viyāgaraṇam,* பெ.(n.) இந்தியாவில் இருந்த ஒன்பது இலக்கண நூல்கள்; the nine ancient treatises on Indian grammar.

*[Skt. navan > த. நவ + வியாகரணம்]*

இவற்றுள் முதலாவதும் காலத்தால் மிகுந்த தொன்மையுடையதும் ஐந்திரத் தமிழிலக்கணம் என நூல்கள் குறிப்பிடுகின்றன.

**நவவியூகம்** *nava-viyūgam,* பெ.(n.) கால வியூகம், குல வியூகம், நாமவியூகம், ஞான வியூகம், சித்த வியூகம், நாதவியூகம், விந்து வியூகம், கலா வியூகம், சிவவியூகம் என்ற ஒன்பது வகைப் பொருட்டொதொகுதிகள் (சௌந்த. 1, உரை); the nine categories of things.

*[Skt. navan > த. நவ+வியூகம்]*

**நவராசிகம்** *navarāśigam,* பெ.(n.) கணக்கு வகை (வின்.); rule of nine.

*[Skt. navan+(math) > த. நவராசிகம்]*

**நவராத்திரி** *nava-rāttiri,* பெ.(n.) தொள்ளிரா (புரட்டாசி மாதம் வளர்பிறையின் முதல் நாளிலிருந்து ஒன்பது இரவுகள் கொண்டா டப்படும் பண்டிகை); a festival for the Goddessess Durga. Lakshmi. Saraswathi. celebrated for nine days. *"நவராத்திரிக்குக் கொலு வைக்கப் போகிறீர்களா?".* (இ.வ.).

*[Skt. nava(n)+rātri > த. நவராத்திரி]*

**நவரோசு** *navarōsu,* பெ.(n.) ஓர் இசை, பண், இராகம் (வின்.); a kind of tune.

*[U. naurōz(mus.) > த. நவரோசு]*

**நவரோதயம்** *navarōdayam,* பெ.(n.) சீனிக் கற்கண்டு (சர்க்கரை கற்கண்டு); white sugar candy. (சா.அக.)

**நவலோகம்** *navalōgam,* பெ.(n.) பொன், இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி, பித்தளை, தரா, துத்தநாதம், வெண்கலம் ஆகிய ஒன்பது மாழைகள் (பிங்.); the nine kinds of metal, viz. *poṉ, irumpu, šempu, īyam, veḷḷi, pittaḷai, tarā, tuttanāgam, veṇkalam.*

*[Skt. navan > த. நவம் + உலோகம்]*

**நவலோகக்களங்கு** *navalōga-k-kaḷaṅgu,* பெ.(n.) ஒன்பது உலோகங்களையும் இதளிய (இரச)த்தையும் சேர்த்துச் செய்யும் உருண்டை; alloy prepared with nine metals along with mercury. (சா.அக.)

**நவலோகக்களிம்புபோக்கு** *navalōga-k-kaḷimbu-pōkku,* பெ.(n.) தேவதாளி அல்லது பேய்ப்பீர்க்கு; snake *luffa-Luffaechinata.* (சா.அக.)

*[நவம் + உலோகம் + களிம்பு + போக்கி]*

**நவலோகக்குப்பி** *navalōga-k-kuppi,* பெ.(n.) சுதை மண் (யாழ்.அக.); chunam.

*[Skt. nava > த. நவம் + உலாகக்குப்பி]*

**நவலோகச்சத்து** *nava-lōga-c-cattu,* பெ.(n.) ஒன்பது மாழை (லோக) வகைகளைச் சேர்த்துப் புடமிட்டு எடுத்த சத்து; the essence derived by subjecting the nine metals to violent heat or calcination - Calx of nine metals. (சா.அக.)

*[நவம் + உலோகம் + சத்து]*

**நவலோகத்தகடு** *navalōga-t-tagaḍu,* பெ.(n.) ஒன்பது மாழை (லோகங்)களையும் ஒன்று சேர்த்து உருக்கித் திரட்டித் தட்டிய தகடு; the foil or plate of an alloy of nine metals. (சா.அக.)

*[நவம் + உலோகம் + தகடு]*

**நவலோகபூபதி** *nava-lōga-pūpadi,* பெ.(n.) ஒரு வகைக் கூட்டு மருந்து; a medicinal compound.

*[நவலோகம் + பூபதி]*

**நவலோகபூபதிமாத்திரை** *navalōga-pūpadi-māttirai,* பெ.(n.) ஒன்பது மாழை (லோகங்) களையும் சேர்த்துச் செய்த காய்ச்சல், இசிவு முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் கூட்டு மருந்துக் குளிகை; a reputed pill prepared as per process of Tamil medicine from a mixture of nine metals. (சா.அக.)

*[நவம் + உலோகம் + பூபதி + மாத்திரை]*

**நவலோகபேதி** *navalōgapēdi,* பெ.(n.) 1. கெந்தி பாடாணம்; a poisonous compound of sulphur in its native state, a mineral poison. 2. ஒன்பது மாழை (லோகங்) களையும் பேதிக்கச் செய்யும் மருந்து; any substance capable of acting chemically on nine metals. (சா.அக.)

*[நவம் + உலோகம் + பேதி]*

**நவலோகம்** *navalōgam,* பெ.(n.) ஒன்பது வகை மாழை (உலோகங்)களான, பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், வங்கம், நாகம், குருத்துவம், குடவன் (அ) பித்தளை; gold, silver, copper, iron, tin, lead, zinc, platinum and brass. (சா.அக.)

*[நவம் + உலோகம்]*

**நவலோகமேமமாக்கி** *navalōgamēma mākki,* பெ.(n.) 1. இலவண பாடாணம்; a kind of prepared arsenic. 2. குங்கும பாடாணம்; one of the 32 kinds of prepared arsenic. (சா.அக.)

**நவலோகவக்கினிகுமாரன்** *navalōga-v-akkini-kumāran,* பெ.(n.) உடம்பினிலுள்ள நோய்களை நெருப்பைப் போல் எரிக்கக் கூடிய ஒன்பது மாழை (லோகங்)களைக் கொண்டு செய்யப்பட்ட ஓர் மருந்து; a reputed or well known remedy for curing or reducing to nothing like fire, all oilments in the system radically, prepared with the aid of nine metals. (சா.அக.)

*[நவம் + உலோகம் + வக்கினி + குமாரன்]*

**நவலோகவங்குசம்** *navalōga-v-aṅgusam,* பெ.(n.) காந்தம்; load stone magnet. (சா.அக.)

*[நவம் + உலோகம் + வங்குசம்]*

**நவலோகவேதிச்சி** *navalōga-vēdicci,* பெ.(n.) கருநெல்லி; black Indian gooseberry - *Phyllanthus emblica.* (சா.அக.)

*[நவம் + உலோகம் + வேதிச்சி]*

**நவலோகாங்கம்**[1] *navalōgāṅgam,* பெ.(n.) காந்தம்; load stone, magnet. (சா.அக.).

**நவலோகாங்கம்**[2] *navalōgāṅgam,* பெ.(n.) காந்தம் (மூ.அ.); magnet.

*[Skt. nava-lōkam > த. நவலோகாங்கம்]*

**நவாக்கரி** *navā-k-kari,* பெ.(n.) தொள்ளெழுத்து மந்திரம், ஒன்பது எழுத்துகளுள்ள மந்திர வகை; a sacred mantra of nine letters. *"நவாக்கரி சக்கர நானுரை செய்யின்" (திருமந். 1319).*

*[Skt. nava(n)+akṣari > த. நவாக்கரி]*

**நவாச்சரக்கட்டு** *navā-c-cāra-k-kaṭṭu,* பெ.(n.) நெருப்புக்கு ஒடாதபடி கட்டிய (நவாச்சாரம்); consolidated salt ammoniac which resists fire. (சா.அக.)

**நவாச்சாரக்காரம்** *navā-c-cāra-k-kāram,* பெ.(n.) 1. நவாச்சாரநீர்; strong solution of ammonia - Liquor ammoniac. 2. நவாச் சாரவுப்பு; carbonate of ammonia - Ammoniac carbonas. 3. நவாச்சார செயநீர்; a liquid with a very pungent odour and strong alkaline reaction obtained by exposing salammoniac with other ingredients in the night's dew. (சா.அக.)

**நவாச்சாரக்கிராணம்** *navā-c-cāra-k-kirāṇam,* பெ.(n.) ஒன்பது (நவாச்)சாரத்தோடு கூட இரண்டு பங்கு சீமைச் சுண்ணாம்பும் நன்றாகக் காய வைத்துக் கலந்து பதங்கமாக வெரித்த ஓர் வகை ஒடுஞ் சரக்கு; smelling salt volatile salt ammoniac. *வலிப்பு, இழுப்பு, மூர்ச்சை, சூதகசன்னி ஆகிய நோய்களுக்கு*

*மூக்கில் முகருவதற்காக உபயோகப் படுத்தப்படும் மருந்து.* (சா.அக.)

**நவாச்சாரம்** *navā-c-cāram,* பெ.(n.) வாசனை யற்ற, பளபளப்பான நாரிழை போன்ற ஓர் வெண்மையான பொருள்; a colourless, in odourous and translucent fibrous mass known as salammoniac - *Ammonis ahlaridum.* (சா.அக.)

**நவாச்சாரவாயு** *navā-c-cāra-vāyu,* பெ.(n.) நவாச்சாரத்தினின்று கிளம்பும் நச்சுக்காற்று; gas ammonia (NH3). It is a poisonous gas found in sal ammoniac. *மனிதனின் மூத்திரத்திலும், அழுகி நாற்றமுள்ள உயிரி (சீவராசி)களிலும் பொருந்தியுள்ளது.* (சா.அக.)

**நவாச்சாரவாயுசெயநீர்** *navā-c-cāra-vāyu-šeyanīr,* பெ.(n.) தாம்பூரபற்பம்; செந்தூரத் திலுள்ள குற்றங்களை நீக்கும் தன்மை யுடையது; solution of ammonia. it is capable of removing the defects in calcined oxides of copper either red or white. (சா.அக.)

**நவாட்டுச்சருக்கரை** *navāṭṭu-c-carukkarai,* பெ.(n.) பூராச்சருக்கரை (இ.வ.); fine, white can-sugar.

*[நவாது + சருக்கரை]*

**நவாடா** *navāḍā,* பெ.(n.) தோணி (வின்.); boat, dhoney.

*[Skt. nava]*

**நவாத்து** *navāttu,* பெ.(n.) மணற் சர்க்கரை; aska sugar. (சா.அக.)

**நவாது** *navādu,* பெ.(n.) வெண்மையான சருக்கரைவகை (வெண் சருக்கரை) (இ.வ.); a kind of white sugar.

*[T. navātu > த. நவாது]*

**நவாமிசம்** *navāmišam,* பெ.(n.) தொண்பகிர்வு, ஒரை(இராசி)யை ஒன்பதாகப் பகிர்கை (சோதிட. சந். 123); division of a sign of the zodiac into nine equal parts.

*[Skt. navan > த. நவாமிசம்]*

**நவார்ப்பட்டை** *navār-p-paṭṭai,* பெ.(n.) பல நிறமான பட்டை (R.); multi-coloured tape.

*[Skt. nawār > த. நவார் + பட்டை]*

**நவனாகம்** *navaṉāgam,* பெ.(n.) ஓமம்; bishop's weed-carum ajwaun; sison - sison ammi. (சா.அக.)

**நவிசிந்தா** *navišindā,* பெ.(n.) உதவியாளர் (C.G.); accountant, clerk.

*[U. nawi-sindah > த. நவிசிந்தா]*

**நவிசு** *navišu,* பெ.(n.) உதவியாளர் (C.G.); writer, scribe.

*[U. nawis > த. நவிசு]*

**நவீன** *naviṉa,* பெ.எ. (adj.) 1. புதிய; modern. 2. தற்காலத்திய; pertaining to the present time. 3. வியப்புக்குரிய கதை; novel. (சா.அக.)

**நவீனநூலாராய்ச்சி** *naviṉa-nūlārāycci,* பெ.(n.) புதிய நூலாய்வு; modern scientific research. (சா.அக.)

**நவீனம்** *naviṉam,* பெ.(n.) 1. புதுமை (உரி.நி.); newness, novelty. 2. புதிய முறையில் எழுதப்பட்ட கதை; novel.

*[Skt. navina > த. நவீனம்]*

**நவோத்திரிதம்** *navōttiridam,* பெ.(n.) வெண்ணெய் (சங்.அக.); butter.

*[Skt. navōdhṛta > த. நவோத்திரிதம்]*

**நாக்குச்சதம்பனம்** *nākku-c-cadambaṉam,* பெ.(n.) நாக்கு இழுப்பு நோய் (பைஷஜா.); palsy of the tongue.

*[Skt. nākkuṟuti > த. நாக்கு + சதம்பனம்]*

**நாச்சநார்** *nāccanār,* பெ.(n.) நஞ்சா; spurge laurel. (சா.அக.)

**நாகபஞ்சமி** *nāga-pañjami,* பெ.(n.) பால் பயறு முதலியவற்றை நாகத்துக்கு இட்டு அதனை வணங்கும் நாளாகிய சிராவண சுக்கில பஞ்சமி (இ.வ.); the fifth lunar day of the bright for night in the month of sravaṇa in which the

Nagas or serpent - gods are worshipped with offerings of milk, grain, etc.

*[Skt. naga > த. நாகபஞ்சமி]*

**நாகபசுமம்** *nāga-bašumam,* பெ.(n.) வெள்ளடத்தை (துத்தநாகத்தை) நீற்றி யெடுத்த மருந்து (இங்.வை.); oxide of zinc, Zinci oxidum.

*[Skt. nāga+bhasman > த. நாகபசுமம்]*

**நாகப்பிரதிட்டை** *nāga-p-piradittai,* பெ.(n.) பாம்பைக் கொன்ற தீவினையைப் போக்கு வதற்குச் சிலை முதலியவற்றில் நாகத்தை நிலைகோள் செய்தல்; ceremony of setting up a serpentidol under a pipal tree to expiate the sin of having killed a cobra.

*[நாகம் + பிரதிட்டை]*

**நாகபூசணன்** *nāga-būšaṇaṉ,* பெ.(n.) சிவன், பாம்பணி பூண்டவன்; Šiva, as wearing serpent-ornaments.

*[Skt. nāga+bhūshana > த. நாகபூசணன்]*

**நாகபாடாணம்** *nāga-pāḍāṇam,* பெ.(n.) சூதம், இலிங்கம், கருவங்கம், பச்சை, பொன் அரிதாரம், காரம் இவைகளைப் பொடித்துக் குகையில் வைத்து மேல்மூடிச் சீல் மண் செய்து கசப்புடத்தில் போட்டு முதிர அனல் மூட்டிப் பிறகு ஆறியபின் உடைத்துப் பார்க்க மருந்து உருகி ஈயம் போல் வலிந்து இறுகிக் கட்டி யாயிருக்கும் இதுவே நாக பாடாணம் மாழையில் (உலோகத்தில்) பழுத்திடும்; a kind of prepared arsenic an alchemical compound of zinc. (சா.அக.)

**நாகமோடிவேட்டி** *nāga-mōḍi-vēṭṭi,* பெ.(n.) நாகக்கோடு இட்ட வேட்டி வகை (வின்.); a kind of cloth with serpent - like stripes.

*[நாகம் + ஓடி + வேட்டி]*

**நாசகாரி** *nāsakāri,* பெ.(n.) நோய்களைக் கண்டிக்கும் மருந்து; an infalliable remedy. (சா.அக.)

**நாசகாரிவாயு** *nāšakāri-vāyu,* பெ.(n.) நைட்ரசன்; nitrogen. (சா.அக.)

**நாசகேரளம்** *nāsakēraḷam,* பெ.(n.) சிவதை வேர்; India rhubarb, Indian jalap - Ipomaea turpethum. (சா.அக.)

**நாசவக்கணை** *nāšava-k-kaṉai,* பெ.(n.) காகதும்புரு; kanjilals mottled ebony - *Diospyros kanjiali.* (சா.அக.)

**நாசாக்கிரம்** *nāšā-k-kiram,* பெ.(n.) மூக்கு நுனி; tip of the nose. (சா.அக.)

**நாசாகிராவம்** *nāšākirāvam,* பெ.(n.) மூக்கிலொழுகும் அரத்தவொழுக்கு; bleeding from the nose - *Epistaxiz.* (சா.அக.)

**நாசாதக்கணம்** *nāsāda-k-kaṇam,* பெ.(n.) வலது நாசி; right nostrill. (சா.அக.)

**நாசாபாக்கரோகம்** *nāšāpākka-rōgam,* பெ.(n.) மூக்கு நோய்; a nose disease. (சா.அக.)

**நாசப்பழக்கம்** *nāša-p-paḻakkam,* பெ.(n.) கெட்ட பழக்கம்; pernicious habits. (சா.அக.)

**நாசாபுடம்** *nāšāpuḍam,* பெ.(n.) மூக்குத் துளை; nostrill. (சா.அக.)

**நாசம்** *nāšam,* பெ.(n.) 1. பேரழிவு, பெருத்த அழிவு; destruction, (heavy) loss or damage. *"தொடர்ந்து பெய்த அடை மழையால் அறுவடைக்கு அணியமாக இருந்த பயிர்கள் நாசம்". "கலகக் காரர்கள் கடைகளை யெல்லாம் அடித்து நொறுக்கி நாசம் செய்தனர்".* 2. சீரழிவு; ruin, wreck. *"இந்தக் குடும்பத்தின் நாசத்திற்கு அவருடைய குடிப்பழக்கம் தான் காரணம்".*

**நாசமாய்ப்போ-தல்** *nāšamāy-p-pō,* 8 செ.கு.வி.(v.i.) உருப்படாமல் போதல்; go to rack and ruin. *"குடித்துக் குடித்து நாசமாய்ப் போய் விட்டான்". "நீ நாசமாய்ப் போ".*

**நாசாரிசம்** *nāšārišam,* பெ.(n.) மூக்கில் வளரும் சதை; polypus of the nose. (சா.அக.)

**நாசாவாமம்** *nāšāvāmam,* பெ.(n.) இடது மூக்கு; nose. (சா.அக.)

**நாசவேலை** *nāšavēlai,* பெ.(n.) கமுக்கமாய்ச் செய்யும் கெட்ட நோக்கமுடைய செயல்;

sabotage. *"ரயில் விபத்துக்கு நாச வேலை தான் காரணம் என்று கூறப்படுகிறது. சமாதான ஒப்பந்தத்தைக் கெடுப்பதற்கென்றே இந்த நாச வேலைகள் நடைபெற்றுள்ளன".* (இ.வ.).

**நாசனி** *nāsaṉi,* பெ.(n.) அழிக்கக் கூடியது; anything capable of destructing. (சா.அக.)

**நாவான்னம்** *nāvāṉṉam,* பெ.(n.) வெஞ்சோறு, சுடுசோறு; hot cooked rice. (சா.அக.)

**நவான்னபானம்** *navāṉṉa-bāṉam,* பெ.(n.) புது அரிசியைச் சமைத்த சோறு, புது மது பானம்; cooked new rice and new wines. (old rices old wines are always beneficial). (சா.அக.)

**நாசி** *nāsi,* பெ.(n.) 1. மூக்கு; nose. 2. வஞ்சி; rattan of S.India - calamus rotang. 3. மூக்குத் துளை; nostril. (சா.அக.)

**நாசி** *nāśi,* பெ.(n.) மூக்கு; nose.

**நாசிஉக்கிரமம்** *nāśi-ukkiramam,* பெ.(n.) மூக்கு நோய்; disease of the nose. (சா.அக.)

*[நாசி + உக்கிரமம்]*

**நாசிஉதிரம்**[1] *nāśi-udiram,* பெ.(n.) மூக்கு நோய்; disease of the nose.

*[நாசி + உதிரம்]*

**நாசிஉதிரம்**[2] *nāśi-udiram,* பெ.(n.) மூக்கில் அரத்தம் வடிதல்; bleeding from the nose - Epistaxis. (சா.அக.)

**நாசிஉயிர்** *nāśiuyir,* பெ.(n.) ஒகப்பயிற்சிக்கு உதவும் இயல்புள்ள நீர்மம் (சுக்கிலம்); semen which is considered important for suppressing the breath in the yōga practice and hence the name. (சா.அக.)

**நாசிக்கனைப்பு** *nāśi-k-kaṉaippu,* பெ.(n.) சளி முதலியவற்றால் மூக்கு வீங்கியிருக்கை (வின்.); inflammation of the nose from cold or mucus.

*[Skt. naci > த. நாசி + கனைப்பு]*

**நாசிகாக்கிரம்** *nāśi-kākkiram,* பெ.(n.) நுனிமூக்கு; tip of the nose. *"விழித் துணைகணாசி காக்கிரத்தினுற" (பிரபோத. 44, 14).*

*[Skt. nāsi-kā+agra > த. நாசிகாக்கிரம்]*

**நாசிக்கிரந்தி** *nāśi-k-kirandi,* பெ.(n.) மூக்கை யரிக்கும் மேகப்புண்; a kind of syphilitic ulcer eating away or otherwise affecting the nose. (சா.அக.)

**நாசிகதமம்** *nāśigadamam,* பெ.(n.) மூக்குச் சிந்தல்; blowing the nose. (சா.அக.)

**நாசிகமலம்** *nāsi-kamalam,* பெ.(n.) 1. மூக்குப் பீ; nose dirt. 2. மூக்குச் சளி; mucous from the nose snot. (சா.அக.)

**நாசிகாசிராவம்** *nāśigā-śirāvam,* பெ.(n.) மூக்கினின்று அதிகமாய் நீர் வடியும் ஓர்வகைப் உளைச்சளி (பீனசம்); catarrh of the nose. (சா.அக.)

**நாசிகாசூரணம்** *nāśigā-śūraṇam,* பெ.(n.) 1. நாசிவழியாக ஏற்றும் அல்லது இழுக்கும் மருந்துப் பொடி; a medicinal powder sniffed. 2. மூக்குத் தூள்; snuff. (சா.அக.)

**நாசிகாபீடம்** *nāśikā-pīḍam,* பெ.(n.) மூக்கிற்குள் சதை வளரும் நோய்; polypus of the nose. (சா.அக.)

**நாசிகாபீடை** *nāsikā-pīḍai,* பெ.(n.) 1. மூக் கழுக்கு; rheum. 2. மூக்குச் சளி; mucous from the nose snot. (சா.அக.)

**நாசிகாபூசணி** *nāsikā-pūsaṇi,* பெ.(n.) மேளகர்த்தாக்களுளொன்று (சங்.சந். 47); a primary *rāga.*

*[நாசிகா + பூசணி]*

**நாசிகாரோகம்** *nāsikā-rōgam,* பெ.(n.) பொதுவாக மூக்கில் வரும் நோய்கள்; diseases in general of the nose. (சா.அக.)

**நாசிச்சளி** *nāsi-c-caḷi,* பெ.(n.) மூக்குச்சளி; mucous from the nose. (சா.அக.)

**நாசிசிந்தல்** *nāsi-sindal,* பெ.(n.) மூக்குச் சிந்தல்; blowing the nose. (சா.அக.)

**நாசித்தாரு** *nāsi-t-tāru,* பெ.(n.) மேல் வாய் உதடு; upper lips. (சா.அக.)

**நாசித்தாரை** *nāsi-t-tārai,* பெ.(n.) மூக்குத் துளை வழி; passage of the nose. (சா.அக.)

**நாசித்துவாரம்** *nāsi-t-tuvāram,* பெ.(n.) மூக்குத்துளை; nostril. (சா.அக.)

*[நாசி + துவாரம்]*

**நாசித்தூள்** *nāsi-t-tūl,* பெ.(n.) மூக்குப்பொடி; snuff. *"மிளகுப் பொடி நாசித்தூளாய்" (சரவண. பணவிடு. 123).*

*[நாசி + தூள்]*

**நாசிநீரோட்டம்** *nāsi-nīrōṭṭam,* பெ.(n.) மூக்கின் வழியாய் நீர் வழிதல்; catarrh of the nose. (சா.அக.)

**நாசிநீர்ப்பாய்ச்சல்** *nāsi-nīr-p-pāyccal,* பெ.(n.) மூக்கினின்று நீர் வழிதல்; catarrah of the nose. (சா.அக.)

**நாசிநீர்வர்த்தினி** *nāsi-nīr-varttiṉi,* பெ.(n.) மூக்கில் நீர் வழிந்து தும்மலையுண்டாக்கும் நோய்; errhinc. (சா.அக.)

*[நாசி + நீர்வர்த்தினி]*

**நாசிப்பரிசோசம்** *nāśi-p-parisōsam,* பெ.(n.) மூக்கடைப்பு; difficulty of respiration. *"மூக்கின் வறட்சினால் சளி திரண்டு மூச்சு விட முடியாத படி மூக்கையடைத்துக் கொள்ளும்".* (சா.அக.)

**நாசிப்பரிச்சிராவம்** *nāsi-p-pari-c-cirāvam,* பெ.(n.) மூக்கு நோய்; a disease of nose. *"இரவு காலங்களில் மூக்கினின்று சதா சளி நீர் வழியச் செய்யும்".* (சா.அக.)

**நாசிப்பிணி** *nāsi-p-piṇi,* பெ.(n.) உட்சளி; various diseases of the nose. (சா.அக.)

**நாசிப்பிரதிநாகம்** *nāsi-p-piradi-nāgam,* பெ.(n.) மூக்கடைப்பு, தலையில் நிற்கும் உதான வளி, கோளாறடைந்து சளியோடு கூடி மூக்கின் துளையை அடைக்கும்; the condition under which the upcoursing udana vayu of the region of the head is deranged in its passaged by a sur charge of kapha stuff the nasal passages. (சா.அக.)

**நாசிப்புண்** *nāśi-p-puṉ,* பெ.(n.) நாசியில் தோன்றும் புண்; ulcer in the nose. (சா.அக.)

**நாசிப்பீனிசம்** *nāśi-p-pīṉisam,* பெ.(n.) மூக்கின் சளி சவ்வு வீக்கம் (தாபிதங்) கண்டு அதனால் மூக்கின் வழியாய் நீர்ச் சளியாய் வடிதல்; a catarrhal affection of the nasal mucous membrance attended with a ropy discharge from the nostrils coryza. (சா.அக.)

**நாசிப்பொடி** *nāsi-p-poḍi,* பெ.(n.) 1. மூக்குத் தூள்; snuff. 2. மூக்குச் சூரணம்; powder for snuffing. (சா.அக.)

**நாசிபங்கம்** *nāsipaṅgam,* பெ.(n.) மூக்கழிவு; decaying or destruction of the nose. (சா.அக.)

**நாசிபாகம்** *nāsibāgam,* பெ.(n.) மூக்கிலுண்டாகும் அழற்சி; inflammation of the nose. (சா.அக.)

*[நாசி + பாகம்]*

**நாசிம்வேதனை** *nāśim-vēdaṉai,* பெ.(n.) பாகல்; bitter cucumber - momordiea charantia. (சா.அக.)

**நாசியிரத்தபித்தம்** *nāśiyiratta-pittam,* பெ.(n.) மூக்கினின்று அரத்தம் வடிதல்; bleeding from the nose - *Epistaxis.* (சா.அக.)

**நாசியெலும்பு** *nāśi-yelumbu,* பெ.(n.) மூக்கெலும்பு; nasal bone. (சா.அக.)

**நாசிரந்திரம்** *nāśirandiram,* பெ.(n.) மூக்குத் துளை; nostril nose - aperture. (சா.அக.)

**நாசிரோகம்** *nāśirōgam,* பெ.(n.) மூக்கு நோய் வகை (தைலவ. தைல. 53); discharge of the fetid matter from the nostrils. oxena.

*[நாசி + ரோகம்]*

**நாசிவால்** *nāsivāl,* பெ.(n.) மணத்தக்காளி; black berried solanum - solanum nigrum. (சா.அக.)

**நாசிவிடம்** *nāśi-vidam,* பெ.(n.) நோய்வகை; a disease. *"எரிகுணா நாசிவிடமே" (திருப்பு. 260, புதுப்.)*

*[நாசி + விடம்]*

**நாசினி**[1] *nāsini,* பெ.(n.) அழிக்கக் கூடியது. கொல்லி; used in compound formation. *"கிருமி நாசினி".*

**நாசினி**[2] *nāsini,* பெ.(n.) திப்பலி மூலம்; root of long pepper. (சா.அக.)

**நாசுகாதீதம்** *nāsukātītam,* பெ.(n.) 1. பீர்க்கு; gourd plant, strainer vine - cucurbita *acutangularis.* 2. விழி, அதாவது விழுதி; chilli fruited capper - Cadaba indica alias stromeria tetrandra. (Rox). (சா.அக.)

**நாசுடம்** *nāsudam,* பெ.(n.) கட்டு மருந்து; a quack patent or secret remedy - *Nostrum. "இது நாட்டு மருத்துவர் பயன்படுத்தும் மருந்து".* (சா.அக.)

**நாசுதா** *nāsudā,* பெ.(n.) சிற்றுண்டி; lunch. (சா.அக.)

**நாசித்துளை** *nāsi-t-tuḷai,* பெ.(n.) **நாசித் துவாரம்** பார்க்க; see *nāsi-t-tuvāram.*

**நாணயசுதன்** *nāṇayasudan,* பெ.(n.) நேர்மை யானவர்; honest man.

**நாத்தி** *nātti,* பெ.(n.) அழிவு; destruction, annihilation. (சா.அக.)

**நாத்தியோசம்** *nāttiyōśam,* பெ.(n.) வரகு; a kind of black millet - Paspalum frumentaceum. (சா.அக.)

**நாதசுவரம்** *nādasuvaram,* பெ.(n.) மரத்தால் நீண்ட குழல் வடிவில் செய்து சீவாளி பொருத்தி மங்கல நிகழ்ச்சிகளில் இசைக்கப் படும் இசைக்கருவி (ஓலகம்); wind instrument with a long pipe.

**த.வ. ஓலகம்**

**நாதவசுது** *nādavasudu,* பெ.(n.) நாதச் சினைக்குள்ளிருக்கும் அணுவிற்கணுவான பொருள்; a microscopic matter in which life is manifested and as such forms the essential material of all plants and animal cells. It is usually viscid holding fine granules in suspension - protoplasm. (சா.அக.)

**நாபிக்கட்டி** *nābi-k-kaṭṭi,* பெ.(n.) கொப்பூழில் எழும்பும் ஓர் வித்திரதிக்கட்டி; a deep seated local abscess in the navel region. (சா.அக.)

**நாபிக்கமலம்** *nābi-k-kamalam,* பெ.(n.) 1. கொப்பூழ்; lotus like navel. 2. உந்தியைச் சுற்றிலுமுள்ள இடுக்குகள்; the interstice space about the umbilicus. (சா.அக.)

**நாபிக்கமலவிரணம்** *nābi-k-kamala-viraṇam,* பெ.(n.) 1. நாபியழற்சி; inflammation of the navel omphalitis. 2. நாபியைச் சுற்றிலும் காணும் கொப்புளங்கள்; boils around the navel in the navel region - omphalel cosis. 3. நாபியின் கீழ்க் கொண்ட விரணம்; suppurative lessions of the umbilical region or navel ill - omphalophlebitis. (சா.அக.)

**நாபிக்கழலை** *nābi-k-kaḻalai,* பெ.(n.) நாபிக் கமலத்தில் காணும் கழலைக் கட்டி; tumour of the umbilicus ophaloma. (சா.அக.)

**நாபிக்கிழங்கு** *nābi-k-kiḻaṅgu,* பெ.(n.) பச்சை நாவிக் கிழங்கு; green aconite root Aconitum ferox (root of.). (சா.அக.)

**நாபிக்கூரிகம்** *nābi-k-kūrigam,* பெ.(n.) நேர்வாளக் கொட்டை; croton seeds - physic nul. (சா.அக.)

**நாபிகந்தம்** *nābikandam,* பெ.(n.) கத்தூரி நறுமணம்; musk adour. (சா.அக.)

**நாபிகை** *nābigai,* பெ.(n.) 1. உந்தியைப் போன்ற குழி; a navel like cavity. 2. ஒரு பூண்டு; a plant. (சா.அக.)

**நாபிக்கொடி**[1] *nābi-k-koḍi,* பெ.(n.) தொப்புட் கொடி (இங்.வை.); umbilical card.

*[நாபி + கொடி]*

**நாபிக்கொடி**[2] *nābi-k-koḍi,* பெ.(n.) கொடிவகை; malabar glory - lily - Gloriosa superba.

*[நாபி + கொடி]*

**நாபிக்கொடி** *nābi-k-koḍi,* பெ.(n.) 1. கொப்பூழ்க் கொடி; navel or umbilical cord. 2. காந்தள்; country aconite - Gloriosa superba. (சா.அக.)

**நாபிச்சக்கரம்** *nābi-c-cakkaram,* பெ.(n.) தொப்புள் வளையம்; navel circle. (சா.அக.)

**நாபிச்சுற்று** *nābi-c-cuṟṟu,* பெ.(n.) **நாபிக் கமலம்** பார்க்க; see *nābi-k-kamalam.*

**நாபிச்சூத்திரம்** *nābi-c-cūttiram,* பெ.(n.) **நாபிக்கொடி** பார்க்க; see *nābi-k-koḍi.*

**நாபிச்சூரை** *nābi-c-cūrai,* பெ.(n.) **நாபிச்சூலை** பார்க்க; see *nābi-c-cūlai.*

**நாபிச்சூலை** *nābi-c-cūlai,* பெ.(n.) தொப்பு களிலும், கீழி வயிற்றிலும், நடுக்கல் வாந்தி, ஆண் குறியிலும் வலி முதலிய குணங்களைக் காட்டும் ஓர் வாத நோய்; a kind of disease of the navel region marked by cruciating pain in the navel abdomen s stomach, vomiting, trembling pain the anus and genital. (சா.அக.)

**நாபித்தாரி** *nābi-t-tāri,* பெ.(n.) வசம்பு; sweet flag - Acoruscalamus. (சா.அக.)

**நாபித்தானம்** *nābi-t-tāṉam,* பெ.(n.) சூழ்வகம் (உத்திரப்பிரதேசம்); region of the navel.

*[Skt. nābhi+sthāna > த. நாபித்தானம்]*

**நாபிப்பாலாமிர்தம்** *nābi-p-pālāmirdam,* பெ.(n.) சாராயம்; arrack. (சா.அக.)

**நாபம்** *nābam,* பெ.(n.) நாபி; country aconite. (சா.அக.)

**நாபகம்** *nābagam,* பெ.(n.) கடுக்காய்; Indian gall nut - Terminalia chebula. (சா.அக.)

**நாபாஞ்சம்** *nābāñjam,* பெ.(n.) பற்பாடகம்; fever plant. (சா.அக.)

**நாபாரிசம்** *nābārisam,* பெ.(n.) 1. நாக்குப் பக்கம்; sides of the tongue. 2. நாபாகம்; part adjointing the tongue, ligual region. (சா.அக.)

**நாபி**[1] *nābi,* பெ.(n.) 1. கொப்புழ்; navel. 2. கத்தூரி; musk. 3. நாபித்தானம்; umbillical region. 4. மூலத்தானம்; principal seat in the human system. 5. இடுப்பெலும்பு; pelvis. 6. குருவண்டு., (சா.அக.)

**நாபி**[2] *nābi,* பெ.(n.) 1. கொப்பூழ் (பிங்.); navel. 2. மான்மணத்தி (கஸ்தூரி) (தைலவ. தைல); musk.

*[Skt. nābhi > த. நாபி]*

**நாபி**[3] *nābi,* பெ.(n.) அந்தண நாபி, சத்திரிய நாபி, வைசிய நாபி, சூத்திர நாபி என்று நால் வகைப்பட்ட வச்சநாபி முறிவு (வின்.); antidoes to aconite, being four in number viz, *antana-napi, cattiriya-napi, uaiciya-napi, cūttira-napi.*

*[Skt. vatsa-nābha > த. நாபி]*

**நாபிசன்** *nābisaṉ,* பெ.(n.) பிரமன் (யாழ்.அக.); Brahmā, as born of visṇu's navel. *"திருமாலின் உந்தியிற் பிறந்தோன்".*

*[Skt. nābhi-ja > த. நாபிசன்]*

**நாபிசாருவாதம்** *nābi-sāruvādam,* பெ.(n.) தொப்புளைப் பற்றி வலிப்பு நோய்; a kind of monoplegia about the navel region. (சா.அக.)

*[நாபி + சாரு வாதம்]*

**நாபிசூத்திரம்** *nābi-sūttiram,* பெ.(n.) கொப்பூழ்க் கொடி, தொப்புட் கொடி (வின்.); umblical cord.

*[Skt. nābhi+sūtra > த. நாபிசூத்திரம்]*

**நாபிநாடி** *nābi-nāḍi,* பெ.(n.) 1. உந்திக் கொடி; umbilical cord. 2. உந்தியின் இரத்தக் குழாய்கள்; cateries of the navel region - navel artery. (சா.அக.)

**நாபிநாளம்** *nābi-nāḷam,* பெ.(n.) 1. நஞ்சுக் கொடி; umblical card. 2. நஞ்சினின்று பிண்டத்திற்குப் போகும் இரத்தக்குழல்; a vessel which conveys back the blood after its purification from the placenta to the foetus - Umbilical vein. (சா.அக.)

**நாபிநாளோதயம்** *nābinālōdayam,* பெ.(n.) பிள்ளைப் பேற்றில் நஞ்சுக் கொடி வெளிக் காணல்; presentation of navel cord or umblical card. (சா.அக.)

**நாபிபதுமம்** *nābipadumam,* பெ.(n.) 1. மணி பூரகம்; p. 2. தாமரைப் போன்ற உந்தி; navel lotus and the power to destroy and create is dequired. (சா.அக.)

**நாபிரம்** *nābiram,* பெ.(n.) விந்து (சங்.அக.); semen.

*[Skt. nābhila > த. நாபிரம்]*

**நாபியம்** *nābiyam,* பெ.(n.) வெள்ளூமத்தை; white flowered dhatura - Datura fastuosa. (சா.அக.)

**நாபியுருக்காந்தம்** *nābiyuru-k-kāntam,* பெ.(n.) ஊசிக்காந்தம்; magnet attracting needles. (சா.அக.)

**நாபிரசம்** *nābirasam,* பெ.(n.) விந்து; semen. (சா.அக.)

**நாபிலம்** *nābilam,* பெ.(n.) கொப்பூழ்க்குழி; cavity of the navel. (சா.அக.)

**நாபிவத்திகம்** *nābivattigam,* பெ.(n.) கொப்பூழில் சிறு கொப்புளம்; umbilical vesicle. (சா.அக.)

**நாபிவர்த்தனம்** *nābivarttaṉam,* பெ.(n.) 1. நாபியின் பிதுக்கம்; umbilical hernia. 2. தடித்தவுடம்பு; corpulency. (சா.அக.)

**நாபிவளையம்** *nābi-vaḷaiyam,* பெ.(n.) தொப்புள் வளையம்; umbilical ring - Annulus umbilicus. (சா.அக.)

**நாபிவிரேசனம்** *nābi-virēsaṉam,* பெ.(n.) மருந்தை தொப்புளில் தடவ பேதியாதல்; causing euacuation from the bowels by an external application of medicine on the naval region. (சா.அக.)

**நாபீலம்** *nābīlam,* பெ.(n.) 1. கடிதடம் (யாழ்.அக.); pudendum muliebre. 2. கொப்பூழ்க் கொடி (குழி); the cavity of the navel.

*[Skt. nābhila > த. நாபீலம்]*

**நாம்பன்** *nāmbaṉ,* பெ.(n.) இளம் காளை மாடு; young bull.

**நாமக்கட்டி** *nāma-k-kaṭṭi,* பெ.(n.) நாமம் போடப் பயன்படுத்தும் வெள்ளைக் களிமண் கட்டி; pipe clay.

*[நாமம் + கட்டி]*

**நாமத்தராசு** *nāma-t-tarāsu,* பெ.(n.) தராசு வகை (இ.வ.); the common balance.

*[நாமம் + தராசு]*

**நாமகரணம்** *nāma-karaṇam,* பெ.(n.) பெயரீட்டுக் கரணம் சோடச சம்சகாரத்துள் பிறந்த குழந்தைக்குப் பதினொராம் நாளிற் பெயரிடுவதான சடங்கு; ceremony of naming a child on the 11th day at two birth, one of *ōṭaca-camskāram. "மாதவிமகட்கு நாமகரணம் பண்ணுவோமென்று" (சிலப். 13, 26, உரை) (திருவானைக். கோச்செங். 14).*

*[Skt. nāma + த. கரணம் > த. நாமகரணம்]*

**நாமகரணம்** *nāma-karaṇam,* பெ.(n.) பெயர் சூட்டல்; christening.

**நாமகீர்த்தனம்** *nāma-kīrttaṉam,* பெ.(n.) திருப்பெயர் ஏத்தற்பா, கடவுள் திருப்பெயர் ஒதுகை; singing God's names.

*[நாம(ம்) + கீர்த்தனம்]*

*[Skt. nāman > த. நாம(ம்)]*

**நாமதேயம்** *nāma-dēyam,* பெ.(n.) யாகங்களுக்குப் பெயரிடும் வேத வாக்கியவகை (விவேக சிந். பக். 5); the vēdic passages which give the names of sacrifices etc.

*[Skt. nāmadhēya > த. நாமதேயம்]*

**நாமநட்சத்திரம்** *nāma-naṭṭiram,* பெ.(n.) ஒருவனுடைய பெயரின் முதலெழுத்திலிருந்து விதிப்படி கொள்ளப்படும் அவனது நட்சத்திரம் (பஞ்ச.); the natal star of a person dedued by set rules, from the initial letter of his name.

*[நாமம் + நட்சத்திரம்]*

**நாமம்** *nāmam,* பெ.(n.) நேர்க்குத்தான மெல்லிய கோடு அல்லது கோடுகள்; the religious mark on the forehead of the vaishnavities.

**நாரக்கரந்தை** *nāra-k-karandai,* பெ.(n.) நாட்டு முள்ளங்கி; wall radish. *"பழைய சுவரின் சந்துகளிலும் சுடுகாட்டிலும் விளையும் இதையே சுவர் முள்ளங்கி என்று கூறலாம்".* (சா.அக.)

**நாரங்கசீகம்** *nārańgasigam,* பெ.(n.) சித்தா முட்டி; yellow stick mallow - paonia zeylanica alias p. glechomifolia. (சா.அக.)

**நாரகம்** *nāragam,* பெ.(n.) 1. கிச்சலி; sweet orange - Aurantium nobilis. 2. காட்டுக் கொழுஞ்சி; wild lime - Atlantia racemosa. (சா.அக.)

**நாரங்கி** *nārańgi,* பெ.(n.) ஓர் வகைக் கிச்சலி; mandarian orange. (சா.அக.)

**நாரங்கசீகம்** *nārańgasigam,* பெ.(n.) சித்தா முட்டி; yellow stickmallow - pavonia zeylanica. (சா.அக.)

**நாரசிம்மரசம்** *nārasimmarasam,* பெ.(n.) சரகரால் சொல்லப்பட்ட புராண சுரத்தை ஓட்டும் ஓர் ஆயுள் வேத மருந்து; an Ayurvedic preparation prescribed for chronic fever named Narasimharasam. (சா.அக.)

**நாராயணாட்திரம்** *nārāyaṇāṭṭiram,* பெ.(n.) திருமாலை அதிதேவதையாகவுடைய அம்பு; a powerful arrow whose presiding dlity is viṣṇu.

*[Skt. nārāyaṇaṉ > த. நாராயணாட்திரம்]*

**நாரீதூசணம்** *nārī-tūsaṇam,* பெ.(n.) பாதிவிரத்தியத்தைக் கெடுப்பது (யாழ்.அக.); that which makes a woman loss her honour.

*[Skt. nāri+tuṣnan > த. நாரீதூசணம்]*

**நால்சாதிவிசக்கல்** *nālsādi-visakkal,* பெ.(n.) நான்கு வகைச் சாதிப் பெண்களின் கருப் பிண்டம்; the foetuses of four kinds of women divided according to their lust as referred to in the Tamil Erotic Science. (சா.அக.)

**நாலிகம்** *nāligam,* பெ.(n.) 1. எருமை; buffalo. 2. தாமரை; lotus. 3. காக்கை; crow. (சா.அக.)

**நாயச்சுரம்** *nāya-c-curam,* பெ.(n.) மூக்கில் வருமோர் நோய்; a disease of the nose. (சா.அக.)

**நிகண்டு** *nigaṇḍu,* பெ.(n.) 1. பொதுவாக ஒரு சொல்லுக்குள்ள பலபொருள்களைச் செய்யுள் வடிவாக விளக்கும் நூல்; any book containing words arranged in order with their several meanings explained breifly in verses - poetic vocabulary. 2. வைத்திய நிகண்டு; a word book which communicates information in an entire subject or branch of a subject in medicine arranged in verses, a medical vocabulary of plants and drugs complied in intelligible verse. (சா.அக.)

**நிகமம்** *nigamam,* பெ.(n.) ஓர் வடமொழி நூல், இது 4 வேதங்களின் தொகுதியைக் குறிக்கும். வேதாந்தத்தைப் போலவே சித்தாந்தம் என்பது சைவநெறிகளைக் கூறும்; vedictext PIt is a collective name for the four vedas and is of opposed to Agamam referring shaving regligous rites. (சா.அக.)

**நிகரணம்** *nigaraṇam,* பெ.(n.) 1. மிடறு; pharynx. 2. தொண்டை; larynx, throat. 3. விழுங்குதல்; swallowing. (சா.அக.)

**நிகரில்லாவாசான்** *nigarillāvāsāṉ,* பெ.(n.) ஞானக்கண்; eye of wisdom. (சா.அக.)

**நிகரோதயம்** *nigarōdayam,* பெ.(n.) சிற்றரத்தை; lesser glangal - Alpinio galanga (minor). (சா.அக.)

**நிகளம்** *nigaḷam,* பெ.(n.) 1. நீர்க்கடம்பு; water cadamba tree - Naucliaparuiflora. 2. மலம்; filth. (சா.அக.)

**நிகற்பம்** *nigaṟpam,* பெ.(n.) பத்து இலட்ச கோடி (பிங்.); ten kalpas.

*[Skt. nikalpa > த. நிகற்பம்]*

**நிகன்னம்** *nigaṉṉam,* பெ.(n.) கொலை; murder. (சா.அக.)

**நிகா** *nigā,* பெ.(n.) 1. குறிப்பு (வின்.); mark, aim, idea, notion. 2. எச்சரிக்கை; care, carefulness. 3. கொழுப்பு; impudence. *"உனக்கு உடம்பில் நிகா ஏறிவிட்டது" (Madr).*

*[U. nigā<nikāya > த. நிகா]*

**நிகாதன்** *nigādaṉ,* பெ.(n.) வஞ்சகன் (பிங்.); deceiver crafty man.

**நிகாரம்** *nigāram,* பெ.(n.) 1. பனி; dew. 2. உறைந்த பனித்தூள்; white particles of frozen dew, hear frest. (சா.அக.)

**நிகாயம்** *nigāyam,* பெ.(n.) 1. கூட்டம் (சூடா.); assembly, multitude, company. 2. இடம் (பிங்.); place, site. 3. வீடு; habitation, dwelling. 4. நகரம் (பிங்.); town, city.

*[Skt. nikāya > த. நிகாயம்]*

**நிகாயன்** *nigāyaṉ,* பெ.(n.) கடவுள் (யாழ்.அக.); God, as formless. (காயமற்றவன்).

*[Skt. nikaya > த. நிகாயன்]*

**நிகாரணன்** *nigāraṇaṉ,* பெ.(n.) கொலைஞன் (யாழ்.அக.); murderer.

*[Skt. nikāraṇa > த. நிகாரணன்]*

**நிகாரம்**[1] *nigāram,* பெ.(n.) பனி (வின்.); dew.

*[Skt. nihara > த. நிகாரம்]*

**நிகாரம்**[2] *nigāram,* பெ.(n.) 1. அவமரியாதை (யாழ்.அக.); dishonour. 2. தவறு; error. 3. தூற்றுகை; slandering. 4. விழுங்குகை; swallowing.

*[Skt. nihāra > த. நிகாரம்]*

**நிகிதம்** *nigidam,* பெ.(n.) 1. படை (வின்.); army, troops. 2. பொருத்தப்பாடின்மை; unsuitability. *"வெந்துயற் குதவுமவ னிகித குரு" (வேதா. சூ, 16, உரை).*

*[Skt. nihita > த. நிகிதம்]*

**நிகிர்தம்** *nigirdam,* பெ.(n.) பிசி (இலக். வி. 904, உரை); a verse which has an inner significance.

*[Skt. nikrta > த. நிகிர்தம்]*

**நிகிருட்டம்** *nigiruṭṭam,* பெ.(n.) இழிவு (சங்.அக.); baseness.

*[Skt. nikṛṣta > த. நிகிருட்டம்]*

**நிகிருதி** *nigirudi,* பெ.(n.) 1. வறுமை (யாழ்.அக.); poverty. 2. பொல்லாங்கு; evil, wickedness. 3. பழிப்பு; reproach.

*[Skt. nikṛti > த. நிகிருதி]*

**நிகிலம்** *nigilam,* பெ.(n.) எல்லாம்; entireness, whole. *"பாதாளமாதி லோக நிகிலமும்".*

*[Skt. nikhila > த. நிகிலம்]*

**நிகீனன்** *nigīṉaṉ,* பெ.(n.) கீழ்மகன் (யாழ்.அக.); base person.

*[Skt. nihina > த. நிகீனன்]*

**நிகுஞ்சம்** *niguñjam,* பெ.(n.) 1. புதர் வீடு (வின்.); bower, place overgrown with creepers. 2. குகை (பிங்.); cavern. 3. சிற்றில் (யாழ்.அக.).

*[Skt. nikuñja > த. நிகுஞ்சம்]*

**நிகுட்டம்** *niguṭṭam,* பெ.(n.) இரைச்சல் (யாழ்.அக.); noise, sound.

*[Skt. nighuṣṭa > த. நிகுட்டம்]*

**நிகுத்தை** *niguttai,* பெ.(n.) கதவு (பிங்.); door.
*[Cf. ni-gupta > த. நிகுத்தை]*

**நிகுதி** *nigudi,* பெ.(n.) 1. செய் வழக்கம்; method, custom. 2. வரி; fee, tribute (C.G.).
*[Skt. niyati > த. நிகுதி]*

**நிகும்பம்** *nigumbam,* பெ.(n.) நேர்வாளம் (மலை.); purging croton.
*[Skt. nikumbha > த. நிகும்பம்]*

**நிகும்பன்** *nigumban,* பெ.(n.) கும்பகருணன் மகனாகிய ஓர் அரக்கன் (கம்பரா.); a giant, son of kumbhakarna.
*[Skt. nikumbha > த. நிகும்பன்]*

**நிகூடம்** *nigūḍam,* பெ.(n.) 1. மறைவு (யாழ்.அக.); concealment. 2. ஆழம்; depth.
*[Skt. nikōḍha > த. நிகூடம்]*

**நிகேதனம்** *nigēdanam,* பெ.(n.) 1. வீடு (அக.நி.); house, habitation. *"நிதி நிகேதனங்களெங்கும்" (பெரியபு. திருநாட். 33).* 2. கோவில்; temple. *"இந்நிகேதன மேகுதி நீயென்றன்" (கந்தபு. திருவி. 119).* 3. நகரம் (பிங்.); town, city.
*[Skt. nikētana > த. நிகேதனம்]*

**நிகோதம்** *nikōdam,* பெ.(n.) 1. கொடிய கீழாம் நரகவகை (சீவக. 2793, உரைக் குறிப்பு); a hell. 2. விலங்கினம்; animal kingdom. *"நிகோதப் பிறவியும்" (சூளா. துற. 118).*
*[Skt. nigōḍa > த. நிகோதம்]*

**நிச்சலம்**[1] *niccalam,* பெ.(n.) 1. அசைவின்மை (யாழ்.அக.); immobility, fixedness, steadfastness. 2. இலக்கு (நால்வகையுள் அசைவற்றிருப்பது) (பாரத. வாரண. 56); fixed target, one of four ilakku. q.v. 3. நித்தியத்துவம் (யாழ்.அக.); eternity.
*[Skt. niś-cala > த. நிச்சலம்]*

**நிச்சலம்**[2] *niccalam,* பெ.(n.) நீருமுண்ணாதிருக்கும் முழுப் பட்டினி (இ.வ.); complete fasting in which even water is forbiden.
*[Skt. nir-jala > த. நிச்சலம்]*

**நிச்சலம்**[3] *niccalam,* பெ.(n.) பட்டினி; starvation. 2. அசைவின்மை; state of being without motion or movement, state of being still. (சா.அக.)

**நிச்சத்தம்** *niccattam,* பெ.(n.) சத்தமின்மை (இ.வ.); absence of noise, silence.
*[Skt. niśadda > த. நிச்சத்தம்]*

**நிச்சாரகம்** *niccāragam,* பெ.(n.) காற்று; wind. (சா.அக.)

**நிச்சலன்** *niccalan,* பெ.(n.) 1. அசைவற்றவன்; steadfast, immovable person. 2. கடவுள்; God.
*[Skt. niś-cala > த. நிச்சலன்]*

**நிச்சித்தம்** *niccittam,* பெ.(n.) 1. விருப்பழிவு (வின்.); extinction of the will; cessation of volition. 2. கவலையின்மை (சங்.அக.); absence of anxiety.
*[Skt. niś-citta > த. நிச்சித்தம்]*

**நிச்சிந்தன்** *niccindan,* பெ.(n.) 1. கவலையற்றவன்; one who is free from care. 2. நிசிந்தன்; God, as free from all passions. 3. அருகன் (பிங்.); Arhat.
*[Skt. niś-cintā > த. நிச்சிந்தன்]*

**நிச்சிந்தை** *niccindai,* பெ.(n.) கவலையின்மை (வின்.); freedom from care or anxiety, unconcern peace of mind, entire repose.
*[Skt. niś-cintā > த. நிச்சிந்தை]*

**நிச்சரேணி** *niccarēṇi,* பெ.(n.) ஏணி (யாழ்.அக.); ladder.
*[Skt. niśrēṇi > த. நிச்சரேணி]*

**நிச்சிரேயசம்** *nicciréyasam,* பெ.(n.) முத்தி, வீடுபேறு (யாழ்.அக.); salvation.
*[Skt. niś-śrē > த. நிச்சிரேயசம்]*

**நிச்சுவசனம்** *niccu-vasanam,* பெ.(n.) 1. பெருமூச்சு; sigh. 2. கோபம்; anger. (சா.அக.)

**நிச்சுவாசம்** *niccuvāsam,* பெ.(n.) 1. மூச்சு வெளிவிடுகை (தக்கயாகப். 674, உரை);

expiration. 2. மூச்சு; breath. 3. மூச்சடக்குகை (சி.சி. 4, 8, ஞானப்); suspension of breath. 4. சிவாகமம் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவச. பொது. 333, உரை); an ancient saiva scripture in sanskrit, one of

*[Skt. ni-śvdsa > த. நிச்சுவாசம்]*

**நிச்சேட்டை** *niccēṭṭai*, பெ.(n.) செயலற்றிருக்கை (சி.சி. 4, 8, சிவாக்.); inactivity.

*[Skt. niś-cēṣtā > த. நிச்சேட்டை]*

**நிச்சேடம்** *niccēḍam*, பெ.(n.) மிச்சமின்மை (சி.சி.2, 56, சிவாக்.) (சங்.அக.); being without remainder.

*[Skt. niś-śēṣa > த. நிச்சேடம்]*

**நிசங்கம்** *niśaṅgam*, பெ.(n.) 1. அம்புக் கூடு (யாழ்.அக.); quiver of arrows. 2. இணக்கம்; acquiescence.

*[Skt. ni-ṣaṅga > த. நிசங்கம்]*

**நிசதம்** *niśadam*, வி.எ.(adv.) நாள்தோறும்; daily without fail. *"ஒரு நந்தா விளக்கினுக்கு நிசதம் உழக்கு நெய்" (S.I.I.i, 142).*

*[Skt. niyata > த. நிசதம்]*

**நிசசதன்** *niśa-śadaṉ*, பெ.(n.) நிசவான் (வின்.); honest man.

*[நிசம் > நிசசதன்]*

**நிசப்தம்** *nisapdam*, பெ.(n.) எந்தவிதச் சத்தமும் இல்லாத நிலை, அமைதி; silence, stillness. *"நிசப்தமான இரவு. கூட்டத்தினர் இடையே சலசலப்பு ஓய்ந்து நிசப்தம் நிலவியது".* (இ.வ.)

**நிசப்தம்** *niśaptam*, பெ.(n.) ஒலியின்மை; silence, stillness.

*[Skt. niś-śabda > த. நிசப்தம்]*

**நிசப்பசி** *niśa-p-pasi*, பெ.(n.) உண்மையாக அல்லது சாதாரணமாகவுண்டாகும் பசி; true hunger occuring in the usual course as opposed to, false hunger. (பொய்ப்பசி). (சா.அக.)

**நிசர்மசேபம்** *nisarmaśēbam*, பெ.(n.) தோலுட் புகட்டல் (lit); inserting through the skin intro dermal. (சா.அக.).

**நிசம்** *nisam*, பெ.(n.) 1. நிச்சயம்; certainty, assurance, ascertainment. 2. சத்தியம்; truth, veracity. *"சோர மங்கையர்கணிச முறையார்கள்" (குமரே. சத. 36).* 3. இயல்பாக வுரியது; that which is proper or one's own. *"என்னிச வடிவினையாண் காண" (கைவல். தஞ். 64).*

*[Perh. nija(T.nijamu,K., Tu.nija,M. nijam)]*

**நிசவலி** *nisavali*, பெ.(n.) உடம்பில் நோயினால் உண்டாகும் வலி; p. (சா.அக.)

**நிசவான்** *niśavāṉ*, பெ.(n.) உண்மையுள்ளவன் (வின்.); true, sincere, upright, honest man.

*[நிசம் > நிசவான்]*

*[நிசம் + வான்]*

**நிசவிரணம்** *nisa-viraṇam*, பெ.(n.) திரிதோசங்களினாலும், தொந்தத்தினாலும் ஏற்படும் விரணம்; sores caused in the body either constitutionally or by infection. It is opposed to inflicted wounds or injuries. (சா.அக.)

**நிசனம்** *nisaṉam*, பெ.(n.) தனிமை (உரி.நி.); loneliness, solitude.

*[Skt. nir-jana > த. நிசனம்]*

**நிசா**[1] *nisā*, பெ.(n.) போதை; intoxication. 2. குடி மயக்கம்; giddiness due to drunkenes. (சா.அக.)

*[Skt. niṣā > த. நிசா]*

**நிசா**[2] *niśā*, பெ.(n.) இரவு (பிங்.); night.

*[Skt. niśā > த. நிசா]*

**நிசாகரி** *nisākari*, பெ.(n.) கூகை; owl. (சா.அக.)

**நிசாகரன்** *niśāgaraṉ*, பெ.(n.) 1. திங்கள் (பிங்.); moon. 2. சேவல் (சங்.அக.); cock.

*[Skt. niśā+த. கரன் > த. நிசாகரன்]*

**நிசாசதா** *nisāsadā*, பெ.(n.) கோதுமைச்சத்து; malt prepared from wheat. (சா.அக.)

**நிசாசரம்** *nisāsaram,* பெ.(n.) 1. ஆந்தை; owl. 2. பாம்பு; snake.

*[Skt. niśā-cara > த. நிசாசரம்]*

**நிசாசரன்** *niśāšaraṉ,* பெ.(n.) 1. அசுரன்; Asura (இரவில் திரிவோன்) night-rover. *"நிசாசரர் மேற் பேராழி கொண்ட பிரான்" (திவ். இயற். 1, 83).* 2. அரக்கன்; Rakṣasa. *"நிசாசர னுருப்புணர் நெருப்பு நீர்மையான்" (கம்பரா. யுத்த. மந்திரப். 42.).* 3. திங்கள்; moon. *"இப்பெண் சிறையைச் சீர்த்த நிசாசரனுஞ் செய்யுமோ" (திருவாரூ. 299).*

*[Skt. niśā > த. நிசாசரன்]*

**நிசாசரி** *niśāšari,* பெ.(n.) 1. அரக்கி; Rāksasī. *"ஓர் நிசாசரி தான் வந்தாளை" (திவ். இயற். சிறியம. 39).* 2. கூகை (பிங்.); owl. 3. பரத்தை (யாழ்.அக.); whore.

*[Skt. niśā-carī > த. நிசாசரி]*

**நிசாசலம்** *niśā-šalam,* பெ.(n.) பனி (யாழ்.அக.); dew.

*[Skt. niśa + த. சலம் > த. நிசாசலம்]*

**நிசாடம்** *niśāḍam,* பெ.(n.) ஆந்தை (யாழ்.அக.); owl.

*[Skt. niśaṭa > த. நிசாடம்]*

**நிசாடு** *niśāḍu,* பெ.(n.) மஞ்சள் (மலை.); turmeric.

*[Skt. niśāhvā > த. நிசாடு]*

**நிசாதன்** *niśādaṉ,* பெ.(n.) வஞ்சகன் (சூடா.); deceiver. 2. கீழ்மகன் (யாழ்.அக.); low, mean person.

*[Skt. niṣāda > த. நிசாதன்]*

**நிசாதி** *niśādi,* பெ.(n.) மாலை நேர ஒளி (யாழ்.அக.); evening twilight.

*[Skt. niśadi > த. நிசாதி]*

**நிசாதைலம்** *nisātailam,* பெ.(n.) பவுத்திரத்தின் மேல் பூசும் ஒரு தைல மருந்து; an ointment used in fistula. (சா.அக.)

*[Skt. niṣātailam > த. நிசாதைலம்]*

**நிசாந்தம்**[1] *niśāndam,* பெ.(n.) வைகறை; விடியற்காலம் (வின்.); day break, as the end of the night.

*[Skt. niśanta > த. நிசாந்தம்]*

**நிசாந்தம்**[2] *nisāndam,* பெ.(n.) விடியற்காலம்; day break dawn. (சா.அக.)

**நிசாபதி** *nisāpadi,* பெ.(n.) கற்பூரம்; camphor. (சா.அக.)

**நிசாபதி** *niśā-badi,* பெ.(n.) 1. திங்கள் (பிங்.); moon, as Lord of the night. 2. கருப்பூரம் (எரியணம்) (சங்.அக.); camphor.

*[Skt. niśā > த. நிசாபதி]*

**நிசாபுட்பம்** *niśāputpam,* பெ.(n.) 1. இரவில் மலரும் வெள்ளாம்பல்; white indian water-lily, as opening its petals at night. 2. செவ்வாம்பல் (மலை.); red indian water-lily. 3. உறைபனி (யாழ்.அக.); ice.

*[Skt. niśa+puṣpa > த. நிசாபுட்பம்]*

**நிசாபுட்பம்** *nisāputpam,* பெ.(n.) 1. உறைபனி; foozen dew, snow. (சா.அக.)

**நிசாமணி**[1] *nisāmaṇi,* பெ.(n.) மின்மினி; glow woom, fire fly. (சா.அக.)

**நிசாமணி**[2] *nisā-maṇi,* பெ.(n.) 1. திங்கள் (வின்.); moon, as the gem of night. 2. மின்மினி (யாழ்.அக.); firefly, glow-worm.

*[Skt. niśā-maṇi > த. நிசாமணி]*

**நிசாமனம்** *niśāmaṉam,* பெ.(n.) 1.கேள்வி (யாழ்.அக.); listening to words of wisdom. 2. பார்வை; sight. 3. நிழல்; shade.

*[Skt. niśamana > த. நிசாமனம்]*

**நிசாமனம்** *nisāmaṉam,* பெ.(n.) உடம்பின் உள்ளுறுப்புகளைக் கருவியால் சோதித்துத் திட்டமாக்கல்; a kind of diagnosis or determining the disease by examination of the internal organs of the body through

instruments such as stesthoscope used for chest auscultation. (சா.அக.)

**நிசாமணி** *nisāmaṇi*, பெ.(n.) இருதயத் துடிப்பு முதலிய உள்ளுறுப்புகளின் நிலைமையைக் கண்டறியும் கருவி; an instrument used for determining or distinguishing the state of the internal organs of the body - stethoscope. (சா.அக.)

**நிசாமானம்** *nisāmāṉam*, பெ.(n.) இரவு கால வளவு (வின்.); night time, duration.

*[Skt. niśā+mana > த. நிசாமானம்]*

**நிசர்** *nisar*, பெ.(n.) 1. இராத்திரி; night. 2. நடு ராத்திரி; mid night. (சா.அக.)

**நிசார்** *niśār*, பெ.(n.) நீண்ட காற்சட்டை; long drawers or trousers. *"தங்கரேக் கென்னத் தயங்கு நிசார் தொட்டிறுக்கி" (கூளப்ப. 42).*

*[U. nizār > த. நிசார்]*

**நிசாரணம்** *nisāraṇam*, பெ.(n.) கொலை; murder. (சா.அக.)

**நிசாரணன்** *niśāraṇaṉ*, பெ.(n.) கொலைஞன் (யாழ்.அக.); executioner, murderer.

*[Skt. niśarana > த. நிசாரணன்]*

**நிசாரம்** *niśāram*, பெ.(n.) 1. சாரமற்றது (யாழ்.அக.); that which is insipid, dry or uninteresting. 2. வருத்தம் (வின்.); trouble, vexation.

*[Skt. nis-śara > த. நிசாரம்]*

**நிசாரம்** *nisāram*, பெ.(n.) 1. மஞ்சள்; turmeric-circumalonga. 2. பயனற்றது; that which is worthless. 3. ஒரு வகைக் கழிச்சல்; a kind of diarrhoea. 4. வாழை; plantain. 5. சாறமற்றது; that which sapless. (சா.அக.)

**நிசாரி** *niśāri*, பெ.(n.) கதிரவன்; sun, as enemy of the night. *"நிசாரி புதல்வன்" (பாரத. அணி. 20).*

*[Skt. niśā+ari > த. நிசாரி]*

**நிசாறு** *niśāṟu*, பெ.(n.) நீண்ட கால் சட்டை; trousers. *"நேயத்தாற் பொற்பூ நிசாறு தந்தான்" (விறலிவிடு. 1120).*

*[U. nizār > த. நிசாறு]*

**நிசான்** *niśāṉ*, பெ.(n.) கொடி; flag, banner. *"நாடு நகரு நிசா ஏட்டிய பாளயமும்" (தாயு. பராபரக். 232).*

*[U. niṣān > த. நிசான்]*

**நிசாவர்த்தி** *nisāvartti*, பெ.(n.) மஞ்சள், இந்துப்பு, கடுகு, குங்கிலியம் இவைகளைத் தேனில் அரைத்துத் துணிக்குத் தடவி வத்தியாகச் செய்து நாடி விரணம், பவுத்திரம் முதலியவைகளுக்கு இடுமோர் மருந்து; a medicinal gauze or wick used for introducing into a simusulcer or fistula : the gauze or wick is smeared with the paste prepared with turmeric mustard, conkany resin, rocksalt and honey. (சா.அக.)

**நிசார்த்தம்** *niśārttam*, பெ.(n.) **நிதார்த்தம்** பார்க்க (யாழ்.அக.); see *nidārttam*.

**நிசி**[1] *niśi*, பெ.(n.) 1. நடு இராத்திரி; midnight. 2. பொன்; gold. 3. மஞ்சள்; turmeric. 4. கத்தூரி; musk. (சா.அக.)

**நிசி**[2] *niśi*, பெ.(n.) 1. இரவு (பிங்.); night. *"நிசிவேளை நித்திரை" (திருவாச. 4, 28).* 2. நள்ளிரவு; midnight. *"நிசியில் கதவைத் தட்டினான்".* 3. இருள் (திவா.); darkness. 4. மஞ்சள் (பிங்.); turmeric.

*[Skt. niśi > த. நிசி]*

**நிசி**[3] *niśi*, பெ.(n.) பொன் (பிங்.); gold. (சா.அக.)

*[Skt. nis(ka) > த. நிசி]*

**நிசிசரன்** *niśisaraṉ*, பெ.(n.) இரவில் திரிவோன்; night rover. *"நிசிசரன்முடியுடைதர" (தேவா. 615, 8).*

*[Skt. niśi-cara > த. நிசிசரன்]*

**நிசிச்சுரம்** *niśi-c-curam*, பெ.(n.) நடு இராத்திரியில் வரும் சுரம்; midnight fever. (சா.அக.)

**நிசித்தம்** *niśittam,* பெ.(n.) நெறிமுரண்; that which is contrary to the rule or objectionable. *"விதி நிசித்தமெல்லாம்" (சைவச. பொது. 224).* 2. இகழ்ச்சி (இ.வ.); meanness, vileness, ignominy.

*[**Skt.** ni-siddha > த. நிசித்தம்]*

**நிசிதம்**[1] *niśidam,* பெ.(n.) 1. கூர்மை; sharpness. keenness. *"நிசித பாணங்களால்" (பாரதவெண். 801, உரைநடை).* 2. இரும்பு (யாழ்.அக.); iron.

*[**Skt.** ni-śita > த. நிசிதம்]*

**நிசிதம்**[2] *niśidam,* பெ.(n.) இகழ்ச்சி (யாழ்.அக.); meanness, vileness, ignoring.

*[**Skt.** ni-siddha > த. நிசிதம்]*

**நிசிதாவி** *niśitāvi,* பெ.(n.) செங்கொன்னை; red cassia - Cassia marginata. (சா.அக.)

**நிசிந்தன்** *niśindan,* பெ.(n.) சிவன்; God, as free from all passions. *"புனலன் மேனியினிசிந்தன் விடுமம்பு" (தக்கயாகப். 710).*

*[**Skt.** niś-cinta > த. நிசிந்தன்]*

**நிசிந்தா** *niśintā,* பெ.(n.) உதவியாளர்; (C.G.) clerk, accountant. 2. கோயிற்கணக்கன்; temple accountant. *"கோயில் நிசிந்தா கடுமுடுக்காயிருக்கிறார்".*

*[**U.** nawisindah > த. நிசிந்தா]*

**நிசீத்தியை** *niśittiyai,* பெ.(n.) இரவு (யாழ்.அக.); night.

*[**Skt.** niśithyā > த. நிசீத்தியை]*

**நிசீதம்**[1] *niśīdam,* பெ.(n.) 1. இரவு; night. 2. நள்ளிரவு; midnight.

*[**Skt.** niśītha > த. நிசீதம்]*

**நிசீதம்**[2] *niśīdam,* பெ.(n.) கூர்மை (யாழ்.அக.); sharpness.

*[**Skt.** niśita > த. நிசீதம்]*

**நிசீதம்**[3] *niśīdam,* பெ.(n.) சிறுமை, அற்பம் (யாழ்.அக.); trifling.

*[**Skt.** ni-siddha > த. நிசிதம்]*

**நிசீதிகை** *niśītigai,* பெ.(n.) உண்ணா நோன்பால் உயிர் விடுகை; death by fasting, a custom among jains. *"சந்திரநந்தி யாசிரிகர் நிசீதிகை" (T.A.S.I. 1, 231).*

*[**Skt.** ni-sūdikā > த. நிசீதிகை]*

**நிசும்பம்** *niśumbam,* பெ.(n.) கொலை (யாழ்.அக.); murder, slaughter.

*[**Skt.** ni-śumbha > த. நிசும்பம்]*

**நிசும்பன்** *niśumban,* பெ.(n.) கொலைஞன்; murderer. *"நிசும்பரன்னதோர் நோலர்" (கந்தபு. வச்சிர. 24).*

*[**Skt.** ni-śumbha > த. நிசும்பன்]*

**நிசும்பனம்** *niśumbanam,* பெ.(n.) கொலை; murder.

*[**Skt.** ni-śum-bhana > த. நிசும்பனம்]*

**நிசுலகம்** *niśulagam,* பெ.(n.) மார்புக் கவசம் (யாழ்.அக.); coat of mail.

*[**Skt.** niculaka > த. நிசுலகம்]*

**நிசுவாசம்** *niśuvāsam,* பெ.(n.) (நிச்சுவாசம் (பிங்.)) மூச்சு வெளிவிடுகை; expiration.

*[**Skt.** ni-śvāsa > த. நிசுவாசம்]*

**நிசுளம்** *niśuḷam,* பெ.(n.) நீர்க்கடம்பு; water cadamba.

*[**Skt.** nicula > த. நிசுளம்]*

**நிசுளாபுரி** *niśuḷāpuri,* பெ.(n.) சோழர் தலைநகராகிய உறையூர் (குருபரம்); uraiyur, the chola capital.

*[**Skt.** niculā-purī > த. நிசுளாபுரி]*

**நிசூதனம்** *niśūdanam,* பெ.(n.) அழிக்கை (யாழ்.அக.); destroying, killing.

*[**Skt.** ni-sūdana > த. நிசூதனம்]*

**நிசேகம்** *niśēgam,* பெ.(n.) கருத்தரித்தல்; conception. (சா.அக.)

*[**Skt.** niṣēgam > த. நிசேகம்]*

**நிசேடம்** *niśēḍam,* பெ.(n.) முழுமை; entireness, completeness.

*[Skt. niś-śēṣa > த. நிசேடம்]*

**நிசை** *niśai,* பெ.(n.) இரவு; night. *"தெவ்வரா நிசையழிந்து வெளியாக" (பாரத. இராச. 45).*

*[Skt. niśa > த. நிசை]*

**நிட்கம்¹** *niṭgam,* பெ.(n.) 1. வராகனெடை (தைலவ. தைல.); weight of a gold pagoda. 2. நாணயவகை; a coin. 3. பொன்; gold.

**நிட்கம்²** *niṭgam,* பெ.(n.) பறை வகை (யாழ்.அக.); a kind of drum.

**நிட்கம்³** *niṭgam,* பெ.(n.) 1. பலம்; one pallam weight. 2. பொன்; gold. 3. ஒரு வராகனெடை; a pagoda weight. (சா.அக.)

*[Skt. niṣkam > த. நிட்கம்]*

**நிட்கண்டகம்** *niṭkaṇḍagam,* பெ.(n.) 1. தீமையின்மை; freedom from danger or trouble. 2. இரக்கமின்மை; mercilessness, lack of consideration. *"நிட்கண்டகஞ் செய்து வாழ்வேன்" (தேவா. 743, 5).*

*[Skt. nis-kaṇṭaka > த. நிட்கண்டகம்]*

**நிட்கண்டகன்** *niṭkaṇṭagaṉ,* பெ.(n.) சிவபெருமான் (பகையற்றவன்); Siva as having no enemies. *"தக்கன் றன்பெருவேள்வி நிரந்தரஞ் செய்த நிட்கண்டகனை" (தேவா. 1049, 9).*

*[Skt. niṣ-kaṇṭaka > த. நிட்கண்டகன்]*

**நிட்கலம்** *niṭkalam,* பெ.(n.) பெண்குறி; female genitals. (சா.அக.)

**நிட்கலி** *niṭkali,* பெ.(n.) மாதவிடாய் நின்ற பெண்; a woman whose menstruration has stopped (i.e.) a woman of 40 or 45 years old. (சா.அக.)

**நிட்கலை** *niṭkalai,* பெ.(n.) பூப்பு நின்று போனவள் (யாழ்.அக.); woman past menstruation.

*[Skt. niṣ-kalā > த. நிட்கலை]*

**நிட்களங்கம்** *niṭkaḷaṅgam,* பெ.(n.) மாசின்மை; immaculateness, purity.

*[Skt. niṣ-kalaṅka > த. நிட்களங்கம்]*

**நிட்களசிவம்** *niṭkaḷa-śivam,* பெ.(n.) அருவமான சிவம் (சதாசிவ. 3, உரை); the formless aspect of Šiva.

*[Skt. niṣ-kala+(saiva) > த. நிட்களசிவம்]*

**நிட்களக்கல்** *niṭkaḷakkal,* பெ.(n.) சீதாங்க பாடாணம்; a mineral poison. (சா.அக.)

**நிட்களம்** *niṭkaḷam,* பெ.(n.) உருவமின்மை; formlessness. *"நிட்களங் கட்காண்டகுதி நீளிடை" (ஞானா. 61, 3).*

*[Skt. niṣ-kala > த. நிட்களம்]*

**நிட்களர்** *niṭkaḷar,* பெ.(n.) அருவடிவாகிய சிவபிரான்; formless Šiva.

*[Skt. niṣ-kala > த. நிட்களர்]*

**நிட்காபட்டியம்** *niṭkāpaṭṭiyam,* பெ.(n.) கவடின்மை; guilelessness, sincerity simplicity.

*[Skt. niṣ-kāpaṭya > த. நிட்காபட்டியம்]*

**நிட்காமியம்¹** *niṭ-kāmiyam,* பெ.(n.) பயனை விரும்பாது செய்யுஞ் செயல்; deed done without expectation of any reward.

*[Skt. niṣ-kāmya > த. நிட்காமியம்]*

**நிட்காமியம்²** *niṭkāmiyam,* பெ.(n.) ஆசையின்மை; freedom from desire. (சா.அக.)

**நிட்காமியம்³** *niṭkāmiyam,* பெ.(n.) 1. முற்றுந் துறத்தல்; leaving or abandoning one's house. *casting off the house holders mode of life for adoption of sanyasam or life renuniciation.* 2. விருப்பமின்மை; freedom from selfish desire as in the proper performance duties. (சா.அக.)

*[Skt. niṣkāmiyam > த. நிட்காமியம்]*

**நிட்காமியகருமம்** *niṭkāmiya-karumam,* பெ.(n.) பயனை விரும்பாது செய்யுஞ் செயல்; deed done without expectation of any reward.

**நிட்காரணம்** *niṭkāraṇam,* பெ.(n.) காரண மின்மை; being without cause or reason.

*[Skt. niṣ-kāraṇa > த. நிட்காரணம்]*

**நிட்கருடபத்திரிகை** *niṭkaruḍa-pattirigai,* பெ.(n.) 1. உறுதிப்பத்திரம்; a certificate or warrant. 2. விடுதலைப் பத்திரம்; a deed of renuniation.

**நிட்கருடம்** *niṭkaruḍam,* பெ.(n.) நிச்சயம்; certainty, assurance, finality.

*[Skt. niṣ-karṣa > த. நிட்கருடம்]*

**நிட்கருடை** *niṭkaruḍai,* பெ.(n.) நிச்சயம்; assurance, certainly, finality.

**நிட்கிராமம்** *niṭkirāmam,* பெ.(n.) கூத்துவகை (யாழ்.அக.); a kind of dance.

*[Skt. nis-krāma > த. நிட்கிராமம்]*

**நிட்கிரியம்** *niṭkiriyam,* பெ.(n.) தொழிற் செய்யாதது (வேதாந். சா. 85); that which is inactive.

*[Skt. niṣkriya > த. நிட்கிரியம்]*

**நிட்க்கிரமப்பிரசவம்** *niṭkkirama-p-pirasavam,* பெ.(n.) அக்கிரமப் பிரசவம்; abnormal labour. (சா.அக.)

*[Skt. niṣkkirama-p-pirasavam > த. நிட்க்கிரமப்பிரசவம்]*

**நிட்கிறாமணம்** *niṭkiṟāmaṇam,* பெ.(n.) காரணமின்மை; being without cause or reason. *"ஆயுளும் வளர வம்மழவினுக்கு நிட்கிறாமணந்தானாற்றுதல் வேண்டும்" (திருவானைக். கோச்செங். 84).*

*[Skt. niṣ-kramaṇa > த. நிட்கிறாமணம்]*

**நிட்குடி** *niṭkuḍi,* பெ.(n.) மணகம் (ஏலம்); cardomum - Elleteria cardamomum. (சா.அக.).

*[Skt. niṣkuti > த. நிட்குடி]*

**நிட்சணம்** *niṭsaṇam,* பெ.(n.) முத்தம் கொடுப்பு (யாழ்.அக.); kissing.

*[Skt. nikṣaṇa > த. நிட்சணம்]*

**நிட்சேபம்** *niṭšēbam,* பெ.(n.) புகட்டல்; injection. (சா.அக.)

**நிட்சேபம்** *niṭsēbam,* பெ.(n.) எண் வகைத் துய்ப்பு (போகப்) பொருள்களில் ஒன்றாகிய புதை பொருள்; treasure- trove, one of *aṣṭa-pōkam.*

**நிட்சைமாதுறுதம்** *niṭsaimāturudam,* பெ.(n.) சிற்றரத்தை; lesser glangal - Alpinia galanga. (சா.அக.)

**நிட்டுரதரன்** *niṭṭurataraṉ,* பெ.(n.) கடு நெஞ்சன் (கடுஞ்சித்தமுள்ளவன்); hard-hearted person. *"கடுஞ்சித்தமுள்ளவன் நிட்டுதரர் நினைவழியவும்" (சிவதரு. சுவர். 47).*

*[Skt. niṣṭhura-tara > த. நிட்டுரதரன்]*

**நிட்டூரம்** *niṭṭūram,* பெ.(n.) கொடுமை; harshness, severity. *"இந்த நிட்டூர மென்னோ" (பாரத. நச். 40).*

*[Skt. niṣṭura > த. நிட்டூரம்]*

**நிட்டூரி** *niṭṭūri,* பெ.(n.) கொடியவள் (வின்.); hard hearted woman.

*[Skt. niṣṭhūrim > த. நிட்டூரி]*

**நிட்டூரம்** *niṭṭūram,* பெ.(n.) கொடுமை; harshness, in humanity. (சா.அக.)

**நிட்டீவனம்** *niṭṭīvaṉam,* பெ.(n.) கக்கல் வாந்தி; vomitting. (சா.அக.)

**நிட்டை** *niṭṭai,* பெ.(n.) (தியானம்) ஊழ்கம்; observance of religious duties and vows. *"விரதானுட்டானம்". "நிட்டையிலேயிருந்து*

*மனத்துறவடைந்த பெரியோர்க்கும்"* *(தனிப்பா.).*

*[Skt. niṣṭhā > த. நிட்டை]*

**நிட்பாவம்** *niṭpāvam,* பெ.(n.) ; vigna catjany. (சா.அக.)

**நிடதம்** *niṭadam,* பெ.(n.) 1. எட்டு மலைகளில் ஒன்று (திவா.) (இரகு. குலமு.); a mountain, one of *aṣṭa-kula-parvatam.* (q.v.). 2. ஒரு தேசம் (நைடத. நாட். 25); a country in the N.E. of india.

*[Skt. niṣēdha(Nātya) > த. நிடதம்]*

**நிடதன்** *niḍataṉ,* பெ.(n.) நிடத நாட்டரசனான் நளன்; Nala, the king of Niṣadha.

**நிடலம்** *niḍalam,* பெ.(n.) நெற்றி; fore head. (சா.அக.)

*[Skt. nitala > த. நிடலம்]*

**நிடலாட்சன்** *niṭalāṭsaṉ,* பெ.(n.) சிவன்; Šiva, as having an eye in his forehead. *"நெற்றிக் கண்ணையுடையவன்".*

*[Skt. niṭalākṣa > த. நிடலாட்சன்]*

**நிடாடம்** *niḍāḍam,* பெ.(n.) ஆந்தை; owl. (சா.அக.)

**நிடூதனம்** *niḍūtaṉam,* பெ.(n.) கொலை (யாழ்.அக.); slaughter murder.

*[Skt. niṣūdana > த. நிடூதனம்]*

**நிடூதனன்** *niḍūtaṉaṉ,* பெ.(n.) கொலைஞன் (சது.); murderer.

*[Skt. niṣūdana > த. நிடூதனன்]*

**நித்தத்துவம்** *nittattuvam,* பெ.(n.) என்று முளதாந்தன்மை; eternity. *"நிராமயமான நித்தத்துவம்" (உத்தாரா. திக்குவி. 248).*

*[Skt. nitya-tva > த. நித்தத்துவம்]*

*[த. நித்த(ம்) + (tva) > த. நித்தத்துவம்]*

**நித்தியசிலேட்டுமரோகம்** *nittiyašilēṭṭuma-rōgam,* பெ.(n.) 1. சதா ஒக்காளம்) எப்பொழுதும் இருமல், சுரம் முதலிய குணங் களையுண்டாக்கும் ஓர் வகை ஈளை நோய்; a kind of phlegmatic disease marked by constant straining to vomit, fever, cough etc. 2. ஈளைநோய்; asthma. (சா.அக.)

**நித்தியசீவி** *nittiyašīvi,* பெ.(n.) 1. எக்காலும் வாழ்ந்து இருப்பது; that which exists for a long time - Everlasting. 2. அழிவில்லாச் சீவன்; eternal spirit. 3. என்றும் நீடுவாழி (சிரஞ்சீவி); eternal being. (சா.அக.)

**நித்தம்**[1] *nittam,* பெ.(n.) 1. என்றும் அழியாதுள்ள நிலை; eternity. *"நேரினித் தமு மொட்டின னாகுமே" (மேருமந். 652).* 2. ஓமகுண்டம் (பிங்.); sacrifical pit. 3. நீர்முள்ளி (மலை.); water thorn.

*[Skt. nitya > த. நித்தம்]*

**நித்தம்**[2] *nittam,* பெ.(n.) 1. நடனம்; dancing. *"நித்தந் திகழு நேரிழை முன்கையார்" (பரிபா. 12, 43).*

*[Skt. nṛtta > த. நித்தம்]*

**நித்தநிமந்தம்** *nitta-nimandam,* பெ.(n.) கோயில் நித்தியக் கட்டளை; daily offerings in a temple. *"மஹாதேவர்க்கு நித்த நிமந்தஞ் செலுத்துகைக்கு" (S.I.I.ii, 392).*

*[Skt. nitya > த. நித்தநிமந்தம்]*

**நித்தியானம்** *nittiyāṉam,* பெ.(n.) பார்க்கை (யாழ்.அக.); seeing, sight.

*[Skt. ni-dhyāna > த. நித்தியானம்]*

**நித்தியானுட்டானம்** *nittiyāṉuṭṭāṉam,* பெ.(n.) நாட் (தினசரிக்) கருமம் (வின்.); daily religious duties.

*[Skt. nitya+anu-ṣṭhāna > த. நித்தியா னுட்டானம்]*

**நித்திராபங்கம்** *nittirāpaṅgam,* பெ.(n.) தூக்கமின்மை; sleeplessness. (சா.அக.)

**நித்திராலு** *nittirālu,* பெ.(n.) தூங்குபவன்; sleepy, drowsy person. *"நித்திராலுவை மீளவுங் கொல்லுவான்" (பாரத. வாரணா. 8).*
*[Skt. nidrālu > த. நித்திராலு]*

**நித்திரை[1]** *nittirai,* பெ.(n.) உறக்கம்; sleep, repose. *"நிசிவேலை நித்திரையாத்திரை பிழைத்தும்" (திருவாச. 4, 29).*
*[Skt. nidrā > த. நித்திரை]*

**நித்திரை[2]** *nittirai,* பெ.(n.) 1. உணவினாலே மயக்கம்; drowsiness arising from taking food. *"உண்ட மயக்கம் தொண்டருக்கு முண்டு".* 2. ஆழ்ந்த தூக்கம்; deep sleep. 3. சுழுத்தி; entire insensibility in deep sleep. 4. யோக நித்திரை; a conscious sleep. 5. தூக்கம்; sleep. (சா.அக.)

**நித்திரைக்கலிதம்** *nittirai-k-kalidam,* பெ.(n.) 1. தூங்கும் போது விந்து கழலுதல்; reflex emission of semen during sleep - Nocturnal emission uet - dream. 2. தூக்கத்தில் தன்னை அறியாமலே அடிக்கடி விந்து கழலும் ஓர் நோய்; an involuntary, too frequent and excessive discharge of semen without copulation - Spermatorrheca. (சா.அக.)

**நித்திரைகுலை-த்தல்** *nittirai-kulai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. தூக்கத்தைக் கலைத்தல்; sleepless. 2. பித்தியத்தினால் தூக்கம் பிடியாமை; entire absence of the capacity to sleep as in sanity - Ahypnosis. (சா.அக.)

**நித்திரைகொள்ளு-தல்** *nittirai-koḷ-,* 3 செ. குன்றாவி.(v.t.) தூங்குதல்; sleeping. (சா.அக.)

**நித்திரைசோபம்** *nittirai-sōbam,* பெ.(n.) மயக்கம்; drewsiness. (சா.அக.)

**நித்திரைதெளி-தல்** *nittirai-teḷi-,* 3 செ. குன்றாவி. (v.t.) 1. தூக்கந் தெளிதல்; recovering from drowsiness or sleep. 2. தூக்கத்தினின்று எழுதல்; rising from sleep. (சா.அக.)

**நித்திரைப்பரிகாரம்** *nittirai-p-parigāram,* பெ.(n.) 1. தூக்கம் வராதிருக்கும் படிச் செய்யும் முயற்சி; preventive measures taken for doing away with sleep. 2. நான்கு வகை பரிகாரத்திலொன்று; one of the four prescribed remedies (i.e.) preventing sleep. (சா.அக.)

**நித்திரைமயக்கம்** *nittirai-mayakkam,* பெ.(n.) தூக்கக் கலக்கம்; sleepingness, drowsiness. (சா.அக.)

**நித்திரைமருந்து** *nittirai-marundu,* பெ.(n.) தூக்கத்தைத் தரும் மருந்து; a drug or medicine that has the quality of inducing profound sleep - Soparific. (சா.அக.)

**நித்திரைவரு-தல்** *nittirai-varu,* 8 செ.கு.வி. (v.i.) தூக்கம் பிடித்தல்; becoming sleepy, to be sleepy. (சா.அக.)

**நித்திரைவருவி-த்தல்** *nittirai-varuvi-,* 4 செ.கு.வி. (v.i.) தூக்கம் வரும்படிச் செய்தல்; inducing sleep 5 or 7 grains of veronal taken mixing in water before bed time is enough. *"படுப்பதற்கு முன் இதற்கு விரோணல் 55-7 துளி தண்ணீரில் கலந்து குடிக்கத் தூக்கம் வரும்"* (சா.அக.)

**நித்திரைவெறி** *nittirai-veṟi,* பெ.(n.) தூக்கத்திலாவது தூக்கத்தினின்று எழுந்தாவது திடீரென முறை பிசகான காரியத்தைச் செய்தல்; a condition of incomplete sleep in which some of the faculities are excited when the person becomes violent - sleep drungness - Somnolentia. (சா.அக.)

**நித்திராகாரிலேகியம்** *nittirākāri-lēgiyam,* பெ.(n.) தூக்கத்தைத் தரும் மருந்து; anodyne confection or electuary. (சா.அக.)

**நிதர்சனம்** *nidarsaṉam,* பெ.(n.) வெளிப் படையானது, தெளிவானது, கண்கூட்டு; obuious, evident. *"இந்த நிதர்சனமான உண்மையை உன்னால் ஏன் ஏற்க முடியவில்லை? உன் வாதம் பொய் என்பது இப்போது நிதர்சனம் ஆகிவிட்டது".* (இ.வ.).

**நிதனம்** *nidaṉam,* பெ.(n.) 1. சாவு; death. 2. அழிவு; loss. (சா.அக.)

**நிதாகம்** *nidāgam,* பெ.(n.) 1. முதிர்வேனிற் காலம்; severe summer days. 2. உட்காங்கை; internal heat. 3. வியர்வை; sweat, perspiration. (சா.அக.)

**நிதாகம்** *nidāgam,* பெ.(n.) 1. முதுவேனிற் காலம்; summer. 2. வெப்பம்; heat, warmth. 3. வியவை; sweat.

*[Skt. nidāgha > த. நிதாகம்]*

**நிதாககரன்** *nitāga-garaṉ,* பெ.(n.) கதிரவன் (யாழ்.அக.); sun.

*[Skt. nidāgha-kara > த. நிதாககரன்]*

**நிதானக்காரன்** *nidāṉa-k-kāraṉ,* பெ.(n.) கருத்துள்ளவன் (யோசனையுள்ளவன்); careful person.

*[Skt. nidhāna + த. காரன் > நிதானக்காரன்]*

**நிதானகாண்டம்** *nidāṉa-kāṇḍam,* பெ.(n.) பலவித நோய்களைக் குறித்துச் சொல்லும் ஒரு ஆயுள் வேத நூல்; the branch of medicine in ayurveda which treats of the essential nature of diseases - their structural and functional changes, their causes and sysmptoms. (சா.அக.)

*[நிதான + கண்டம்]*

**நிதானம்**[1] *nidāṉam,* பெ.(n.) 1. முதல் காரணம்; first cause, origin. *"பந்த நிதானஞ் சங்கற்ப மன்றோ" (ஞானவா. மானுவே. 8).* 2. நோய்க் காரணம்; cause of a disease. *"வாத முதலிய பிணிகட்கு......... நிதான மாயினவன்றி மாறாயவியல் பினையுடையனவாம்" (குறள், 1102, உரை).* 3. சார்பு (மணிமே. 24. 105, உரை); cause of misery.

*[Skt. nidāna > த. நிதானம்]*

**நிதானம்**[2] *nidāṉam,* பெ.(n.) 1. முதற் காரணம்; primary cause, the disease and which gives clue to diagnosis. 2. பொன்; gold. 3. இரத்தினப் பொது; gem in common. (சா.அக.)

**நிதானம்**[3] *nidāṉam,* பெ.(n.) நோயின் காரணங்கள்; those causes which induce diseases. (சா.அக.)

**நிதானம்**[4] *nidāṉam,* பெ.(n.) 1. மணி (இரத்தினம்) (சூடா.); gem. 2. பொன் (உரி.நி.); gold. *"கவிபாட நிதான நல்கப் பற்றி கையினார்" (தேவா. 418, 6).* 3. படை (திவா.); army. 4. தீர்மானம்; ascertainment, assurance, decision. *"நிதான மொடு...... கூறன்மி னென்மரும்" (பெருங். வத்தச். 17, 62).* 55. மதிப்பீடு (உத்சேம்); guess, estimate, conjecture. *"நிதானமாய்சொல்".* 6. நோக்கம்; motive, object. *"உன் நிதானம் என்ன" (வின்.).* 7. நேர்மை; uprightness, rectitude. 8. நிதானமுள்ளவன்; carefulness, discrimination. *"சாவதானம் நிதானமாய் பேசுகிறவன்".* 9. சமம்; equality, sameness. 10. பிரமாணம்; standard, criterion rule.

*[Skt. ni-dhāna > த. நிதானம்]*

**நிதானன்** *nidāṉaṉ,* பெ.(n.) கடவுள் (வின்.); deity, as the first cause.

*[நிதானம் → நிதானன்]*

**நிதானநூல்** *nidāṉa-nūl,* பெ.(n.) மாதவ நிதானம் என்னும் ஆயுள் வேத நூல்; an ayurvedic book called *mādavanidāṉam.* (சா.அக.)

**நிதானவித்தை** *nidāṉa-vittai,* பெ.(n.) நோயின் காரணத்தையும் குறியையும் தெரிந்து கொள்ளும் வித்தை; the determination of disease. its causes any symptoms - Diagnosis. (சா.அக.)

**நிதானி-த்தல்** *nidāni-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உறுதி செய்தல் (நிச்சயித்தல்); to ascertain, determine, resolve. 2. மதிப்பீடுதல் (உத்தே சித்தல்); to estimate, judge. 3. அளவு திட்டப் படுத்துதல் (வின்.); to fix a measure or standard. 4. (அனுமானித்தல்) உன்னித்தல்; to inferdeduce.

*[நிதானம் நிதானித்தல்]*

**நிதானி** *nidāni,* பெ.(n.) 1. வேண்டிய கவனம் மேற்கொள்ளுதல்; pause, exercise caution pay due attention. 2. உறுதிப்படுத்துதல்; make sure, determine. *"அமைச்சர் உடனடியாக பதில் சொல்லாமல் சற்று நிதானித்தார். "குரல் எந்தத் திசையிலிருந்து வருகிறது என்பதை அவரால் நிதானிக்க முடியவில்லை".* (இ.வ.).

**நிதானி** *nidāni,* பெ.(n.) முன் எச்சரிக்கை உள்ளவன் (யோசனையுள்ளவன்); careful person.

*[Skt. nitāni > த. நிதானி]*

**நிதி**[1] *nidi,* பெ.(n.) 1. குவை, பொருட்டிரள்; treasure-hoard. *"பெருநல நிதி தலை சிறந்தது" (சீவக. 331).* 2. பொன் (சூடா.); gold. 3. ஒன்றிய ஐக்கிய நாணயச் சங்கம்; joint-stock company.

*[Skt. nidhi > த. நிதி]*

**நிதி**[2] *nidi,* பெ.(n.) 1. செல்வம், பணம்; wealth, money. 2. பொது வருவாய்; finance, fund. *"நிதி அமைச்சர், வெள்ள நிவாரண நிதி". "நிதியும் மதியும் இருந்தால் எதையும் அடையலாம்".* (இ.வ.).

**நிதிஅறிக்கை** *nidi-arikkai,* பெ.(n.) வரவு செலவுத் திட்டம்; budget. *"மக்களவையில் நிதி அறிக்கை படைக்கப்பட்டது".*

த.வ. பாதீடு

**நிதிஆண்டு** *nidi-āṇḍu,* பெ.(n.) வரவு செலவுத் திட்டம் செயலாக்கப்படும் மாதத்திலிருந்து அடுத்த வரவு செலவுத் திட்டம் வரையிலான காலம்; financial year.

த.வ. திட்ட ஆண்டு, பாதீட்டு ஆண்டு

**நிதிக்கிழவன்** *nidi-k-kiḷavaṉ,* பெ.(n.) தலைச்சங்கப் புலவருள் ஒருவர் ; a poet of the first sangam. *"நிதியின் கிழவன்" (இறை. கள. 1, உரை. பக்.4.)*

**நிதிசாத்திரம்** *nidi-sāttiram,* பெ.(n.) புதையல் கண்டுபிடிக்கும் நூல்; treastise on the discovery of treasure-troves.

*[Skt. nidi > த. நிதிசாத்திரம்]*

**நிதித்தியாசனம்** *nidi-t-tiyāsaṉam,* பெ.(n.) இடைவிடா ஊழ்கம் (தியானம்); un-interrupted meditation. *"நிதித்தியா சனத்தின் மன்னுவாய்" (பிரபுலிங். கதலி. 16).*

*[Skt. nididhyāsana > த. நிதித்தியாசனம்]*

**நிதித்துறை** *nidi-t-turai,* பெ.(n.) அரசின் செல்வத்துறை; finance department of the Government.

த.வ. செல்வத்துறை

**நிதிநிசேபம்** *nidi-nišēbam,* பெ.(n.) நிலத்தின் (பூமியின்) கீழுள்ள புதையல்; treasure hidden underground, a documentary term. (R.F.)

*[Skt. nidhi+šēbam > த. நிதிநிசேபம்]*

**நிதிநூல்** *nidinūl,* பெ.(n.) புதையலைக் கண்டறியும் செய்தி பற்றிக் கூறும் நூல்; a system of metallurgy burried treasures. (சா.அக.)

**நிதிப்பலகை** *nidi-p-palagai,* பெ.(n.) பொற் பலகை; golden seat. *"தண்ணிதிப் பலகைச் சந்தனச் சார்வணை" (பெருங்.இலாவாண. 18.. 41)*

*[Skt. nidi+த. பலகை > த. நிதிபலகை]*

**நிதிப்பொதி** *nidi-p-podi,* பெ.(n.) பொற்கிழி (வின்.); a purse of gold.

*[நிதி + பொதி]*

**நிதியம்¹** *nidiyam,* பெ.(n.) நிதி; a celestial. *"நிலந்தினக் கிடந்த நிதியமொடு" (மலைபடு. 575). "நிதிய மலைமிசைத் தவனநெட்டெயி றொன்றினை முறித்து....... எழுத" (சேதுபு. அகத். 1).*

*[Skt. nidi > த. நிதியம்]*

**நிதியம்²** *nidiyam,* பெ.(n.) பெரும் தொகையை நிருவகிக்கும் அமைப்பு; financial consortium.

**நிதியமைச்சர்** *nidi-y-amaccar,* பெ.(n.) செல்வத்துறையின் அமைச்சர்; minister for finance.

த.வ. செல்வ அமைச்சர்

**நிதுவனம்** *niduvanam,* பெ.(n.) 1. கலப்பு; mixing. 2. புணர்ச்சி; sexual union. 3. மகிழ்ச்சி; joy. 4. விளையாட்டு; sport.

*[Skt. nidhvana > த. நிதுவனம்]*

**நிதேசம்** *nidēšam,* பெ.(n.) 1. கட்டளை; command. 2. சொல்; word. 3. அருகில். அண்மை (சமீபம்); proximity.

*[Skt. ni-elēša > த. நிதேசம்]*

**நிந்தக்காணி** *ninda-k-kāṇi,* பெ.(n.) ஒருவனுக்கே உரிமையான நிலம்; land which is the exclusive property of a single proprietor.

**நிந்தகன்** *nindagaṉ,* பெ.(n.) இழிவுரைஞன் (இழிவாக பேசுவோன்); who despises, scoffes. *"வேதநிந்தகனே புன்மை விடாக்குணும் புலையவனாவான்" (சிவ. தருசுவர்க். சேட. 37).*

*[Skt. nindagaṉ > த. நிந்தகன்]*

**நிந்தம்** *nindam,* பெ.(n.) தனி உரிமை; one's own exclusive right.

*[Skt. nija > த. நிந்தம்]*

**நிந்தனை** *nindaṉai,* பெ.(n.) இகழ்ச்சி; censure, scorn.

*[Skt. nindanā > த. நிந்தனை]*

**நிந்தாட்சணை** *nindāṭsaṉai,* பெ.(n.) இரக்க மின்மை; mercilessness, implacable nature, severity.

**நிந்தாசுதுதி** *nindāšutudi,* பெ.(n.) எள்ளி யேத்தல் (இகழ்தல் போலப் புகழ்கை); praise in the apparent from of abuse.

*[Skt. nindā+cutudi > த. நிந்தாசுதுதி]*

**நிந்தி-த்தல்** *nindi-,* 3 செ.கு.வி.(v.i.) 1. இகழ்தல்; to vilify, abuse, slander. 2. அசட்டை பண்ணுதல் (பொருட்படுத்தா திருத்தல்); to neglect, disregard.

*[Skt. nind + (-த்தல்) > த. நிந்தித்தல்]*

**நிந்திதம்** *ninditam,* பெ.(n.) 1. இகழப்பட்டது; which is abused or despised. 2. பரிகாசம் (எள்ளல்) (யாழ்.அக.); prohibition.

*[Skt. nindita > த. நிந்திதம்]*

**நிந்து** *nindu,* பெ.(n.) இறந்த மக வீன்றாள் (யாழ்.அக.); woman delivered of a still-born child.

*[Skt. nintu > த. நிந்து]*

**நிந்தை** *nindai,* பெ.(n.) இகழ்ச்சி; reproach, blasphemy, abuse.

*[Skt. nindā > த. நிந்தை]*

**நிந்தைவுவமை** *nindai-y-uvamai,* பெ.(n.) உவமேயத்தை உயர்த்தி உவமானத்தை இகழ்ந்து சொல்லும் உவமையணி வகை (தண்டி. 30, உரை); figure of speech in which the object chosen for comparison is belittled.

*[நிந்தை + உவமை]*

**நிப்பரம்** *nipparam,* பெ.(n.) 1. பாரமின்மை (சுமையின்மை); lightness. 2. அசைவின்மை; firmness.

*[Skt. nir-bhara > த. நிப்பரம்]*

**நிபச்சொல்** *niba-c-col,* பெ.(n.) பழிச்சொல் (வின்.); slandex backbiting, calumny.

*[Skt. nibha > த. நிபச்சொல்]*

**நிபடிதம்** *nibaḍitam,* பெ.(n.) (படித்தல்) படிக்கை (யாழ்.அக.); studying.

*[Skt. nipaṭhita > த. நிபடிதம்]*

**நிபத்தியை** *nibattiyai,* பெ.(n.) போர்க்களம் (யாழ்.அக.); battle-field.

*[Skt. nipatyā > த. நிபத்தியை]*

**நிபதனம்** *nibataṉam,* பெ.(n.) 1. விழுகை (யாழ்.அக.); falling down. 2. கீழ் இறக்குகை; throwing down, letting down; dropping.

*[Skt. ni-patana > த. நிபதனம்]*

**நிபந்தம்** *nibandam,* பெ.(n.) 1. தாவரப் பொருள்; immoveable property. 2. தவணையாகச் செலுத்துவது; that which has been qromised or is deliverable in instalments. (R.F.). 3. கோவில்களுக்கு விடப்பட்ட சொத்து; endowment of property for temple workship. *"நிபந்த வகுப்பு நாதன் வைத்தபணியென" (கோயிற்பு. திருவிழா. 18).* 4. கடமை (வின்.); obligation, duty. 5. அணை (யாழ்.அக.); dam. 6. யாப்பு (யாழ்.அக.); poem.

*[Skt. ni-bhandha > த. நிபந்தம்]*

**நிபந்தனக்கிரந்தம்** *nibandaṉa-k-kirandam,* பெ.(n.) பல நூல்களிலிருந்து திரட்டிய மறைநூல் (வின்.); a treatise compiled from various smrtis.

*[Skt. nibandhana+kiranta > த. நிபந்தனக் கிரந்தம்]*

**நிபந்தனம்** *nibantaṉam,* பெ.(n.) தொகுப்பு (வின்.); collection, compendium.

*[Skt. nibandhana > த. நிபந்தனம்]*

**நிபந்தனை** *nibandaṉai,* பெ.(n.) 1. கட்டுப்பாடு; agreement, compact, condition. 2. பொது விதி; canon, regulation, general rule. 3. ஏற்பாடு (இ.வ.); arrangement. 4. தண்டனை (வின்.); punishment, penalty.

*[Skt. nibandhanā > த. நிபந்தனை]*

**நிபம்**[1] *nibam,* பெ.(n.) 1. உவமை (வின்.); comparison, likeness, resemblance. 2. காரணம்; cause, reason, pretext. *"வெய்யன் வரநிபமென்னை கொலென" (கம்பரா. பரசு. 15).* 3. வஞ்சகன், கரவடம், ஏய்ப்பு (வின்.); fraud. 4. கோள் (வின்.); accusation, slander, calumny. *"திருவல்லிக்கேணி பஞ்சொல்லித் கண் முத்தங்கள் சிந்துங் கண்டாய்" (தனிப்பா. ii. 183. 447).*

*[Skt. nibho > த. நிபம்]*

**நிபாகம்** *nibāgam,* பெ.(n.) சமைக்கை (யாழ்.அக.); cooking.

*[Skt. ni-bāga > த. நிபாகம்]*

**நிபாதம்** *nibādam,* பெ.(n.) 1. இறங்குகை (வின்.); falling, descending. 2. செயலொழிகை (வின்.); cessation of activity, prostration. 3. இறப்பு (யாழ்.அக.); death. 4. உடம்பொடு புணர்த்தல் (பி.பி.50, உரை); a device in literary art.

*[Skt. nipāta > த. நிபாதம்]*

**நிபாதனம்** *nibādaṉam,* பெ.(n.) கொல்லுகை (யாழ்.அக.); destroying, killing.

*[Skt. ni-pātana > த. நிபாதனம்]*

**நிபானம்** *nibāṉam,* பெ.(n.) 1. கிணறு (யாழ்.அக.); well. 2. நீர்த் தொட்டி; reservoir of water trough for watering cattle. 3. பாற் கலசம்; milk pail.

*[Skt. nipāna > த. நிபானம்]*

**நிபிடாருட்சா** *nibiḍāruṭsā,* பெ.(n.) கருப்புக் கடலை; black bengal gram. (சா.அக.)

**நிபிடீகரம்** *nibiḍīgaram,* பெ.(n.) 1. நெருக்கம்; closeness, thickness, as of men, of leaves. 2. கடுமை; sevenity as of disease, urgency, pressure.

*[Skt. nibiḍīkāra > த. நிபிடீகரம்]*

**நிபீடனம்** *nibīḍaṉam,* பெ.(n.) மற்போர் (சுக்கிரநீதி. 215); wrestling.

*[Skt. ni-pīḍana > த. நிபீடனம்]*

**நிபீடிதம்** *nibīḍidam,* பெ.(n.) 1. பிசைதல்; squeezing. 2. தழுவல்; embracing. (சா.அக.)

**நிபுணத்துவம்**[1] *nibuṇattuvam,* பெ.(n.) 1. நுண்திறன் (சாமர்த்தியம்); skill, cleverness. 2. திறப்பாடு; excellence, superiority. *"வாசிட்டமா நிபுண ஞான நூல்" (ஞானவா. வைரா. 16).*

*[Skt. nipu-ṇa-tva > த. நிபுணத்துவம்]*

**நிபுணத்துவம்**[2] *nibuṇattuvam,* பெ.(n.) தேர்ச்சி; expertise, professionalism.

**நிபுணர்** *nibuṇar,* பெ.(n.) தேர்ச்சியும், திறமையும் பெற்றவர்; expert, specialist. *"மருத்துவ நிபுணர் / வேறு எதில் அவர் நிபுணரோ எனக்குத் தெரியாது, ஆனால் பொய் சொல்வதில் நிபுணர்".* (இ.வ.).

த.வ. திறவோன்

**நிபுணன்** *nibuṇaṉ,* பெ.(n.) 1. நுண் திறத்தன், மிக வல்லோன் (திவா.); skilful man, expert. 2. கலைவல்லோன் (பிங்.); learned man. 3. அறிவன் (புதன்) (வின்.); mercury.

*[Skt. nipuṇa > த. நிபுணன்]*

**நிமிடம்** *nimiḍam,* பெ.(n.) 1. 60 விநாடி கொண்ட காலம் (நிமையம்); a period of 60 minutes (i.e.) a minute. 2. சிமிட்டுக் கண் (இமைப் போது); continous winking - Blepharism. (சா.அக.)

**நிமித்தகம்** *nimittagam,* பெ.(n.) முத்தமிடல் (யாழ்.அக.); kissing.

*[Skt. nimittaka > த. நிமித்தகம்]*

**நிமிதகம்** *nimidagam,* பெ.(n.) கொக்கோக நூலின்படி ஓர் வகை முத்தமிடல்; a mode of kissing, limited or normal kiss in which the girl merely touches the lips or her lover with her own but not operate or take any other active part. (சா.அக.)

**நிமித்தக்காரன்** *nimitta-k-kāraṉ,* பெ.(n.) கோள் நிலையை நோக்கி வருங் காரியஞ் சொல்வோன் (வின்.); Astrologer, soothsayer.

*[Skt. nimitta > த. நிமித்தக்காரன்]*

**நிமித்தகாரணம்**[1] *nimitta-kāraṇam,* பெ.(n.) மூலகாரணம்; primary cause. (சா.அக.)

**நிமித்தகாரணம்**[2] *nimitta-kāraṇam,* பெ.(n.) காரணம் மூன்றனுள் குடத்துக்குக் குயவன் போலக் காரியத்தோடு அனுவிருத்தியில்லாத கரணியம்; efficient cause, as the potter for a pot one of three kāraṇam. *"அதற்கு நிமித்த காரணங்கேவலப் பொருளென் பதூஉம்" (குறள், 352, உரை) (தருக்க. சங்.பக்.24).*

*[நிமித்தம் + காரணம்]*

*[Skt. nimitta > த. நிமித்தகாரணம்]*

**நிமிர்ச்சுவாசம்** *nimirccuvāsam,* பெ.(n.) நிமிர்ந்தபடி இருந்தாலொழிய மூச்சுவிட முடியாமை; inability to breathe except in an upright position - Orthopnea. (சா.அக.)

**நிமித்தசுரம்** *nimittasuram,* பெ.(n.) வேண்டு மென்று உண்டாக்கிய சுரம்; fever that is wantenly brought about - indued fever. (சா.அக.)

**நிமித்தசூடாமணி** *nimitta-šūḍāmaṇi,* பெ.(n.) ஒரு புட்குறிநூல் (சகுனநூல்) (யாழ்.அக.); a treatise on omens.

*[Skt. nimitta > த. நிமித்தசூடாமணி]*

**நிமித்தத்துவம்** *nimittattuvam,* பெ.(n.) ஏதுத்தன்மை (சங்.அக.); causality.

*[Skt. nimitta+த. தத்துவம் > த. நிமித்தத்துவம்]*

**நிமித்தம்** *nimittam,* பெ.(n.) 1. காரணம்; cause, motive, occasion. *"புணர்தலும் புணர்தனி மித்தமும்" (தொல்.பொ.13, உரை).* 2. குறி சொல்லுதல்; omen. *"நெறியி னல்கின புள்ளு நிமித்தமும்" (சீவக. 2168).* 3. அடையாளம் (வின்.); mark, sign, spot, token. 4. சபிண்டீ கரணத்தில் இறந்தோர்க்கு நிகராளியாய் (பிரதிநிதி) வரிக்கப் பெற்றவர்க்குரிய இடம்; the office of a Brahmin representing

deceased on the 12th day ceremony. 5.பொருட்டு; for the sake of, on account of. *"அதனிமித்தம் வந்தேன்" (வின்.)*

*[Skt. ni-mitta > த. நிமித்தம்]*

**நிமித்ததானம்** *nimitta-dāṉam,* பெ.(n.) பிணத்திற்கு உருக்கமாகச் செய்யும் கொடை (வின்.) (பிரேதப் பிரீதியாகச் செய்யுந் தானம்); gifts or offerings made for the benefit of the soul of a deceased person before he is included among manes.

*[Skt. nimitta+த. தானம் > த. நிமித்ததானம்]*

**நிமிளை** *nimiḷai,* பெ.(n.) இது ஓர் வகைத் தாது; It is a kind of metal. *"தமிழ் வைத்திய நூலில் இதை ஒரு உபரசச்சரக்காக எடுக்கப் பட்டுள்ளது".* (சா.அக.)

**நிமீலனம்** *nimīlaṉam,* பெ.(n.) 1. கண்ணிமைப்பு; twinkling of the eye. 2. மரணம்; death. (சா.அக.)

**நிமேசகம்** *nimēsagam,* பெ.(n.) மின்மினிப் பூச்சி; firefly, glow-worm. (சா.அக.)

**நிமேடா** *nimēḍā,* பெ.(n.) அடிக்கடி கண் சிமிட்டல்; winking very often. (சா.அக.)

**நிமேடவர்த்தமம்** *nimēḍa-varttamam,* பெ.(n.) கண்ணின் இமைச்சந்தில் வாயு நிற்கும் போது, ஓயாது இமைகளைக் கொட்டி ஒரு வேளை மூடவும், திறக்கவும் செய்யுமோர் வகைக் கண்ணோய்; an eye disease characterised by constent winking of the eyelids owing to the incarceration of the deranged vayu within the nerves or veins controlling their winking. (சா.அக.)

**நியக்கி** *niyakki,* பெ.(n.) மான் (யாழ்.அக.); deer.

*[Skt. nyaṅku > த. நியக்கி]*

**நியக்கரணம்** *niya-k-karaṇam,* பெ.(n.) அவமதிப்பு (யாழ்.அக.); degradation, disrespect.

*[Skt. nyakkaraṇa > த. நியக்கரணம்]*

**நியக்குரோதம்** *niya-k-kurōdam,* பெ.(n.) ஆலமரம் (மலை.); banyan tree.

*[Skt. nya-grōdha > த. நியக்குரோதம்]*

**நியங்கு** *niyaṅgu,* பெ.(n.) பொன்; gold. (சா.அக.)

**நியசி-த்தல்** *niyaci-,* செ.குன்றாவி.(v.t.) வைத்தல்; to place, to locate. 2. பதித்தல்; to insert.

*[Skt. nyas > த. நியசித்தல்]*

**நியதம்[1]** *niyadam,* பெ.(n.) 1. அடக்கம் (யாழ்.அக.); restraint, self-control. 2. எப்பொழுதும்; always, invariablity. *"நியதமு மத்தாணிச் சேவகமும்" (திவ். திருப்பல். 8).*

*[Skt. niyata > த. நியதம்]*

**நியதம்[2]** *niyadam,* பெ.(n.) ஒழுங்கு; regularity.

*[Skt. niyata > த. நியதம்]*

**நியதி[1]** *niyadi,* பெ.(n.) 1. செய்கடன்; religious or moral duty, obligation. *"புனல் கொண்டு நியதிகள் முடித்து" (கோயிற்பு. பதஞ். 4).* 2. ஒழுக்க நெறி; custom, usage, law, rule. *"அருநியதி நாடிய சன்னியாசப் பெருந் தவத்த னாயினான்" (இராகு. 8).* 4. ஊழ்; destiny. *(குறள், அதி, 38, அவ.).* 6. வரையறை முறைமை (இ.வ.); method. 5. வரையறை; restriction. *"இன்னவிடத்து என்னும் நியதியின்றி" (நன். 393, மயிலை).*

*[Skt. niyati > த. நியதி]*

**நியதி[2]** *niyati,* பெ.(n.) 1. கிரமம்; fixed order of things. 2. ஊழ்; destiny, fate. 3. செய்கடன்; religious or moral duty. 4. தத்துவம்; one of the thirty six principles in mystic philosophy.

**நியதி-த்தல்[3]** *niyadi-,* செ.கு.வி.(v.i.) உறுப்புகளை (அங்கங்களை) மந்திரத்தால் தெய்வங்கட்கு உரிய வாக்குதல் (வின்.); to

appropriate, assign parts of the body to a deity in incantations.

*[Skt. nyas > த. நியதி-த்தல்]*

**நியதிதத்துவம்** *niyadi-tattuvam,* பெ.(n.) சுத்தாசுத்ததத்துவத்துள் ஒவ்வோர் ஆன்மாவும் தன் கருமபலனை நுகரச் செய்வது (சி.கோ. பா.2.2.பக்.150); category of desting which makes each soul experience the fruits of its own karma, one of seven *cuttācutta-tattu-vam.* q.v.

*[Skt. niyati > த. நியதி + தத்துவம்]*

**நியதிப்பெயர்** *niyadi-p-peyar,* பெ.(n.) ஏற்புடைய மொழி (வின்.); appropriate word or epithet.

*[Skt. niyati > த. நியதிப்பெயர்]*

**நியதிபண்ணுதல்** *niyati-paṇṇu-,* செ.குன்றாவி. (v.t.) நீக்குதல் (சங்கற்ப. 3 வரி 187, உரை); to remove.

*[Skt. niyati > த. நியதி + பண்ணுதல்]*

**நியதீசம்** *niyadīsam,* பெ.(n.) சுனைப்புன்கு; rusty soap nut Eriogpssum adule. (சா.அக.)

**நியது-தல்** *niyadu-,* செ.குன்றாவி.(v.t.) விடுதல் (சது.); to leave, let go, release.

*[Skt. nyas > த. நியதுதல்]*

**நியதேந்திரியன்** *niyadēndiriyaṉ,* பெ.(n.) இந்திரியங்களை அடக்குபவன்; one who suppresses the five senses one restraining his passions. (சா.அக.)

**நியதேந்திரியன்** *niyatēndiriyaṉ,* பெ.(n.) புலனடக்கி (இந்திரியங்களை அடக்கினவன்) (யாழ்.அக.); one who has subdued his senes.

*[Skt. niyatēndriva > த. நியதேந்திரியன்]*

**நியந்தா** *niyandā,* பெ.(n.) 1. கட்டளையிடுவோன்; one who guides, controls. 2. கடவுள்; God. *"அசடமொடுசட நியந்தா வின்மிக்கோர்" (வாயுசங். ஞானநி. 5).*

*[Skt. niyantā > த. நியந்தா]*

**நியமக்காரன்** *niyama-k-kāraṉ,* பெ.(n.) 1. விரதம் பூண்டவன்; one who has taken a religious vow. 2. (ஆசாரமுள்ளவன்) ஒழுக்க முள்ளவன்; he who strictly observes religious ordinances.

*[நியமம் + காரன்]*

**நியமக்கிரிகை** *niyama-k-kirigai,* பெ.(n.) சாத்திரம் (கலை, நூல்) வகுத்த (அனுட்டானம்) நடைமுறை; duties enjoined by sastras. *"நீர்க்கட னாற்றிய நியமக் கிரிகையன்" (பெருங். உஞ்சைக். 53, 92).*

*[நியமம் + கிரிகை]*

**நியமங்கெட்டவன்** *niyamaṅ-keṭṭavaṉ,* பெ.(n.) ஒழுக்கந் தவறியவன்; man of unrighteous habits.

*[நியமம் + கெட்டவன்]*

**நியமச்சிலேடை** *niyama-c-cilēḍai,* பெ.(n.) பல பொருளுக்கு இயையுமாறு ஒன்றுக்கு நியமிக்கும் சிலேடையணி (தண்டி. 755) (சிலேடை - இரட்டுறமொழிதல்); a figure of speech wherein an expression capable of many applications is restricted to only one object by suitable devices.

*[நியமம் + சிலேடை]*

**நியமச்சூத்திரம்** *niyama-c-cūttiram,* பெ.(n.) ஓரிடத்திற் பலவிதிகள் நிகழும் நிலையில் குறித்த ஒன்றை வரையறுக்குஞ் சூத்திரம் (யாப். வி. 1. பக். 11); a Sūtra directing the application of a particular rule when along with others, it is merely optional.

*[நியமம் + சூத்திரம்]*

**நியமஞ்செய்-தல்** *niyamañ-jey-,* 1 செ. குன்றாவி. (v.t.) 1. ஏற்படுத்துதல்; to make an engage- ment, form a purpose.

2. வேலையில் அமர்த்துதல்; to appoint to an office.

*[நியமம் + செய்தல்]*

**நியமநிட்டை** *niyama-niṭṭai,* பெ.(n.) சமயா னுட்டானம், சமய நடைமுறைகள்; religious, duties.

*[நியமம் + நிட்டை]*

**நியமம்**[1] *niyamam,* பெ.(n.) 1. செய்கடன் (திவா.); moral or religious duty. *"நித்தலுந் நியமஞ் செய்து" (தேவா. 39, 1).* 2. அட்டாங்க யோகத் துள் தவம், தூய்மை, தத்துவமோர்தல், மழை வந்திருத்தல், தெய்வ வழிபாடு என்ற விதிமுறை களில் வழுவாதொழுகல் (திவா.); (yoga) disciplinary observances, such as practice of contentment, bodily mortification, investigation of religious truths and worship of God. 3. விதி; ordinance, injunction. 4. உறுதி (பிங்.); certainty, assurance. 5. வழக்கு (வின்.); usage, practice. 6. வரையறுக்கை; defining, delimiting.

*[Skt. niyama > த. நியம(ம்)]*

**நியமம்**[2] *niyamam,* பெ.(n.) 1. முடிவு; close, end, finish. 2. நகரம் (பிங்.); town, city. *"நெடுநீர்க் கழனிசூழ் நியமஞ் சேர்த்தி" (சீவக. 2601).* 3. கோயில்; temple. *"உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்" (சிலப். 14, 8).* 4. கடைத் தெரு; bazaar street. *"ஓவுக் கண்டன்ன விருபெரு நியமத்து" (மதுரைக். 365).* 5. தெரு (பிங்.); street. 6. இடம் (பிங்.); location. 7. மண்டபம்; a hall. *"பட்டி நியமம்" (பெருங். வத்தவ. 2, 73).*

*[Skt. nigama > த. நியமம்]*

**நியமம்** *niyamam,* பெ.(n.) 1. நீர் முள்ளி; water thistle - Barleria longifolia. 2. இடம்; place, location. 3. ஒவ்வொருவரும் அனுசரிக்க வேண்டிய கடமைகள்; certain minor duties to be observed by every man. 4. முறைமை; established course rite or ceremony. 5. செய்கடன்; moral obligation or duty. 6. எட்டு வகை ஓகத்தில் ஒன்று; one of the eight stages of yoga. 7. மதக் கொள்கை; religious observances, a rule or precept laying down or specifying something otherwise optional. 8. மனவடக்கம்; restraint of the mind. 9. ஓகப் பயிற்சியில் (ஓகாப் பியாசத்தில்) இயமம் என்பதைத் தவிர்த்து மற்ற முறைகளை அனுசரிப்பது; any act of voluntary enance or meritorious piety in yoga practice other than yamam restraint of appetite especially a lesser vow or minor dependent on external condition, not so obligatory as. 10. உலோகங்களில் அவைகளில் முதன்மையாக இரச முறையில் அனுசரிக்க வேண்டிய கோட்பாடு; a process applied to minerals especially to quick silver. (சா.அக.)

*[Skt. nigma > த. நியமம்]*

**நியமவிஞ்சனம்** *niyama-viñjaṉam,* பெ.(n.) இன்றியமையாத துணைப் பொருள்கள்; necessary accessories. *"மங்கலக் கருவிக்கு நியமவிஞ்சன மமைமின்" (பெருங். உஞ்சைக். 34, 171–2).*

*[Skt. ni-yama+uyañjana > த. நியமம் + விஞ்சனம்]*

**நியமவிலக்குச்சிலேடை** *niyama-vilakku-c-cilēḍai,* பெ.(n.) நியமஞ் செய்து கூறிய சிலேடையை வேறொன்றற்குங் கூறி அந் நியமத்தை விலக்கும் சிலேடையணி (தண்டி. 76, உரை); a figure of speech in which an expression capable of many applications is restricted to one of them in the first instance and then extended to another.

*[நியமம் + விலக்குச்சி + சிலேடை]*

**நியமவுவமை** *niyama-v-uvamai,* பெ.(n.) உவமானமாகக் கூறத்தக்கன பலவற்றுள்

சிறந்ததொன்றனையே தேற்றே காரத்தால் நிச்சயித்துக் கூறும் உவமை வகை (தண்டி. 30, உரை, 9); simile in which only one object, among many, is expressly taken as *uvamāṉam*.

*[நியமம் + உவமை]*

**நியமனம்¹** *niyamaṉam,* பெ.(n.) 1. கட்டளை; precept, rule, order. *"நியமனமிருந்த படியே....... அவ்விக்ரஹத்தை முடித்துக் கொடுக்க" (குருபரம். 173).* 2. அமர்த்தம்; appointment to an office. 3. உத்தரவு; permission, vasn. 4. வகைப்படுக்கை; classification. *"உணர்வினிய மனஞ் செய்வனெவன்" (கூர்மபு. பிரகிருதி. 2).*

*[Skt. ni-yamana > த. நியமனம்]*

**நியமனம்²** *niyamaṉam,* பெ.(n.) 1. அதிகார நிலையில் ஏற்படுத்தும் பணி அமர்த்தம்; appointment. *"சத்துணவுத் திட்ட அமைப் பாளர்களாக இருநூறு பேர் நியமனம் செய்யப்பட்டுள்ளனர்". "மின் வாரியத் தலைவராக நியமனம் பெற்றுள்ளவர் யார்? வேலைக்கான நியமனக் கடிதம் வந்துள்ளது".* 2. நேரடியாக ஒரு பொறுப்புக்கு ஒருவரை அல்லது தனக்கு மாற்றாக செயற்பட ஒருவரை அமர்த்தும் முறை; nomination. *"நியமன உறுப்பினர் . வருடாந்திரக் கூட்டத்தில் உங்களுக்கு பதில் மற்றொருவரை நியமனம் செய்யலாம்".* (இ.வ.).

த.வ. அமர்த்தம்

**நியமசதன்** *niyamasadaṉ,* பெ.(n.) 1. அமர்த்தம் பெற்ற அலுவலன்; person appointed to an office or duty. 2. நடைமுறைகளை பின்பற்று பவன்; regular observer of religious duties.

*[Skt. niyama+த. சதன் > த. நியமசதன்]*

**நியமி-த்தல்** *niyami-,* 4 செ.குன்றாவி. (v.t) 1. வேலை முதலியவற்றில் பணி அமர்த்துதல்; to appoint, designate, ordian, institute, assign, appropriate. 2. தீர்மானித்தல்; to resolve, determine. *"இடமுங்காலமும் நியமித்து" (தொல். பொ. 3, உரை).* 3. உறுதி செய்தல்; to consecrate, dedicate, devote. 4. ஓரிடத்திற் பல நெறி (விதி)கள் நிகழ் நிலையில் ஒன்று அல்லது சிலவே வரும் என்று வரையறுத்தல். (தொல். 87, சேனா.); (Gram.) to make a rule imperative when, along with other rules, it is merely optional. 5. பிறப்பித்தல் (சூடா.) to produce, originate, bring into being. 6. கட்டளையிடுதல்; (vaisn) to order, command. 7. வகைப்படுத்துதல். to classify. எவ்வாறு நியமிக்கப்படும் (கூர்மபு. பிரகிருதி.2);

*[Skt. niyama > த. நியமி-]*

**நியமித்தல்** *niyamittal-*பெ.(n.) பிறப்பித்தல்; causing to originate, bringing into being.

**நியமிதம்** *niyamidam,* பெ.(n); 1.அமர்த்தம் பெற்றது (வின்.);that which is prescribed, appointed, fixed, regulated, determined. 2. உறுதியானது (யாழ். அக); determination.

*[Skt. ni-yamita > த. நியமிதம்.]*

**நியர்ப்புதம்** *niyarppudam,* பெ.(n); பதினா யிரங்கோடி (பிங்.); a hundred thousand millions.

த.வ. பத்தாயிரம் குவளை

*[Skt. nyarbuda > த. நியர்ப்பதம்]*

**நியாக்கியம்** *niyākkiyam,* பெ.(n.); பொரி யரிசி. (யாழ். அக.); fried rice.

*[Skt. nyākya. > த. நியாக்கியம்]*

**நியாக்குரோதம்** *niyākkurodam,* பெ.(n.); நியக்குரோதம் பார்க்க;; see niyakkurodam. (சா.அக.).

*[Skt. nyākurrodam > த. நியாக்குரோதம்]*

**நியாசசுவரம்**[1] *niyāša-šuvaram,* பெ.(n.) பண் முடிவில் அமையும் இசைச் சுரம்; tonic at the conclusion of a piece.

*[Skt. nyāsat.(Mus.) > த. நியாசசுவரம்]*

**நியாசசுவரம்**[2] *niyāsa-suvaram* பெ.(n.) பண்ணைக் காட்டி முடித்தற்குரிய சுரம் (mus. of Ind. 39.); (mus.) proper final note of a rāga.

*[Skt. nyāsa+swara > த. நியாஸஸ்வரம்]*

**நியாசதி** *niyāsadi,* பெ.(n.) அனிச்சை; snake jasmine. (சா.அக.).

**நியாசம்**[1] *niyāšam,* பெ.(n.) 1. வைக்கை; putting down; placing; inserting; 2. கடவுளே புகலென்று அவரிடம் மனச் சுமையை வைத்தல். placing one's burden on God, as one's final refuge. *"கைவிடா நன்னியாசத் தருநியதி"* (இரகு. இரகுக. 18). 3. மந்திர எழுத்துகளைப் பலுக்கித் தேவதை களை உறுப்புகளில் வைக்கும் சடங்கு; assignment of the various parts of the body to different deities with appropriate mantras. *"நியாசமுந் தியானமுமாற்றி"* (காஞ்சிப்பு. சனற். 13). 4. ஈடுவைத்த பொருள்.(வின்) deposit, pledge, mortgage.

*[Skt. nyāsa. > த. நியாசம்]*

**நியாசம்**[2] *niyāšam,* பெ.(n.) வேம்பு (மலை.); margosa.

**நியாசம்**[3] *niyāšam,* பெ.(n.) 1.முணு முணுத்தல்; uttering words with a low voice and compressed lips - muttering. 2. துறவு; renouncement (சா.அக.).

**நியாசிசம்** *niyāšisam,* பெ.(n.) கருப்பு மரு; a painless circulor eruption of dark colour. (சா.அக.).

**நியாதம்**[1] *niyādam,* பெ.(n.) நியாசம்[1] பார்க்க; see niyasam[1]. "பண்ணி நியாதம் பரம சிவன்பாத முண்ணினைக." (சைவச. பொது. 328).

*[Skt. nyāsa. > த. நியாதம்]*

**நியாதம்**[2] *niyātam,* பெ.(n.) நியாசம்[2] (மூ.அ.) பார்க்க; see niyāšam[2].

*[Skt. nyasa > த. நியாதம்.]*

**நியாமகம்** *niyāmagam,* பெ.(n.) கட்டுப் படுத்துவது; that which binds or sanctions. *"நியாமகம் என்னையென்பீராயின்"* (சிவசம. 51).

*[Skt. niyāmaka. > த. நியாமகம்.]*

**நியாமகன்** *niyāmagan,* பெ.(n.); 1. இயக்கு பவன், ஆள்பவன் (நியமிப்பவன்); one who rules; director. *"உயிர்க்குயிராகி நியா மகனாய்"* (அஷ்டப். திருவரங்கத். மா. 4). 2. தேரோட்டி (யாழ். அக.); charioteer. 3. கப்பலைச் செலுத்துவோன் (யாழ். அக); sailor.

*[Skt. niyāmaka > த. நியாமகன்.]*

**நியாயக்கேடு** *niyāya-k-kēdu,* பெ.(n.) நியாயத்தப்பு பார்க்க; *seeniyāyattapu.*

*[Skt. nyāya > த. நியாயக்கேடு.]*

**நியாயங்களிலார்** *niyāyankalitor,* பெ.(n.) ஒருசார் கூட்டத்தைச் சேர்ந்தவர் (T.A.S. iv, 122.); members of an association.

*[Skt. nikāya > த. நியாயங்களிலார்.]*

**நியாயங்காட்டு-தல்** *niyāyan-kattu,* 5 செ.கு.வி. (v.i.) காரணங்கூறுதல்; to adduce argument, account for.

*[Skt. nikāya > த. நியாயம்+காட்டு-]*

**நியாயங்கேள்-தல்** *niyāyan-kēl,* 2 செ.கு.வி. (v.i.) வழக்கு உசாவுதல் (வின்.) to hear a complaint, try a case.

*[Skt. niyāya> த. நியாயம்+கேள்-]*

**நியாயசபை** *niyāya-šabai,* பெ.(n.) முறை மன்றம்; court.

*[Skt. niyāya > த. நியாயசபை.]*

**நியாயசாத்திரம்** *niyāyā-šattiram,* பெ.(n.) நியாயநூல், 1,2. பார்க்க; see *niyāyanūl,* 1,2.

*[Skt. niyāyašāstra > த. நியாயசாத்திரம்]*

**நியாயத்தப்பு** *niyāyā-t-tappu,* பெ.(n.) முறைகேடு (நீதிக்கேடு); unfairness, injustice.

*[Skt. niyāya> த. நியாயம்+தப்பு.]*

**நியாயத்தார்** *niyāyattār,* பெ.(n.) நடுவர், நீதிபதிகள் (T.A.S. iv, 122.); judges.

*[Skt. niyāya+> த. நியாயத்தார்]*

**நியாயத்தீர்ப்பு** *niyāya-t-tirppu,* பெ.(n.) வழக்கில் நடுவர் (நீதிபதி) கொடுக்குந் தீர்ப்பு (வின்.); judgement.

*[Skt. niyāya > த. நியாயம்+தீர்ப்பு.]*

**நியாயத்தீர்ப்புநாள்** *niyāya-t-tiruppu-nāḷ,* பெ.(n.) உலக முடிவில் இயேசுநாதர் தீர்ப்பு கொடுக்கும் நாள் (கிறித்); the day of judgement.

*[Skt. niyāaya > த. நியாயம்+தீர்ப்புநாள்]*

**நியாயதுரந்தரன்** *niyāya - turandaraṉ,* பெ.(n.) 1. வழக்குரைஞர்; Barrister, advocate, proctor, pleader, Lawyer. 2. நீதியுள்ளவன்; just person, one who maintains justice. யாழ். அக.).

**நியாயநிட்டூரம்** *niyāya-niṭṭūram,* பெ.(n.) முறைகேடு; injustice, unreasonableness.

*[Skt. nyāya > த. நியாயநிட்டூரம்]*

**நியாயநூல்** *niyāya-nūl,* பெ.(n.) 1.தருக்க நூல்.logic, dialecticals. நியாய நூலா ராய்ச்சி யென்க. (தொல்.பொ.514, உரை); 2. சட்ட நூல். (யாழ். அக.); code of laws. 3. ஒழுக்க நூல் (வின்.): ethical treatise.

*[Skt. nyāya > த. நியாயம்+நூல்.]*

**நியாயநெட்டூரம்** *niyāya-neṭṭuram,* பெ.(n.) நியாயநிட்டூரம் (யாழ். அக.) பார்க்க; see *niyāyanittūram.*

*[Skt. nyāya > த. நியாயநெட்டூரம்.]*

**நியாயப்பிரமாணம்** *niyāya-p-piramāṇam* பெ.(n.) முறைமைச்சட்டம்; law, divine or human.

*[Skt. nyāya > த. நியாயப்பிரமாணம்.]*

**நியாயப்பிரமாணி** *niyāya - p - piramāṇi* பெ.(n.) 1. ஒழுக்கமுள்ளவன்; upright man. 2. முறை தவறாது நடப்பவன் (வின்.); one who conforms to laws.

*[Skt. nyāya > த. நியாயப்பிரமாணி.]*

**நியாயப்பிரமாணிக்கன்** *niyāya-p-pira-māṇikkaṉ,* பெ.(n.) நியாயப்பிரமாணி பார்க்க; see *niyāya-pramāṇi.* (இ.வ.)

*[Skt. nyāya > த. நியாயப்பிரமாணிக்கன்.]*

**நியாயபத்திரம்** *niyāya-pattiram,* பெ.(n.) வழக்குத் தீர்ப்பு (I.nsc); judgement or decree.

*[Skt. nyāya+patrā > த. நியாயபத்திரம்.]*

**நியாயபரிபாலனம்** *niyāya-paripālanam,* பெ.(n.) அறநெறியாட்சி; administration of justice.

*[Skt.nyāya+paribalanā > த. நியாயபரிபாலனம்.]*

**நியாயபோதனை** *niyāya-pōdaṉai,* பெ.(n.) 1. நன்னெறியுணர்த்துகை; inculcation of natural virtues. 2. அறமொழிகள் (வின்.); precept.

*[Skt.nyāya+bothana > த. நியாயபோதனை.]*

**நியாயம்[1]** *niyāyam,* பெ.(n.) 1. முறை (நீதி); propriety, fairness, equity, justice, right. 2. வாய்மை (பிங்); truth, honesty. 3. நன்னனெறி; morality, natural virtues *"நியாயமத்தனைக்கு மோர் நிலய மாயினான்"* (கம்பரா. கிளை. 55). 4. சட்டம்; law, rule, precept. 5. காரணம்; cause, reason, ground of action. 6. தருக்கம் (வாக்குவாதம்). ( யாழ். அக.); argument, debate. 7. கௌதமர் மதம் பற்றிய தருக்கநூல். (phil.) the *niyāya* system of philosophy, founded by Gautama. *"நியாய வைசேஷிகங்களை"* (தக்கயாகப் 246 , உரை); 8. நியாயவை சேஷிகங்களாகிய தருக்கநூல்; *nayāya vaiśēṣika* systems. 9. ஒப்பு; resemblance. *"நீலக்கரு நிறமேக நியாயற்கு".* 10. உலக வியலாகவும் நூலியலாகவும் வழங்கும்

எடுத்துக்காட்டு நெறி; illustrative maxims. 11. போக்கு(வின்.) plea, excuse. 12. வழக்கு (யாழ். அக); usage. 13. கட்டுப்பாடு (வின்.); constitution.

*[த. நயன் > Skt. nyāya. > த. நியாயம்.]*

**நியாயம்[2]** *niyāyam* பெ.(n.) 1. இடம் (சது.); place. 2. ஒரு நோக்கத்துடன் அமைந்த கூட்டம்; collection, body, group or association of persons having the same duties or interests. *"அவ்வவர் நியாயங் களுக்குத் தக்கவரில் ... யோக்கியராய் இருப்பாரை ஆளிட்டு"* (S,I,I, ii 261).

**நியாயம்[3]** *niyāyam* பெ.(n.) 1. ஏரணம் (தருக்கம்); logical conclusion. 2. நையாயிகம் என்னும் மெய்யியல் (தத்துவம்); Nyaya philosophy one of the six schools of philosophy. 2.வழிபாடாகும் ஆன்மத்தின் தெய்வத் தன்மையையும்; மூலகாரணத்தையும், உலக நடப்பில் மாயையின் தொடர்பும் அதன் கோட் பாடுகளும், கடைசியாக அதினின்று விலகி இறைவனோடு ஒன்றுபடும் என்பதையும் உணர்த்தும் மெய்யியல் (தத்துவம்); the study of philosophy which teaches man the devine nature and origin of his immaterial with unreality of corporeal enjoyments of worldly forms and which separating him during life from terrestrial objects secures him after death a final emancipation from existense and reunion with the universal spirit. (சா. அக.)

**நியாயம்பேசு-தல்** *niyāyam - pēšu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. வழக்கை விளக்குதல் (விவரித்தல்); to discuss a lawsuit. 2. வழக்கில் தீர்ப்புக் கொடுத்தல்; to give judgment, as a friend between contending parties.

*[Skt. nikāya > த. நியாயம்+பேசு-.]*

**நியாயமலைவு** *niyāya-malaivu,* பெ.(n.) 1. ஏரண (தருக்க) நூல் கருத்துக்கு எதிரான கூற்று. (தண்டி. 120.); illogical statement.

*[Skt. niyāya > த. நியாயம்+மலைவு.]*

**நியாயமுத்தரி - த்தல்** 4 செ.கு.வி.(v.i.) *niyāyam-uttari,* 1. நியாயங்காட்டுதல்; to state arguments, give reasons. 2. எதிர் வழக்குச் சொல்லுதல்; to reply in agrument.

*[Skt. niyāya > த. நியாயமுத்தரி - த்தல்.]*

**நியாயமுரசு** *niyāya-muracu,* பெ.(n.) மும்முரசுகளுள் அரசன் முறை புரிவதற்கு அறிகுறியாக முழங்கும் முரசு. (கலித். 132, உரை)); drum proclaiming the adminis-tration of justice by a king, one of mummuracu.

*[Skt. niyāya > த. நியாயம்+முரசு.]*

**நியாயர்** *niyāyar,* பெ. (n.) ஏரண (தருக்க) நூல் வல்லோர். persons versed in *nyāya* philosophy.

*[Skt. niyāya > த. நியாயர்]*

**நியாயவாதி** *niyāya - vādi,* பெ. (n.) 1. வழக்கறிஞர், pleader, advocate, lawyer. 2. முறை தவறாது சொல்வோன் one who utters nothing but what is just, justice - loving person.

*[Skt. niyāya > த. நியாயவாதி]*

**நியாயவான்** *niyāyavāṉ* பெ. (n.) 1. நேர்மை யாளன் (நீதிமான்); just man. 2. நியாயவாதி பார்க்க; see Niyāyavāthi. 3. நியாயாதிபதி; judge.

*[Skt. nyāyavāṉ.> த. நியாயவான்]*

**நியாய விசாரணை** *niyāyavišāraṇai* பெ. (n.) வழக்கு உசாவல்; judicial trail, enquiry or, examination.

*[Skt. nyāya > த. நியாயவிசாரணை]*

**நியாயவிதாயகன்** *niyāyavidāyakaṉ,* பெ. (n.) சட்டம் உருவாக்குபவன் (நிருமானஞ் செய்வோன்); law - giver, legislator.

*[Skt. niyāya+vidhayak> த. நியாயவிதாயகன்]*

**நியாயவிரோதம்** *niyāya-virōdam,* பெ.(n.) முறைமைத்தவறு; violation of justice.

*[Skt. nyāya+virōdha > நியாயவிரோதம்]*

**நியாயத்தலம்** *niyāya-ttalam,* பெ.(n.) முறைமன்றம் உசாவல் செய்யுமிடம்; court of justice, tribunal,

*[Skt. nyāya+sthala > த. நியாயாத்தலம்]*

**நியாயாசனம்** *niyāyāšaṉam,* பெ. (n.) முறை (நீதி) வழங்குவோர் அமரும் அற (தரும) இருக்கை (வின்.); Judgement seat, tribunal.

*[Skt. nyāya+ašaṉa > த. நியாயாசனம்]*

**நியாயாசாரன்** *niyāyāšāraṉ,* பெ. (n.) ஒழுக்கமுள்ளோன் (யாழ். அக); a man of righteous conduct.

*[Skt. nyāya+sāraṉ+ > த. நியாயாசாரன்]*

**நியாயாதிபதி** *niyāyādipadi,* பெ.(n.) நடுவர், நீதிவழங்குபவன்; judge;

*[Skt. nyāya+tatipati > த. நியாயாதிபதி]*

**நியாளம்** *niyāḷam,* பெ. (n.) ஒரு வகைப் பாறை a kind of drum. "இடக்கை யுடுக்கை நன்னியாளம்" (திருவாலவா. 39.18);

*[Skt. nicālam > த. நியாளம்]*

**நியானம்** *niyāṉam,* பெ.(n.) 1. பொதுவான அறிவு; knowledge in general. 2. மெய்யறிவு (அ) மெய்யியல் அறிவு knowledge of a specific and religious kind derived from meditation and study of philosophy. 3. ஆண் அல்லது பெண்ணின் பெயர்; name of male or female especially among christians.

**நியுத்தம்** *niyuttam,* பெ.(n.) மற்போர் (யாழ். அக.) boxing.

*[Skt. niyuddha > த. நியுத்தம்]*

**நியுத்தன்** *niyuttaṉ,* பெ.(n.) 1. மனங்கவிந்தவன். (வின்.); one engrossed in any matter. 2. ஒரு குறிப்பிட்ட செயல் செய்தற்கு அமர்த்தப் பெற்றவன். (யாழ். அக.) ; one engaged for a specific purpose.

*[Skt. ni-yukta.> த. நியுத்தன்]*

**நியுதம்** *niyatam,* பெ.(n.) பத்து இலக்கம் (சுக்கிர நீதி, 106.); a million = 10,00,000.

*[த. நெய்தல் > **Skt.** ni-yuta.> த. நியுதம்]*

**நெய்தல்** என்பது பழந்தமிழில் (10,00,000) பத்திலக்கத்தைக் குறித்த எண்ணுப் பெயர். குவளை கோடியைக் குறித்த சொல். பத்து நெய்தல் கொண்டது ஒரு குவளை. **நெய்தல்** ஒரியா மொழியில் நியுத்த எனவும், வடமொழியில் நியுத எனவும் கடன் கொள்ளப்பட்டுள்ளது

**நியுப்பிசம்** *niyupisam,* பெ.(n.) 1. நோய்; disease. 2. பருமன் இல்லாத தன்மை, ஒல்லி; not stout but thin and slendor. 3. வீக்கமின்மை; a absence of swelling. (சா. அக).

**நியூனம்** *niyūṉam,* பெ.(n.) 1. குறைவு. defect, deficiency. "நியூனாதிகங்களுமிம்சையு மசுசியும்" (சி.சி.2,28,சிவாக்). 2. தோல்வித்தான வகை. (சி.சி. அளவை,14. நிரம்ப.); a weak position in disputation

*[Skt. nyūna.> த. நியூனம்]*

**நியோக்கியம்** *niyōkkiyam,* பெ.(n.) தகுதி. (யாழ். அக.); fitness.

*[Skt. niysōgya.> த. நியோக்கியம்]*

**நியோககுற்றம்** *niyōga-kuṟṟam,* பெ.(n.) ஏரண (தருக்க)த்தில் எதிரியின் தோல்வி அல்லது அறியாமைத்தன்மை; ignorance of opponent's weakness or defeat in disputation. "எதிரிதன் றோல்வித்தன மறியாமையிசைப்பரு நியோக குற்றந்தான்" (த.நி.போ.304);

*[Skt. niyōkam.> த. நியோக(ம்)+குற்றம்]*

அல்லது அறியாமைத்தன்மை; ignorance of opponent's weakness or defeat in disputation. "எதிரிதன் றோல்வித்தன மறியாமையிசைப்பரு நியோக குற்றந்தான்" (த.நி.போ.304);

*[Skt. niyōkam.> த. நியோக(ம்)+குற்றம்]*

**நியோகதர்மம்** *niyōka-tarmam,* பெ.(n.) ஆரிய மரபின் வண்ணம் மகப்பேறில்லாதவனுடைய மனையாள் மகப்பெறுதற்கு உறவினரு ளொருவனை (ஞாதியொருவனை) அமர்த்தும் முறை; the Aryan system of appointing a kinsman to raise up seed to a childless person by consorting with his wife (R.F).

*[Skt. niyōkam+dharma > த. நியோகதர்மம்]*

**நியோகம்** *niyōkkam,* பெ.(n.) 1. கட்டளை. (S.I.I.Vi, 13.); command, order, authority. 2. அமர்த்தப்பட்ட தொழில். (யாழ். அக.); appointed task, commission, charge. 3. உறுதி; (யாழ். அக.); certainty. 4. முயற்சி (யாழ். அக.); exertion. 5. நியோக தர்மம் பார்க்க; see niyogatarmam.

*[Skt. ni-yōga > த. நியோகம்]*

**நியோகி** *niyōgi,* பெ.(n.) பெரியோன்; sage, wise man. "போந்திடு நியோகியர்கள் வார்த்தையுசிந்தான் பொருந்தவே வாது வெல்வார்" (திருவேங். சத. 19).

*[Skt. niyōgin > த. நியோகி]*

**நியோகி[1]-த்தல்** *niyōgi,* 4 செ.குன்றாவி. (v.t.) கட்டளையிடுதல்; to command, order, direct.

*[Skt. ni-yōga. > த. நியோகி – த்தல்]*

**நியோகி[2]** *niyōkgi,* பெ. (n.) நியோகிப் பிராமணன் பார்க்க; see *iniyōki-p-pirāmaṇaṉ.* "பிரசண்ட நியோகிகளும்" (விறலிவிடு.)

*[Skt. Perh. niyōgin > த. நியோகீ ]*

**நியோகிப்பிராமணன்** *niyogi-p-pirāmaṇaṉ,* பெ. (n.) ஒரு தெலுங்குப் பார்ப்பன வகுப்பு; a class of secular Andhra Brahmins, as distinguished from Vaidika Brahmins.

*[Skt. niyōgin > த. நியோகிப்பிராமணன்]*

**நியோசனம்** *niyōšaṉam,* பெ. (n.) 1. கட்டளை; Order, Command. 2. இசைவு; fastening, joining.

*[Skt. niyōjana. > த. நியோசனம்]*

**நியோதுாற்றி** *niyōtūṟṟi* பெ. (n.) 1. கடம்பு; cadamba free. (சா. அக.)

**நிர்க்கததண்டனம்** *nirkkadatanḍaṉam,* பெ. (n.) தயாவிருத்தி பதினான்கனுள் தண்டனை யினின்று பிறனை விடுவிக்கை. (வின்.); releasing or saving one from punishment, one of 14 *tayāvirutti.*

*[Skt. nirgata-dandana.> த. நிர்க்கதண்டனம்]*

**நிர்க்கதி** *nirkkadi,* பெ. (n.) கதியின்மை; complete absence of refuge, utter helplessness.

த.வ. காப்பிலி

*[Skt. nir-gatidana. > த. நிர்க்கதி]*

**நிர்க்கந்தவாதி** *nirkkanda-vādi,* பெ. (n.) சைனரில் பிரிவினராகிய நிகண்டவாதி. (மணி/27.167, / மே அடிக்குறிப்பு); a jainasect.

*[Skt. ni-grantha. > த. நிர்க்கந்தவாதி]*

**நிர்க்கந்தன்** *nirkkandaṉ* பெ. (n.) அருகக் கடவுள்; Arhat.

*[Skt. ni-grantha > த. நிர்க்கந்தன்]*

**நிர்கதம்பம்** *nirkadambam,* பெ.(n.) நெஞ்சாங்குலையின் உட்புறத்து சவ்விற்குக் காணும் அழற்சி, இது ஊதைச்சூலை, மிகு காய்ச்சல் முதலிய நோய்களிற் காணும்; inflammation of the epithecial lining of the heart (endocardium) - Endocarditis. It is generally associated with acute rhemtism nad febrile diseases (சா.அக.).

**நிர்க்கிரந்தம்** *nirkkrandam,* பெ. (n.) 1. தங்கு தடையில்லாமை; free from all ties and

hindrances. 2. உலகத்தை வெறுத்து துறவறம் பூண்டு அம்மணமாய்த் திரியும் துறவி a saint who has withdrawn from the world, living as a hermit or religious mendicant and wandering about naked. (சா.அக.)

**நிர்க்குண்டி**[1] *nirkkuṇḍi,* பெ. (n.) நொச்சி (திவா.). a species of chaste tree.

*[Skt. nirgundi > த. நிர்க்குண்டி]*

**நிர்க்குண்டி**[2] *nirkkṇḍi* பெ. (n.) 1. வெண் ணொச்சி; white notchi. 2. தாமரைக் கிழங்கு; lotus root. 3. கருநொச்சி; black variety of five leaved chaste tree. (சா.அக.).

**நிர்க்குணசைவம்** *nirkkuṇaśaivam,* பெ. (n.) சைவம் பதினாறனுள் சிவனைக் குணமற்ற வனாக எண்ணி ஊழ்கம் செய்ய (தியானம்) வேண்டும் என்று கூறும் சமயம்; a śaiva sect which holds that śiva should be contemplated as the attributeless being, one of 16 saivam, i.v.); releasing or saving one from punishment, one of 14 *tayāvirutti,* i.v.

*[Skt. nir-guna > த. நிர்க்குணசைவம்]*

**நிர்க்குணம்** *nirkkuṇam,* பெ. (n.) 1. குண மில்லாமை. "சுத்த நிர்க்குணமான பர தெய்வமே" (தாயு. சுகவாரி. 1); being devoid of qualities, attributes, etc. 2. இழிகுண மில்லாமை; being devoid of evil qualities.

*[Skt. nir-guna > த. நிர்க்குணம்]*

**நிர்க்குணன்** *nirkkuṇaṉ,* பெ. (n.) 1. (குண மற்றவன்) கடவுள்; god, as without attributes. 2. குணமிகவுடையவன் (சி. போ. பா. 9, 2, பக். 195.); one who is beyond all attributes.

*[Skt. nir-guna > த. நிர்க்குணன்]*

**நிர்க்குணி** *nirkkuṇi* பெ. (n.) மணமகள் (பார்வதி) (கூர்மபு. திருக்கலியாண. 23.); *pārvati.* 2. குணமிகவுடையவன் (சி. போ. பா. 9, 2, பக். 195.); one who is beyond all attributes.

*[Skt. nir-guna > த. நிர்க்குணி]*

**நிர்க்கோத்திரம்** *nirkkōttiram,* பெ. (n.) கோத்திரமின்மை. (சிலப், 10, 188, உரை.) the state of belonging to no family.

*[Skt. nir-gōtra. > த. நிர்க்கோத்திரம்]*

**நிர்கூடம்** *nirgudam,* பெ.(n.) மரப் பொந்து; hallow of a tree.

**நிர்ச்சரம்** *nirccaram,* பெ.(n.)சுடுபாறையிற் கிடத்தல், தலைமயிர் பறித்தல், முதலிய சமண சமய நோன்பு (சி. போ. பா. அவைய. 12.); (Jaina.) a kind of penance which consists in lying down on a hot rock, uprooting the hair on the head, etc.

*[Skt. nir-jarā > த. நிர்ச்சரம்]*

**நிர்ச்சரை** *nirccarai,* பெ.(n.) நவபதார்த்தத்து ளொன்றும் சஞ்சித கர்மத்தை அழிக்க வல்லதுமான சமணதத்துவம். (சீவக, 2814, உரை.); (jaina) the principle which reduces or destroys accumulated karma, one of nava - patarttam.

*[Skt. nir-jarā > த. நிர்ச்சரை]*

**நிர்ச்சலம்**[1] *nirccalam,* பெ.(n.) 1. நீரின்மை. "நிர்ச்சலமான பிரதேசம்; being waterless. 2.நீருமுண்ணாப்பட்டினி; fasting without even drinking water, as in *ēkātaśi* (உ.வ).

*[Skt. nir-jala. > த. நீர்ச்சலம்]*

**நிர்ச்சலம்**[2] *nirccalam,* பெ.(n.)அசைவின்மை. state of rest or inactivity. *"நிர்ச்சல நிஸ்தரங்க போதப்பிராவக சமாதியிலும்"* (சி.சி. 8, 22, ஞானப்.).

*[Skt. niś-cala > த. நிர்ச்சலம்]*

**நிர்ச்சலதேசம்** *nirccaladasam,* பெ. (n.) நீர் வறட்சியுள்ள நாடு; dry or barren country. (சா.அக.)

**நிர்ச்சலயோகி** *nirccala-yōki,* பெ. (n.) கருமங்களை விடுத்துச் சலனமற்ற சமாதி நிலையிலுள்ள துறவி (சங். அக); an ascetic in deep meditation, forsaking all karma;

*[Skt. niš-cala+yōgin > த. நிர்ச்சலயோகி]*

**நிர்ச்சலை** *nirccalai,* பெ.(n.) அசைவமற்ற சிவை ஆற்றல் (சிவசக்தி); calm or undisturbed energy of *šivan.* "நிர்ச்சலைகளாயிருக்கின்ற ஈசான்னியாதி மூர்த்தியந்த பஞ்சசத்தி" (சி.சி. 1,47, ஞானப்.)

*[Skt. niš-cata. > த. நீர்ச்சலை]*

**நிர்ச்சீவனா – தல்** *nirccivanā-,* 6 செ.கு.வி. (v.i.) முற்றும் சத்தியற்றுப் போதல்; to become lifeless, utterly devoid of vitality or strength.

*[Skt. nir-jiva > த. நீர்ச்சீவனா – தல்]*

**நிர்ணயம்** *nirṇayam,* பெ.(n) நிருணயம் பார்க்க; see determination,

*[Skt. nir-naya. > த. நிர்ணயம்.]*

**நிர்ணயி – த்தல்** *nirṇayi-,* 4 செ. குன்றாவி (v.t.) முடிவுபடுத்துதல்; to determine, resolve.

*[Skt. nir-naya. > த. நிர்ணயி-,]*

**நிர்ணாயகம்** *nirnāyagam,* பெ. (n.) நிருணயிக்க உதவுவது; that which helps to determine; determinant. "இவ்வர்த்தத்திற்கு நிர்ணாயகம் இசையாயிற்று" (ஈடு, 6,1,6).

*[Skt. nirnāyaka. > த. நிர்ணாயகம்]*

**நிர்த்தகனம்** *nirtakanam,* பெ.(n.) 1. சேரான் கொட்டை; marking nut. 2. புதைத்தல்; burying, not burning (சா.அக.).

**நிர்த்தத்துவன்** *nirttattuvaṉ* பெ. (n.) (தத்துவாதீதன்) கடவுள் (சங்கற்ப. 3); god, as beyond tattuvam.

*[Skt. nistattva. > த. நிர்த்தத்துவன்]*

**நிர்த்தம்** *nirttam,* பெ. (n.) 1. நிருத்தம்[1] பார்க்க; see niruttam, "ஆனந்த நிர்த்தமிடு கருணாகரக்கடவுளே" (தாயு. கருணாகர.1) 2.வரிக்கூத்துவகை; a kind of masquerade dance. "தக்கபிடார் நிர்த்தந் தளிப்பாட்டு" (சிலப். 3, பக். 88, உரை)

*[Skt. nrtta. > த. நிர்த்தம்]*

**நிர்த்தமாராயன்** *nirttamārāyaṉ,* பெ. (n.) நட்டுவர் தலைவன்; dancing master. "மும்முடிச் சோழ நிர்த்தமாராயனுக்குப் பங்கு இரண்டும்" (S.1.1. ii. 274)

*[Skt. nrtta. > த. நிர்த்தமாராயன்]*

**நிர்த்தனம்** *nirttaṉam,* பெ. (n.) நிருத்தம்[1] (உ.வ) பார்க்க; see niruttam, (சா.அக)

**நிர்த்தனன்** *nirttaṉaṉ,* பெ.(n.) 1.சொத்துரிமை யற்றவன்; person disqualified to hold property, as a slave, an idiot (R.f). 2. எளியவன்; poor man.

*[Skt. nir-dhana. > த. நிர்த்தனன்]*

**நிர்த்தாட்சிணியம்** *nirttāṭciṇiyam,* பெ. (n.) இரக்கமின்மை; unkindness, merciless-ness, pitilessness, sternness.

*[Skt. nrir-dāksinya. > த. நிர்த்தாட்சிணியம்]*

**நிர்த்தாரணம்** *nirttāraṇam,* பெ. (n.) 1. நிலை யிடுகை; setting ascertainment, establishing.

*[Skt. nir-dhārana. > த. நிர்த்தாரணம்]*

**நிர்த்தித்தம்** *nirttittam,* பெ.(n.) கண்டங்கத்திரி என்னும் முட்செடி வகை; yellow berried night shade (சா. அக).

**நிர்த்துகம்** *nirttugam,* பெ.(n.) வடிநீர். (தைலவ. தைல.); decoction

*[Skt. niryūša. > த. நிர்த்துகம்]*

**நிர்த்துகம்** *nirttugam,* பெ. (n.) வடிநீர் (கசாயம்); decoction (சா.அக).

**நிர்த்தூள்** *nir-t-tūḷ,* பெ.(n.) சிறுதுகள்; atom."பொருப்பை நிர்த்தூளாக்கி" (சந்திர கலாமாலை, 15)

*[Prob. nis+dhūli > த. நிர்த்தூள்]*

**நிர்த்தூளி** *nirttūli*, பெ. (n.) முழுச்சேதம்; utter destruction"ஆசை நிகளத்தினை நிர்த்தூளி படவுதறி" நிர்த்தமிடு கருணாகரக் கடவுளே" (தாயு.மௌனகுரு.1).

*[Skt. nir-dhūli > த. நிர்த்தூளி]*

**நிர்த்தேசம்** *nirttēšam*, பெ, (n.) கட்டளை; order, command 2. குறித்துக் காட்டுகை painting out.. "வத்து நிர்த்தேசமென" (வேதா. சூ.8) 3. சூத்திர பீடத்தின் ஒரு பகுதி. (மணி மே.26.66 உரை); a section of *cūttirapitakam.*

*[Skt. nir-dēša. > த. நிர்த்தேசம்]*

**நிர்த்தேசி–த்தல்** *nirttēši*, 4 செ.குன்றாவி(v.t) குறித்துக்காட்டுதல்; to point out. rder, command. "நிர்த்தேசித்த வஸ்து" (வேதா. சூ.8, உரை).

*[Skt. nir-dēša. > த. நிர்த்தேசி–த்–தல்]*

**நிர்த்தேசியம்** *nirttēšiyam*, பெ. (n.) கட்டளை; order, command. 2. குறித்துக் காட்டுகை; pointing out - emphasised; point.

*[Skt. nirdēšya. > த. நிர்த்தேசியம்]*

**நிர்த்தொந்தம்** *nirttondam*, பெ. (n.) 1. பற்றின்மை; absence of connection or attachment. 2. தொந்ததுக்கமின்மை; indifference to the opposite pairs of feelings, as pleasure and pain; stoicison. "நிர்த்தொந்தமாய்க்குவிதலுடன் விரிதலற்று" (தாயு சின்மய.8).

*[Skt. nir-dvandva > த. நிர்த்தொந்தம்]*

**நிர்த்தோசம்** *nirttōsam*, பெ. (n.) குற்ற மின்மை; faultlessness, innocence.

*[Skt. nir-dōsa. > த. நிர்த்தோசம்]*

**நிர்நாசம்** *nirnācam*,பெ.(n.) 1.அழியாமை; indestructibility, imperishableness. 2. முழுச்சேதாரம்; utter destruction

*[Skt. nir-nāša. > த. நிர்நாசம்]*

**நிர்நாமம்** *nirnāmam*, பெ.(n.) பெயரின்மை (சிலப் 10, 188, உரை.); namelessness.

*[Skt. nir-nāma. > த. நிர்நாமம்]*

**நிர்நாமன்** *nirnāman* பெ. (n.) (பெயரற்றவர்) கடவுள் god, as nameless.

*[Skt. nir-nāma. > த. நிர்நாமன்]*

**நிர்நிமித்தம்** *nirinimittam*, பெ. (n.) காரண மின்மை; absence of cause or reason.

*[Skt. nir-nimitta. > த. நிர்நிமித்தம்]*

**நிர்நிமித்தியம்** *nirnimittiyam*, பெ. (n.) நிர்நிமித்தம். (வின்) பார்க்க; see nirnimittam.

**நிர்ப்பத்தியம்** *nirpattiyam*, பெ, (n); பத்தியமின்மை; no restriction in diet; non - diet (சா.அக.).

**நிர்பந்தம்** *nirbandam*, பெ,(n) 1. வலக்காரம், வல்லந்தம், வலுவந்தம்; restraint, compulsion. 2. துன்புறுத்துதல்; to affict.

*[Skt. nir-bandha. > த. நிர்பந்தம்]*

**நிர்பந்தி – த்தல்** *nirbandi*, 4 செ. குன்றாவி (v.t.) 1. கட்டாயப்படுத்துதல்; to force, compel. 2. துன்புறுத்துதல்; to afflict.

*[Skt. nirbandh. > த. நிர்வந்தி – த்தல்]*

**நிர்பாக்கியம்** *nirbākkiyam*, பெ. (n.) போகூழ்; unluckiness, misfortune.

*[Skt. nir-bhāgya > த. நிர்பாக்கியம்]*

**நிர்ப்பீசம்** *nirppīsam*, பெ.(n.) நிர்ப்பீசதீட்சை பார்க்க; see nirppicatītcai. "நிர்ப்பீசம் பீசமெனவிரண்டாய் நிகழும்" (சி. சி. 8,3).

*[Skt. nirbija. > த. நிர்ப்பீசம்]*

**நிர்ப்பீசதீட்சை** *nirppīšatītcai*, பெ. (n.) சமயானுட்டானங்கள் செய்ய முடியாதவர் களுக்குத் அவற்றைச் செய்வதற்கு மாற்றாகச் செய்யும் ஔத்திரி தீட்சைவகை. (சைவச. ஆசாரி. 62. உரை); *(šaiva)*a way of initiation in which the guru absolves his disciple from the performance or routine religious duties if he is not able to do them, a kind of *auttiri-tītcai*

*[Skt. nir-bija. > த. நிர்ப்பீசதீட்சை]*

**நிர்ப்பீசை** *nirppiical*, பெ.(n.) நிர்ப்பீச தீட்சை. (சங். அக) பார்க்க; see nirppišatițcai.

*[Skt. nirbija.> த. நிர்ப்பீசை]*

**நிர்ப்புதம்** *nirupputam*, பெ. (n.) நியர்ப்புதம். (வின்) பார்க்க see niyarppudam.

**நிர்மதி** *nirmati*, பெ. (n.) மனக்கவலையின்மை; tranquility, absence of anxiety.

*[Skt. nir-mati > த. நிர்மதி]*

**நிர்மலத்துவம்** *nirmalduvam*, பெ. (n.) தூய்மையாயிருத்தல்; the state of being pure. (சா.அக).

**நிர்மலதை** *nirmalatai*, பெ. (n.) மலமற்றிருக்குந் தன்மை. the state of being spotless or pure. "ஸமலநிர்மலதையினாலே" (சி.சி.2,1, சிவாக்.)

*[Skt. nirmala-tā. > த. நிர்மலதை]*

**நிர்மலம்**[1] *nirmalam*, பெ. (n.) அழுக்கின்மை; free from dirt, freedom from impurity. 2. தூய்மை; தெளிவு; pure. 3. வெந்தயச் செடி; horse shoe - fenugreek. (சா.அக.).

**நிர்மலம்**[2] *nirmalam*, பெ. (n.) 1. மாசின்மை; immaculateness, purity. "நிர்மலசகித நிஷ்ப்ரபஞ்சப் பொருள்" (தாயு. திருவருள்வி.3) 2. நிர்மதி (மதுரா)பார்க்க; see nirmadi.

*[Skt. nir-mala. > த. நிர்மலம்]*

**நிர்மலன்** *nirmaln*, பெ. (n.); மாசற்றவனான கடவுள்; the supreme being, as immaculate.

*[Skt. nir-mala. > த. நிர்மலன்]*

**நிர்மலிபாவனம்** *nirmalipāvanam*, பெ. (n.) தேற்றாங் கொட்டை; water clearing nut. (சா.அக.)

**நிர்மாணம்**[1] *nirmāṇam*, பெ. (n.) 1. இயற்றுகை; production, manufacture. 2. ஏற்பாடு (வின்); institution, ordiance. 3. கட்டமைப்பு; construction.

*[Skt. nir-māna. > த. நிர்மாணம்]*

**நிர்மாணம்**[2] *nirmāṇam*, பெ. (n.) நிர்வாணம், 3 (உ.வ) பார்க்க; see *nirvaṇam.*

**நிர்மாலியதரிசனம்** *nirmāliyadarišaṇam*, பெ. (n.) முந்தைய நாள் பூவொப்பனைகளைக் களைதற்குமுன் காலையிற் செய்யும் இறை வழிபாடு (நாஞ்சில்); morning worship of a deity before the removal of the decoration done on the previous day.

*[Skt. nirmālya+taricana> த. நிர்மாலிய தரிசனம்]*

**நிர்மாலியம்** *nirmāḷiyam*, பெ. (n.)நிர்மலம்; which see. (சா.அக.)

**நிர்மாலியம்** *nirmāḷiyam*, பெ. (n.) பூசித்துக் கழித்த பொருள்; the remains of an offering made to a deity. "அர்ச்சித்து வைத்த சிர புட்பமான நிர்மானிய புட்பம் எடுத்துப்போக வந்த" (தக்கயாகப் 51, உரை).

*[Skt. nirmālya > த. நிர்மாலியம்]*

**நிர்மாலினியம்** *nirmāḷiṇiyam*, பெ. (n.) கண்தூய்மை அல்லது துலக்கம்; clear eyes. (சா.அக)

**நிர்மானுசியம்** *nirmāṇusam*, பெ. (n.) மாந்த நடமாட்டமின்மை; state of being uninhabited or unfrequented by men.

*[Skt. nir-mālnusa. > த. நிர்மானுஷ்யம்]*

**நிர்மி – த்தல்** *nirmi-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. இயற்றுதல், அமைத்தல்; to produce by art, construct, form. 2. நிறுவுதல் (விதித்தல்) (வின்); to ordain, to constitute.

*[Skt. nirmā. > த. நிர்மாலியம்]*

**நிர்மிதம்** *nirmidam*, பெ. (n.) 1. உண்டாக்கப் பட்டது. that which is created. "ஈச்சர நிர்மிதமான ஏகாரமும்" (த.நி.போ. பக். 115). 2. படைக்கை; creation, construction, production. 3. புனைந்து கூறுகை (கற்பிதம்) (இ.வ); fabrication. 4. அமர்த்துகை (விதிக்கை) (வின்); destiny; appointment, allotment.

*[Skt. nir-mita. > த. நிர்மிதம்]*

**நிர்மூடன்** *nirmūḍaṉ,* பெ. (n.) முழுமூடன்; absolute fool, blockhead. "நீணி திதனைக் கண்டாணவமான நிர்மூடனை" (திருப்பு. 44).

*[Skt. nir-mūdh. > த. நிர்மூடன்]*

**நிர்மூடி** *nirmūḍi,* பெ. (n.) 1. மூடப்பெண்; stupid woman "வாழும் மனைக்கு வங்காய் வந்தாயே நிர்மூடி" (ஆதியூரவதானி. 9).

*[Skt. nir-mūḍha. > த. நிர்மூடி]*

**நிர்மூலம்** *nirmūlam,* பெ. (n.) 1. காரண மற்றது; (வின்) that which is baseless. 2. பாழாகை; extirpation, utter destruction.

*[Skt. nir-mūla. > த. நிர்மூலம்]*

**நிர்மூலி** *nirmūli,* பெ. (n.) ஒரு பூடு; agaia minutiflora. (சா.அக)

**நிர்யாணம்** *niryāṇam,* பெ. (n.) நிரியாணம் பார்க்க; see *niriyāṇam.* appointment, allotment.

*[Skt. nir yāṇa > த. நிர்யாணம்]*

**நிர்லோகம்** *nirlōgam,* பெ. (n.) வெள்ளைப் போளம் என்னும் கடைச்சரக்கு myrrh. (சா.அக.).

**நிர்வகணம்** *nirvakaṇam,* பெ. (n.) துய்த்தல் பார்க்க; see catastrophe of a drama.

*[Skt. nir-vahaṇa > த. நிர்வகணம்]*

**நிர்வகி-த்தல்** *nirvaki-,* 4 செ. குன்றாவி. (v.t); 1. ஆளுதல், காரியம் நடப்பித்தல்; to manage, carry on one's affairs successfully; to maintain, perform, fulful. "எப்படி நிர்வகிப்பேன்" (இராமநா. அயோத். 10). 2. பொறுத்தல் (வின்); to bear, endure, sustain.உறுதிப்படுத்துதல் (வின்); to make certain. *cūttirapitakaam.*

*[Skt. nirvah. > த. நிர்வகி-த்தல்]*

**நிர்வசனீயம்** *nirvacaṉiyam,* பெ. (n.) நிர்வசனம்[1], பார்க்க; see *nirvaśanam.*

*[Skt. nir-vaca-nīya > த. நிர்வசணீயம்]*

**நிர்வபனம்** *nirvapaṉam,* பெ. (n.) சமனப் படுத்தல்; soothing. (சா.அக).

**நிர்வமிசியம்** *nirvamiśiyam,* பெ. (n.) முதுகுத் தண்டின்மை; absence of spine, absence of back bone or verebral column; having a body consisting of single cavity enclosing all their vital organs as sponges, corals, startish, worm, centipede, spider, insect etc., It is opposed to வமிசியம். (சா.அக).

**நிர்வாகம்** *nirvāgam,* பெ. (n.) 1. ஆளுவம்; administration. 2. புணர்ச்சியில் ஏற்படும் நீண்ட நேர இன்பம்; prolonged intercourse (சா. அக.).

த.வ. ஆளுவம்

**நிர்வாகம் பண்ணு-தல்** *nirvāgam-paṉ-ṉu-,* 5 செ. குன்றாவி (v.t.) 1. மேலாண்மை செய்தல் (வின்); to economise. 2. நிர்வாகி 1,2,3. பார்க்க; see nirvagi. 3. முடிவு செய்தல் (வின்); to acquit one self creditably. 4. மெச்சும்படி யொன்றைச் செய்து காட்டுதல்; to settle, conclude.

*[Skt. nir-vāha. > த. நிர்வாகம்பண்ணு – தல்]*

**நிர்வாகமா-தல்** *nirvāgam-ā-,* 6 செ.கு.வி. (v.i.) 1.நேர்மையாய் நடத்தப்படுதல். (வின்); to be managed properly. 2. இளம் பெண்ணிற்கு முறைப்படி திருமணம் செய் வித்தல்; to be married regularly, as a girl. "குமாரி நிர்வாகமானதா?" (இ.வ.).

*[Skt. nir-vāha. > த. நிர்வாகமா –,]*

**நிர்வாகவிலக்கை** *nirvāga-v-ilakkai,* பெ. (n.) ஆளுவப் பணிக்காக (நிருவாகத்திற்கு) தரப்படும் சம்பளம். (S.I.I.V, 504.); fee for management.

*[Skt. nir vāgam. > த. நிர்வாகவிலக்கை]*

**நிர்வாகன்** *nirvāgaṉ,* பெ. (n.) நிர்வாகி, பார்க்க; see *nirvāki.* "வசனை நிர்வாக ரென்றபேரும்" (தாயு. பரிபூ.)

*[Skt. nir vāhaka. > த. நிர்வாகன்]*

**நிர்வாகி** *nirvāgi,* பெ. (n.) 1. திறமைசாலி; person of ability. 2. வாய்மையானவன் (வின்); one faithful to his world; honest man. 3. மேலாளன் (வின்); manager. 4. பொறுப் பாளி; one who is responsible.

த.வ. ஆளுவன், ஆளுவர்

**நிர்வமிசம்** *nirvamišam,* பெ. (n.) கொடி வழியின்மை; being heirless.

த.வ. பூண்டறுதல்

*[Skt. nir-vamša. > த. நிர்வமிசம்]*

**நிர்வர்த்தியம்** *nirvarttiyam,* பெ. (n.) மூவகைச் செயப்படு பொருள்களுள் ஒன்றான இயற்றப்படுவது; (Gram) that which is newly formed or made, one of three kinds of *ceyappaṭu* porul.

*[Skt. nir-vartya. > த. நிர்வர்த்தியம்]*

**நிர்வாக சபை** *nirvāgasabai,* பெ. (n.) செயல்களைச் செய்துமுடிக்கும் குழு. (I.M.P. ii, 995.); executive or managing committee.

த.வ. செயற்குழு

*[Skt. nir vāha. > த. நிர்வாகசபை]*

**நிர்வாகப்படு-தல்** *nirvāga-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.); நிலைப்படுதல்; to become settled, established. "அவன் குடும்பம் நிர்வாகப்பட்டது". (இ.வ)

*[Skt. nir-vāha. > த. நிர்வாகப்படு-,]*

**நிர்வாகம்** *nirvāgam,* பெ. (n.) 1. நடப்பிக்கை; managing, maintaining, supporting. 2. பொறுப்பு. (வின்); burden, care, responsibility. 3. பேணுதல், பராமரிப்பு. (வின்); husbandry; economy. 4. மேற்பார்வை; supervision, management. 5. பொறுக்கை (வின்) endurance,tolerance. 6. பொருள் கொள்ளுமுறை; method of interpretation. "இது பட்டர் நிர்வாகம்" (ஈடு) 7. முடிவு (வின்); settlement, establishment,conclusion. 8. உறுதி (வின்) certainty, assurance. 9. நிலைமை (வின்); condition, state, circumstances.

*[Skt. nir-vāha. > த. நிர்வாகம்]*

**நிர்வாசம்** *nirvāšam,* பெ. (n.) குடியற்றது. (வின்); that which is uninhabited.

*[Skt. nir vāsa. > த. நிர்வாசம்]*

**நிர்வாணதீட்சை** *nirvāṇatiṭcai,* பெ. (n.) தீட்சையில் மூன்றாவதும் செய்து கொண்ட வரின் முன் செய்த வினைகளைப் போக்க வல்லதுமான தீட்சை. (சைவச. ஆசாரி. 20, உரை.); *(šaiva)* third or last state in initiation which enables the discilpe to free himself from the bonds of existence and attain emanacipation, one of three *tiṭcai.*

*[Skt. nir vāṇa > த. நிர்வாண தீட்சை]*

**நிர்வாணம்** *nirvāṇam,* பெ. (n.) 1. சைன பௌத்தர்களின் முத்தி நிலை. (சூடா.) (Buddh. Jaina.) absolute extinction or annihilation of all desires and passions and attainment of perfect beatitude; nirvana. 2. வீடுபேற்றின்பம் highest bliss or beatitude "நித்தமிப் படி செய்தக்கானிர் வாணம் பெறுவாய்" (கைவல். தத். 92) 3. அம்மணம். (உ.வ); nakedness, nudity.

*[Skt. nir vāṇa > த. நிர்வாணம்]*

**நிர்வாணமார்க்கம்** *nirvāṇamārkkam,* பெ. (n.) புத்த சைன மதங்கள்; buddhism or Jainism. "வேதமார்க்க முதலாகிய மகா மார்க்கங்களைத் தவிர்ந்து நிர்வாண மார்க்கமாகிய மிக்க குற்றமேறின . . . அமணர்" (தக்கயாகப். 7, உரை).

*[Skt. nir vāṇa + த. நிர்வாண மார்க்கம்]*

**நிர்வாணி**[1] *nirvāṇi,* பெ. (n.) தான் நிற்குந் திக்கை நோக்கிப் பயணஞ் செய்வதற்காகாத படி கிழமைதோறும் இடம்மாறி நிற்குந் தேவதை. (பஞ்.); a deity in a particular

direction each day of the week, when it is inauspicious to start on a journey in that direction.

[*Skt. nir vāṇi > த. நிர்வாணி*]

**நிர்வாணி²** *nirvāṇi,* பெ. (n.) 1. உடையில்லாதவன்; naked person. 2. அருகன்; arhat.

[*Skt. nir vāṇin > த. நிர்வாணி*]

**நிர்விக்கினம்** *nirvikkiṉam,* பெ. (n.) இடையூறின்மை; absence of obstruction or impediment.

[*Skt. nir vighna. > த. நிர்விக்கினம்*]

**நிர்விகற்பக்காட்சி** *nirvigaṟpa-k-kāṭci,* பெ. (n.) பொருளின் உண்மை மாத்திரம் உணரும் உணர்வு (சி.சி. அளவை, 3. மறை.); (log.) indefinite knowledge in which only the bare existence of a thing is apprehended.

[*Skt. nir vikalpa > த. நிர்விகற்பக் காட்சி*]

**நிர்விகற்பசமாதி** *nirvigaṟpaśamādi,* பெ. (n.) தான்வேறு கடவுள்வேறென்ற வேறுபாட்டு உணர்வற்ற ஓக (யோக) நிலை. (சி.சி.10, 4,ஞானப்.); *(yōga.)* highest state of concentration, in which the soul loses all conciousness of its being different from the universal soul.

[*Skt. nir vikalpa > த. நிர்விகற்பம்+ சமாதி*]

**நிர்விகற்பம்** *nirvigaṟpam,* பெ. (n.) 1. வேறுபாடின்மை; absence of differentiation or change. 2. ஐயமின்மை; absence of doubt.

[*Skt. nir-vikalpa. > த. நிர்விகற்பம்*]

**நிர்விகாரம்** *nirvigāram,* பெ. (n.) 1. விகாரமின்மை; unchangeableness,immutability. 2. நிர்விகாரி பார்க்க; see *nirvigāri* *"சுத்தமான நிர்விகாரத்தை" (தாயு. திருவருள்வி.3.).*

[*Skt. nir vikāra. > த. நிர்விகாரம்*]

**நிர்விகாரி** *nirvikāri,* பெ.(n.) கடவுள்; the supreme being, as immutable.

[*Skt. nirvikārin > த. நிர்விகாரி.*]

**நிர்விசாரம்** *nirviśāram,* பெ.(n.) 1. கவலையின்மை; carelessness, recklessness. 2. துக்கமின்மை; tranquillity, freedom from anxiety.

[*Skt. nirvicāra > த. நிர்விசாரம்.*]

**நிர்வியாசம்** *nirviyāsam,* பெ.(n.)காரணமாகச் சொல்லக்கூடியது யாதுமில் லாதது; that which has no apparent reason or excuse.

[*Skt. nir-vyāja > த. நிர்வியாசம்.*]

**நிர்விவாதபோகம்** *nirvivādabōgam,* பெ.(n.) வில்லங்கமற்ற துய்ப்பு உரிமை (அனுபவ பாத்தியம்); undisturbed or undisputed possession as the basis of, or as confering a title to, property (R.F.).

[*Skt. nirvivāda+bhōga > த. நிர்விவாத போகம்*]

**நிர்விவாதம்** *nirvivātam,* பெ.(n.) எதிராடலுக்கு இடமில்லாதது; that which is undisputed or indisputable.

[*Skt. nir-vivāda > த. நிர்விவாதம்.*]

**நிர்விசம்** *nir-visam,* பெ.(n.) 1. நஞ்சற்றது; that which is poisonless or innocuous. 2. பூடுவகை (வின்.); a plant, curcuma zedoaria. 3. கத்தூரி மஞ்சள்; zedoary. 4. அழிப்பன், கொடியவன் (துன்மார்க்கன்) (வின்.); a wicked person.

[*Skt. nir-visā > த. நிர்விசம்.*]

**நிர்விடம்** *nirviḍam,* பெ.(n.) நஞ்சை நீக்கும் மருந்து; antidote for poison. *"நிர்விடமு விடமுமொருமுதலாய் நின்றும்" (சிவநெறிப். 65).*

[*Skt. nir-visa > த. நிர்விடம்.*]

**நிர்விடயம்** *nirviḍayam,* பெ.(n.) இல்பொருள்; that which is non-existent. *"பிரயத்தின பூர்வகமாய் நிர்விடயம் பண்ணவேண்டும்" (வேதாந்தசா.42).*

[*Skt. nir-visaya > த. நிர்விடயம்.*]

**நிர்விசயம்** *nirvišayam,* பெ.(n.) புலனறிவு கடந்தது; that which is beyond sense - perception. *"நிர்விஷய சுத்தமான நிர்விகாரத்தை" (தாயு.திருவருள்வி.3).*

*[Skt. nir-visaya > த. நிர்விஷயம்.]*

**நிர்விசக்கிழங்கு** *nirviša-k-kilangu,* பெ.(n.) சதாவேரிக் கிழங்கு; water root (சா.அக.).

*[Skt. nirvisha > த. நிர்விசம்+ கிழங்கு.]*

**நிர்விசம்** *nirvišam,* பெ.(n.) 1. நஞ்சில் லாதது; non-poisonous. 2. நஞ்சில்லாத பாம்பு; non-venomous snake. 3. மான்மணத்தி மஞ்சள்; round zodoary. 4. நஞ்சற்ற ஒருவகைக் கிழங்கு; non-poisonous aconite root (சா.அக.).

*[Skt. nirvishaya> த. நிர்விசம்.]*

**நிர்விசம்சுத்தி** *nirvišam-sutti,* பெ.(n.) நிருவிடம் (நிர்விஷம்) என்னும் கிழங்கைத் துண்டு துண்டாக நறுக்கி எருமைச் சாணியும், எருமை மூத்திரமும் கலந்து அதிலிட்டு எரித்துக் கழுவி உலர்த்தி யெடுப்பது ஒருவகைத் தூய்மை முறை; cleaning process of non poisonous aconite root. In this the root drug is sliced and soaked in buffalo dung and urine mixture and boiled. The product is then taken out, washed and dried (சா.அக.).

**நிர்விவரம்** *nirvivaram,* பெ.(n.) பெண்ணின் முலைகள் நெருங்கவிருத்தல்; contiguousness as of female breasts (சா.அக.).

**நிர்வீரியம்** *nirviriyam,* பெ.(n.) 1. ஆண் தன்மையில்லாமை; impotency. 2. சோர்வு; exhaustion (சா.அக.).

*[நீர் + வீரியம்.]*

**நிரக்கம்** *nirakkam,* பெ.(n.) சுட்டறிவின்மை; absence of consciousness or sense-perception, as in ecstasy. *"நிரக்கம் பெருகியிரக்க மலிவுற்ற" (கோயிற்பு.நட.46).*

*[Skt. nir-aksa > த. நிரக்கம்.]*

**நிரக்கரகுக்கி** *nirakkara-kukki,* பெ.(n.) **நிரட்சரகுட்சி** பார்க்க; see *niratca-kutci. "பிறரெலா நிந்தை செய்யு நிரக்கர குக்கியான்" (குற்றா.தல.மந்தமா.92).*

*[Skt.niraksara+kuksi > த. நிரக்கரகுக்கி.]*

**நிரக்கு** *nirakku,* பெ.(n.) 1. அகவிலை (C.G.); price, rate, tariff, especially as established by authority, price-current. 2. நேர்மை; correctness, precision. *"அளவு நிரக்கா யிருந்தது" (உ.வ.).*

த.வ. நறுக்கு

*[U. nirkh > த. நிரக்கு.]*

**நிரக்குநாமா** *nirakku-nāmā,* பெ.(n.) நடப்பு விலைப்பட்டி; current price or market rate.

*[U. nirkh+nāmā > த. நிரக்குநாமா.]*

**நிரகங்காரம்** *niragankāram,* பெ.(n.) செருக்கின்மை; absence of egotism or pride, humility.

*[Skt. nir-ahakāra > த. நிரங்காரம்.]*

**நிரகங்கிருதி** *niragangirudi,* பெ.(n.) புற விவகாரம் (வேதா.சூ.148, உரை); (Phil.) objective activity.

*[Skt. nirahan-krti > த. நிரகங்கிருதி.]*

**நிரகுள்ளி** *niragulli,* பெ.(n.) நொச்சி; five leaved chaste tree (சா.அக.).

**நிரங்கிருதி** *nirangirudi,* பெ.(n.) **நிரகங்கிருதி** பார்க்க; see *niragankiruti. "அகங்கிருதி நிரங்கிருதி யுறாமல்" (வேதா.சூ.148).*

*[Skt. nirahan-krti > த. நிரங்கிருதி.]*

**நிரங்குசம்** *nirangušam,* பெ.(n.) கட்டுப் படாமை (வின்.); state of being self-willed or uncontrollable.

*[Skt. nir-ankuša > த. நிரங்குசம்.]*

**நிரங்குசன்** *nirangusan,* பெ.(n.) கட்டுப் படாதவன் (யாழ்.அக.); uncontrollable person, self-willed person.

*[Skt. nir-ankuša > த. நிரங்குசன்.]*

**நிரசசாத்திரம்** *nirasa-sāttiram,* பெ.(n.) கனிமங்களை (தாதுவை)ப் பற்றிக் கூறும் நூல்; the science which treats of the properties of mineral substances and their classifications (சா.அக.).

**நிரசநூல்** *nirasa-nūl,* பெ.(n.) **நிரசசாத்திரம்** பார்க்க; see *nirasa-sāttiram* (சா.அக.).

**நிரசம்** *nirasam,* பெ.(n.) 1. சாரமின்மை (யாழ்.அக.); lack of juice. 2. சுவையின்மை; tastelessness.

*[Skt. ni-rasa > த. நிரசம்.]*

**நிரசவர்க்கம்** *nirasavarkkam,* பெ.(n.) தாது வருக்கம்; mineral kingdom (சா.அக.).

*[Skt. ni-rasa+varkka > த. நிரசவர்க்கம்.]*

**நிரசவசுது** *nirasa-vasutu,* பெ.(n.) 1. சுவையற்ற பொருள் (யாழ்.அக.); tasteless things. 2. இரும்பு முதலிய கனிப்பொருள் (வின்.); mineral substance.

*[Skt. nī-rasa > த. நிரசவஸ்து.]*

**நிரசவுப்பு** *nirasavuppu,* பெ.(n.) கனிம (தாது)வுப்பு; mineral salt (சா.அக.).

*[நிரசம் + உப்பு.]*

**நிரசனம்**[1] *nirasanam,* பெ.(n.) 1. அழிக்கை (யாழ்.அக.); destruction. 2. எதிரிடை; opposition. 3. தள்ளுகை; rejection. 4. கக்கல்; vomiting.

*[Skt. nir-asana > த. நிரசனம்.]*

**நிரசனம்**[2] *nirasanam,* பெ.(n.) பட்டினி; fasting.

*[Skt. nir-aśana > த. நிரசனம்.]*

**நிரசி-த்தல்** *nir-asi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. அழித்தல்; to destroy. *"பாண்டவரையும் நிரஸிக்கப் பிராப்தமாயிருக்க" (ஸ்ரீவசன.21).* 2. தோல்வியுறச் செய்தல்; to defeat, as in an argument.

*[Skt. nir-as-, > த. நிரசி-த்தல்]*

**நிரஞ்சத்திமூலி** *nirañjatti-mūli,* பெ.(n.) நிலத் துளசி; ground basil (சா.அக.).

**நிரஞ்சனம்**[1] *nirañjanam,* பெ.(n.) 1. குற்றமில்லாதது; that which is spotless, pure. *"நிரஞ்சன நிராமயித்தை" (தாயு. திருவருள்வி. 3).* 2. வெளி (பிங்.); open space. 3. நிறைவு (பிங்.); fulness. 4. வீடுபேறு (பிங்.); final bliss. 5. இரசகருப்பூரம் (சங்.அக.); calomel.

*[Skt. nir-añjana > த. நிரஞ்சனம்.]*

**நிரஞ்சனம்**[2] *nirañjanam,* பெ.(n.) 1. அறிவுக் கண்; eye of wisdom. 2. உணவு கொள்ளாமை; abstaining from food (சா.அக.).

**நிரஞ்சனன்** *nirañcanan,* பெ.(n.) 1. அழுக்கற்ற தூய வடிவினனான கடவுள்; the supreme being, as immaculate. *"நிரஞ்சன நிருத்தானந்த" (திருவிளை. தீர்த்தவி.7).* 2. அருகன் (சூடா.); Arhat. 3. சிவன் (நாமதீப.16); Śiva.

*[Skt. nir-añjana > த. நிரஞ்சனன்.]*

**நிரஞ்சனி** *nirañjani,* பெ.(n.) பார்வதி (யாழ்.அக.); Pārvatī.

*[Skt. rnir-añjana > த. நிரஞ்சனி.]*

**நிரட்டிகா** *niraṭṭikā,* பெ.(n.) கண்டங்கத்தரி; yellow berried night shade (சா.அக.).

**நிரட்சதேசம்** *niraṭcadēšam,* பெ.(n.) 1. வெப்ப நாடு (யாழ்.அக.); equatorial region. 2. இராப்பகல் நாழிகை சரியாயுள்ள நாடு; region where days and nights are of equal duration.

*[Skt. niraksa- > த. நிரட்ச+தேசம்.]*

**நிரட்சம்** *niraṭcam,* பெ.(n.) நிலநடுக்கோடு (பூமத்திய ரேகை) (வின்.); terrestrial equator.

*[Skt. niraksa > த. நிரட்சம்.]*

**நிரட்சரகுட்சி** *niraṭcara-kuṭci,* பெ.(n.) எழுத்தறிவற்றவன்; illiterate person.

*[Skt.nirak-sara+kuksi> த. நிரட்சரகுட்சி.]*

**நிரட்சரேகை** *niratca-rēgai,* பெ.(n.) **நிரட்சம்** (வின்.) பார்க்க; see *niratcam.*

*[Skt. niraksa > த. நிரட்சரேகை.]*

**நிரத்தகம்** *nirattakam,* பெ.(n.) பயனின்மை (யாழ்.அக.); fruitlessness, futility.

*[Skt. nir-arthaka > த. நிரத்தகம்.]*

**நிரத்திமாலி** *nirattimāli,* பெ.(n.) சிவபிரான் (யாழ்.அக.); *Śiva.*

*[Skt. niratimālin > த. நிரத்திமாலி.]*

**நிரத்தியயம்** *nirattiyayam,* பெ.(n.) குற்றமின்மை (யாழ்.அக.); faultlessness.

*[Skt. nir-atya-ya > த. நிரத்தியயம்.]*

**நிரத்திரியம்** *nirattiriyam,* பெ.(n.) 1. பேடித்தனம்; impotency. 2. ஆண்மை இல்லாமை; destitude of manly power (சா.அக.).

**நிரதம்** *niradam,* பெ.(n.) எப்பொழுதும்; ever, always. *"நிரதங் கொடுத்திளைத்த தாதா" (தனிப்பா.i, 92, 7).*

*[Skt. nirantara > த. நிரதம்.]*

**நிரதன்** *niradaṉ,* பெ.(n.) மிக்க பற்றுடையவன்; a man of excessive attachment. *"தூய நிரதராயினர் சிலர்" (பிரபோதசந்.7, 37).*

*[Skt. nirata > த. நிரதன்.]*

**நிரதி** *niradi,* பெ.(n.) பற்று (யாழ்.அக.); attachment, connection.

*[Skt. nirati > த. நிரதி.]*

**நிரதிகரணதீட்சை** *niradikaraṇa-tītcai,* பெ.(n.) சைவதீக்கை வகை; (Saiva) a way of initiation. *"சத்திசங்கற்ப மாத்திரமாயிருக்கின்ற நிதிகரண தீக்ஷையினாலே" (சி.சி.பாயி.3, ஞானப்.).*

*[Skt. niradhikaraṇa+ > த. நிரதிகரண தீக்ஷை]*

**நிரதிகாரதீக்கை** *niradikāra-tikkai,* பெ.(n.) **நிர்ப்பீசதீட்சை** பார்க்க (சைவச.ஆசாரி.62, உரை); (Saiva.) see *nirppīśatītcai.*

*[Skt.niradhikāra+> த. நிரதிகார தீக்கை.]*

**நிரதிகாரன்** *niradikāraṉ,* பெ.(n.) ஒன்றற்குரிய அதிகாரமற்றவன்; incompetent or unqualified person; an unauthorised person.

*[Skt. niradhi-kāra > த. நிரதிகாரன்.]*

**நிரதிகாரி** *niradikāri,* பெ.(n.) **நிரதிகாரன்** பார்க்க; see *niratikāraṉ.*

**நிரதிகாரை** *niradikārai,* பெ.(n.) **நிரதிகாரதீக்கை** பார்க்க; see *niratikāra-tikkai.* *"தானுமொழி னிரதி காரை யெனநின்று" (சி.சி.8, 4).*

*[Skt. nir-adhikārā > த. நிரதிகாரை.]*

**நிரதிசயம்** *niratiśayam,* பெ.(n.) உயர்வற உயர்ந்த நிலைமை (இலக்.அக.); the state of being unsurpassed.

*[Skt. nir-atiśaya > த. நிரதிசயம்.]*

**நிரதிசயவின்பம்** *niradicaya-v-iṉpam,* பெ.(n.) (தன்னின் மேம்பட்ட இன்பமில்லாதது) வீடுபேறு; salvation, as unsurpassed bliss. *"நிரதிசயவின்பத்துக்குரிய நீ... இன்னையாதல் தகாது" (குறள், 1103, உரை).*

*[Skt. nir-atiśaya > த. நிரதிசயவின்பம்.]*

**நிரந்தம்**[1] *nirandam,* பெ.(n.) முடிவற்றது; that which is endless.

த.வ. நிலைப்பு

*[Skt. nir-anta > த. நிரந்தம்.]*

**நிரந்தம்**[2] *nirantam,* பெ.(n.) 1. **நிரந்தரம், 5** பார்க்க; see *nirantaram.* *"அன்னிரந்த வினங்களங்க ணடைந் திராமனை" (சேதுபு. கவிதீர்.4) (நாமதீப.225).* 2. நெருக்கிடை (வின்.); being closely pressed, as by a pursuing enemy.

*[Skt. nir-antara > த. நிரந்தரம்.]*

**நிரந்தரசுரம்** *nirantara-śuram,* பெ.(n.) விடாக்காய்ச்சல் (M.L.); unintermittent fever.

*[Skt. nir-antara > த. நிரந்தரசுரம்.]*

**நிரந்தரம்** *nirantaram,* பெ.(n.) 1. இடைவிடாமை; continuity. *"நின்றன் வார்கழற் கன்பெனக்கு நிரந்தரமா யருளாய்" (திருவாச. 5, 6).* 2. முடிவற்று எப்போதுமிருக்கை; eternity, endlessness. 3. நெருக்கம்; closeness, nearness. *"நிரந்தரந் தோன்றி நின்றார்" (கம்பரா.இந்திரசித்.57).* 4. அழிவு; ruin. *"தக்கன்றன் பெருவேள்வி நிரந்தரஞ் செய்த நிட்கண்டகனை" (தேவா.1049, 9).* 5. குரங்கு (திவா.); monkey. 6. சராசரி; average. *"நிரந்தரம் தேங்காயொன்றுக்கு முக்காலணா தருகிறேன்" (நாஞ்சில்.).*

*[Skt. nir-antara > த. நிரந்தரம்.]*

**நிரந்தரன்** *nirandaran,* பெ.(n.) 1. எப்போதுமுள்ளவனான கடவுள் (இலக்.அக.); the supreme being, as eternal. 2. சிவன் (நாமதீப.16); *Śiva*.

*[Skt. nir-antara > த. நிரந்தரன்.]*

**நிரந்தரி**[1] *nirantari,* பெ.(n.) மலைமகள் (யாழ்.அக.); *Pārvatī.*

*[Skt. nir-antara > த. நிரந்தரி.]*

**நிரந்தரி**[2]**-த்தல்** *nirandari-,* 11 செ.கு.வி.(v.i.) எப்போதுமிருத்தல்; to live or exist for ever. *"எருமைகணிரந்தரித்தன" (விநாயகபு. திருநாட்.76).*

*[Skt. nirantara > த. நிரந்தரி-.]*

**நிரநுயோச்சியாநுயோகம்** *niranuyōcciyā-nuyōgam,* பெ.(n.) தோல்வித்தானத்துளொன்று (செந்.iii, பக்.13); (Log.) a fallacy in argument.

*[Skt. nir-anu-yōjya > த. நிரநுயோச்சியாநுயோகம்]*

**நிரப்பலா** *nirappalā,* பெ.(n.) ஆசினிப்பாலா; the bread fruit tree (சா.அக.).

**நிரபம்** *nirabam,* பெ.(n.) 1. நீரற்றது; saplessness. 2. சாறற்றது; devoid of juice (சா.அக.).

**நிரபராதி** *niraparāti,* பெ.(n.) குற்றமற்றவன் (மணிமே.26, 28, உரை); innocent, guiltness person.

*[Skt. nir-aparādhin > த. நிரபராதி.]*

**நிரபி** *nirabi,* பெ.(n.) 1. மரமஞ்சள்; tree turmeric. 2. மஞ்சள்; turmeric (சா.அக.).

**நிரபிமானம்** *nirabimāṉam,* பெ.(n.) 1. பற்றின்மை (யாழ்.அக.); absence of bias or attachment. 2. அடக்கம்; self-restriant.

*[Skt. nir-abhimāna > த. நிரபிமானம்.]*

**நிரபேட்சம்–** *nirabēṭcam,* பெ.(n.) ஒன்றைச் சார்ந்து இல்லாமை; that which is not dependent. *"இந்திரியாந்தக்கரண நிரபேட்சம்" (சி.சி.அளவை.1, சிவாக்.பக்.109).*

*[Skt. nir-apēksa > த. நிரபேட்சம்.]*

**நிரபேட்சை** *nirabēṭcai,* பெ.(n.) விருப்பமின்மை (யாழ்.அக.); absence of attachment or desire, unconcernedness, opp. to *cāpēṭcai.*

*[Skt. nir-apēksā > த. நிரபேட்சை.]*

**நிரம்சம்** *nir-amcam,* பெ.(n.) பகுக்கத் தகாதது; that which is indivisible. *"ஏகபிரதேதியாகலின் நிரம்சமாகிய பரமாணுவினுக்கு" (நீலகேசி.397, உரை).*

*[Skt. nir-amśa > த. நிரம்சம்.]*

**நிரம்பியமரம்** *nirambiya-maram,* பெ.(n.) 1. வாழை மரம்; platain tree. 2. தென்னை மரம்; cocoanut tree. 3. ஆலமரம்; banyan tree (சா.அக.).

**நிரயப்பாலர்** *niraya-p-pālar,* பெ.(n.) **நிரயபாலர்** பார்க்க; see *niraya-pālar.* *"அணங்கென்பன பேயும்... நிரயப்பாலரும்" (தொல்.பொ.256, உரை.)*

*[Skt. niraya+pālar > த. நிரயப்பாலர்.]*

**நிரயபாலர்** *niraya-pālar,* பெ.(n.) நரகத்திலுள்ள தலைவர்; chiefs of the internal

regions. *"நிரயபாலர் பலரும்" (சீவக.2771, உரை).*

*[Skt. niraya+pāla > த. நிரயபாலர்.]*

**நிரயம்** *nirayam,* பெ.(n.) நரகம்; hell. *"நிரயங் கொள்பவரொ டொன்றாது" (புறநா.5).*

*[Skt. nir-aya > த. நிரயம்.]*

**நிரயவட்டம்** *nirayavaṭṭam,* பெ.(n.) பெருகளற்று வட்டம், மணல் வட்டம், எரிபரல் வட்டம், அரிபடை வட்டம், புகை வட்டம், இருள் வட்டம், பெருங்கீழ் வட்டமாகிய ஏழு நரகங்கள் (பிங்.); the seven internal regions, viz., perkaḷaṟṟuvaṭṭam, maṇalvaṭṭam, eriparalvaṭṭam, aripaḍai-vaṭṭam, pugai vaṭṭam, iruḷvaṭṭam, peruṅkīḻvaṭṭam.

*[Skt. nir-aya > த. நிரயவட்டம்.]*

**நிரயனம்** *nirayaṉam,* பெ.(n.) மேட ராசியின் தொடக்க இடத்திருந்து கணிக்கப்படும் வான்கதி தொலைவு (செற்.viii, 67); celestial longitudinal difference measured from the zero point of the fixed Hindu zodiac.

*[Skt. nirayaṉam > த. நிரயனம்.]*

**நிரயாசிப்பால்** *nirayāsi-p-pāl,* பெ.(n.) **நிரியாசப்பால்** பார்க்க; see *niriyāsa-p-pāl* (சா.அக.).

**நிரர்த்தகம்** *nirarttagam,* பெ.(n.) **நிரர்த்தம்** பார்க்க (வின்.); see *nirarttam.*

*[Skt. nir-arthaka > த. நிரர்த்தகம்.]*

**நிரர்த்தம்** *nirarttam,* பெ.(n.) பயனற்றது; that which is meaningless, worthless, useless.

*[Skt. nir-artha > த. நிரர்த்தம்.]*

**நிரவ்வியயம்** *niravviyayam,* பெ.(n.) நீண்ட காலம் வாழவல்லது; that which is eternal (யாழ்.அக.).

*[Skt. nir-avyaya > த. நிரவ்வியயம்.]*

**நிரவகாசவிதி** *niravakācaviti,* பெ.(n.) குறித்த இடந்தவிர வேறு இடத்திற் செல்லக் கூடாத விதி (சிவசமவா.பக்.65); a rule or precept applicable only to the point in question, opp. to *cāvakāca-viti.*

*[Skt. niravakāśa > த. நிரவகாசவிதி.]*

**நிரவகாலிகை** *niravakāligai,* பெ.(n.) திறந்த வெளி (யாழ்.அக.); open space.

*[Skt., Perh. nir-avahālikā > த. நிரவகாலிகை.]*

**நிரவதிகம்** *niravatikam,* பெ.(n.) **நிரவதி** பார்க்க; see *niravati. "நிரவதிகதேஜோ மயமாய்" (குருபரம்.).*

*[Skt. nir-avayava > த. நிரவதிகம்.]*

**நிரவயம்** *niravayam,* பெ.(n.) உறுப்பற்றது; that which is without limbs or parts. *"நிரவாயவமாயுள்ள வான்மாவை" (மணி.29, 299).*

*[Skt. nir-avayava > த. நிரவயம்.]*

**நிரவயன்** *niravayaṉ,* பெ.(n.) கடவுள் (அழிவில்லாதவன்) (சங்.அக.); god, as undecaying.

*[Skt. nir-avyaya > த. நிரவயன்.]*

**நிரா** *nirā,* பெ.(n.) பழம் முதலியவற்றின் கன்றின நிலை (யாழ்.அக.); hardness in fruit through blight or injury.

*[Skt. narā > த. நிரா.]*

**நிராகம்** *nirāgam,* பெ.(n.) உடலின்மை (வின்.); incorporeality.

*[Skt. nir+augam > த. நிராகம்.]*

**நிராகரணம்** *nirāgaraṇam,* பெ.(n.) 1. மறுப்பு; refutation, confutation, repudiation. *"ஈசுவர நிராகரணம் பண்ணுமவன்" (தக்கயாகப்.183, உரை).* 2. மதிப்பளிக்காமை; disregard.

*[Skt. nirākarana > த. நிராகரணம்.]*

**நிராகரன்** *nirāgaraṉ,* பெ.(n.) உருவமற்ற கடவுள் (யாழ்.அக.); god, as formless.

*[Skt. nir-ākāra > த. நிராகரன்.]*

**நிராகரி-த்தல்** *nirāgari-,* பெ.(n.) 1. மறுத்தல்; to refute, reject, as the terms of an appointment. 2. மதிப்புக் குறைவு செய்தல்; to disregard, treat with disrespect.

*[Skt. nir-ākr > த. நிராகரி-.]*

**நிராகாரநிலை** *nirāgāra-nilai,* பெ.(n.) உண்ணாமலே நிற்கும் ஓக நிலை; a stage of yoga in which the practising yogi remains abstaining from food and drink (சா.அக.).

**நிராகாரம்¹** *nirāgāram,* பெ.(n.) 1. **நிராகரணம்** பார்க்க (வின்.); see *nirāgaraṇam.* 2. உருவின்மை; shapelessness, formlessness. *"நிராகார வடிவேயோ" (திருப்பு.970).* 3. விண் (யாழ்.அக.); air, ether, as formless. 4. வீடுபேறு (யாழ்.அக.); beatitude.

*[Skt. nirākāra > த. நிராகாரம்.]*

**நிராகாரம்²** *nirāgāram,* பெ.(n.) உணவின்மை; fasting; lack of food. *"நிராகாரத் தொடுவைகி" (விநாயகபு.29, 4).*

*[Skt. nir-āhāra > த. நிராகாரம்.]*

**நிராகாரம்³** *nirāgāram,* பெ.(n.) 1. உணவின்மை; want of food. 2. உணவு வேண்டாமை; no appetite for food (சா.அக.).

**நிராகாரன்** *nirākāraṉ,* பெ.(n.) 1. சிவபெருமான் (பிரான்); *Śiva.* 2. திருமால்; *Viṣṇu* (யாழ்.அக.).

*[Skt. nir-ākāra > த. நிராகாரன்.]*

**நிராகிருதம்** *nirākirudam,* பெ.(n.) 1. தள்ளுண்டது; that which is refuted or rejected. 2. உருவமற்றது (யாழ்.அக.); formless thing.

*[Skt. nir-ā-krta > த. நிராகிருதம்.]*

**நிராகிருதி** *nirākirudi,* பெ.(n.) 1. வடிவின்மை (யாழ்.அக.); formlessness. 2. **நிராகரணம்** பார்க்க (இலக்.அக.); see *nirākaraṇam.*

*[Skt. nir-ākrti > த. நிராகிருதி.]*

**நிராகுலம்** *nirākulam,* பெ.(n.) கலக்கமின்மை; absence of anguish.

*[Skt. nir-ākula > த. நிராகுலம்.]*

**நிராசனர்** *nirācaṉar,* பெ.(n.) கடவுளர்; gods. *"நிராசனர் வருக வென்றான்" (கம்பரா. மிதிலைக்.114).*

*[Skt. nir-aśana > த. நிராசனர்.]*

**நிராசாரம்** *nirācāram,* பெ.(n.) தூய்மையின்மை (யாழ்.அக.); want of ceremonial purity, impurity.

*[Skt. nir-ācāra > த. நிராசாரம்.]*

**நிராசிராவம்** *nirāsirāvam,* பெ.(n.) மாதவிடாய் அரத்தம் படாமை; absence of discharge of blood (சா.அக.).

**நிராசை** *nirāsai,* பெ.(n.) 1. ஆசையின்மை; freedom from or absence of desire or attachment. *"வருபோகங்களினிராசை" (கைவல்.தத்.84).* 2. நம்பிக்கையறுகை; despair, hopelessness (Loc.).

*[Skt. nir-āśā > த. நிராசை.]*

**நிராட்சேபணை** *nirāṭcēpaṇai,* பெ.(n.) தடையின்மை; being unobjectionable.

*[Skt.nir-āksēpaṇā > த. நிராட்சேபணை.]*

**நிராடகோலம்** *nirāḍakōlam,* பெ.(n.) வேங்கைப்புலி; man-eater (சா.அக.).

**நிராடங்கம்** *nirāḍaṅgam,* பெ.(n.) தடையின்மை அற்றது; an unobjectionale thing.

*[Skt. nir+T. ādankamu > த. நிராடங்கம்.]*

**நிராடபதி** *nirāḍapati,* பெ.(n.) உடும்பின் கொழுப்பு; fat of guana. (சா.அக.).

**நிராதபகை** *nirātapagai,* பெ.(n.) இரவு (யாழ்.அக.); night.

*[Skt. nir-ātapā > த. நிராதபகை.]*

**நிராதாரம்¹** *nirātāram,* பெ.(n.) 1. ஆதாரமின்மை; absence or lack of foundation or support. 2. சார்பு வேண்டாமை; independance, not needing extraneous support, as an attribute of deity. 3. **நிராதாரயோகம்** பார்க்க; see *nirātāra-yōgam.* *"நிராதாரத்தே சென்று" (திருவுந்தி.8).*

*[Skt. nir-ādhāra > த. நிராதாரம்.]*

**நிராதாரம்²** *nirātāram,* பெ.(n.) ஆறாதாரங்களுள் ஒன்றான சுவாதிட்டானம்; which see.

one of the six regions of the body situated in genitals. c.f. ஆறாதாரம் (சா.அக.).

**நிராதாரயோகம்** *nirātāra-yōgam,* பெ.(n.) ஆதன் (ஆத்மா) தன்னறிவிழந்து அறிவுரு வாகிய (ஞானசொரூபமாகிய) சிவனை யடைந்து பற்றற நிற்கும் நிலை; the state of the soul in which it loses all self-consciousness, attains *śivahood* and remains without any attachment. *"ஆதாரயோக நிராதாரயோகமென" (திருக்களிற்றுப்.22, உரை).*

*[Skt. nir-ādhāra > த. நிராதாரயோகம்.]*

**நிராதாரன்** *nirātāran,* பெ.(n.) பற்றுக் கோடற்றவன் ஆகிய கடவுள் (யாழ்.அக.); god, as independent.

*[Skt. nir-ādhāra > த. நிராதாரன்.]*

**நிராதேசம்** *nirātēcam,* பெ.(n.) 1. கடனி றுக்கை (யாழ்.அக.); compulsory payment. 2. சார்பின்மை, ஆதாரமின்மை; want of support. 3. இழப்பு; loss.

**நிராதேவி** *nirā-dēvi,* பெ.(n.) வட்டத்திருப்பி; sickle leaf (சா.அக.).

**நிராபாதை** *nirāpādai,* பெ.(n.) துன்பம் அல்லது வலியற்றது; not causing any injury or pain (சா.அக.).

**நிராமயசெயநீர்** *nirāmašayanīr,* பெ.(n.) அண்டச் செயநீர்; a pungent liquid extracted from a fowl's egg or from the foetus (சா.அக.).

*[நிராமயம் + செயநீர்.]*

*[Skt. nir-āmaya > த. நிராமயம்.]*

**நிராமயதி** *nirāmayadi,* பெ.(n.) கலவியின் பந்தருகை; giving pleasure by sexual union (சா.அக.).

**நிராமயம்** *nirāmayam,* பெ.(n.) 1. நோயின்மை; freedom from disease or ailment, as an attribute of deity. 2. நோயற்றது; that which is free from ailment. *"நிரஞ்சன நிராமயத்தை" (தாயு. திருவருள்வி.3).*

*[Skt. nir-āmaya > த. நிராமயம்.]*

**நிராமயம்**[2] *nirāmayam,* பெ.(n.) பன்றி; hog (சா.அக.).

**நிராமயன்**[1] *nirāmayan,* பெ.(n.) கடவுள்; the Supreme Being. *"நிராமய பராபரபுராதன" (தேவா., 148, 6).*

*[Skt. nir-āmaya > த. நிராமயன்.]*

**நிராமயன்**[2] *nirāmayan,* பெ.(n.) 1. நோயற் றவன்; one who is free from illness, healthy man. 2. மூச்சுக் காற்றை நிறுத்தும் கலைவல்லோன்; one who suppresses respiration. 3. முனிவர்; a yogi (சா.அக.).

**நிராமலம்** *nirāmalam,* பெ.(n.) விளா; wood apple tree (சா.அக.).

**நிராமாதிசாரம்** *nirāmātišāram,* பெ.(n.) வெப்பக் கழிச்சல்; diarrhoea from excessive heat of the body. 2. குளிர்க் கழிச்சல்; dysentery (சா.அக.).

**நிராமாலு** *nirāmālu,* பெ.(n.) **விளாமரம்**; *viḷā-maram* (சா.அக.).

**நிராமிலம்** *nirāmilam,* பெ.(n.) எரிமச் சத்தற்றது; non acid (சா.அக.).

**நிராயுசியம்** *nirāyusyam,* பெ.(n.) அகவை யின்மைத் தன்மை (சிலப்.10, 188, அரும்.); agelessness.

*[Skt. nir-āyusya > த. நிராயுசியம்.]*

**நிராயுதபாணி** *nirāyuta-pāṇi,* பெ.(n.) **நிராயுதன், 1** பார்க்க; see *nirāyutan.*

*[Skt. nir-āyudha-pāṇi > த. நிராயுதபாணி.]*

**நிராயுதன்** *nirāyutan,* பெ.(n.) 1. படைக்கல மில்லாதவன்; unarmed person. *"மறைந்து நிராயுதன் மார்பினெய்யவோ" (கம்பரா. வாலிவ.90).* 2. அருகன் (சூடா.); arhat.

*[Skt. nir-āyudha > த. நிராயுதன்.]*

**நிராலம்பம்** *nirālambam,* பெ.(n.) 1. பற்றுக் கோடின்மை; absence of support, independence. *"நிராலம்ப வாலம்ப சாநதபத வியோமநிலையை" (தாயு. திருவருள்வி.3).* 2. திறந்தவெளி; open space. *"நிரயமிசை நிராலம்பத் துச்சிமிசை" (சிவதரு.கோபுர.18).* 3. நூற்றெட்டு துணைத் தொன்மங்களுள் ஒன்று; an upanisad one of 108.

*[Skt. nir-lamba > த. நிராலம்பம்.]*

**நிராலம்பயோகம்** *nirālamba-yōgam,* பெ.(n.) நிட்களத்தைப் பற்றிச் செய்யும் ஓகம் (சி.போ.8, 1); a kind of *yōga* in which the formless God is contemplated.

*[Skt. nir-lamba+yōga > த. நிராலம்பயோகம்.]*

**நிராலம்பன்** *nirālamban,* பெ.(n.) (பற்றுக் கோடற்றவன்) கடவுள்; the supreme being, as independent.

*[Skt. nir-ālamba > த. நிராலம்பன்.]*

**நிரிகதாபனரோகம்** *nirikatābana-rōgam,* பெ.(n.) முட்டையின் வெள்ளை போன்ற நீர்மம் பிறப்புறுப்பிலிருந்து வெளிப்படும் ஒரு நோய்; a whitish viscid discharge like the white of an egg from the vagina and uterine cavity (சா.அக.).

**நிரிகம்** *nirigam,* பெ.(n.) தாமரைக் காயின் அல்லது நெஞ்சாங்குலையின் உட்புறத்துச் சவ்வு; the membrane lining the interior of the heart-Endocardium (சா.அக.).

**நிரியசம்** *niriyašam,* பெ.(n.) வேம்பு; margosa or neem tree (சா.அக.).

**நிரியம்** *niriyam,* பெ.(n.) தினை; Italian millet (சா.அக.).

**நிரியாசப்பால்**¹ *niriyāsa-p-pāl,* பெ.(n.) **நிரியாசம், 1** பார்க்க; see *niriyāsam.*

*[Skt. niryāsa > த. நிரியாசப்பால்.]*

**நிரியாசப்பால்**² *niriyāsa-p-pāl,* பெ.(n.) எரிகாசு; java stora. 2. **நெரியாசிப்பால்** பார்க்க; see *neriyāsi-p-pāl* (சா.அக.).

**நிரியாசம்**¹ *niriyāsam,* பெ.(n.) 1. புகை வகை (தூபவர்க்கம்) ஆறனுள் ஒன்று, ஒருவகைப் பிசின் (சிலப்.5, 14); a kind of resin used as incense, one of six *tūpa-varkkam.* 2. வேம்பு; neem.

*[Skt. niryāsa > த. நிரியாசம்.]*

**நிரியாசம்**² *niriyāšam,* பெ.(n.) 1. மராமரம்; Indian dammar, black dammar. 2. ஒரு வகைப் பிசின்; gum or resin. 3. மரத்தின்பால்; exudation from tree, as சால நிரியாசம், அசுவகரண நிரியாசம், which means shorea resin. 4. பூண்டின் பால் அல்லது சாறு; juice of plants resin, milk any thick fluid substance from plants, **நெரியாசிப்பால்** பார்க்க; see *neriyāšippāl* (சா.அக.).

**நிரியாணசக்கரம்** *niriyāṇa-cakkaram,* பெ.(n.) ஒருவன் இறப்புக் காலத்தைக் கணக்கிட உதவும் சக்கர வடிவம் (வின்.); (Astrol.) diagram by which the time of one's death is calculated.

*[Skt. nir-yāṇa+ > த. நிரியாணசக்கரம்.]*

**நிரியாணதசை** *niriyāṇa-tašai,* பெ.(n.) இறப்பைக் குறிக்குங் கோள்நிலை (வின்.); influence of the planet that forebodes death.

*[Skt. nir-yāṇa+ > த. நிரியாணதசை.]*

**நிரியாணதிசை** *niriyāṇa-tišai,* பெ.(n.) இறக்குங் காலம்; period of death (சா.அக.).

**நிரியாணம்**¹ *niriyāṇam,* பெ.(n.) 1. யானையின் கடைக்கண் (பிங்.); outer corner of an elephant's eye. 2. இறப்பு (பிங்.); death. 3. வீடுபேறு (வின்.); emancipation from births, final beatitude.

*[Skt. nir-yāna > த. நிரியாணம்.]*

**நிரியாணம்**² *niriyāṇam,* பெ.(n.) 1. இறப்பு; death. 2. பிறவி நீங்கல்; freedom from birth (சா.அக.).

**நிரியானக்குறி** *niriyāṉa-k-kuṟi,* பெ.(n.) இறப்புக்குறி; symptoms of death (சா.அக.).

த.வ. சாக்குறி

**நிரீக்கணம்** *nirīkkaṇam,* பெ.(n.) 1. பார்வை; sight. 2. இடக்கண்ணிலே அமுதங்கொண்டு நனைத்துத் தூய்மை செய்வதாகப் பாவிக்குஞ் செய்கை (சைவச.பொது.354); (Saiva.) a ritual in daily ablutions by which purification is effected by the imagined flow of nectar from one's left eye.

*[Skt. nir-īksama > த. நிரீக்கணம்.]*

**நிரீச்சுரசாங்கியன்** *nirīccuracāṅkiyaṉ,* பெ.(n.) **நிரீச்சுவரசாங்கியன்** பார்க்க (தத்துவப்.176); see *nirccuvara-sāṅgiyaṉ.*

*[Skt. nir-iśvara+ > த. நிரீச்சுரசாங்கியன்.]*

**நிரீச்சுரம்** *nirīccuram,* பெ.(n.) கடவுளில்லை யென்று கூறும் மதம்; atheism, atheistic doctrine.

*[Skt. nir-īśvara > த. நிரீச்சுரம்.]*

**நிரீச்சுரவாதி** *nirīccura-vādi,* பெ.(n.) **நிரீச்சுவாதி** பார்க்க; see *nirīccuravādi.*

*[Skt. nir-īśvara+ > த. நிரீச்சுரவாதி.]*

**நிரீச்சுவரசாங்கி** *nirīccuvara-cāṅgi,* பெ.(n.) **நிரீச்சுவரசாங்கியன்** பார்க்க; see *nirīccuvarasāṅgiyaṉ.* *"நிரீச்சுவரசாங்கி புகல்வது தானறியாத பிரகிருதியாவும்" (தத்துவப்.174).*

*[Skt. nir-īsuvara+saṅkhya> த.நிரீச்சுவர சாங்கி.]*

**நிரீச்சுவரசாங்கியம்** *nirīccuvara śāṅgiyam,* பெ.(n.) கடவுளின்மையைக் கூறும் சாங்கிய மதம் (தக்கயாகப்.246, உரை); atheistic school of the *śāṅkhya* system of philosophy.

*[Skt. nir-īśvara+saṅkya > த. நிரீச்சுவர சாங்கியம்.]*

**நிரீச்சுவரசாங்கியன்** *nirīccuvara-śāṅgiyam,* பெ.(n.) நிரீச்சுவரசாங்கியக் கொள்கையைக் கொண்டவன் (சங்.அக.); one who follows the doctrines of *nirīśvarasāṅkhya.*

*[Skt. nir-īśvara+saṅkya > த. நிரீச்சுவர சாங்கியன்.]*

**நிரீச்சுவரவாதம்** *nirīccuvara-vātam,* பெ.(n.) **நிரீச்சுவரசாங்கியம்** பார்க்க (சங்.அக.); see *nirīccuvara-sāṅgiyam.*

*[Skt. nir-īsuvara+vāda > த. நிரீச்சுவர வாதம்.]*

**நிரீச்சுவரவாதி** *nirīccuvara-vāti,* பெ.(n.) கடவுளில்லையென்போன் (சி.சி.1, 1, சிவாக்.); atheist.

*[Skt.nirīśvaravādin > த. நிரீச்சுவரவாதி.]*

**நிரீட்சணசுத்தி** *nirīṭcaṇa-śutti,* பெ.(n.) கண்ணேறு கழிக்கை (சங்.அக.); purification to prevent the evil eye.

*[Skt. nirīksaṇa+ > த. நிரீட்சணசுத்தி.]*

**நிரீட்சணம்** *nirīṭcaṇam,* பெ.(n.) 1. பார்வை (சங்.அக.); sight. 2. எதிர்பார்த்திருக்கை; expectation. 3. மதிப்பு; honour. 4. **நிர்க்கணம், 2** பார்க்க; see *nirkkaṇam.* 5. பார்வையின்மை; absence of sight.

*[Skt. nir-īksaṇa > த. நிரீட்சணம்.]*

**நிரீட்சமாணம்** *nirīṭcamāṇam,* பெ.(n.) 1. நம்பிக்கை; faith. 2. பார்க்கை; seeing.

*[Skt. nir-īksamāṇa > த. நிரீட்சமாணம்.]*

**நிரீட்சணமுத்திரை** *nirīṭcaṇa-muttirai,* பெ.(n.) கண்முத்திரை என்னும் நாட்டிய குறி; a hand pose.

*[Skt. nirīksaṇa+ த. முத்திரை.]*

**நிரீட்சி-த்தல்** *nirīṭci-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. பார்த்தல்; to cast a look. 2. பார்வை பார்த்தல்; to cure a disease by incantation. 3. எதிர்பார்த்தல்; to expect.

*[Skt. nir-īks > த. நிரீட்சி-த்தல்.]*

**நிரீட்சிதம்** *nirīṭcitam,* பெ.(n.) பார்க்கப்பட்டது (சங்.அக.); that which is seen.

*[Skt. nir-īksita > த. நிரீட்சிதம்.]*

**நிருக்கிட்டுக்கொடுத்தல்** *nirukkiṭṭu-k-koḍuttal,* தொ.பெ.(vbl.n.) மருந்தை அள விட்டுக் கொடுத்தல்; giving medicine in pro.portionate doses (சா.அக.).

**நிருக்கிரம்** *nirukkiram,* பெ.(n.) 1. கொடுமை யின்மை; absence of violence, non-violent. 2. உச்சமற்றது; non-malignant as in fever, tumour etc. (சா.அக.).

[நிர் + உக்கிரம்.]

**நிருகம்** *nirugam,* பெ.(n.) மானிடருக்கடுத்த நோய்; diseases peculiar to human beings (சா.அக.).

**நிருகேசரி** *nirukēcari,* பெ.(n.) **நிருசிங்கம்** (யாழ்.அக.) பார்க்க; see *niruśiṅgam.*

[Skt. *nir-kēsarin* > த. *நிருகேசரி.*]

**நிருச்சத்தன்** *niruccattaṉ,* பெ.(n.) அரக்கன் (இராக்கதன்) (யாழ்.அக.); *rāksasa.*

[Skt. *nrśamsa* > த. *நிருச்சத்தன்.*]

**நிருச்சுவாசம்**[1] *niruccuvācam,* பெ.(n.) மூச்சு விடாதிருக்கை (சிவதரு.சுவர்க்கநரக. 147); breathlessness.

[Skt. *nir-ucchvāsa* > த. *நிருச்சுவாசம்.*]

**நிருச்சுவாசம்**[2] *niruccuvāśam,* பெ.(n.) 1. மூச்சின்மை; absence of breath. 2. மூச்சடக்கம்; suppression of breath. 3. மூச்சொடுக்கம்; suspension of breath (சா.அக.).

**நிருச்சுவாசவுச்சுவாசம்** *niruccuvāśa-v-uccuvāśam,* பெ.(n.) அரச நிரயம் எட்டனுள் ஒன்று (சி.போ.பா.2, 3 பக்.204); a hell, one of eight *araśa-nirayam.*

[Skt. *nir-ucchvāsa* > த. *நிருச்சுவாசவுச் சுவாசம்.*]

**நிருசிம்மதாபினி** *nirucimmatābiṉi,* பெ.(n.) நூற்றெட்டு துணைத் தொன்மங்களுள் (உபநிடதம்) ஒன்று; an upanisad, one of 108.

[Skt. *nrsmha-tāpiṇī* > த. *நிருசிம்ம தாபினி*]

**நிருணயக்கணக்கு** *nirṇaya-k-kaṇakku,* பெ.(n.) குறிக்கணக்கு (பீசகணிதம்); algebra (Pond.).

[Skt. *nirṇaya* > த. *நிருணயம்+கணக்கு.*]

**நிருணயம்** *niruṇayam,* பெ.(n.) 1. உறுதி (யாழ்.அக.); determination, resolution. 2. ஆராய்வு (சங்.அக.); ascertaining.

[Skt. *nir-ṇaya* > த. *நிருணயம்.*]

**நிருணயி-த்தல்** *niruṇayi-,* 4 செ.குன்றாவி. (v.t.) உறுதி செய்தல்; to determine.

[Skt. *nir-ṇaya* > த. *நிருணயி-.*]

**நிருணாமன்** *niruṇāmaṉ,* பெ.(n.) 1. பெயரில் லாதவனாகிய கடவுள் (சங்.அக.); god, as nameless. 2. அருகன்; Arhat.

த.வ. **பெயரிலி**

[Skt. *nir-nāma* > த. *நிருணாமன்.*]

**நிருணி-த்தல்** *niruṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) **நிருணயி-** (வின்.) பார்க்க; see *niruṇayi.*

**நிருத்தக்கண்டம்** *nirutta-k-kaṇḍam,* பெ.(n.) 1. மூச்சுவிட முடியாமை; having the breath obstructed; suffocated. 2. தொண்டை யடைப்பு; obstruction in the throat (சா.அக.).

**நிருத்தக்கை** *niruttakkai,* பெ.(n.) சதுரச்சிரம், உத்துவீதம், தலமுகம், சுவத்திகம், விப்பிர கீர்ணம், அருத்தரேசிதம், அராளகடகாமுகம், ஆவித்தவத்திரம், சூசீமுகம், கிரேசிதம், உத்தானவஞ்சிதம், பல்லவம், நிதம்பம், கசதந்தம், இலதை, கரிக்கை, பக்கவஞ்சிதம், பக்கப்பிரதியோகம், கருடபக்கம், தண்ட பக்கம், ஊர்த்துவமண்டலி, பக்கமண்டலி, முட்டிச்சுவத்திகம், நளினீபதுமகோசம், அலபதுமம், உற்பணம், இலளிதை, வலிதை என்னும் முப்பது வகைப்பட்ட அவிநயக்கை (சிலப்.3, 13, உரை, பக்.81); (*Nāṭya*) hand-pose of 30 kinds, viz., *catura-c-ciram, uttuvītam, talamukam, cuvattikam, vippirakīrṇam, aruttarēśitam, arāḷakaḍa-kāmugam, āvittavattiram, śūśīmugam,*

*kirēšitam, uttāṉavañjitam, pallavam, nitambam, kašatantam, iladai, karikkai, pakkavañjitam, pakka-p-piratiyōgam, karuḍa-pakkam, taṇḍa-pakkam, ūrttuva-maṇḍali, pakka-maṇḍali, muṭṭi-c-cuvattigam, naḷiṉi-patuma-kōšam, alapadumam, uṟpaṉam, ilaḷidai, validai.*

*[Skt. nrtta+ > த. நிருத்தக்கை.]*

**நிருத்தகீதவாத்தியம்** *nirutta-kīta-vāttiyam,* பெ.(n.) கூத்தும் பாட்டுங் கொட்டும் (வின்.); dancing, singing and instrumental music.

*[Skt. nrtta-gīta-vādya > த. நிருத்தகீத வாத்தியம்.]*

**நிருத்தகுதம்** *niruttakutam,* பெ.(n.) எரு வாய்ச் சுருக்கம்; constriction of the anus stricture of the rectum; constraction or obstruction the anus. In this cathetars should be used or inserted in the same way as in case of urethra (சா.அக.).

**நிருத்தசபை** *nirutta-šabai,* பெ.(n.) 1. சிவன் கோயிலில் ஆடல் வல்லானின் நாட்டிய அவை; dancing hall of *naṭarāja* in *šiva* temples. 2. கூத்து நிகழ்த்தும் இடம்; dancing-hall.

**த.வ. ஆடரங்கு**

*[Skt. nrtta > த. நிருத்தசபை.]*

**நிருத்தப்பிரகாசம்** *nirutta-p-pirakāšam,* பெ.(n.) 1. வாயுவினால் இலிங்க மணிக்கு மேலாக இழுத்த முன் தோல் அம்மலரில் வலுவாக பிடித்து அதனால் கீழுக்குத் தள்ள முடியாமலும்; மூத்திரத்தாரையை நீர் வெளிவராது அழுத்தியும் வலியையுண்டாக்கித் துன்பத்தைக் கொடுக்கும் ஓர் நோய்; the prepuce affected by deranged vayu when once drawn quite behind the glans penis cannot be drawn down to its original position owing to its contraction by which the passage of the urethra is obstructed and the emission of urine is completely stopped-paraphimosis. **நிருதிமொய்த்தல்** பார்க்க. 2. மேக சம்பந்தத்தினால் மூத்திரத் தாரை அடைப்பட்டு, அதனால் சிறுநீர் வெளிவராது வருத்தத்தையும் வலியையும் உண்டாக்கும் ஒரு நோய்; obstruction to the free passage of urine due to the abnormal narrowing of the urethra either from contraction or from deposit of abnormal tissue. This condition is attributed to venereal or syphilitic causes (சா.அக.).

**நிருத்தப்பிரசவம்** *nirutta-p-pirašavam,* பெ.(n.) பெண்ணின் யோனித் தாரையில் கழலையாகத் தடுத்தும் அல்லது மேற்படி தாரைச் சுருக்கம் அடைந்தும் இருப்பதால் கருப்பிண்டம் வெளிவர முடியாது துன்பப்படும் பிள்ளைப்பேறு; child birth which is attended by some mechanical hindrance as from a tumour or a contracted parturient cannal (சா.அக.).

**நிருத்தம்**[1] *niruttam,* பெ.(n.) எந்த தாது நீறாக (பற்பமாக)ச் செய்யப்படுகிறதோ அந்தத் தாதுவை எவ்வகை வழியினாலும் அந் நீறினின்று பிரித்தெடுக்கக் கூடாமை; the impossibility of eliminating by any contrivance or means, the element from the calcined compound of which it formed a component part (சா.அக.).

**நிருத்தம்**[2] *niruttam,* பெ.(n.) அறுபத்து நாலு கலைகளுள் ஒன்றாகிய நடனம்; dancing, one of *aṟupattunālu-kalai.* *"பாவை நிருத்த நோக்கி மெய்யுருகி" (சீவக.682).* .

*[Skt. nrtta > த. நிருத்தம்.]*

**நிருத்தம்**[3] *niruttam,* பெ.(n.) வேதாங்கம் ஆறனுள் வேதங்களிலுள்ள சொற்களை ஆராயும் நூல்; class of works containing etymological explanation of difficult vedic words, one of six *vētāṅ-kam.* *"தெற்றெனிருத்தஞ் செவி" (மணி.27, 101).*

*[Skt. nir-ukta > த. நிருத்தம்.]*

**நிருத்தம்⁴** *niruttam,* பெ.(n.) பற்றின்மை; absence of attachment. *"நிருத்த சுகசிற்கனத்து நிலையுற்றவன்" (சிவதரு. சனனமரண.96).*

*[Skt. ni-ruddha > த. நிருத்தம்⁴.]*

**நிருத்தமண்டபம்** *nirutta-maṇḍabam,* பெ.(n.) **நிருத்தசபை** (I.m.p.ii, 1226, 128) பார்க்க; see *nirutta-šabai.*

த.வ. நாட்டியமண்டபம், ஆடரங்கு

*[Skt. nrtta > த. நிருத்த+மண்டபம்.]*

**நிருத்தமாது** *niruttamātu,* பெ.(n.) நாடகக் கணிகை (சூடா.); dancing-girl.

*[Skt. nrtta > த. நிருத்த+மாது.]*

**நிருத்தன்** *niruttaṉ,* பெ.(n.) நடனமாடுவோன் (பிங்.); dancer. *"உமையொடு மொருபாக மதுவாய நிருத்தன்" (தேவா.194, 5).*

*[Skt. nrtta > த. நிருத்தன்.]*

**நிருத்தாங்கம்** *niruttāṅgam,* பெ.(n.) நிருத் தத்துக்கு வாசிக்கும் மத்தளந் தாளம் முதலியன (சிலப்.3, 14, உரை); musical instruments accompanying dancing.

த.வ. ஆடல் இன்னியம்

*[Skt. nrtta+aṅga > த. நிருத்தாங்கம்.]*

**நிருத்தாசனம்** *niruttāšaṉam,* பெ.(n.) தெளிவு (நாமதீப.647); clearness, clarity of vision.

*[Skt. nirdhāraṇa > த. நிருத்தாசனம்.]*

**நிருத்தாட்சிணியம்** *niruttāṭciṉiyam,* பெ. (n.) கண்ணோட்டமின்மை (யாழ்.அக.); impartiality.

*[Skt.nir-dākṣiṇya>த. நிருத்தாட்சிணியம்.]*

**நிருத்தாதனம்** *niruttādaṉam,* பெ.(n.) ஒருகாலைத் தூக்கிநிற்கும் நிலை வகை (யாழ்.அக.); a dancing posture in which one of the legs is held aloft.

*[Skt. nrttā-sana > த. நிருத்தாதனம்.]*

**நிருத்தானுகம்** *niruttāṉugam,* பெ.(n.) **நிருத்தாங்கம்** (சிலப்.3, 14, அரும்.) பார்க்க; see *niruttāṅgam.*

*[Skt. nrtta+anu-ga > த. நிருத்தானுகம்.]*

**நிருத்தி** *nirutti,* பெ.(n.) சொற்கு உறுப்புப் பொருள் கூறுகை; etymological interpretation of a word.

*[Skt. nir-ukti > த. நிருத்தி.]*

**நிருத்தியலங்காரம்** *niruttiyalaṅgāram,* பெ.(n.) பிரிநிலை நவிற்சியணி (சங்.அக.); a figure of speech.

*[Skt. nir-ukti+alam-kāra > த. நிருத்தி யலங்காரம்.]*

**நிருதர்** *nirutar,* பெ.(n.) பதினெண்கணத்துள் ஒருவராகிய அரக்கர்; *rākṣasas,* one of *patiṉeṉkaṇam.* "நிருதாதியர் வேரற" (கம்பரா.சடாயுவு.79).

*[Skt. nairrta > த. நிருதர்.]*

**நிருதி¹** *niruti,* பெ.(n.) 1. எட்டுத் திக்குப் பாலகருள் தென்மேற்றிசைக்காவலன் (சூடா.); regent of the south-west, one of *asta-tikku-p-pālakar.* *"நிருதி வாயுத்திப்பிய சாந்தனாகி" (தேவா.*663, 6). 2. முதல் வள்ளல்கள் எழுவருள் ஒருவன் (சூடா.); a liberal chief, one of seven *mudalvaḷḷalkaḷ.* 3. பகல் 15 முழுத்தத்துள் (முகூர்த்தத்துள்) பன்னிரண்டாவது (விதான.குணாகுண.73, உரை); the 12th of 15 divisions of day-time.

*[Skt. nirrti > த. நிருதி.]*

**நிருதி²** *niruti,* பெ.(n.) அரக்கி; raksasa woman. *"நிருதி கூறும்" (கம்பரா. சூர்ப்பணகை.138).*

*[Skt. nirrti > த. நிருதி.]*

**நிருதிதா** *nirutitā,* பெ.(n.) கோடாசூரி என்னும் செய்ந்நஞ்சு; a virulent mineral poision (சா.அக.).

**நிருதிரம்** *nirutiram,* பெ.(n.) குரத்தம் அதாவது அரத்தமின்மை; bloodless ness-anemia (சா.அக.).

*[Skt. nir-rudhira > த. நிருதிரம்.]*

**நிருதூளி** *nirutūḷi,* பெ.(n.) தூசி (யாழ்.அக.); dust.

*[Skt. nir > த. நிரு+தூளி.]*

**நிருதிதிசை** *nirutitiśai,* பெ.(n.) (நிருதியின் திசை) தென்மேற்றிசை; the s.w.quarter, as that of niruti.

*[Skt. nirrti > த. நிருதி+திசை.]*

**நிருதிபாசம்** *niruti-pāśam,* பெ.(n.) கடற்பாசி (மலை.); seaweed.

**நிருநாசம்** *nirunāśam,* பெ.(n.) அழிவின்மை (யாழ்.அக.); indestructibility.

*[Skt. nir-nāśa > த. நிருநாசம்.]*

**நிருநாசன்** *nirunāśaṉ,* பெ.(n.) (அழிவற்றவன்) கடவுள் (யாழ்.அக.); God, as indestructible.

*[Skt. nir-nāśa > த. நிருநாசன்.]*

**நிருநாமன்** *niru-nāmaṉ,* பெ.(n.) கடவுள் (யாழ்.அக.); the supreme being, as nameless.

*[Skt. nir-nāman > த. நிருநாமன்.]*

**நிருபச்சம்படம்** *nirupa-c-campaḍam,* பெ.(n.) அரசர் ஆணைகளைக் கொண்டு வருவோனுக்குரிய கூலி (M.E.R.1921-22, P.109); pay of the messenger carrying royal orders.

*[Skt. nirūpam > த. நிருப+சம்படம்.]*

**நிருபசரிதம்** *nirupasaridam,* பெ.(n.) மதிப்புரவாக (உபசாரமாக) ஏற்றிக் கூறப்படாதது; that which is not complimentary, secondary or figurative. *"சிவசத்திகட்குப் பிரிப்பில்லாவந்தரங்கவா நந்தியம் இயற்கையாகய் நிருபசரிதமாயும்" (சி.சி.1, 68, ஞானப்.).*

*[Skt. nir-upacarita > த. நிருபசரிதம்.]*

**நிருபத்திரவம்** *nirupattiravam,* பெ.(n.) தொல்லையில்லாத தன்மை (யாழ்.அக.); freedom from trouble, calamity or danger.

*[Skt. nir-upodrava > த. நிருபத்திரவம்.]*

**நிருபத்திரன்** *nirubattiraṉ,* பெ.(n.) நுண்ணுடம்புடன் (சூக்கும சரீரத்துடன்) இருக்கும் ஆதன் (ஆன்மா) (யாழ்.அக.); soul having a subtle body.

*[Skt. nir-upadrava > த. நிருபத்திரன்.]*

**நிருபதி** *nirupati,* பெ.(n.) 1. அரசன் (வின்.); king, sovereign. 2. குபேரன் (யாழ்.அக.); *Kubēra.*

*[Skt. nr-pati > த. நிருபதி.]*

**நிருபதுங்கராகம்** *nirupatuṅka-rāgam,* பெ.(n.) பெரும்பண் வகை (பிங்.); (mus.) a primary melody-type.

*[Skt. nrpa-tuṅga-rāga > த. நிருபதுங்க ராகம்.]*

**நிருபம்** *nirupam,* பெ.(n.) 1. எழுதியனுப்புங் கட்டளை; letter of authority; epistle from a king or other superior; mandate; order. *"நாயனார் கோயில் தானத்தார்க்கு நிருபம்" (S.I.I.i, 120, 123).* 2. மடல் (யாழ்.அக.); note, letter. 3. தீர்மானம் (வின்.); decree.

*[Skt.. nirūpa > த., ம. நிருபம்.]*

**நிருபமம்** *nirupamam,* பெ.(n.) ஒப்பின்மை; state of being unequalled, incomparableness.

*[Skt. nir-upama > த. நிருபமம்.]*

**நிருபமன்** *nirupamaṉ,* பெ.(n.) ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன்; ஒப்பில்லாதவன்; one who has no equal.

*[Skt. nir-upama > த. நிருபமன்.]*

**நிருபவல்லவை** *nirupavallavai,* பெ.(n.) அரசி (யாழ்.அக.); queen.

*[Skt.nrpa+vallabhā > த. நிருபவல்லவை.]*

**நிருபர்** *nirubar,* பெ.(n.) நாளிதழ்களுக்குச் செய்திக் குறிப்பு எழுதுவோன்; correspondent (mod.).

த.வ. செய்தியாளர்

*[Skt. nirūpa > த. நிருபர்.]*

**நிருபன்** *niruban,* பெ.(n.) 1. அரசன் (திவா.); king, sovereign. 2. ஓர் இலக்கத்திற்கு மேல் மூன்று இலக்கம் வரை வருமானமுடைய அரசன் (சுக்கிரநீதி.25); a king whose revenue is above one lakh and below 3 lakhs.

*[Skt. nr-pa > த. நிருபன்.]*

**நிருபாதானம்** *nirupādānam,* பெ.(n.) முதற்காரணமின்மை; absence of a material cause. *"சகத்து நிருபாதானமோ. சி.சி. (வரலாறு. பக்.7)" (சங்.அக.).*

*[Skt. nir-upādāna > த. நிருபாதானம்.]*

**நிருபாதானவாதி** *nirupādānavādi,* பெ.(n.) முதற்காரணத்தினின்றும் இவ்வுலகம் (பிரபஞ்சம்) தோன்றவில்லை யென்ற கொள்கை யுடையோன்; one who holds that the phenomenal world has no material cause.

*[Skt. nirupādāna-vādin> த. நிருபாதான வாதி]*

**நிருபாதி¹** *nirupādi,* பெ.(n.) வருத்தம் அல்லது வலியின்மை; absence of pain or suffering (சா.அக.).

**நிருபாதி²** *nirupādi,* பெ.(n.) 1. தொல்லை (உபாதி)யின்மை; freedom or liberation from passions, from pain. 2. காரண மின்மை; being without a cause, absolute. 3. தடை யின்மை (யாழ்.அக.); freedom from limitations or abstacles.

*[Skt. nir-upādhi > த. நிருபாதி.]*

**நிருபாதிகம்** *nirupādigam,* பெ.(n.) துன்பம், தொல்லை (உபாதி)யில்லாமை; freedom from secularities (சா.அக.).

**நிருபாதிகம்** *nirupādikam,* பெ.(n.) 1. காரண மற்றது (சங்.அக.); that which is without cause. 2. தடையற்றது; that which is free from limitations.

*[Skt. rnir-upādhika > த. நிருபாதிகம்.]*

**நிருபி—த்தல்** *nirupi-,* 4 செ.குன்றாவி.(v.t.) நிரூபி பார்க்க; see *nirūbi.*

**நிருமதம்** *nirumadam,* பெ.(n.) 1. யானை (பிங்.); elephant. 2. மதமொழிந்த யானை (சது.); rutless elephant.

*[Skt. nir-mada > த. நிருமதம்.]*

**நிருமலதானம்** *nirumala-tānam,* பெ.(n.) அறிவாளர் (ஞானி)கட்கு உதவுங் கொடை; gifts to the wise.

*[Skt. nirmala > த. நிருமலதானம்.]*

**நிருமலம்¹** *nirumalam,* பெ.(n.) பால் துத்தம்; white vitriol (சா.அக.).

**நிருமலம்²** *nirumalam,* பெ.(n.) மாசின்மை; spotlessness. *"நித்த நிருமல சகித" (தாயு.திருவருள்வி.3).*

*[Skt. nir-mala > த. நிருமலம்.]*

**நிருமலன்** *nirumalan,* பெ.(n.) 1. குற்ற மற்றவன்; spotless person, blameless one. *"நெறியிலை சாதலலாதெனக் கேட்ட நிருமல னிரங்கி" (திருவாலவா.39, 14).* 2. கடவுள்; the supreme being, as immaculate.

*[Skt. nir-mala > த. நிருமலன்.]*

**நிருமலி** *nirumali,* பெ.(n.) மலைமகள்; *Pārvati,* as immaculate... *"எண்ணான்கு நிகரிலாவற நிருமலி வளர்த்தனள் வருங்கால்" (காஞ்சிப்பு. கழுவா.87).*

*[Skt. nir-mala > த. நிருமலி.]*

**நிருமாலியம்¹** *nirumāliyam,* பெ.(n.) பெரிய மாவிலிங்கம் (L.); sacred lingam tree.

**நிருமாலியம்²** *nirumāliyam,* பெ.(n.) கூவிளம்; garlic pear (சா.அக.).

**நிருமாலியம்³** *nirumāliyam,* பெ.(n.) 1. இறைக்குப் படைத்து எடுத்தது (நிர்மாலியம்); offering made to an idol and removed. *"மதுகேச னருமாலிய மதேற்று" (பிரபுலிங். மாயைபூசை.58).* 2. வில்வம்; sacred bael.

*[Skt. nir-mālya > த. நிருமாலியம்.]*

**நிருமி—த்தல்** *nirumi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. படைத்தல்; to create, produce by art, form. *"வானோர் நிருமித்தனபடை" (கம்பரா.இராவணன்வதை.47).* 2. உறுதி கொள்ளுதல்; to determine. *"அசுரர்களை நீறாகும்படியாக நிருமித்து" (திவ்.திருவாய். பு.7, 1).* 3. ஏற்படுத்துதல்; to ordian, constitute. 4. ஆராய்தல் (பிங்.); to examine, investigate. 5. பொய்யாகக் கற்பித்தல்; to fabricate, concoct.

*[Skt. nirmā > த. நிருமி-.]*

**நிருமிதம்** *nirumidam,* பெ.(n.) 1. உண்டாக் கப்பட்டது; that which is created or formed. *"நினைத்திருந் தியற்றிய நிருமித மகனிவன்" (சீவக.707).* 2. பொய்யாகக் கற்பித்தது; that which is fabricated.

*[Skt. nir-mita > த. நிருமிதம்.]*

**நிருமிதி**[1] *nirumidi,* பெ.(n.) அம்மணம்; nakedness (சா.அக.).

**நிருமிதி**[2] *nirumidi,* பெ.(n.) படைப்பு; creation. *"இலதுகாத்தல் நிருமிதி யிச்சை செய்தி நிழனட மாகுமன்றே" (கோயிற்பு.பதஞ்.66).*

*[Skt. nir-mita > த. நிருமிதி.]*

**நிருமூடம்** *nirumūḍam,* பெ.(n.) முழுதும் அறிவின்மை; utter ignorance.

*[Skt. nir-mūḍha > த. நிருமூடம்.]*

**நிருமூடன்** *niru-mūḍan,* பெ.(n.) முழுதும் அறிவற்றவன்; man of utter ignorance.

*[Skt. nir-mūḍha > த. நிருமூடன்.]*

**நிருமூடி** *nirumūḍi,* பெ.(n.) 1. முழுதும் அறிவற்றவள்; an utterly ignorant woman. 2. உதவுங் குணமில்லாதவன் (இ.வ.); miserly woman.

*[Skt. nir-mūḍha > த. நிருமூடி.]*

**நிருமூலம்** *nirumūlam,* பெ.(n.) **நிர்மூலம்** (யாழ்.அக.) பார்க்க; see *nirmūlam.*

**நிருமூலி** *nirumūli,* பெ.(n.) **நிர்மூலி** பார்க்க; see *nirmūli.* (சா.அக.).

**நிருமூளி** *nirumūḷi,* பெ.(n.) **நிருமூடி, 2** பார்க்க; see *nirumūḍi.*

**நிருவகம்** *niruvagam,* பெ.(n.) **நிருவாகம்** (யாழ்.அக.) பார்க்க; see *niruvāgam.*

**நிருவகி—த்தல்** *niruvagi-,* 4 செ.குன்றாவி. (v.t.) **நிர்வகி—** (வின்.) பார்க்க; see *nirvagi.*

**நிருவசனம்** *niruvaśaṉam,* பெ.(n.) **நிருத்தி** (பி.வி.50, உரை) பார்க்க; see *nirutti.*

*[Skt. nir-vacana > த. நிருவசனம்.]*

**நிருவாககன்** *niruvāgagaṉ,* பெ.(n.) **நிர்வாகி** பார்க்க; see *nirvāki.*

*[Skt. nir-vāhaka > த. நிருவாககன்.]*

**நிருவாகசபை** *niruvāga-šabai,* பெ.(n.) **நிர்வாகசபை** பார்க்க; see *nirvāgašabai.*

*[Skt. nir-vāhaka > த. நிருவாகம்+சபை.]*

**நிருவாகம்** *niruvāgam,* பெ.(n.) **நிர்வாகம்** பார்க்க (வின்.); see *nirvāgam.*

**நிருவாகன்** *niruvāgaṉ,* பெ.(n.) **நிர்வாகி** பார்க்க; see *nirvāgi.*

*[Skt. nir-vāhaka > த. நிருவாகன்.]*

**நிருவாகி** *niruvāgi,* பெ.(n.) **நிர்வாகி** (வின்.) பார்க்க; see *nirvāgi.*

**நிருவாசம்** *niruvāšam,* பெ.(n.) குடியின்மை (யாழ்.அக.); the state of being uninhabited.

*[Skt. nir-vāsa > த. நிருவாசம்.]*

**நிருவாணதீட்சை** *niruvāṇa-tīṭcai,* பெ.(n.) சிவதீக்கை மூன்றில் ஒன்று; the last of three introducing rites & ceremony of initiation by a spiritual Guru according to Saiva system (சா.அக.).

**நிருவாணதீக்கை** *niruvāṇa-tīkkai,* பெ.(n.) **நிருவாணதீட்சை** (சி.போ.பா.சிறப்.) பார்க்க; see *nirvāṇa-tīṭcai.*

*[Skt. nirvāṇa+dīkṣa > த. நிர்வாணதீக்கை.]*

**நிருவாணம்** *niruvāṇam,* பெ.(n.) 1. **நிர்வாணம், 1** பார்க்க; see *nirvāṇam.* *"நித்திரை தெளியுமாபோல நிருவாண நிலைமெய்யாமே" (கைவல்.தத்வ.56).* 2. **நிர்வாணதீட்சை** பார்க்க; see *nirvāṇa-tīṭcai. "தரித்துச்சமய விசேட நிருவாணம்" (சைவச.மாணாக்.29).* 3. நூற்றெட்டு துணைத் தொன்மங்களுளொன்று; an upanisad, one of 108.

*[Skt. nirvāṇa > த. நிருவாணம்.]*

**நிருவாணி** *niruvāṇi,* பெ.(n.) 1. ஆற்றல் (சக்தி); the universal energy represented in the form of a naked woman. 2. பெண் தெய்வ பத்து ஆற்றல்களுளொன்று (தேவிதச வித்தை களிலொன்று); one of the ten active powers of the female energy or deity (சா.அக.).

**நிருவிகற்பசமாதி**[1] *niruvigaṟpasamādi,* பெ.(n.) **நிர்விகற்பசமாதி** பார்க்க; see *nirvigaṟpa-šamāti.*

**நிருவிகற்பசமாதி**[2] *niruvigaṟpasamādi,* பெ.(n.) சவ்விகற்ப சமாதி முற்றி அருளம்மை யால் அறிவிக்கப்பட்ட அருளாளன் ஆகிய அப்பனை அறிந்த ஞான்றே சிவதத்துவங் களும் அவற்றின் செயற்கைகளும் நன்கு விளங்கப் பெற்று, அந்தப் பரம்பொருளைக் கூடி நின்று விட்டுப் பிரியாது மகிழ்வது; a state of ecstacy which one obtains wisdom by the grace of the diety and enjoys the bliss by the union with the almighty (சா.அக.).

**நிருவிகற்பசமாதி**[3] *niruvigaṟpasamādi,* பெ.(n.) தன்னை மறந்து தூக்கமுறும், மயக்கம் போல பிறர் சத்தம் காதிற் கேளாது ஐம்புலனும் ஒடுங்கி, சித்தமானது பூரணத்தில் இலயித் திருக்கும் ஓர் ஒக நிலை, விவகாரத்தாலே உலகமே பொய்யென்று உணர்ந்து உலக பாசத்தைத் தள்ளி நிற்பதினால் அடையும் மெய்யுணர்வு (சைதன்ய) நிலை; that state of perfect and spiritual ecstacy experienced by a sitting yogi, in which he remains in audible to the surrounding disturbances being absorbed in eternal bliss. Saitanyam is a stage where nothing exists but the transformation of mental consciousness in the form of Atman (soul). It is an abstract meditation (சா.அக.).

**நிருவிக்கினம்** *niruvikkiṉam,* பெ.(n.) இடையூ றின்மை; absence of obstacles.

*[Skt. nir-vighna > த. நிருவிக்கினம்.]*

**நிருவிகற்பநிட்டை** *niruvigaṟpa-niṭṭai,* பெ.(n.) **நிர்விகற்பசமாதி** பார்க்க; see *nirvigaṟpa-samāti. "நிருவிகற்ப நிட்டை நிலையென்று வருமோ வறியேனே" (தாயு.உடல்பொய்.32).*

**நிருவிகற்பம்** *niruvigaṟpam,* பெ.(n.) 1. **நிர்விகற்பக்காட்சி** (சி.சி.11, சிவாக்.) பார்க்க; see *nirvigaṟpa-k-kāṭci.* 2. **நிர்விகற்ப சமாதி** பார்க்க; see *nirvigaṟpasamāti. "விரைந்தே நிருவிகற்ப மெய்த" (தாயு. உடல்பொய்.39).*

*[Skt. nir-vikarpa > த. நிருவிகற்பம்.]*

**நிருவிகற்பமாதல்** *niruvigaṟpamādal,* பெ.(n.) விவகாரத்தாலே உலகமே பொய் யென்று தனக்குள் நினைத்து உலக பாசத்தைத் தள்ளி மெய்யுணர்வு (சைதன்ய) நிலையை அடைதல்; that state of insensibility to one's own surroundings, arrived at by a practising yogi by renunciation being appraised of the supreme knowledge that the material world is false. This stage can only be acquired by those who attain super natural illumination without the aid of physical or mental organs (சா.அக.).

**நிருவிகற்பவாழ்க்கை** *niruvigaṟpa-vāḻkkai,* பெ.(n.) பேசாதிருத்தல்; to remain silent (சா.அக.).

**நிருவிசாரம்** *niruviśāram,* பெ.(n.) கவலை யின்மை; absence of anxiety.

*[Skt. nir-vicāra > த. நிருவிசாரம்.]*

**நிருவிடம்** *niruviḍam,* பெ.(n.) மருந்துவகை (யாழ்.அக.); a kind of medicine.

*[Skt. nir-visa > த. நிருவிடம்.]*

**நிருவிடயானந்தம்** *niruviḍayāṉantam,* பெ.(n.) புலனுணர்ச்சிக்கு எட்டாத களிப்பு; supreme bliss, not enjoyed by the sense. *"கூடார் நிருவிடயானந்தசுக நீங்காத நோக்கும்" (ஒழிவி.அவத்தை.39).*

*[Skt. nir-visaya+ā-nanda > த. நிருவிட யானந்தம்.]*

**நிருவேதுகம்** *niruvēdugam,* பெ.(n.) **நிரேதுகம்** (சிசி.8, 2, சிவாக்.); see *nirētugam.*

*[Skt. nir-hētuka > த. நிருவேதுகம்.]*

**நிரூகம்**[1] *nirūgam,* பெ.(n.) மலங் கழிவதற்காக குதவாயில் உள்ளே வைக்கப்படும் ஒரு பொறி; a purging clyster, an enema not of an oil kind (சா.அக.).

**நிரூகம்**[2] *nirūgam,* பெ.(n.) 1. உறுதி (யாழ்.அக.); certainty. 2. சொற்போர்; logic, disputation. 3. வெளிப்படைச் சொல்; explicit-term.

*[Skt. nir-ūha > த. நிரூகம்.]*

**நிரூகணம்** *nirūgaṇam,* பெ.(n.) எருவாய் வழியாக வழலை நீர் ஏற்றி மலங்கழிக்கும்படிச் செய்தல்; causing to purge with the aid of a clyster (சா.அக.).

**நிரூகவத்தி** *nirūga-vatti,* பெ.(n.) வடிநீர் முதலியவற்றை எருவாய் வழியாய் உள்ளுக்குச் செலுத்திக் குடலைக் கழுவல்; a liquid form of medicine as decoction etc. thrown into the rectum by a clyster (சா.அக.).

**நிரூடபசுபந்தம்** *nirūḍapaśubandam,* பெ.(n.) வேள்வி வகையுளொன்று (வின்.); a kind of sacrifice.

*[Skt.nirūḍha-paśu-bandha > த. நிரூடபசு பந்தம்.]*

**நிரூடி** *nirūḍi,* பெ.(n.) 1. நெட்டுரு; rote. 2. தெளிவு; clearness, certainty.

*[Skt. nirūḍhi > த. நிரூடி.]*

**நிரூபணம்**[1] *nirūbaṇam,* பெ.(n.) இசைப்பாட்டு வகையான வரலாற்று நூலின் முதலில் அவ் வரலாற்றைச் சுருக்கிக்கூறும் பகுதி (கோபால கிருஷ்ண பாரதி, 39); section containing the argument of a story, in musical composition.

*[Skt. nirūpaṇa > த. நிரூபணம்.]*

**நிரூபணம்**[2] *nirūbaṇam,* பெ.(n.) மெய்ப்பித்தல்; to prove (சா.அக.).

**நிரூபணம்**[3] *nirūbaṇam,* பெ.(n.) 1. ஆராய்ச்சி; investigation. 2. செயல்முறை விளக்கம்; demonstration. *"சிவாபாவநா நிரூபணம்" (சி.சி.6, 7, சிவாக்.).*

*[Skt. ni-rūpaṇa > த. நிரூபணம்.]*

**நிரூபம்** *nirūbam,* பெ.(n.) உருவில்லாமை; shapelessness (சா.அக.).

**நிரூபன்** *nirūbaṉ,* பெ.(n.) (உருவமற்றவன்) கடவுள் (யாழ்.அக.); god, as formless.

*[Skt. ni-rūpa > த. நிரூபன்.]*

**நிரூபாவர்த்தம்** *nirūpāvarttam,* பெ.(n.) உயர் மணி வகை (யாழ்.அக.); a kind of gem.

**நிரூபி-த்தல்** *nirūbi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. மெய்ப்பித்தல்; to prove, demonstrate. 2. ஆராய்தல் (வின்.); to examine, investigate, search.

*[Skt. ni-rūp > த. நிரூபி-.]*

**நிரூபிதம்** *nirūpidam,* பெ.(n.) உறுதிப்படுத்தப் பட்டது; that which has been ascertained or proved. *"நிரூபிதமான வஸ்துவை நானறிந்தேன்" (சி.சி.பு., 5, சிவாக்.).*

*[Skt. ni-rūpita > த. நிரூபிதம்.]*

**நிரேசுவரசாங்கியம்** *nirēśuvaraśāṅgiyam,* பெ.(n.) **நிரீச்சுவரசாங்கியம்** (யாழ்.அக.); see *niriccuvaraśāṅgiyam.*

**நிரேதுகம்** *nirētugam,* பெ.(n.) ஏதுவற்றது; that which is causless. *"ஜகத்து நிரேதுகமென்றது தள்ளப்பட்டது" (சி.சி.1, 1, சிவாக்.).*

*[Skt. nir-hētuka > த. நிரேதுகம்.]*

**நிரோகி** *nirōgi,* பெ.(n.) நோயில்லாதவன்; one free from disease, healthy man (சா.அக.).

**நிரோசாதம்** *nirōšādam,* பெ.(n.) **நிரோதி** பார்க்க; see *nirōdi. "விரற்புகை நிரோசாதம்" (தத்துவப்.140).*

*[Skt. nirōdhana > த. நிரோசாதம்.]*

**நிரோட்டகம்** *nirōṭṭagam,* பெ.(n.) இதழி யைந்து பிறவா எழுத்துகளால் ஆகிய செய்யுள் – திருச்செந்தில் நிரோட்டகயமக வந்தாதி; a kind of verse without labial or labiodentals.

த.வ. இதழகல்பா

*[Skt. nir-ōsthyaka > த. நிரோட்டகம்.]*

**நிரோட்டம்** *nirōṭṭam,* பெ.(n.) **நிரோட்டகம்** பார்க்க; see *nirōṭṭagam.*

*[Skt. nir-ōsdhya > த. நிரோட்டம்.]*

**நிரோட்டி** *nirōṭṭi,* பெ.(n.) நிரோட்டகம் (யாப்.வி.510) (pros.); poem composed without using the labials.

*[Skt. nir-ōsdha > த. நிரோட்டி.]*

**நிரோட்டியம்** *nirōṭṭiyam,* பெ.(n.) **நிரோட்டகம்** பார்க்க; see *nirōṭṭagam. "இதழ் குவிந்தியையா தியல்வது நிரோட்டியம்" (மாறனலங்.274).*

*[Skt. nir-ōsdhya > த. நிரோட்டியம்.]*

**நிரோட்டியவோட்டியம்** *nirōṭṭiya-v-ōṭṭiyam,* பெ.(n.) செய்யுளின் முற்பாதி நிரோட்டியம் பிற்பாதி ஒட்டியமுமாகப் பாடும் பா (கவி) (மாறனலங்.276, உரை); a stanza in which the first half is *nirōṭṭiyam*and the second half *ōṭṭiyam.*

*[Skt. nir-ōsdhya > த. நிரோட்டிய வோட்டியம்.]*

**நிரோதகரணி** *nirōdakaraṇi,* பெ.(n.) மின்சார சத்தியைத் தடுக்கும் பொருள்; a substance which does not transmit electricity (சா.அக.).

**நிரோதம்**[1] *nirōdam,* பெ.(n.) 1. தடை; impediment, pediment, hindrance. 2. அடக்கம்; restraint, control.

*[Skt. ni-rōdha > த. நிரோதம்.]*

**நிரோதம்**[2] *nirōdam,* பெ.(n.) சுருக்கம்; stricture (சா.அக.).

**நிரோதனை** *nirōdaṉai,* பெ.(n.) புலனடக்கம்; (Jaina.) control over the passions. *"வீரனிரோதனை யம்பிற் கொன்றான்" (சீவக.3080).*

*[Skt. ni-rōdhanā > த. நிரோதனை.]*

**நிரோதானமுத்திரை** *nirōdāṉa-muttirai,* பெ.(n.) சிறுவிரலை நீக்கி ஏனைய விரல்களை நுனிகள் பொருந்தச் சேர்த்துக் குவிக்கும் முத்திரை வகை (சைவாநுட்.வி.17); (*Šaiva*) a handpose which consists in bringing the thumb and the fingers other than the little finger together.

*[Skt. nirōdāna > த. நிரோதான+முத்திரை.]*

**நிரோதி** *nirōdi,* பெ.(n.) உடம்பிலுள்ள 16 வகையான மந்திர நிலைகளுள் (சோட கலையுள்) ஒன்று; (Saiva.) one of the 16 mystic centres in the body in which Sakti manifests herself. *"சந்திரன்மேல் நிரோதிநாதம்" (செந்., 9, 248).*

*[Skt. ni-rōdhin > த. நிரோதி.]*

**நிரோதினி** *nirōdiṉi,* பெ.(n.) **நிரோதி** பார்க்க (தத்துவப்.130, உரை); see *nirōti.*

*[Skt. ni-rōdhini > த. நிரோதினி.]*

**நிலிகாவியங்கம்** *nilikāviyaṅgam,* பெ.(n.) முகத்திற்காணும் ஒருவகைப் பரு; a variety of mole (சா.அக.).

**நிலிஞ்சிகை** *niliñjigai,* பெ.(n.) ஆன்; cow (சா.அக.).

**நிலிநாதியம்** *nilinādiyam,* பெ.(n.) பாண்டு நோய்க்குக் கொடுக்கும் ஒருவகை மருந்துப் பொடி; medicinal powder for dropsy (சா.அக.).

**நிவகம்** *nivagam,* பெ.(n.) கூட்டம் (உரி.நி.); company, multitude, assembly, flock.

*[Skt. ni-vaha > த. நிவகம்.]*

**நிவசதி¹** *nivašati,* பெ.(n.) வீடு (சங்.அக.); house, abode.

*[Skt. ni-vasati > த. நிவசதி.]*

**நிவசதி²** *nivašati,* பெ.(n.) ஒருவகைப் பூண்டு; an unknown plant (சா.அக.).

**நிவசனம்¹** *nivašaṉam,* பெ.(n.) ஆடை (சங்.அக.); clothes.

*[Skt. ni-vasana > த. நிவசனம்.]*

**நிவசனம்²** *nivašaṉam,* பெ.(n.) 1. சீலை; cloth. 2. சீலைத்துண்டு; piece of cloth (சா.அக.).

**நிவசி-த்தல்** *nivaši-,* 4 செ.குன்றாவி.(v.t.) குடியிருத்தல் (ஜீவப்பிரம்மைக்ய. பக்.640); to dwell.

*[Skt. ni-vas > த. நிவசி-.]*

**நிவந்தக்காரர்** *nivanda-k-kārar,* பெ.(n.) கோயில்தொண்டு செய்வோர்; temple servants. *"பலபணி நிவந்தக்காரர்க்கும்" (S.I.I.(iii), 137).*

*(நிவந்தம் + காரர்.)*

*[Skt. ni-bandha > த. நிவந்தம்+காரர்.]*

**நிவந்தம்** *nivandam,* பெ.(n.) 1. கட்டுப்பாடு (நிபந்தனை); condition, agreement. 2. வேலைத்திட்டம்; allotted duties, as of servants. *"பலபணி நிவந்தக்காரர்க்கு நிவந்தஞ் செய்தபடி" (S.I.I.(iii), 137).* 3. கோயிற்செலவு; temple expenses. *"மஹா தேவர்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு" (S.I.I. (iii), 25).* 4. கோயிற்றொண்டு நிவந்தக்காரர்; temple service. 5. கடவுளை வழிபடும் இடம்; place of worship. *"புனைமணி நிவந்தம்" (உபதேசகா.திவபிரத.223).* 6. தொகுப்பு நூல்; compilation, compendium.

*[Skt. ni-bandha > த. நிவந்தம்.]*

**நிவர்த்தாளம்** *nivarttāḷam,* பெ.(n.) ஒன்பான் தாளத்தொன்று (பரத.தாள.6) (Mus.); a variety of time-measure, one of *nava-tāḷam.*

*[Skt. nivartta+ > த. நிவர்+தாளம்.]*

**நிவர்த்தனம்** *nivarttaṉam,* பெ.(n.) 1. திரும்புகை; returning, turning back. 2. போக்குகை; removing curing. 3. 25 கோலேனும் 100 அல்லது 125 முழமேனும் கொண்டதோரளவு (சுக்கிரநீதி, 28); a lineal measure of 25 *kōl,* 100 or 125 cubits.

*[Skt. ni-vart-tana > த. நிவர்த்தனம்.]*

**நிவர்த்தி¹** *nivartti,* பெ.(n.) **நிவிர்த்தி** பார்க்க; see *nivirtti.*

*[Skt. ni-vrtti > த. நிவர்த்தி.]*

**நிவர்த்தி²** *nivartti,* பெ.(n.) 1. விடுதலை; release. *"பந்தத்தினின்றும் நிவிர்த்திபெற்ற ஆன்மாக்கள்" (சி.போ.பா.பக்.143, புதுப்.).* 2. **நிவாரணம், 3** பார்க்க; see *nivāraṇam.* 3. துறவு (பிங்.); renunciation of the world, opp. to piravirtti. *"பரிபக்குவர் நிட்டை நிவர்த்தியினில்" (திருப்பு.310).* 4. **நிவர்த்திக் கலை** பார்க்க; see *nivartti-k-kalai* (சி.சி.2, 74, ஞானப்.). 5. போக்கு; remedy. *அப்படிச் செய்யாமல் வேறு நிவர்த்தி இல்லை.*

*[Skt. ni-vrtti > த. நிவர்த்தி.]*

**நிவர்த்திகலை** *nivartti-kalai,* பெ.(n.) ஐந்து (பஞ்ச) கலையுள் ஆதன்களைப் பாசத் தினின்றும் விடுவிப்பதாகிய கலை (சி.போ. பா.2, 2, பக்.143, புதுப்.); (*šaiva.*) sphere of action for the energy of Šivan which emancipates the soul from bondage, one of *pañca-kalai.*

[**Skt.** *ni-vrtti > த. நிவர்த்தி+கலை.*]

**நிவர்தல்** *nivartal,* பெ.(n.) ஓங்குதல்; growing high (சா.அக.).

**நிவரை** *nivarai,* பெ.(n.) கன்னி (யாழ்.அக.); a maiden.

[**Skt.** *ni-varā > த. நிவரை.*]

**நிவலம்** *nivalam,* பெ.(n.) அவுபல பாடாணம் என்னும் ஒருவகைச் செய்ந்நஞ்சு; the 32 kinds of native arsenic (சா.அக.).

**நிவாசம்** *nivāšam,* பெ.(n.) தெய்வம் அல்லது பெரியோர்கள் வாழிடம் (வின்.); abode, habitation, as a deity or a great person.

[**Skt.** *ni-vāsa > த. நிவாசம்.*]

**நிவாபம்** *nivābam,* பெ.(n.) தென்புலத் தார்க்குச் (பிதிர்க்களுக்குச்) செய்யுந் தருப்பணம் (யாழ்.அக.); obalation of water to the manes.

[**Skt.** *ni-vāpa > த. நிவாபம்.*]

**நிவாரணம்** *nivāraṇam,* பெ.(n.) 1. தடுக்கை; preventing; hindering. 2. தடை; prohibition; impediment. 3. ஒழிப்பு; abolition; removal; expiation; termination; extinction. 4. (அதிட்ட நிவாரணம், உரோகநிவாரணம், கன்மநிவாரணம், சனிம நிவாரணம், பாவ நிவாரணம், கடனிவாரணம் என்ற) அறுவகைப்பட்ட துன்ப நீக்கம்; extinction of evil, of six kinds, viz., *arista-nivāraṇam, urōka-nivāraṇam, kaṉma-nivāraṇam, caṉma-nivāraṇam, pāva-nivāraṇam, kaḍanivāraṇam.*

**த.வ. தணிப்பு, நீக்கம்**

[**Skt.** *ni-vārana > த. நிவாரணம்.*]

**நிவாரணி** *nivāraṇi,* பெ.(n.) நோயைக் குணப்படுத்தும் மருந்து; curative agents or medicines (சா.அக.).

**நிவாரம்**[1] *nivāram,* பெ.(n.) தடை (w.); impediment.

[**Skt.** *ni-vāra > த. நிவாரம்.*]

**நிவாரம்**[2] *nivāram,* பெ.(n.) காட்டுநெல்; wild paddy (சா.அக.).

**நிவாரி** *nivāri,* பெ.(n.) 1. **நிவாரணி** பார்க்க; see *nivāraṇi.* 2. காட்டுநெல்; wild paddy. 3. காட்டரிசி; wild rice. 4. மலைநெல்; mountain paddy (சா.அக.).

**நிவிசிந்தா** *nivisintā,* பெ.(n.) கணக்கு முதலியன பார்க்கும் கணக்காளர் (C.G.); accountant, clerk.

[**U.** *nawisindah > த. நிவிசிந்தா.*]

**நிவிர்த்தன்** *nivittaṉ,* பெ.(n.) உலக ஆசை களை—ஆசைத் தளைகளை அறுத்தவனாகிய துறவி; ascetic free from bondage of life (சா.அக.).

**நிவிர்த்தி** *nivirtti,* பெ.(n.) 1. துறவு; renunication. 3. அசையாநிலை; cessation of action or motion (சா.அக.).

**நிவிருத்தப்பிரசவம்** *nivirutta-p-pirasavam,* பெ.(n.) மகப்பேற்றிற்குப் பிறகு ஐந்து ஆண்டிற்கு மேலாகும் வரையில் மகப்பேறு இல்லாதிருத்தல்; a woman in whom conception does not occur for a period

more than five years after a previous child birth (சா.அக.).

**நிவிருத்தி** *nivirutti,* பெ.(n.) 1. பிறப்பறல்; release from transmigration. 2. ஆதன் (ஆன்மா) கதி பெறல்; final emancipation of the soul. 3. குணமாதல்; cure. 4. ஒழிவு; extinction or cessation. 5. ஒன்றுதல்; dissolution. (சா.அக.).

**நிவிருத்திமார்க்கம்** *nivirutti-mārkkam,* பெ.(n.) துறவுநெறி; the path of renunciation.

*[Skt. nivrtti > த. நிவிருத்திமார்க்கம்.]*

**நிவேசம்** *nivēšam,* பெ.(n.) 1. உடம்பில் ஊசியேற்றல், என்னும் நேர்த்திக் கடன் (in Religion) hook swing in satisfaction of a vow. 2. நோய்க் குணமாக வேண்டி உடம்பில் மருந்தை ஊசியால் குத்திச் செலுத்துதல்; the act of throwing of a liquid medicine into the body through a needle injection. 3. உடம்பில் ஊசியைச் செலுத்துதல்; insertion of a needle into the body for any purpose inoculation (சா.அக.).

**நிவேசனம்** *nivēšanam,* பெ.(n.) 1. இடம்; place; site. 2. வீடு (தைலவ.தைல.); house, dwelling. 3. ஊர் (சூடா.); town, city. 4. 2400 சதுர அடி கொண்ட மனையளவு (வின்.); a ground, a piece of land measuring 2,400 sq.ft.

**த.வ. மனை**

*[Skt. ni-vēšana > த. நிவேசனம்.]*

**நிவேத்தியம்** *nivēttiyam,* பெ.(n.) **நிவேதனம்** பார்க்க (பிங்.); see *nivētanam.*

*[Skt. naivēdya > த. நிவேத்தியம்.]*

**நிவேதனஞ்செய்-தல்** *nivēdanañ-cey-,* பெ.(n.) **நிவேதி** பார்க்க; see *nivēthi.*

*[Skt.ni-vēdana>த. நிவேதனஞ்செய்-தல்.]*

**நிவேதனப்பாவாடை** *nivēdana-p-pāvāḍai,* பெ.(n.) கடவுளுக்கு இடும் பெரும்படையல்; food-offerings on a large scale, made to a deity, (Loc.).

*[Skt. nivētanam > த. நிவேதனம்+ பாவாடை.]*

**நிவேதனம்** *nivēdanam,* பெ.(n.) 1. ஒப்புவிக்கை; offerings, dedicating. 2. கடவுளுக்குப் படைக்கும் அமுது; offering of rice, etc, made to a deity. *"நிவேதனஞ் செய்தான்" (சேதுபு.சங்கர.85).*

*[Skt. ni-vēdana > த. நிவேதனம்.]*

**நிவேதி-த்தல்** *nivēdi-,* 4 செ.குன்றாவி.(v.t.) படையல் படைத்தல்; to dedicate, offer to a deity, as food.

*[Skt. ni-vid > த. நிவேதி-த்தல்.]*

**நின்மலசாக்கிரம்** *ninmala-šākkiram,* பெ.(n.) சிவபெருமானது அருளால் சத்தாதி விசயங்களைச் சிவாகாரமாகவும், விசயசுகங்களைச் சிவானந்தமாகவும் அனுபவிக்கும் சுத்தாவத்தைவகை (சி.சி.4, 34, சிவாக்.); (Šaiva) a condition of the soul in its uplifted state when it realises, with the help of the divine grace, Siva's manifestations in all external objects and Siva's Bliss in all the pleasures he enjoys, one of five *cuttāvattai.*

*[Skt. nir-mala > த. நின்மலசாக்கிரம்.]*

**நின்மலசுழுத்தி** *ninmala-šuḻutti,* பெ.(n.) ஆன்மா ஞாதுரு, ஞானம், ஞேயம் என்ற வேறுபட்ட அறிவுடன் அருண்மயமாகிச் சுகத்தையனுபவிக்கும் சுத்தாவத்தை வகை (சி.சி.பு.34, சிவாக்.); (Šaiva.) a condition of the soul in its uplifted state when it becomes one with the divine grace, and is concious of the distinction of *ñātura, ñānam* and *nēyam,* one of five *cuttāvattai* q.v.

*[Skt. nir-mala > த. நின்மலசுழுத்தி.]*

**நின்மலசொப்பனம்** *ninmala-šoppanam,* பெ.(n.) ஆதன் (ஆன்மா) அருளிடத்தே நின்று அதனையுணரும் சுத்தாவத்தை வகை (சி.சி.பு.34, சிவாக்.) *(šaiva.);* a condition of the sould in its uplifted state when it gets a vision of the Divine Grace, one of five *cuttāvattai,* q.v.

*[Skt. nir-mala > த. நின்மலசொப்பனம்.]*

**நின்மலதுரியம்** *ninmala-turiyam,* பெ.(n.) ஆதனின் (ஆன்மாவின்) மலங்கழல அதற்கு ஆனந்தவொளி தோன்றுதலாகிய சுத்தா வத்தை வகை (சி.சி.பு.34, சிவாக்.); (*šaiva.*)a condition of the soul in its uplifted state when its impurities are all gone and there is the appearance of the "Light of Bliss", one of five *šuttāvattai.*

*[Skt. nir-mala > த. நின்மலதுரியம்.]*

**நின்மலதுரியாதீதம்** *ninmalaturiyātītam,* பெ.(n.) பொருள் – பொருள் நாட்டம் (ஞாதுரு ஞேயம்) என்ற வேறுபாடற்று (ஆன்மா) ஆதன் ஆனந்த மயமாகி விளங்கும் சுத்தாவத்தை வகை (சி.சி.பு.34, சிவாக்.); (*šaiva.*) a condition of the soul in its uplifted state when it is steeped in bliss and when the subject - object relationship vanishes completely, one of five *šuttāvattai.*

*[Skt. nir-mala > த. நின்மலதுரியாதீதம்.]*

**நின்மலம்** *ninmalam,* பெ.(n.) மாசின்மை; purity.

*[Skt. nir-mala > த. நின்மலம்.]*

**நின்மலரசம்** *ninmala-rašam,* பெ.(n.) பத்து வகை சாற்றுச் சத்துக்களில் ஒன்று (இது சாரணைக்குதவும். இதை 201 தரம் சாரணைத் தீர்த்தால் (ககனம்) வான்வழியே பாயலாம் எனக் கருதப்படுவது; (in Alchemy) one of the ten kinds by which mercury is animated. if this process is continued to 201 times. it will enable one to travel in the aerial regions and round the planets (சா.அக.).

*(நின்மலம் + ரசம்.)*

**நின்மலன்** *ninmalan,* பெ.(n.) 1. அழுக்கற்ற வனாகிய கடவுள்; God, as immaculate. *"நின்மலா போற்றி போற்றி" (திருவாச.5, 61).* 2. அருகன் (சூடா.); arhat.

*[Skt. nir-mala > த. நின்மலன்.]*

**நின்மலாவத்தை** *ninmalāvattai,* பெ.(n.) சாக்கிர முதலாயுள்ள ஐந்து வகையான உயிர் நிலைத் தொல்லைகளை நீக்குவதற்காக அடையும் நிலைகள்; (in philosophy) the physical and intellectual state attained by a practising yogi in each of the five stages when reaching the respective five stations of the soul with a view to seek deliverance from malam. They are five fold viz. 2. நின்மலசாக்கிரம்; soul coming to a full vision. 3. நின்மலசொற்பனம்; sould being affected by dream. 3. நின்மலசுழுத்தி; insensibility to sinful disires. 4. நின்மல துரியம்; reaching the regions of happiness. 5. நின்மலதுரியாதீதம்; enjoying transcendental bliss which is the highest state of the soul free from all corporal entanglements (சா.அக.).

*(நின்மலம் + அவஸ்தை.)*

**நின்மலி** *ninmali,* பெ.(n.) வில்வம் (நாமதீப.289); sacred bael.

*[Perh. nir-mala > த. நின்மலி.]*

**நின்மாலியம்** *ninmāliyam,* பெ.(n.) **நிர்மாலியம்** பார்க்க; see *nirmāliyam.* *"எந்தை நின்மாலியங் கவர்ந்தனன்" (காசிக.சிவ.வாயு.38).*

*[Skt. nir-malya > த. நின்மாலியம்.]*

**நின்மிதம்** *ninmitam,* பெ.(n.) **நிருமிதம்** (நாமதீப.691) பார்க்க; see *nirumidam.*

**நின்மிதி** *ninmidi,* பெ.(n.) 1. உண்டாக்குகை; formation, creation, making. 2. தொடக்கம்; beginning. *"நின்மிதி யின்றி யூர்பாடின்று" (மணிமே.30, 37).*

*[Skt. nir-miti > த. நின்மிதி.]*

**நின்மூடன்** *ninmūdan,* பெ.(n.) முழுமூடன்; absolute fool. *"நிலமத்தனை பொன்னை நின்மூடர்க் கீந்தால்" (திருமந்.501).*

*[Skt. nir-mudha > த. நின்மூடன்.]*

**நின்னாமன்** *ninnāman,* பெ.(n.) 1. பெயரில் லாதவன், அருகன் (சூடா.); arhat, as nameless. 2. சிவன் (நாமதீப.16); *Śiva.*

*[Skt. nir-nāmam > த. நின்னாமன்.]*

**நினாதம்** *ninādam,* பெ.(n.) ஓசை (வின்.); sound, noise.

*[Skt. ni-nāda > த. நினாதம்.]*

**நீகாசம்** *nīkāsam,* பெ.(n.) உறுதி (நாநார்த்த.); certainty.

*[Skt. nikaśa > த. நீகாசம்.]*

**நீசக்கிரகம்** *nīsa-k-kiragam,* பெ.(n.) 1. நட்பு நிலையில் இல்லாதகோள் (நீசத் தானத்திலிருக்கும் கிரகம்); (Astrol.) planet situated in *nīca-tānam.* 2. நிழல் கோள் களான ராகு கேதுகள்; nodes of the moon (யாழ்.அக.).

*[Skt. nīca+ > த. நீசக்கிரகம்.]*

**நீசத்தானம்** *nīsa-t-tānam,* பெ.(n.) கோளின் உச்சத்திற்கு ஏழாவதான இடம்; (Astrol.) position of the planets in the seventh house from the uccam, considered weak.

*[Skt. nīca+ > த. நீசத்தானம்.]*

**நீசதை** *nīsadai,* பெ.(n.) **நீசம்¹, 1** பார்க்க; see *nīsam.* *"என்னீசதைக்கு" (திவ்.இராமானுச. 48).*

*[Skt. nīcatā > த. நீசதை.]*

**நீசப்படு-தல்** *nīsa-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ஈனப்படுதல்; to become base, vile or degraded, as by mean or improper actions. 2. நீசத்தானமுறுதல்; (Astrol.) to be situated in *nīca-t-tām,* as a planet.

*[Skt. nīca > த. நீசம்+படு-.]*

**நீசபங்கரசயோகம்** *nīsa-banga-rāsa-yōgam,* பெ.(n.) கணிய ஓகவகையுள் (சோதிட யோகவகையுள்) நன்மை பயப்ப தொன்று (பெரியவரு.144); (Astrol.) a kind of auspicious *yōga.*

*[Skt. nīca+bhangarasa+yoga > த. நீச பங்கராயோகம்.]*

**நீசம்¹** *nīsam,* பெ.(n.) 1. இழிவு; meanness, vileness. *"நீச முயர்வா நோக்கங்கள்" (ஞானவா.தேவபூ.52).* 2. பள்ளம்; depression. 3. தாழ்ச்சி; lowness. *"வடாஅதுதிசை மேனாள் நீசமுற" (கம்பரா.அகத்.40).* 4. கிரக நிலை ஐந்தனுள் அது வலியிழந்து நிற்கும் நிலை; (Astrol.) debility of a planet, one of five *kiraka-nilai.* 5. கொடுமை (வின்.); cruelty, barbarity, savageness. 6. பொருத்த மில்லாத ஆண் பெண்களின் புணர்ச்சி; sexual union between ill-matched person. *"அடைவற நீசமென் றிரண்டுமாகுமே" (கொக்கோ.3, 6).*

*[Skt. nīca > த. நீசம்.]*

**நீசம்²** *nīsam,* பெ.(n.) மஞ்சள் (சங்.அக.); turmeric.

*[Skt. niśā > த. நீசம்.]*

**நீசராசி** *nīca-rāśi,* பெ.(n.) **நீசத்தானம்** பார்க்க; (C.G.) see *nīsa-t-tāṉam.*

*[Skt. nīca+rāsi > த. நீசராசி.]*

**நீசவாகனம்** *nīśa-vāgaṉam,* பெ.(n.) கழுதை (வின்.); ass, as a mean conveyance.

*[Skt. nīca+ vāhana > த. நீசவாகனம்.]*

**நீசன்** *nīśaṉ,* பெ.(n.) 1. இழிந்தோன்; low, vile person. *"நீசர் வெகுளி கெடுங்கால மின்றிப் பரக்கும்" (நாலடி, 68).* 2. **நீசக்கிரகம், 1** பார்க்க; (Astrol.) see *nīcakkiragam.*

*[Skt. nīca > த. நீசன்.]*

**நீதப்பிழை** *nīta-p-piḻai,* பெ.(n.) **நீதிக்கேடு** பார்க்க; see *nīti-k-kēḍu.*

*[Skt. nīta+ > த. நீதப்பிழை.]*

**நீதபரிமளம்** *nīta-parimaḷam,* பெ.(n.) சீதாங்க பாடாணம் என்னும் ஒருவகைச் செய்ந்நஞ்சு (யாழ்.அக.); a mineral poison.

**நீதம்** *nīdam,* பெ.(n.) 1. தகுதியானது; that which is suitable, proper. *"அருளாய் நிற்கும்நிலை கற்பதுவே நீதம்" (தாயு.பராபர. 353).* 2. முறைமை (நீதி); propriety, justice. *"பொல்லாத சேயெனில் தாய்தள்ளனீதமோ" (தாயு.சுகவாரி.3).* 3. தவசம் (தானியம்) (யாழ்.அக.); grain. 4. நற்பேறு (பாக்கியம்) (யாழ்.அக.); prosperity.

*[Skt. nīta > த. நீதம்.]*

**நீதம்பாதம்** *nīdam-pādam,* பெ.(n.) முறைமை (நீதி); justice (Loc.).

*[Skt. nīta+Perh.pāta > த. நீதம்பாதம்.]*

**நீதவான்** *nīdavāṉ,* பெ.(n.) 1. **நீதிமான்** பார்க்க; see *nītimāṉ(colloq.).* 2. நியாயாதி பதி (வின்.); judge.

*[Skt. nīta > த. நீதவான்.]*

**நீதன்**[1] *nīdaṉ,* பெ.(n.) **நீதிமான்** பார்க்க; see *nītimāṉ. "நீதன்... துன்மேத னூர்புரக்க வைத்து" (சேதுபு.சீதைகண்ட.9).*

*[Skt. nīta > த. நீதன்[1].]*

**நீதன்**[2] *nīdaṉ,* பெ.(n.) நீசன்; low, vile person. *"நீதரல்லார் தொழுமாமருகல்" (தேவா.660, 10).*

*[Skt. nīca > த. நீதன்[2].]*

**நீதாசனம்** *nīdāśaṉam,* பெ.(n.) வழக்குமன்றம் (யாழ்.அக.); court of justice.

*[Skt. nīdam > த. நீதாசனம்.]*

**நீதி** *nīdi,* பெ.(n.) 1. நயன், நியாயம்; equity, justice. *"நீதியாவன யாவையு நினைக்கிலேன்" (திருவாச.26, 2).* 2. முறைமை; discipline. *"கட்டமை நீதிதன்மேற் காப்பமைந்து" (சீவக.1145).* 3. ஒழுக்கநெறி; right conduct, morality. *"நீதியா லவர்கடம்மைப் பணிந்து" (பெரியபு. தடுத்தாட்.197).* 4. மெய் (பிங்.); truth. 5. உலகத்தோடு பொருந்துவகை (குறள்.97, உரை); conformity with the ways of the world. 6. இயல்பு; nature. *"ஊர்தியிற் சேறலு நீதியாகும்" (நம்பியகப்.83).* 7. தருமசாத்திரம்; law. *"உணர்ந்தாய் மறைநான்கு மோதினாய் நீதி" (திவ்.இயற்.2, 48).* 8. நடத்துவது (சி.போ.பா. பக்.20, சுவாமிநா.); that which guides. 9. வழிவகை (உபாயம்); means, contrivance. *"உலகமெல்லா மாண்டிட விளைக்கு நீதி" (சீவக.755).* 10. பார்வதி (கூர்மபு.திருக்.21); *pārvati.*

**த.வ. முறை, முறைமை**

*[Skt. nīti > த. நீதி.]*

**நீதிக்கேடு** *nīdi-k-kēḍu,* பெ.(n.) 1. நியாயத் தவறு; injustice, illegality. 2. ஒழுக்கத் தவறு; immorality.

**த.வ. முறைகேடு**

*[Skt. nīdi+ > த. நீதிக்கேடு.]*

**நீதிகர்த்தா** *niti-karttā,* பெ.(n.) முறை மன்றத் தலைவர்; judge (pond.).

*[Skt. niti+ > த. நீதிகர்த்தா.]*

**நீதிகர்மம்** *nidi-karmam,* பெ.(n.) பதி னோரங்குல நீளமுள்ள நூலை நாசியிற் செலுத்தி வாய் வழியாக வாங்குகை (யோகஞான.பக்.33); inserting a thread 11 inches long through the nostril and drawing it out of the mouth.

*[Skt. niti+ > த. நீதிகர்மம்.]*

**நீதிகெட்டவன்** *nidi-kettavan,* பெ.(n.) முறைமை தவறியவன்; unjust man.

*[Skt. niti > த. நீதி+கெட்டவன்.]*

**நீதிகேள்–தல்(நீதிகேட்டல்)** *nidi-kēl-,* 12 செ.கு.வி.(v.i.) வழக்கு விசாரித்தல் (வின்.); to hear or try a case.

த.வ. வழக்கு நேர் கேட்டல்

*[Skt. niti > த. நீதி+கேள்–.]*

**நீதிச்செல்வம்** *nidi-c-celvam,* பெ.(n.) தலை மழிப்பு (சௌளம்); tonsure ceremony of a child. *"தலைகுன்றா நீதிச்செல்வம் மேன்மேனீந்தி" (சீவக.366).*

*[Skt. niti > த. நீதி+செல்வம்.]*

**நீதிசாத்திரம்** *nidi-šāttiram,* பெ.(n.) அறு பத்து நாலு கலைகளுள் அரசியல் பற்றிய சாத்திரம் (வின்.); science of polity, one of *arupattu-nālu-kalai.*

*[Skt. niti+šāstra > த. நீதிசாத்திரம்.]*

**நீதிசாரம்** *nidi-šāram,* பெ.(n.) நீதி நூல்களில் ஒன்று (யாழ்.அக.); a diactic work.

*[Skt. niti+šara > த. நீதி+சாரம்.]*

**நீதித்தொழில்** *nidi-t-tolil,* பெ.(n.) ஒருவனுக்கு உரிய செய்கை (வின்.); one's proper or professional duty.

*[Skt. niti > த. நீதி+தொழில்.]*

**நீதிநியாயம்** *nidi-niyāyam,* பெ.(n.) 1. நீதி முறை; justice and reason. 2. சட்ட திட்டங்கள்; law, legislative enactments. 3. முறைமன்ற ஒழுங்கு; practice or procedure in the courts of law.

த.வ. முறைமை ஒழுங்கு

*[Skt. niti+ > த. நீதிநியாயம்.]*

**நீதிநூல்** *nidi-nūl,* பெ.(n.) 1. அறப் பொருள் களைப் பற்றிக் கூறும் நூல்; science of polity and ethics. *"வியாழவெள்ளிகள் துணிபு தொகுத்துப் பன்னீதி நூலுடையார் கூறியவாறு" (குறள், 662, உரை).* 2. சட்ட நூல் (வின்.); legal treatise.

த.வ. முறைநூல், அறநூல்

*[Skt. niti > த. நீதி+நூல்.]*

**நீதிநூலன்** *nidi-nūlan,* பெ.(n.) 1. நியாயப் பிரமாணிகள் (வின்.); legislator. 2. அருகன் (சது.); Arhat.

*[Skt. niti > த. நீதி+நூலன்.]*

**நீதிநெறி** *nidi-neri,* பெ.(n.) நல்லொழுக்கம் (வின்.); morality, moral conduct.

த.வ. நன்னெறி

*[Skt. niti > த. நீதி+நெறி.]*

**நீதிமதி** *nitimati,* பெ.(n.) மேள கர்த்தாக்களுள் ஒன்று (சங்.சந்.); (mus.) a primary *rāga.*

**நீதிமான்** *nidimān,* பெ.(n.) நன்னெறி நிற்போன்; just righteous man. nom. masc. sing. of *niti-mat.*

*[Skt. niti-mān > த. நீதிமான்.]*

**நீதியதிபதி** *nidi-y-adipadi,* பெ.(n.) முறைமன்ற நடுவர்; judge. *"நீதியதிபதி நாமுணர்வீர்" (வேதநாயகம்).*

*[Skt. niti+ > த. நீதி+அதிபதி.]*

**நீதியறிந்தோன்** *nīdi-y-arintōṉ,* பெ.(n.) அமைச்சர் (வின்.); minister of state.

*[Skt. nīti > த. நீதி+அறிந்தோன்.]*

**நீதியொழுங்கு** *nīdi-y-oḻuṅgu,* பெ.(n.) **நீதிநெறி** பார்க்க; see *nītineṟi.*

*[Skt. nīti > த. நீதி+ஒழுங்கு.]*

**நீதிராசா** *nīdi-rāsā,* பெ.(n.) **நீதியதிபதி** பார்க்க (j.); see *nītiyatipati.*

*[Skt. nīti+rāja > த. நீதிராசா.]*

**நீதிவழு** *nīdi-vaḻu,* பெ.(n.) முறைமைத் தவறு; injustice.

த.வ. முறைகேடு

*[Skt. nīti > த. நீதி+வழு.]*

**நீதிவான்** *nīdivāṉ,* பெ.(n.) 1. **நீதிமான்** பார்க்க; see *nīti-māṉ.* 2. **நீதியதிபதி** (இ.வ.) பார்க்க; see *nītiyatipati.*

*[Skt. nīti-māṉ > த. நீதிவான்.]*

**நீதிவிளக்கம்** *nīdi-viḷakkam,* பெ.(n.) முறை மன்றத்தில் செய்யும் முறை, நேர்கேட்பு (விசாரணை) (யாழ்.அக.); inquiry or trial of a suit or case.

*[Skt. nīti > த. நீதி+விளக்கம்.]*

**நீதிவிளங்கு-தல்** *nīti-viḷaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) **நீதிகேள்** (யாழ்.அக.) பார்க்க; see *nīdikēḷ.*

*[Skt. nīti > த. நீதி+விளங்கு-.]*

**நீதினி** *nīdiṉi,* பெ.(n.) முறைமை தவறாதவள் (நன்.146, மயிலை); she who is just.

*[Skt. nīti > த. நீதினி.]*

**நீபம்**[1] *nībam,* பெ.(n.) 1. **நீர்க்கடம்பு** (பிங்.) பார்க்க; see *nīrkkaḍambu.* 2.வெண்கடம்பு (மலை.); common Indian oak. 3. செங் கடம்பு; small Indian Oak. 4. மரவகை. 5. பிற் கொழுங்கால் என்னும் விண்மீன் (உத்திரட் டாதி) (பிங்.); the 26th naksatra.

*[Skt. nīpa > த. நீபம்[1].]*

**நீபம்**[2] *nīpam,* பெ.(n.) காரணம் (பிங்.); cause, reason.

*[Skt. nibha > த. நீபம்[2].]*

**நூதனக்காரன்** *nūtaṉakkāraṉ,* பெ.(n.) **நூதனன், 3** (வின்.) பார்க்க; see *nūtaṉaṉ.*

*[Skt. nūtaṉa > த. நூதனக்காரன்.]*

**நூதனம்** *nūtaṉam,* பெ.(n.) 1. புதுமை (திவா.); newness, novelty, strangeness. 2. புதியது; anything new, uncommon or extra-ordinary. *"நொய்யப் பஃறுகி னூதனஞ் சாத்தினார்" (கந்தபு.தேவகிரி.26).*

*[Skt. nūtana > த. நூதனம்.]*

**நூதனம்விடு-த்தல்** *nūtaṉam-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஆர்வமான கதைகள் கூறி மகிழ்வித்தல் (j.); to amuse with curious stories.

*[Skt. nūtana > த. நூதனம்+விடு-.]*

**நூதனன்** *nūtaṉaṉ,* பெ.(n.) 1. புதியவன்; new-comer. 2. புதியனவற்றில் விருப்பமுடையவன்; person fond of curiosities. 3. புதிய செய்திகளை உண்டாக்குபவன்; innovator.

*[Skt. nūtana > த. நூதனன்.]*

**நூதனி** *nūtaṉi,* பெ.(n.) 1. புதிய ஆள்; new comer, stranger, male or female. 2. **நூதனன், 3** பார்க்க; see *nūtaṉaṉ.*

*[Skt. nūtana > த. நூதனி.]*

**நூபம்**[1] *nūpam,* பெ.(n.) எருது (அக.நி.); bull, bullock.

*[Skt. anūpa > த. நூபம்.]*

**நூபுரம்** *nūpuram,* பெ.(n.) 1. பாதகிண்கிணி (திவா.); anklets formed of little bells.

2. சிலம்பு (சூடா.); tinkling anklets. *"ஆடுவார் பொருவி னூபுரத்தை" (கம்பரா. நகர.56).*

*[Skt. nūpura > த. நூபுரம்.]*

**நூனதை** *nūṉatai,* பெ.(n.) குறைவு; defect. *"சிவனுக்கு... நூனதை ஆரோபித்தலின் சுவாமித் துரோகிகளாய்" (சிவசமவா.பக்.38).*

*[Skt. nyūna-tā > த. நூனதை.]*

**நூனம்**[1] *nūṉam,* பெ.(n.) உறுதி (சூடா.); certainty.

*[Skt. nūṉam.]*

**நூனம்**[2] *nūṉām,* பெ.(n.) குறைபாடு (சூடா.); defect, fault, blemish.

*[Skt. nyūna > த. நூனம்.]*

**நூனாதிக்கம்** *nūṉātikkam,* பெ.(n.) **நூனாதிகம்** (யாழ்.அக.) பார்க்க; see *nūṉātigam.*

**நூனாதிகம்** *nūṉātigam,* பெ.(n.) குறை சொல்லுங் குணம் (வின்.); finical criticism.

*[Skt. nyūnādhika > த. நூனாதிகம்.]*

**நூனாயம்** *nūṉāyam,* பெ.(n.) சூது (வின்.); trick.

**நேத்திரஅப்பிசியந்தம்** *nēttiraabiśiyantam,* பெ.(n.) ஒரு கண்ணோய், இதற்கு கற்பூர சிலாசத்து, கடுக்காய், மரமஞ்சள், காவிக்கல், இந்துப்பு, சமனெடையாகத் தண்ணீரில் கண்களுக்குப் பற்றுப்போட அபிசியந்தம் குணப்படும்; an eye disease. It is cured by applying of a paste of the drugs mentioned above with water (சா.அக.).

*[நேத்திரம் + அபிசியந்தம்.]*

**நேத்திரஉபத்திரவாதம்** *nēttira-upattiravādam,* பெ.(n.) **கண்மயக்கு வாதம்** பார்க்க; see *kaṇmayakku-vātam* (சா.அக.).

*[நேத்திரம் + உபத்திரவாதம்.]*

**நேத்திரக்கடுப்பு** *nēttira-k-kaḍuppu,* பெ.(n.) கண்கடுப்பு; irritation of the eyes (சா.அக.).

*[நேத்திரம் + கடுப்பு.]*

*[Skt. nētra > த. நேத்திரம்]*

**நேத்திரக்கழுநீர்** *nēttira-k-kaḻunīr,* பெ.(n.) கண்ணோயில் கண்ணைக் கழுவ பயன் படுத்தும் ஒரு மருந்து நீர்; lotion for cleaning the diseased eyes (சா.அக.).

**நேத்திரக்காப்பு** *nēttira-k-kāppu,* பெ.(n.) கோயில் மூர்த்திக்கு ஒப்பனை செய்கை; adoring an idol in the temple.

*[Skt. nētra > த. நேத்திரம் + காப்பு.]*

**நேத்திரக்காப்புச்சாத்து** *nēttira-k-kāppu-c-cāttu,* பெ.(n.) சிலைக்கு அழகு (மூர்த்திக்கு அலங்கார) செய்யும் பொருட்டுக் கோயிலினுட் கதவை அடைக்கை (இ.வ.); closing the inner of a temple at certain times, as for adorning the deity (Loc.).

*[நேத்திரம்+காப்பு+சாத்து.]*

*[Skt. nētra > த. நேத்திரம்.]*

**நேத்திரக்குத்தல்** *nēttira-k-kuttal,* பெ.(n.) கண்குத்தல்; penetrating or pin prick pain in the eye (சா.அக.).

*[நேத்திரம் + குத்தல்.]*

**நேத்திரக்குமுதம்** *nēttira-k-kumudam,* பெ.(n.) கண்ணின் கருவிழியில் சதை வளர்ச்சி; morbid growth of flesh over the pupil or in the black of the eye (சா.அக.).

*[நேத்திரம் + குமுதம்.]*

**நேத்திரங்காட்டி** *nēttiraṅ-kāṭṭi,* பெ.(n.) **நேத்திரநாயகம்** பார்க்க; see *nēttira-nāyagam* (சா.அக.).

*[நேத்திரம் + காட்டி.]*

**நேத்திரகண்டு** *nēttiragaṇḍu,* பெ.(n.) கண்தினவு; itching of the eye (சா.அக.).

*[நேத்திரம் + கண்டு.]*

**நேத்திரகமலி** *nēttirakamali,* பெ.(n.) 1. நேத்திரஞ்சிமிட்டி; a kind of plant. 2. **கண்சிமிட்டிப்பூடு** பார்க்க; see *kaṇcimiṭṭi-p-pūḍu* (சா.அக.).

**நேத்திரகாசம்** *nēttirakāsam,* பெ.(n.) 1. கண் புரை (கண்காசம்); cataract. 2. கண்பூ; opacity of the cornea. 3. **கண்காசம்** பார்க்க; see *kaṇkāšam* (சா.அக.).

*[நேத்திரம் + காசம்.]*

**நேத்திரச்சதம்** *nēttira-c-cadam,* பெ.(n.) கண்மடல் (யாழ்.அக.); eye-lid.

*[**Skt.** nētra+cata > த. நேத்திரச்சதம்.]*

**நேத்திரரசம்** *nēttira-rašam,* பெ.(n.) கண்ணீர்; tears (சா.அக.).

*[நேத்திரம் + ரசம்.]*

**நேத்திரசிராவம்** *nēttira-sirāvam,* பெ.(n.) கண்ணினின்று நீரும் பீளையும் வடிந்து கொண்டிருக்கும் ஒருவகைக் கண்நோய்; an eye disease marked by slimy secretion and mucopurulent discharge from the eyes (சா.அக.).

*[நேத்திரம் + சிராவம்.]*

**நேத்திரசுக்கிலம்** *nēttira-šukkilam,* பெ.(n.) கண்ணினின்று விந்துவைப்போல் வெண்மை யான பிசுபிசுப்புள்ள நீர் வடியும் கண்ணோய்; an eye disease attended with white slimy secretion from the eyes (சா.அக.).

*[நேத்திரம் + சுக்கிலம்.]*

**நேத்திரச்சுடர்** *nēttira-c-cuḍar,* பெ.(n.) கற்பூரம்; camphor (சா.அக.).

*[நேத்திரம் + சுடர்.]*

**நேத்திரசூலை** *nēttira-šūlai,* பெ.(n.) கண்ணி லுண்டாகும் குத்தல் வலி; acute pain in the eyes (சா.அக.).

*[நேத்திரம் + சூலை.]*

**நேத்திரத்தம்பம்** *nēttira-t-tambam,* பெ.(n.) வாதத்தினால் கண்விழி உணர்ச்சியறல்; paralysis of the eye (சா.அக.).

*[நேத்திரம் + தம்பம்.]*

**நேத்திரத்தம்பவாதம்**[1] *nēttira-t-tambavātam,* பெ.(n.) கண்களைக் கையால் தடவிப் பார்க்கில் ஒட்டாங் கிளிஞ்சலைப் போல் தோற்றும்படி தம்பிக்கும் ஒருவகைக் கண்ணோய்; a disease in which the eye ball is so hardered that when touched, it makes one feel as if it is a brivalve shell. It is said to be due to windly humour of the system (சா.அக.).

*[நேத்திரம் + தம்பம் + வாதம்.]*

**நேத்திரத்தம்பவாதம்**[2] *nēttira-t-tamba vādam,* பெ.(n.) வடமொழியில் திர்க்குத்தம்ப வாதம் எனக் குறிப்பிடும் உணவு நடைமுதலிய குற்றங்களினால் விழிகளின் மூலத்தில் வாயு மிகுந்து, கண், புருவம், இமையாகிய இடங் களில் உணர்ச்சியற்று, கண்களைத் தம்பிக்கச் செய்யும் ஒரு வகை ஊதை (வாத) நோய்; ; an eye disease marked by loss of sensation in the eye brows, eye lids and pupil. It is a kind of paralysis of the muscles of the eyes said to be due derangement of windy humour of the system arising from the errors in diet and defects of physical functions (சா.அக.).

*[நேத்திரம் + தம்பம் + வாதம்.]*

**நேத்திரத்தர்ப்பணம்** *nēttirattarppaṇam,* பெ.(n.) காற்றோட்டம், தும்பு, தூசு இவை களில்லாவிடத்தில் நோயாளியை படுக்க வைத்து உளுத்த மாவை தண்ணீரில் பிசைந்து இரண்டு கண்களைச் சுற்றிலும் பற்றுப்போட்டு, கண்களை மூடிக்கொண்டு இளஞ்சூடுள்ள நெய்யை இரப்பை அமிழும்வரை ஊற்றியபின்

கண்களை மெள்ள மெள்ளத் திறந்துவிடச் செய்யுமோர் ஆயுர்வேத பண்டுவமுறை; ; a treatment given in general to the diseases of the eye according to the process of Ayurveda. It is as follows. The patient is made to be down in a dustless room where there is no breeze. The flour of black gram mixed water is applied around the eyes and a lukeworm cow's ghee is poured on the eyes till the eye lids get completely immersed or covered with ghee. Then, the eyes are opened frequently so as to allow the ghee enter into the eyes (சா.அக.).

*[நேத்திரம் + தர்ப்பணம்.]*

**நேத்திரத்திமிர்** *nēttira-t-timir,* பெ.(n.) கண் திமிரம்; loss of vision or blindness due to the affection or loss of sensation in the optic nerve (சா.அக.).

*[நேத்திரம் + திமிர்.]*

**நேத்திரத்துலக்கம்** *nēttira-t-tulakkam,* பெ.(n.) கண்விளக்கம்; clearness of vision (சா.அக.).

*[நேத்திரம் + துலக்கம்.]*

**நேத்திரத்தோசம்**[1] *nēttira-t-tōsam,* பெ.(n.) 1. கண்ணுக்குரிய அல்லது வேறு காரணங் களினால் ஏற்படும் குற்றங்கள்; natural or langenital predisposition to diseases of the eye. 2. பார்வை தோஷம்; evil effects of malignant eyes (சா.அக.).

*[நேத்திரம் + தோஷம்.]*

**நேத்திரதோசம்**[2] *nēttira-tōsam,* பெ.(n.) பார்வை மங்கல்; dimness of vision, defective sight.

*[நேத்திரம் + தோஷம்.]*

*[Skt. nētra+kāsam > த. நேத்திரதோசம்.]*

**நேத்திரதாரகா** *nēttiratāraka,* பெ.(n.) மண்டலம்; கருவிழி; black of the eye (சா.அக.).

*[நேத்திரம் + தாரகா.]*

**நேத்திரநாயகம்** *nēttiranāyagam,* பெ.(n.) கண்கட்டிப்பூடு; a plant used in the abscess of the eye lids (சா.அக.).

**நேத்திரநிருமாலி** *nēttiranirumāli,* பெ.(n.) சிறு சண்பகம்; cananga flower tree (சா.அக.).

**நேத்திரநோக்கம்** *nēttiranōkkam,* பெ.(n.) கண் பார்வை; eye sight, vision (சா.அக.).

*[நேத்திரம் + நோக்கம்.]*

**நேத்திரநோய்** *nēttiranōy,* பெ.(n.) 1. கண்ணோய்; disease of the eye in general. 2. கண்வலி; pain in the eye (சா.அக.).

*[நேத்திரம் + நோய்.]*

**நேத்திரப்பச்சை** *nēttira-p-paccai,* பெ.(n.) கதிர்ப்பச்சை; a fragrant plant used in perfumes (சா.அக.).

*[நேத்திரம் + பச்சை.]*

**நேத்திரப்படலம்** *nēttira-p-padalam,* பெ.(n.) வெள்விழியில் மாசுபடரும் ஒரு வகைக் கண்ணோய்; coats or films over the sclerotic of the eye (சா.அக.).

*[நேத்திரம் + படலம்.]*

**நேத்திரப்பால்** *nēttira-p-pāl,* பெ.(n.) பனங்கள்; palmyra toddy (சா.அக.).

*[நேத்திரம் + பால்.]*

**நேத்திரப்பிடி** *nēttira-p-pidi,* பெ.(n.) கோயில் மூர்த்தியின் கண்மடல்களிற்சாத்தும் உயர்ந்த வாசனைச் சந்தனத்தாலாகிய காப்பு; the well-ground perfumed sandal paste used in adorning the eyes of an idol (Loc.).

[நேத்திரம் + பிடி.]

[Skt. nētra > த. நேத்திரம்.]

**நேத்திரப்பிண்டம்** *nēttira-p-pindam,* பெ.(n.) கண்விழி; eye ball (சா.அக.).

[நேத்திரம் + பிண்டம்.]

**நேத்திரப்புகை** *nēttira-p-pugai,* பெ.(n.) கண் புகைச்சல்; smoky affection of the eye (சா.அக.).

[நேத்திரம் + புகை.]

**நேத்திரபிரியந்தம்** *nēttira-piriyandam,* பெ.(n.) கடைக்கண்; corner of the eye (சா.அக.).

**நேத்திரபடலரோகம்** *nēttira-padala-rōgam,* பெ.(n.) கண்ணோய் வகை (M.L.); cataract.

[நேத்திரம் + படலம் + ரோகம்.]

[Skt. nētra > த. நேத்திரம்.]

[Skt. roha > த. ரோகம்.]

**நேத்திரபாடவம்** *nēttira-pādavam,* பெ.(n.) கண்ணின் பார்வைத் திறன்; keen eyesight, strong power of vision.

[Skt. nētra > த. நேத்திரபாடவம்.]

**நேத்திரபிண்டம்** *nēttirapindam,* பெ.(n.) 1. கண்விழி (யாழ்.அக.); eye-ball. 2. பூனை; cat.

[Skt. nētra > த. நேத்திர+பிண்டம்.]

**நேத்திரபிந்து**[1] *nēttira-pindu,* பெ.(n.) கண்ணுக்கு விடும் மருந்து (இக்.வ.); medicinal solution for the eye.

[Skt. nētra > த. நேத்திரபிந்து.]

**நேத்திரபிந்து**[2] *nēttira-pindu,* பெ.(n.) கண் சிவப்பு; inflammation of the eye (சா.அக.)

[நேத்திரம் + பிந்து.]

**நேத்திரபுட்டி** *nēttira-putti,* பெ.(n.) செங்கத்தாரி; false peacock's foot tree (சா.அக.).

**நேத்திரபூளை** *nēttira-pūlai,* பெ.(n.) கண் பீளைச் செடி; long leaved trumpet plant (சா.அக.).

[நேத்திரம் + பூளை.]

**நேத்திரம்**[1] *nēttiram,* பெ.(n.) 1. கண் (திவா.); eye. 2. மயிற்பீலிக்கண்; peacock-eye. *"சுருள்பங்கி நேத்திரத்தா லணிந்து" (திவ். பெரியாழ்.3, 4, 5).* 3. பட்டாடை (திவா.); silk cloth. *"காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டும்" (தேவா.676, 2).* 4. **நேத்திரமுத்திரை** (சதாசிவ.130, உரை) பார்க்க; see *nēttira-muttirai(śaiva).*

[Skt. nētra > த. நேத்திரம்.]

**நேத்திரம்**[2] *nēttiram,* பெ.(n.) 1. கண்வேர்; nerves and blood vessels of the eye. 2. மருந்துகளை ஆசன வழியாய் உள்ளே புகட்டுவதற்காக அமைத்த ஓர் கருவி; an apparatus for introducing or throwing liquid into the rectum (சா.அக.).

**நேத்திரமங்களம்** *nēttira-mangalam,* பெ.(n.) சிலை முதலியவற்றிற்குக் கண் திறந்து விடுகை (நயனமோட்சம்); forming the eyes of an image or picture.

[நேத்திரம் + மங்கலம்.]

[Skt. nētra > த. நேத்திரம்.]

**நேத்திரமஞ்சம்** *nēttira-mañjam,* பெ.(n.) மிளிறை; an unknown plant (சா.அக.).

**நேத்திரமருத்துவம்** *nēttira-maruttuvam,* பெ.(n.) கண் மருத்துவம் (வைத்தியம்); ophthalmic treatment (சா.அக.).

**நேத்திரமலம்** *nēttiramalam,* பெ.(n.) கண் பீளை; gummy secretions from the eye-muco parulence (சா.அக.).

**நேத்திரமாலி** *nēttiramāli,* பெ.(n.) சிறு சண்பகம்; cananga flower tree (சா.அக.).

**நேத்திரமுத்திரை** *nēttira-muttirai,* பெ.(n.) சுண்டு விரலையும் பெருவிரலையுங் கூட்டி நடுவணுள்ள மூன்று விரலையும் உயர நிமிர்த்திக் கண்ணுக்கு எதிரிற்காட்டும் முத்திரை வகை (செந்.x, 424); *(śaiva)* a hand-pose in which the thumb and the little finger are linked together and the other three fingers are held erect in front of the eyes.

*[Skt. nētra > த. நேத்திர+முத்திரை.]*

**நேத்திரபேதி** *nēttira-bēdi,* பெ.(n.) கண்களில் நிற்கும் மாசுநீர் கழலும்படி கண்ணுக்குத் தடவுமருந்து; a collyrium to the eyes for purpose of bring out the collection of morbid fluid (சா.அக.).

**நேத்திரராசி** *nēttirarāśi,* பெ.(n.) இருவாட்சி; a kind of jasmine (சா.அக.).

**நேத்திரரோகம்** *nēttira-rōgam,* பெ.(n.) கண்ணோய்; disease around the eye (colloq.).

*[Skt. nētra+ > த. நேத்திரரோகம்.]*

**நேத்திரவர்த்தமம்** *nēttiravarttamam,* பெ.(n.) 1. கண்ணிமை; eye laid. 2. கண்ணிமை நோய் (ரோகம்); diseases of the eye lid. 3. கண்ணின் துளை (துவாரம்) அல்லது புரை; the course of a sinus or cavity occuring in the region of the eyes (சா.அக.).

**நேத்திரவலி** *nēttiravali,* பெ.(n.) 1. கண்வலி; eye pain. 2. கண்வலிப்பூஞ்செடி; a flowering plant used in eye disease. 3. கண் சிவத்தல்; inflammation of the eye (சா.அக.).

**நேத்திரவாயு**[1] *nēttira-vāyu,* பெ.(n.) 1. கண்ணரம்புவலி; neuralgia around the eyes. 2. கண்ணோய் வகை (வின்.); ophthalmia.

*[Skt. nētra+vāyu > த. நேத்திரவாயு.]*

**நேத்திரவாயு**[2] *nēttiravāyu,* பெ.(n.) வாயுக் கோளாறினாலேற்படும் கண்ணோய்; a disease of the eye due to the derangement of vayu in the system inflammation of the eyes (சா.அக.).

**நேத்திரவாழை** *nēttira-vāḻai,* பெ.(n.) மேற்றிசைக் கடற்கரைத் தேசங்களில் (மலையாளத்தில்) விளைவதும், நோயணு காதிருக்க வேண்டி சுட்டுக் கறிசமைப்பதுமான வாழையிற் கடைப்பட்ட வகை (சாதி); an inferior special of plantain tree grown in the western coast (Malabar). It is baked and used in curries as a preventive for diseases. Chips prepared out of it are very tasty, ripe fruits are also eaten (சா.அக.).

**நேத்திரவிதி** *nēttira-vidi,* பெ.(n.) கண்ணோய் களைப் பற்றிய நூல் (யாழ்.அக.); a treatise on diseases of the eye.

*[Skt. nētra+vidhi > த. நேத்திரவிதி.]*

**நேத்திரவிரணம்** *nēttiraviraṇam,* பெ.(n.) கண்ணின் விரணம்; ulceration of the eye (சா.அக.).

**நேத்திரவிரணம்போக்கி** *nēttiraviraṇam-pōkki,* பெ.(n.) சதகுப்பை சக்களத்தி எனப்படும் காட்டுச் சதகுப்பை; a plantakin to common dill (சா.அக.).

**நேத்திரவுபத்திரவாதம்** *nēttiravupattira vādam,* பெ.(n.) **கண்மயக்குவாதம்** பார்க்க; see *kaṇmayakku-vādam* (சா.அக.).

**நேத்திரவைத்தியம்** *nēttira-vaittiyam,* பெ.(n.) கண் மருத்துவம்; ophthalmic treatment (சா.அக.).

**நேத்திரவைத்தியன்** *nēttiravaittiyaṉ,* பெ.(n.) கண் மருத்துவன் (வின்.); eye-doctor.

**த.வ. கண் மருத்துவன்**

*[Skt. nētra+vaidya > த. நேத்திரவைத்தியன்.]*

**நேத்திராஞ்சனம்**[1] *nēttirāñjaṉam,* பெ.(n.) கண்மருந்து வகை (யாழ்.அக.); a medicine for the eye.

*[Skt.nētra+añjana > த. நேத்திராஞ்சனம்.]*

**நேத்திராஞ்சனம்**[2] *nēttirāñjaṉam,* பெ.(n.) 1. கண்மருந்து; collyrium for the eye salve. 2. இமையைப் பற்றிய ஒருவகைக் கண்ணோய்; a disease of the eye lid. 3. கண்ணிலிடும் ஒரு மந்திரீக மை; a magic paint used for finding hidden treasured by applying it to the eye (சா.அக.).

**நேத்திராஞ்சனம்**[3] *nēttirāñjaṉam,* பெ.(n.) கருடப் பார்வைக்கு (திருட்டிக்க)ச் சமானமான பார்வை கிடைப்பதாகக் கருதப்படும் நாக சிந்தூரம், இரசகற்பூரம், வெண்காரம், சவ்வீராஞ்சனம், படிகாரம், தாம்பூர பற்பம், அய சிந்தூரம், பச்சைக் கற்பூரம், கடுகுரோகிணி, தேத்தாங்கொட்டை, இந்துப்பு, பால்துத்தம், திரிகடுகு, திரிபலம், அதிமதுரம் சமயிடை கொண்டு புங்கம் பட்டைச் சாற்றிலரைத்து மாத்திரை செய்து கண்ணிற்கிடும் கலிங்கம்; a pill rubbed with water and applied to the eyes to improve its vision. It is prepared with various drugs as mentioned in the text above (சா.அக.).

**நேத்திராதி** *nēttirādi,* பெ.(n.) நோக்கு நோக்கிச் செடி; an unknown plant probably used to improve the vision (சா.அக.).

*[நேத்திர + ஆதி.]*

**நேத்திரராம்பு** *nēttirarāmbu,* பெ.(n.) கண்ணீர்; tears (சா.அக.).

**நேத்திராமயம்** *nēttirāmayam,* பெ.(n.) கண் முழுவதும் பற்றிய நோய்; a disease affecting the whole eye (சா.அக.).

*[Skt. nētra+āma-ya > த. நேத்திராமயம்.]*

**நேத்திராமியம்** *nēttirāmiyam,* பெ.(n.) நேத்திராமயம்; which see (சா.அக.).

*[நேத்திரம் + ஆமியம்.]*

**நேத்திராரி**[1] *nēttirāri,* பெ.(n.) கள்ளி (L.); spurge.

*[Skt. nētrāri > த. நேத்திராரி.]*

**நேத்திராரி**[2] *nēttirāri,* பெ.(n.) கள்ளி மரம்; any spurge tree (சா.அக.).

**நேத்திராவுடதம்** *nēttirāvuḍadam,* பெ.(n.) கண் மருந்து (நேத்திராவுடதம்); medicines (சா.அக.).

*[நேத்திரம் + அவுடதம்.]*

*[Skt. nētra+ausadha > த. நேத்திராவிடதம்.]*

**நேத்திரானந்தம்** *nēttirāṉandam,* பெ.(n.) **நேத்திரோற்சவம்** பார்க்க; see *nēttirōṟśavam.*

*[Skt.nētra+ā-nanda>த. நேத்திரானந்தம்.]*

**நேத்திரோற்சவம்** *nēttirōṟśavam,* பெ.(n.) கண்ணுக்கு விருப்பமான காட்சி (யாழ்.அக.); sight pleasing to the eyes.

*[Skt.nētra+ut-sava > த. நேத்திரம் + உற்சவம்]*

**நேத்திரௌசதம்** *nēttirouśadam,* பெ.(n.) நேத்திராவுடதம்; medicines applicable to the diseases of the eye (சா.அக.).

*[நேத்திரம் + அவுஷதம்.]*

**நேதா** *nētā,* பெ.(n.) தலைவன்; ruler, master, lord. *"நினைந்தளித் துயிரளிக்கு நேதாவாகி" (வேதாரணியிரவா.6).*

*[Skt.nētā.nom.sing. of nētr > த. நேதா.]*

**நேதி**[1] *nēti,* பெ.(n.) முறை; routine duty. *"நேதிமதகலை யாரவார" (திருப்பு.394).*

*[Skt. niyati > த. நேதி.]*

**நேதி**[2] *nēti,* பெ.(n.) 'இன்னபடியன்று' எனப் பொருள்படும் வடமொழித்தொடர் (சங்.அக.); a Sanskrit phrase meaning 'not like this'.

*[Skt. nēti > த. நேதி.]*

**நேந்தாடுபாவை** *nēndāḍu-pāvai,* பெ.(n.) சேந்தாடுபாவை; an unknown plant (சா.அக.).

*[நேந்தாடு + பாவை.]*

**நேந்திரம்** *nēndiram,* பெ.(n.) ஒரு வகை வாழை; a kind of banana (சா.அக.).

**நேபத்தியம்** *nēpattiyam,* பெ.(n.) 1. அலங்காரம் (இலக்.அக.); decoration. 2. வேடம் (இலக்.அக.); guise, dress. 3. நாடகவரங்கில் வேடம்பூணும் மறைவிடம் (இலக்.அக.); place behind the stage, tiring-house. 4. நாடக மேடை (இக்.வ.); stage.

*[Skt. nēpathya > த. நேபத்தியம்.]*

**நேபம்** *nēbam,* பெ.(n.) 1. கண்ணீர்; tears. 2. தண்ணீர்; ordinary water (சா.அக.).

**நேபாலிகை**[1] *nēpāligai,* பெ.(n.) செய்ந்நஞ்சு வகை (மூ.அ.); a kind of poison.

*[cf. nēpālikā > த. நேபாலிகை.]*

**நேபாலிகை**[2] *nēpāligai,* பெ.(n.) ஒரு வகைச் செய்ந்நஞ்சு; a kind of poison perhaps arsenic found in Nepal (சா.அக.).

**நேபாளங்கரும்பு** *nēpāḷaṅ-karumbu,* பெ.(n.) நேப்பாள தேசத்தில் விளையும் கரும்பு; sugarcane grown in Nepal (சா.அக.).

*[நேபாளம்+கரும்பு.]*

**நேபாளங்கொட்டை** *nēpāḷaṅ-koṭṭai,* பெ.(n.) நேர்வாளங்கொட்டை; croton seed or nut. (சா.அக.).

*[நேபாளம் + கொட்டை.]*

**நேபாளசம்** *nēpāḷašam,* பெ.(n.) நேப்பாளத்தில் கிடைக்கும் ஒருவகைக் களிம்பேறிய செம்பு; a kind of impure copper probably found in Nepal (சா.அக.).

**நேபாளவேம்பு** *nēpāḷa-vēmbu,* பெ.(n.) நேப்பாளத்தில் விளையும் வேப்பமரம்; margosa tree of Nepal (சா.அக.).

*[நேபாளம் + வேம்பு.]*

**நேபாளம்**[1] *nēpāḷam,* பெ.(n.) தேசம் ஐம்பத்தாறனுள் ஒன்று (வின்.); the kingdom of Nepal, one of 56 *tēcam.*

*[Skt. nēpāla > த. நேபாளம்.]*

**நேபாளம்**[2] *nēpāḷam,* பெ.(n.) 1. நேர்வாளம்; purgative plant. 2. சீமையாமணக்கு; Nepal castrol plant (சா.அக.).

**நேபாளி** *nēpāḷi,* பெ.(n.) **நேத்திரராசி** பார்க்க; see *nēttirarāši* (சா.அக.).

**நேமகம்**[1] *nēmagam,* பெ.(n.) 1. அமர்த்தம்; appointment. 2. தீர்மானம் (வின்.); determination. 3. திருமண உறுதி (வின்.); betrothal. 4. காணிக்கை நேர்ந்துவைக்கை (இ.வ.); dedication to a deity. 5. ஒழுங்கு; orderliness. *"நேமகஞ் சேர் முத்துப்பவளம்" (கொண்டல்விடு.406).*

*[Skt. ni-yāmaka > த. நேமகம்.]*

**நேமகம்**[2] *nēmagam,* பெ.(n.) இருப்பிடம்; hall, residence. *"நீதானெழுந்தருளு நேமகத்தின்" (கொண்டல்விடு.58).*

*[Skt. nigama > த. நேமகம்.]*

**நேமநாற்சுகம்** *nēmanāṟ-šugam,* பெ.(n.) கருப்பு அகரம்; a bazaar drug (சா.அக.).

**நேமநிட்டை** *nēmaniṭṭai,* பெ.(n.) நோன்புகளை (விரதங்களை) உறுதியோடு செய்கை; rigid observance of prescribed rites.

*[Skt. niyama-nisdhā > த. நேமநிட்டை.]*

**நேமம்**[1] *nēmam,* பெ.(n.) 1. பணியமர்த்தம்; appointment. 2. நாட்கருமங்களும் கடைப்பிடி (நியமங்)களும்; daily rites and observances. 3. விதிமுறைமை; regulation.

*"நேமக்கலை மகளும்" (கொண்டல்விடு.8).* 4. ஊழ் (வின்.); destiny, fate.

*[Skt. niyama > த. நேமம்¹.]*

**நேமம்²** *nēmam,* பெ.(n.) 1. நேரம் (யாழ்.அக.); time. 2. சாயுங்காலம்; evening. 3. பங்கு; share. 4. பிளப்பு; fissure. 5. வேர்; root. 6. மேலிடம்; upper part. 7. வேலி; hedge, fence. 8. ஏமாற்றுகை; cheating.

*[Skt. nēma > த. நேமம்².]*

**நேமம்³** *nēmam,* பெ.(n.) 1. காலம்; period. 2. பாதி; half (சா.அக.).

**நேமன்** *nēmaṉ,* பெ.(n.) சீரிய ஒழுக்க முள்ளவன்; person of exemplary conduct. *"செயமொடு கோசலம் வாழு நேமன்" (இராமநா.பாலகா.1).*

*[Skt. nēma > த. நேமன்.]*

**நேமனம்** *nēmaṉam,* பெ.(n.) **நியமனம்** (இ.வ.) பார்க்க; see *niyamaṉam.*

த.வ. அமர்த்தம்

*[Skt. ni-yamana > த. நேமனம்.]*

**நேமி-த்தல்** *nēmi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. அமர்த்துதல் (நியமி); to appoint. *"நேமியாத பாங்கியர்" (தணிப்பா.i, 327, 26).* 2. சிந்தித்தல்; to conceive. *"நற்கணி நேமித்தெழுதாச் சித்திர வடிவார்தோள்" (திருப்பு.598).*

த.வ. அமர்த்தல்

*[Skt. niyama > த. நியமி¹-த்தல். நியமித்தம்→ நியமித்தல்]*

**நேமி²** *nēmi,* பெ.(n.) 1. வட்டம் (திவா.); circle. 2. தேருருளை; wheel of a chariot. *"தேர்முடுக... விளங்கு சுடர்நேமி" (குறுந்.189).* 3. சக்கராயுதம்; discus. *"திண்பூஞ் சுடர்நுதி நேமியஞ் செல்வர்" (திவ்.இயற்.திருவிருத்.9).* 4. ஆளுமைச்சக்கரம்; wheel of sovereignty. *"நேமியுய்த்த நேஎ நெஞ்சின்" (புறநா.3).* 5. **சக்கரவாளம்** பார்க்க; see *sakkaravāḷam. "நேமி முதல்... நெடுங்குன்றம்" (பரிபா.15, 4).* 6. பூமி (திவா.); earth. 7. மோதிரம் (பிங்.); ring. 8. **சக்கரவாகம், 1** பார்க்க; see *sakkaravāgam. "பொலஞ்சூட்டு நேமி வாண்முகந் துமிப்ப" (குறுந்.227).* 9. சக்கரப்படையையுடைய திருமால்; Visnu, as wielding the discus. *"நேமியோ குலிசியோ நெடுங் கணிச்சியோ" (கம்பரா.பிணிவீட்.70).* 10. தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர்; an Arhat, one of 24 *tirttaṅkarar. "நிகரி னேமிதன்ணகர்" (சீவக.912).*

**நேமி³** *nēmi,* பெ.(n.) 1. கடல்; ocean. 2. உணவுக் கட்டுப்பாடு பத்தியம்; diet. 3. நிலவுலகு; earth. 4. மூங்கில்; bamboo. 5. சக்கரவாகப்புள்; the ruddy goose. 6. எலிச்செவிப்பூடு; rat's ear plant. 7. சந்தனம்; sandal wood. 8. வேங்கை; East Indian kino. 9. பழமுண்ணிப் பாலை; edible palay (சா.அக.).

**நேமி⁴** *nēmi,* பெ.(n.) தேர்மரம், தேர்கட்ட பயன்படுவதால் இப்பெயர், இதினின்று சிவப்பு துவர்ப்புப் பிசின் எடுக்கப்படும். இதன் பட்டை குடல் நோய் தீர்க்கும். மரத்திலிருந்து ஒரு வகை அயச்சத்து எடுக்கப்படும்; chariot tree - Dalbergia oojeinesis so called from its usefulness for making chariots. Gives astringent red gum, bark is useful in bowel complaints. A crystalline substance like magnesia is sometimes found in the wood (சா.அக.).

**நேமிகாதகம்** *nēmikādagam,* பெ.(n.) நிரய வகை (சிவதரு.சுவர்க்கநரக.114); a hell.

**நேமிச்சந்திரன்** *nēmi-c-candiraṉ,* பெ.(n.) **நேமி, 11** (த.நி.போ.13) பார்க்க; see *nēmi.*

*[Skt. nēmi > த. நேமி+சந்திரன்.]*

**நேமிசந்தனா** *nēmi-sandaṉā,* பெ.(n.) வேங்கை (மலை.); Indian Kino.

*[நேமி + சந்தனா.]*

**நேமிசாரம்** *nēmi-sāram,* பெ.(n.) சக்திசாரம்; which see (சா.அக.).

*[நேமி + சாரம்.]*

**நேமிநாதம்** *nēmi-nātam,* பெ.(n.) குணவீர பண்டிதர் இயற்றிய ஒரு தமிழிலக்கண நூல்; a treatise on Tamil grammar by *kuṇa-vīra-paṇḍitar.*

*[நேமி + நாதம்.]*

**நேமிநாதன்** *nēmi-nādaṉ,* பெ.(n.) அருகக் கடவுள் (சூடா.); arhat.

*[Skt. nēmi > த. நேமிநாதன்.]*

**நேமிப்புள்**[1] *nēmi-p-puḷ,* பெ.(n.) **நேமி, 9** (திவா.) பார்க்க; see *nēmi.*

*[Skt. nēmi > த. நேமி+புள்.]*

**நேமிப்புள்**[2] *nēmi-p-puḷ,* பெ.(n.) சக்கிர வாகப்புல்; the ruddy grass (சா.அக.).

**நேமியங்கனி** *nēmiyaṅgaṉi,* பெ.(n.) கொடி முந்திரி (திராட்சை); grapes (சா.அக.).

*[நேமியம் + கனி.]*

**நேமியஞ்செல்வன்** *nēmiyañ-celvaṉ,* பெ.(n.) பேரரசன் சக்கரவர்த்தி; emperor. *"வைய நின்னடி நிழலின் வைகி நேமியந் செல்வனாகி" (சீவக.2417).*

*[Skt. nēmi+ > த. நேமியஞ்செல்வன்.]*

**நேமியம்** *nēmiyam,* பெ.(n.) நிலப்பனை; ground palm (சா.அக.).

**நேமியான்** *nēmiyāṉ,* பெ.(n.) (சக்கராயுதன்) திருமால்; *Visṇu,* as wielding the discus. *"வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோல" (கலித்.105).*

*[Skt. nēmi > த. நேமியான்.]*

**நேமிவலவன்** *nēmivalavaṉ,* பெ.(n.) 1. கடவுள் (வின்.); god. 2. திருமால்; *Visṇu. "திருநேமிவலவா" (திவ்.திருவாய்.6, 10, 2).* 3. அரசன் (வின்.); king.

*[Skt. nēmi+ > த. நேமிவலவன்.]*

**நேமுகம்** *nēmugam,* பெ.(n.) பணியமர்த்தம் (நியமனம்) (இ.வ.); appointment.

*[Skt. niyāmaka > த. நேமுகம்.]*

**நேமுகன்** *nēmugaṉ,* பெ.(n.) அலுவலன்; officer. *"நிசக்கட்டாகக் கொடுக்கும் நேமுகர்போல்" (சரவண. பணவிடு.139).*

**நைகமேசக்கிரகம்** *naigamēśakkiragam,* பெ.(n.) குழந்தைகளைத் தாக்கும் ஒரு கிரக நோய், இதனால் வாந்தியில் நுரை தள்ளல், முதுகு வளைதல், மிரண்ட பார்வை, இளைப்பு, மூர்ச்சை முதலிய குணங்களுண்டாகும்; a disease in children due to the evil influence of a star. It is characterised by frothy vomits, bending the middle of the trunk, anxious look, constant eructations and unconciousness (சா.அக.).

**நைச்சிகம்** *naiccigam,* பெ.(n.) **நைச்சியம்** (இ.வ.) பார்க்க; see *naicciyam.*

**நைச்சியம்** *naicciyam,* பெ.(n.) 1. தாழ்மை; humility. *"செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து" (திருவாய்.நூற்.16).* 2. இழிவு (நீச)த் தன்மை; lowness, meanness, baseness. 3. தன்வயப்படுத்துகை (கொ.வ.); winning over to one's side.

*[Skt. naicya > த. நைச்சியம்.]*

**நைச்சியம்பண்ணு-தல்** *naicciyam-paṇṇu-,* 5 செ.குன்றாவி.(v.t.) தன் வயப் படுத்துதல் (கொ.வ.); to win over to one's side.

*[Skt. naicya > த. நைச்சியம்+பண்ணு-,]*

**நைச்சியானுசந்தானம்** *naicciyāṉu-candāṉam,* பெ.(n.) தன்னைத் தாழ்த்திக் கூறுகை (வின்.); profession of humility.

*[Skt. naicya+anu-sandhāna > த. நைச்சியானுசந்தானம்.]*

**நைசர்க்கிகம்** *naiśarkkikam,* பெ.(n.) 1. இயற்கையாகத் தோன்றியது; that which is

natural or inherent. *"நைசர்க்கிக பலன்கள்" (மங்களே.பக்.40).* 2. இயல்பு; nature (சா.அக.).

*[Skt. naisargika > த. நைசர்க்கிகம்.]*

**நைசிகம்** *naicigam,* பெ.(n.) 1. நாசியிற் புகட்டும் மருந்து; any medicinal powder taken by nose. 2. காக்கை; crow. 3. காக்கைக் கொல்லி; crow killer (சா.அக.).

**நைசிகரவேம்பு** *naicigara-vēmbu,* பெ.(n.) சூரத்து நிலவேம்பு; surat chiretta (சா.அக.).

**நைசியம்**[1] *naiśiyam,* பெ.(n.) நாசியிற் புகுத்தும் மருந்து (சங்.அக.); medicine inhaled by the nose.

*[Skt. nasya > த. நைசியம்[1].]*

**நைசியம்**[2] *naiśiyam,* பெ.(n.) 1. **நைசியம்** பார்க்க; see *naiciyam.* 2. களைக்கொட்டு; a kind of water lily root as கொட்டிக் கிழங்கு.

**நைசிரவம்** *naiśiravam,* பெ.(n.) துவரை; red gram.

**நைசுபண்ணு—தல்** *naiśupaṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) புகழ்ச்சியாகப் பேசி இணங்கச் செய்தல்; cajole. *'நீ என்னதான் நைஸ்பண்ணினாலும் நான் பணம் தரப்போவதில்லை'?*

**த.வ. சரிக்கட்டல், இனிப்பு காட்டல்**

*[E. nice > த. நைசு+பண்ணு]*

**நைட்டிகதீட்சை** *naiṭṭiga-tīṭcai,* பெ.(n.) சிவதருமணி (சைவச.ஆசாரி.62.உரை); (*śaiva*) a way of initiation.

*[Skt. nai-sdhika+dīkṣa > த. நைட்டிகதீட்சை.]*

**நைட்டிகப்பிரமசாரி** *naiṭṭika-p-pirama-cāri,* பெ.(n.) குரவர் (ஆசாரியர்)க்கும் பெற்றோருக்கும் பணிவிடை செய்து கொண்டு வாழ்நாள் இறுதி வரை மாணியம் (பிரமசரியம்) பூண்டிருப்பவன் (சிவதரு.பரிகா.2,உரை); religious audent who serves his preceptor and parents in life-long celibacy.

*[Skt. nai-sdhika+brahma+cārin > த. நைட்டிகப்பிரமசாரி.]*

**நைட்டிகம்**[1] *naiṭṭigam,* பெ.(n.) வாழ்நாள் முழுவதும் மாணியம் (பிரமசரியம்) பூண்டொழுகும் நிலை (சி.சி.8, 32, சிவாக்.); state of being a life-long celibate religious student.

*[Skt. naisthika > த. நைட்டிகம்.]*

**நைட்டிகம்**[2] *naiṭṭigam,* பெ.(n.) நிட்டை அதாவது மனம் அசைவற்றிருத்தல்; fixedness of mind (சா.அக.).

**நைட்டிகன்** *naiṭṭigaṉ,* பெ.(n.) **நைட்டிகப் பிரமசாரி** (கூர்மபு.வருணா.36) பார்க்க; see *naṭṭiga-p-piramasāri.*

*[Skt. naisthika > த. நைட்டிகன்.]*

**நைட்டிகாசிரியன்** *naiṭṭigāśiriyaṉ,* பெ.(n.) வேள்வித்தீ போன்ற செயற்பாடுகள் எதுவுமின்றி (அக்கினிகாரியாதி கருமங்களாலின்றி) யாவையும் ஞானத்தாலே பண்ணும் ஆசிரியன் (சி.சி.8, 5, சிவாக்.); priest who performs initiatory rites mentally.

*[Skt. naisthika > த. நைட்டிகாசிரியன்.]*

**நைட்டூரியம்** *naiṭṭūriyam,* பெ.(n.) கொடுமை (யாழ்.அக.); cruelty, inhumanity.

*[Skt. naisṭhurya > த. நைட்டூரியம்.]*

**நைடதம்** *naiḍadam,* பெ.(n.) வடமொழி நைடதத்தை மூலமாகக் கொண்டு அதிவீரராம பாண்டியன் இயற்றிய தமிழ்க் காப்பியம்; a poem in Tamil by *Adivīra-rāmapāṇḍiyaṉ,* adopted from *śrī*Harsha's naisadha.

*[Skt. naisadha > த. நைடதம்.]*

**நைத்திகம்** *naittigam,* பெ.(n.) **நைத்தியம்** (யாழ்.அக.) பார்க்க; see *naittiyam.*

**நைத்தியம்** *naittiyam,* பெ.(n.) நீடுநிலை (நித்தியத்துவம்) (யாழ்.அக.); perpetuity, eternity.

*[Skt. naitya > த. நைத்தியம்.]*

**நைதிகை** *naitikai,* பெ.(n.) 1. ஊசிமல்லிகை (பிங்.); eared jasmine. 2. முல்லைக்கொடி; smooth jasmine (சா.அக.).

*[cf. yūthikā > த. நைதிகை.]*

**நைப்பூதிகம்** *naippūdigam,* பெ.(n.) சூலி மரம்; toon tree (சா.அக.).

**நைப்பூலிகம்** *naippūligam,* பெ.(n.) காரை; thorny webera (சா.அக.).

**நைபத்தியம்** *naipattiyam,* பெ.(n.) நடிப்பவன் கொள்ளும் புனைவு (வேடம்) (இலக்.அக.); costume of an actor.

*[Skt. naipathya > த. நைபத்தியம்.]*

**நைபாரிசம்** *naipārišam,* பெ.(n.) செங்கரும்பு; red sugarcane (சா.அக.).

**நைபாலி**[1] *naipāli,* பெ.(n.) அடுக்குமல்லிகை (மலை.); double jasmine.

*[Skt. naipāli > த. நைபாலி.]*

**நைபாலி**[2] *naipāli,* பெ.(n.) 1. சிவந்த பாடாணம்; a prepared poison. 2. நீலம்; blue (சா.அக.).

**நைபாலிகம்**[1] *naipāligam,* பெ.(n.) 1. செம்பு; copper. 2. பித்தளை (யாழ்.அக.); brass.

*[Skt. naipālika > த. நைபாலிகம்.]*

**நைபாலிகம்**[2] *naipāligam,* பெ.(n.) 1. **நைபாலி** பார்க்க; see *naipāli.* 2. தாமிரம்; copper (சா.அக.).

**நைபானி**[1] *naipāṉi,* பெ.(n.) **நைபாலி** (சங்.அக.) பார்க்க; see *naipāli.*

**நைபானி**[2] *naipāṉi,* பெ.(n.) அடுக்கு மல்லிகை; double jasmine (சா.அக.).

**நைமிசம்**[1] *naimišam,* பெ.(n.) **நைமி சாரணியம், நைமிசப்படலம்** பார்க்க; see *naimišāraṇiyam, naimiša-ppaḍalam.*

*[Skt. naimiša > த. நைமிசம்.]*

**நைமிசாரணியம்** *naimišāraṇiyam,* பெ.(n.) 1. புகழ் பெற்ற ஒரு தவச்சாலை; a forest in India famous as the resort of ascetics. *"நைமிசாரணியத்தருள்கூர் சூத முனியடைந்தான்" (கூர்மபு.இந்திர.2).* 2. நைமிசாரணியத்துள்ள திருமால் திருப்பதி; a *visṇu* shrine in *Naimišāraṇya.* *"நைமி சாரணியத்து ளெந்தாய்" (திவ். பெரியதி.1,6,1).*

*[Skt. naimiša+araṇya > த. நைமி சாரணியம்.]*

**நைமித்தகருமம்** *naimitta-karumam,* பெ.(n.) **நைமித்திகம்** (பிரபோத.39, 13) பார்க்க; see *naimittigam.*

*[Skt. naimittika+karman > த. நைமித்தகருமம்.]*

**நைமித்திகசிராத்தம்** *naimittiga-širāttam,* பெ.(n.) நாள்தோறும் செய்தலன்றித் தென் புலத்தார்க்குச் செய்யும் சிறப்பு வழிபாடு (சேது.மங்கலதீர்த்.43); offerings to the manes on special occassions.

*[Skt.naimittika+šraddha > த. நைமித்திக+சிராத்தம்.]*

**நைமித்திகப்பிரளயம்** *naimittiga-p-piraḷayam,* பெ.(n.) நான்முகனது (பிரமனது) பகற்காலம் நீங்கியதும் தோன்றும் ஊழி முடிவு (பிரளயம்) (சங்.அக.); deluge said to occur at the close of a *Brahmā's* day.

*[Skt.naimittika+pra-laya > த. நைமித்திகப் பிரளயம்.]*

**நைமித்திகம்** *naimittigam,* பெ.(n.) சிறப்பான காலங்களில் நிகழ்வது; that which is occassional or periodical, as rite, ceremoney, festival, etc. *"நைமித்திகத் தொடு கூடிய நித்தியம்" (குறள், 18, உரை).*

*[Skt. naimittika > த. நைமித்திகம்.]*

**நைமித்தியம்** *naimittiyam,* பெ.(n.) **நைமித்திகம்** (யாழ்.அக.) பார்க்க; see *naimittigam.*

**நைர்மல்லியம்** *nairmalliyam,* பெ.(n.) 1. தூய்மை (சுத்தம்); cleanliness; purity.

2. மாசின்மை; free from stain or flaw; free from all defects (சா.அக.).

**நைராசியம்** *nairāšiyam,* பெ.(n.) நம்பிக்கை யின்மை; hopelessness.

*[Skt. nairāšya > த. நைராசியம்.]*

**நைராத்மியதர்சனம்** *nairātmiya-dar-šaṉam,* பெ.(n.) ஆதன் (ஆன்மா) இல்லை என்ற வாதம் (நீலகேசி,528, உரை); the doctrine of the non-existence of the soul.

*[Skt. nis+ātmya+daršana> த. நைராத்மிய தர்சனம்.]*

**நைருதம்** *nairutam,* பெ.(n.) பகலின் 12ஆம் முழுத்தம் (முகூர்த்தம்) (சங்.அக.); the 12th *mugūrttam* of the day-time.

*[Skt. nairrta > த. நைருதம்.]*

**நைருதி** *nairuti,* பெ.(n.) தென்மேற்கு (சங்.அக.); the south west quarter.

*[Skt. nairrti > த. நைருதி.]*

**நைவேத்தியம்** *naivēttiyam,* பெ.(n.) கடவு ளுக்குப் படைக்கும் உணவு; offering made to a deity. *"என்னாவி நைவேத்தியம்" (தைலவ. தைல. பாயி. 1).*

*[Skt. nai-vēdya > த. நைவேத்தியம்]*

**நைவேதனம்** *naivēdaṉam,* பெ.(n.) 1. ஒப்ப டைக்கை; dedication. 2. **நைவேத்தியம்** பார்க்க; see *naivēttiyam. "மதுவர்க்கமொடே கனித்தொகை மண மிகுந்த நைவேதனம்" (சிவரக. சுகமுனி. 24).*

*[Skt. nai-vēdana > த. நைவேதனம்]*

**நைவேதி-த்தல்** *naivēdi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கடவுளுக்கு உணவு முதலியன படைத்தல்; to offer to a deity, as food. *"பொற்கிண்ணத் தூற்றளவி நைவேதித்து" (தைலவ. தைல. 137).*

**நொசுட்டு** *noṣuttu,* பெ.(n.) குறை கூறுகை; criticism, fault-finding.

*[Skt. niṣkhura > த. நொசுட்டு]*

**நொத்தாரிசு** *nottārišu,* பெ.(n.) ஆவணம் எழுதிப் பதிவு செய்பவன்; notary public officer authorized to attest documents.

**நொந்தாவிகம்** *nondāvigam,* பெ.(n.) சினாசிகா (சூழ்ப்பிராய்); demon tree. (சா.அக.)

**நோட்டீசு** *nōṭṭīšu,* பெ.(n.) அறிவிப்புச்சீட்டு; notice.

**த.வ. அறிக்கை**

*[E. notice > த. நோட்டீசு]*

**நோட்டு** *nōṭṭu,* பெ.(n.) 1. உறுதிச்சீட்டு; promisory note. 2. அரச அறிவிப்பு; king's written announcement. 3. அரசாங்கத்தால் வெளியிடும் பணத்தாள்; currency note. *'ஐந்து உருவா நோட்டுக் கொடுத்தான்?'.* 4. எழுதுவதற்குரிய குறிப்பேடு; note book. 5. ஆங்கிலப் பண்வகை; an English tune.

*[E. note > த. நோட்டு]*

**நோதாங்குசம்** *nōdāṅgusam,* பெ.(n.) தருப்பைப் புல்; sacrificila grass. (சா.அக.)

**நௌகர்** *naugar,* பெ.(n.) வேலைக்காரன்; servant.

*[U. naukar > த. நௌகர்]*

**நௌகரி** *naukari,* பெ.(n.) வேலை; service. (C.G.).

*[U. naukari > த. நௌகரி]*

**நௌகரிமானியம்** *naukari-māṉiyam,* பெ.(n.) ஊழியத்திற்காக விடப்படும் மானியம்; service inam.

**நௌகாதானம்** *naukā-taṉam,* பெ.(n.) இறந்த பதினொன்றாம் நாள் இறந்தவர் பொருட்டு கரும்பால் படகு வடிவமாகச் செய்து பார்ப்பனர்க்குக் கொடுக்கும் தானம்; present of a boat made of sugar-canes given to a brāhmin on behalf of a deceased person on the eleventh dan after his death.



**பக்கோடா** *pakkōḍā,* பெ.(n.) கடலை மாவில் நீர் ஊற்றிப் பிசைந்து வெங்காயம், பச்சை மிளகாய், கறிவேப்பிலை, கொத்துமல்லித்தழை முதலியவற்றைச் சேர்த்து சிறு சிறு உருண்டைகளாக எண்ணெயில் போட்டு எடுக்கும் ஒரு வகைத் தின்பண்டம்; a kind of spicy savoury prepared from chickpea paste and fried in oil.

த.வ. முறுவடம்

*[U. pagōra > த. பக்கோடா]*

**பக்தவத்சலன்** *pakta-vatcalaṉ,* பெ.(n.) அடியவர்களுக்கு அன்பனான கடவுள் (உ.வ.). God, as fond of His devotees.

த.வ. அடியார்க்கருளி

*[Skt. bhakta-vatsala > த. பக்தவத்சலன்]*

**பக்தன்** *paktaṉ,* பெ.(n.) இறையுணர்வாளன், கடவுள் பற்று உள்ளவன்; pious; godly man.

த.வ. பத்தன்

*[Skt. bhakta> த. பக்தன்]*

**பக்தாதாயம்** *paktādāyam,* பெ.(n.) நெல் வருவாய்; (S.I.I.i,81.); revenue in paddy.

*[Skt. bhakta+ādāya > த. பக்தாதாயம்]*

**பக்தி** *pakti,* பெ.(n.) 1. கடவுள் குரு முதலியோரிடத்தில் காட்டும் அன்பு; piety; faith; devotion, as to a deity, guru, etc. 2. வழிபாடு (வின்.); service, worship.

த.வ. பத்திமை, இறையன்பு

*[த. பத்தி > Skt. bhakti > த. பக்தி]*

**பக்திச்சுவாலகர்** *pakti-c-cuvālagar,* பெ.(n.) இறைத் (தேவ) தூதர் வகையினர்; an order of angels.

**பக்திநூல்** *paktinūl,* பெ.(n.) கடவுளிடத் துண்டான அன்பு, போற்றல், இரக்கம் (தயை), இறையுணர்வு, பத்தி, ஊழ்கம் (தியானம்) முதலியவற்றால் ஆதன் கரிசி (பாவத்தி)னின்று விடுதலைப் பெற்றுத் தூய (பரிசுத்த) நிலையில் வீடுபேறு (விதேக முத்தி) அடைவதைப் பற்றிக் கூறும் நூல் (சா.அக.); book of science and Philosophy of piety that liberates the soul from sins and reveals the truths of perfection through devotion, prayer, piety, reverence and meditation.

த.வ. தெய்வப்பனுவல்

*[த. பத்தி > Skt. bhakti > த. பக்தி]*

**பக்திமான்** *paktimāṉ,* பெ.(n.) இறைப்பற்று (கடவுள் பத்தி) நிறைந்தவர்; devotee. 'அவர் பெரிய பக்திமான்' (இ.வ.).

த.வ. இறைப்பற்றாளன்

*[த. பத்தி > Skt. bhakti > த. பக்தி]*

**பக்தியோகம்** *pakti-yōgam,* பெ.(n.) பயன் கருதாது கடவுளை வழிபடுதலால் விண்ணுலக வாழ்வை அடைவதற்குரிய வழிவகை; (அட்டாதச. அர்த்தபஞ்.31.); piety or devotion without the expectation of any reward, as a means of salvation.

*[Skt. bhakti > த. பக்தி]*

**பக்து** *pakdu,* பெ.(n.) கு.வி.எ. (adj.) மாத்திரம்; only, merely, simply.

*[U. faqt > த. பக்து]*

**பக்தை** *paktai,* பெ.(n.) இறைப்பற்றுள்ளவள் (தென்.இந்.சேடத்.பக்.313); woman devotee.

*[Skt. bhaktā > த. பக்தை]*

**பக்ரீத்** *pakrit,* பெ.(n.) ஒரு முகம்மதியப் பண்டிகை; a Muhammadan festival.

*[Skt. bagrīd > த. பக்ரீத்]*

**பக்ரு** *pakru,* பெ.(n.) செருக்கு; pride.

*[Ar. fakhr > த. பக்ரு]*

**பகரு** *pagaru,* பெ.(n.) பணிப்பெருமிதம் (இ.வ.); prestige of power.

*[E. power > த. பகரு]*

**பகவத்கீதை** *pagavat-kīdai,* பெ.(n.) அருச்சுனன் பொருட்டுக் கண்ணன் மொழிந்ததும் பதினெட்டுப் பகுதியுடையதும் மகாபாரதத்தில் அடங்கியதுமான வடமொழி

நூல்; a section of 18 chapters in the Mahābārata, containing the sacred instruction of Krṣṇa to Arjuna.

[Skt. Bhagavat-gītā > த. பகவத்கீதை]

**பகவத்விசாயம்** *pagavat-višāyam,* பெ.(n.) கடவுள் தொடர்பான திருவாய் மொழி விளக்கவுரை; the commentary of Tiruvāymoḷi, as consisting of discourses relating to the Supreme Being.

[Skt. bhagavat-viṣaya > த. பகவத்விசாயம்]

**பகவதி** *pagavadi,* பெ.(n.) 1. அறக்கடவுள் (பிங்.); the Goddess of Virtue. 2. துர்க்கை (திவா.); Durgā. 3. மலைமகள்; Pārvadi. 4. தாமிரபரணி ஆறு (நாமதீப.526); the river Tāmiraparaṇi.

[Skt. Bhagavatī > த. பகவதி]

**பகவதிநாள்** *pagavadi-nāḷ,* பெ.(n.) கணை (பூர) நாள் (திவா.); the 11th nakṣatra.

[Skt. Bhagavati > த. பகவதி+நாள்]

**பகவந்தன்** *pagavandaṉ,* பெ.(n.) இறைவன்; Lord. "மூவருள் முதலான பகவ வந்தனீயென்று கண்டும்" (நூற்றெட்டுத். திருப்பு.97).

[பகு > Skt. bhaj. பகவன் > Skt. bhagavan, bhagavanta > த. பகவந்தன்]

**பகாங்குரம்** *pagāṅkuram,* பெ.(n.) 1. பெண்குறி அரத்தம், அதாவது மாதவிடாய்; menstrual blood. 2. பெண்குறி (நோனி)யின் முனை; clitoris. 3. பெண்குறி மயிர்; pubic hair. (சா.அக.)

[பகு+அங்குரம் – பகாங்குரம்]

**பகாசுரன்** *pagāšuraṉ,* பெ.(n.) 1. வீமனால் கொல்லப்பட்ட ஓர் அசுரன்; a giant slain by Bīmā. 2. பெருந்தீனிக்காரன் (இ.வ.); a glutton. 3. செய்த வேலைக்குக் கூலி அதிகமாகக் கேட்பவன் (இ.வ.); one who is extravagant in his demand.

[Skt. Bakāsura > த. பகாசுரன்]

**பகாப்பிடுகு** *pagāpiḍugu,* பெ.(n.) பல்லவரது பட்டப் பெயர்களுள் ஒன்று; the title of the Pallava kings.

**பகாய்பாக்கி** *pagāi-pākki,* பெ.(n.) பழைய நிலுவை (C.G.); old balance, arrears.

[U. baqāya-baqi > த. பகாய்பாக்கி]

**பகாரிசம்** *pagārišam,* பெ.(n.) பெண்களின் உடம்பில் கோளாறடைந்த காற்றானது (வாயுவானது) பெண்குறி (நோனி)ப் பாதையில் தங்கி அவ்விடத்தில் சதை வளர்ந்து காளானைப் போல் பருத்துத் தீய (துர்) நீர் வழிவதால் தீய நாற்றத்தை வீசும் ஒரு நோய்; a disease of the vagina in which the deranged (vayu) wind humour etc., of the body is lodged in the vaginal region giving rise to crops of soft polypus in the passage which after sometime assumes the shape of a mushroom secreting foul smelling fluid c.f. இலிங்காரிசம். (சா.அக.)

**பகிசங்கை** *pagišaṅgai,* பெ.(n.) மலங்கழிக்கை; evacuation of the bowels, dist.fr. aṟpacaṅkai.

[Skt. bahiš-šaṅka > த. பகிசங்கை]

**பகிசுகரி–த்தல்** *pagiṣkari-,* 4 செ.குன்றாவி.(v.t.) விலக்குதல்; to expel excommunicate, boycott.

[Skt. bahiš-kr̥-, > த. பகிசுகரி–,]

**பகிசுகாரம்** *pagišu-kāram,* பெ.(n.) விலக்குகை; expulsion, excommunication ostracism, boycott.

[Skt. bahiṣkāra > த. பகிசுகாரம்]

**பகிரங்கம்** *pagiraṅgam,* பெ.(n.) வெளிப்படை; publicity, openness.

[Skt. bahiraṅga > த. பகிரங்கம்]

**பகிரண்டம்** *pagir-aṇḍam,* பெ.(n.) வெளிப் புடவி (அண்டம்); the outer spaces of the universe. "மல்லாண்ட தடக்கையாற் பகிரண்டமகப்படுத்த காலத்து" (திவ்.பெரியதி. 11.6:2).

த.வ.பேரண்டம்

*[Skt. bahiranda> த. பகிரண்டம்]*

**பகிரதன்** *pagiradaṉ,* பெ.(n.) பகீரதன் பார்க்க; see pagīradaṉ. "பகிரத னெனும் பார்த்திபன் வந்தனன் பரிவால்" (கம்பரா.அகலி.43).

**பகிரந்தரசத்தி** *pagirandarašatti,* பெ.(n.) 1. தாமரை வளையம்; lotus stalk. 2. உண்டாக்கும், காக்கும், அழிக்கும் ஆற்றல் (சத்தி) (சா.அக.); the power of creating, acting and destroying.

**பகீரதப்பிரயத்தனம்** *pagīrada-p-pirayattaṉam,* பெ.(n.) கங்கையைக் கொண்டு வருதற்குப் பகீரதன் செய்த முயற்சி, பெரு முயற்சி; super human effort, as that of Bagirataṉ in bringing down the sacred Gaṅgā.

*[Skt. bhagīratha-prayatna> த.பகீரதப் பிரயத்தினம்]*

**பகீரதம்** *pagīradam,* பெ.(n.) பனைச் சருக்கரை; palmyra sugar (சா.அக.)

**பகீரதன்** *pagīradaṉ,* பெ.(n.) சாம்பலாய்ப் போன வரும் தன் மூதாதையருமான சகரர்கள் நற்கதியடைதற் பொருட்டு வானத்தினின்று கங்கையை நிலத்திற்குக் கொணர்ந்து பாதாளத்துச் செலுத்தியதாகச் சொல்லப்படும் ஞாயிற்று (சூரிய)க் குலத்து அரசன்; an ancient king of the solar race who is believed to have brought down the sacred Gaṅgā from the heaven to the earth and conducted her to the nether world in order to purify the ashy remains of his ancestors.

*[த. பகிரதம் > Skt. > பகீரதன்]*

தென்புலத்தார் வழிபாடு தமிழ் மரபு. பகுப்புண்ட மடல் கொண்ட பனையின் பெயர் பகிரம் – பகிரதம். பகிரதன் எனும் சொல் பனையன் எனப் பொருள்படும். பனையன் என்னும் பெயர் பகிரதன் – பகீரதம் என வடமொழியில் திரிந்தது எனலாம்.

**பகீரதி** *pagīradi,* பெ.(n.) பகீரதனால் கொண்டு வரப்பட்ட ஆறு, கங்கை; the sacred Gaṅgā, as brought down by Bagīrataṉ. "பகீரதி மணங்கொளச் சடை வைத்த மறையவன்" (தேவா.497,9).

*[Skt. Bhagirathi> த. பகீரதி]*

**பகுசா** *pagušā,* கு.வி.எ.(adv.) பெரும் பான்மையாய் (அனேகமாய்); very likely, for the most part.

த.வ.பெரும்பகுதி

*[Skt. bahušas> த. பகுசா]*

**பகுசுருதியாகமம்** *pagu-šurudi-y-āgamam,* பெ.(n.) சைனாகமம் மூன்றனுள் ஒன்று (சீவக.213,உரை); one of the three šaiṉākamam.

*[Skt. bahu-šruti+yāgama>த. பகுசுருதியாகமம்]*

**பகுசுவாசம்** *pagušuvāšam,* பெ.(n.) மேல் மூச்சு (சா.அக.); hard breath; heavy breathing.

**பகுத்திரரோகசமனி** *paguttira-rōgašamaṉi,* பெ.(n.) திருநாமப் பாலை (சா.அக.); wild sarsaparilla.

**பகுதாகம்** *pagudāgam,* பெ.(n.) அதிக நீர் வேட்கை (சா.அக.); indefatigable thirst, unquenchable thirst.

*[Skt. bahu> த. பகு]*

**பகுதூக்கம்** *pagutūkkam,* பெ.(n.) மிகுந்த தூக்கம் (சா.அக.); excessive sleep.

*[பகு+தூக்கம்]*

*[Skt. bahu> த. பகு]*

**பகுநாயகம்** *pagunāyagam,* பெ.(n.) செல்வராட்சி (வெகுநாயகம்); plutocracy. "பகுநாயகம் ஜகத்து என்கிறதைத் தவிர்த்துக் குறுகவிட்டு வைத்தார்களிறே சில வேதாந்திகள்" (திவ்.திருநெடுந்.2,வ்யா.பக்.19).

*[Skt. bahunāyaka> த. பகுநாயகம்]*

**பகுபித்தம்** *pagupittam,* பெ.(n.) அதிக பித்தம்; excessive bile. (சா.அக.)

*[Skt. bahu> த. பகு]*

**பகுமதி** *pagumadi,* பெ.(n.) பகுமானம் பார்க்க; see pagumāṉam. "பகுமதி நிமித்தமாகப் போர்த்தே னென்னில்" (நீலகேசி,272,உரை).

*[Skt.bahumati> த. பகுமதி]*

**பகுமானம்** *pagumāṉam,* பெ.(n.) பெரு மதிப்பு; high esteem, great respect; honour, dignity. "பாட்டொன்றோ வென்ன பகுமானம்" (பஞ்ச.திருமுக.924).

*[Skt.bahu> த. பகு]*

**பகுமூத்திரம்** *pagu-mūttiram,* பெ.(n.) நீரிழிவு; diabetes.

*[Skt.bahu> த. பகு]*

*மோள்+திரம் – (மோட்டிரம்) >மோத்திரம் > மூத்திரம் த. மூத்திரம் >Skt. mūtra*

**பகுவசனம்** *pagu-vašaṉam,* பெ.(n.) பன்மை (வீரசோ.வேற்.4,உரை); plural number.

*[Skt.bahu+vašana> த. பகுவசனம்]*

**பகுவபஞ்சம்** *paguva-pañjam,* பெ.(n.) நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; an Upaniṣad, one of 108.

*[Skt.bahva-pañca> த. பகுவபஞ்சம்]*

**பகூதகம்** *pagūdagam,* பெ.(n.) துறவு (சன்னியாசம்) நான்கனுள் ஏழு வீடுகளில் மட்டும் இரந்துண்டு (பிச்சை – எடுத்து) மரபொழுக்கப் (நியம)படியொழுகும் துறவு (சன்னியாச) வகை (கைவல்.சந்தே.158); a kind of asceticism in which the ascetic lives on alms from seven houses, one of four šaṉṉiyāšam.

**த.வ.ஏழக இரப்புத்துறவு**

*[Skt. bahūdaka> த. பகூதகம்]*

**பகூதகன்** *pagūdagaṉ,* பெ.(n.) துறவி (சன்னியாசி)கள் நால்வருள் ஏழு வீடுகளில் பிச்சையெடுத்துண்டு மரபொழுக்கப் (நியம)ப்படி யொழுகும் துறவி (சூதசங். ஞானயோக 6:3); ascetic who lives on the alms from seven houses, one of four šaṉṉiyāši.

**த.வ.ஏழக இரப்புத்துறவன்**

*[Skt. bahūdaka> த. பகூதகன்]*

**பகேடா** *pakēḍa,* பெ.(n.) 1. சண்டை, தொந்தரவு; wrangling, dispute, quarrel. 2. வம்பு செய்பவ–ன்–ள்; quarrelsome person. 'அவள் பெரிய பகேடா'. (இ.வ.).

**த.வ.வம்பாளன், வம்பாடி**

*[U. bakhērā> த. பகேடா]*

**பகேடாவேலை** *pakēḍā-vēlai,* பெ.(n.) சிக்கலான வேலை; troublesome or vexatious business.

*[U. bakērā> த. பகேடா]*

**பகைர்சரத்** *pagair-šarat,* கு.வி.எ.(adv.) கட்டுப்பாடு இல்லாமல்; without any condition, unconditionally.

*[U. baghair+shart> த. பகைர்சரத்]*

**பகோடா** *pakōḍā,* பெ.(n.) பக்கோடா பார்க்க; see pakkōḍā.

**த.வ. முறுவடம்**

*[Skt.pagōra> த. பகோடா]*

**பங்கசார்த்தம்** *paṅgašārttam,* பெ.(n.) இவறன்மை (உலோபத்தனம்) (யாழ்.அக.); miserlines.

**பங்கசூரணம்** *paṅga-šūraṉam,* பெ.(n.) 1. தாமரை வேர்ச் சூரணம்; powder of lotus root. 2. தாமரை வேர்; lotus root. (சா.அக.)

*[பங்கம்+சூரணம்]*

**பங்கணம்** *paṅgaṉam,* பெ.(n.) தாழ்த்தப்பட்ட வராகக் கருதப்படுவோர் வாழும் இடம் (யாழ்.அக.); the quarters of the outcastes.

*[Skt.pakkaṉa> த. பங்கணம்]*

**பங்கத்தி சூலை** *paṅgatti-šūlai,* பெ.(n.) விலா பக்கத்தில் ஏற்படும் குத்தல் நோய்; pin prick or shooting pain felt on the side. (சா.அக.).

**பங்கதாளம்** *panga-tāḷam,* பெ.(n.) தாள வகை (பரத.தாள.4,உரை); a variety of time measure.

*[Skt. bhanga> த. பங்க]*

தாள் = கால், அடி. தாள் → தாளம் = ஆடுபவர் காலால் தட்டும் காலக் கணிப்பு. ஆட்டத்திற்கும் பாட்டிற்கும் உரிய காலக் கணிப்பு, காலக் கணிப்பிற்குத் தக்க இசைக் கருவி. *த. தாளம் > Skt. tāla.*

**பங்கப்பிரபை** *panga-p-pirabai,* பெ.(n.) ஏழு நிரய (நரக)த் தொன்று (சீவக.2817,உரை); a hell, one of elu-naragam.

*[Skt. panka+pirapa> த. பங்கப்பிரபை]*

**பங்கயச்செல்வி** *pangaya-c-celvi,* பெ.(n.) தாமரையிலுள்ள திருமகள் (இலக்குமி); Lakṣmi, as seated on a lotus. "பங்கயச் செல்வி பாண்டிமா தேவி" (தேவா.868,1).

*[Skt. pankaya> த. பங்கயம்]*

**பங்கயப்படு** *panga-p-padu,* பெ.(n.) தாமரை மடு; lotus tank. "பங்கயப்படு வொத்துளை பாவாய்" (சீவக. 898).

*Skt. pankaya> த. பங்கயம்.*

**பங்கயப்பீடிகை** *pangaya-p-pīḍigai,* பெ.(n.) புத்தரது பாதங்கள் அமைந்த தாமரைப் (பதும) பீடம்; lotus - shaped pedestal of Buddha's feet. "அறவோன் பங்கயப் பீடிகை" (மணிமே, 28:211).

*[Skt. pankaya> த. பங்கயம்]*

**பங்கயம்** *pangayam,* பெ.(n.) 1. சேற்றில் தோன்றும், தாமரை; Lotus, as mud -born. "பங்கயங் காடு கொண் டலர்ந்த பாங்கெலாம்" (சூளா.நாட்டு.2) 2. தாமரை வடிவினதாகிய ஒரு கருவி; a lotus - shaped weapon. "மணிமலர்ப் பங்கயந் தண்டம்" (கந்தபு. விடைபெறு.37). 3. நாரை (இலக்.அக.); heron.

*[Skt. panka-ja> த. பங்கயம்]*

வடமொழியில் pankaja என்னும் சொல்லிற்குச் சேற்றில் பிறந்தது என்று பொருள். மாலையில் குவியும் மலரினையுடைய ஒரு வகைத் தாமரை போன்ற பயிர் வகைகள் உள்ளன. இது மண், சேறு, சகதி, களிமண் போன்ற பொருள்களுள்ள panka என்னும் சொல்லிலிருந்து வளர்ந்தது. தமிழில் தாமரை போன்ற பொருள்களுள்ள பங்கயமும், சேறு போன்ற பொருள்களுள்ள பங்கயமும் வழக்கில் இருக்கின்றன. ஆயினும், பங்கயன், பங்கயம் என்பன போல வருவன வடசொல் pankajaவிலிருந்து வளர்ந்தனவாக இருக்கின்றன. பங்கம் என்னும் சொல்லிலிருந்து நேரடியாக இவ்வாறான சொற்கள் வளருவதற்கு இடமுண்டு. அவ்வகையைத் தவிர்த்து pankaja விலிருந்து சொற்கள் வளர்ந்து வந்துள்ளமை pankaja என்னும் சொல்லின் பெருவழக்கைக் காட்டுகிறது.

**பங்கயன்** *pangayan,* பெ.(n.) 1. தாமரையில் தோன்றிய நான்முகன்; Brahmā, as lotus-born. 2. பகலவன்; Sun, as Lord of the lotus.

*[Skt. panka-ja> த. பங்கயன்.]* 'ன்' ஆ.பா. ஈறு

**பங்கலா** *pangalā,* பெ.(n.) பங்களா பார்க்க; see pangaḷā.

*[U. banglā> த. பங்கலா]*

**பங்கவாசம்** *panga-vāšam,* பெ.(n.) சேற்றில் வாழும், நண்டு (யாழ்.அக.); crab, as living in mud.

*[Skt. Panka-vāsā> த. பங்கவாசம்]*

பதி → வதி = தங்குமிடம். வதி→ வஸ்→ வாஸ் (வ.வ.2.83). வாஸ்→ வாஸ > த. வாசம்.

**பங்களா** *pangaḷā,* பெ.(n.) தோட்ட வீடு, வளமனை; bungalow.

*[U. banglā> த. பங்களா]*

**பங்கா** *pangā,* பெ.(n.) ஆட்டுதற்குரிய தூங்கு விசிறி வகை (வின்.); punkan, a large swinging fan.

*[U. pankhā> த. பங்கா]*



**பங்காரு** *pangāru,* பெ.(n.) பொன் (இ.வ.); gold.

**பங்காளசம்பா** *pangāḷa-śambā,* பெ.(n.) ஒரு வகை நெல்; a kind of paddy.

*[பங்காளம்+சம்பா]*

**பங்காளபாத்து** *pangāḷapāttu,* பெ.(n.) தயிரில் செய்த உணவு வகை; rice mixed with curds and seasoned.

**பங்காளம்** *pangaḷam,* பெ.(n.)1. வங்காள நாடு; Bengal. 2. ஒரு பண் (இராகம்) (பரத. இராக.56.); a specific melody - type.

*[Skt. vanga> த. பங்காளம்]*

**பங்காளமுத்து** *pangāḷa-muttu,* பெ.(n.) போலி முத்து; false or imitation pearl, as from Bengal.

*[பங்காளம்+முத்து]*

முள் > முட்டு> முத்து = உருண்டை வடிவாயிருக்கும் சிறு பொருள், தொண் (நவ) மணிகளுள் ஒன்று.

**பங்காளா¹** *pangāḷā,* பெ.(n.) 1. ஒரு வகை வாழை; a kind of plantain. 2. பண் வகை; a kind of melody - type.

*[பங்ககாளம் > பங்காளா]*

**பங்கியிலை** *pangiyilai,* பெ.(n.) கஞ்சாயிலை; leaf of cannabis sativa. (சா.அக.)

**பங்கில்லம்** *pangillam,* பெ.(n.) நத்தைச் சுண்டி; bristly button weed; shaggy button weed. (சா.அக.)

த.வ.குழிமீட்டான்

**பங்கிவித்து** *pangivittu,* பெ.(n.) கஞ்சாவிதை; seed of cannabis sativa. (சா.அக.)

**பங்குவாதம்** *panguvādam,* பெ.(n.) இடுப்பில் இடைநின்ற காற்று விரைப்பு அடைவதினால் இரண்டு தொடைகளின் நரம்புகளை இழுத்து முடமாக்கும் ஓர் ஊதை (வாத) நோய்; a kind of rheumatic affection in which the nerve trunks of both the legs are drawn up owing to the deranged vayu lying about the region of the waist, thus rendering the patient completely lame. 2. உடம்பின் கீழ்ப்பாகத்தையாவது இடுப்பினின்று கால் வரை வளியினால் உணர்ச்சி (சுவர்ணை) யற்றதாகவும் அசைக்க முடியாததாகவும் செய்யுமோர் ஊதை நோய்; paralysis of both the legs and lower part of the body with loss of both sensation and movement.

**பங்குனன்** *pangunaṉ,* பெ.(n.) மானேறு (உத்தர) நாளிற் பிறந்த அருச்சுனன்; Arjuna, as having been born in the uttara-phalgunī nakṣatra. "வென்றிப் பங்குனனென்னு நாமம் பகுதியாற் படைத்திட்டானே" (பாரத. சம்பவ.83).

*[Skt. phalguna>Pkt. phagguna>த. பங்குனன்]*

**பங்குனி** *panguṉi,* பெ.(n.) மீன மாதம், பன்னிரண்டாம் மாதம்; the 12th month of the solar year, March - April. "வெய்யோன்... பங்குனிப் பருவஞ் செய்தான்" (சீவக.851).

*[Skt. phalgunī > Pkt. phaguni> த. பங்குனி]*

**பங்குனிக்கதிர்** *panguṉi-k-kadir,* பெ.(n.) மீன (பங்குனி) மாதத்தில் உழமண் தரையில் கதிர்போல் வளரும் பூநீறு; a crop like growth of effloresent, salt said to be found on the soil of fuller's earth in the month of March. (சா.அக.)

*[Skt. phalgunī > Pkt. phaguni> த. பங்குனி]*

**பங்குனியுத்தரம்** *panguṉi-y-uttaram,* பெ.(n.) மீன (பங்குனி) மாத வெள்ளுவாவும் மானேறு விண்மீனும் (உத்தரமும்) கூடிய ஒரு சிறப்பு நாள் (இறை.கள.17,உரை); special festival day when the moon is in conjunction with the 12th nakṣatra.

*[பங்குனி+உத்தரம்]*

**பங்கேருகம்** *pangērugam,* பெ.(n.) சேற்றில் தோன்றும் தாமரை; lotus, as mud - born.

"இராமநாதன் பாதபங்கேருகங்கள்" (சேதுபு. தோத்.40.)

*[Skt. paṅkē-ruha> த. பங்கேருகம்]*

**பச்சக்கம்** *paccakkam*, பெ.(n.) நேர்ச்சான்று (பிரத்தியட்சப் பிரமாணம்); direct proof. perception. "மற்ற பச்சக்கமாகும்" (மேருமந்.1320).

*[Skt. pratyakṣa>Pkt. paccakka> த. பச்சக்கம்]*

**பச்சகானாம்** *paccakāṉām*, பெ.(n.) 1. கூத்தாடிப் பையன்; dancing boy. 2. சிறு துணி; small cloth, as given to boys.

*[U. baccekānā> த. பச்சகானா]*

**பச்சம்** *paccam*, பெ.(n.) பட்சம் பார்க்க; see paṭcam "பச்சம் முடை யடிகடிருப் பாதம்" (தேவா.166,2).

*[Skt. pakṣa > த. பச்சம்]*

**பச்சவாதம்** *pacca-vādam*, பெ.(n.) உடலின் ஒரு பக்கத்தை உணர்ச்சியறச் செய்யும் நோய் வகை. (பைஷஜ.302); paralytic attack on one side of the body, *Hemiplegia*.

*[Skt. pakṣa-vāta >> த. பச்சவாதம்]*

**பச்சவாயு** *paccavāyu*, பெ.(n.) வளி (வாயு)யினால் உடம்பின் ஒரு பக்கத்தில் உணர்ச்சி இல்லாமல் போகை; loss of sensation on either side of the body due to the deranged condition of vayu prevailing on that side. (சா.அக.)

த.வ.பக்கஊதை

*[த. பக்கம் > Skt. pakṣa>த. பட்சம் > பச்சம்]*

**பச்சாத்தாபம்** *paccāt-tābam*, பெ.(n.) 1. கழிவிரக்கம் கொள்ளுகை; repentance; regret, contrition 2. இரக்கம்; compassion, pity.

*[Skt. paścāt-tāpa> த. பச்சாத்தாபம்]*

**பச்சாது** *paccādu*, கு. பெ.எ. (adv.) பின்பு (யாழ்.அக.); afterwards.

*[Skt. paścāt> த. பச்சாது]*

**பச்சி** *pacci*, பெ.(n.) ஒரு வகை மாப்பண்டம்; a kind of cake.

த.வ.மாவேய்ச்சி, வேய்ச்சி

*[U. bhūjya> பஜ்ஜி > த. பச்சி]*

**பச்சிமதோகரன்** *paccimatōkaraṉ*, பெ.(n.) 1. தட்டான்; goldsmith. 2. கள்வன்; thief.

*[Skt. paśyatō-hara> த. பச்சிமதோகரன்]*

**பச்சியகுன்மக்கட்டி** *pacciya-kuṉma-k-kaṭṭi*, பெ.(n.) பருத்த குன்மக்கட்டி; matured and enlarged abdominal tumour (சா.அக.).

*[பச்சிய குன்மம்+கட்டி]*

**பச்சியமானகுன்மம்** *pacciyamāṉa-kuṉmam*, பெ.(n.) பச்சியகுன்மக்கட்டி பார்க்க (சா.அக.); see pacciya-kuṉma-k-kaṭṭi.

**பச்சிராசன்** *paccirāśaṉ*, பெ.(n.) கருடன்; Brahmini kite (சா.அக.).

*Skt. pakshi+ raja]*

**பச்சினி** *pacciṉi*, பெ.(n.) 1. பத்தாம் மாதம்; tenth month. 2. பத்து மாதம் நிறைந்த கருப்பவதி; a woman of full term pregnancy i.e., ten months pregnant woman. (சா.அக.)

**பசலி** *pasali*, பெ.(n.) நிலவரி வாங்கும் தொடராண்டாக கி.பி.1555 முதல் அக்பரால் அறிவிக்கப்பட்ட வருவாய்த்துறை ஆண்டு; a revenue year meant for tax collection introduced by the emperor Akbar from 1555 A.D.

த.வ. நிலவரி ஆண்டு

*[Ar. Pers. fasil - separating > U. fasali> த. பசலி]*

அரபி மொழியில் அறுவடையையும் அறுவடைக் காலத்தையும் குறித்த சொல் நாளடைவில் அறுவடைக் காலத்தில் வாங்கும் வரியையும் நிலவரி ஆண்டையும் குறிப்பதாயிற்று. கி.பி.1-7-591 முதல் வழக்கூன்றிய இச்சொல்லாட்சி அரபி பாரசீக மொழிகளின் வாயிலாக உருதுமொழியில் இடம் பெற்றுள்ளது எனவும், கி.பி.1555 முதல் இந்தியாவில் பேரரசர் அக்பரால் இது நிலவரி வாங்கும் தொடராண்டாக மாறியது எனவும் கூறுவர்.

அக்பருக்கு 2000 ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் மூவேந்தர் காலத்தில் நிலவரித் திட்டம் தமிழகத்தில் நடப்பில் இருந்தது. பசலி என்னும் சொல்லை ஆள்வதால் அக்பர் காலத்திலிருந்துதான் நிலவரி முறை இந்தியாவில் அறிமுக மாயிற்று என்னும் தவறான வரலாற்றுக் குறிப்பு இடம் பெற வழி வகுத்துவிடும். ஆதலின் பசலி என்பதை ஆள வேண்டிய நிலை இருப்பின் நிலவரி ஆண்டு என்பது பொருந்தும்.

**பசனம்** *pašaṇam,* பெ.(n.) சமையல்; cooking.

*[Skt. pacana > த. பசனம்]*

**பசனை** *pašaṇai,* பெ.(n.) கடவுளைப் போற்றிப் பாடுகை; chanting devotional songs.

*[Skt. bhajana > த. பசனை]*

**பசாசம்**[1] *pašasam,* பெ.(n.) பெருவிரலுஞ் சுட்டுவிரலும் நீங்க ஒழிந்த மூன்று விரலுந் தம்மிற் பொலிந்து நிற்கும் இணையா வினைக்கை வகை (சிலப்.3,18,உரை); (Nāṭya). a gesture with one hand in which the fingers other than the thumb and the forefinger are joined together and held upright.

*[Skt. pišaca > த. பசாசம்]*

**பசாசம்**[2] *pašāsam,* பெ.(n.) இரும்பு; iron. "காந்தங்கண்ட பசாசத் தவையே" (சி.போ.5).

*[Skt. pacana > த. பசனம்]*

**பசாசரதம்** *pašāsa-ratam,* பெ.(n.) பேய்த்தேர்; mirage, as a goblin's car. "ஒத்தன பசாசரதமே" (அரிச்.பு.விவாக.107).

*[Skt. pacana > த. பசனம்]*

**பசாசு** *pašāsu,* பெ.(n.) பேய்; devil, vampire, goblin, demon, fiend. நரிபசாசேனம் (திருவாலவா.28,64).

**பசாடு** *pašāḍu,* பெ.(n.) மாசு (யாழ்ப்.); film, as in the eye; speck, as in a gem; scum, as on the surface of water.

**பசாடுரி-த்தல்** *pašāduri-,* செ.கு.வி. (v.i.) விழியின் தோட்டை உரித்தல் (யாழ்ப்.); to remove film from the eye.

**பஞ்சகசாயம்** *pañša-kašāyam,* பெ.(n.) 1. ஐந்து வகைச் சரக்குகளான தேன், நெய், பால், வாழை, சருக்கரை, இவைகளைக் கொண்டு ஆயுள்வேத முறையில் வடிக்கும் ஒரு குடிநீர்; a decoction extracted by boiling a mixture of substances viz, honey, ghee, milk, plantain and sugar. 2. நெல்லி, தும்பை, கடுக்காய், வெள்ளி லோத்திரம், மஞ்சிட்டி ஆகிய இவ்வைந்து சரக்குகளையும் கொண்டு தமிழ் முறைப்படி இறக்கும் கருக்கு நீர் (சா.அக.); a kind of decoction extracted from five drugs viz. goose berry leucas flower, gall nut, wood apple fruit shell, Indian madder. 3. ஐந்து வகை மருந்துகள்; five varieties of decoction 'seperately or as a whole.

*[பஞ்சம்+கசாயம்]*

**பஞ்சகவ்வியம்** *pañja-kavviyam,* பெ.(n.) ஆவினின்று கிடைக்கும் பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் என்ற ஐந்து பொருள் களைக் கொண்டு மந்திரப்படிச் சேர்க்கப் படுவது; the five products of the cow mixed together while reciting mantras, viz., milk, curd, ghee, urine and dung. "பஞ்சகவ்வியம் கொள்ளவோர் பசுவருளென்றான்" (உத்தரரா. அசுவ.129).

*[Skt.pañcan+gavya> த. பஞ்சகவ்வியம்]*

**பஞ்சகற்பம்** *pañja-karpam,* பெ.(n.) கத்தூரி மஞ்சள், மிளகு, வேப்பங் கொட்டை, கடுக்காய்த் தோல், நெல்லிப் பருப்பு என்ற ஐவகைப் பண்டங்களாலாகியதும் தலையிற் பூசப்படுவதுமான மருந்துப் பூச்சு வகை (திருமந்.849); medicinal paint for the head, made of five ingredients, viz., kastūrimañjal, miḷagu, vēpaṅgoṭṭai, kaḍukkāy-t-tōl, nelli-p-paruppu.

*[பஞ்ச+கற்பம்]*

*[Skt.pañcan> த. பஞ்ச]*

**பஞ்சகற்பமாத்திரை** *pañja-karpamāttirai,* பெ.(n.) சந்தனம், மஞ்சள், கடுக்காய், நெல்லி, தான்றிக்காய் இவைகளை சமனெடை கொண்டு, ஆடாதோடைச் சாற்றினா லரைத்துத் திரட்டி உலர்த்திய மாத்திரை. இதனால் மலச்சிக்கல், வெள்ளை, அரத்தக்

கொதிப்பு, தாதுத் தளர்ச்சி போகும்; pill or tablet containing sandal, turmeric and the three myrobalans. It is said to cure constipation. White discharge, blood pressure and weakness.

*[பஞ்சம்+கற்பம்+மாத்திரை]*

**பஞ்சகாயம்** *pañca-kāyam* பெ.(n.) திரிபலை, வெங்காயம், காயம் என்ற ஐவகை மருந்துச் சரக்கு; the five medicinal substances, viz., tiripalai, veṅgāyam, kāyam, etc.,

*[பஞ்சம்+காயம்]*

**பஞ்சகாரகம்** *pañja-kāragam,* பெ.(n.) காயம், வெள்ளுள்ளி, வெங்காயம், கடுகு, வெந்தயம் என்ற ஐவகைச் சரக்கு (சங்.அக.); the five pungent substances, viz., kāyam, veḷ-ḷ-uḷḷi, veṅgāyam, kaḍugu, vendayam.

*[Skt. pañcan+kṣāraka> த. பஞ்சகாரகம்]*

**பஞ்சகாரம்** *pañja-kāram,* பெ.(n.) ஐந்து வகையான காரச் சரக்குகள்; five kinds of alkaline. 'சீனக்காரம் அல்லது படிகாரம், வெண்காரம், பூங்காரம், காடிக்காரம், சவர்காரம்' (சா.அக.).

**பஞ்சகாலம்**[1] *pañja-kālam,* பெ.(n.) காலை, முற்பகல், நண்பகல், பிற்பகல், மாலை (பிராதக் காலம், சங்கவகாலம், மத்தியான்ன காலம், அபரான்னகாலம், சாயங்காலம்) என முறையே காலை முதல் அவ்வாறு நாழிகை கொண்ட ஐந்து பகற்பகுதிகள்; the five divisions of day-time, viz., pirātakkālam, šaṅgavagālam, mattiyāṉṉakālam, aparāṉṉakālam, šāyaṅkālam. "பஞ்ச கால முறைமை... அனுஷ்டித்து வருகிற.... கூரத் தாழ்வான்" (பட்டர்வைபவம், பக்.1).

*[பஞ்சம்+காலம்]*

*[Skt. pañcan> த. பஞ்சம்]*

**பஞ்சகாலம்**[2] *pañca-kālam,* பெ.(n.) வறுமைக் காலம்; அகவிலை குறைந்த காலம்; time of famine. "கார் தட்டிய பஞ்ச காலத்திலே" (தனிப்பா.i,236:4).

*[பஞ்சம்+காலம்]*

**பஞ்சகாவியம்** *pañja-kāviyam,* பெ.(n.) சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்ற ஐம்பெரும் வனப்புகள் (காவியங்கள்); the five great epics in Tamil, viz., Silappadikāram, Maṇimēgalai, Sivagašindāmaṇi, Vaḷaiyā-padi, Kuṇḍalakēši.

**த.வ.ஐம்பெருங்காப்பியம்**

*[Skt. pañcan> த. பஞ்ச]*

**பஞ்சகிருத்தியம்**[1] *pañja-kiruttiyam,* பெ.(n.) ஆதன் மும்மலங்களை ஒழித்து வீடு பெறுவதற்குத் துணையாய் இருக்கும் படைக்கை, நிலைபேறு, அழிக்கை, மறைக்கை, அருளுகை (சிருட்டி, திதி, சங்காரம், திரோபாவம், அனுக்கிரகம்) என்ற கடவுளின் ஐந்தொழில் (சி.சி.1,36); the five functions of God, designed by Divine Grace for the deliverance of the souls, viz., širuṭṭi, titi, šaṅgāram, tirōpavam, aṉukkiragam 2. படைக்கலத்தாற் பொரும்பொழுது வீரன் செய்தற்குரிய தொடை, விலக்கு, செலவு சேமம், தவிர்த்துவினை செயல் என்ற ஐந்தொழில் (சீவக.1676, உரை.); the five acts of a warrior in a fight with weapons, viz., toḍai, vilakku, šelavu, šēmam.

**த.வ. ஐந்தொழில்**

*[Skt. pañcan+kirutiya> த. பஞ்சகிருத்தியம்]*

**பஞ்சகிருத்தியம்**[2] *pañjakiruttiyam,* பெ.(n.) உழுது பயிர் செய்தல், பொருள்களை நிறுத்து விற்றல், நூல் நூற்றல், எழுதுதல், படை கொண்டு காரியம் பயிலுதல் ஆகிய ஐந்து தொழில்கள்; the five occupations, viz., agriculture, trade, weaving, writing and fighting.

*[பஞ்சம்+கிருத்தியம்]*

**பஞ்சகுத்தம்** *pañja-kuttam,* பெ.(n.) ஐந்துறுப்புகளையும் அடக்கும் ஆமை (யாழ்.அக.); tortoise, as hiding its five limbs.

*[Skt. pañca+gupta> த. பஞ்சகுத்தம்]*

**பஞ்சகோசம்** *pañja-kōšam,* பெ.(n.) அன்னமய கோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமயகோசம் என ஆன்மாவை மூடிக் கொண்டுள்ள ஐவகைக் கோசங்கள் (சி.சி.ப்ர.மாயா.8.); the five vestures of the soul, viz., annamaya-kōšam, pirāṇamaya - kōšam, manō-mayō-kōšam, viññāṉamaya -kōšam, āṉandamaya - kōšam.

*[Skt.pañjan+kōša> த. பஞ்சகோசம்]*

**பஞ்சகோணம்** *pañca-kōṅam,* பெ.(n.) ஐந்து நேர்க் கோடுகளாற் சூழப்பட்ட வடிவம் (வின்.); pentagon.

*[Skt.pañcan> த. பஞ்சம்]*

**பஞ்சகோலகிருதம்** *pañjakōlakirudam,* பெ.(n.) குன்மம், பச்சை நோய், மண்ணீரல், விருத்தி, இருமல், காய்ச்சல் இவைகளைப் போக்க வேதிமுறைப்படி செய்து கொடுக்கும் ஒரு மருந்து; an ayurvedic medicinal ghee phlegm, dyspepsia, chlorosis, enlarged spleen, cough and fevers (சா.அக.)

*[பஞ்சம்+கோலம்+கிருதம்]*

**பஞ்சகோலம்** *pañja-kōlam,* பெ.(n.) சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திர மூலம் என்ற ஐவகைப் பண்டங்களின் கூட்டு; mixture of the five drugs, šukku, tippali, tippali-mūlam, cevviyam, cittira-mūlam.

*[Skt.pañcan+kōla> த. பஞ்சகோலம்]*

**பஞ்சகௌடம்** *pañca-kauḍam,* பெ.(n.) சுத்தகௌடம், கானகுப்சம், சாரசுவதம், உற்கலம், மிதிலை என்ற ஐம்பகுதி கொண்ட பழைய கௌடப் பகுதி (சது.); the ancient province of gaur, comprising the five districts, šutta-kauḍam, kāṉakupcam. šārašuvadam, uṟkalam, mitilai.

*[Skt.pañcagauḍa> த. பஞ்சகௌடம்]*

**பஞ்சகௌவியம்** *pañca-kauviyam,* பெ.(n.) பார்க்க பஞ்சகவ்வியம்; see pañca-kavviyam. "பாங்கினாற் பஞ்ச கௌவிய மஞ்செனு மமிர்தம்" (சிவரக.நாரத.4).

**பஞ்சசத்தி** *pañca-catti,* பெ.(n.) பராசக்தி, திரோதானசத்தி அல்லது ஆதிசக்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி என்ற ஐவகைச் சிவ சத்திகள் (சதாசிவ.); the five energies of šiva, viz., parācatti, tirōtāṉa-catti or ādicatti, iccācatti, ñāṉcatti, kiriyācatti.

**பஞ்சசமிதி** *pañja-šamidi,* பெ.(n.) உணவுத் தூய்மை, நிறைவு, நோன்பு, ஓதல், இறைப்பற்று என்ற ஐந்து ஒழுக்கங்கள் (மேருமந்.145,உரை.); the five kind of discipline, viz., āgāracutti, tirupti, tavam, attiya-yaṉam, deyva-patti.

**பஞ்சசயனம்** *pañja-šayaṉam,* பெ.(n.) 1. அன்னத்தூவி, பூ, இலவம் பஞ்சு, கோரை, மயிர் இவற்றால் அமைந்த ஐவகைப் படுக்கை (திவா.); the five kinds of bed stuffed variously with swan-feathers, flowers, silk-cotton, sedge and hair. 2. அழகு, குளிர்ச்சி, மெதுத் தன்மை, மிகுமணம், வெண்மை என்ற ஐவகைத் தன்மை கொண்ட படுக்கை; good bed having the five qualities of being beautiful, cool, soft, fragrant and white; "மெத்தென்ற பஞ்சசயனத்தின் மீதேறி" (திவ்.திருப்பா.19,வ்யா.).

*[Skt.pañcan+šayana> த. பஞ்சசயனம்]*

**பஞ்சசரக்கு** *pañca-šarakku,* பெ.(n.) வீரம், சவுரி, இலிங்கம், அரிதாரம், பூரம் ஆகிய இவ்வைந்து வகைச் சரக்குகள்; the five kinds of minerals, corrosive sublimate, yellow arsenic, vermilion, orpiment and subchloride of mercury (சா.அக.).

*[Skt.pañcan> த. பஞ்ச]*

**பஞ்சசரம்** *pañja-šaram,* பெ.(n.) ஐந்து சரடுடைய தாழ்வடம்; a necklace of five strings. "த்ரிஸரம் பஞ்சஸரம் ஸப்தஸரம் என்றற் போலே சொல்லுகிற முத்து வடங் களையும்" (திவ்.அமலனாதி.10,வ்யா. பக்.104).

*[Skt.pañcan+sara> த. பஞ்சசரம்]*

**பஞ்சசரன்** *pañjašaraṉ,* பெ.(n.) காமன் (மன்மதன்); the god of love. "கன்னல் விற் பஞ்சசரனாதியோர்" (சிவக்.பிரபந்.பக்.247).

*[Skt.pañcan+sara> த. பஞ்சசரன்]*

**பஞ்சசரி** *pañja-šari,* பெ.(n.) ஐந்து சரங்கொண்ட அணி வகை (S.I.I.ii,181.); ornament of five strings.

**பஞ்சசருக்கரை** *pañja-šarukkarai,* பெ.(n.) சீந்தில் துண்டு, நீர்வள்ளிக்கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, நிலக்குமிழ் வேர், கற்கோவைத் தண்டு; இவைகள் ஒவ்வொன் றிலும் இருந்து காய்ச்சி தனித்தனியே வாங்கிய ஐந்து வகைச் சருக்கரை. இதை வங்க பற்பத்தில் கலந்து கொடுக்க நீரழிவு போகும் (சா.அக.); calcified tin given with the five salts extracted from each of the above drugs separately.

**பஞ்சசன்மவாதனம்** *pañjašaṉma-vādaṉam,* பெ.(n.) ஒக வகை; a yōgic posture. "பஞ்சசன்ம வாதனத்திடைப் பண்பொடு மிருந்து" (விநாயகபு.80,716).

**பஞ்சசனன்** *pañjašaṉaṉ,* பெ.(n.) கிருட்டிண னால் கொல்லப்பட்ட ஓர் அசுரன்; an asura slain by kṛṣṇa. "பஞ்சசனனுடலில் வளர்ந்து போய்" (திவ்.நாய்ச்.7,2).

*[Skt.pañcajana> த. பஞ்சசனன்]*

**பஞ்சசாதனம்** *pañja-šādaṉam,* பெ.(n.) ஒகிகளுக்குரிய இருக்கை, ஒகக் கச்சை, கோல், கமண்டலம், மந்திரமாலை ஆகிய துறவிக்குரிய ஐங்கருவிகள் (சி.சி.பர.மாயா.15); the five requisites of a yōsin, viz., ācaṉam, yōga-paṭṭam, taṇdam, kamaṇḍalam, cepamālai.

*[பஞ்ச+சாதனம்]*

*[Skt.pañcan> த. பஞ்ச]*

**பஞ்சசாதாக்கியம்** *pañja-šādākki-yam,* பெ.(n.) சிவசாதாக்கியம், அமுர்த்தி சாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், கன்ம சாதாக் கியமென்ற ஐவகைச் சிவபேதங்கள் (தத்துவப்.191,உரை.); the five manifestations of šiva, viz., šiva-šādākkiyam, amūrtti-šādākkiyam, mūrti-šādākkiyam, karttiru, šādākkiyam-kaṉma-šādākkiyam.

*[Skt.pañcan+sādākhya> த. பஞ்சசாதாக்கியம்]*

**பஞ்சசாரம்** *pañja-šāram,* பெ.(n.) 1. ஐந்து வகை சாரங்கள் – நவச்சாரம், சத்திசாரம், சிவசாரம், எவட்சாரம், கதலிச்சாரம்; the five kinds of acid salts viz., salt petre or nitrate of potash, salammonial, sakthi, salt, siva salt and plantin salt 2. ஐந்து வகை சத்துகள்; அவையாவன, காய்ச்சியப் பால், சருக்கரை, தேன், திப்பிலி, நெய் ஆகிய வைகளை நன்றாகக் கலக்கி பயன்படுத்தும் ஒரு ஆயுள் வேத மருந்து. an ayurvedic compound consisting of boiled milk, sugar, honey, piper longum and clarified butter well stirred up (சா.அக.).

**பஞ்சசிகை** *pañja-šigai,* பெ.(n.) மழிப்பு பண்ணத்தகாத உச்சி, புருவங்கள், முழங்கைகள் என்ற ஐந்திடங்கள் (சங்.அக.); the five parts of the body that must not be shaved, viz., crown of the head, brows and fore-arms.

*[Skt.pañcan+sikai> த. பஞ்சசிகை]*

**பஞ்சசித்தர்** *pañjašittar,* பெ.(n.) ஐந்து சித்தர்கள், அசுவினி தேவர், அகத்தியர், புலத்தியர், இராமதேவர், யூகிமுனி (சா.அக.); the five well siddhars viz., Asavin kumar, Agastyar, Pulastyar, Rama devar or Yacob and Uginumi.

**பஞ்சசியம்** *pañjašiyam,* பெ.(n.) (அகன்ற முகமுடையது) அரிமா (சிங்கம்) (யாழ்.அக.); lion, as broad-faced.

*[Skt.pañcāsya> த. பஞ்ச சியம்]*

**பஞ்சசிலேத்துமம்** *pañja-šilēttumam,* பெ.(n.) ஐந்து சிலேத்தும வகைகள், அவலம்பகம், கிலேதம், போதகம், தற்பகம், சந்திகம்; the

five phlegms humours viz., avalampagam, kiletham, pothagam, tharpagam and santhigam(சா.அக.).

**பஞ்சசீதம்** *pañjašīdam,* பெ.(n.) பொன்னாங் காணி, சிறுகீரை, ஆவாரை, வல்லாரை, சீந்தில் எனும் ஐந்தின் பொதுப் பெயர்; five plants or herbs that cause cold. (சா.அக.).

**பஞ்சசீலம்** *pañja-šilam,* பெ.(n.) காமம், கொலை, கள், பொய், களவு என்னும் ஐந்தனையும் முற்றத் துறத்தலாகிய பௌத்த ரொழுக்கம் (மணிமே.21:57,உரை.); the five rules of conduct, viz., abstinence from passion, killing, toddy-drinking, lying and stealing.

*[Skt.pañcan-sēla> த. பஞ்சசீலம்]*

**பஞ்சசுண்ணக்குகை** *pañjašuṉṉa-k-kugai,* பெ.(n.) ஐந்து சுண்ணாம்பினால் செய்த மூசை; crucible made out of the five calciums (சா.அக.).

**பஞ்சசுண்ணம்** *pañja-šuṉṉam,* பெ.(n.) ஐந்து வகைச் சுண்ணம், குக்கிடத்தின் சுண்ணம், காரக் கிளிஞ்சில் சுண்ணம், வெள்ளைக்கல் சுண்ணம், கடல் நுரைச் சுண்ணம், வலம்புரிச் சங்கின் சுண்ணம்; the five calciums or slaked limes viz. fowls excreta, bivale shell calcium, lime stone calcium, cutle fish calcium and right tuisted conch shell calcium (சா.அக.).

**பஞ்சசுத்தி[1]** *pañja-šutti,* பெ.(n.) 1. மன வழிபாட்டில் அன்றாட கரிசு தூய்மை, ஆதன் தூய்மை, மந்திர நீராற் தூய்மை, மந்திரத் தூய்மை என்ற ஐவகைத் தூய நடப்பு (சி.சி.8,20,நிரம்ப.); the five kinds of purification in mental worship, viz., pūdacutti, āṉmacutti, tiraviyacutti, mantiracutti, iliṅgacutti 2. பூசைக்கு இன்றி யமையாத ஆத்மசுத்தி, தானசுத்தி, மந்திர சுத்தி, திரவியசுத்தி, தேவசுத்தி என்ற ஐவகைச் சுத்திக்கிரியை; the five kinds of purification indispensable for worship, viz., ātmacutti, stāṉacutti, mantiracutti, tiravīyacutti, dēvacutti.

**பஞ்சசுத்தி[2]** *pañca-šutti,* பெ.(n.) 1. தமிழ் மருத்துவத்தில் சொல்லியுள்ள ஐந்து வகை சுத்தி முறைகள்; the five kinds of cleaning or purifying process adopted inTamil medicine.

'1. மண்ணிற்குள் புதைத்து வைத்தல் 2. தண்ணீர், கடுக்கு நீர், எரிநீர், செயநீர், புளித்தசாறு முதலியவைகளால் கழுவுதல் 3. அவித்தல், புடமிடல், எரித்தல் முதலியவை 4. காற்றில் உலர வைத்தல் 5. கதிரவன் ஒளியில் இடல்'.

2. சைவ சமயத்தைத் தழுவியவர்கள் கைக்கொள்ளும் தூய்மைப்படுத்தும் முறைகள்; the five kinds of purification practised among saivites.

'1. குளியல் 2. உள்ளொடுக்கம் 3. ஏனத்தூய்மை 4. இலிங்க தூய்மை, இலிங்க வழிபாடு 5. மந்திர உச்சரிப்பு; ஐந்தெழுத்து ஓதுதல், வணக்கம், ஐவகைத் தூய்மை, ஆதன் தூய்மை, இலிங்கத்தூய்மை, திரவிய தூய்மை, பூதத்தூய்மை, மந்திரத்தூய்மை' (சா.அக.).

**பஞ்சசூனை** *pañja-šūṉai,* பெ.(n.) வீட்டில் உயிர்கட்குத் தற்செயலாய்க் கேடு விளைக்கக் கூடிய அடுப்பு, அம்மி, துடைப்பம், உரலுலக்கை, நீர்க்குடம் என்ற ஐவகைப் பண்டங்கள் (யாழ்.அக.); the five household articles, capable of causing harm to animal life, viz., oven, grinding stone, broom, pestle and mortar, and water-pot.

*[Skt.pañcasūna> த. பஞ்சசூனை]*

**பஞ்சடைப்பு** *pañjaḍaippu,* பெ.(n.) கண் பஞ்சடைந்த நிலை; the state where in the eye looks grim, dim and dark losing its reflex action (சா.அக.).

மறுவ.பூஞ்சகன்

**பஞ்சணகுலம்** *pañjaṇakulam,* பெ.(n.) பெருந்திருக்கம்மியன் (விசுவகர்ம குலம்) (மங்களே.சிறப்புப்); the caste of višuakarmas.

*[Skt.pañcan> த. பஞ்சண]*

**பஞ்சணிப்படலம்** *pañjaṇi-p-paḍalam,* பெ.(n.) பீளை சேர்ந்து பார்வை புகைச்சலும் கண் உறுத்தலும் ஒரு புறப் பார்வையும் உண்டாக்கும் கண்ணோய் வகை. (சா.அக.); an eye disease characterised by irritation, discharge from the eye squint eye etc. (சா.அக.).

**பஞ்சத்துரோகம்** *pañja-t-turōgam,* பெ.(n.) பார்க்க பஞ்சமாபாதகம்; see pañca-mā-pādagam.

**பஞ்சதசப்பிரகரணம்** *pañca-daša-p-pirakaraṇam,* பெ.(n.) ஓர் அத்துவைத நூல்; a treatise on advaita.

**பஞ்சதசி** *pañja-daši,* பெ.(n.) காருவா (அமாவாசை) அல்லது வெள்ளுவா (பௌர்ணமி) (சைவச.பொது.12.); the new moon or the fullmoon.

**பஞ்சதந்திரம்** *pañca-dandiram,* பெ.(n.) மித்திரபேதம், சுகிர்லாபம், சந்திவிக்கிரகம், அர்த்தநாசம், அசம்பிரேட்சியதுரித்துவம் என ஐம்பகுதியுடையதாய்த் தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட நூல்; the Tamil version of pañca-tantra consisting of five books, viz., mittira-pēdam, šugir-lāpam, candi-vikkiragam, artta-nāšam, ašampirēṭciyan-karittuvam.

*[Skt. pañcan+tantira> த. பஞ்சதந்திரம்]*

**பஞ்சதம்** *pañcadam,* பெ.(n.) (பஞ்சபூதங்களும் பிரிந்து தனியாகை) சாவு (யாழ்.அக.); death, as being the dissolution of the five elements.

*[Skt. pañca-tā> த. பஞ்சதம்]*

**பஞ்சதாரை¹** *pañja-tārai,* பெ.(n.) விக்கிதம், வற்சிதம், உபகண்டம், சவம், உபசவம் அல்லது மாசவம் என்ற ஐவகைக் குதிரை நடை; "the five paces of a horse, viz., vikkidam, vaṟkidam, upakaṇḍam, šavam or mācavam. "புக்குள பஞ்சதாரையோடு (திருவாலவா,28,47), (பு.வெ.ஒழிபு,வென்றிப். 13,உரை.)

*[Skt. pañcan+dhārā> த. பஞ்சதாரை]*

**பஞ்சதாரை²** *pañja-tārai,* பெ.(n.) சருக்கரை; pure cane-sugar, refined sugar. "வீழ்சுவையினும் விரும்பத்தக்கதெனும் பஞ்சதாரையினில்" (மாறனங்.235,உரை.).

க.ம.பஞ்சதாரா

*[Skt. pañcan-dhārā> த. பஞ்சதாரை]*

**பஞ்சதாளப்பிரபந்தம்** *pañja-taḷa-p-pirapantam,* பெ.(n.) ஐந்து தாளத்தால் அமைந்தது (சிலப்.3:154,உரை.); that which is composed of the five tāḷam.

**பஞ்சதாளம்** *pañja-tāḷam,* பெ.(n.) சிவ பெருமானது ஐந்து முகத்தினின்றும் பிறந்த தாகச் சொல்லப்படும் கச்சற்புடம், சாசற்புடம், சட்பிதாபுத்திரகம், சம்பத்து வேட்டம், உற்கடிதம் என்ற ஐந்து தாளங்கள் (பரத.தாள.2.); time-measures, viz., šaccaṟpuḍam, šāšaṟpuḍam, šaṭpidā -puttirakam, šampattu vēṭṭam, uṉkaḍidam said to have originated from the five faces of Siva.

*[Skt. pañcan+tāla> த. பஞ்சதாளம்]*

**பஞ்சதிரவியம்¹** *pañja-tiraviyam,* பெ.(n.) மலைபடு பொருள், காடுபடு பொருள், நாடுபடு பொருள், நகர்படுபொருள், கடல்படு பொருள் என்ற ஐவகைப் பொருள்கள்; the five kinds of products, viz., malaipaḍu-tiraviyam, kāḍupaḍutiraviyam, nāḍupaḍu-tiraviyam, nagarpaḍu-tiraviyam, kaḍalpaḍu-tiraviyam.

*[Skt. pañcan> த. பஞ்ச]*

**பஞ்சதிரவியம்²** *pañjatiraviyam,* பெ.(n.) மஞ்சள், மா, நெல்லி முள்ளி, திரவியப் பட்டை முதலிய முழுக்காட்டுப் பொருள்கள் (S.I.I.V,86.); the five articles used in bathing an idol, viz., mañcal, mā, nellimuḷḷi, diraviiya-paṭṭai, etc.

*[Skt. pañcan> த. பஞ்ச]*

**பஞ்சதிக்கிகம்** *pañjadikkikam,* பெ.(n.) வயிறு, கண், கை, மார்பு, மூக்கு, ஆகிய உடம்பின் ஐந்து உறுப்புகள்; five parts of the body viz - abdomen, eye, arms, chest and nose (சா.அக.).

**பஞ்சதீபாக்கினி** *pañjadīpākkiṉi,* பெ.(n.) சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம் ஆகிய பசியை எழுப்பும் ஐந்து வகை சரக்குகள்; the five drugs that stimulate hunger, fire in the stomach viz - dried ginger, black pepper, long pepper, cumin seeds and cardomum (சா.அக.).

**பஞ்சதீர்க்கம்** *pañja-tīrkkam,* பெ.(n.) உடல் இலக்கணப்படி நீண்டிருக்க வேண்டிய புயம், கண், வயிறு, மூக்கு, மார்பு என்ற ஐவகை உடலுறுப்புகள்; the five parts of the body which ought to be long according to the ideal of personal beauty, viz, the arms, eyes, abdomen, nose and breast.

*[Skt.pañcan+tērkka> த. பஞ்சதீர்க்கம்]*

**பஞ்சதீர்த்தம்** *pañja-tīrttam,* பெ.(n.) தேவர், முன்னோர், இருடிகள், பூதம், மாந்தர் என்ற ஐவர்க்குமாக உள்ளங்கையின் பல பக்கங் களினின்று வெளிவிடப்படும் நீர் (சைவச. பொது.66,உரை.); water poured from the palm of the hand to propitiate Dēvas, pitṟs, ṟṣis, būtas and human beings.

*[Skt.pañcan+tērtta> த. பஞ்சதீர்த்தம்]*

**பஞ்சதுட்டன்** *pañja-tuṭṭaṉ,* பெ.(n.) பஞ்சமாபாதகன் பார்க்க; see pañjamā-pādagaṉ."பஞ்ச துட்டனைச் சாதுவேயென்று" (தேவா.648,5.).

*[Skt.pañcan+tūṭta> த. பஞ்சதுட்டன்]*

**பஞ்சதூபம்** *pañja-dūpam,* பெ.(n.) அகில், சாம்பிராணி, குந்துருக்கம், குக்குலு, சூடன் என்ற ஐவகையான புகைத்தற்குரிய நறுமணப் பொருட்கள் (சங்.அக.); the five kinds off incense, viz, agil, śāmpirāṇi, kundurukkam, kukkulu, śūḍaṉ.

*[Skt.pañcan-tūpa> த. பஞ்சதூபம்]*

**பஞ்சநதம்** *pañjā-nadam,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள திருவையாறு என்னும் இடம்; Tiruvaiyāṟu in tanjour district.

**பஞ்சநமசுகாரம்** *pañjā-namasukāram,* பெ.(n.) அருகர், சித்தர், சமயத்தலைவர், ஆசிரியர், சாதுக்கள் என்ற ஐவரையும் முறையே வணங்குதற்குறியாகச் சைன மதத்தில் வழங்கும் அ,சி,ஆ,உ,சா என்ற ஐந்தெழுத்துக்களாலாகிய மந்திரம் (சீவக. 951,உரை.); a mantra of five letters, viz., a,ci,ā,u,cā being the initial letters respectively of arukar, cittar, ācariyar, upāttiyāyaṉ, cātukkaḷ.

*[Skt.pañcan-namaškara]*

**பஞ்சநாடி** *pañjanāḍi,* பெ.(n.) 1. பஞ்சேந்திரியம்; the five senses of the body. 2. உடம்பிலுள்ள ஐந்து வகை நாடிகள்; the five kinds of pulsations in the body. 'அவைகள், வாத நாடி, பித்த நாடி, ஐய நாடி, பூதநாடி, குருநாடி' (சா.அக.).

*[பஞ்ச+நாடி]*

**பஞ்சநாதம்** *pañjānādam,* பெ.(n.) ஐந்து வகையான இசைக் கருவிகள் (பஞ்சுமாசத்தம்) (பெரியபு.அதிபத்.19.); the five kinds of musical Instruments.

*[Skt.pañcan+nādha> த. பஞ்சநாதம்]*

**பஞ்சநீராஞ்சனம்** *pañja-nīrāñcaṉam,* பெ.(n.) விளக்கு, தாமரை, சீலை, தளிர் இவற்றைத் தெய்வத்துக்கு முன் சுழற்றியும் அதற்கு முன் தண்டனிட்டும் புரியும் ஐவகைப் பூசனைச் செயல் (யாழ்.அக.); worship of an idol in five ways, viz., waving of lamp, lotus, cloth and leaf and then falling prostrate before it.

த.வ.ஐம்பூசனை

[Skt.pañcan> த. பஞ்சம்]

**பஞ்சப்பிரமம்** *pañja-p-piramam,* பெ.(n.) 1. நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; an upaniṣad, one of 108. 2. ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்ற சிவனைம் முகங்கள் (அபி.சிந்.); the five faces of Siva, viz., īcāṉam, taṟpuruḍam, agōram, vāmadēvam, cattiyōcādam 3.சிவபெரு மானது ஐந்து திருமுகம் பற்றிய மந்திரங்கள்; the mantras relating to the five faces of Siva "அடைவுறு பஞ்சப் பிரம மந்திரத்தால்" (காஞ்சிப்பு.சனற்.14).

த.வ.ஐம்பரம்

[Skt.pañca-brahma> த. பஞ்சப்பிரமம்]

**பஞ்சபட்சிக்காதல்** *pañja-paṭci-k-kādal,* பெ.(n.) ஐவகைப்பட்சிகளின் ஒலியைக் கொண்டு குறி சொல்லும் நூல்; treatise on sooth saying from the notes of pañja-paṭci.

[பஞ்ச(ம்)+பட்சி+காதல்]

**பஞ்சபட்சிசாத்திரம்** *pañja-paṭci-šattiram,* பெ.(n.) வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் ஆகிய பறவைகள் எழுப்பும் ஒலிகளை வைத்துப் பலன் சொல்லும் கணிய முறை; system off divination from the call of certain birds.

[Skt. pañcan-paṭci+šāstra > த. பஞ்சபட்சிசாத்திரம்]

**பஞ்சபட்சிபாடாணம்** *pañjapaṭci-pāḍāṉam,* பெ.(n.) வைப்பு நஞ்சு வகை (வினி.); a prepared arsenic.

[Skt.pañcan+pakṣin+pātana> த. பஞ்சபட்சிபாடாணம்]

மச்சமுனி '800-இல் சொல்லியபடி பூரசம், அப்புரசம், மகாரசம், பச்சை, வெள்ளை, மனோசிலை, வீரம், இலிங்கம் இவைகளைப் பொடித்து குப்பியில் அடைத்து சீலைமண் ஏழு செய்து தாழியில் மணலிட்டு வைத்து குறுகத்தீயிட்டு ஆறு சாமம் எரிந்து தணல் ஆறிய பின் குப்பியை உடைத்துப் பார்க்க நஞ்சாகும்' (சா.அக.).

**பஞ்சபட்சிவேளை** *pañja-paṭci-vēḷai,* பெ.(n.) 1. ஐவகைப்புட்களால் குறியறியும் நேரம்; auspicious hour ascertained by augury. 2. காருவா, வெள்ளுவாக்களின் (அமாவாசை பூர்ணிமைகளின்) இடையே ஐவகைப் புட்களின் உண்டி, துயில், நடை, அரசு, சாவுகளினின்று அறியும் குறி; augury from the eating, sleeping, walking, ruling and dying of pañja-paṭci between the full and the new moon.

[Skt.pañcan-paṭci> த. பஞ்சபட்சி+வேளை]

**பஞ்சபடலம்** *pañjapaḍalam,* பெ.(n.) கருவிழியில் ஏற்படும் 'தசை, நீர், அரத்தம், வரி, வெண்சதை' என்னும் ஐந்து வகைப் படலங்கள்; in the black of the eye which is divided into five varieties. (சா.அக.).

**பஞ்சபத்திரகசாயம்** *pañjapattira-kašāyam,* பெ.(n.) பற்பாடகம், கோரைக் கிழங்கு, சீந்தில் கொடி, அதிவிடயம், நிலவேம்பு, இவைகள் சேர்ந்த கருக்கு நீர்; decoction prepared out of fever plant root of Indian papryus, stem moon creeper, Indian atees and ground neem (சா.அக.).

**பஞ்சபத்திரம்**[1] *pañjapattiram,* பெ.(n.) கடவுளுக்குப் படைத்தற்குரிய படையலமுது வகை (நைவேத்திய வகை) (S.I.I.iv,141.); offering of food stuffs, made along with cooked rice, to a deity.

[Skt.pañcan+bhadha> த. பஞ்சபத்திரம்]

**பஞ்சபத்திரம்**[2] *pañjapattiram,* பெ.(n.) ஐந்து வகை இலைகள்; ஆடாதோடை, கரிசலை, நொச்சி, அழுவணை, கண்டங்கத்திரி; the herbacous leaves of Malabar winter cherry, eclipse plant, five leaved notchy and nail dye (சா.அக.).

**பஞ்சபர்வம்** *pañja-parvam,* பெ.(n.) ஒவ்வொரு மாதத்திலும் வரும் சங்கரமணம் என்னும் ஐந்து நோன்பு நாள்கள்; அவை கரும்பக்கத்தின் எட்டாவது பதினான்காவது அல்லது பதினோராவது பிறை நிலை (திதி)யும் தெய்வத்துக்குரிய நாண்மீனும் வெள்ளுவா

காருவா நாள்களும் என ஐந்தாகும். (இ.வ.); the five ceremonial days in a month, viz., caṅgiramaṉam, eighth and the fourteenth titi of the dark half or the 11th titi and the day of a deity, the newmoon and the fullmoon 2. ஒவ்வொரு பக்க (பட்ச)த்திலும் வரும் ஐந்து நோன்பு நாள்கள் (வின்.); the five ceremonial days in each lunar fortnight.

*[Skt. pañcan+parvam> த. பஞ்சபர்வம்]*

**பஞ்சபரமேட்டிகள்** *pañja-paramēṭṭikaḷ,* பெ.(n.) அருகர், சித்தர், ஆசாரியர், ஆசிரியர், துறவி என்ற ஐவகை சைன சமயப் பெரியார் (சிலப்.10,18,உரை.); five chief worthies, viz., arugar. šittar, āšāriyar, āširiyar, šādukkaḷ.

*[Skt. pañcan+paramēṣṭhin> த. பஞ்சபரமேட்டிகள்]*

**பஞ்சபரிவர்த்தனம்** *pañja-parivart-taṉam,* பெ.(n.) உயிர் செயற்பாட்டுக்குரிய பொருள் (திரவியம்), இடம் (க்ஷேத்திரம்), காலம், பவம், கரிசு (பாவம்) ஆகிய ஐவகைப்பட்ட நிலைமைகள் (நீலகேசி,1,உரை.); the five conditions of one's activities, viz., diraviyam, kṣēttiram, kālam, pavam, pāvam.

*[Skt. pañcan+parivarttana> த. பஞ்சபரிவர்த்தனம்]*

**பஞ்சபரிவர்த்தனை** *pañja-parivar+taṉai,* பெ.(n.) கருமம், அவிச்சை, மணம், சுவை, மாயைத் தொடர்பு (வாசனை,உருசி, மாயா சம்பந்தம்) என ஐவகையாய் மாறி வரும் செய்திகள் (மேருமந்.71,உரை.); the five conditions that come in rotation, viz., karumam, aviccai, vāšaṉai, uruši, māyāšampandam.

*[Skt. pañcan+parivar+taṉai> த. பஞ்சபரிவர்த்தனன்]*

**பஞ்சபல்லவம்** *pañja-pallavam,* பெ.(n.) பூசனைக்குரிய ஆத்தி, மா, முட்கிளுவை, முல்லை, வில்வம் என்ற ஐந்தன் தளிர்கள் (யாழ்.அக.); springs off ātti, mā, muṭ-kiḷuvai, mullai, vilvam used for worship.

*[Skt. pañcan+pallavam> த. பஞ்சபல்லவம்]*

**பஞ்சபலோதகம்** *pañja-palōdagam,* பெ.(n.) எலுமிச்சை, நாரத்தை, தமரத்தை, கொழுஞ்சி, மாதுளை என்ற ஐவகைப் பழங்களிலிருந்து எடுக்கும் சாறு (தத்துவப்.65,உரை.); juice extracted from elumiccai, nārattai, tamarattai, koḻuñji and mādulai fruits.

*[Skt. pañcan+phola+utaka> த. பஞ்சபலோதகம்]*

**பஞ்சபாடாணம்** *pañjapāḍāṇam,* பெ.(n.) ஐந்து வகை நஞ்சுகள் (சா.அக.); five kinds of poisonous drugs; 1. தாளகம்; yellow orpiment, 2. கௌரி; yellow oxide of arsenic, 3. இலிங்கம்; cinnabar, 4. வெள்ளை; white arsenic, 5. வீரம்; corrosive sublimate

**பஞ்சபாண்ட செந்தூரம்** *pañjapāṇḍa šendūram,* பெ.(n.) பிரமமுனி மருத்துவ நூலிற் சொல்லியுள்ளள ஒரு வகைச் செந்தூரம்; a red oxide prepared by process of calcination according to the principles laid down in Brahmamuni work in medicine (சா.அக.).

**பஞ்சபாண்டவர்** *pañja-pāṇḍavar,* பெ.(n.) பாண்டுவின் புதல்வர்களான தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகதேவன் என்ற ஐவர்; the five Pāṇḍava brothers, sons of king Pāṇḍu, viz., Tarumaṉ, Vīmaṉ, Aruccuṉaṉ, Nagulaṉ, Sagadēvaṉ. "பஞ்சபாண்டவர்க்காகி.....தூதுசென்று" (பெரியதி.2,3,5.).

*[Skt. pañcan+pāṇḍavar> த. பஞ்சபாண்டவர்]*

**பஞ்சபாண்டவர்கள் படுக்கை** *pañja-pāṇḍavargaḷ-paḍukkai,* பெ.(n.) மலைக் குகையிலுள்ளள கற்படுக்கை; stone-beds in the caves of a hill. "பஞ்சபாண்டவர்கள் படுக்கை பொற்றைக்குக் கிழக்கு" (T.A.S.i.262.).

*[Skt. pañcan-pāṇḍava> த. பஞ்சபாண்டவர்]*

**பஞ்சபாணம்** *pañja-pāṇam,* பெ.(n.) தாமரை மலர், அசோக மலர், மாமலர், முல்லை மலர், கருங்குவளை மலர் என்ற ஐவகை காமனுடைய மலரம்புகள் (பாணங்கள்); the five arrows off Kāmā, viz., tāmarai-malar, acōka-malar, mā-malar, mullai-malar, karuṅ-kuvalai-malar.

*[Skt. pañcan+pāṇa> த. பஞ்சபாணம்]*

**பஞ்சபாணன்** *pañja-pāṇaṉ,* பெ.(n.) காமன் (ஐங்கணையோன்) (திவா.); Kāma, as armedwith five arrows.

*[Skt. pañca-bāṇa> த. பஞ்சபாணன்]*

**பஞ்சபாணாவத்தை** *pañja-pāṇavattai,* பெ.(n.) காமநோயால் உண்டாகும் (சுப்பிர யோகம், விப்பிரயோகம், சோகம், மோகம் மரணம் என்ற) ஐவகைத் துன்பநிலை (சூடா.); the five states of love-stricken persons, viz., šuppirayōgam, vippirayōgam, šōgam, mōgam, maraṇam.

*[Skt. pañjan+bāṇavastai> த. பஞ்ச பாணாவத்தை]*

**பஞ்சபாணி** *pañja-pāṇi,* பெ.(n.) மலைமகள்; Pārvadi. "பஞ்சபாணி தந்த முருகோனே" (திருப்பு.682).

*[Skt. pañcan+pāni> த. பஞ்சபாணி]*

**பஞ்சபாத்திரம்¹** *pañja-pāttiram,* பெ.(n.) வழிபாட்டில் (அர்க்கியம், பாத்தியம், ஆசமனீயம், ஸ்நாநீயம், சுத்தோதகம் என்பவைகளுக்கு) பயன்படுத்தப்படும் ஐந்து நீர்வட்டில்கள் (வின்.); the five cups used in worship to hold water for arkkiyam, pāttiyam, āšamaṉiyam, snāniyam, šuttōdagam.

*[Skt. pañcan+pāttiram> த. பஞ்சபாத்திரம்]*

**பஞ்சபாத்திரம்²** *pañja-pāttiram,* பெ.(n.) அகன்ற வாயுள்ள தண்ணீர் ஏனம் (இ.வ.); water-vessel with a wide mouth.

*[Skt. pañca+pāttiram> த. பஞ்சபாத்திரம்]*

**பஞ்சபாதகம்** *pañja-pādagam,* பெ.(n.) பஞ்சமாபாதககம் பார்க்க (திவா.); see pañja-mā-pādagam.

*[Skt. pañcan+pādaga> த. பஞ்சபாதகம்]*

**பஞ்சபாதகன்** *pañja-pādakaṉ,* பெ.(n.) பஞ்சமாபாதகன் பார்க்க; see pañja-mā-pādagan. "பாய வெண்டிரை நிலத்துழல் பஞ்சபாதகரே" (உபதேசகா.உருத்திராக்.53).

*[Skt. pañcan+pādakaṉ> த. பஞ்சபாதகன்]*

**பஞ்சபாரதீயம்** *pañjapāradiyam,* பெ.(n.) நாரத முனிவர் இயற்றியதாகக் கருதப்படும் ஓர் இசைத்தமிழ் நூல் (சிலப்.உரைப்பா.); a Tamil musical work attributed to the sage Nārada.

**பஞ்சபிராணாவத்தை** *pañja-pirāṇāvattai,* பெ.(n.) மாந்தருக்குக் காமத்தினால் ஏற்படும் ஐந்து வகைத் துன்பங்கள் அவை; effects of love on men and women. 1. நேசிப்பவரைப் பற்றி எப்பொழுதும் நினைப்பதும், பேசுவதும். 2.பெரு மூச்செறிதலும் அழுதலும், 3. அருவருத்தல் 4. அனத்துதல். 5. ஓலமிட்டு அலறல் (சா.அக.)

**பஞ்சபீசம்** *pañjapišam,* பெ.(n.) மாழைகளின் தன்மையைப் போக்கித் தங்கச் செம்பாக மாற்றிப் பொன்னின் குணத்தை உண்டாக்கும் ஐந்து வகை செம்புப்பொடி; the alchemical substance known as philosopher's powder used for converting the following metals into alchemical copper before they are transmuted into gold viz., 1. தங்கச் செம்பு gold copper, 2. வெள்ளிச் செம்பு silver copper, 3. அப்பிரகச்செம்பு mica copper, 4. காந்தச் செம்பு magnetic copper, 5.அயச் செம்பு ferrou copper. (சா.அக.).

**பஞ்சபுலன்** *pañjapulaṉ,* பெ.(n.) ஐம்புலன்கள்; மெய், வாய், கண், மூக்கு, செவி; the five sense organs viz, skin, mouth (tongue), eye, nose and ear (சா.அக.).

**பஞ்சபூசாவந்தம்** *pañja-pūšāvandam,* பெ.(n.) கொடிறு விண்மீனைப் (பூச நட்சத்திரத்தைப்) போல ஐந்து உருக்களைக் கொண்ட காதணி வகை; ear-ring having small pieces of stones arranged like the five stars of pūšamasterism.

*[Skt.pañcan+pūšāvandam> த. பஞ்ச பூசாவந்தம்]*

**பஞ்சபூடணதைலம்** *pañja-pūḍaṇa-tailam* பெ.(n.) அதிமதுரம், இலவங்கம் பட்டை, நன்னாரி, கருஞ்சீரகம், முத்தக்காசு ஆகிய இவ்வைந்தும் சேர்த்துச் செய்யும் ஒரு தலை முழுக்கெண்ணெய்; a bathing medicated oil prepared with the following drugs. liquorice root or root of honey creeper, cinnamon bark, sarsaparilla, black cumin seeds and coray root (சா.அக.).

*[பஞ்சம்+பூடணம்+தைலம்]*

**பஞ்சபூதக்குகை** *pañjapūdakkugai,* பெ.(n.) கடல் நுரை, கற்சுண்ணம்,சாரம், கல்லுப்பு, சீனம் ஆகிய ஐந்து சரக்கினால் செய்த மூசை; a crucible made out of the following five drugs viz., cutile fish (see a froth) time stone, salammoniac, sea salt and alum. This is used for alchemic purpose (சா.அக.).

**பஞ்சபூதக்கூறு** *pañjapūda-k-kuṟu,* பெ.(n.) உடம்பினுள் அமைந்துள்ள ஐம்பூதத்தின் ஒவ்வொரு பகுதியிலும் பொருந்திய ஐந்து வகைப் பொருள் வகுப்புகள், ஆகவே இவ்வகுப்புகள் முழுவதும் 5 x 5 அல்லது 25 பிரிவுகள் ஆகும்; 25 constitutional parts of the human body which are proportioned as five substances to each of the five lements composing the body viz;- 1. நில (பிருதிவி) வகுப்பு – 5 மயிர், எலும்பு, தோல், சதை, நரம்பு; earth-hair, bone, skin, flesh and nerve. 2. அப்பு வகுப்பு – 5 நீர், இரத்தம், மச்சை, வெண்ணீர், கொழுப்பு; water - lymph, blood, marrow, semon and fat. 3. தீ (தேயு) வகுப்பு – 5, உணவு, துஞ்சல், அச்சம், சோம்பல், போகம்; fires - food, sleep, fear, laziness and sexuality. 4. காற்று (வாயு) வகுப்பு – 5, உடலோடு கிடத்தல், இருக்கை, நடத்தல், இருத்தல், நிற்றல்; air - lying, simply, remaining, walking, sitting and standing. 5. வான் (ஆகாய) வகுப்பு – 5, காமம், பகை (குரோதம்), சினம் (கோபம்), மதம், மாச்சரியம்; sky - evil passions lust, anger, desire infatuations and envy (சா.அக.).

**பஞ்சபூதச்சரக்கு** *pañja-pūda-c-carakku,* பெ.(n.) தாளகம், வீரம், கௌரி, வெள்ளை, லிங்கம் என்ற ஐவகை மருந்துச் சரக்குகள் (சங்.அக.); the five medicinal substances tāḷagam, vīram, kauri, veḷḷai, liṅgam.

*[பஞ்சம்+பூதம்+சரக்கு]*

*[Skt.pañcan-pūda> த. பஞ்சபூதம்]*

**பஞ்சபூததாதுப் பொருள்கள்** *pañjapūda-tādu-p-poruḷkaḷ,* பெ.(n.) சட்டை முனி நிகண்டில் சொல்லிய ஐந்து பூதங்களையும் குறிக்கும் தாது சரக்குகள்; five minerals referring the five elements. They are yellow orpiments, corrosive sublimate, yellow arsenic and vermilion. (சா.அக.).

**பஞ்சபூதநாடி** *pañjapūdanāḍi,* பெ.(n.) ஊதை (வாத) நாடி, பித்த நாடி, சிலேட்டும நாடி, குரு நாடி, பூத நாடி; vatha pulse; pitha pulse, kapha pulse, guru pulse and bhutha pulse. (சா.அக.).

*[பஞ்சபூதம்+நாடி]*

**பஞ்சபூதநிறம்** *pañjapūda-niṟam,* பெ.(n.) ஐம்பூதங்களின் வண்ணம்; colour of the five elements. 1. நிலம் (பிருதிவி), மண் (earth) - பொன்னிறம்; golden colour. 2. அப்பு (நீர்) water - பளிங்கு நிறம்; crystial colour. 3. தீ (தேயு), நெருப்பு; fire - செம்பு நிறம் copper colour. 4. வளி (வாயு), காற்று; air - கருப்பு

நிறம்; black colour. 5. விண் (ஆகாயம்), வானம் sky -புகை நிறம்; smoke colour.

**பஞ்சபூதம்** *pañja-pūdam,* பெ.(n.) ஐந்து பூதங்கள் – மண், நீர், நெருப்பு, காற்று, விண்; the five elements viz., earth, water, fire, air and sky (சா.அக.).

*[Skt.pañcan> த. பஞ்சம்+பூதம்]*

**பஞ்சபூதமூலி** *pañjapūda-mūli,* பெ.(n.) ஐம்பூதங்களையும் குறிக்கும் மருந்து மூலிகைகள், வெள்ளெருக்கு, மாவிலிங்கம், கொடிவேலி, புனல் முருங்கை, பீர்க்கு; the five kinds of medicinal plants referring to the five elements viz., white madar, lingam tree, Ceylon lead wort, wild morunga and luffa (ribbed ground) (சா.அக.).

*[பஞ்சம்+பூதம்+மூலி]*

**பஞ்சபூதவெழுத்து** *pañjapūda-v-eḻuttu,* பெ.(n.) ஐம்பூத வகுப்பின்படி பிரித்த மந்திர எழுத்துகள்; the five kinds of substances divided according the mantra words. 1. மண் (பிருதிவி), அ– A ந– Na ஐயும், Iyu. 2.அப்பு, இ– I ம– Ma கிலியும், kiliyu 3. தீ (தேயு), உ– u சி– si சவ்வும், cavvu 4.வளி (வாயு), எ– E வ– va றீயும், ree 5. விண் (ஆகாயம்), ஒ– o ய– ya ஸ்ரீயும், sree (சா.அக.)

**பஞ்சம்** *pañjam,* பெ.(n.) ஐந்து (சூடா.); five.

*[Skt.pañcan> த. பஞ்சம்]*

**பஞ்சமகர்** *pañja-magar,* பெ.(n.) கட்டரங்கு (சதுரங்கம்) ஆட்டத்தில் இரு பக்கங்களின் காய்களும் சேர்ந்து ஐந்தாவதால் விளையாட்டு முடிவுறுகை; a way of ending a game in chess, when the total of pieces on both sidess is five.

*[Skt.pañcan+muhra> த. பஞ்சமகர்]*

**பஞ்சமகா பாவங்கள்** *pañja-magā-pāvaṅgaḷ,* பெ.(n.) கொலை, களவு, காமம், கள்ளுண்டல், பொய்; the five capital vices viz., murder, theft, lust, intoxicating drink and lie (சா.அக.).

*[பஞ்சம்+மகா+பாவங்கள்]*

**பஞ்சமகாவிரதம்** *pañja-magā-viradam,* பெ.(n.) அகிம்சை, சத்தியம், அத்தேயம், பிரம்மசாரியம், அபரிக்கிரகம் என்ற துறவிகளுக்குரிய ஐம்பெரும் நோன்புகள் (மேருமந், முக.xv.); agimšai, šattiyam, attēyam, piramma šariyam, aparikkiragam (non-killing, truth speaking, non-stealing, celibacy and not taking gifts.)

த.வ. ஐம்பால் நோன்பு

*[Skt.pañcan+mahā-vrata> த. பஞ்சமகாவிரதம்]*

**பஞ்சமசுருதி** *pañja-šurudi,* பெ.(n.) ஏழிசைகளுள் ஒன்று (பரத.); fifth note of the gamut.

*[Skt.pañcama+šruti> த. பஞ்சமசுருதி]*

**பஞ்சமணம்** *pañja-maṇam,* பெ.(n.) ஐந்து வகையான இன்சுவை பொருள்கள் (பஞ்சவாசம்) (பொதி.நி.30.); the five aromatics.

*[Skt.pañcan> த. பஞ்ச]*

**பஞ்சமம்** *pañjamam,* பெ.(n.) 1. ஐந்தாவது; the fifth "பஞ்சமத்தையமைக்க" (சிவதரு.சிவ.69). 2. ஏழிசைகளுள் ஐந்தாவது; fifth note of the gamut, one of šaptašuram. "பஞ்சமத்தியற்றும் வீணை" (பிரமோத்.3,44). 3. குறிஞ்சி அல்லது பாலைப் பண் வகை (பிங்.); a secondary melody - type of the kuṟiñji or pālai class.4. அழகு (யாழ்.அக.); beauty. 5. திறமை; வல்லமை (சாமர்த்தியம்) (யாழ்.அக.); cleverness, skill.

*[Skt.pañcama> த. பஞ்சமம்]*

**பஞ்சமர்** *pañjamar,* பெ.(n.) ஆரியர் வரவுக்குப் பின் புகுத்தப்பட்ட நால்வருணப் பிரிவை ஏற்றுக்கொள்ளாத ஐந்தாம் பிரிவினர்; non-caste Hindus outside the four - fold caste system introduced after the advent of Aryans.

*[Skt.pañcama> த. பஞ்சமர்]*

**பஞ்சமலம்** *pañja-malam,* பெ.(n.) ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என்ற ஐவகை மலங்கள் (பிங்.); the five impurities bringing the soul into bondage, viz.,

āṇavam, kaṉmam, māyai, māyēyam, tirōdāṉam.

[Skt.pañcan+malam> த. பஞ்சமலம்]

**பஞ்சமவேதம்** *pañjama-vēdam,* பெ.(n.) ஐந்தாம் மறையாகக் கருதப்படும் மகாபாரதம்; the Mahābhārata, considered as the fifth Vēda. "பஞ்சவேதமான மகாபாரதத்தில் எழுதக்கூடாதிறே" (திவ்.பெரியதி.1,1,வ்யா. பக்.48).

[Skt.pañcama+vēta> த. பஞ்சவேதம்]

**பஞ்சமாசத்தக்கருவி** *pañja-mā-šatta-k-karuvi,* பெ.(n.) தோற் கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்ற ஐவகை இசைக் கருவிகள் (திவா.); the five kinds of musical instrument, viz., tōṟ-karuvi, tuḷai-k-karuvi, narappu-k-karuvi, kañja-k-karuvi, midaṟṟu-k-karuvi

[Skt.pañcan+ma+catta> த. பஞ்சமாசத்தம்]

**பஞ்சமாபாதகம்** *pañja-mā-pādagam,* பெ.(n.) கொலை, பொய், களவு, கள்ளுண், ஆசிரியரைப் பழித்தல் என்ற ஐவகைக் கொடுஞ்செயல் (வின்.); the five heinous sins of killing, lying, stealing, drinking and abusing one's guru.

**த.வ. பாழ்வினை**

[Skt.pañcan+mā+pādagam> த. பஞ்சமா பாதகம்]

**பஞ்சமாபாதகன்** *pañja-mā-pādagaṉ,* பெ.(n.) கொடுஞ்செயல் செய்தோன்; one guilty of heinous sins. "பஞ்சமாபாதக ரெனினும்" (உபதேசகா.விபூதி.12).

**த.வ. பாழ்வினையாளன்**

[Skt.pañcan+mā+pādagaṉ> த. பஞ்சமா பாதகன்]

**பஞ்சமி** *pañjami,* பெ.(n.) 1. ஐந்தாம் நாள் (திதி); fifth lunar day. "பஞ்சமிப் பெயர் படைத்துள திதி" (கம்பரா.மீட்சிப்.140) 2. இருபத்து ஏழு விண்மீன்களுள் கடைசி ஐந்து; the last five of the 27 nakṣatras. 3. ஐந்தாம் வேற்றுமை; the fifth case. "பஞ்சமியாகிய இன் ஐந்தாம் வேற்றுமையாம்" (பி.வி.6,உரை.) 4. மலைமகள் (நாமதீப.23.); Pārvadi.

**த.வ. ஐம்மி**

[Skt.pañcami> த. பஞ்சமி]

**பஞ்சமித்திரம்** *pañjamittiram,* பெ.(n.) 1. நல்லெண்ணெய், தேங்காய்ப் பால், இலுப்பைப் பூச்சாறு, ஆவின் நெய், தேன் ஆகிய இவ்வைந்துங் கலந்த கூட்டு; a mixture of five liquid substances viz., gingelly oil, cocoanut milk, juice of mowah flower, cow's ghee and honey. 2. மாழை (உலோகங்)களை உருக்கும்பொழுது அதைப் வேதிக்கச் செய்யும்படி சேர்க்கும் ஐந்து வகை நட்புச் (மித்துரு) சரக்குகள்; (அவை குன்றி, நெய், வெல்லம், காரம், தேன்); the five friendly drugs capable of effecting a change in metals viz., jew - eller's bead, ghee, jaggery, alkaline substance like borax, honey. 3. உயர்ந்த செம்பு கிடைக்க வேண்டி இச்சரக்குகளை இட்டு உருக்க பயன்படும்; to obtain superior or high class copper these are used when melting it (சா.அக.).

**பஞ்சமுகச் செப்புச் சலாகை** *pañjanmuga-c-ceppu-c-calāgai,* பெ.(n.) அறுவை (சத்திர)க் கருவி இருபத்து ஆறில் ஒன்றான; five faced copper probe, this is one of the 26 surgical instrument. (சா.அக.).

**பஞ்சமுகம்**[1] *pañja-mugam,* பெ.(n.) அறுவை மருத்துவத்தில் பயன்படுத்தும் கருவி வகை (தஞ்.சா.iii,40.); a kind of surgical instrument.

[Skt.pañcam> த. பஞ்சம்+முகம்]

**பஞ்சமுகருத்திரி** *pañja-muga-ruttiri,* பெ.(n.) காட்டாமணக்கு; wild castor plant (சா.அக.).

**பஞ்சமுகவாசம்** *pañja-muga-vāšam,* பெ.(n.) பஞ்சவாசம் பார்க்க; see pañja-vāšam

"அமிழ்தனைய பஞ்சமுக வாசமமைத்து" (சீவக.2026).

*[பஞ்சமுகம்+வாசம்]*

**பஞ்சமுகன்[1]** *pañja-mugaṉ,* பெ.(n.) சிவன் (சூடா.); Siva.

*[Skt.pañcan> த. பஞ்சம்]*

**பஞ்சமுகன்[2]** *pañca-mugaṉ,* பெ.(n.) அரிமா (சிங்கம்) (யாழ்.அக.); lion.

*[Skt.pañcan> த. பஞ்ச]*

**பஞ்சமுகாத்திரம்** *pañca-mukāttiram,* பெ.(n.) ஐம்முகங்கொண்ட கருவி வகை; a five pointed weapon.

*[Skt.pañca-mukha+ttiram> த. பஞ்ச முகாத்திரம்]*

**பஞ்சமுட்டிக்கஞ்சி** *pañjamuṭṭi-k-kañji,* பெ.(n.) துவரை, கடலை, உளுந்து, சிறு பயறு, பச்சரிசி இவ்வைந்தும் வகைக்கு ஒரு பிடி எடுத்து, தனித்தனியே மெல்லிய சீலைகளில் முடிந்து ஒரு ஏனத்தில் போட்டு அதில் ஆற்று நீர் ஊற்றி எட்டில் ஒரு பங்காய்க் காய்ச்சும் கஞ்சி; a kind of conjee -porridge prepared with the following five substances viz., red gram, black gram, green gram and raw rice. It is useful for emaciated patients. It cures biliousness, phlegm and wind humours. Tie each substance in a muslin cloth and put them in a vessel containing river water which is boiled down to one eight. (சா.அக.). இக்கஞ்சி நோயாளிக்குக் கொடுப்பது. இதனால் பித்தம், இளைப்பு, கபம், காற்று தீரும்.

*[Skt.pañcan> த. பஞ்ச+முட்டி+கஞ்சி]*

**பஞ்சமுத்திரை[1]** *pañja-muttirai,* பெ.(n.) 1. பாதங்களில் காணப்படும் (பதுமம், சங்கம், மகரம், சக்கரம், தண்டம் என்ற) ஐந்து அடையாளங்கள்; the five marks on a person's foot, viz., padumam, šaṅgam, magaram, šakkaram, daṇḍam "திருவடியிற் றிருப்பஞ்ச முத்திரையுந் திகழ்ந் திலங்க" (பெரியபு.மானக்.24) 2. திருநீறு, உருத்திராக்கம், பூணூல், உத்தரீயம், உட்டிணீடம் என்று ஆசாரியர்க்கு உரியன வாகச் சொல்லப்படும் ஐந்து அடையாளங்கள் (சைவசா.ஆசாரிய.45,உரை.); the five sacerdotal signs of an ācārya, viz., tirunīṟu, uruttirākkam, pūṇūl, uttirīyam, uṭṭīṇīḍam.

*[பஞ்சம்+முத்திரை]*

*[Skt.pañcan> த. பஞ்சம்]*

**பஞ்சமுத்திரை[2]** *pañja-muttirai,* பெ.(n.) ஐந்து கருவி வடிவங்களாகச் செய்து சேர்த்த காலணிகலன் (சீகாழிக்.411.); an ornament worn on the foot, consisting of pieces shaped like the five weapons of Viṣṇu.

*[பஞ்சம்+முத்திரை]*

*[Skt.pañcan> த. பஞ்சம்]*

**பஞ்சமுத்திரை[3]** *pañjamuttirai,* பெ.(n.) 1. சிவ தவத்தோருக்குரிய அடையாளங்கள் அல்லது சின்னங்கள்; உருத்திராக்கம், கமண்டலம், காவி வேட்டி, சடைமுடி, ஓகதண்டு; the five distinguishing marks of the Siva mendicants viz - holy beads, dried shell of battle gouard reddish brown cloth, tursted tuft of hairs of the head and yoga rod or stick 2. ஓக சாதனைக்காக ஏற்பட்ட ஐந்து வகை ஓகவிருக்கை; the five different postures of a practising yogi. (சா.அக.)

*[பஞ்சம்+முத்திரை]*

**பஞ்சமூலிகை** *pañjamūligai,* பெ.(n.) கற்பத் திற்கு உதவும் ஐந்து வகை மூலிகைகளான: ஏலம், பத்திரி, தக்கோலம், சாதிக்காய், கோலவித்து (திருமூ.600); the five drugs useful in rejuvenation viz., cardamon, mace, cubeb pepper, nutmeg and root of long pepper (சா.அக.).

*[பஞ்சம்+மூலிகை]*

**பஞ்சமேளம்** *pañja-mēḷam,* பெ.(n.) சாவில் வழங்கும் சங்கு, சாலர், தவுல், மத்தளம், பம்பை என்ற ஐவகை இசைக் கருவிகள் (நெல்லை);

the five kinds of drum, used at funerals, viz., šaṅgu, šālar, tavul, mattaḷam, pampai.

*[Skt. pañcan> த. பஞ்சம்]*

**பஞ்சயாகம்** *pañca-yāgam,* பெ.(n.) 1. பஞ்சமகாயாகம் (பிங்.) பார்க்க; see pañja-magā-yāgam. 2. கன்மயாகம், செபயாகம், ஞானயாகம், தவயாகம், ஊழ் (தியான) யாகம் என்ற ஐவகை வழிபாட்டு முறை (சிவதரு. ஐவகை1,உரை.); five kinds of worship, viz., kaṉma-yāgam, šepa-yāgam, ñāṉa-yāgam, tapō-yāgam, diyāṉa-yāgam.

*[Skt. pañcan+yāga> த. பஞ்சயாகம்]*

**பஞ்சர்** *pañcar,* பெ.(n.) தரிசு நிலம்; waste or fallow land.

*[Vandhya>U. bañja> த. பஞ்சர்]*

**பஞ்சரத்தினம்** *pañja-rattiṉam,* பெ.(n.) 1. செம்மணி, முத்து அல்லது வயிடூரியம், வயிரம், பச்சை, நீலம் என்ற ஐவகை மணிகள்; the five kinds of precious stones, viz., cemmaṉi, muttu or vayiḍūriyam, vayiram, paccai, nīlam. 2. ஐந்து செய்யுள் கொண்ட நூல் (பிரபந்தம்); a poem of five stanzas.

*[Skt. pañcan+rattina> த. பஞ்சரத்திம்]*

**பஞ்சலட்சணம்** *pañja-laṭcaṇam,* பெ.(n.) எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐவகைத் தமிழ் இலக்கணம்; the five sections of Tamil grammar, viz., eḻuttu, šol, poruḷ, yāppu, aṇi.

*[Skt. pañcan+laṭcaṇam> த. பஞ்சலட்சணம்]*

**பஞ்சலத்தார்** *pañjalattār,* பெ.(n.) பஞ்ச கம்மாளர் (I.M.P.Cg.692.); the five artisan communities.

*[Perh. pañcan> த. பஞ்சலத்தார்]*

**பஞ்சலவணபற்பம்** *pañjalavaṇaparbam,* பெ.(n.) ஐந்து வகை உப்புகளைக் கொண்டு செய்யும் உப்புப் பற்பம். இது செரியாமைக்குக் கொடுக்கப்படும் மருந்து; the calcified powder prepared out of the five salts. which is given for indigestion (சா.அக.).

**பஞ்சலவணம்** *pañcanimbam,* பெ.(n.) ஐந்து வகை உப்புகள் – இந்துப்பு, கல்லுப்பு, கறியுப்பு, வளையலுப்பு, வெடியுப்பு; sindh salt, rock salt, common salt, glass gall and nitre (சா.அக.).

**பஞ்சலாங்கலதானம்** *pañja-lāṅgala-tāṉam,* பெ.(n.) ஐந்து ஏர்களை நிலத்துடன் அந்தணர்க்கு உதவுந்தானம்; a gift of five ploughs with lands to Brahmins. "பஞ்சலாங்கலதானத்தின் பகுதியை" (கூர்மபு. தானமுறை.64).

*[Skt. pañcan+laṅkala> த. பஞ்சலாங்கல தானம்]*

**பஞ்சலிங்கம்** *pañjaliṅgam,* பெ.(n.) சிவனைக் குறிக்கும் ஐந்து வகை இலிங்கங்கள்: நில (பிருதிவி)லிங்கம், அப்புலிங்கம், நெருப்பு (தேயு)லிங்கம், காற்று (வாயு)லிங்கம், விண் (ஆகாய) லிங்கம். ஆகவே, ஐம்பூதங்களையும் கொண்ட இந்த லிங்கங்கள் ஐந்து இடங்களில் நிறுவப்பட்டிருக்கின்றன; the five kinds of lingam (phallus) referring to emblem of šiva and they are: Prithivi lingam, appu lingam, theyu lingam, vayu lingam, aukasa lingam. Representing the five elements the following are the five places in South India where they establised. 1. காஞ்சிபுரம் – Conjeevaram where there is the Prithivi lingam made of each. 2. சம்புகேசுவரம்– Jambukeswaram (Thiruvanaikaval) near Trichy where Appulingam is established water excides perpetually under it. 3. திருவண்ணாமலை– Thiruvannamalai where the Tejolingam sparkles with light. 4. காளத்தி – Kallathi where Vayu lingam is established a lamp near the lingam constantly flickers showing that the win and or air is blowing. The other lamps there do not flicker. 5. சிதம்பரம் – Chidambaram where Akasa lingam or etheral lingam is kept in the temple. (சிதம்பர ரகசியம்) (சா.அக.).

*[Skt. pañcan+lingam> த. பஞ்சலிங்கம்]*

**பஞ்சலோகசிந்தூரம்** *pañjalōgašindūram,* பெ.(n.) பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, காந்தம் என்னும் ஐந்து வகை மாழைகளைக்

கொண்டு செய்த சிவப்புப் பொடி; red oxide by calcining the five metals viz-gold, silver, copper, iron, magnet (சா.அக.).

**பஞ்சலோகப்புரவி** *pañjalōga-p-puravi,* பெ.(n.) ஐந்து வகை மாழைகளைக் கொண்டு சீன நாட்டவரால் உண்டாக்கியதாகக் கருதப்படும் ஒரு வான ஊர்தி; a kind of aeroplane in the shape of horse constructed by the ancient Chinese out of five metals (சா.அக.).

**பஞ்சலோகம்** *pañja-lōgam,* பெ.(n.) 1. பொன், இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி என்னும் ஐவகைத் தாதுக்கள் (பிங்.); the five kinds of metal, poṉ, irumbu, cembu, īyam, veḷḷi 2. ஐவகை மாழை (உலோக)க் கலப்பு; amalgam of the five metals.

*[Skt.pañcan+lōga> த. பஞ்சலோகம்]*

**பஞ்சவர்** *pañjavar,* பெ.(n.) பஞ்சபாண்டவர் பார்க்க; see pañja-pāṇḍavar. "பஞ்ச வர்க்குத் தூது நடந்தானை" (சிலப்.17).

**பஞ்சவர்க்கம்** *pañjavarkkam,* பெ.(n.) ஆல், அரசு, அத்தி, நாவல், இத்தி எனும் ஐந்து வகை துவர்ப்புச் சுவையுள்ள மரங்களின் பட்டை; five peepal tree, fig tree, jamoon tree and rhomboid leaved fig tree (சா.அக.).

*[பஞ்சம்+வர்க்கம்]*

**பஞ்சவர்ணக்கிளி** *pañja-varṇa-k-kiḷi,* பெ.(n.) ஐந்து நிறமுடைய கிளி வகை; macaw, a species of parrot, Trichoglossus, as having five colours. "கிள்ளையும் பஞ்சவர்ணக்கிளிக் கூட்டமும்" (குற்றா.குற. 87,3).

*[பஞ்சம்+வர்ணம்+கிளி]*

**பஞ்சவர்ணப்பூ** *pañjavarṇappū,* பெ.(n.) பச்சை, மஞ்சள், சிவப்பு, கருப்பு, வெள்ளை ஆகிய ஐந்து நிறமுடைய பூ; flowers with five colours. 2. பஞ்சவர்ணம் பார்க்க (சா.அக.); see pañjavarṇam.

*[Skt. பஞ்ச+வர்ண+பூ]*

**பஞ்சவர்ணம்** *pañja-varṇam,* பெ.(n.) வெள்ளை, கறுப்பு, சிவப்பு, மஞ்சள், பச்சை என்ற ஐவகை நிறம்; the five colours, white, black, red, yellow, green.

*[Skt.pañcan> த. பஞ்சம்]*

*[த. வண்ணம் > Skt.வர்ணம்]*

**பஞ்சவர்ணவுப்பு** *pañjavarṇavuppu,* பெ.(n.) கட்டியவுப்புக்கு ஐந்து வண்ணம் ஏற்றி மணியாகச் செய்து தாழ்வடமாய்க் கோத்து ஓதுகைக்குப் பயன்படுத்தும் உப்பு; consolidated salt to which five colours are imparted and beads made. These beads if used in worship (சா.அக.).

*[பஞ்சவர்ணம்+உப்பு]*

**பஞ்சவற்கலம்** *pañjavaṟkalam,* பெ.(n.) அத்தி, அரசு, ஆல், பூவரசு, வேல் என்பவற்றின் பட்டை (மலை.); bark of the five tree satti, arašu, āl, pūvarašu, vēl.

*[Skt.pañcan+varka> த. பஞ்சவற்கலம்]*

**பஞ்சவறிவு** *pañjavaṟivu,* பெ.(n.) பகுத்தறிவு, மெய்யறிவு, பேரறிவு, ஆதன் அறிவு, தத்துவ அறிவு; reasoning power, senses of the body, wisdom, knowledge of soul and philosophy (சா.அக.).

**பஞ்சவாசம்** *pañja-vāšam,* பெ.(n.) இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம் என்ற ஐந்து வகை நறுமணப் பொருட்கள் (சிலப். 5,26,உரை.); the five aromatics, viz., ilavaṅgam, ēlam, karppūram, šādikkāy, takkōlam.

*[Skt.pañcan+vāšam> த. பஞ்சவாசம்]*

**பஞ்சவிருத்தி** *pañja-virutti,* பெ.(n.) மாபூதம் 5, தன்மாத்திரை 5, கருமவுறுப்புகள் (கன்மேந்திரியம்) 5, உணர்தற்குரிய பொறிகள் (ஞானேந்திரியம்) 5, மனம், அகங்காரம், மகத்து, மூலப்பகுதி, ஆதன் ஆகிய இருபத்தைந்து மூலப் பொருள்கள் (குறள்,27,உரை.); reals, 25 in number, viz., 5 makāpūdam, 5 ñaṉēndiriyam, maṉam, akaṅkāram, makattu, mūlappirakirudi, āṉma.

*[Skt.pañcan+vṛddhi> த. பஞ்சவிருத்தி]*

**பஞ்சவில்வம்** *pañjavilvam,* பெ.(n.) 1. வில்வம், நொச்சி, மாவிலங்கை, முட்கிளுவை, விளா

ஆகிய ஐந்து வகை மரங்கள்; the five kinds of trees viz., bael, notchy, lingam tree, thorny balsam and wood apple. "வில்வ நொச்சி மாவிலங்கை முட்கிளுவை வெள்ளில் பஞ்ச வில்வமென்பார்" (சிவராத்.பு. சிவமான். 37). 2. சில நூல்களின்படி வில்வம், ஆத்தி, மா, முட்கிளுவை, முல்லை; according to some literature bael, common mountain ebony, lingam tree, thorny balsam and wood apple (சா.அக.).

*[Skt.pañcan+vilva> த. பஞ்சவில்வம்]*

**பஞ்சவேம்பு** *pañjavēmbu,* பெ.(n.) ஐந்து வகை வேம்பு – நல்வேம்பு, மலைவேம்பு, நிலவேம்பு, கறிவேம்பு, சிவனார் வேம்பு; the five kinds of neem-margosa,common bead tree, ground neem, curry leaf neem, Shiva's neem. (சா.அக.)

**பஞ்சணாவமிர்தம்** *pañjaṉā-v-amirdam,* பெ.(n.) புனல் முருங்கை; three leaved indigo. (சா.அக.)

**பஞ்சா** *pañja,* பெ.(n.) 1. கைப்பிடி; clutch, grasp of the hand. 2. நீட்டிய விரற் கை; hand with the five fingers extended. 3 மொகரம் விழாக் காலங்களில் சியா முகமதியர் எடுத்துச் செல்லும் கைக்குறி விருது; figure of the hand carried as an emblem by Shiah Muslims in Moharrum festivals.

*[U.pañjā> த. பஞ்சா]*

**பஞ்சாக்கரப் பஃறொடை** *pañjākkara-p-palṟōdai,* பெ.(n.) பண்டார சாத்திரத்துள் பின் வேலப்பதேசிகர் இயற்றிய நூல்; a Saiva Siddhānta, treatise by Piṉvēlappa-tēšigar,one of Paṇḍāra-cāttiram.

*[பஞ்சாக்கரம்+பஃறொடை]*

**பஞ்சாக்கரம்** *pañjākkaram,* பெ.(n.) பஞ்சாட்சரம் பார்க்க; see pañjāṭcaram. "எந்தைபிரான் பஞ்சாக்கரம் போல்" (திருவாலவா.திருநகரச்.3).

*[Skt.pañjaākṣara> த. பஞ்சாக்கரம்]*

**பஞ்சாக்கினி** *pañcākkiṉi,* பெ.(n.)1.தவஞ் செய்வோன் தன்னைச் சுற்றி நான்கு திசைகளிலும் மூட்டிய நான்கு தீ (அக்கினி)யும் மேலே காய்கிற கதிரவனும் (சூரியனும்) ஆகிய ஐவகைத் தீ (அக்கினி); the five fires amidst which an ascetic practises self-mortification, four fires at the four points of the compass the fifth being the Sun. "பஞ்சாக்கினி முதலியவற்றினின்று அரிய தவசுகளைச் செய்தும்" (சி.சி.8,11,மறைஞா.) 2. அராகம், வெகுளி, காமம், சடம், தீபனம் என்ற ஐவகைத் தேகாக்கினி (பிங்.); the five mystic fires of the body, viz., irāgam,veguḷi, kāmam,caḍam,dīpaṉam 3. (உதராக்கினி), சூரியதாபாக்கினி, (தவாக்கினி), நிதாக காலாக்கினி, இரவிகாந்தக்கினி என்ற ஐவகைத் தீ (சங்.அக.); the five kinds of fires, viz., utarākkiṉi, šūriya-tāpākkiṉi, tavākkiṉi, nitāka-kālākkiṉi, iravi-kāndākkini. 4. சுக்கு, திப்பிலி, மிளகு, சீரகம், ஏலம் என வயிற்றுத் தீயைக் கிளரச் செய்யும் ஐவகை மருந்துச் சரக்கு (தைலவ.தைல.16.); the five kinds of stomachics, viz., cukku, tippali, miḷagu, šīragam, ēlam.

*[Skt.pañcāgni> த. பஞ்சாக்கினி]*

**பஞ்சாக்கினிக்கொடி** *pañjākkiṉi-k-kōḍi,* பெ.(n.) வேலிப் பருத்தி, காட்டுக் கருணை, மரல், புளி நறளை, நறளைக்கிழங்கு என்ற ஐவகைக் கொடிகள் (சங்.அக.); the five creepers, viz., vēli-p-parutti, kāttu-k-karuṇai, maral, puḷi-naṟalai, naṟalai-k-kiḷaṅgu.

*[Skt.pañcāgni> த. பஞ்சாக்கினி]*

**பஞ்சாக்கினி வித்தை** *pañjākkiṉivittai,* பெ.(n.) ஆதன் வானுலகத்தினின்று பிறந்ததற்காக முறையே செல்லுதற்குரிய துறக்கம், மேக மண்டலம், நிலம், தந்தை, தாய் என்னும் ஐந்திடத்தையும் தீயாகவும் தன்னை ஆகுதியாகவும் வைத்துப் புரியும் ஊழ்கம் (தியானம்) (சி.போ.பா.பக்.200.); meditation in which the five regions, heaven, clouds, earth, father and mother, travelled by a

soul from heaven to earth are considered as five fires and the self as an offering made in it.

*[Skt.pañcāgni+vitta> த. பஞ்சாக்கினிவித்தை]*

**பஞ்சாகசூரணி–த்தல்** *pañjākašūrani-,* 4 செ.கு.வி.(v.i.) மெதுவாகும்படி பொடி செய்தல்; pulversing so as to become soft (சா.அக.).

**பஞ்சாங்கக்காரன்** *pañjāṅga-k-kāran,* பெ.(n.) 1. கணியன்; one proficient in preparing almanac, astrologer. 2. பார்ப்பனர் அல்லாதவரின் போற்றாளி (புரோகிதன்); a class of Brahmins who officiate as priests to certain castes of non-Brahmins.

த.வ. ஐந்தியன்

*[பஞ்சாங்கம்+காரன்]*

**பஞ்சாங்கவணக்கம்** *pañjāṅga-vanakkam,* பெ.(n.) முழங்கால்கள், கைகள், தலையாகிய ஐந்து உறுப்புக்கள் நிலந்தோய வணங்குகை; prostration with the knees, hands and head touching the earth. "அட்டாங்கமுடன் பஞ்சாங்க முடனாதல்... பணிவோர்" (திருவிளை.மூர்த்தி.30).

*[Skt.pañcāṅga> த. பஞ்சாங்கம்+வணக்கம்]*

**பஞ்சாங்கப்புடம்** *pañjāṅgappuḍam,* பெ.(n.) ஐந்து வகை அங்கமும் பொருந்திய புடம்; calcination satisfying the five conditions required (சா.அக.).

*[பஞ்சாங்கம்+புடம்]*

**பஞ்சாங்கபலன்** *pañjāṅga-palan,* பெ.(n.) அந்தந்த ஆண்டுக்கு ஐந்தியம் (பஞ்சாங்கம்) கூறும் பலன்; astrological forecasts for the year as given in the almanac.

த.வ.ஐயுறுப்புப் பலன்

*[Skt.pañcāṅga> த. பஞ்சாங்கம்+பலன்]*

**பஞ்சாங்கம்**[1] *pañjāṅgam,* பெ.(n.) 1. நாள், கிழமை, விண்மீன், ஒகம், கரணம் (திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம்) என்ற ஐந்து உறுப்புகளுடைய கலைக் குறிப்பு (பிங்.); almanac, as comprising five parts, viz., titi, vāram, naṭcattiram, yōgam, karaṇam 2. பிறப்பியம் (சாதகம்) (இ.வ.); horoscope 3. சடங்காளனுக்கு (புரோகிதத்துக்கு) விடப்படும் நல்கை (மானியம்); inam or grant of land held on favourable terms by the village priest for his service. 4. சடங்காண்மை (புரோகிதத் தொழில்); office of the ceremonial priest of certain non-Brahmin castes. 5. குதிரை (யாழ்.அக.); horse 6. ஆமை (யாழ்.அக.); tortoise.

த.வ.ஐந்தியம்

*[Skt.pañcāṅga> த. பஞ்சாங்கம்]*

**பஞ்சாங்கமவிழ்–த்தல்** *pañjāṅgam-aviḻ-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வீண் கதைப் பேசுதல்; to bring in irrelevant matters. 2. பொய்க் கதை புனைதல்; to fabricate false stories.

த.வ. கட்டுக்கதை பேசுதல்

*[Skt.pañcāṅga> த. பஞ்சாங்கம்]*

**பஞ்சாங்கி** *pañjāṅgi,* பெ.(n.) முறிவு மருத்துவத்தில் ஒரு வகைக் கட்டு; a kind of bandage in surgery. (சா.அக.)

**பஞ்சாச்சரியம்** *pañjāccariyam,* பெ.(n.) அருகக் கடவுள் பொருட்டு நிகழும் பொன்பொழிவு (கனகவர்ஷம்), மலர்ப்பொழிவு (புஷ்பவர்ஷம்), ஆலவட்டம் (மந்தமாருதம்), மங்கலவாழ்த்து (சுபகோஷம்), தேவமுரசம் (தேவதுந்துபி) என்ற ஐந்து வியப்புக்குரிய நிகழ்ச்சிகள் (நரிவிருத்.); the five heavenly wonders, viz., kanaka-varṣam, puṣpa-varṣam, manda-mārudam, šupa-kōṣam, dēva-tundupi.

த.வ.ஐஞ்சடங்கு

*[Skt.pañcān+āccariya> த. பஞ்சாச்சரியம்]*

**பஞ்சாசத்** *pañjāšat,* பெ.(n.) ஐம்பது; fifty "பஞ்சாசத்கோடி" (சிவதரு.கோபுர.77.).

*[Skt.pañcašat> த. பஞ்சாசத்]*

**பஞ்சாசது** *pañjāšadu,* பெ.(n.) பஞ்சாசத் (சங்.அக.) பார்க்க; see pañjāšat.

**பஞ்சாசாரியர்** *pañjāśāriyar*, பெ.(n.) கோயில் பூசகர் (S.I.I.ii,111.); temple priests.

*[Skt.pañca+cāriya> த. பஞ்சாசாரியர்]*

**பஞ்சாட்சரக்காவடி** *pañjāṭcara-k-kāvaḍi*, பெ.(n.) திருநீறு (விபூதி)க் காவடி (நாஞ்.); a kāvaḍi in which the main offering is the sacred ash.

த.வ. திருநீற்றுக்காவடி

*[Skt.pañcāk-ṣara> த. பஞ்சாட்சரம்]*

**பஞ்சாட்சரக்கோயில்** *pañjaṭcara-k-kōyil*, பெ.(n.) திருநீற்று (விபூதி)ப்பை (நாஞ்சி.); bag containing sacred ashes.

த.வ. நீற்றுப்பை

*[Skt.pañcāk-sara> த. பஞ்சாட்சரம்]*

**பஞ்சாட்சரப்படி** *pañjāṭcara-p-padi*, பெ.(n.) சிதம்பரம் கோயிலுள் சிற்சபையில் ஏறுதற் கமைந்த ஐந்துபடிகள்; the five steps leading to Sitšapai in Chidambarm temple.

த.வ. ஐந்தெழுத்துப்படி

*[Skt.pañcākṣara> த. பஞ்சாட்சரம்]*

**பஞ்சாட்சரம்** *pañjāṭcaram*, பெ.(n.) 1. சிவனை அதி தெய்வமாகக் கொண்டதும் 'நமசிவாய' என்று ஐந்து எழுத்துகளாலானதுமான மந்திரம்; the five lettered mantra whose presiding deity is Siva,viz.,na ma ci vāya 2. திருநீறு (இ.வ.); sacred ashes.

*[Skt.pañcākṣara> த. பஞ்சாட்சரம்]*

**பஞ்சாட்சரவருணி** *pañjāṭcaravaruṇi*, பெ.(n.) நெல்லிக்காய்; Indian goose berry. (சா.அக.)

**பஞ்சாணுவிரதம்** *pañjāṇu-viradam*, பெ.(n.) சமணருள் இல்வாழ்வான் மேற்கொள்ளும் ஐந்து நோன்புகள் (மேருமந்.கதை.24.); the five vows practised by laymen.

**பஞ்சாதி** *pañjādi*, பெ.(n.) 1. தனித்தனி பெரும்பாலும் ஐம்பது சொற்கள் கொண்ட எசுர்(வேத)ப் பகுதி; sections of Yājur-Vēda eachcontainingaboutfiftywords 2. வேதப் பகுதி; a Vēdic passage.

*[Skt.pañcāšat> த. பஞ்சாதி]*

**பஞ்சாமியம்** *pañjāmiyam*, பெ.(n.) இலந்தை; jujube (சா.அக.).

**பஞ்சாமிர்தம்** *pañjāmirdam*, பெ.(n.) வாழைப்பழம், தேன், சருக்கரை, நெய், திராட்சை என்ற இனிய பண்டங்களால் செய்வதும் இறை முழுக்காட்டிற்குப் பயன்ப டுத்துவதுமான பண்டம் (T.A.S.I.,268.); a mixture of five delicious substances, usually, plantain, honey, sugar, ghee, grape used for anointing idols.

த.வ.ஐயமுது, ஐந்தமுதம்

*[Skt.pañcān+amṛta> த. பஞ்சாமிர்தம்]*

**பஞ்சாமிலம்** *pañjāmilam*, பெ.(n.) இலந்தை, மாதுளை, புளியாரை, நெல்லி, எலுமிச்சை என்ற புளிப்புச் சுவையுள்ள ஐவகை மரங்கள் (சங்.அக.); the five acid-producing plants, viz., ilandai, mādulai, puḷiyārai, nelli, elumiccai.

த.வ.ஐம்புளிகம்

*[Skt.pañca+āmla> த. பஞ்சாமிலம்]*

**பஞ்சாய்** *pañcāy*, பெ.(n.) புகை காட்டும் கருவி (தூபக்கால்) (வின்.); censer.

*[U.pañjah> த. பஞ்சாய்]*



**பஞ்சாயத்தார்** *pañjāyattār*, பெ.(n.) வழக்குத் தீர்ப்பாளர்; arbitrators, mediators; assessors, jurors.

த.வ. ஊரவையார்

*[U.pañcāyat> த. பஞ்சாயத்து]*

**பஞ்சாயத்து** *pañjāyattu,* பெ.(n.) 1. பெரும்பாலும் தீர்ப்பாளர் ஐவர் கூடி வழக்கை ஆராயும் ஊர்மன்றம் (சபை); a body of persons sitting as a court of arbitration, usually five in number. 2. வழக்குத் தீர்ப்பாளரால் செய்யப்படும் வழக்கு ஆராய்வு; arbitration by disinterested persons chosen by the contending parties.

த.வ. ஊரவை, ஐந்தாயம், பேராயம்

*[U.pancayat> த. பஞ்சாயத்து]*

**பஞ்சாயத்து நாமா** *pañjāyattu-nāmā,* பெ.(n.) பொது நல முறைமடல் (மனு); general affidavit inquest; report.

*[U.pañjāyat+nāmā> த. பஞ்சாயத்துநாமா]*

**பஞ்சாயத்துயூனியன்** *pañjāyattu-ūniyan,* பெ.(n.) ஊராட்சி ஒன்றியம்; panchayat union.

த.வ. ஊராட்சி ஒன்றியம்

*[Skt.pañcāyat+ E.Union> த. பஞ்சாயத்து யூனியன்]*

**பஞ்சாயுதபாணி** *pañjāyuda-pāṇi,* பெ.(n.) ஐம்படைக்கையினன், திருமால்; Viṣṇu, as holding five weapons in his hand.

*[Skt.pañcā(n)> த. பஞ்சம்+ஆயுதம்+பாணி]*

**பஞ்சாயுதம்** *pañjāyudam,* பெ.(n.) 1. சங்கம், சக்கரம், தண்டு (கதை), வில் (சார்ங்கம்), வாள் (கட்கம்) என்ற திருமாலின் ஐவகைக் கருவிகள்; the five weapons of Viṣṇu,viz., šaṅgam, šakkaram, kadai, šārṅgam, kaṭkam2. ஐம்படைத்தாலி(விதான.மைந்தர்.1.); a gold ornament worn by women and children.

த.வ.ஐம்படை

*[Skt.pañcan> த. பஞ்சம்+ஆயுதம்]*

**பஞ்சாயுதமணி** *pañjāyuda-maṇi,* பெ.(n.) ஐவகை வுருக்களாலான சிறுவர் கழுத்தணி வகை (யாழ்ப்.); a necklace of gold beads with pañjāyudam as pendant, worn by children.

த.வ.ஐம்படைத்தாலி

*[Skt.pañcan> த. பஞ்சம்+ஆய்தம்+மணி]*

**பஞ்சார்க்கம்** *pañjārkkam,* பெ.(n.) தூமம், விதிபாதம், இந்திரதனு, பரிவேடம், கேது என்ற ஐந்து கரந்துறை கோள்கள் (விதான. குணாகுண.55.); the five celestial phenomena of daily occurrence regarded as exerting evil influence, viz., dūmam, vidipādam, indiradaṉu, parivēḍam, kēdu.

*[Skt.pañcan+ārkka> த. பஞ்சார்க்கம்]*

**பஞ்சாரங்கட்டி** *pañjāraṅ-gaṭṭi,* பெ.(n.) பஞ்சார மாலையணியும் மகளிரைக் கொண்ட இடையர் வகுப்பு; a sub-division of the iḍaiyarcaste, so named from the pañcāram necklace worn by their women.

*[பஞ்ச+ஆரம்+கட்டி]*

**பஞ்சாரூடபத்திரம்** *pañjārūḍa-pattiram,* பெ.(n.) கொடுத்தவன், வாங்கியவன், சான்றாளர்களிருவர், எழுதியவன் ஆகிய இவ்வைவரும் கையொப்பமிட்ட ஆவணம் (சங்.அக.); a document having the signature of the executant, executee, two witnesses and the scribe.

*[Skt.pañcārūḍha-patra> த. பஞ்சாரூட பத்திரம் ]*

**பஞ்சாவயவம்** *pañjāvayavam,* பெ.(n.) தருக்க நூலில் (சாத்திரத்தில்) வரும் மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு, உபநயம், நிகமம் என்பன (சி.சி.அளவை,11,சிவாக்.); the five elements in a logical statement, viz., mēṟkōḷ, ēdu, eḍuttukkaṭṭu, upanayam, nigamam.

*[Skt.pañcāvayava> த. பஞ்சாவயவம்]*

**பஞ்சாவரணம்** *pañjāvaraṇam,* பெ.(n.) தளம், தளாக்கிரம், பீடத்தின் கண்டம், கீழ்ப்பீடம், ஆதார சிலை என்னும் இலிங்கபீடத்தின் ஐவகை உறுப்பு (சைவச.பொது.59.); the five sections of the pedestal of a liṅga.

*[Skt.pañcan+āvaraṇa> த. பஞ்சாவரணம்]*

**பஞ்சாளத்தார்** *pañjāḷattār,* பெ.(n.) பஞ்சகம்மாளர் பார்க்க; see pañjakammāḷar.

தெ.பஞ்சாணுலு

**பஞ்சாத்திகாயம்** *pañjāttikāyam,* பெ.(n.) சீவாத்திகாயம், தர்மாத்திகாயம், அதர்மாத்தி காயம், ஆகாசாத்திகாயம், புற்காலாத்திகாயம் அல்லது அசீவாத்திகாயம் என்ற ஐந்து சைன மத தத்துவங்கள் (திருநூற்.23,உரை.); the five ontological categories under which reals are distributed, viz., jīvāstikāyam, darmāstikāyam, adarmāstikāyam, āgāšāstikāyam, puṟkālāstikāyam or ajīvāstikāyam.

*[Skt.pañcāstikāya> த. பஞ்சாத்திகாயம்]*

**பஞ்சீகரணம்** *pañjīkaraṇam,* பெ.(n.) நுண்ணுடற் கூறு கொண்ட (சூக்கும) பூதங்கள் ஒவ்வொன்றையும் இரண்டு சம பாகமாகப் பிரித்து ஒரு பாகத்தைத் தன் பருவுடல் (ஸ்தூல) பூதத்திலும் மற்றொரு பாகத்தை நான்கு சமபாகமாகப் பிரித்து ஒவ்வொரு சிறு பாகத்தையும் மற்ற நான்கு பருவுடல் (ஸ்தூல) பூதங்களிலும் சேர்க்கை (கைவல்.தத்.10.); the process of dividing each of the five subtler elements into two equal parts and apportioning one part to its corresponding grosser element and one-fourth of the other part to each of the other grosser elements.

*[Skt.pañcākaraṇa> த. பஞ்சீகரணம்]*

**பஞ்சேந்திரியம்** *pañjēndiriyam,* பெ.(n.) மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகள் (பிங்.); the five organs of sense, viz., mey, vāy, kaṇ, mūkku, cevi.

*[Skt.pañcēndriya> த. பஞ்சேந்திரியம்]*

**பட்சசுரம்** *paṭcašuram,* பெ.(n.) பதினைந்து நாளைக்கு ஒரு முறை வரும் காய்ச்சல்; a kind of fever occuring once in fifteen day. (சா.அக.)

*[பட்ச(ம்)+சுரம்]*

**பட்சணம்** *paṭcaṇam,* பெ.(n.) 1. உண்கை; eating, devouring, consuming. 2. விலங்கின் உணவு (வின்.); food of beasts and birds; prey. 3. சிற்றுண்டி; cakes, sweet - meats.

*[Skt.bhakṣaṇa> த. பட்சணம்]*

**பட்சணம்பண்ணு-தல்** *paṭcaṇam-paṇṇu,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. உண்ணுதல்; to eat; to eat up, to consume, to devour 2. கவர்தல்; to misappropriate.

**த.வ. உண்ணுதல், தின்னுதல்**

*[Skt.bhakṣaṇa> த. பட்சணம்]*

**பட்சணி** *paṭcaṇi,* பெ.(n.) 1. உண்போன்; one who eats "சருகுசல பட்சணிக ளொரு கோடி" (தாயு.மௌனகுரு.8). 2. பெருந்தீனி தின்போன்; one who indulges to excess in eating. 3. அகத்தியர் செய்த ஒரு தமிழ் மருத்துவ நூல்; a Tamil treatise on medicine compiled by Sage Agastiyar. 4. ஒக அறிவைப் பற்றி, குறியீடாக 132 செய்யுட்களால் பாடிய ஒரு நூல்: a secret science of yoga practice and philosophy compiled in 132 poems or verses (சா.அக.).

*[Skt.bhakṣaṇm> த. பட்சணி]*

**பட்சணியம்** *paṭcaṇiyam,* பெ.(n.) உண்ணத் தகுந்த பொருள்; substance fit or suitable to eat. (சா.அக.)

**பட்சத்தில்** *paṭcattil,* இடை. (Part.) ஆயின்; case that, granting that. 'அவன் வரும் பட்சத்தில் நான் போவேன்'.

*[Skt.pakṣa> த. பட்சத்தில்]*

**பட்சதாபம்** *paṭcatābam,* பெ.(n.) இரக்கம் (வின்.); sympathy, compassion.

*[Skt.paščāttāpa> த. பட்சதாபம்]*

**பட்சப்போலி** *paṭca-p-pōli,* பெ.(n.) தருக்கத்தில் பக்கத்தின் போலி (ஆபாசம்) (மணிமே.29:145.); fallacious minor term.

*[Skt.pakṣa> த. பட்சம்+போலி]*

**பட்சபாதகவாதம்** *paṭca-pādaga-vādam,* பெ.(n.) பட்சபாதவாதம் பார்க்க (சா.அக.); see paṭca-pāda-vādam.

**பட்சபாதம்**[1] *patca-pādam,* பெ.(n.) ஒரு தலைச் சார்பு; partisanship partiality.

*[Skt.paksa+pata> த. பட்சபாதம்]*

**பட்சபாதம்**[2] *patca-pādam,* பெ.(n.) இரக்கம் (வின்.); sympathy, compassion.

*[Skt.paksa+vāta> த. பட்சபாதம்]*

**பட்சபாதவாதம்** *patca-pāda-vādam,* பெ.(n.) ஊதையும், கோழையுங் கூடி அதனால் நோய் கண்டு நாக்கு, கை, கால் இழுத்து அசந்து போகச் செய்யும் ஒரு வகை ஊதை நோய்; a kind of paralysis marked by loss of sensation and function of the tongue, face and the limbs due to the concerted action of wind and phlegm humours (சா.அக.).

**பட்சபாதி** *patca-pādi,* பெ.(n.) ஒருதலைச் சார்பானவன்; biased person, partisan, schismatic.

*[Skt.paksa-pātin> த. பட்சபாதி]*

**பட்சம்**[1] *patcam,* பெ.(n.) 1. கட்சி; side, party. 2. அன்பு; kindness, affection, friendship. "பட்சமுற வைத்தார் பதி" (தனிப்பா. i,363,101). 3. சிறகு; wing 4. 15 நாள் (திதி) கொண்ட காலம்; lunar fortnight 5. நூல்; treatise 6. கோட்பாடு; theory; opinion 7. மீனம்பர் (யாழ்.அக.); ambergris.

*[Skt.paksa> த. பட்சம்]*

**பட்சம்**[2] *patcam,* பெ.(n.) சார்பு (சைவப்பிரகாசன. 16.); leaning.

*[Skt.paksa> த. பட்சம்]*

**பட்சம்போடு-தல்** *patcam-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) பதினைந்து நாள் வரை வெயிலில் காய வைத்தல்; drying for fifteen days under the sun (சா.அக.).

**பட்சம்வை-த்தல்** *patcam-,* 4 செ.கு.வி.(v.i.) பதினைந்து நாள் வைத்திருத்தல்; to keep for fifteen days. (சா.அக.)

**பட்சமமண்டலம்** *patca-mamandalam,* பெ.(n.) கண்ணிமை வட்டம்; circles of the eye lashes. (சா.அக.)

*[Skt.paksa> த. பட்சம்]*

**பட்சமூலி** *patcamūli,* பெ.(n.) சித்தர்கள் பசியெடுக்காதிருக்க பதினைந்து நாளைக் கொரு தரம் உட்கொள்ளும் ஒரு மூலிகை; an unknown drug taken by Sidhhars once in a fortnight to keep them off from hunger so that they may not be disturbed in their yoga practice. (சா.அக.)

*[பட்சம்+மூலி]*

**பட்சாந்தரம்** *patcāndaram,* பெ.(n.) கொள்ளப் பட்ட கொள்கையில் இருந்து மாறுபட்ட கொள்கை; alternative, another side or view of an argument.

*[Skt.paksāntara> த. பட்சாந்தரம்]*

**பட்சாபாசம்** *patcāpāšam,* பெ.(n.) பக்கப் போலி; a fallacious argument.

*[Skt. paksa+ā-bhāsa> த. பட்சபாசம்]*

**பட்சி**[1]**-த்தல்** *patci-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. உண்ணுதல்; to eat, devour, gobble, glut. "தசைகள் பட்சித்து" (திருப்பு.507) 2. கவர்தல்; to misappropriate. அவன் சொத்தை எல்லாம் பட்சித்துவிட்டான் (இவ.) ) 3. அழித்தல்; to mar, destroy. ) 'இரட்சித்தாலும் சரி பட்சித்தாலும் சரி'.

*[Skt. bhaks> த. பட்சி-த்தல்,]*

**பட்சி**[2] *patci,* பெ.(n.) 1. பறவை; bird, winged creature. "கின்னர மிதுன பட்சிகள் (தக்கயாகப்.610,உரை.) 2. குதிரை (அக.நி.); horse.

*[Skt.paksin> த. பட்சி]*

**பட்சிக்கப்பு** *patcikkappu,* பெ.(n.) சங்கு; conch. (சா.அக.)

**பட்சிக்கல்** *patci-k-kal,* பெ.(n.) கருடக்கல் ; a white stone. (சா.அக.)

**பட்சிசாத்திரம்** *patci-šāttiram,* பெ.(n.) பஞ்சபட்சி சாத்திரம் பார்க்க; see pañja-patci-šāttiram.

*[பட்சி+சாத்திரம்]*

**பட்சிதோடம்** *patci-dōdam,* பெ.(n.) மாலையில் பறவை நிழல்படுதலால் உண்டாவதாகக் கருதப்படும் குழந்தை நோய் வகை; a disease

of children, believed to be caused by the shadow of a bird falling on it in the evening.

[Skt. bhakṣ+tōsa> த. பட்சிதோடம்]

**பட்சியிராசன்** *paṭciyirāšaṉ,* பெ.(n.) 1. கருடப்பச்சைக்கல்; beryl 2. பால் கருடக் கல்; a white stone or concretion supposed to be derived from the eye or head of Brahmini kite (சா.அக.).

**பட்சியினெச்சம்** *paṭciyiṉ-eccam,* பெ.(n.) பொன்னம்பர் (யாழ்.அக.); resinous amber.

**பட்சிராசன்** *paṭcirāšaṉ,* பெ.(n.) மூவுப்பு, மூவகையுப்பு; the quint essence salt derived from the effloresence found on the fuller's earth (சா.அக.).

**பட்டாசாரி** *paṭṭā-šāri,* பெ.(n.) 1. புலவன்; learned man, scholar 2. கோயில் பூசகன்; Brahmin priest of a temple.

[Skt. bhaṭṭa+cāri> த. பட்டாசாரி]

**பட்டாசாரியன்** *paṭṭā-šāriyaṉ,* பெ.(n.) 1. பட்டாசாரி பார்க்க; see paṭṭāšāri 2. மீமாஞ்ச மதத்தினுள் ஒரு பகுதிக்கு ஆசிரியன் (சி.போ.பா.பக்.44.); founder of a sub-sect of Mīmāmsakas.

[Skt. bhaṭṭa+cāriya> த. பட்டாசாரி]

'அன்' உடைமைப் பொருள் ஈறு

**பட்டாசுகாய்** *paṭṭašukāy,* பெ.(n.) சிலந்தி நாயகம் (சா.அக.); ulcer plant.

**பட்டாணி¹** *paṭṭāṇi,* பெ.(n.) 1. கடலைக் கொடி வகை; garden pea 2. கொடி வகை; grey or field pea 3. கொண்டலாத்தி; hoopoe.

ம.புட்டாணா, ம. பட்டாணி

K., Tu. baṭāṇi; M. பட்டாணி

[Mhr. puṭānā> த. பட்டாணி]

**பட்டாணி²** *paṭṭāṇi,* பெ.(n.) உருது மொழி பேசும் முகம்மதிய வகையினர்; Indian Muhammadan whose mother tongue is Urdu.

[U. paṭhāṇī> த. பட்டாணி]

**பட்டாணிக்கடலை** *paṭṭāṇi-k-kaḍalai,* பெ.(n.) கடலை வகை; seed of the garden - pea.

**பட்டாணித்தைலம்** *paṭṭaṇi-t-tailam,* பெ.(n.) ஒரு சிரங்கெண்ணெய்; a medicated oil used for itch and sores (சா.அக.).

**பட்டாணிப்பயறு** *paṭṭaṇi-p-payaṟu,* பெ.(n.) பட்டாணி விதை; sea seed. (சா.அக.)

**பட்டாரிகை** *paṭṭārigai,* பெ.(n.) கொற்றவை (S.I.I.iii,136,n.); Durgā.

[Skt. bhaṭṭārikā> த. பட்டாரிகை]

**பட்டாவியம்** *paṭṭāviyam,* பெ.(n.) பட்டாவியா (ஜாவா) நாட்டில் பயிராகும் ஆரஞ்சு அல்லது கிச்சிலி; orange grown in Batavia (Java) (சா.அக.).

**பட்டாளம்¹** *paṭṭāḷam,* பெ.(n.) 500 முதல் 1000 வரை காலாட்கள் கொண்ட படை வகை; regiment, body of foot soldiers of 500 to 1000 men.

த.வ.காலாட்படை

[E. battalion> த. பட்டாளம்]

**பட்டாளம்²** *paṭṭāḷam,* பெ.(n.) கூட்டம்; a large gang (of persons mentioned) 'மாணவர் பட்டாளம்', 'சிறுவர் பட்டாளம்' (உ.வ.).

[E. battalion> த. பட்டாளம்]

**பட்டுவாடா** *paṭṭu-vāḍā,* பெ.(n.) ஊதியம், மடல் (கடிதம்) பொருள் போன்றவற்றை உரியவர்களுக்கு வழங்குதல், உரியவர்களிடம் கொண்டு சேர்த்தல்; distribution; disbursement of salary; delivery of letters etc.. 'உரிய காலத்தில் ஊதியத்தைப் பட்டு வாடா செய்தால்தான் பணியாளர்களுக்கு மகிழ்ச்சி ஏற்படும்'. 'தபால்காரர் கடிதங்களைப் பட்டுவாடா செய்யக் கிளம்பிவிட்டார்'. (இ.வ.)

த.வ. வழங்கல்

[U. batwārā> த. பட்டுவாடா]

**பட்மாசு** *paṭmāṣu,* பெ.(n.) கயவன் (அயோக்கியன்) (வின்.); rascal.

[U. budmāsh> த. பட்மாசு]

**பட்வாரி** *paṭvāri,* பெ.(n.) பதிவு செய்யும் பதிவாளர்; registrar.

[*Mhr.paṭwāri> த. பட்வாரி*]

**படவா** *paḍavā,* பெ.(n.) 1. போக்கிரி; rascal, base scoundrel 2. கூட்டிக் கொடுப்போன் (இ.வ.); pimp. ower of creating, acting and destroying 3. விலை மகள் (கூத்தி) (இ.வ.); prostitute. 4. ஒருவரைத் திட்டவும், பாசத்துடன் அழைக்கவும் பயன்படுத்தும் சொல்; பயல்; a term of abuse as well as endearment; chap. 'திருட்டுப் படவாக்கள்', 'படவா! நீ தான் என் பேனாவை எடுத்து ஒளித்து வைத்தாயா?' (இ.வ.)

[*U.bharwā> த. படவா*]

**படா** *paḍā,* பெ,எ. (adj.) பெரிய; large, great.

[*U.barā> த. படா*]

**பண்டாபீசு** *paṇḍāpīsu,* பெ.(n.) கூட்டுறவு நிலை வைப்பகம் (ஐக்கிய நாணய நிதிச்சாலை) (இக்.வ.); office of a permanent fund; co-operative.

[*E.fundoffice < த. பண்டாபீசு*]

**பண்டிதசாத்திரம்** *paṇḍida-śāttiram,* பெ.(n.) மருத்துவ (வைத்திய) நூல் (வின்.); science of medicine.

[*Skt.paṇḍita+cāttira> த. பண்டிதசாத்திரம்*]

**பண்டிதம்பண்ணு-தல்** *paṇḍidampaṇṇu-,* 12 செ.கு.வி. (v.i.) 1. மருத்துவம் செய்தல்; according treatment. applying remedies, cure diseases, practising medicine, application of remedies on a patient or a disease. 2. இயற்பியல் (பௌதிக) முடித்தல் (சா.அக.); subjecting to the chemical action of a substance.

**பண்டிதரிலக்கணம்** *paṇḍidar-ilakkaṇam,* பெ.(n.) நல்ல மருத்துவரின் குணம் முதலிய இலக்கணங்கள் (அ) செப்பம்; the qualities of a good physician. '1. மருத்துவ நூல் கற்றல், அதில் பழக்கமுறல், 2. பொருளாசை அற்று நிற்றல், 3. சரக்கு மூலிகை நிறை குணமறிதல், 4. சினம் கொள்ளாது அடக்கமுறல், 5. மருந்து செய்யும் திறத்தை அறிதல், 6. கடவுளை வழிபடல், 7. அறமியற்றல், 8. குருவையடுத்து முறையைக் கற்றல், 9. நெடுநாள் பழக்கமுறல், 10. கைபாகம் செய்பாகத்தில் தெளிவுறல் 11. இலக்கண இலக்கியம் கல்வித்திறம் கற்றல், 12. பிறர் உயிரைத் தன்னுயிரைப் போல் எண்ணல், 13. அனுபான வேறுபாடு அறிதல், 14. நோய், குறி குணங்கள் அறிதல், 15. சரக்குத் தூய்மையில் தேர்தல், 16. நண்பன் பகைவன் வேறுபாடு அறிதல், 17. மாழைகளைத் துகள் செந்தூரமாக்கும் முறையில் தெளிதல், 18. நாடி நடையறிதல், அதாவது நாடி ஆய்வு, 19. பஞ்சபூத நிலையும் முப்பிணிக்கூறு குற்றமுமறிதல் (சா.அக.).

**பத்தாந்து** *pattāndu,* பெ.(n.) தான் நுட்பமாக உண்டாக்கிய பொருளைப் போல் பிறர் செய்யாமல் தடுத்து, தானே செய்து பயன் பெறுதற்கு அரசு அளிக்கும் உரிமை (இ.வ.); patent.

த.வ. தன்னுரிமை

**பத்திரக்கடன்காரன்** *pattira-k-kaḍaṉ-kāraṉ,* பெ.(n.) ஆவணத்தின் மேல் கடன் கொடுத்தவன் (வின்.); bond-creditor.

[*Skt.patra> த. பத்திரம்*]

**பத்திரக்காரன்** *pattira-k-kāraṉ,* பெ.(n.) ஆவணம் பதிவு செய்வோன் (இ.வ.); notary public.

த.வ. சான்றுறுதியாளன்

[*Skt.bhadra> த. பத்திரம்.*]

['காரன்' உடைமைப் பொருள் ஈறு.]

**பத்திரகடம்** *pattira-kaḍam,* பெ.(n.) நற்காரியங்களுக்காக மாவிலை முதலியவற்றை வைத்துக் கட்டி அழகு செய்து நீர் நிறைக்கப்பட்ட குடம் (பூரணகும்பம்); (T.A.S.V.162.); pot filled with water and sanctified by rites.

[*Skt.bhadra+ghaṭa> த. பத்திரகடம்*]

**பத்திரகம்** *pattiragam,* பெ.(n.) 1. இலை; leaf, 2. சந்தனம்; sandal, 3. இறகு; feather,

4. விழுதி; a plant, 5. நீர்முள்ளி; a thorny plant. (சா.அக.).

**பத்திரகாளி** *pattirakāḷi,* பெ.(n.) கொற்றவை (சிலப்.20:38,உரை.); Durgā.

*[Skt.Bhadra-kāḷī> த. பத்திரகாளி]*

**பத்திரதீபம்** *pattira-dīpam,* பெ.(n.) கோயில்களில் நடைபெறும் விளக்கேற்றும் விழா வகை; an illumination ceremony conducted in temples.

*[Skt.bhadra-dīpa> த. பத்திரதீபம்]*

**பத்திரபாலா** *pattirapālā,* பெ.(n.) வலிமை கொடுக்கும் மூலிகை; a kind of rejuvanate medicine (சா.அக.).

**பத்திரம்**[1] *pattiram,* பெ.(n.) 1. இலை; leaf. பத்திரங்கொண் டருச்சித்தே (வெங்கைக்கோ. 120); 2. புத்தகத்தினேடு எதிர்போயேறும் பத்திரம் வென்றதாக. palm leaf of a book. (திருவாலவா.38,24); 3. இலை போன்ற தகடு; plate in the form of leaf. பைம்பொற் பத்திரம் (பெருங்.மகத.5,51); 4. ஓர் அணிகலன், வெண் கலப் பத்திரங்கட்டி விளையாடி (திவ்.பெரியாழ். 1,9,5); a leaf - like ornament. 5. ஆவணம்; written document, bond, deed, order. 6. திருமுகம். letter, epistle, பத்திரங் கொடுத்தொதுங்கிப் பத்திரன் பணிந்து நின்றான் (திருவாலவா.55,19): note, ola. 7. பூவிதழ் (வின்.); flower petal. 8. இறகு (பிங்.); wing, feather, plumage. 9. அம்பு (பிங்.); arrow. துன்று பத்திரமாயிரம் வாசவன் றுரப்ப (குற்ற.தல.14,39); arrow. 10. சிறுவாள் (பிங்.) small sword. பத்திரம் புரை நாட்டம் (கம்பரா. ஊர்தே.170).

**பத்திரம்**[2] *pattiram,* பெ.(n.) 1. அழகு (பிங்.); beauty, grace. 2. அழகிய உருவம். பத்திரமணிந்த சித்திரக்கதவின் (பெருங். இலாவாண.2,66); beautiful figures, as carved on a door. 3. கவனம். சாமான்களைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்; caution, carefulness, circumspection. 4. நன்மை (சூடா.) பத்திரக்கடிப்பு (சீவக.2276); goodness. 5. பாதுகாப்பு. பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினான் (கம்பரா.சடாயுவுயிர். 91); safety, security. 6. நலம். ஊரில் எல்லாரும் பத்திரமா? good state of health, welfare. 7. யானை வகை. பத்திரப் பெயர்ப் பருத்தகைச் சிறுத்தகட் பாய்மதப் பரூஉப் பக டனையான் (பாரத.பதினெட்டாம்.31); a kind of elephant. 8. மலை (பிங்.). பத்திரத் தலையென (கம்பரா. கரன்.80); hill, mountain. 9. பீடத்திலுள்ள எழுதகவகை. நடுவு பத்திரம் உடைத்தாய் நின்ற பீடம் ஒன்று; (S.I.I.ii,222). 10. ஒன்பான் ஆண்டுகளில் ஒன்றாகிய பத்திர ஆண்டு. (சிவதரு.கோபுர.53). 11. ஒக இருக்கை வகை. ஆதன நூற்றெட்டவை பதுமம் பத்திரம் (தத்துவப்.107). 12. பத்திரலிங்கம் என்னும் பெயர் பெறும் சைவாலதுபத்துப் பலிபீடம். (சைவச.பொது.127). 13. குதிரைப் பந்தி (அக.நி.); horse-stable.

**பத்திரம்**[3] *pattiram,* பெ.(n.) 1. சொத்தின் விளக்கமும் அதற்கு உரியவரின் பெயரும் எழுதி அரசிடம் பதிவு செய்யப்பட்ட முத்திரைத் தாள்; registered document of property, etc. 'பத்திரத்தில் குறிப்பிடப்பட் டிருப்பவரின் பிறங்கடைக்கே இந்தச் சொத்தின் மேல் உரிமை உண்டு,' 2. முத்திரைத்தாள்; stamp paper for writing legal documents. 'ஆயிரம் ரூபாய் பத்திரம் இரண்டு கொடுங்கள்'. 3. முதலீடாக. சேமிப்பாக அல்லது கடனாகக் கொடுத்த பணத்துக்குத் தரும் அச்சடிக்கப் பட்ட அல்லது எழுதப்பட்ட சான்று; bond for investment, savings or loan. 'ஐந்தாண்டு காலச் சிறுசேமிப்பு ஆவணங்கள் 4. ஒரு விழாவில் ஒருவரை, பாராட்டும் வகையில் அளிக்கப்படும் பாராட்டுச் சொற்கள் அடங்கிய தாள்; citation read in honour of some one at a formal occasion. 'விழாவில் அமைச்சருக்குப் பாராட்டுப் பத்திரம் வாசித்து அளிக்கப்பட்டது'. (உ.வ.)

*[Skt.bhadra> த. பத்திரம்]*

**பத்திரலிங்கம்** *pattira-liṅgam,* பெ.(n.) சிவாலயத்துப் பலிபீடம் (சைவச.பொது. 127,உரை.); altar of sacrifice.

*[Skt.bhadra+linka> த. பத்திரலிங்கம்]*

**பத்திரவீரியகம்** *pattira-viriyakam,* பெ.(n.) 1. மூங்கில் வகை; a kind of bamboo 2. பிரம்பு; rattan.

*[Skt.patra+viryaka> த. பத்திரவீரியகம்]*

**பத்திரன்** *pattiran,* பெ.(n.) 1. வீரபத்திரன்; Virabdadran. "மீண்ட பத்திரன் விண்ணுலக டைந்தனன்" (உபதேசகா.விபூதி.31). 2. சிவ பிரான் (வின்.); Siva. 3. பாணபத்திரன்; a devotee. "சிறந்தானங்கட் பத்திர னென்றோர் பாணன்" (திருவாலவா.54,1).

*[Skt.bhadra> த. பத்திரன்]*

**பத்திராகாரன்** *pattirākāran,* பெ.(n.) அழகிய வடிவினன்; well built handsome man. "என்பத்திராகாரன் புறம்புல்குவான்" (திவ். பெரியாழ்.1.10:6).

*[Skt.bhadra+ākāra> த. பத்திராகாரன்]*

**பத்திராசனர்** *pattirāšanar,* பெ.(n.) ஒரு வகைத் தேவ கணத்தார்; a class of angelss or heavenly inhabitants.

**பத்திராஞ்சனம்** *pattirāñjanam,* பெ.(n.) மை; collyrium, black paint (சா.அக.).

**பத்திராட்சி** *pattirātci,* பெ.(n.) அந்திமந்தாரை அல்லது அந்தி மல்லிகை; evening Jasmine, four o' clock plant. (சா.அக.)

**பத்திராட்சிமணி** *pattirātci-mani,* பெ.(n.) உருத்திராக்கம் போல அணிதற்குரிய கொட்டை மணி வகை; four o' clock seeds worn by religious mendicants.

*[Skt.bhadrākṣa> த. பத்திராட்சி]*

**பத்திராதி** *pattirādi,* பெ.(n.) ஆகாய கருடன்; sky root.

**பத்திராதிபர்** *pattirādipar,* பெ.(n.) செய்தித் தாள் நடத்தும் தலைவர் (இக்.வ.); editor of a journal.

த.வ. இதழாசிரியர்

*[Skt.patra+adhipa> த. பத்திராதிபர்]*

**பத்திராலாபனம்** *pattirālāpanam,* பெ.(n.) நலம் கூறுகை (சீவக.2180,உரை.); telling a person of one's welfare.

*[Skt.bhadrālāpana> த. பத்திராலாபனம்]*

**பத்திரி**[1] *pattiri,* பெ.(n.) 1. அம்பு (திவா.); arrow. 2. பறவை (பிங்.); bird. 3. குதிரை (சூடா.); horse. 4, சாதிபத்திரி (உ.வ.); mace. 5. காட்டுச்சாதி; Malabar nutmeg.

*[Skt.patrin> த. பத்திரி]*

**பத்திரி**[2] *pattiri,* பெ.(n.) இலை; leaf. "இலதை வல்லிகளினுள்ளாலிருந்த பத்திரிகள்" (மேருமந்.1163).

*[Skt.patra> த. பத்திரி]*

**பத்திரி**[3] *pattiri,* பெ.(n.) காளி (பிங்.); Kālī, consort of Siva.

*[Skt.bhadrā> த. பத்திரி]*

**பத்திரிகம்** *pattirigam,* பெ.(n.) சீரகம்; cumin seed (சா.அக.).

**பத்திரிகா** *pattirigā,* பெ.(n.) 1. வெள்ளை நாகணம்; white croton plant. 2. இருள் விடு செடி; an unknown plant.

**பத்திரிகை** *pattirikai,* பெ.(n.) 1. மடல் (கடிதம்); letter, ola. 2. இலை; leaf. 3. அச்சடித்த தாள்; printed paper; news paper; journal; pamphlet. 4. ஆவணம்; document, deed, 5. விளம்பரத்துண்டு; notice, advertisement.

*[Skt.patrikā> த. பத்திரிகை]*

**பத்திரிகையாளர்** *pattirikaiyālar,* பெ.(n.) செய்தித்தாளுக்குச் செய்தி திரட்டுபவர் அல்லது செய்தித்தாள் தொடர்பான பணி யிலிருப்பவர்; journalist.

த.வ. செய்தியாளர், தாளிகையாளர்

**பத்திரிகைவை-த்தல்** *pattirikai-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) குடும்பச் சடங்கு களுக்கான அழைப்பிதழை நேரில் கொடுத்து நிகழ்ச்சிக்கு வருமாறு அழைத்தல்; invite formally in person.

*[பத்திரிகை+வை-த்தல்,]*

**பத்மகம்** *padmagam,* பெ.(n.) ஒரு வகை மரம்; a kind of tree. (சா.அக.).

**பத்மகெந்தஞ்சம்** *padmakendañjam,* பெ.(n.) தாமரைக் கிழங்கு; lotus root. (சா.அக.).

**பத்மம்** *padmam,* பெ.(n.) பதுமம் (S.I.I.ii,395) பார்க்க; see padumam.

**பத்மயோனி** *padma-yōṉi,* பெ.(n.) நான்முகன்; Brahmā. "மாமுனிகணத்தர் தம்மொடுங் கூடி நின்றனன் பத்மயோனியே" (தக்கயாகப்.472).

*[Skt.padma+yōni> த. பத்மயோனி]*

**பத்மராகம்** *padmarāgam,* பெ.(n.) மாணிக்கம்; சிவப்புக் கல்; a species of ruby.

**பத்மவரி** *padma-vari,* பெ.(n.) தாமரைத் தளங்களையொத்து அமைக்கப்பட்ட கோயிலின் அடிப்பகுதி; the lowermost tier of a temple shaped in the form of the petals of a lotus flower.

*[Skt.padma> த. பத்மம்+வரி]*

**பத்மாசனம்** *padmāšaṉam,* பெ.(n.) ஓர் ஒக நிலை; a posture in yoga practice (சா.அக.).

**பத்மாட்சம்** *padmāṭcam,* பெ.(n.) தாமரை மணி (சா.அக.); lotus beads or seeds.

**பத்மினிகண்டகம்** *padmiṉikaṇḍagam,* பெ.(n.) தாமரைச் செடியின் முட்களைப் போல் உடம்பின் தோலைப் பற்றி உண்டாகும் ஒரு நோய்; தவளைச் சொறி; a skin disease marked by thickening and keratinisation of the skin. Follicular and popular eruptions and degeneration of sebaceous and sweet glands toad skin (சா.அக.).

**பத்மினிசாதிப்பெண்** *padmiṉišādippeṉ,* பெ.(n.) நால்வகை இனப் பெண்களில் முதல் வகை; padmiṉi is the first of the four classes of women classified according to their lust (சா.அக.).

**பத்மினி செயநீர்** *padmiṉišeyanīr,* பெ.(n.) ஒன்பது அல்லது பத்து மாதக் கருப்பிண்டக் கருவினின்று செய்யும் செயநீர்; a pungent liquid extracted from a foetus of nine or ten months old (சா.அக.).

**பத்ரகாளி** *padrākāḷi,* பெ.(n.) கொற்றவை; Durgā. "பத்ரகாளி படை கண்டு" (தக்கயாகப்.592).

*[பத்திரகாளி > பத்ரகாளி]*

**பத்வா** *padvā,* பெ.(n.) முகம்மதியச் சட்டப்படிக் கூறும் தீர்ப்பு; judicial sentence or judgement by a Mufti.

*[U.fatwa> த. பத்வா]*

**பதகதார்** *padaka-dār,* பெ.(n.) சிற்றூர் தொகுதியாகிய பதகத்தின் தலைவர் (G.Tj.D.I.170.); head of a Patakam.

*[Skt.pata-ga> த. பதகதார்]*

**பதச்சாரியை** *pada-c-cāriyai,* பெ.(n.) ஒரெழுத்துக்கு மேற்பட்ட எழுத்துகளாலாகிய சாரியை (வின்.); augment consisting of more than one letter, as இன், வற்று.

த.வ.எழுத்துச்சாரியை

*[Skt.pada> த. பதம்]*

**பதச்சேதம்** *pada-c-cēdam,* பெ.(n.) 1. சொற்றொடரைத் தனித் தனிச் சொல்லாகப் பிரிக்கை (வின்.); splitting into component parts, as a sentence. 2. சீர்; metrical foot. "சீரைப் பதச் சேதமென்றும் பகர்வர்" (யாப்.வி.22,பக்.97).

த.வ. சொற்பிரிப்பு

*[Skt.pada+cēta> த. பதச்சேதம்]*

**பதசகம்** *padašagam,* பெ.(n.) அத்தினி இனப் பெண்கள் நால் வகைகளுள் ஒரு பிரிவினர்; ~~கள்~~ one of the four classes of women divided according to their tust (சா.அக.).

**பதசாரம்** *pada-šāram,* பெ.(n.) பதப் பிரயோசனம் பார்க்க; see pada-p-pirayōšaṉam.

*[Skt.pada+cāra> த. பதசாரம்]*

**பதஞ்சலி** *padañjali,* பெ.(n.) வடமொழியில் ஒக சூத்திரமும் வியாகரண மகாபாடியமும் மருத்துவ நூலொன்றும் இயற்றியவரும் ஆதி சேடனவதாரமாகக் கருதப்படுபவருமான ஒரு முனிவர்; a sage, author of the yōga šūtraas, Mahābhāsya and a treatise on medicine in Sanskrit, considered an incarnationof Adišēṣa.

*[Skt.pat-añjali> த. பதஞ்சலி]*

**பதப்பிரயோசனம்** *pada-p-pirayōšaṉam,* பெ.(n.) சொல்லின் பொருணயம்; the significance of a word.

*[Skt.pada+pirayōcana> த. பதப்பிரயோசனம்]*

**பதப்புணர்ச்சி** *pada-p-puṇarcci,* பெ.(n.) நிலை மொழியும் வருமொழியும் ஒன்றுபடுகை (நன்.242,மயிலை.); sandhi, combination of one word with another.

*[Skt.pada> த. பதம்]*

**பதபாடம்** *pada-pāḍam,* பெ.(n.) மறையின் (வேதத்தின்) சொற்றொடர்களைப் பதம்பதமாக எடுத்தோது முறை; method of reciting Vēda word byword.

*[Skt.pada> த. பதம்]*

**பதர்பேணி** *padar-pēṇi,* பெ.(n.) கோதுமையாற் செய்யப்படும் ஒரு வகைப் பணிகாரம் (இந்துபாக.); a kind of cake prepared from wheat.

*[U.padar+phēni> த. பதர்பேணி]*

**பதரிகாசிரமம்** *padarikāśiramam,* பெ.(n.) இமயச் சாரலில் உள்ளதும், நரநாராயணர் தவம் புரிந்ததும், திருமாலுக்குச் சிறந்ததுமான, தலம் (வின்.); a sacred place on the Himālayas said to be the hermitage of Naraand Nārāyaṇa,sacred to Visṇu.

*[Skt.badarikāśrama> த. பதரிகாசிரமம்]*

**பதரிரீட்சம்** *padariṟiṭcam,* பெ.(n.) ஒட்டை மரம்; Camel tree (சா.அக.).

**பதனகேந்திரம்** *padaṉa-kēndiram,* பெ.(n.) கிடைக்கோட்டின் (அட்சரேகையின்) விம்ப நிலை (வின்.); argument of the latitude of planets.

*[Skt.patana+kēntira> த. பதனகேந்திரம்]*

**பதாகினி[1]** *padākiṉi,* பெ.(n.) தானை (திவா.); army. "கடாங்கதழ் பதாகினி (ஞானா.26,18).

*[Skt.patākinī> த. பதாகினி]*

**பதாகினி[2]** *padākiṉi,* பெ.(n.) கொடிப்படை; army carrying banners. . "கடாங்கதழ் பதாகினி" (ஞானா.26,8). "நாயகி பதாகினிகளே" (தக்கயாகப். 433).

*[Skt.patākinī> த. பதாகினி]*

**பதாத்துவா** *padāttuvā,* பெ.(n.) அறுவகை அத்து வாக்களுள் பத உருவமானது (சி.சி.8;6–9, மறைஞா.); the path of words, one of six attuvā.

*[Skt.pada+adhvā> த. பதாத்துவா]*

**பதார்த்தம்[1]** *padārttam,* பெ.(n.) 1. சொற்பொருள்; meaning of a word. 2. பொருள்; thing, substance matter, article, commodity, drug; being form of existence, whether spiritual or material. "ஐம்பொறிக்குந் தொடர்பாய் நிற்குமான்ற பதார்த்தங்களெலாம்" (ஞானவா.உற்பத்.68). 3. சோறு ஒழிந்த கறி முதலிய உணவுப் பொருள் (உ.வ.); curry, any food-stuff except rice. 4. சொத்து (வின்.); wealth; movable property. 5. பத்து கருடம் கொண்ட நிறை (சுக்கிர நீதி,105.); weight of ten karṣa. 6. செல்வம் (திரவியம்), குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என நியாய சாத்திரத்தில் வழங்கும் ஏழுவகைப் பொருள்கள்; category, predicable, of seven kinds, viz., diraviyam, kuṇam,karumam, šāmāniyam, vicēṣam, šamavāyam, apāvam 7. சிவ சமயத்துக் கூறப்படும் பதி, பசு, பாசம் என்ற மூவகை மூலப் பொருள்கள்; eternal, uncreated things in the universe, three in number, viz., padi, pašu,pāšam. 8. சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூவகை மூலப் பொருள்கள்; eternal uncreated things, viz.,šittu,ašittu, īšuvaraṉ 9. சமண சமயத்துக் கூறப்படும் சீவன், அசீவன் என்ற இரு வகை மூலப்பொருள்கள்; entity, of two kind, viz., šīvaṉ,āšivaṉ.

*[Skt.padārtha> த. பதார்த்தம்]*

**பதார்த்தம்[2]** *padārttam,* பெ.(n.) 1. சாறப் பொருளினால் செய்யப்பட்ட பொருள்; all substances made up of matter, material substances that which underlies all phenomena. 2. கண்களால் பார்க்கக்கூடிய பொருள்; any visible thing. 3. உடம்பு அல்லது உடல் உறுப்பிற்கு அடிப்படை அல்லது

கரணமான பொருள்; (in anatomy) the material of which an organ or body is made up. 4. கடவுள் ஆற்றல் பொருந்தியுள்ள பொருள்; (in theology) that in which the divine attributes inhere or exist. 5. தின்பண்டம்; eatables. 6. மூலிகை; drug. 7. காய் கறி; vegetable. 8. உணவுப் பொருள்; food stuff. 9. சாறப் பொருள்; substances. 9. மூவகை மூலப்பொருள்கள்; the three elementary substances. 11. உணவோடு கூடிய பொருள்; accompainments for relish of food (சா.அக.).

**பதிகிருத்தியம்** *padi-kiruttiyam,* பெ.(n.) சமய சொற்பொருள் (பதார்த்தம்) எட்டனுள் ஒன்றான கடவுள் செயல் (சைவப்.67.); the acts of the Supreme Being, one of eight šamaya-padārttam.

*[Skt.patikriya > த. பதிகிருத்தியம்]*

**பதிசேவை** *padi-šēvai,* பெ.(n.) கணவனுக்குத் தொண்டு புரிதல்; service of a woman to her husband.

*[Skt.padi+šēva> த. பதிசேவை]*

**பதிஞானம்** *padi-ñānam,* பெ.(n.) 1. இறைவனைப் பற்றிய அறிவு (சி.சி.9,2,மறை.); knowledge of the Supreme Being. 2. துறவி; hermit.

*[Skt.padi+ñana> த. பதிஞானம்]*

**பதிஞானவாழ்வு** *padi-ñāna-vālvu,* பெ.(n.) பரம் பொருளொடு இரண்டறக் கலத்தலாகிய நுகர்வு (அனுபவம்) (திருப்பு.888.); the spiritual experience in which the individual soul becomes merged in the Supreme Being.

**பதிஞை** *padiñai,* பெ.(n.) ஆய்வுப் பொருள்; தெரிவு; proposition. "பதிஞை யிடமலை வெவ் வழலுடைத்தென்பது" (வேதா.சூ.21).

*[Skt.prati-jña > த. பதிஞை]*

**பதிட்டி-த்தல்** *paditti-,* 4 செ.குன்றாவி. (v.t.) நிறுவுதல்; நிலைநாட்டுதல்; to establish, set up. "பாசம தகற்றி லிங்கம் பதிட்டியும்" (சீகாளத்.பு,கன்னி.149).

*[Skt.prati-ṣthā> த. பதிட்டி-த்தல்,]*

**பதிட்டிதம்** *padittidam,* பெ.(n.) நிலையாக ஆக்கப்பட்டது; that which is made certain. "பதிட்டிதம் பிறந்ததின்று" (பாரத. பன்னிரண்.39).

*[Skt.prati-.sthita > த. பதிட்டிதம்]*

**பதிட்டை** *padittai,* பெ.(n.) நிறுவுதல்; establishment. "பரனையானாப் பரிவினாற் பதிட்டை செய்து" (திருவிளை.இரச.29).

*[Skt. prati-ṣthā> Pkt. patiṭṭhā > த. பதிட்டை]*

**பதிதபாவனன்** *padida-pāvanan,* பெ.(n.) ஒழுக்கம் தவறியவரைப் புனிதராக்குபவன் கடவுள்; God, as the redeemer of sinners.

*[Skt.patita-pāvana> த. பதிதபாவனன்]*

**பதிதரிராப்போசனம்** *padidarirā-p-pōšanam,* பெ.(n.) இயேசுவின் கடைசி இரவு உணவு; the Lord's supper.

*[பதிதன்+இரா+போசனம்]*

**பதிதன்** *padidan,* பெ.(n.) வருண வாழ்வொழுக்க அறம் (வருணாசிரம தருமம்) தவறியவன் (சீவக.2783,உரை.); one who has lost caste or religion, apostate.

*[Skt.patita> த. பதிதன்]*

**பதிநிச்சயம்** *padi-niccayam,* பெ.(n.) கடவுளுண்மை தெளிகை (வின்.); ascertainment of the existence of God.

*[Skt.pati+niš-caya> த. பதிநிச்சயம்]*

**பதிநிதானம்** *padi-nidānam,* பெ.(n.) பதிநிச்சயம் (வின்.) பார்க்க; see padi-niccayam.

*[Skt.pati+nitana> த. பதிநிதானம்]*

**பதிநிர்ணயம்** *padi-nirnayam,* பெ.(n.) பதி நிச்சயம் (வின்.) பார்க்க; see padi-niccayam.

*[Skt.pati+nirnaya> த. பதிநிர்ணயம்]*

**பதிநூல்** *padi-nūl,* பெ.(n.) பரம் பொருளைப் பற்றிக் கூறும் நூல்; treatise dealing about the Supreme Being.

*[Skt. pati> த. பதி]*

**பதிப்பிரஞ்ஞன்** *padi-p-piraññan,* பெ.(n.) வழியறிந்தவன் (வின்.); one who knows the ways and means.

*[Skt. pathi-prajña> த. பதிப்பிரஞ்ஞன்]*

**பதிபுண்ணியம்** *padi-punniyam,* பெ.(n.) சிவபிரானுக்குச் செய்யும் திருப்பணி (சி.சி. 2,24); service to Siva.

*[Skt. pati+punniya> த. பதிபுண்ணியம்]*

**பதிபோதம்** *padi-pōdam,* பெ.(n.) பரம் பொருளைப் பற்றிய அறிவு (ஞானம்); knowledge and experience of the Supreme Being.

த.வ. இறையறிவு

*[Skt. pati+bōdha> த. பதிபோதம்]*

**பதியிலார்** *padi-y-ilār,* பெ.(n.) கணிகையர்; dancing girls. "உருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்திற் றோன்றி" (பெரியபு. தடுத்தாட்.132).

**பதில்** *padil,* பெ.(n.) 1. மாற்றீடு; exchange; substituion. 2. மாற்றம், விடை; reply.

*[U. badl> த. பதில்]*

**பதிலாமை** *padilāmai,* பெ.(n.) குற்றச்சாட்டு (இ.வ.); accusation, charge.

*[U. badnāmi> த. பதிலாமை]*

**பதிலாள்** *padil-lal,* பெ.(n.) மாற்றாக நியமிக்கும் ஆள்; substitute, deputy, representative, proxy.

மறுவ. நிகராளி, நிகராளர், மாற்றாள்

*[U. badl> த. பதில்+ஆள்]*

**பதிலாளி** *padil-āli,* பெ.(n.) பதிலாள் (வின்.) பார்க்க; see padil-āḷ.

த.வ. மாற்றாள்

**பதிலி** *padili,* பெ.(n.) மாற்றாக நியமிக்கும் ஆள் அல்லது பொருள்; substitute; person or thing substituted for some other person or thing.

*[U. badli> த. பதிலி]*

**பதிலிப்பத்திரம்** *padili-p-pattiram,* பெ.(n.) அதிகார பத்திரம் (இக்.வ.); writ of authority or proxy.

*[U. badli+Skt. pattira>த. பதிலிபத்திரம்]*

**பதிவதம்** *padivadam,* பெ.(n.) பதிவிரதம் பார்க்க; see padi-viradam. "பதிவத மாதர் பரத்தையர்" (பரிபா.10,23).

**பதிவிம்பம்** *padivimbam,* பெ.(n.) எதிருரு; reflection, reflected image. "தூரிய சுடர்ப் பதிவிம்பம்" (வேதா.சூ.106).

மறுவ. எதிர் வடிவு

*[Skt. prati-bimba>Pkt. padi-bimba > த. பதிவிம்பம்]*

**பதிவிரதம்** *padi-viradam,* பெ.(n.) பதிவிரதா தர்மம் (தக்கயாகப்.119, உரை.) பார்க்க; see padiviradā-tarmam.

*[Skt. pati-vratā> த. பதிவிரதம்]*

**பதிவிரதமுல்லை** *padivirada-mullai,* பெ.(n.) கற்புக்கு அறிகுறியாக அணியும் முல்லை; (தக்கயாகப்.119,உரை.); mullai flower worn by a woman to indicate her chastity.

*[Skt. pativratā> த. பதிவிரதம்]*

**பதிவிரதாதர்மம்** *padiviradā-darmam,* பெ.(n.) கற்பு நெறி; the law of chastity.

*[Skt. pativratā+tarma> த. பதிவிரதாதர்மம்]*

**பதிவிரதாபுண்ணியம்** *padiviradā-punniyam,* பெ.(n.) பதிவிரதாதர்மம் (வின்.) பார்க்க; see padiviradā-darmam.

*[Skt. pativratā+punniya> த. பதிவிரதா புண்ணியம்]*

**பதிவிரதை** *padiviradai,* பெ.(n.) கற்புடை மனைவி; chaste and virtuous wife. "அன்பு கூறும் பதிவிரதை" (திருப்பு.126).

த.வ. கற்புக்கரசி

*[Skt.pati-vratā> த. பதிவிரதை]*

**பதுமகாட்டம்** *padumakāṣṭam,* பெ.(n.) தென்னிந்தியா மாளவம் முதலிய இடங்களில் கிடைக்கின்ற துாணி மரத்தைப் போன்ற ஒரு நறுமணக் கட்டை; a fragrant wood resembling toon grown in South India and Malwa (சா.அக.).

**பதுமகுல்கந்து** *paduma-gulkandu,* பெ.(n.) வெண்டாமரைப் பூவினிதழ் உலர்ந்ததைக் கொண்டு தயாரிக்கும் ஒரு சேணியச் (யுனானி) சருக்கரைப் பாகு மருந்து; a confection of dried white lotus petals prepared in sugar or honey, candied white lotus prepared by Unani physicians (சா.அக.).

**பதுமகூடம்** *paduma-kūḍam,* பெ.(n.) 154 கோபுரங்களையும் 19 மேனிலைக் கட்டினை யுமுடைய கோயில் (சுக்கிரநீதி,230.); temple with 154 towers 19 storeys.

த.வ. தாமரைக்கூடம்

*[Skt.patuma> த. பதுமம்]*

**பதுமகேசரம்** *paduma-kēšaram,* பெ.(n.) புன்னை (சங்.அக.); mastwood.

*[Skt.padma-kēšara> த. பதுமகேசரம்]*

**பதுமகோசம்** *paduma-košam,* பெ.(n.) 301 கோபுரங்களையும், 36 மேனிலைக் கட்டினையு முடைய கோயில் (சுக்கிரநீதி,230); temple with 301 towers and 36 storeys.

**பதுமகோசிகம்** *paduma-košigam,* பெ.(n.) தாமரைக்காய் உருவமாகக் கை குவித்து ஐந்து விரலையும் அகல விரித்துக் காட்டும் இணையாவிணைக்கை வகை (சிலப்.3:18, உரை.); a gesture with one hand in which the fingers are so held as to appear like the calyx of a lotus.

*[Skt.padma+kaušika> த. பதுமகோசிகம்]*

**பதுமசாரிணி** *paduma-šāriṇi,* பெ.(n.) 1. ஒரு வகைத் தாமரை; a kind of lotus. 2. வெளித்தாமரை; sky lotus (சா.அக.).

**பதுமதந்து** *paduma-dandu,* பெ.(n.) தாமரை நாளம்; the hallow stalk of lotus plant (சா.அக.).

**பதுமநாபன்** *paduma-nāpaṉ,* பெ.(n.) உந்தித் தாமரையோன், திருமால்; Viṣṇu, as lotus-navelled.

*[Skt.padma-nābha> த. பதுமநாபன்]*

**பதுமநாளம்** *paduma-nālam,* பெ.(n.) 1. தாமரைக்கொடி; lotus creeper. 2. தாமரைத் தண்டு அல்லது தாமரை வளையம் (சா.அக.); lotus stalk.

**பதுமநிதி¹** *paduma-nidi,* பெ.(n.) குபேரனது ஒன்பான் செல்வங்களு(நவநிதியி)லொன்று; one of the nine treasures of Kubēra. "சங்கநிதி பதுமநிதி யிரண்டுந்தந்து" (தேவா.1230,10).

*[Skt.padma+niti> த. பதுமநிதி]*

**பதுமநிதி²** *paduma-nidi,* பெ.(n.) தாமரை யுருவாய்க் கிடக்கும் பொன் கனிமம்; gold ores found in oval masses (சா.அக.).

**பதுமபீடத்தன்** *paduma-pīḍattaṉ,* பெ.(n.) நான்முகன்; Brahma. "பதுமபீடத்தன்ன கரும்" (கம்பரா.கையடைப்.7).

*[Skt.padma+pīṭatta> த. பதுமபீடத்தன்]*

**பதுமபீடம்** *paduma-pīḍam,* பெ.(n.) தாமரை வடிவாகச் செய்யப்பட்ட பீடம் (மணிமே.3:66, அரும்.); seat in the shape of a lotus.

*[Skt.padma+pīṭa> த. பதுமபீடம்]*

**பதுமபுராணம்** *paduma-purāṇam,* பெ.(n.) பதினெண் தொன்மத்தொன்று; one of padin-eṇ-purāṇam.

*[Skt.padma-purāṇa> த. பதுமபுராணம்]*

**பதுமம்¹** *padumam,* பெ.(n.) 1. தாமரை; lotus, "அறுவர் மற்றையோரும்.... பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்" (பரிபா 5: 49) 2. பதுமரேகை (சங்.அக.) பார்க்க; see paduma-rēgai.

3. பதுமபுராணம் பார்க்க; see paduma-purāṇam. "பதுமமேலவன் புராணமாம் பிரமமே பதுமம்" (கந்தபு.பாயி.54). 4. பதுமபீடம் பார்க்க see paduma-pīḍam. "இவர் எழுந்தருளி நின்ற... பதுமம் நன்று" (S.I.I.ii-135). 5. பதுமாசனம் பார்க்க; see padumāšaṉam. "ஆதன நூற்றெட்டவை பதுமம்" (தத்துவப்.107). 6. முடியுறுப்பு ஐந்தனுள் தாமரை வடிவமானது (பிங்.); lotus - shaped section of a crown, one of five muḍi-y-uṟuppu; 7. நளிநயத்துக்குரிய ஆண் கைகளுளொன்று (சிலப்.பக்.92, கீழ்க்குறிப்பு); a hand - pose 8. கோடா கோடி (பிங்.) ; ten million crores. "கொடிப்படைப் பதுமத்தின் தலைவன்" (கம்பரா.இலங்கை கேள்வி.45) 9. பதுமநிதி பார்க்க; see paduma-nidi. 10. பதுமராகம் பார்க்க; see paduma - rāgam. "பதுமமு நீலமும் விந்தமும் படிதமும்" (சிலப்.14:186) 11. பதினைந்தாம் விண்மீனாகிய விளக்கு (சுவாதி) விண்மீன்; the 15th nakṣatra. 12. நிரய வகை (சி.போ. பா.2,3,பக். 203); a hell. 13. குதிரையின் இரண்டு முன் கால் சப்பைப் பக்கங்களிலும் காணப்படும் சுழி வகை (சுக்கிரநீதி,314); curls of hair on the shoulders of a horse.

[*Skt.padma*> *த. பதுமம்*]

**பதுமம்²** *padumam,* பெ.(n.) 1. ஈயம்; lead 2. ஒரு குளிகை; lotus pill 3. ஒரு வகை மாணிக்கம்; a kind of ruby 4. கண்ணிமை நோயின் ஒரு வகை மாறுபாடு; an eye disease of eye lid 5. ஒரு வகை ஒக நிலை; (in yoga philosophy) a posture in the practice of yoga (சா.அக.).

**பதுமமணி** *paduma-maṇi,* பெ.(n.) பதும வீசம் (சங்.அக.) பார்க்க; see paduma -vīšam.

[*Skt.padma*> *த. பதுமம்+மணி*]

**பதுமமூலம்** *paduma-mūlam,* பெ.(n.) தாமரைக் கிழங்கு; bulbous root of lotus (சா.அக.).

[*பதும(ம்)+மூலம்*]

[*Skt.padma*> *த. பதும(ம்)*]

**பதுமர்** *padumar,* பெ.(n.) பழைய புத்தருள் ஒருவர் (மணிமேபக்.369); one of the Buddhas that preceded Gautama Buddha.

[*Skt.padma*> *த. பதுமர்*]

**பதுமரசாதி** *padumara-šādi,* பெ.(n.) காம வகைப்பாட்டில் நான்காம்பிரிவு (அத்தினி) மகளிர் நால் வகைகளில் ஒன்றான; one of the four class i.e. last class of women divided according to their lust (சா.அக.).

**பதுமராகம்** *paduma-rāgam,* பெ.(n.) மாணிக்க வகை (திவா.) (திருவாலவா.25,12.); jacinth, a species of ruby, hyacinth.

[*Skt.padma-rāga*> *த. பதுமராகம்*]

**பதுமரேகை** *paduma-rēgai,* பெ.(n.) ஒருவனது நல்வாய்ப்பை (அதிட்டத்தை)க் குறிப்பதாகக் கருதப்படும் தாமரை வடிவமான கைவரிகை; lotus - mark on the palm of the hand, believed to indicate one's good fortune.

[*Skt.padma+rēga*> *த. பதுமரேகை*]

**பதுமரோகம்** *paduma-rōgam,* பெ.(n.) கண்ணிமையில் செஞ்சதை வளர்ந்திருக்கும் நோய் வகை (சங்.அக.); red fleshy excrescence with in the eyelid causing redness of the eye.

[*Skt.padma+rōka*> *த. பதுமரோகம்*]

**பதுமவியூகம்** *paduma-viyūgam,* பெ.(n.) தாமரை வடிவமாக வகுக்கப்பட்ட படையணி (சீவக.2311,உரை.); order of an army in the form of a lotus.

[*Skt.padma+viyūka*> *த. பதுமவியூகம்*]

**பதுமாசனம்** *padumāšaṉam,* பெ.(n.) இருக்கை (ஆசனம்) ஒன்பதனுள் இடக்காலை வலத்தொடையிலும் வலக்காலை இடத் தொடையிலும் வைத்து உட்கார்ந்து வலக் கையால் வலது பெரு விரலையும், இடக்கையால் இடது பெருவிரலையும் முதுகில் கை மாற்றிப் பிடித்துக் கொண்டு மோவாய்க் கட்டையை மார்பின் மேலூன்றி நாசி நுனியில் நாட்டம்

வைத்திருக்கும் இருக்கை (ஆசன) வகை (சீவக.656,உரை.); lotus - posture, a yōgic posture which consists in placing the right foot on the left thigh and the left foot on the right thigh and grasping the toes with the hands crossed over the back, while the chin presses on the chest and the gaze is fixed on the tip of the nose, one of nine āšaṉam.

*[Skt.padmā-sana> த. பதுமாசனம்]*

**பதுமாசனன்** *padumāšaṉaṉ,* பெ.(n.) தாமரையில் வீற்றிருப்பவன், பிரமன்; Brahmā, as seated on a lotus. "பழியாது மில்லாத பதுமாசனற்கும்" (பிரபோத.3:6).

*[Skt.padmāsana> த. பதுமாசனன்]*

**பதுமாசனி** *padumāšaṉi,* பெ.(n.) தாமரையில் வீற்றிருப்பவள், திருமகள்; Laksmi, as seated on a lotus.

*[Skt.padmāsanā> த. பதுமாசனி]*

**பதுமாஞ்சலி** *padumāñjali,* பெ.(n.) இரு கையையும் பதும கோசிகமாகக் கூட்டும் இணைக்கை வகை (சிலப்.3,18,உரை.); a gesture with both hands in which they are joined in paduma - kōšigam pose.

*[Skt.padma+añjali> த. பதுமாஞ்சலி]*

**பதுமாதனம்** *padumādaṉam,* பெ.(n.) பதுமாசனம் (தத்துவப்.108, உரை.) பார்க்க; see padumašaṉam.

**பதுமாதீதம்** *padumātīdam,* பெ.(n.) மூன்றெழுத்தில் ஒன்றாகிய சவ்வு; one of the three mystic letters 'cawvic' (சா.அக.).

**பதுமாந்தரம்** *padumāndaram,* பெ.(n.) தாமரையிதழ்; petals of lotus flower (சா.அக.).

**பதுமாலயம்** *padumālayam,* பெ.(n.) 1. சீதேவி செங்கழுநீர்; purple fleabane 2. பொன்னாங் கண்ணி; sessile plane (சா.அக.).

**பதுமினி** *padumiṉi,* பெ.(n.) நால்வகைப் பெண்டிருள் மேன்மைமிக்க இலக்கண முடையவள்; woman of the superior order, one of four peṉ.

*[Skt.padminī> த. பதுமினி]*

**பதுமுகம்** *padumugam,* பெ.(n.) 1. பதுமாசனம் (சிலப்.8,26,உரை.) பார்க்க; see padumāšaṉam 2. ஓமாலிகை முப்பத்திரண் டனுள் மஞ்சன நீரிற் கலக்கும் நறும் பண்ட வகை (சிலப்.6,77,உரை.); a fragrant substance used in bathing, one of 32 ōmāligai.

**பதேசம்** *padēšam,* பெ.(n.) நாடு; country. "நரகமேழும் நிகோதமும் பதேசமும்" (மேருமந்.110).

*[Skt.pra-dēša> த. பதேசம்]*

**பந்த்** *pandh,* பெ.(n.) (கட்சி, சங்கம் போன்ற அமைப்பு ஒரு கோரிக்கைக்காக அல்லது ஒன்றிற்கு எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில்) போக்குவரத்து, தொழில் போன்றவற்றை நடைபெறாவிடாமல் தடுத்தல்; முழு அடைப்பு; total stoppase (of business activities in a town, etc., (in India) bandh. 'பொது மக்கள் பாதிக்காத வகையில் பந்த் நடத்த வேண்டும்' (உ.வ.).

த.வ. அடைப்பு

*[U.bandh> த. பந்த்]*

**பந்தர்** *pandar,* பெ.(n.) முற்பிறப்பில் செய்த தீவினையால் அறிவு பெறாது பாசத்துக்கு உள்ளானவர் (வின்.); persons subject to the influence of karma and not yet eligible for divine illumination.

*[Skt.bandha> த. பந்தர்]*

**பந்தனம்** *pandaṉam,* பெ.(n.) 1. கட்டு; tie. 2. தடை; obstruction. 3. மறியல்; suppression as urine or stool. 4. விசி; ligature. 5. வளையக்கூடிய இழுவற்ற தடிப்பான சவ்வுக் கயிறு; any flexible in elastic tough fibrous band. 6. எலும்புகளை

பிணைக்கும் கடினமான கயிறு போன்ற பொருள்; a strong compact substance serving to bind one bone to another. 7. அரைஞாண்; waist string. 8. கட்டு; fastening binding. 9. சிறைப்படுத்துகை; restricting or rest raining the actions or movements as of devils spirits, dieties etc. 10. திணை; millet (சா.அக.).

*[Skt.bandhana> த. பந்தனம்]*

**பந்தனாலயம்** *pandanālayam,* பெ.(n.) சிறைச் சாலை (யாழ்.அக.); prison.

*[Skt.bandhanā+lāya> த. பந்தனாலயம்]*

**பந்தனை** *pandanai,* பெ.(n.) 1. பந்தனம், 1,2 பார்க்க; see pandanam. "ஐம்புலப் பந்தனை வாளர விரிய" (திருவாச.3,70) 2. பற்று; attachment. "பந்தனையிலா தான்" (பாரத. வாசுதேவனைப்.8) 3. ஆணவாதி குற்றங்கள் (சி.சி.9,12); bondage of soul. 4. குழந்தைக் கான நோய்; disease of children. "பந்தனை தீரப் பல்லாண்டு... பாடுதுமே" (திவ்.திருப்பல்.6). 5. மகள் (பிங்.); daughter.

*[Skt.bandhana> த. பந்தனை]*

**பந்தா** *pandā,* பெ.(n.) தன் பதவி, மேனிலை முதலியவற்றை வெளிப்படுத்தக் கூடிய மிடுக்கு; over bearing attitude. அவர் 'தான் ஒரு பெரிய நடிகர் என்ற பந்தாவே இல்லாமல் எல்லோரிடமும் இயல்பாகப் பழகுவார்'.

**த.வ. மிடுக்கு**

*[Skt.Panthah> த. பந்தா]*

**பந்தாதிகாரி** *pandādikāri,* பெ.(n.) சிறைச்சாலையின் அதிகாரி (திருவாலவா. அரும்.); superintendent of a jail.

**த.வ. சிறைச்சாலை மேற்காணி**

*[Skt.bhandādhikārin> த. பந்தாதி]*

**பந்துரம்** *panduram,* பெ.(n.) அழகு (வின்.); line of beauty, beauty.

*[Skt.bandhura> த. பந்துரம்]*

**பந்தேகானா** *pandēkānā* பெ.(n.) சிறைக் கூடம்; prison, jail.

*[U.bandēkhāna> த. பந்தேகானா]*

**பந்தோக்கு** *pandōkku,* பெ.(n.) கூட்டம் (இ.வ.); gang.

*[U.bandēq> த. பந்தோக்கு]*

**பந்தோபத்து** *pandōpattu,* பெ.(n.) 1. திட்டப் படுத்தப்பட்ட ஒழுங்கு; agreement, settlement, bargain, adjustment, arrangement, any system or mode of regulation, revenue settlement.2. காவல்; care, safety, safe custody. முதலமைச்சரின் வருகையை முன்னிட்டுப் பலத்த பந்தோபத்து ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

**த.வ. முறைக்காவல், பாதுகாவல்**

*[U.bandōbast> த. பந்தோபத்து]*

**பப்பரப்பெண்டு** *pappara-p-pendu,* பெ.(n.) வரிக் கூத்து வகை (சிலப்.3,13,உரை,பக்.88); a kind of masquerade dance.

*[பப்பரம்+பெண்டு]*

**பப்பரம்** *papparam,* பெ.(n.) ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று (திருவேங்.சத.96.); an ancient country of India, one of 56 dēšam. 2. பதினெண்மொழிகளுள் ஒன்று (திவா.); a language, one of 18.

*[Skt.barbara> த. பப்பரம்]*

**பப்பரர்** *papparar,* பெ.(n.) பப்பர (குச்சர) நாட்டார்; people of Papparam. "பப்பர ரெயினர் சீனகர்" (கம்பரா.மிதிலை,99).

**பப்பளி¹** *pappaḷi,* பெ.(n.) பப்பாளி (வின்.) பார்க்க; see pappāḷi.

**பப்பளி²** *pappaḷi,* பெ.(n.) கிச்சிலி வகை; pomelo, the largest of the orange species.

**பப்பளிச்சேலை** *pappaḷi-c-cēlai,* பெ.(n.) சேலைவகை (இ.வ.); a kind of saree.

*[பப்பளி+சேலை]*

*[K.pappaḷi> த. பப்பளி]*

**பப்பளிமாசு¹** *pappaḷimāšu,* பெ.(n.) பப்பளி² பார்க்க; see pappaḷi.

**பப்பளிமாசு²** *papalimāšu,* பெ.(n.) பெரு நாரத்தை; batavian orange (சா.அக.).

*[டச்சு > pampelmoes>த. பப்பளிமாசு]*

**பப்பாயி** *pappāyi,* பெ.(n.) பப்பாளி பார்க்க; see pappāḷi.

**பப்பாளி** *pappāḷi,* பெ.(n.) ஒரு வகைச் சிறுமரம்; Papaya Papaw.

*[Malay. Papaya > த. பப்பாளி]*

**பப்பாளிப்பால்** *pappāḷippāl,* பெ.(n.) பப்பாளி பார்க்க; see pappāḷi (சா.அக.).

**பப்புருவாகனன்** *pappuru-vākaṉaṉ,* பெ.(n.) மணலூர்ப் புரத்துப் பாண்டியன் மகளான சித்திராங்கதையிடம் அருச்சுனற்குப் பிறந்த மகன் (பாரத.); son of Arjuna by he Pāṇḍya princess Citrāṅgatā of maṉalūrpuram.

*[Skt. Babhruvāhana > த. பப்புருவாகனன்]*

பப்பரம் எனப்படும் குச்சர நாட்டின் ஒரு பகுதியில் மணலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த பாண்டியக் கிளை மரபினரைக் குறித்த கதையாகலாம்.

**பம்** *pam,* பெ.(n.) விண்மீன் (பிங்.); Star.

*[Skt. bha > த. பம்]*

**பம்பாய்** *pampāy,* பெ.(n.) இந்தியாவின் மேல் கடற்றுறைமுகமான ஒரு பெரு நகரம்; Bombay.

*[Port. bombain > த. பம்பாய்]*

தற்போது மும்பை என வழங்கப்படுகிறது.

**பம்மகத்தி** *pammakatti,* பெ.(n.) பார்ப்பனக் கொலை (பிரமகத்தி); the sin of killing a Brahmin. "காளையர்க ளெல்லா மடிந்த பம்மகத்தி வரலும்". (திருக்காள.உலா,19).

*[Pkt. bammahatti > த. பம்மகத்தி]*

**பம்மன்** *pammaṉ,* பெ.(n.) 1. சமணமாணி (சைன பிரமசாரி) (அருங்கலச்.168.); Jain bachelor. 2. பார்ப்பான் (இ.வ.); Brahmin.

*[Skt. brahman < த. பம்மன்]*

**பமம்** *pamam,* பெ.(n.) பமாதம் பார்க்க; see pamādam. "பமத்தினைப் பறித்தெறிந் திட்டான்" (மேருமந்.162).

**பமரம்** *pamaram,* பெ.(n.) வண்டு; bee. "பமர மடுப்பக் கடா மெடுத்து" (குமர.பிர.மீனாட். பிள்.4).

*[Skt. bhramara > Pkt. bhamara > த. பமரம்]*

**பமாதம்** *pamādam,* பெ.(n.) விழிப்பின்மை, எச்சரிக்கையின்மை; want of care; negligence. "பமாத சரிதம்" (அருங்கலச்.93).

*[Skt. pra-māda > Pkt. pamōda > த. பமாதம்]*

**பயகம்பனம்** *paya-kampaṉam,* பெ.(n.) அச்சத்தால் நடுங்குகை; trembling on account of fears. "பயகம்பனாதி மருவுதல் போல்" (வேதா.சூ.160).

*[பயம்+கம்பனம்]*

**பயகர்ப்பதம்** *paya-karppadam,* பெ.(n.) ஒரு கருத்தரிப்பின் மேல் மற்றொரு கருதரிக்கை; a pregnant lady concewing again super imposed pregnancy (சா.அக.).

**பயங்கரம்** *payaṅgaram,* பெ.(n.) 1. அச்சம்; fear, terror. 2. அச்சந்தருவது; that which causes fright or terror; alarming thing. "கமலத்தவளைப் பயங்கரமாக நின்றாண்ட வவயத்தின்" (திருக்கோ.33).

*[Skt. bhaya+kara > த. பயங்கரம்]*

**பயங்கரவாதம்** *payaṅgara-vādam,* பெ.(n.) அரசியல் நோக்கத்திற்காக மக்களிடையே அச்சத்தைக் கிளப்பும் வகையில் வன் முறையை மேற்கொள்ளும் போக்கு; terrorism. பயங்கரவாதத்தை அறவே ஒழிக்க எல்லோரும் முன் வர வேண்டும்.

**த.வ. வன்கொடுமை**

*[பயங்கரம்+வாதம்]*

**பயங்கரவாதி** *payaṅgara-vādi,* பெ.(n.) பேரச்ச முறைகளை மேற்கொண்டவர்; terrorist. பயங்கரவாதிகளை அரசு ஒடுக்க வேண்டும் அல்லது அவர்களாகவே திருந்த முற்பட வேண்டும்.

**த.வ. வன்கொடியன்**

**பயங்காட்டு[1]–தல்** *payaṅ-gāṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) அச்சமடையத்தக்க தோற்றங் காட்டுதல்; to assume a threatening appearance.

*[**Skt**.bhaya> த. பயம்]*

**பயங்காட்டு[2]–தல்** *payaṅ-gāṭṭu-,* செ.குன்றாவி. (v.t.) அச்சமுறச் செய்தல்; to frighten, threaten, menace.

*[பயம்+காட்டு–,]*

*[**Skt**.bhaya > த. பயம்]*

**பயங்காளி** *payaṅgāḷi,* பெ.(n.) பயங்கொள்ளி பார்க்க; see payaṅ-goḷḷi. "இந்தப் பயங்காளிப் பயல்" (அருட்பா. vi, வேண்டுகோள், 5, பக்.748).

*[பயம்+(கொள்ளி)காளி]*

**பயங்கொள்ளி** *payaṅ-goḷḷi,* பெ.(n.) அச்சமுள்ளோன் (இ.வ.); coward.

*[பயம்+கொள்ளி]*

**பயச்சுரம்** *paya-c-curam,* பெ.(n.) நடுக்கம் முதலிய அச்சக் குறிகளை உண்டாக்கும் காய்ச்சல் நோய் (சீவரட்.); fever in which the patient shows symptoms of fear.

*[**Skt**.bhaya> த. பயம்]*

**பயசம்** *payaśam,* பெ.(n.) 1. திருநாமப் பாலை; wild sarsa-parilla. 2. தண்ணீர்; water. 3.பால்; milk. 4. முலைப் பால்; breast milk. 5. அச்சம்; fright (சா.அக.).

**பயணஉத்தரவுச் சீட்டு** *payaṇa-uttaravu-c-ciṭṭu,* பெ.(n.) கப்பல் துறைமுகத்தை விட்டு போகும் முன் கொடுக்கப்படும் அனுமதிச் சீட்டு; port clearance.

*[பயணம்+உத்தரவு+சீட்டு]*

**பயணங்கட்டு–தல்** *payaṇaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) பயணத்திற்கு ஆயத்தமாதல்; to prepare for a journey.

*[**Skt**.pra-yāṇa> **Pkt**.payaṇa>த. பயணம்]*

**பயணச்சீட்டு** *payaṇa-c-ciṭṭu-,* பெ. (n.) பொதுப்போக்குவரத்து ஊர்திகளில் செல்வதற் காகத் தரப்படும் கட்டண நறுக்குச் சீட்டு; a piece of paper or card giving the holder a right to admission to travel on public transport.

*[பயணம்+சீட்டு]*

*[**Skt**.Pra-yāṇa> **Pkt**.payaṇa>த. பயணம்]*

**பயணச்சீட்டுப்பரிசோதகர்** *payaṇa-c-ciṭṭu-p-pariśōdagar,* பெ. (n.) பேருந்து, இரயில் முதலியவற்றில் செல்பவர்களின் செலவுச்சீட்டு, சுமைக்கான கட்டணச் சீட்டு முதலியவற்றைக் கேட்டு வாங்கிச் சரி பார்க்கும் பணியைச் செய்பவர்; ticket examiner (in a bus, train, etc., while travelling).

**த.வ. நோட்டகர்**

**பயணசன்னாகம்** *payaṇa-śannakam,* பெ. (n.) பயண அணியம்; preparation for a journey.

**பயணநூல்** *payaṇa-nūl,* பெ. (n.) ஒருவர் தான் சென்று வந்த நாட்டைப் பற்றியும் சந்தித்த மக்களைப் பற்றியும் எழுதும் நூல்; literature of travel. 'ஒரு நாட்டின் பண்பாடு, அவர்களின் பழக்கவழக்கங்களைப் பயண நூலில் அறிந்து கொள்ளலாம்'.

*[பயணம்+நூல்]*

*[**Skt**.pra-yāṇa> **Pkt**.payaṇa> த. பயணம்]*

**பயணப்படி** *payaṇa-p-paḍi,* பெ. (n.) அலுவலக வேலையின் பொருட்டு வெளி இடங்களுக்குச் செல்பவர்களின் செலவை ஈடுகட்டக் குறிப்பிட்ட விழுக்காட்டில் வழங்கப்படும் தொகை; travelling allowance (T.A.).

**த.வ. ஏகல் செலவு**

*[**Skt**.pra-yāṇa> **Skt**.payaṇa>த. பயணம்]*

**பயணப்படு–தல்** *payaṇa-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) பயணங்கட்டு–தல் பார்க்க; see payaṇaṅ-gaṭṭu-,

*[பயணம்+படு–தல்,]*

**பயணப்படுத்து–தல்** *payaṇa-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. செலவுக்கு ஆயத்தப்

படுத்துதல்; to prepare one for a journey. 2. செலவுக்கு (பயணத்திற்கு) அழைத்துச் செல்லுதல் (வின்.); to take one on a journey. 3. சிதறுவித்தல்; to squander, put out of the way. "உள்ளதையெல்லாம் பயணப் படுத்தி விட்டான்" (வின்.).

*[பயணம்+படுத்து–தல்,]*

**பயணம்** *payaṇam*, பெ. (n.) 1. செலவு (பயணம்); journey, travel, voyage. "பயணமுடன்... ஆரூர்தொழுது" (பெரியபு.சேரமான்.129). 2. இறப்பு (மரணம்) (உ.வ.); death, as a journey.

*[Skt. pra-yāṇa>Pkt. payaṇa>த. பயணம்]*

**பயணம் வைத்தல்** *payaṇam-vaittal*, பெ. (n.) சாதல்; death (சா.அக.).

*[பயணம்+வைத்தல்]*

**பயணவிரோதி** *payaṇavirōdi*, பெ. (n.) பூனை; cat (சா.அக.).

**பயணி[1]–த்தல்** *payaṇi-*, 4 செ.கு.வி. (v.i.) பயணப்படு–தல் பார்க்க; see payaṇa-p-paaḍu-,

**பயணி[2]** *payaṇi*, பெ. (n.) செலவு மேற்கொள்பவர்; செலவு செல்பவர்; one who undertakes a journey; traveller; passenger. 'பயணிகள் தங்கும் இடம்', 'வெளிநாட்டுப் பயணிகள் தமிழ்நாட்டின் முக்கிய சுற்றுலாத் தலங்களைக் கண்டு களித்தனர்' (உ.வ.).

**பயதத்தம்** *paya-tattam*, பெ. (n.) அச்சத்தால் அரசன் முதலியோர்க்குக் கொடுக்கும் பொருள் (சுக்கிரநீதி,145.); gift made to the king, etc., through fear.

*[Skt. bhaya+datta > த. பயதத்தம்]*

**பயந்தாரி** *payandāri*, பெ. (n.) பயங்கொள்ளி (திருநெல்.) பார்க்க; see payaṅ-koḷḷi.

*[பயம்+தாரி–,]*

*[Skt. bhaya > த. பயந்தாரி]*

**பயந்தான்கொள்ளி** *payandāṉ-koḷḷi*, பெ. (n.) துணிவு இல்லாதவர்; (பயங்கொள்ளி) (இ.வ.); coward.

*[பயந்தான்+கொள்ளி]*

**பயப்படல்** *payappaḍal*, பெ. (n.) 1. அஞ்சுகை; fearing, being afraid. 2. பயன்படல் (சா.அக.); useful.

**பயப்படு–தல்** *paya-p-paḍu-*, 18 செ.கு.வி. (v.i.) தீங்கு, துன்பம் முதலியவை வந்துவிடுமோ என்று எண்ணி அச்சம் கொள்ளுதல்; அஞ்சி நிற்றல்; be afraid of. 'தவறு செய்கிறவர் பயப்பட வேண்டும், தவறு செய்யாதவர்கள் எதைக் கண்டும் பயப்படத் தேவையில்லை' (உ.வ.).

*[பயம்+படு–,]*

**பயபக்தி** *paya-pakti*, பெ. (n.) அச்சத்தோடு கூடிய பணிவு அல்லது மதிப்புரவு (மரியாதை); reverential attitude. 'புத்தகத்தை பய பக்தியோடு அவர் கையில் கொடுத்தான்' (உ.வ.).

**பயம்காட்டு–தல்** *payam-kāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) பயமுறுத்து–தல் பார்க்க; see payamuṟuttu-, 'பூதம், பேய் என்று சொல்லிக் குழந்தையைப் பயம் காட்டுதல் கூடாது'.

*[பயம்+காட்டு–,]*

**பயமுறுத்து–தல்** *payam-uṟuttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. அச்சமுண்டாக்குதல்; to threaten, intimidate, frighten. 2. கண்டித்தல் (வின்.); to upbraid, rebuke.

**பயா** *payā*, பெ. (n.) தக்கா என்னும் முழவு (கலைமகள், XII, 402.); a kind of drum.

**பயாம்வார்** *payāmvār*, பெ. (n.) விளக்கக் குறிப்பு; detail.

*[U. bayānwār> த. பயம்வார்]*

**பயானகக்கண்** *payāṉaka-k-kaṇ*, பெ. (n.) அச்சத்தைத் தோற்றுவிக்கும் ஒரு வகைக்

கண்ணவிநயம் (பரத.பாவ.69.); a glance of the eyes intended to convey fear.

*[பயானகம்+கண்]*

**பயானகம்** *payāṉagam,* பெ. (n.) 1. அச்சச் சுவை; sentiment of terror, one of nava-rašam, q.v., 2. நிரய வகை (சிவதரு.சுவர்க்க நரக.107); a hell.

*[Skt.bhayānaka> த. பயானகம்]*

**பயிண்டு**[1] *payiṇḍu,* பெ. (n.) சுமார் 2 1/2 ஆழாக்களவு (இ.வ.); about 2 1/2 āḷākku.

*[E.pint=1/2 quant < த. பயிண்டு]*

**பயிண்டு**[2] *payiṇḍu,* பெ. (n.) புத்தகக் கட்டடம்; binding, as of books.

த.வ. கட்டாப்பு

*[E.bind> த. பயிண்டு]*

**பயித்தியக்கரப்பான்** *payittaya-k-karappāṉ,* பெ. (n.) பித்தத்தை உண்டாக்கும் ஒரு வகைக் கரப்பான்; a variety of skin eruption causing in sanity or unsoundness of mind (சா.அக.).

**பயித்தியக்காரன்** *payittiya-k-kāraṉ,* பெ. (n.) 1. பித்துப் பிடித்தவன் (சிவசமவா.58.); madman; lunatic. 2. மூடன்; foolish person.

*[Skt.paitya> த. பயித்தியம்]*

"காரன்" உடைமைப் பெயர் ஈறு

**பயித்தியகாசம்** *payittiya-kāšam,* பெ. (n.) மனத் தடுமாற்றத்தை உண்டு பண்ணும் ஈளை நோய்; asthma causing depression of mental faculties (சா.அக.).

*[பயித்தியம்+காசம்]*

**பயித்தியதோசம்** *payittiya-dōšam,* பெ. (n.) காலையில் எழுந்தவுடன் தூய்மையான நீர் குடிப்பதால் நீங்கும் நோய்; a disease which is cured by taking pure water as soon as getting from well (சா.அக.).

*[பயித்தியம்+தோசம்]*

**பயித்தியம்** *payittiyam,* பெ. (n.) 1. பித்து; madness, insanity. " பயித்தியங் கொண்டலை கிறாய்" (இராமநா.உயுத்.31.) 2. மதிகேடு; folly, foolishness, absurdity, stupidity. 3. தீராமோகம்; infatuation. 'பணப்பயித்தியம்'. 4. பயித்தியக்காரன் பார்க்க; see payittiya-k-kāraṉ.

*[Skt.paitya> த. பயித்தியம்]*

**பயித்தியம்கொள்ளல்** *payittiyam-koḷḷal,* பெ. (n.) பித்துப் பிடித்தல்; growing mad, becoming insanc (சா.அக.).

**பயிரபதிசாதி** *payira-padi-šādi,* பெ. (n.) ஆண் இனம் நால் வகைகளில் ஒன்று; one of the four classes of men divided according to their lust (சா.அக.).

**பயிராகி** *payirāgi,* பெ. (n.) பிச்சை எடுத்து செலவு மேற்கொள்ளும் வடநாட்டார்; religious mendicant from norh india.

*[U.bairāgi> த. பயிராகி]*

**பயில்வான்** *payilvāṉ,* பெ. (n.) மற்போர் புரிவோன்; wrestler, boxer. 'பயில்வான்கள் இருவரும் மேடைக்கு வந்தார்கள்' (உ.வ.).

த.வ. மல்லன்

*[U.pahḷwāṉ> த. பயில்வான்]*

**பர்க்கன்** *parkkaṉ,* பெ.(n.) 1. கதிரவன் (பிங்.); the Sun. 2. சிவன் (பிங்.); Sivaṉ. 3. நான்முகன் (யாழ்.அக.); Brahmāṉ 4. திருமால் (யாழ்.அக.); Viṣṇu.

*[Skt. bharga(ஒளி) >த. பர்க்கன்]*

**பர்க்கா** *parkkā,* பெ.(n.) விதையிற் பாதியையும் வரியையும் நிலக்கிழார் கொடுக்க குடிவாரத்துக் குரியவன் நிலக்கிழாருக்கு விளைவிற் பாதியைக் கொடுப்பதாகச் செய்துகொள்ளும் உடன் படிக்கை (R.F.); agreement by which a cultivator engages to pay his landlord half the produce, the

latter providing half the seed and paying the whole revenue.

*[U.bargā> த. பர்க்கா]*

**பர்க்காசுது** *parkkāšudu,* பெ.(n.) 1. இசை நிகழ்ச்சி முதலியன வேலை முடிந்து கலைகை; closing or rising of a court, an office or a business (R.F.). 2. திருப்பி வாங்கிக் கொள்கை; withdrawal. 3. பறிமுதல் மீட்கை (C.G.); raising an attachment.

*[U.barkhāst> த. பர்க்காசுது]*

**பர்கத்து** *parkattu,* பெ.(n.) செழிப்பு; prosperity, thriving. 'இந்த வீடு பர்கத்து இல்லை' (C.G.).

*[U.barakat> த. பர்கத்து]*

**பர்காணா** *parkāṇā,* பெ.(n.) மாவட்டப் பகுதி; sub-division of a district (C.G.).

*[U.parganā> த. பர்காணா]*

**பர்காவணி** *parkāvaṇi,* பெ.(n.) காசாய்வு; shrroffing, assaying money.

*[U.parkhaonī> த. பர்காவணி]*

**பர்ச்சனியன்** *parccaṉiyaṉ,* பெ.(n.) விண்ணுலக தலைவன் (இந்திரன்); Indra. (திவ்.திருப்பா.4,வ்யா.). 2. பன்னிரு இனத்தி லொருவர்; a deity representing the Sun, one of tuvātacātittar(q.v.).

*[Skt.parjanya> த. பர்ச்சனியன்]*

**பர்ணசாலை** *parṇa-šālai,* பெ.(n.) 1. இலை வேய்ந்த குடில்; leafy hut, hermitage. 2. முனிவர் குடில்; abode or hermits.

*[Skt.parṇa> த. பர்ண]*

**பர்ணம்** *parṇam,* பெ.(n.) இலை; leaf.

*[Skt.parṇa> த. பர்ணம்]*

**பர்த்தா** *parttā,* பெ.(n.) கணவன்; husband.

*[Skt.bhartā> த. பர்த்தா]*

**பர்த்தி** *partti,* பெ.(n.) 1. படி (பிரதி); substitute; return. 2. பணக்குறை நிரப்புகை; reimbursement. 'எடுத்த பணத்துக்குப் பர்த்தி செய்ய வேண்டும்' (C.G.).

*[U.bharti> த. பர்த்தி]*

**பர்த்துருதத்தம்** *partturu-tattam,* பெ.(n.) 1. மனைவிக்குச் சொந்தமாகக் கணவனாற் கொடுக்கப்பட்ட பரிசப் (சீதனப்) பொருள் (W.G.) property bequeathed to a woman by her husband which becomes her separate property, a variety of strī-dhana.

*[Skt.bhartṛ+datta> த. பர்த்துருதத்தம்]*

**பர்தா** *partā,* பெ.(n.) பிற ஆடவர் தம்மை பார்க்காத வகையில் இசுலாமியப் பெண்கள் தங்கள் உடலையும் முகத்தையும் மறைத்துக் கொள்ள அணியும் மேல் அங்கி; purdah.

**த.வ. மேலங்கி**

*[U.bartar> த. பர்தா]*

**பர்ப்பட்டீரசம்** *parppaṭṭirašam,* பெ.(n.) இதளியம், கெந்தி முதலியவைகளை மந்தாக்கினியில் வேகவைத்து, சாணி மீது வாழையிலையை மூடி சாணியிட்டு ஆறிய பின் எடுத்த இரசம் அல்லது கெந்தி, இது ஆயுள் வேத மருந்து (சா.அக.); an Ayurvedic preparation of containing mercury, sulphur etc., in which the said drugs are heated in moderate heat and then thrown on a plantain leaf spread for the purpose over the surface of cowdung then it is covered with another plantain leaf and preserved till the heat sulsides.

**பர்ப்பயூன்** *parppayūṉ,* பெ.(n.) கொத்துக் கொத்தாய் இலைகளுடன் முட்களும் நிறைந்த ஒரு வகைச் செடியில் சுரக்கக்கூடியதும்; உறைவதும் சாம்பல் நிறத்தோடு விறுவிறுக்கும் காரமுள்ளதும் பொதுவாக, திருகுகள்ளிப் பாலுக்கு மாற்றாகப் பயன்படுத்தக்கூடியது மான பால். (சா.அக.); milk extracted from a thorny shrub filled with bunches of leaves.

It is grey in colour title acrid to taste and pungent. It is generally substituted for milk of fursted spurge.

**பர்பி** *parpi,* பெ.(n.) கோதுமைக் குறுணை, (சருக்கரை) தேங்காய் முதலியன சேர்த்துச் செய்யப்படும் பணியார வகை (உ.வ.); a kind of sweet prepared with wheat-flour, sugar,coconut, etc.,

த.வ. இனிப்பம்

*[U.bar-fi> த. பர்பி]*

**பர்லாங்கு** *parlāṅku,* பெ.(n.) 220 படைச்சால் நீட்டலளவை; 220 yards, furlong.

த.வ.படைச்சால்

*[E.Furlong> த. பர்லாங்கு]*

**பர்வதம்** *parvatam,* பெ.(n.) மலை; mountain.

*[Skt.parvata> த. பர்வதம்]*

**பர்வானா** *parvāṉā,* பெ.(n.) 1. ஆணையிடல்; order, written command. 2. இலவயம் (இனாம்); grant.

*[U.farmānā> த. பர்வானா]*

**பரக்கு** *parakku,* பெ.(n.) 1. ஆய்கை; examination. 2. காசாய்கை; assaying of coins.

*[U.parkhāī> த. பரக்கு]*

**பரகாயசரிதர்** *para-kāya-caritar,* பெ.(n.) கூடுவிட்டுக் கூடு பாயும் வல்லமையுள்ளோர் (பரகாயப் பிரவேசம் செய்பவர்); those who are adept in parakāya-p-piravēcam. 'தகவுடைய பாண்டவரும்... பரகாய சரிதர் போல' (பாரத.நிரைமீட்சி.141).

*[Skt.parakāya+caritar> த. பரகாயசரிதர்]*

**பரகாயப்பிரவேசம்** *para-kāya-p-piravēšam,* பெ.(n.) உடலை விட்டு வேறு உடல் புகும் வித்தை கற்றவர்; art of leaving one's own body and entering another body at pleasure, metempsychosis.

*[Skt.parakāya+pravēša> த. பரகாயப் பிரவேசம்]*

**பரகிதம்** *parakitam,* பெ.(n.) 1. பிறர்க்கு நன்மையானது; that which is good for others. 2. பண்டைக் கணியவகை; (Astrol.) a kind of calculation in the ancient Hindu astronomy.

*[Skt.para-hita> த. பரகிதம்]*

**பரகிதமூலச்சா** *parakita-mūla-c-cā,* பெ.(n.) கணிதவாய்பாடு வகை (வின்.); (Astrol.) table of sines in the parakitam mode of astronomical calculation.

*[Skt.para-hita+mūla-c-cā> த. பரகிதமூலச்சா]*

**பரகேசரி** *para-kēšari,* பெ.(n.) 1. பகைவர்க்கு அரிமா போன்றவன்; one who is a lion to his enemies. 2. சோழரிற் சிலர்க்கு வழங்கிய பட்டப் பெயர்; title of certain cōḷa kings. 'மதுரை கொண்ட கோப்பர கேசரி வன்மர்க்கு' (S.I.I.V,214).

*[Skt.para-kēsarin> த. பரகேசரி]*

**பரகேசரிக்கல்** *para-kēšari-k-kal,* பெ.(n.) பொன் நிறுத்தற்குச் சோழர் காலத்தில் பயன்படுத்தப்பட்ட எடைக்கல் வகை. (S.I.I.V.85); a kind of weight used in the days of cōḷa kings for weighing gold.

*[Skt. para-kēsarin > த. பரகேசரி= பகைவர்க்கு அரிமாபோன்றவன்]*

**பரசமயகோளரி** *para-šamaya-kōḷari,* பெ.(n.) திருஞானசம்பந்தருக்குரிய ஒரு பட்டப்பெயர் (புறச்சமயிகளுக்குச் சிங்கம் போன்றவர்); a title of Tiruñāṉa-šampandar, meaning a lion to heretice. 'பரசமய கோளரிக்கு நிகரா' (பதினொ.ஆளுடை.திருவந்.54).

*[Skt. para-samaya+kōḷari> த. பரசமய கோளரி]*

**பரசுபரம்** *parašuparam,* பெ.(n.) (வி.அ.) adv. ஒருவர்க்கொருவர் (அல்லது) ஒன்றுக் கொன்று; mutually, reciprocally.

*[Skt.paras-param> த. பரசுபரம்]*

**பரதநாட்டியம்** *parata-nāṭṭiyam,* பெ.(n.) தென்னகப் பழந்தமிழர் நடனம்; dancing and acting according to ancient Tamil works.

த.வ. அவிநயம்

*[Skt. bharata+nāṭṭiyam> த. பரதநாட்டியம்]*

**பரதம்**[1] *paradam,* பெ.(n.) கடல் சூழ்ந்த தென்னிந்தியப் பகுதி; Southern India surrounded by sea.

*[த. பரவை > பரதம் > Skt. Bharata> த. பரதம்]*

**பரதம்**[2] *paradam,* பெ.(n.) 1. கூத்து; the art of dancing and acting. 'பாவமொடராகந் தாளமிம் மூன்றும் பகர்வதாற் பரத மென்றுரைப்பர். (பரத.பாவ.14). 2. ஒரு நாடகத்தமிழ் நூல் (சிலப்.உரைப்பா.); a treatise on dancing and acting. 3. பரதகண்டம் பார்க்க; see paratakaṇḍam. 'பரதத் தோங்கிய கோடாச் செங்கோற் சோழர்தங் குலக்கொடி' (மணிமே.பதி.22).

*[த. பரவை > பரதம் > Skt. bharata> த. பரதம்]*

**பரதன்** *paradaṉ,* பெ.(n.) 1. சகுந்தலைக்கும் துசியந்தனுக்கும் பிறந்தவனும், பரதகண்டம் என்று இந்திய நாட்டுக்குப் பெயர் வழங்கு தற்குக் காரணமானவனெனக் கூறப்படும் ஓர் அரசன்; a sovereign, son of Duṣyanta and Sakuntalā, after whom Indiais called Bharata-khaṇḍa. 2. இராமன் தம்பியருள் ஒருவனான கைகேயி மகன்; a younger brother of Rama and son of Kaikeyi.

*[Skt. Bharata> த. பரதன்]*

**பரதாரம்** *para-tāram,* பெ.(n.) பிறன் மனைவி; another's wife.

*[Skt. para-dāra> த. பரதாரம்]*

**பரதேசி** *paratēsi,* பெ.(n.) 1. அயல் நாட்டான்; foreigner, stranger. (சிலப்.5,11,உரை). 2. அயல்நாடு செல்வோன்; (வின்.); sojourner, pilgrim, traveller. 3. ஆண்டி; beggar, religious mendicant. 4. கதியற்றவன்; miserable, destitute person. 'பரதேசி காவலர்' (திருவிளை.அங்கம்.27).

த.வ. இரவலன், நாடோடி

*[Skt. para-dēśin> த. பரதேசி]*

**பரந்தபன்** *paran-tapaṉ,* பெ.(n.) பகைவரை வருத்துவோன்; he who distresses his enemy.

*[Skt. paran-tapa> த. பரந்தபன்]*

**பரந்தாமம்** *parantāmam,* பெ.(n.) மேலுலகம்; heaven, as resplendent 'பரந்தாம மென்னுந் திவந்தரும்' (திவ்.இராமாநுச.94).

*[Skt. paran-dhāman> த. பரந்தாமன்]*

**பரந்தாமன்** *parantāmaṉ,* பெ.(n.) திருமால்; Viṣṇu, as Lord heaven.

*[Skt. paran-dhāman> த. பரந்தாமன்]*

**பரப்பைபதம்** *parappai-patam,* பெ.(n.) வடமொழிச் செய்வினைச் சொற்களுள் சிலவற்றின் ஈறுகள்; terminations of certain verbs in active voice. 'பன்னிய போதறி லாதேச மென்னும் பரப்பைபதம்' (பி.வி.36).

*[Skt. parasmaipada> த. பரப்பைபதம்]*

**பரம்**[1] *param,* பெ.(n.) 1. சுமை (பிங்.); burden, weight, heaviness. 'மிசைப்பரந் தோண்டாது' (புறநா.30). 2. உடல்; body. 'இப்பரந் துடைத்தவர்' (கம்பரா.கடிமண.69). 3. கவசம் (சூடா.); armour for the body. 4. கேடக வகை; a kind off shield. 'புளகத்தோற்பரம்' (சீவக.2218). 5. குதிரைக் கலனை (பிங்.); saddle of a horse.

*[Skt. bhara> த. பரம்]*

**பரம்**[2] *param,* பெ.(n.) பரதேசி; mendrcant. 'நீ கிருத்கிகை தோறும் பத்துப் பரங்கட்குத் தவறாது அன்னம் போட்டுவா" (மதி.க.i,180).

*[Skt. para> த. பரம்]*

**பரம்பரம்** *paramparam,* பெ.(n.) 1. வழிவழியாக வருகின்ற மரபுரிமை (வின்.); hereditary

succession. 2. குலமுறை (வமிசம்); lineage, race. 3. பரம்பரை பார்க்க; see paramparai. 4. முத்தி; final bliss. `பத்தி செய் யடியரைப் பரம்பரத்துய்ப்பவன்' (திருவாச.2,119). 5. பரம்பரன் பார்க்க; see param-paraṉ, `நீயாதி பரம்பரமும்' (கம்பரா.விராதன்.4). 6. ஒன்றுக்கொன்று மேலானது; that which goes higher and higher. 'சென்று சென்று பரம்பரமாய்' (திவ்.திருவாய்.8,8,5).

*[Skt. paramparā> த. பரம்பரம்]*

**பரம்பரை** *paramparai,* பெ.(n.) 1. இடையறாத் தொடர்பு; uninterrupted series or succession, as of waves. 2. தலைமுறைத் தொடர்பு; hereditary sucession proceeding from father to son, from guru to disciple, from generation to generation. 'பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார்'. (பெரியபு. தடுத்தாட்.181).

*[Skt. paramparā> த. பரம்பரை]*

**பரமகாரணன்** *parama-kāraṇaṉ,* பெ.(n.) கடவுள்; God, as the first cause. (ஆதிகாரணமானவன்). 'பரமகாரணன்றிரு வருள தனால்' (திருக்கோ.1, அகவல்).

*[Skt. parama+kāraṇaṉ> த. பரமகாரணன்]*

**பரமகுரு** *parama-kuru,* பெ.(n.) 1. சிறந்த ஆசான்; great guru. 'பரமகுருவாய்ப் போதிக்கு முக்கணிறை' (தாயு.சுகவாரி.9). 2. பரமாசாரியன்,1. பார்க்க; see paramāšāriyaṉ.

*[Skt. parama-kuru> த. பரமகுரு]*

**பரதசண்டாளன்** *parama-šaṇḍāḷaṉ,* பெ.(n.) கொடும்பாவி; highly wicked person.

*[Skt. parama-šaṇṭāḷaṉ> த. பரமசண்டாளன்]*

**பரமசிவன்** *parama-šivaṉ,* பெ.(n.) சிவபிரான்; šiva.

*[Skt. parama+šivaṉ> த. பரமசிவன்]*

**பரமநாழிகை** *parama-nāḷigai,* பெ.(n.) பிறை நிலை (திதி) கிழமை (வாரம்), ஒகம், கரணம், நாண்மீன் ஆகியவற்றின் முழு நாழிகை; full duration, as of a titi, vāram, yōkam, karaṇamornaṭcattiram.

*[Skt. parama-nāḷigai> த. பரமநாழிகை]*

**பரமபத்தி** *parama-patti,* பெ.(n.) பரம் பொருளை விட்டுப் பிரிதற்கு ஆற்றாத பத்தியின் முதிர்ந்த நிலை; the third and highest stage of devotion in which a devotee does not brook the slightest separation from the supreme being. 'நனியாம் பரமபத்தியானைந்து' (திவ். இராமாநுச.100).

*[Skt. parama+bhakti> த. பரமபத்தி]*

**பரமபதவாசல்** *parama-pata-vāšal,* பெ.(n.) விண்ணுலக வாயில்; a gateway in a Viṣṇu temple.

*[Skt. paramapada-vāšal> த. பரமபதவாசல்]*

**பரமபிதா** *parama-pitā,* பெ.(n.) கடவுள் (Chr.); god, as the father of all beings.

*[Skt. parama-pitā> த. பரமபிதா]*

**பரமரகசியம்** *parama-rakašiyam,* பெ.(n.) மிகை மறைபொருள்; profound secret, great mystery. 2. மறைவான தத்துவக் கொள்கை; secret doctrine.

*[Skt. parama+rakašiyam> த. பரமரகசியம்]*

**பரமலோபி** *parama-lōpi,* பெ.(n.) இவறன், ஈயாதவன்; great niggard. 'பரமலோபி கண்டாய், (திருவேங்.சத.45).

த.வ. ஈயாமாரி

*[Skt. parama+lōpi> த. பரமலோபி]*

**பரமஅம்சன்** *parama-amšaṉ,* பெ.(n.) துறவிகள் நால்வகையினரில் கடவுள் நிலை யிலுள்ளவன்; ascetic of the highest order, one of four saṉṉiyāci.

த.வ. இறைமையன்

*[Skt. parama-hansaṉ> த. பரமஅம்சன்]*

**பரமேசுவரன்** *paramēšuvaran,* பெ.(n.) 1. கடவுள்; God. 2. சிவபிரான்; Siva.

*[Skt.parama+išvara> த. பரமேசுவரன்]*

**பரமேசுவரி** *paramēšuvari,* பெ.(n.) 1. மலைமகள்; Pārvatī (S.I.I.ii,170,24).

**பரர்** *parar,* பெ.(n.) 1. பகைஞர் (சூடா.); foes, 2. பிறர்; others, strangers.

*[Skt.para> த. பரர்]*

**பரராசசிங்கம்** *para-rāca-šiṅgam,* பெ.(n.) 1. பகையரசர்க்கு அரிமா (சிங்கம்) போல்வான்; one who is a lion to his foes. 2. அரசர் சிலருடைய பட்டப்பெயர்; title of certain kings. 'பரராசசிங்கம் பொற்பந்த மின்றளித்தபோது' (தமிழ்நா.243).

*[Skt.para+rājan+šiṅgam> த. பரராசசிங்கம்]*

**பரராசசேகரன்** *para-rāsa-šēgaran,* பெ.(n.) தமிழை ஆதரித்த யாழ்ப்பாணத்தரசருள் ஒருவன்; a Jaffna king, patron of Tamil literature. 'பரராசசேகர மன்னனின்ப மனங்கொள' (இரகு.பாயி.9).

**பரவசம்** *paravašam,* பெ.(n.) 1. பிறனுக்கு வயப்படல்; subjection to another. 2. மிகுகளிப்பு; ecstacy, transport of joy, rapture. 3. தன்வசமிழக்கை; loss of the senses, unconsciousness. 'மயலெலா மொழிந்து பரவசமாங் காலம்' (சிவப்.பிரபந் .சிவஞா.கலம்.26). 4. நெறி (வின்.); oath. 5. பராக்கு; inattention. heedlessness. 'பரவசத்தை விட்டு... கேண்மினோ' (திருவாலவா.8,1).

*[Skt.para+vaša > த. பரவசம்]*

**பரவசமாதல்** *paravasamādal,* பெ.(n.) கடந்த நிலையடைதல், அதாவது ஆறாம் துன்ப நிலையை உயிர் கடந்து செல்லுதல்; (in Vedantha philosophy) a state in which the soul rapt in vain seemed to have passed out of the body.

**பரவா** *paravā,* பெ.(n.) 1. கவலை; care, concern. 2. குற்றம்; harm. (பரவா இல்லை).

**த.வ. பரவாயில்லை, தாழ்வில்லை, தேவலாம்**

*[U.parwā> த. பரவா]*

**பராக்** *parāk,* இ.சொ.(அ.வ.); அரசர் போன்றோர் வருவதை அறிவித்துக் கவனமாக இருக்கும் படி வேண்டும் சொல்; a term used in the sense of 'attention' when announcing the arrival of king etc. 'ராஜாதிராஜ வீரமார்த்தாண்டர் வருகிறார்' பராக், பராக்' (நாடக.).

*[Skt.parāk> த. பராக்]*

**பராக்கிரம பாண்டியன்** *parākkirama pāṇḍiyan,* பெ.(n.) வடமொழிச் செல்வாக்கால் பாண்டியவரசர் சிலர் கொண்ட பெயர் (Insc.); name of certain later Pāṇḍiya kings.

*[Skt.parākrama+pāṇḍiyan > த. பராக்கிரம பாண்டியன்]*

**பராக்கிரமம்** *parākkiramam,* பெ.(n.) 1. வீரம்; valour, bravery, prowess, martial courage. 2. வல்லமை; vigour, strength, power, might, force, as of a wild beast.

*[Skt.parā-krama > த. பராக்கிரமம்]*

**பராக்கிரமி-த்தல்** *parākkirami-,* 4 செ.கு.வி. (1. v.i.) வீரச்செயல் காட்டுதல்; to display bravery. 'பல்லாயிர வண்டமும் பயமெய்தப் பராக்கிர மித்து' (அருட்பா,ii,திருவருள்.8).

*[Skt.parākrama> த. பராக்கிரமித்தில்]*

**பராகம்** *parāgam,* பெ.(n.) பன்னிரண்டு நாள் இரவும் பகலும் உண்ணாதிருக்கும் நோன்பு வகை. (பிரபோத.39,17.); a religious fast for twelve days and nights.

*[Skt.parāka > த. பராகம்]*

**பராங்குசன்** *parāṅkušan,* பெ.(n.) 1. எதிரிகளாகிய யானைகளை அடக்கும் அங்குசம் போன்றவன் (இறை.கள.10,77.); one

who is like an elephant's goad to his enemies. 2. நம்மாழ்வார்; Nammāḷvār. 'வகுளத் தொங்கற் பராங்குசன்' (அஷ்டப். அழகரந்.காப்பு).

*[Skt.parāṅ-kuśa> த. பராங்குசன்]*

**பராசத்தி** *parā-śatti,* பெ.(n.) 1. மெய்யுணர்வு வடிவான உமையம்மை (ஞானமயமான சிவசத்தி) (சி.சி.1,61,சிவஞா.); (śaiva.) Siva's supreme energy which is all intelligence. 2. பஞ்சசத்திகளுள் இரத்தை, சுக்கிலை, அசிதை, கிருட்ணை என்ற நாற்பிரிவுள்ள சிவசத்தி (சைவச.பொது.74, உரை.); (śaiva.) Siva's supreme energy which manifests itself in four forms, viz., irattai, cakkilai, acitai, kiraṣṇai, one of pañcacatti.

*[Skt.parā+śatti > த. பராசத்தி]*

**பராசரபட்டர்** *parāśara-paṭṭar,* பெ.(n.) இராமானுசாசாரியர்க்குப் பின் வைணவாசாரியத்தலைமை வகித்த பெரியார் (குருபரம்); a Vaiṣṇava Ācārya, successor of Rāmāṉuja.

*[Skt.parā-śara-bhaṭṭa > த. பராசரட்டர்]*

**பராசரன்** *parāśaraṉ,* பெ.(n.) வியாசர்க்குத் தந்தையும் பராசரசுமிருதியாசிரியருமான முனிவர்; a Ṛṣi, author of a smṛti and father of Vyāsa. 'பராசரன் குலமாயினும்' (பாரத.சஞ்சயன்றூ.9).

*[Skt.parāśara > த. பராசரன்]*

**பராதீனம் பண்ணு-தல்** *parātīṉam-paṇṇu-,* 11 செ.கு.வி. (v.tr.) தன் சொத்தைப் பிறர் வயப்படுத்துதல்; to alienate one's property.

*[Skt.parādhīna > த. பரர்தீனம்-பண்ணுதல்]*

**பராபர்** *parāpar,* பெ.எ. (adj.) சரியான; correct, exact, straight forward, full. 'அவன் பராபர் ஆள்" (C.G.).

த.வ. பொருத்தமான

*[U.barābar > த. பராபர்]*

**பராபரம்** *parāparam,* பெ.(n.) பராபரன் (தாயு.பராபரக்.1.) பார்க்க; see parāparaṉ.

**பராபவம்** *parāpavam,* பெ.(n.) 1. தோல்வி; discomfiture, defeat 'பராபவத் தீச்சுட' (குமர.பிர.மீனாட்.பிள்ளைத்.5). 2. ஒவ்வாத செயல்; disrespect.

*[Skt.parā-bhava > த. பராபவம்]*

**பராமரி-த்தல்** *parāmari-,* 14 செ.கு.வி. (v.i.) கலந்தாய்தல் (ஆலோசித்தல்); to inquire, examine, investigate, consider. 'சிந்தை பராமரியாத் தென்றிருவாரூர்புக்கு' (தேவா. 744,1).

*[Skt.parā-mṛś > த. பராமரி-த்தல்]*

**பராமுகம்** *parā-mugam,* பெ.(n.) புறக்கணிப்பு (அலட்சியம்); neglect, disregard, as purposely turning the face away. 'பராமுகந் தவிர்தி' (கந்தபு.வள்ளியம்.72).

*[Skt.parāṅ-mukha > த. பராமுகம்]*

**பரார்த்தம்¹** *parārttam,* பெ.(n.) பிறர் பொருட்டானது; that which is intended for the benefit of others. 'தன்னைப் பரார்த்தமாக்கி' (திவ்.திருக்குறுந்.3,வ்யா. பக்.15).

*[Skt.parārtha > த. பரார்த்தம்]*

**பரார்த்தம்²** *parārttam,* பெ.(n.) 1. பேரெண் (பிங்.); a large number = 100,000 billion. 2. பிரமகற்பத்திற் பாதி (காஞ்சிப்பு.வீராட்.2); the number of human days corresponding to 50 years of Brahma's life.

*[Skt.parārdha (வின்.) > த. பரார்த்தம்]*

**பரிக்கிரயம்** *parikkirayam,* பெ.(n.) விற்பனை; sale. 'ஒற்றிப் பரிக்கிரயத்துக்கு உரித்தாவதாகக் கொடுத்தோம்' (S.I.I.i,105).

*[Skt.parikraya > த. பரிக்கிரயம்]*

**பரிகரி¹-த்தல்** *parikari-,* 4 செ.கு.வி. (11 v.i.) நீக்குதல்; to do away with, remove, expel,

dispel. 'தலைவிக்கு வந்த வருத்தத்தைப் பரிகரித்தல் தனக்குக் கடனாதலின்' (தொல். பொருள்.239,உரை.). 2. நோயைக் குண மாக்குதல்; to remedy, redress. 3. முன் கூறியதை மறுத்தல்; to avoid, retract, recant, amend or correct one's erroneous statement, revoke. 4. நீக்கம் செய்தல்; to expiate, atone for. 5. அடக்குதல்; to control, suppress. 'சித்தந்தன்னைப் பரிகரியாது விட்டால்' (ஞானவா.வைராக்.129). 6. கஞ்சத் தனம் செய்தல்; to hold back with a miserly spirit, stint. 'வறியவர்க்குப் பரிகரியாராய்க் கொடுப்பின்' (பு.வெ.10,1). 7. கடத்தல்; to pass beyond, cross over

*[Skt.parihṛ> த. பரிகரி-த்தல்]*

**பரிகரி²-த்தல்** *parikari-,* 4 செ.கு.வி. (v.i.) 1. போற்றுதல் (பு.வெ.8,20, உரை.); to safeguard, take care of. 2. பத்திய முதலியன உதவி நோயாளியைக் கவனித்தல்; to nurse, tend, as a sick person, a lying - in - woman.

*[Skt.parikṛ> த. பரிகரி-த்தல்]*

**பரிகாசம்** *parikāšam,* பெ.(n.) 1. பகடி; jest, joke, burlesque. 2. இகழ்ச்சி; mockery, raillery, jeer, derision, ridicule. 3. விளையாட்டு; sport, play.

*[Skt.pari-hāsa> த. பரிகாசம்]*

**பரிகார நூல்** *parigāra-nūl,* பெ.(n.) மருத்துவ நூல்; a book on treatment of diseases (சா.அக.).

**பரிகாரம்¹** *parikāram,* பெ.(n.) 1. நீக்குகை; entire destraction, abolition, cancelling removal. 2. கழுவாய்; expiation, atonement. 'மனு முதலான நூல் கற்றுச் செய் பரிகாரங்களின்றியே' (சேதுபு.தனுக்.66). 3. மாற்று வழிவகை; remedy, antidote. 'என்னாற்றாமைக்குப் பரிகாரமாவ தியாதுஞ் சிந்தியாது' (திருக்கோ.189,உரை). 4. மருத் துவம்; art of healing, curing. 5. பராமரிப்பு (j), nursing, rending. 6. கேடு நீங்கக் கூறும் வாழ்த்து (சீவக.264,உரை.); benediction uttered with the intention of averting evil. 7. வழுவமைதி; deviations from grammatical rules, sanctioned by usage. 'இன்னும் இப்பரிகாரத் தாலே கோழியை வாரண மென்றலும் வெருகினை விடை யென்றலும் போல்வன பலவுங்கொள்க' (தொல்.பொருள்.624,உரை.). 8. விலக்கு; exemption, immunity (S.I.I.ii,98,51.).

*[Skt.pari-hāra> த. பரிகாரம்]*

**பரிகாரம்²** *parikāram,* பெ.(n.) 1. பொருள்; store, provisions. 'நடைப்பரிகார முட்டாது கொடுத்த' (சிறுபாண்.104.). 2. கப்பம் (Insc.); tribute.

*[Skt.pari-kāra> த. பரிகாரம்²]*

**பரிகாரி** *parikāri,* பெ.(n.) 1. மருத்துவன்; doctor, medical practitioner. 'சோலை மலைப் பரிகாரி வந்தால்' (தனிப்பா.i,253,1). 2. முடிமழிப்பாளன் (கொ.வ.); barber, as being also a physician.

*[Skt.pari-hārin> த. பரிகாரி]*

**பரிச்சேதம்¹** *pariccēdam,* பெ.(n.) 1. துண்டிப்பு; cutting off, dissection, division. 2. எல்லை; limit, boundary. 3. அளவுக்குட்படுகை; limitation. 'காலபரிச்சேதம், தேசபரிச்சேதம், வசுத்துபரிச்சேதம்'. 4. பிரிவு (அத்தியாயம்) (பிங்.); section, chapter. 5. பகுத்தறிவு; discrimination, positive ascertainment. 6. முழுமை (வின்.); entireness, absoluteness. 'பரிச்சேதம் அப்படிச் சொல்லவில்லை'.

*[Skt.pari-c-chēda> த. பரிச்சேதம்]*

**பரிச்சேதம்²** *pariccētam,* பெ.(n.) சிறு பகுதி (poud); small portion, part.

*[Skt.paricchēda> த. பரிச்சேதம்]*

**பரிசம்** *parišam,* பெ.(n.) 1. தொடு உணர்ச்சி; sense of touch. 2. உணர்ச்சி (சா.அக.); feeling.

**பரிசனம்** *parišaṉam,* பெ.(n.) 1. சேனைகள் (பரிவாரம்); train, retinue. 'சேவித் தணையும்

பரிசனங்கள்' (பெரியபு.சேரமான்.84). 2. ஏவல் செய்வோர் (திவா.); dependants, servants. 'பரிசனர் கணங்கள் யாரும்' (கந்தபு. திருக்கல்.80). 3. சுற்றம் (சூடா.); relationship, affinity.

*[Skt.pari-jana> த. பரிசனம்]*

**பரிசாரகன்** *pariśāragaṉ,* பெ.(n.) பணியாள்; servant. 2. சமையற்காரன்; cook.

*[Skt.paricāraka> த. பரிசாரகன்]*

**பரிசீலனை** *pariśīlaṉai,* பெ.(n.) ஆய்தல் (சோதனை); examination, investigation, enquiry.

த.வ. நோட்டம்

*[Skt.pari-śīlanā> த. பரிசீலனை]*

**பரிசுத்தம்** *pariśuttam,* பெ.(n.) 1. தூய்மை; holiness, sanctity, purity, immaculateness. 2. துப்புரவு; cleanliness, as of dress, clearness, as of water.

*[Skt.pari-śuddha> த. பரிசுத்தம்]*

**பரிசோதி–த்தல்** *pariśōti-,* 4 செ.கு.வி. (v.i.) நன்கு ஆராய்தல்; to examine carefully, test thoroughly.

த.வ. நிறை நோட்டம் செய்தல்

*[Skt.pari-śōdhi> த. பரிசோதி–த்தல்]*

**பரிணாமம்** *pariṇāmam,* பெ.(n.) ஒன்று பிறிதொன்றாக மாறுகை; transformation, evolution, modification, as the turning of milk into curd. 'அவன் பரிணாமத்தோடு சிவனும்' (ஞானா.11,30).

த.வ.படிமுறை வளர்ச்சி

*[Skt.pari-ṇāma> த. பரிணாமம்]*

**பரித்தியாகம்** *parittiyāgam,* பெ.(n.) முற்றும் துறக்கை; complete renunciation.

*[Skt.parityāga> த. பரித்தியாகம்]*

**பரிதாபம்** *paritāpam,* பெ.(n.) 1. துயரம்; pain, anguish, sorrow. 2. கழிவிரக்கம்; pity, sympathy, solicitude. 3. தான் செய்த குற்றத்துக்கு இரங்குகை; repentance. 4. பெருந்தாகம்; burning thirst. 'நடந் திளைத்து முன்னையினும் பரிதாபமுதிர்ந்து, (பாரத. வசந்த.1).

*[Skt.pari-tāpa> த. பரிதாபம்]*

**பரிநிர்வாணம்**[1] *parinirvāṇam,* பெ.(n.) ஐந்து வகை நற்பேறுகளுள் ஒன்று (சீவக.3116.உரை.); (Jaina.) absolute extinction or annihilation of individual extinction one of pañcakalyāṇam.

*[Skt.pari-nirvāṇa> த. பரிநிர்வாணம்]*

**பரிபக்குவம்** *paripakkuvam,* பெ.(n.) 1. செம்பாகம், அறிவு முதிர்ச்சி; maturity of wisdom. 2. தகுதி; fitness.

*[Skt.pari-pakva> த. பரிபக்குவம்]*

**பரிபவம்** *paripavam,* பெ.(n.) 1. மானக்கேடு, அவமானம்; contempt, scorn. 'பாலனென்று பரிபவஞ் செய்யேல்' (திவ்.பெரியாழ்.1,4,7). 2. எளிமை (சூடா.); degradation.

*[Skt.pari-bhava> த. பரிபவம்]*

**பரிபாசை** *paripāśai,* பெ.(n.) 1. மறைவான சொல்; code word. 2. நூற்சொல்; scientific word. 3. தொழிற்சொல் (சா.அக.); technical or code word Nomenclature. It is used in medical literature to avoid long names.

**பரிபாலனம்** *paripālaṉam,* பெ.(n.) பாதுகாவல்; protection, preservation; fostering. 'வரங்கொடுத்துப் பரிபாலனங்கள் செய்தாய்' (சிவரக.கணபதியு.4).

*[Skt.pari-pālana> த. பரிபாலனம்]*

**பரிபாலி–த்தல்** *paripāli-,* 4 செ.கு.வி. (v.i.) 1. பாதுகாத்தல்; to protect maintain in prosperity. 2. அருள்புரிதல் (கடாட்சித்தல்) (வின்.); to show benign compassion.

*[Skt.pari-pāl> த. பரிபாலி]*

**பரிமளம்** *parimaḷam,* பெ.(n.) 1. நறுமணம்; fragrance, perfume. 'பரிமளங் கமழ்வன பாராய்' (கம்பரா.சித்தி.25).

*[Skt.pari-mala> த. பரிமளம்]*

**பரிமாணம்** *parimāṇam,* பெ.(n.) அளவு (சூடா.); size, measure, dimension.

*[Skt.pari-māṇa> த. பரிமாணம்]*

**பரியந்தம்** *pariyandam,* பெ.(n.) (அ.வ.) (முடிவான) எல்லை; (end) limit. 'ஆயுள் வரையில் இந்தக் (பரியந்தம்) கொடுமை தீராதோ!' (உ.வ.).

**பரியாசம்** *pariyāšam,* பெ.(n.) பரிகாசம் பார்க்க; see parikāšam. 'யார் சொலும் பரியாசமே' (குமர.பிர.மீனாட்.குறம்.8).

*[Skt.pari-hāsa> த. பரியாசம்]*

**பரியாயப் பெயர்** *pariyāya-p-peyar,* பெ.(n.) ஒரு பொருட் பல் பெயர் (சூடா.); synonymous noun. 'ஆணையென்னும் பரியாயப் பெயருடைய' (சி.போ.பா.2,பக்.54).

*[பரியாயம்+பெயர்]*

**பரியாயம்** *pariyāyam,* பெ.(n.) 1. நேர் சொற்பொருள்; synonym. 2. பன்னோக்கு (நானாவிதம்) (தி.வா.); diverse methods or ways. 3. பொருளை வெளிப்படையாய்க் கூறாது குறிப்பாற் கூறும் அணி (தண்டி.71); (Rhet.) a figure of speech in which one's idea is not expressed in words, but is cleverly suggested. 4. படிமுறைத் திரிவு (பரிணாமம்); transformation, change. 'பால் தயிர் முதலாயின புற்கலத்தினது பரியாய மென்பேன்' (நீல.). 5. தடவை; turn, times. பலபரியாயம் வந்தேன்.

*[Skt.paryāya> த. பரியாயம்]*

**பரிவத்தனம்** *parivattaṉam,* பெ.(n.) 1. சுற்றுகை; circumambulation, going around. 'வலமிடம் பரிவத்தனம் செய்து' (திருவாலவா. 28,34). 2. பரிவருத்தனை, 1 பார்க்க; see parivaruttanai.

*[Skt.pari-variana> த. பரிவத்தனம்]*

**பரிட்சி-த்தல்** *paritši,* 4 செ.கு.வி. (v.i.) 1. நோட்டம் செய்தல், சோதித்தல்; to examine, to try; to experiment. 2. ஆராய்தல்; to search, investigate.

*[Skt.pariks> த. பரிட்சி]*

**பருசை** *paruṣai,* பெ.(n.) ஊர் அவை; assembly of villagers. 'பெரும் பற்றப் புலியூர் மூல பருஷையாநில்' (S.I.I.iii,214).

*[Skt.pari-ṣad> த. பருஷை]*

**பருவதம்** *paruvadam,* பெ.(n.) 1. மலை; hill, mountain. 'பாவபருவதங்க ளெல்லாம்' (சிவரக.அபுத்திபூருவ.4). 2. மீன் வகை (சங்.அக.); a kind of fish.

*[Skt.parvata> த. பருவதம்]*

**பரோட்டா** *parōttā,* பெ.(n.) மைதாமாவில் செய்யப்படும் ஒரு வகை அடை வகை; unleavened bread of maize flour, thick in size and round in shape.

த.வ. சுட்டடை

**பரோபகாரம்** *parōpakāram,* பெ.(n.) பிறர்க்குச் செய்யும் உதவி; philanthropy.

*[Skt.parō-pakāra> த. பரோபகாரம்]*

**பரோல் விடுப்பு** *parōl-vituppu,* பெ.(n.) தண்டனைக் காலத்தில் நன்னடத்தை கருதி குறிப்பிட்ட காலத்துக்கு வெளியில் செல்ல வழங்கப்படும் இசைவு; parole.

**பல்டி** *palti,* பெ.(n.) தலை குப்புற எம்பிக் குதித்தல்; உடற்பயிற்சியில் ஒரு வகை; a gymnastic feat.

த.வ. கவிழ்ந்தடி

*[U.palti> த. பல்டி]*

**பல்டிஅடி-த்தல்** *palti-ati,* செ.கு.வி. (v.i.) 1. குட்டிக்கரணம் போடுதல்; somersault. 2. ஒப்புக்கொண்டதைச் செய்யாமல் பின் வாங்குதல்; make a retreat; go back on one's word. 3. தோல்வியடைதல்; fail.

'இந்தத் தடவையும் தேர்வில் பல்டி அடித்துவிட்டாயா?' (உ.வ.).

**பல்லவம்** *pallavam,* பெ.(n.) 1. தளிர்; sprout, shoot. 'பல்லவ சயனங்கள் பாராய்' (கம்பரா. சித்தி.23). 2. பல்லவதேயம் (யாழ்.அக.); பார்க்க; see pallava-tēyam.

*[Skt.pallava> த. பல்லவம்]*

**பலசாலி** *pala-šāli,* பெ.(n.) உடல்வலியுள்ளோன்; strong person.

**த.வ. மல்லன்**

*[Skt.bala-šālin> த. பலசாலி]*

**பலசித்தி** *pala-šitti,* பெ.(n.) பயனடைகை; reaching fruition; achieving success.

*[Skt.phala+šitti> த. பலசித்தி]*

**பலதேவன்**[1] *palatēvaṉ,* பெ.(n.) பலராமன் பார்க்க; see palarāmaṉ.

*[Skt.bala-dēva> த. பலதேவன்]*

**பலராமன்** *pala-rāmaṉ,* பெ.(n.) கண்ணனுக்கு மூத்தவன் (பிங்.); elder brother of Kṛṣṇa, one of tacāvatāram.

*[Skt.Bala-rāma> த. பலராமன்]*

**பலவந்தப் புணர்ச்சி** *palavanta-p-puṇarcci,* பெ.(n.) கட்டாயப்படுத்தி ஒரு பெண்ணைப் புணர்கை; rape.

*[Skt.bala-vant > த. பலவந்தம்]*

**பலவந்தம்** *palavandam,* பெ.(n.) வலக்காரம், கட்டாயப் படுத்தல்; force, violence, compulsion.

*[Skt.bala-vat> த. பலவந்தம்]*

**பலவான்** *palavāṉ,* பெ.(n.) வலிமையானவன்; (உ.வ.); strong, powerful man.

**த.வ. மல்லன், வல்லாளன்**

*[Skt.bala-vān>bala-vat> த. பலவந்தம்]*

**பலவீரம்** *palavīram,* பெ.(n.) சவ்வீரம்; a sublimated compound of mercury, sulphur, alum and sal ammonia (சா.அக.).

**பலவீனம்** *pala-v-īṉam,* பெ.(n.) 1. வலியின்மை (உ.வ.); weakness. 2. அசதிநோய் (இ.வ.); debility, neurasthenia.

**த.வ. நலிவு**

*[Skt.bala+hīna > த. பலவீனம்]*

**பலாங்** *palāṅ,* பெ.(n.) கப்பற் சதுரப்பாய்களைச் சுருட்டும்பொழுது அவற்றின் கீழ் மூலைகளைப் பறுவானுக்கு இழுக்க உதவுங் கயிறு; (M.Navi); clew-garnets.

**பலாஞ்சீப்பு** *palāñ-šippu,* பெ.(n.) கப்பலின் பலாஞ்சீப்பூம் என்ற உத்தரத்தில் விரிக்கப்படும் பாய் (M.Navi.) sail tied to the flying-jib.

*[E.flying + E.jib>த. பலாஞ்சீப்பு]*

**பலாத்காரம்** *palātkāram,* பெ.(n.) கட்டாயப் படுத்துதல் (இ.வ.); force, violence, compulsion.

**த.வ. வலக்காரம்**

*[Skt.balāt-kāra> த. பலாத்காரம்]*

**பலாபலம்** *palāpalam,* பெ.(n.) இலாபநட்டம்; profit and loss.

**த.வ. ஆகுபோகு**

*[Skt.phala+a-phala> த. பலாபலம்]*

**பலான்** *palāṉ,* பெ.(n.) அப்பேர்ப்பட்டவன் (C.G.); such a one.

*[U.falān> த. பலான்]*

**பலானது** *palāṉadu,* பெ.(n.) குறிப்பிட்டது; the particular.

**பலானவன்** *palāṉavaṉ,* பெ.(n.) இன்னான்; certain or such and such a person. 'அவன் பலானவனென்று தெரியுமா?'.

*[U.fulān> த. பலானவன்]*

**பலி[1]–த்தல்** *pali,* 4 செ.கு.வி. (v.i.) 1. நேர்தல்; to happen, 'அசனியேற்றின் வீழ்வெனப் பலித்தது பாவியேற்கென்க' (இரகு.சீதைவ. 116). 2. பயன் விளைத்தல்; to take effect, yield results, produce good or evil. 'வயலிடுந் தழையும்... பின்பலிக்குமாபோல்' (சி.சி.2,17). 3. செழித்தல்; to thrive, as a crop. 'பலிப்பறிந்து... வித்தினார்' (அரிச்.பு.நாட்டுப். 38). 4. மிகுதல்; to increase, swell. 'நீர்பலிப்ப வான்றிரை யெறிந்து' (இரகு.நாட்டுப்.38.); 5. கொடுத்தல். to give 'பூசையின் பலத்தினைப் பலிப்பாய்' (செவ்வந்திப்பு. அகத்தியச்.41).

*[Skt.phala> த. பலி–.]*

**பலி[2]** *pali,* பெ.(n.) 1. நிறைவேறல்; that which takes effect (பிங்.). 2. காய்கனிகளுள்ள மரம் (யாழ்.அக.); tree laden with fruit.

*[Skt.phalin> த. பலி]*

**பலி[3]** *pali,* பெ.(n.) 1. தீக் குண்டத்தில் (யாகத்தில்) தேவர், முன்னோர் ஆகியோர்க்கு இடும் உணவுப்பொருள்; offering given to gods, ancestors, etc., in sacrifice. 'பலிகண் மாறிய பாழ்படு பொதியில்' (புறநா.52). 2. பலியிடுவதற்குரிய விலங்குகள் முதலியன; sacrificial animal or offering. 3. காக்கை முதலிய பறவைக்கு உண்ண இடுஞ்சோறு; boiled rice thrown as an offering to crows. 'காக்கையது பலியே' (குறுந்.210). 4. பிச்சை; boiled rice given to mendicants, alms. 'பலிகொண்டுண்பவர்' (தேவா.47,5). 5. சோறு; rice (திவா.). 6. பூசைக்கு வைக்கப்படும் பூ முதலியன; offering of flowers, etc., in worship. 'மலர்சில கொண்டு... தேம்பலி செய்த வீர்நறுங் கையள்' (ஐங்குறு.259). 7. சாம்பல் (சூடா.); ashes. 8. திருநீறு (அக.நி.); sacred ashes. 9. கப்பம் (யாழ்.அக.); tribute. 10. சிற்றூர்களில் தேவதைகளுக்குப் பலியிடுவதன் பொருட்டு விடப்பெற்ற மானியம் (R.T.); inam granted for the service of making sacrifices to village deities. 11. பலி சக்கரவர்த்தி பார்க்க; see pali-šakkaravartti.

*[Skt.bali> த. பலி]*

**பலிகொடு–த்தல்** *pali-koḍu-,* செ.கு.வி. (v.i.) 1. தெய்வத்திற்குப் பலியிடுதல்; to sacrifice a victim; to present. offerings to a deity. 'வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து' (அகநா.22). 2. கொல்லுதல் (உ.வ.); to kill.

**த.வ. காவு கொடுத்தல்**

*[Skt.bali> த. பலி]*

**பலிசை** *pališai,* பெ.(n.) 1. ஆதாயம் (இலாபம்); profit. 'பலிசையாற் பண்டம் பகர்வான்' (பு.வெ.12,வென்றிப்.2). 2. வட்டி; interest. 'இப்பொன் பதினெண் கழஞ்சே மூன்று மஞ்சாடி குன்றிக்கும் பலிசையாற் சந்திராதித்தவல்... அட்டுவோமானோம்' (S.I.I.i,116).

*[Skt.phala> த. பலம்]*

**பலிதேர்–தல்** *pali-tēr-,* 3 செ.கு.வி. (v.i.) பிச்சையெடுத்தல்; to beg alms. 'வற்றலோடு கலனாப்பலி தேர்த்து' (தேவா.61,2).

**த.வ. இரத்தல்**

*[Skt.bali> த. பலி–,]*

**பலிப்பு** *palippu,* பெ.(n.) 1. சித்தி; success. 2. பயன்; fruit, result. 'செய்தவப் பலிப்பை நோக்கி' (இரகு.யாகப்.2). 3. நன்றாய் விளையுந் தன்மை; productivity. 'பெரும்பூமி பலிப் பெய்தும்' (குற்றா.தல.நூற்ப.13). 4. வினைப் பயன்; result of karma.

*[Skt.bali> த. பலிப்பு]*

**பலிபீடம்** *pali-pīṭam,* பெ.(n.) பலியிடும் இடம்; altar. 'நீண்ட பலி பீடத்தி லறுத்துவைத்த சிரத்தை' (கலிங்.98).

**த.வ. காவு முற்றம்**

*[Skt.bali> த. பலி]*

**பலிபீடிகை** *pali-pīṭikai,* பெ.(n.) பலிபீடம் பார்க்க; see pali-pīṭam. 'விலைப்பலி யுண்ணு மலர்ப்பலி பீடிகை' (சிலப்.12,43).

*[Skt. bali > த. பலி]*

**பலிவாங்கு-தல்** *pali-vāṅku-,* 9 செ.கு.வி. (v.i.) 1. தொந்தரவு செய்தல்; to tormant. 2. நீரில் அடிக்கடி மூழ்க வைத்து இறக்கச் செய்தல்; to make victims of, as by drowning frequently. 'குளம் பலி வாங்கும்'.

*[Skt. bali > த. பலி]*

**பலிவெட்டு** *pali-veṭṭu,* பெ.(n.) பூசை முதலியவற்றின் பொருட்டுக் கோயிலுக்கு விடப்பட்ட சிற்றூர்; village given to a temple to meet the expenses of worship and festivals.

*[Skt. bali > த. பலி]*

**பலே** *palē,* பெ.(n.) 'நன்று' என்ற பொருளைக் குறிக்குஞ்சொல்; a term of approbation denoting `excellent!'.

**த.வ. வல்லே, வலே**

*[U. bhalā > த. பலே]*

**பவ[1]-த்தல்** *pava-,* 2 செ.கு.வி. (v.t.) தோன்றுதல்; to appear; to be born. 'ஊழியூழி பவந் திட்ட பரமனார்' (தேவா.952,2).

*[Skt. bhava > த. பவ-,]*

**பவகாரணி** *pava-kāraṇi,* பெ.(n.) அழகர் மலையில் உள்ள ஒரு பழம் பொய்கை; an ancient pool in Aḷakar-malai. 'புண்ணிய சரவணம் பவகாரணியொடு' (சிலப்.11,94).

*[Skt. bhava+kāraṇi > த. பவகாரணி]*

**பவந்தா-தல் (பவந்தருதல்)** *pavan-tā-,* 15 செ.கு.வி. (v.i.) தோன்றுதல்; to appear. 'நன்றினொன்றாய்ப் பவந்தரும்' (சி.சி.2,74).

*[Skt. bhava > த. பவ]*

**பவம்[1]** *pavam,* பெ.(n.) 1. பிறப்பு; birth, origin (பிங்.); 'பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதை' (மணிமே.30). 2. உலக வாழ்க்கை; earthly life. 'சரியாப் பிறவிப் பவந்தரும்' (திவ்.இராமாநுச.94). 3. உலகம்; world. 'பேரின்ப வீட்டுப்பவம்' (சிவப்.பிர.வெங்கைக்க.75). 4. கரணம் பதினொன்றனுள் ஒன்று; (Astrol.) a division of time, one of eleven karaṇam, q.v. 5. உண்மை; existence. 'கொள்பவத்தின் வீடென்' (சி.போ.8,2, வெண்பா.2.).

*[Skt. bhava > த. பவம்]*

**பவித்திரம்** *pavittiram,* பெ.(n.) மிகு தூய்மை; sacredness, purity.

*[Skt. pavitra > த. பவித்திரம்]*

**பவுண்டு[1]** *pavuṇṭu,* பெ.(n.) பதினாறு அவுன்சு அளவு கொண்ட ஒரு நிறை; a standard weight = 16 ounces a voirdupois.

*[Lat. pond > த. பவுண்டு]*

**பவுண்டு[2]** *pavuṇṭu,* பெ.(n.) கொண்டித் தொழு; enclosure for detention of stray cattle.

*[E. pound > த. பவுண்டு]*

**பவுத்தர்** *pavuttar,* பெ.(n.) புத்தமதத்தோர்; Buddhists. 'அயர்த்தார் பவுத்தர்' (திவ்.இயற். நான்முகன்.6).

*[Skt. bauddha > த. பவுத்தர்]*

**பவுதிகதீட்சை** *pavutiki-tīṭšai,* பெ.(n.) குரு அருளிப்பு (தீட்சை) வகை; (சி.சி.8,4,ஞானப்.); a religious initiation.

*[Skt. bhautiki+tīkṣā]*

**பவுன்** *pavuṉ,* பெ.(n.) 1. இங்கிலாந்து நாட்டுப் பொன்னாணயம்; pound, sterling, sovereign.

**பனியன்** *paṉiyaṉ,* பெ.(n.) ஆண்களின் மெய்யாப்பு, உள்ளொட்டி; vest; undershirt. (in India) banian.

**த.வ. உள்ளொட்டி**

**பாக்கி** *bākki*, பெ.(n.) 1. நிலுவை; balance, outstandings, arrears. 2. மிச்சம்; remainder. வங்கி, பாக்கிப் பணத்தைச் செலுத்துவோருக்கு மூன்று மாதம் காலக்கெடு விதித்துள்ளது. (உ.வ.).

*[U.bāqi> த. பாக்கி]*

**பாக்கிகைபீது** *bākki-kaipītu*, பெ.(n.) நிலுவைக் கணக்கு; statement or account of outstanding balances (R.F.).

*[U.bāqi-kaifiyat> த. பாக்கிகைபீது]*

**பாக்கிசாக்கி** *bākki-šākki*, பெ.(n.) 1. பாக்கி பார்க்க; see pākki. 2. குறைவு (கொசுறு) (இ.வ.); extra quantity obtained into the bargain.

**த.வ.மிச்சமீதி**

*[U.bāqi+šākki > த. பாக்கிசாக்கி]*

**பாக்கிதார்** *bākki-tār*, பெ.(n.) வரி முதலியன செலுத்தாதிருப்பவன்; revenue defaulter; one who is in arrears.

*[U.bāqi> த. பாக்கி →பக்திதார்]*

**பாகதச்சிதைவு** *pāgata-c-citaivu*, பெ.(n.) பிராகிருத மொழியிலிருந்து தமிழிற் சிதைந்து வழங்கிய சொல். (திருக்கோ.53,உரை); Prākrt words used in Tamil in a modified form.

*[பாகதம்+சிதைவு]*

**பாகதம்** *pāgadam*, பெ.(n.) பிராகிருதம் பார்க்க; see prākrt.

*[Skt.Prākrta> Pkt.pākata> த. பாகவதம்]*

**பாகவத நடனம்** *pāgavada-nadanam*, பெ.(n.) மாலிய மத அடியார்கள் ஆடும் நடனம் (வின்.); a religious dance performed by Vaisnavadevotees.

**த.வ.ஆழ்வார் ஆட்டம்**

*[Skt.bhāgavata> த. பாகவதம் +த. நடனம்]*

**பாகவதபுராணம்** *bāgavada-purāṇam*, பெ.(n.) 1. வடமொழியிலுள்ள பதினெட்டு தொன்மங்களுள் தலையாயது; a chief Purāṇa in Sanskrit. one of patinen - purāṇam. 2. செவ்வைச் சூடுவாரால் தமிழ்ச் செய்யுளில் இயற்றப்பட்ட மொழி பெயர்ப்பு நூல்; a metrical translation of sanskrit Bhāgavata in Tamil by Sevvai - c-cūḍuvār. 3. கி.பி.1543ல் நெல்லிநகர் வரதராச ஐயங்கார் வடமொழி யினின்று தமிழ்மொழியிற் செய்யுளாக இயற்றிய நூல்; a Tamil-version of the Sanskrit Bhāgavatam by Varadaraja Aiyangār of Nellinagar, 1543 A.D.

*[Skt.bhāgavata+purāṇa> த. பாகவதபுராணம்]*

**பாகவதர்** *bāgavadar*, பெ.(n.) 1. திருமாலை முதற்கடவுளாகக் கொண்டு வழிபடுஞ் சமயத்தோர் (பிங்.); Vaisṇavas, worshippers of Viṣṇu. "பாகவதப் பிரமசாரி" (திருவாலவா. 31,2). 2. இசைப்பாட்டுடன் சமயச் சார்பான பழங்கால வரலாறுகளை எடுத்துரைப்போர்; those who expound religious stories to the accompaniment of music. 3. பாடகர் (இ.வ.); masters of music, music teachers.

**த.வ.மாலியர்**

*[Skt.bhāgavata> த. பாகவதர்]*

**பாகியம்** *pāgiyam*, பெ.(n.) 1. புறம்பானது; that which is external. "பூசை பாகிய மாப்பியந் தரமென விரண்டாகும்" (சூதசங்.சிவமா.5,2). 2. மலங்கழிக்கை (இ.வ.); evacuation.

**த.வ.வெளிப்புறம்**

*[Skt.bāhya> த. பாகியம்]*

**பாகியாங்கம்** *bāgiyāṅgam*, பெ.(n.) புறவழி; the outer path. "பிரமத்தை யடைகிறதற்கு பாகியாங்க மென்றும் அந்தராங்கமென்று மிரண்டங்கங்களுண்டு" (வேதாந்தசா.26).

**த.வ.வெளிப்பாதை**

*[Skt.bāhya+aṅka> த. பாகியாங்கம்]*

**பாகீரதி** *pākīrati*, பெ.(n.) கங்கை; the Ganges, the daughter of Bhagīratha.

"பாகீரதி கிருபா சமுத்திர" (திருப்பு.மூன்றாம் பாகம், 996).

*[Skt.bhāgirathi> த. பாகீரதி]*

**பாகு** *pāgu,* பெ.(n.) தலைப்பாகை; turban. "பத்துவராகன் பெறவோர் பாகீந்தான்" (விறலிவிடு.1008).

*[U.pāga> த. பாகு]*

**பாகுடக்கவி** *pāguḍa-k-kavi,* பெ.(n.) காணிக்கையாகக் கொடுக்கும் பாட்டு (செந்.vi,335); dedicatory poem.

*[Skt.prābhṛta> Pkt.pāhuḍa> த. பாகுடக்கவி]*

**பாகுபதம்** *pāgu-padam,* பெ.(n.) பாகுபக்குவம் (சா.அக.); gummy states; a stage of thick consistence.

**பாங்கா** *pāṅgā,* பெ.(n.) வாங்கா என்ற ஊதுகொம்பு (அபி.சிந்.); a kind of bugle-horn.

*[U.bānkā> த. பாங்கா]*

**பாசண்டச்சாத்தன்** *bāšaṇḍa-c-cāttaṉ,* பெ.(n.) சமய நூல்களில் வல்லவரான ஐயனார். (சிலப்.9,15.); Aiyāṉār, a deity versed in treatises on heretical religions.

த.வ. ஐயனார்

*[Skt.Pāṣaṇḍa> த. பாசண்டம்+சாத்தன்]*

**பாசண்டம்** *pāšaṇḍam,* பெ.(n.) 1. புறச்சமயக் கொள்கை; heresy, non-conformity to the orthodox doctrines of religion. 2. தொண்ணூற்றாறு வகைச் சமய நூற் கோவை. (சிலப்.9,15.); doctrines relating to 96 heretic sects.

*[Skt.pāṣaṇḍa> த. பாசண்டம்]*

**பாசண்டமூடம்** *pāšaṇḍa-mūḍam,* பெ.(n.) பாசண்டிமூடம் (வின்.) பார்க்க; see pāšaṇḍi-mūḍam.

*[Skt.pāṣaṇḍa> த. பாசண்டம்]*

**பாசண்டன்** *pāšaṇḍaṉ,* பெ.(n.) 1. புறச்சமயி; heretic. "பாசண்டர் நவிற்று வாக்கியத்தில்" (விநாயகபு.83,77). 2. சமய ஒழுக்கங்களைக் கெடுப்பவன் (இ.வ.); *person of heterodox conduct.*

*[Skt.pāṣaṇḍa> த. பாசண்டம்]*

**பாசண்டி** *pāšaṇḍi,* பெ.(n.) பாசண்டன் பார்க்க; pāšaṇḍaṉ. "பழுதாகும் பாசண்டியார்க்கு" (அறநெறி.17).

*[Skt.pāṣaṇḍa> த. பாசண்டம்]*

**பாசண்டிமூடம்** *pāšaṇḍi-mūḍam,* பெ.(n.) புறச்சமயத்தினரைப் போற்றும் மடமை; (Jaina) folly of reverencing heretical teachers. "பாசண்டி மூடமாய்... நாட்டப்படும்" (அறநெறி.16).

*[Skt.pāṣaṇḍa> த. பாசண்டி]*

**பாசந்தி** *pašanti,* பெ.(n.) சுண்டக் காய்ச்சிய பாலில் படியும் பாலாடையுடன், சருக்கரை சேர்த்துக் குளிரவைத்து உண்ணும் இனிப்பு வகை; thick cream of milk with sugar (served cold).

த.வ.பாலாடை இனிகம்

**பாசனம்** *pāšaṉam,* பெ.(n.) ஏனம்; vessel. "தந்திவர்ம மகாராசர் கொடுத்த பொன் பாசனம் ஒன்றினால் (S.S.I.IV,8).

த.வ.கலம்

*[Skt.bhājana> த. பாசனம்]*

**பாசாணக்கல்** *pāšāṇa-k-kal,* பெ.(n.) 1. பாம்புக் கல்; snake stone. 2. நஞ்சை முறிக்கும் கல் வகை; a kind of stone applied to poison - bites as antidote.

*[Skt. pāṣāṇa > த. பாசணம்+கல்]*

**பாசாந்தரப்படுத்து-தல்** *pāšāntara-p-paḍutt,* 5 செ.குன்றாவி. (v.t.) மொழி பெயர்த்தல்; to translate.

*[Skt.bhāṣāntara > த. பாசாந்தரம்+படுத்து-தல்]*

**பாசாந்தரம்** *pāšāntaram,* பெ.(n.) அயல்மொழி; foreign language.

த.வ.வேற்றுமொழி

[Skt.bhāṣāntara > த. பாசாந்தரம்]

**பாசி–த்தல்** *pāśi-,* 4 செ.குன்றாவி. (v.t.) பேசுதல்; to speak "பாசிக்கத்தகாது" (திருப்பு.1088).

[Skt.bhāṣ> த. பாசி]

**பாசிசம்** *pāśiśam,* பெ.(n.) அனைத்து முதன்மைத் தொழில்களையும் தன் முழுமை யான கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டு, அரசியல் எதிர்ப்பே எழாத வகையில் அடக்கு முறையைப் பயன்படுத்தி நடத்தும் ஆட்சி முறை; fascism.

**பாசிபாப்பு** *pāśipāppu,* பெ.(n.) சில்லறை வரி வகை (G.N.A.D.II,278); miscellaneous items of revenue derivedd from small farms, license, etc.

[U.bāji-bāb> த. பாசிபாப்பு]

**பாசியகாரர்** *pāśiya-kārar,* பெ.(n.) பிரம்ம சூத்திரத்திற்கு விரிவுரை (பாஷ்யம்) இயற்றிய இராமானுசாசாரியர்; Ramānuja, a commen-tator on Brahma sūtras.

[Skt.bhāṣya> த. பாசிய+காரர்]

**பாசியம்** *bāśiyam,* பெ.(n.) ஒரு வகை விரிவுரை; an elaborate commentary.

த.வ.விளக்கவுரை

[Skt.bhāṣya> த. பாசியம்]

**பாசு** *pāśu,* பெ.(n.) 1. தேர்வு முதலியவற்றில் தேர்ச்சி (பிரதாப.விலா.13.); success, as in examinations pass. 2. வெளியில் அல்லது உள்ளே செல்வதற்கோ பொருட்களைக் கொண்டு போவதற்கோ கொடுக்கும் நுழைவுச் சீட்டு (இ.வ.); gate-pass, permit. destroying.

த.வ. இசைவுச்சீட்டு

[Skt.pass > த. பாசு]

**பாசுகுத்திருநாள்** *paśukittirunāl,* பெ.(n.) ஒரு கிறித்துவப் பண்டிகை; Easter festival.

[F.paque த. பாசுகு+திருநாள்]

**பாசுதிகருமம்** *paśudikarmam,* பெ.(n.) சிறுநீர் விடுமுன் மலங்கழிக்கை (யோகஞானா.33); passing stools before passing urine.

**பாசுபதம்** *paśupadam,* பெ.(n.) ஆணவ மலம் இல்லையென்றும் இறைவன் (ஈசன்) பக்குவ மடைந்த ஆதன்களிடம் தன் பண்புகளைப் பற்றுவித்துத் தான் அதிகாரத்தினொழிவு பெற்றிருப்பனென்று கூறும் அகப்புறச் சமய வகை (சி.போ.பா.,அவை.); a Saiva sect which does not recognise the existence of āṇavamala and holds that Sivaṉ entrusts the perfected soul with His function, one of aka-p-puṟa-c-camayam. 2. நூற்றெட்டு மறைநூல்களில் ஒன்று; an Upaniṣad, one of 108. 3. பாசுபதாத்திரம் பார்க்க; see pāśupadāttiram. "பாசுபதம் பார்த்தர்க் களித்தார் போலும்" (தேவா.720,2). 4. சிவமல்லி (நாநார்த்த.152); taper - pointed mountain ebony.

[Skt.pāśupata> த. பாசுபதம்]

**பாசுபதன்** *paśupadaṉ,* பெ.(n.) 1. சிவபெருமான்; Sivaṉ. "பார்த்தனுக் கருள்கள் செய்த பாசுபதன்" (தேவா.389,6). 2. பாசுபத முறையை மேற்கொள்ளும் சிவனியர்; (திவா.); follower of the system of pāsupadam among the śaivaites. 3. சிவனை வழிபடுவோன் (சூடா.); worshipper of śivaṉ.

[Skt.pāśupata> த. பாசுபதன்]

**பாசுபதாத்திரம்** *pāśupadāttiram,* பெ.(n.) சிவபெருமானையே தெய்வமாகக் கொண்ட அம்பு; arrow which has Siva as its presiding deity.

[Skt.pāśupata+astra> த. பாசுபதாத்திரம்]

**பாசுபதிரம்** *paśupatiraśam,* பெ.(n.) செரிமானத்திற்காகத் தன்வந்திரி முறைப்படி அணியம் செய்த ஓர் ஆயுள்வேத மருந்து (சா.அக.); an Āyurvedic medicine

prepared for indigestion according to the process laid by Danvantari.

த.வ.செரிமருந்து

**பாசை** *bāšai,* பெ.(n.) 1. மொழி; language, speech. 2. குழூஉக்குறி (உ.வ.); secret language, expressive signs or signals, serving as a mode of communicating ideas. 3. சூளுறவு (இ.வ.); a vow in which a person binds himself by oath to wreak vengeance on his foe.

*[Skt.bhāṣā > த. பாசை]*

**பாசைக்கருத்து** *bāšai-k-karuttu,* பெ.(n.) சொல்லின் உட்பொருள் (தாதுமாலை, பக்.132); implied meaning of a word.

*[Skt.bhāṣā> த. பாசை+கருத்து]*

**பாசைபங்கம்** *bāšai-bangam,* பெ.(n.) பழிவாங்குவதாகச் சூளுரைத்து அச்சுறுத்துகை (வின்.); threat of vengeance by oath.

த.வ.சூளுறவு, வெகுண்டுரை

*[Skt.bhāṣā> த. பாசை+பங்கம்]*

**பாஞ்சத்திகம்** *pāñja-šattigam,* பெ.(n.) இசைக் கருவி பொது. (யாழ்.அக.); musical instrument.

*[Skt.pañca-sabdika> த. பாஞ்சசத்திகம்]*

**பாஞ்சசன்னியம்** *pāñja-šanniyam,* பெ.(n.) 1. திருமாலின் சங்கு; conch of Viṣṇu. "மதுசூதன் வாயமுதம் பன்னாளு முண்கின்றாய் பாஞ்ச சன்னியமே" (திவ்.நாயச்.7,5). 2. தீ (நாநார்த்த.179); fire. 3. நாணல் (நாநார்த்த. 179); reed.

*[Skt.pāñcajanya> த. பாஞ்சசன்னியம்]*

**பாஞ்சராத்திரம்** *pāñja-rāttiram,* பெ.(n.) மாலியத் தோன்றியங்களுள் ஒன்று (சி.போ.பா.); a Vaiṣṇava Āgama.

*[Skt.pāñcarātra> த. பாஞ்சராத்திரம்]*

**பாஞ்சராத்திரி** *pāñja-rāttiri,* பெ.(n.) மாலிய சமயத்திற் பாஞ்சராத்திரத்தை பின்பற்றுபவன் (சி.போ.பா.அவை.4,சாமிநா.); a follower of pāñjarāttiram.

*[Skt.pāñcarātrin> த. பாஞ்சராத்திரி]*

**பாஞ்சராத்திரிகன்** *pāñja-rāttirigan,* பெ.(n.) பாஞ்சராத்திரி (வின்.) பார்க்க; see pāñja-rāttiri.

*[Skt.pāñca-rātrika> த. பாஞ்சராத்திரிகன்]*

**பாஞ்சலம்** *pāñjalam,* பெ.(n.) 1. காற்று; wind. 2. கனல்; fire. 3. மிகு (இலாபம்) ஆதாயம்; gain.

*[Skt.pācala> த. பாஞ்சலம்]*

**பாஞ்சாலம்**[1] *pāñjālam,* பெ.(n.) 1. நாடுகள் ஐம்பத்தாறனுள் ஒன்று; an ancient country, one of 56 tēšam. "துளங்கில் பாஞ்சால மிக்கன வட்டம்" (திருவிளை.நரிபரி.104). 2. எழில் (யாழ்.அக.); beauty, noble appearance.

*[Skt.pāñcala> த. பாஞ்சாலம்]*

**பாஞ்சாலம்**[2] *pāñjālam,* பெ.(n.) இலக்கிய நடை மூன்றனுள்ள கௌடத்திற்கும் வைதருப்பத திற்கும் இடைப்பட்ட நடை. one of the three literary styles, midway between kautam and vaitaruppam.

*[Skt.pāñcala> த. பாஞ்சாலம்]*

**பாஞ்சாலமட்டியம்** *pāñjala-maṭṭiyam,* பெ.(n.) தாள வகை (யாழ்.அக.); a special mode of marking time.

*[Skt.pāñcāla+madhya> த. பாஞ்சாலம்+ அட்டியம்]*

**பாஞ்சாலன்** *pāñjālan,* பெ.(n.) 1. பாஞ்சால நாட்டினன் (யாழ்.அக.); inhabitant of Pāñjālan. 2. பாஞ்சால நாட்டரசன்; King of Pāñjālan. 3. அழகிய தோற்றமுள்ளவன்; a person of noble appearance.

*[Skt.pāñcala> த. பாஞ்சாலன்]*

**பாஞ்சாலி** *pāñjāli,* பெ.(n.) 1பாஞ்சால இளவரசி பாஞ்சாலி (துரோபதை); Draupadi, the princess of Pāñjālan. "பந்தார் விரலாள்

பாஞ்சாலி கூந்தன் முடிக்க" (திவ்.பெரியதி. 6,7,8) 2. மரப்பாவை, மரப்பொம்மை (உ.வ.); wooden doll.

*[Skt. Pāñcāli> த. பாஞ்சாலி]*

**பாஞ்சாலிகம்** *pāñjāligam,* பெ.(n.) மரப்பாவை விளையாட்டு; play with wooden doll. "பாஞ்சாலிக முன்னான நல்ல விளையாட்டின்" (திருவாலவா.62,26).

**த.வ.பொம்மை விளையாட்டு**

*[Skt. pāñcālika> த. பாஞ்சாலிகம்]*

**பாட்கா** *pāṭkā,* பெ.(n.) கூட்டிக் கொடுப்போன்; pimp, go-between.

*[U. bhāḍwa> த. பாட்கா]*

**பாட்சா** *pāṭcā,* பெ.(n.) முகம்மதிய அரசன் (வின்.); Muhammadan king or governor.

*[U. bāḍshāh> த. பாட்சா]*

**பாட்சிகன்** *pāṭcigaṉ,* பெ.(n.) பறவை பிடிப்பவன் (வின்.); bird catcher, fowler.

**த.வ.குருவிக்காரன், குறவன்**

*[Skt. pākṣika> த. பாட்சிகன்]*

**பாட்டலாக்குக்கம்மல்** *pāṭṭalākku-k-kammmal,* பெ.(n.) மாட்டியணிதற்குரிய கம்மல் வகை; women's ear - ornament, resembling a padlock, fastened behind the ear-lobe with a screw.

**த.வ. திருகுக்கம்மல்**

*[E. padlock> த. பாட்டலாக்கு+கம்மல்]*

**பாட்டியமி** *paṭṭiyami,* பெ.(n.) வெள்ளுவா, காருவாவிற்கு அடுத்து வரும் நாள் (பிரதமை திதி); the day after the full or new moon.

**மறுவ. முதலுவா**

*[Skt. prathama> Te. paḍyami> த. பாட்டியமி]*

**பாட்டில்**[1] *pāṭṭil,* பெ.(n.) ஒரு வகைக் கையணி (வின்.); a kind of flat bracelet, worn by women or children.

**த.வ. தட்டை வளையல்**

*[Mhr. pāṭali> த. பாட்டில்]*

**பாட்டில்**[2] *paṭṭil,* பெ.(n.) குப்பி (இக்.வ.); bottle.

*[E. bottle> த. பாட்டில்]*

**பாட்லாக்கு** *pāṭlākku,* பெ.(n.) பூட்டு, தாழ்ப்பாள், சங்கிலி இவை மாட்டவுதவும் கதவின் நிலையுறுப்பு; hasp of a lock, staple, clincher of a chain.

**த.வ.கொண்டி**

*[E. padlock> த. பாட்லாக்கு]*

**பாடாணக்கட்டு** *pāḍāṇakkaṭṭu,* பெ.(n.) வெள்ளை நஞ்சு (வின்.); white arsenic.

*[Skt. pāṣāṇa> த. பாடாணம்+ கட்டு]*

**பாடாணக்கல்** *pāḍāṇakkal,* பெ.(n.) 1. பாம்புக் கல்; snake-stone. 2. நஞ்சை மாற்றுங் கல் வகை; a kind of stone applied to poison-bites as antidote.

**த.வ.நஞ்சுமுறிக்கல்**

*[Skt. pāṣāṇa> த. பாடாணம்+கல்]*

**பாடாணச்செடி** *pāḍaṇa-c-ceḍi,* பெ.(n.) திருநீற்றுப் பச்சை; sweet basil.

*[Skt. pāṣāna> த. பாடாணம்+செடி]*

**பாடணத்தாபனம்** *pāḍāṇa-t-tābaṉam,* பெ.(n.) இறந்தவர்களுக்கு நினைவுக்கல் (நடுகல்) நடும் விழா (உ.வ.); the rite of setting up a stone to represent the deceased in a funeral ceremony.

**த.வ.நடுகல்விழா**

*[Skt. pāṣāṇa+sthāpana> த. பாடாணத் தாபனம்]*

**பாடாணம்** *pāḍāṇam,* பெ.(n.) 1. கல்; stone. 2. பிறவி நஞ்சு, வைப்பு நஞ்சு என்ற மருந்து சரக்குகள்; mineral poison, especially arsenic, of which there are two kinds, viz., piṟavi-p-pāṣāṇam, vaippu-p-pāṣāṇam. 3. எண் வகைத் துய்ப்புகளுள் பாறை நிலமும் அவற்றிலுண்டாகும் பொருள்களும் (C.G.); rocky soil and its products, one of aṣṭa-pōkam.

**த.வ. நச்சுக்கல்**

*[Skt. pāṣāṇa> த. பாடாணம்]*

**பாடாணமாரி** *pāḍāṇa-māri,* பெ.(n.) கல்மழை (சா.அக.); hail stone rain.

த.வ.ஆலங்கட்டி மழை

**பாடாணமுத்தி**[1] *pāḍāṇa-mutti,* பெ.(n.) ஆதன் கற்போலக் கிடப்பதாகக் கருதப்படும் முத்தி நிலை; the state of salvation in which the soul is supposed to lie still like a piece of stone.

*[Skt. pāṣāna+Pkt. mukti>பாஷாணமுத்தி> த. பாடாணமுத்தி]*

**பாடாணமுத்தி**[2] *pāḍāṇa-mutti,* பெ.(n.) உடலும், ஆதனும் அழியும் பௌத்தர்களின் வீடுபேறு (சா.அக.); annihilation of the body and soul by Buddhists.

*[Skt. pāṣāna+Pkt. mukti>பாஷாணமுத்தி> த. பாடாணமுத்தி]*

**பாடாணோத்துவாசனம்** *pāḍāṇōttu-vāšaṇam,* பெ.(n.) சாச்சடங்கில் இறந்தவர் பொருட்டு நாட்டிய கல்லை நீரிலிடுஞ் செய்கை (உ.வ.); the rite of removing the stone representing the deceased and casting it into water at the close of a funeral ceremony.

த.வ.கல் நீராட்டு

*[Skt. pāṣāṇa+ud-vāsana > த. பாடாணோத்து – வாசனம்]*

**பாடி-த்தல்** *pāḍi-,* 4 செ.குன்றாவி (v.t.); 1. பேசுதல்; to speak. "காழிவேந்தர்... சமணரோடும் பாடித்த தோடந் தீர" (திருவாலவா.38,67). 2. பலுக்குதல்; to pronounce, utter, as mantra. "சிவனுக்கு மூலத்தைப் பாடித்தே" (சைவச.பொது.295).

*[Skt. bhāṣ>த. பாடித்தல்]*

**பாடிதம்** *pāḍidam,* பெ.(n.) பலுக்கப்படுவது; speech, anything pronounced. "பாடித வசன மென்றா" (சிவதரு.சிவஞானயோ.81).

*[Skt. bhāṣita>த. பாடிதம்]*

**பாடியகாரர்** *pāḍiya-kārar,* பெ.(n.) 1. பேருரை காரர்; author of an elaborate commentary. 2. பாணினீயத்தின் பேருரையாளரான பதஞ்சலி (பி.வி.1,உரை.); Patañjali, the commentator on the Grammar of Pāṇiṇi. 3. நான்முகனின் நூற்பாவிற்கு விரிவுரை (பாஷ்யம்) இயற்றிய இராமானுசாச்சாரியர்; Rāmānuja, a commentator on Brahma sūtras.

த.வ.உரையாசிரியர்

*[Skt. bhāsya-kāra>த. பாடியகாரர்]*

**பாடியம்** *pāḍiyam,* பெ.(n.) பேருரை (வின்.); an elaborate commentary on sūtras.

த.வ.விளக்கவுரை

*[Skt. bhāṣya>த. பாடிய]*

**பாடை** *pāḍai,* பெ.(n.) 1. மொழி; language. "பரந்தொருங் கீண்டிய பாடை மாக்களும்" (மணிமே.1,16).

*[Skt. bhāṣā>த. பாடை]*

**பாடைபேசு-தல்** *pāḍai-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) வேற்றுமொழி பேசுதல்; to speak a foreign language. 2. ஆங்கிலம் பேசுதல்; to speak English. 3. வெகுண்டுரைத்தல்; to bind oneself with oath.

**பாண்டாகாரம்** *pāṇḍākāram,* பெ.(n.) 1. பண்ட சாலை (யாழ்.அக.); storehouse. 2. கருவூலச் சாலை (மேருமந்.56, உரை.); treasury.

த.வ.இருப்புக் கிடங்கு

*[Skt. bhāṇ-ḍāgāra>த. பாண்டாகாரம்]*

**பாண்டாகாரி** *pāṇḍākāri,* பெ.(n.) கருவூலக் காரன்; treasurer.

*[Skt. bhāṇḍāgārin>த. பாண்டாகாரி]*

**பாணக்கல்** *pāṇakkal,* பெ.(n.) ஒன்பான் மணிகளுள் ஒன்றான விடரியம் (வைடூரியம்). (சா.அக.); one of the nine gems-Cat's eye.

**பாணிவாதன்** *pāṇivādan,* பெ.(n.) வாணிகன் (யாழ்.அக.); merchant.

*[Skt. paṇya-vat>த. பாணிவாதன்]*

**பாணினீயம்** *pāṇiṉiyam,* பெ.(n.) பாணினி இயற்றிய வடமொழி இலக்கணம் (வியாகரணம்); Pāṇiṉi's šanskrit grammar.

*[Skt. pāṇiniya > த. பாணினீயம்]*

**பாத்தம்** *pāttam,* பெ.(n.) 1. செய்தி (விஷயம்); subject or matter dealt with. "ஒரு சொல்லுக்குப் பாத்தமில்லாத ஐசுவரியமுமாய்" (ஈடு,3,9,2). 2. தரம்; fitness. "சங்கல்பத்துக்கும் பாத்தம் போராத பூமிக்காக" (ஈடு,1,9,2).

*[Skt. pātra > த. பாத்தம்]*

**பாத்தியன்** *pāttiyaṉ,* பெ.(n.) கடவுளின் அடியான்; saint devoted to the feet of God. "பகையறு பாத்தியன் பாதம் பணிந்து" (மணிமே.10:35). "திருவாதவூர்ச் சிவ பாத்தியன்" (பதினொ.கோயிற்றிருப்பண்.58).

**த.வ.தொண்டன், இறையடியார்**

*[Skt. pādya > த. பாத்தியன்]*

**பாத்தியா** *pāttiyā,* பெ.(n.) முகம்மதிய மதத்தார் திருமணம் அல்லது இறப்பு (மரண) காலத்தில் குரான் ஓதுகை. (உ.வ.); the rite of reading the first chapter of the Quran, at a Muhammadan wedding or funeral. பாத்தியா ஓதினான்.

*[U. fatiha > த. பாத்தியா]*

**பாத்திரப்பிரவேசம்** *pāttira-p-piravēšam,* பெ.(n.) நடிகர் மேடையில் தோன்றும் முதற் காட்சி (இக்.வ.); entrance of actors on the stage.

*[Skt. pātra+pra-vēša > த. பாத்திரப்பிரவேசம்]*

**பாத்திரபதம்** *pāttirapadam,* பெ.(n.) 1. ஆறாவது நிலா மாதம் (வின்.); sixth lunar month. 2. முற்கொழுங்கால் (பூரட்டாதி) பிற்கொழுங்கால் (உத்திரட்டாதி) எனும் விண்மீன்கள்; the name common to 25th and 26th nakṣatra. 3. தொழுபஃறி (இரேவதி); the 27th nakṣatra.

*[Skt. bhādra-pada > த. பாத்திரபதம்]*

**பாத்திரபாகம்** *pāttira-pāgam,* பெ.(n.) ஏனத்தில் (பாத்திரம்) எண்ணெய் கெடாதபடி யிருக்க இடும் மணப்பொருள் (நாஞ்.); preservative used to prevent oil from becoming rancid.

**த.வ.கசடுநீக்கி**

*[Skt. pātra > த. பாத்திர+பாகம்]*

**பாத்திரம்** *pāttiram,* பெ.(n.) 1. கொள்கலம் (பிங்.); vessel, utensil. 2. இரப்போர் கலம் (சூடா.); mendicant's bowl. 3. பாத்திரன் பார்க்க; see pāttiran. "பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல்" (தேவா.1070.3). 4. நாடகத்தில் அரிதாரம் பூசி நடிப்பவ–ன்–ள்; (Drama) character in a play; actor. "நட்டுவக்குறையோ... பாத்திரக் குறையோ" (மதுரைப்.பதிற்றுப்.25). 5. இலை (யாழ்.அக.); leaf. 6. உடல் (யாழ்.அக.); body. 7. எட்டுச் சேர் கொண்ட ஓர் அளவு (யாழ்.அக.); a standard of measure equal to eight šēr. 8. கட்டளை (யாழ்.அக.); mould. 9. அமைச்சர் (யாழ்.அக.); counsellor. 10. வாய்க்கால் (யாழ்.அக.); canal.

*[Skt. pātra > த. பாத்திரம்]*

**பாத்திரவேதிகை** *pāttira-vēdigai,* பெ.(n.) வழிபாட்டு ஏனங்கள் முதலியன வைக்கும் மேடை (பீடம்) (இ.வ.); a platform or support for the utensils and cups used in divine worship.

*[Skt. pātra+bhēdikā > த. பாத்திரவேதிகை]*

**பாத்திரன்** *pāttiraṉ,* பெ.(n.) தக்கோன்; competent, worthy person. "உயர்ந்த பாத்திரன்" (சேதுபு.சேதுபல.67).

**த.வ.தகுதியானவன், உயர்ந்தவன்**

*[Skt. pātra > த. பாத்திரன்]*

**பாத்திலார்** *pāttilār,* பெ.(n.) விலைமகள்; prostitutes. "பாத்திலார் தாம்விழையும் நாடகஞ் சாராமை" (ஏலாதி,25).

**த.வ.பரத்தை, கணிகையர்**

**பாதகம்**[1] *pādagam,* பெ.(n.) பெருந்தீமை, பெருங்கரிசு; grievous sin, heinous crime

"நாரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே" (சி.சி.2,29).

த.வ.வங்கொடுமை, பெருங்கொடுமை

*[Skt.pātaka> த. பாதகம்]*

**பாதகம்²** *pādagam,* பெ.(n.) தடை; hindrance, objection. "அதனாற் பாதகமில்லை" (உ.வ.).

த.வ.முட்டுக்கட்டை, இடையூறு

*[Skt.bādhaka> த. பாதகம்]*

**பாதகன்** *pādagaṉ,* பெ.(n.) பெருங்குற்றஞ் செய்தோன்; man guilty of a heinous crime. "ஐம்பெரும் பாதகர்காள்" (திவ்.நாய்ச்.9,4).

த.வ.கயவன்

*[Skt.pātaka> த. பாதகன்]*

**பாதகி¹** *pādagi,* பெ.(n.) பெருங்கொடுமை செய்தவள்; woman guilty of a heinous crime. "பாரியா யிருந்து கொன்ற பாதகி பெற்ற பேற்றால்" (உபதேசகா.சிவபுண்.202).

த.வ.கொடுமைக்காரி

*[பாதகன் →பாதகி]*

**பாதகி²** *pādagi,* பெ.(n.) பெருங்கேடன் (பாதகன்); criminal. "பக்திமான்களும் பாதகிகளும் ஒக்கவாழ்ந்து போய்த்து" (திவ்.அமலனாதி.2, வியா.பக்.33).

த.வ.கொலைகாரன், கயவன்

*[Skt.patakin> த. பாதகி]*

**பாதங்கம்** *pādaṅgam,* பெ.(n.) பொடி; ash. "பாதங்க நீறேற்றார்" (தேவா.225,1).

த.வ.தூள், துகள், சாம்பல்

*[படி > பதி > பதிகம் > பதகம் > பதங்கம் > Skt. Pātāṅ-ga>த. பாதங்கம்]*

**பாதர்** *pādar,* பெ.(n.) பகதூர்; Bahadur. "பாதர் வெள்ளை யென்று கூப்பிடுவேன்" (கட்ட பொம்மு.பக்.26).

*[Persn.bahādur> த. பாதர்]*

**பாதரசம்** *pādarašam,* பெ.(n.) இதளியம்; mercury, quicksilver. "பாதரசமாய் மனது சஞ்சலப்படுமலால்" (தாயு.பரிபூரண.6).

*[Skt.pārada-rasa >த. பாதரசம்]*

**பாதராயணன்** *pādarāyaṇaṉ,* பெ.(n.) பிரம்ம நூல், மகாபாரதம் முதலியவற்றின் ஆசிரியராகிய வியாசமுனிவர் (வின்.); the sage Vyāsa, author of Brhama sūtras, Mahābhārata,etc.

*[Skt.Bāda-rāyaṇa> த. பாதராயணன்]*

**பாதவம்¹** *pādavam,* பெ.(n.) மரம்; tree. "பாதவக் கண்ணிழல்" (ஞானா.18,11). 2. தோப்பு (பிங்.); garden, grove.

த.வ. பூங்கா

*[Skt.Pāda-pa> த. பாதவம்]*

**பாதவம்** *pādavam,* பெ.(n.) மலை (பிங்.); hill, mountain.

*[Skt.parvata > த. பாதவம்]*

**பாதன்** *pādaṉ,* பெ.(n.) 1. கதிரவன் (சா.அக.); the sun. 2. நெருப்பு; fire.

த.வ. எரிகதிர், ஞாயிறு

**பாதனம்¹** *pādaṉam,* பெ.(n.) 1. வணக்கம்; homage, reverence, prostration in worship. "பாதனஞ் செய்தார்" (பாரத. சூது.139). 2. கீழ்முகமாகச் செய்கை; causing to turn downwards. "பாதனமாகப் பரிந்தது பார்த்தே" (திருமந்.1041).

*[Skt.pātana> த. பாதனம்]*

**பாதனம்²** *pātaṉ,* பெ.(n.) குத்தியெடுக்கை அல்லது கத்தியால் பிளக்கை (சா.அக.); opening by, lancet or incison.

**பாதாங்கொட்டை** *pādāṅgoṭṭai,* பெ.(n.) வாதாங்கொட்டை (இ.வ.); almond.

த.வ. முற்பழக் கொட்டை

*[U.bādam> த. பாதாம்+கொட்டை]*

**பாதாமல்வா** *pādāmalvā,* பெ.(n.) பாதுமல்வா (இ.வ.) பார்க்க; see bādumalvā.

**பாதாலத்தாம்பி** *pādālattāmbi,* பெ.(n.) நிலக்காளான் (தைலவ.தைல.); mushroom, fungi.

**பாதாலம்** *pātālam,* பெ.(n.) 1. பாதாளம் பார்க்க; see bātāḷam. 2. வடவைத் தீ; submarine fire. "மொய்கொள் பாதால முத்தீ" (சீவக. 2462).

த.வ. கீழுலகம்

*[Skt.pātāla> த. பாதாலம்]*

**பாதாளக்கரண்டி** *pātāla-k-karaṇḍi,* பெ.(n.) கிணற்றில் விழுந்த பொருளை எடுக்குங் கருவி (உ.வ.); grapnel, hook to lift things fallen into a well.

த.வ. முள்குறடு

*[Skt.pātāla> த. பாதாளக் கரண்டி]*

**பாதாளகங்கை** *pādāla-kaṅgai,* பெ.(n.) நிலத்தின் கீழ் ஓடும் நீரோட்டம் (வின்.); subterranean stream.

த.வ.நிலத்தடி நீர்

*[Skt.pātāla> த. பாதாளம்+கங்கை]*

**பாதாளகிரகணம்** *pātāla-kiragaṇam,* பெ.(n.) 1. கண்ணுக்குப் புலப்படாத கோள்பற்று (கிரகணம்) (C.G.); eclipse below the horizon. 2. அரைகுறையாய்ப் புலப்படும் கோள் பற்றுகை; eclipse which is only partly visible.

*[Skt.pātāla+grahaṇa> த. பாதாளகிரகணம்]*

**பாதாளகொலுசு** *pātāla-kolušu,* பெ.(n.) பாதாளக்கரண்டி பார்க்க; see bātāḷa-k-karaṇḍi.

*[Skt.pātāla> Te.golusu> த. பாதாளகொலுசு]*

**பாதாளத்தார்** *pātālattār,* பெ.(n.) பாதாள வாசிகள் பார்க்க; see pātāḷā-vāšikaḷ. "பாரார் விசும்புள்ளார் பாதாளத்தார் புறத்தார்" (திருவாச.8,2).

*[Skt.pātāla> த. பாதாளத்தார்]*

**பாதாளம்** *pātālam,* பெ.(n.) 1. கீழுலகம் ஏழனுள் அடியில் உள்ளது; the lowest subterranean region, one of kiḷ-ēḷ-ulakam. 2. கீழுலகம்; any of the nether worlds. "பாதாள மேழினுங் கீழ் சொற்கழிவு பாதமலர்" (திருவாச. 7,10). 3. குகை, பள்ளம் (வின்.); deep cavern, pit, chasm, gulf, abyss, cleft. 4. அளறு (நரகம்.) (சூடா.); hell. 5. கணியத்தில் கதிரவனுக்கு நான்காமிடம் (வின்.); (Astrol.) the fourth house from that of the sun. 6. மறைவிடம் (வின்.); secret place.

*[Skt.pātāla> த. பாதாளம்]*

**பாதாளயோகம்** *pātāla-yōgam,* பெ.(n.) கணிய நூல் வகையுளொன்று (சங்.அக.); (Astrol.) a kind of yōkam.

*[Skt.pātāla+yōga> த. பாதாளயோகம்]*

**பாதாளலிங்கம்** *pātāla-liṅgam,* பெ.(n.) நிலத்தில் ஆழப்பதிந்த சிவலிங்கம் (உ.வ.); Siva-liṅgam, which is deeply rooted in the earth.

*[Skt.pātāla+linga> த. பாதாளலிங்கம்]*

**பாதாளலோகம்** *pātāla-lōgam,* பெ.(n.) பாதாளம், 1, 2 (வின்.) பார்க்க; see pātāḷam, 1,2.

*[Skt.pātāla+lōka> த. பாதாளலோகம்]*

**பாதாளவயிரவன்** *pātāla-vayiravaṉ,* பெ.(n.) 1. கிணறு வெட்டவும் புதைபொருளை வெளியிடவும் காணிக்கை கொள்ளும் வைரவக் கடவுள் (வின்.); Bhairava of the nether world, to whom sacrifice is offered when digging wells or discovering treasure hidden under ground.

*[Skt.pātāla+bhairava> த. பாதாளவயிரவன்]*

**பாதாளாஞ்சனம்** *pātālāñjaṉam,* பெ.(n.) கருநிற மை முதலிய மூன்றனுள் மறை பொருளைக் காண உதவுவதும் மை; magical black pigment or collyrium used in discovering treasures buried underground, one of the three añjaṉam.

*[Skt.pātāla+añjana> த. பாதாளாஞ்சனம்]*

**பாதாளி** *pātāli,* பெ.(n.) 1. மிகச் சிக்கலானது; anything very difficult to unravel. 'இழவும் பாதாளியுமாகவிருக்கிறது' (தஞ்.) 2. தொல்லை செய்பவள் (இ.வ.); a worrying or troublesome woman.

த.வ.நச்சரிப்பவள்

*[Skt.pātāla> த. பாதாளி]*

**பாதி-த்தல்** *pāti-,* 4 செ.குன்றாவி. (v.t) 1. வருந்துதல்; to trouble, disturb. 2. தடை செய்தல்; to hinder, obstruct.

*[Skt.bādh> த. பாதி →பாதி-த்தல்]*

**பாதித்தியம்** *pātittiyam,* பெ.(n.) தரக்குறைவு (பதிதத்தன்மை) (யாழ்.அக.); apostasy, degradation.

*[Skt.pātitya> த. பாதித்தியம்]*

**பாதிரியார்** *pātiriyār*, பெ.(n.) கிறித்தவத் தேவாலயத்தில் வழிபாடு நடத்திவைப்பவர்; (Christian) clergyman, priest, pastor.

*[**E.**Father > த. பாதிரியார்]*

**பாதிவிரத்தியம்** *pātivirattiyam*, பெ.(n.) கற்பொழுக்கம்; chastity, fidelity, conjugal virtues.

**த.வ.இல்லற ஒழுக்கம்**

*[**Skt.**pātivratya> த. பாதிவிரத்தியம்]*

**பாதுகாகாரன்** *pādukā-kāraṉ*, பெ.(n.) மிதியடி, செருப்பு செய்பவர் (யாழ்.அக.); cobbler, shoe-maker.

**த.வ.தோல்வினைஞன்**

*[**Skt.**pādukā-kāra> த. பாதுகாகாரன்]*

**பாதுசா**[1] *pāduša*, பெ.(n.) முகம்மதிய அரசன்; sultan, Muhammadan ruler.

*[**U.**bādshāh> த. பாதுசா]*

**பாதுசா**[2] *pāduša*, பெ.(n.) இனிப்புப் பணியார வகை (இ.வ.); a kind of sweet cake.

**பாதுமல்வா** *pādumalvā*, பெ.(n.) கற்பழுவிதை (வாதாம்)யாலான இன்களி (அல்வா); a kind of confection prepared with almond. "பாதுமல்வா நெய்யுருண்டை" (பஞ்ச.திருமுக. 1837).

*[**Persn.**bādām+ **Ar.**halwā>த. பாதுமல்வா]*

**பாதூனசந்திரன்** *pādūṉa-šandiraṉ*, பெ.(n.) நிலவுக்கும் கருங்கோள் செங் கோளுக்கும் இடையே உள்ள தொலைவு (வின்.); (Astron.) nodal distance of the moon.

*[**Skt.**pādūna+candra> த. பாதூனசந்திரன்]*

**பாதேயம்** *patēyam*, பெ.(n.) கட்டுச்சோறு; food carried for use on a journey, viaticum. "பரலோக பாதேயம்" (வின்.).

**த.வ.கட்டுணவு**

*[**Skt.**pāthẹya> த. பாதேயம்]*

**பாதோசம்** *pātōšam*, பெ.(n.) தாமரை (மலை.); lotus, as water-born.

**த.வ.கமலம்**

*[**Skt.**pāthō-ja> த. பாதோசம்]*

**பாநியாமலகம்** *pāniyāmalagam*, பெ.(n.) ஒரு வகை நெல்லி (நீர் வேட்கையைத் தடுப்பது); a kind of gooseberry. which prevents and arrests thirst (சா.அக.).

**பாப்பரி** *pāppari*, பெ.(n.) 1. செந்நாகம்; red cobra. 2. நாகம்; cobra. (சா.அக.)

**த.வ.நல்லபாம்பு, அரச நாகம்**

**பாப்பாச்சி** *pāppacci*, பெ.(n.) ஒரு வகை மிதியடி; slippers.

**த.வ.செருப்பு, காலணி**

*[**U.**pāpōsh> த. பாப்பாச்சி]*

**பாப்பு** *pāppu*, பெ.(n.) ரோமன் கத்தோலிக சமயத்தாருடைய தலைமைத் தலைவர் (கிறித்து.); Pope, head of the Roman Catholic church.

*[**L.**pāpa> த. பாப்பு]*

**பாப்பை** *pāppai*, பெ.(n.) களியிட்டுக்கட்டல்; bandaging after applying poultice. (சா.அக.)

**த.வ.மாவுகட்டு**

**பாபக்கிரகம்** *pāba-k-kiragam*, பெ.(n.) நன்மை செய்யாக்கோள் (விதான.மரபி.2,உரை.); unfavourable or malevolent planet.

**த.வ.தீயகோள்**

*[**Skt.**pāpa+graha > த. பாபக்கிரகம்]*

**பாபக்கினம்** *pābakkiṉam*, பெ.(n.) எள் (சங்.அக.); sesame.

*[**Skt.**pāpa-ghna> த. பாபக்கினம்]*

**பாபசங்கீர்த்தனம்** *pāba-šaṅ-girttaṉam*, பெ.(n.) பாழ்வினை அல்லது கரிசு நீங்க அவற்றைச் சமயக் குருவிடம் தெரிவிக்கை (கிறித்து.); confession of sin.

**த.வ.குற்றம் ஏற்பு**

*[**Skt.**pāpa+saṅ-kīrtana> த. பாபசங்கீர்த்தனம்]*

**பாபசமனம்** *papa-šamaṉam*, பெ.(n.) கரிசுக் கழுவாய்; removal or expiation of sin.

*[**Skt.** Pāpa+šamaṇa> த. பாபசமனம்]*

**பாபத்தி** *pāpatti,* பெ.(n.) வேட்டை (சூடா.); hunting, fishing.

*[Skt. Pāpar-ddhi > த. பாபத்தி]*

**பாபத்து** *pāpattu,* பெ.(n.) 1. செய்தி; item, article, matter, business, affair. 2. கணக்கு; account, head in accounts. 'அவன் பாபத்திலே செல்லும் ரூபாய் ஐந்து'. (இ.வ.).

*[U. babat > த. பாபத்து]*

**பாபதண்டி** *pāpa-taṇḍi,* பெ.(n.) கரிசுக்காகத் தண்டனைக்கு உரியவன் (தக்கயாகப், 505); sinner who deserves punishment.

*[Skt. pāpa-daṇḍin > த. பாபதண்டி]*

**பாபதத்தம்** *pāpa-tattam,* பெ.(n.) 1. தீவினை களிற் செலவழிக்கப்படும் பொருள்; property or money lost in evil purseuts. 2. கள்வர் முதலியோராற் கவரப்படும் பொருள்; property lost in theft.

*[Skt. pāpa+datta > த. பாபதத்தம்]*

**பாபது** *pāpadu,* பெ.(n.) பாபத்து பார்க்க; see pāpattu.

**பாபம்** *papam,* பெ.(n.) தீவினைப் பயன்; accumulated result of sinful action.

*[Skt. pāpa > த. பாபம்]*

**பாபமூர்த்தி** *pāpa-mūrtti,* பெ.(n.) வேடன் (யாழ்.அக.); hunter.

*[Skt. pāpa+murti > த. பாபமூர்த்தி]*

**பாபவிக்கியானம்** *pāpa-vikkiyāṉam,* பெ.(n.) பாபசங்கீர்த்தனம் பார்க்க; see pāpa saṅgīrttaṉam.

*[Skt. pāpa+vijñapana > த. பாபவிக்கியானம்]*

**பாபவிமோசனம்** *pāba-vimōśaṉam,* பெ.(n.) பாழ்வினை (குற்றம்) அல்லது கரிசு நீங்குகை; liberation from sins. 'நீ செய்த இந்தக் கொடுஞ்செயலுக்கு பாபவிமோசனம் உண்டா?' (இ.வ.).

**த.வ.தீவினைக்கழுவாய்**

*[Skt. pāpa+vimōcaṉa > த. பாபவிமோசனம்]*

**பாபிட்டன்** *pāpiṭṭaṉ,* பெ.(n.) தீச்செயல் புரிந்தவன்; sinful man.

*[Skt. pāpiṣṭha > த. பாபிட்டன்]*

**பாபிட்டை** *pāpiṭṭai,* பெ.(n.) கொடுந்தீமை செய்தவள்; sinful woman.

*[Skt. pāpiṣṭha > த. பாபிட்டை]*

**பாபு**[1] *pāpu,* பெ.(n.) முதலாளி; hord, master.

*[H. bābu > த. பாபு]*

**பாபு**[2] *pāpu,* பெ.(n.) 1. கதவு; door; 2. பகுதி; section. 3. கணக்கின் தலைப்பு; title, head of accounts.

*[U. pāb > த. பாபு]*

**பாபுவார்** *pāpuvār,* பெ.(n.) கரணியங் கூறி பிரித்தெழுதிய கணக்கு; head or items of account, arranged or classified.

*[U. bābwār > த. பாபுவார்]*

**பாமம்**[1] *pāmam,* பெ.(n.) 1. சிரங்கு; itch, eczema. 2. புண்; sore. "பாமக்குருதிப் படிகின்ற... சேடகம்" (கம்பரா.மூலபல.203).

*[Skt. pāman > த. பாமம்]*

**பாமம்**[2] *pāmam,* பெ.(n.) 1. சினம் (யாழ்.அக.); anger. 2. ஒளி; brilliance. "பாமமா கடல் கிடங்களாக" (கம்பரா.அரசி.7).

*[Skt. bhāma > த. பாமம்]*

**பாமரம்** *pāmaram,* பெ.(n.) 1. முட்டாள்தனம்; ignorance, stupidity. "பாமரத் திமிரபானு" (பிரபோத.6,20) 2. மூடன்; dullard. "பாமரமே யுனக்கென்ன" (இராமநா.அயோத்தி 5).

*[Skt. pāmara > த. பாமரம்]*

**பாமரன்** *pāmaraṉ,* பெ.(n.) 1. அறிவிலான்; ignorant, stupid person. "பாமரரெனக் காண்பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்". (கைவல். தத்து.96) 2. இழிந்தோன்; vile, low, base person. 3. அரசற்குத் துணைவன் (யாழ்.அக.); king's companion.

*[Skt. pāmara > த. பாமரன்]*

**பாமன்** *pāmaṉ,* பெ.(n.) 1. ஞாயிறு; Sun. 2. உடன் பிறந்தாள் கணவன்; sister's husband.

*[Skt. bhāma > த. பாமன்]*

**பாமாரி** *pāmāri,* பெ.(n.) கந்தகம் (சங்.அக.); sulphur.

*[Skt. pāmāri > த. பாமாரி]*

**பாமாரோகம்** *pāmā-rōgam,* பெ.(n.) பேய்ச் சொறி (பைஷஜ.); scabies, itch.

*[Skt. pāmā-rōgam > த. பாமாரோகம்]*

**பாமினி** *pāmiṉi,* பெ.(n.) பெண் (சங்.அக.); woman.

*[Skt. bhāminī > த. பாமினி]*

**பாமை**[1] *pāmai,* பெ.(n.) சிரங்கு (தைலவ.தைல. 140); itch.

*[Skt. pāmā > த. பாமை]*

**பாமை**[2] *pāmai,* பெ.(n.) கண்ணனுக்குகந்த தேவியருள் ஒருத்தி (பாகவத.10,25,1); a favourite wife of Krṣṇa.

*[Skt. Bhāmā > த. பாமை]*

**பாயகாரி** *pāya-kāri,* பெ.(n.) குறிப்பிட்ட காலம் வரை குடிவாரத்துக்கு உழுபவன்; temporary cultivator, one who cultivates the land of another for a stipulated term, obtaining a certain share of the crop.

*[U. pā-a-kāri > த. பாயகாரி]*

**பாயசம்**[1] *pāyašam,* பெ.(n.) பால், அரிசி, சர்க்கரை அல்லது வெல்லம் முதலியவற்றோடு சேர்த்துச் செய்யும் நெகிழ்ச்சியான இன்னமுது; a semi-liquid food prepared out of milk, rice, sago, etc mixed with sugar or jaggery.

**பாயசம்**[2] *pāyašam,* பெ.(n.) பாற் சொற்றி, ஒரு செடி வகை; a plant, Ruellia secunda.

*[Skt. pāyasa > த. பாயசம்]*

**பாயதானம்** *pāyatāṉam,* பெ.(n.) பாற்சோறு; rice boiled in milk. "பொற்புறு பாயதானம் புளிப்புறு ததியின் போனம்" (சிவதரு.பரம.37).

*[Skt. pāyasānna > த. பாதானம்]*

**பாயுரு** *pāyuru,* பெ.(n.) எருவாய் (குதம்); anus, fundament.

*[Skt. pāyu > த. பாயுரு]*

**பார்க்கவம்** *pārkkavam,* பெ.(n.) துணைத் தொன்மங்கள் பதினெட்டனுள் ஒன்று; a secondary Purāṇa one of 18 upa-purāṇam.

*[Skt. bhārgava > த. பார்க்கவம்]*

**பார்க்கவி**[1] *pār-k-kavi,* பெ.(n.) திருமகள்; Lakshmi. "பார்க்கவியும் யார்க்கிது போல் வாய்க்குமென்" (மனோன்.3,சிவகாமி.49). 2. மலைமகள் (யாழ்.அக.); Parvati. 3. வெள்ளறுகு; small chiretta.

*[Skt. Bhārgavi > த. பார்க்கவி]*

**பார்க்கவி**[2] *pārkkavi,* பெ.(n.) தேக்கு மரவகை (மலை.); beetle killer.

*[Skt. bhārgi > த. பார்க்கவி]*

**பார்க்கவசுபத்தியம்** *pārkkavašupattiyam,* பெ.(n.) இரவின் 15 முழுத்தங்களுள் பதினொன்றாவது (விதான்.குணாகுண.73, உரை); the 11th of the 15 divisions of night.

*[Skt. bārhaspatya > த. பார்க்கவசுபத்தியம்]*

**பார்க்குச்சு** *pārkkuccu,* பெ.(n.) காவல் படையினர் குடியிருக்கக் கட்டிய சிறு வீட்டு வரிசை; barracks a line of houses built for soldiers.

*[E. barracks > த. பார்க்குச்சு]*

**பார்சி** *pārši,* பெ.(n.) 1. பாரசிக இனத்தான்; Parsee. 2. பாரசீகப்பண்; a Persian tune. 3. பாரசிக நாடு (வின்.); Persia.

*[U. pārsī > த. பார்சி]*

**பார்சிக்கஞ்சாங்கோரை** *pārši-k-kañjāṅgōrai,* பெ.(n.) செடி வகை; Persian tulsi.

*[பார்சி+கஞ்சாங்கோரை]*

**பார்சுவகிரகணம்** *pāršuva-girakaṇam,* பெ.(n.) குறை கோள்பற்று (பஞ்.); partial eclipse.

*[Skt. pāršva+grahaṇa > த. பார்சுவ கிரகணம்]*

**பார்சுவம்** *pāršuvam,* பெ.(n.) 1. விலாப்பக்கம்; (யாழ்.அக.); side of the body. 2. பக்கம்; side. 3. உதவி; support 4. வட்டம்; circle.

*[Skt. pāršva > த. பார்சுவம்]*

**பார்சுவர்** *pārśuvar,* பெ.(n.) 1. சமணத்துறவியர் இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம், காப்பு, உரை.); a Jaina Arhat, one of 24 tirttaṅgarar.

*[Skt. Pārśva> த. பார்ச்சுவர்]*

**பார்சுவவாயு** *pārśuva-vāyu,* பெ.(n.) பக்க ஊதை நோய்; paralysis.

*[Skt. pārśva+vāyu> த. பார்சுவவாயு]*

**பார்த்தசாரதி** *pārtta-śāradi,* பெ.(n.) கண்ணபெருமான்; Kṛṣṇa, Arjuna's charioteer.

*[Skt. Pārtha-sārathi> த. பார்த்தசாரதி]*

**பார்த்தன்** *pārttaṉ,* பெ.(n.) அருச்சுனன் (பாரத. அருச்சுனன்றீர்.44); Arjuna.

*[Skt. Pārtha> த. பார்த்தன்]*

**பார்த்திபன்** *pārttibaṉ,* பெ.(n.) அரசன், king. "பார்த்திபகுமரன் சேர்ந்தான் (சீவக.1683).

*[Skt. pārthiva> த. பார்த்திபன்]*

**பார்த்திவ** *pārttiva,* பெ.(n.) ஆண்டு அறுபதனுள் பத்தொன்பாவது; the 19th year of the jupiter cycle.

*[Skt. pārthiva> த. பார்த்திவ]*

**பார்த்திவம்** *pārttivam,* பெ.(n.) 1. நிலவுலகத் தொடர்பானது; that which pertains to the earth. 2. நிலங்களிலிருந்து பெறும் ஊதியம் (சுக்கிரநீதி,97); income derived from lands. 3. நிலம் (சூடா.); earth.

*[Skt. pārthiva> த. பார்த்திவம்]*

**பார்த்திவலிங்கம்** *pārttiva-liṅgam,* பெ.(n.) ஈரமண்ணாலான சிவலிங்கம் (சங்.அக.); Siva-liṅgam made of wet earth.

*[Skt. pārthiva+ த. இலங்கம் > த. பார்த்திவலிங்கம்]*

**பார்ப்பதி** *pārppadi,* பெ.(n.) பார்வதி பார்க்க; see Pārvati.

*[Skt. pārvati> த. பார்வதி → பார்ப்பதி]*

**பார்ப்பதிகொழுநன்** *pārppati-koḻunaṉ,* பெ.(n.) சிவபெருமான் (பிங்.); Sivaṉ the consort of Pārvadi.

*[Skt. pārvati+ த. கொழுநன்]*

**பார்ப்பதிபுதல்வன்** *pārppadi-pudalvaṉ,* பெ.(n.) பிள்ளையார் (பிங்.); Gaṇēśaṉ son of Pārvadi.

*[Skt. pārvati+ த. புதல்வன்]*

**பார்வணசிராத்தம்** *pārvaṇaśirāttam,* பெ.(n.) 1. பருவ காலங்களில் முன்னோர்க்குச் செய்யுஞ் சடங்கு; ceremony performed in honour of the manes at the paruvam. 2. காலை மாலை நேரங்களில் இல்லறத்தான், முன்னோர்களுக்கு (வேள்வித் தீ வளர்த்து) நடத்தும் காரியம்; ceremony to the manes accompanied with oblation in aupāsanāgni.

*[Skt pārvaṇa+śrāddha> த. பார்வணசிராத்தம்]*

**பார்வணவோமம்** *pārvaṇa-v-ōmam,* பெ.(n.) ஈமக்கடனுக்காகச் செய்யும் வேள்வித் தீ (சேதுபு.சேதுபல.98); fire oblation in the ceremonies to the manes.

*[Skt. pāravaṇa> த. பார்வணம்+ஓமம்]*

**பார்வதி** *pārvadi,* பெ.(n.) 1. உமை (திவா.); மலை அரசி; Parvati, daughter of Parvata - rāśaṉ. 2. திரெளபதி (யாழ்.அக.); Draupadi. 3. இடைச்சி (யாழ்.அக.); shepherdess. 4. காவி மண் (யாழ்.அக.); red ochre. 5. ஆனை நெருஞ்சில் (சங்.அக.); a small plant.

*[Skt. pārvati> த. பார்வதி]*

**பார்வதிலோசனம்** *pārvadi - lōśaṉam,* பெ.(n.) 16 மாத்திரைகள் கொண்ட துணைத் தாள வகை (பரத.தாள.3.); a variety of time-measure consisting of 16 māttirai, one of five upa-tāḷam.

*[Skt. pārvatī-lōcana> த. பார்வதிலோசனம்]*

**பாரகன்**[1] *pāragaṉ,* பெ.(n.) சுமப்போன்; carrier, bearer. "பாரகர்பரிக்க (சி.சி.2,95).

2. தாங்குபவன்; supporter, sustainer. "பாரகன் றனையும் (சிவதரு.பாவ.8).

*[Skt.bhārika> த. பாரகன்]*

**பாரகன்[2]** *pāragaṉ,* பெ.(n.) கல்வித்துறையில் கரை கண்டவன்; a learned person, one who has reached the further shore or utmost limit of an art.

*[Skt.pāra-ga> த. பாரகன்]*

**பாரகாவியம்** *pāra-kāviyam,* பெ.(n.) பெருங்காப்பியம்; great epic. "பார காவியமெலா மீரிரு தினத்தினிற் பகர" (தமிழ்நா.221).

*[Skt.bhāra+kāvya> த. பாரகாவியம்]*

**பாரங்கதன்** *pāraṅgadaṉ,* பெ.(n.) கல்வித் துறையிற் கரை கண்டவன்; a learned person, one who has reached the further shore or utmost limit of an art.

*[Skt.pāraṅ-gata> த. பாரங்கதன்]*

**பாரங்கு** *pāraṅgu,* பெ.(n.) 1. சிறுதேக்கு (சங்.அக.); beetle killer. 2. காட்டிலவு (சங்.அக.); false tragacanth. 3. நரி வாழை (மலை.); tube flower.

*[Skt.bhāraṅgi> த. பாரங்கு]*

**பாரசி** *pāraśi,* பெ.(n.) 1. பன்னிரண்டாம் நாள் பிறைநிலா (துவாதசி); the 12th day of the lunar fortnight. "வாட் கண்ணார் பாரசிநாள் பைம்பூந் தொடையலோடேந்திய தூபம் (திவ்.இயற்.1:82).

*[Skt.dvādaśī>Pkt.bārasi>த. பாரசி]*

**பாரசீகம்** *pāraśigam,* பெ.(n.) ஒரு நாடு; Persia one of 56 tesam. "பாரசீகத்திற் புக்கான் (இரகு.திக்கு.226).

*[Skt.pārasika> த. பாரசீகம்]*

**பாரணம்[1]** *pāraṇam,* பெ.(n.) 1. உண்ணுகை; eating, taking food. "தேவர் பாரணம் பண்ண விட்ட பைம்பொன் வேதிகையில் (பாரத. இராசசூ.90). 2. நோன்பு இருந்து உண்ணுகை; breaking a fast. "வந்தமாதவர்களோடும் பாரண மகிழ்ந்து செய்தான் (கந்தபு.கந்தவி. 14). 3. நிறைவு (யாழ்.அக.); satisfaction.

*[Skt.pāraṇa> த. பாரணம்]*

**பாரணை** *pāraṇai,* பெ.(n.) பாரணம்[1] 2 பார்க்க; see pāranam[1] 2."துவாதசிப் பாரணையருந்த (வரத.பாகவத.அம்பரீட.8)

*[Skt.pāraṇā> த. பாரணை]*

**பாரத்துவாசம்** *pārattuvāśam,* பெ.(n.) 1. கரிக்குருவி (திவ.); king crow. 2. காடை; quail. 3. வாழ்நாளை நீடிக்கச் செய்யும் மருந்து பற்றிக் கூறும் ஒரு நூல் (தொல்.பொருள். 75.உரை); a treatise on kalpa. 4. எலும்பு; bone.

*[Skt.bhārad-vāja> த. பாரத்துவாசம்]*

**பாரத்துவாசன்** *pārattuvāśaṉ,* பெ.(n.) 1. துரோணாச்சாரியன் (பிங்.); Drōṇa. 2. அகத்திய முனிவர் (யாழ்.அக.); sage Agastya. 3. ஒரு துறவி; a Ṛṣi believed to be nursed by a bird.

*[Skt.bhārad-vāja> த. பாரத்துவாசன்]*

**பாரதகண்டம்** *pārada-kaṇḍam,* பெ.(n.) இந்திய நாடு; India. இமயகிரிக்கும் தென் கடற்குமிடைப் பாகம் பாரதமே (சிவதரு. கோபுர.51).

*[Skt.bhārada> த. பாரதம்+கண்டம்]*

**பாரதப்போர்** *pārada-p-pōr,* பெ.(n.) பாண்டவ கௌரவப்போர் (திவ்.பெரியதி.4,6,6); the Mahabarata war. 2. பெருஞ்சச்சரவு; a big fight or quarrel.

*[Skt.bhārata+ த. போர்]*

**பாரதம்** *pāradam,* பெ.(n.) 1. பாரதப்போர்; the great war of Kurukṣētra "நீயன்றி மாபாரதமகற்ற மற்றார் கொல் வல்லாரே (பாரத.கிருட்டிண.34). 2. மாபாரதம்; the Mahabharata.

*[Skt.bhārata> த. பாரதம்]*

**பாரதாயன்** *pāradāyan,* பெ.(n.) பாரத்துவாச குலத்தைச் சேர்ந்தவன்; one belonging to Bhāradvāja gōtra. "பாரதாயன் கேசவன்" (S.I.I.iii,150,1).

*[Skt.bhārad-vāja> த. பாரதாயன்]*

**பாரதாரிகம்** *pāradārigam,* பெ.(n.) பிறர்மனை விழைகை (யாழ்.அக.); sexual intercourse with the wife of another, adultery.

*[Skt.pāradārya> த. பாரதாரிகம்]*

**பாரதி** *pāradi,* பெ.(n.) 1. கலைமகள் (பிங்.); Sarasvati. 2. பைரவி; goddess Bhairavi. "பாரதியாடிய பாரதி யரங்கத்து (சிலப்.6,39). 3. புலமையாளன்; learned person. 4. சொல் (யாழ்.அக.); word.

*[Skt.bhārati> த. பாரதி]*

**பாரதிகொழுநன்** *pāradikoḻunan,* பெ.(n.) நான்முகன் (பிங்.); Brahma, the consort of Sarasvati.

*[Skt.bharati> த. பாரதி+கொழுநன்]*

**பாரதியினாம்** *pāradi-y-inām,* பெ.(n.) கோயில்களில் பாரதம் படித்தற்கு ஏற்படுத்தப் பட்ட மானியம்; endowment for reading the Mahābhāradam in temples.

*[Skt.bhārata+inām> த. பாரதியினாம்]*

**பாரபட்சம்** *pārapatcam,* பெ.(n.) ஒரு பாற்கோடல்; partiality bias.

*[Skt.pāra-pakṣa> த. பாரபட்சம்]*

**பாரபத்தியக்காரன்** *pārapattiya-k-kāran,* பெ.(n.) 1. மேல் உசாவல் (விசாரணை) செய்யும் அதிகாரி; overseer. 2. வரி ஈட்டும் (வசூல்) அதிகாரி முதலியோர் (யாழ்.அக.); bailiff, collector of village revenue. 3. அலுவலன் (உத்தியோகத்தன்) (யாழ்.அக.); Officer. 4. பொறுப்பான வேலையுள்ளவன் (நெல்லை.); a person saddled with responsible duties.

*[பாரபத்தியம்+காரன் - பாரபத்தியக்காரன்]*

**பாரபத்தியம்** *pārapattiyam,* பெ.(n.) 1. மேல் உசாவல் (விசாரணை) (வின்.); inspection; stewardship. 2. வாய்மையாளனின் (நியாயம்) ஆளுமை (வின்.); judicial cognisance. 3. பொறுப்புமிக்க வேலை (இ.வ.); a work of great responsibiliy. 4. கொடுக்கல் வாங்கல் (வின்.); money - dealings.

**த.வ.முறை உசாவல், நயன் உசாவல், நேர் கேட்பு**

*[Te.pārupattemu> த. பாரபத்தியம்]*

**பாரம்பரம்** *pāramparam,* பெ.(n.) பாரம்பரியம் (யாப்.வி.பாயி.பக்.5.) பார்க்க; see *pārampariyam.*

*[Skt.pāram-para> த. பாரம்பரம்]*

**பாரம்பரிய நியாயம்** *pārampariya-niyāyam,* பெ.(n.) மரபாக (பரம்பரையாக) வரும் வழக்கம் (வின்.); rights or usages handed down from generation to generation.

**த.வ.குலவழக்கம், குடும்ப மரபு**

*[Skt.pāramparya+nyāya> த. பாரம்பரிய நியாயம்]*

**பாரம்பரியம்** *pārampariyam,* பெ.(n.) 1. மரபு (பரம்பரை.); series, unbroken succession, hereditary line. "பாரம்பரிய மதிமந்திரி" (இராமநா.உயுத்.1.). 2. முறைமை (சூடா.); regular order. 3. உலக முறை (ஐதிகம்) (வின்.); tradition.

**த.வ.தலைமுறை, கால்மரபு, குலவழக்கம்**

*[Skt.pāramparya> த. பாரம்பரியம்]*

**பாரம்பரியரோகம்** *pārampariya-rōgam,* பெ.(n.) குல (வம்சம்) வழியாய் வரும் நோய் (M.L.); hereditary disease.

**த.வ.குடும்பநோய், தலைமுறை நோய்**

*[Skt.pāram-parya+rōga> த. பாரம்பரியரோகம்]*

**பாரமார்த்திகம்** *pāramārttigam,* பெ.(n.) 1. முடிவில் உண்மையானது; ultimate reality. 2. மெய் அறிவிற் (ஞானத்து)குரியது; that which relates to highest truth or spiritual knowledge, opp. to viyāvakārikam.

3. ஏய்க்கும் எண்ணம் இல்லா தன்மை (இ.வ.); good faith; guilelessness. 4. ஈடுபாடு (C.G.); devotedness, loyalty.

*[Skt.pāramārthika> த. பாரமார்த்திகம்]*

**பாரமிதை** *pāramidai,* பெ.(n.) புத்தப் பதவிக் குரிய பத்து நன்னடத்தைகள் (விசேடம்); (Buddh.) the ten transcendental virtues necessary for Buddhahood. "அளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்து" (மணிமே.26, 45.).

*[Skt.pāram-itā> த. பாரமிதை]*

**பாரமேட்டி** *pāramētti,* பெ.(n.) ஒரு வகைத் துறவி (சந்நியாசி); a superior order of ascetics. "சந்நியாசிரியரிற் பாரமேட்டி யோகியென விருவருளர்" (கூர்மபு.வரு.40).

*[Skt.pāramēsthin> த. பாரமேட்டி]*

**பாரவதம்** *pāravadam,* பெ.(n.) *பாராவதம்*[1]; 1. (சூடா.) பார்க்க; see *pārāvadam*[1],1.

*[Skt.pāravata> த. பாராவதம்]*

**பாரவம்** *pāravam,* பெ.(n.) வில்லின் நாண் (யாழ்.அக.); bow-string.

**த.வ.வில்நரம்பு**

*[Skt.bhārava> த. பாரவம்]*

**பாரவிருதம்** *pāravirudam,* பெ.(n.) 1. உதவி (உபகாரம்); help, benefit. 2. வேள்வி முதலிய வற்றில் தேவர், முன்னோர் முதலியோரை எண்ணி இடும் உணவுப்பொருள்; anything offered in sacrifice.

**த.வ.கைம்மாறு, உயிர்க்காணிக்கை**

**பாரா**[1] *pārā,* பெ.(n.) இதளியம் (பாதரசம்) (இ.வ.); mercury, quick-silver.

**பாரா**[2] *pārā,* பெ.(n.) 1. காவல்; watch, custody. 2. *பாராக்காரன்* பார்க்க; see *pārā-k-kāran.*

*[U.pahra> த. பாரா[2]]*

**பாரா**[3] *pārā,* பெ.(n.) கட்டானாட்டத்தில் எட்டினையும், பன்னிரண்டினையும் குறிக்குந் தாய வகை; count of 8 or 12 in the game of draught.

*[U.bārā > த. பாரா[3]]*

**பாரா**[4] *pārā,* பெ.(n.) பகுதி (இ.வ.); bit, fragment.

**த.வ.துண்டு**

*[U.pārā> த. பாரா[4]]*

**பாரா**[5] *pārā,* பெ.(n.) புத்தகம் முதலியவற்றிற் பிரிவு பிரிவாகக் காட்டி எழுதப்படும், கட்டுரைப் பகுதி; paragraph.

**த.வ.பத்தி**

*[E.para> த. பாரா[5]]*

**பாராக்காரன்** *pārā-k-kāran,* பெ.(n.) காவலாள் (உ.வ.); guard, sentry.

*[U.pahra> த. பாரா+காரன்]*

**பாராசாரி** *pārāśāri,* பெ.(n.) பெரும் உடல் கொண்ட குதிரை (வின்.); big-sized horse.

*[U.bhārisawāri> த. பாராசாரி]*

**பாராபசலி** *pārā-paśāli,* பெ.(n.) ஆங்கிலேயரிடம் கருநாடக மாநிலம் முடிவாக ஒப்புவிக்கப்பட்ட கி.பி.1801 ஆகிய 1212ஆம் பசலியாண்டு (R.T.); fasli 1212 or the year 1801 when the Carnatic country was finally ceded to the English.

*[U.bārā> த. பாரா+பசலி.]*

**பாராவதம்**[1] *pārāvadam,* பெ.(n.) 1. புறா (திவா.); dove, pigeon. 2. கரும்புறா (பிங்.); blue rock pigeon, *Columba intermedia.* 3. குரங்கு (யாழ்.அக.); monkey. 4. மலை (யாழ்.அக.); mountain.

*[Skt.pārāvata> த. பாராவதம்]*

**பாராவதம்**[2] *pārāvadam,* பெ.(n.) கருங்காலி மரம் (மூ.அ.); ebony.

**பாராவபாத்** *pārāvapāt,* பெ.(n.) முகமது நபி இறந்த (மரண) நாளைக் (தினம்) கொண்டாடுந் திருவிழா (W.G.); the day of Muhammad's death, observed by the Muhammadans as a religious festival.

*[U.bārāh-wafāt> த. பாராவபாத்]*

**பாராவளையம்** *pāravaḷaiyam,* பெ.(n.) வளைதடி (பிங்.); a kind of boomerang. சதங்கை மாலையைப் பாராவளையமாக எறிந்தும் (சீவக.2656, உரை).

**பாரி**[1] *pāri,* பெ.(n.) 1. பூந்தாது; pollen. 2. கட்பாத்திரம்; liquor jug. 3. யானை கட்டுங் கயிறு; rope for tying an elephant. 4. சிறங்கை நீர்; handful of water.

த.வ.1. மலர்த்துகள் 2. மதுகலயம் 3. கையளவு நீர்

*[Skt.pārī> த. பாரி]*

**பாரி**[2] *pāri,* பெ.(n.) கடல் (சூடா.); sea, ocean.

த.வ.முந்நீர்

*[Skt.vāriša> த. பாரி]*

**பாரி**[3] *pāri,* பெ.(n.) மனைவி; wife. "பொற்பூ மடந்தை நற்பாரி" (மாறனலங்.664).

த.வ.இல்லாள், வாழ்க்கைத்துணை

*[Skt.bhāryā> த. பாரி]*

**பாரி**[4] *pāri,* பெ.(n.) அரிமா (சிங்கம்) (யாழ்.அக.); lion.

*[Skt.bhārī> த. பாரி]*

**பாரி**[5] *pāri,* பெ.(n.) கள் (பிங்.); toddy.

த.வ.தேறல்

*[Skt.vāruṇi> த. பாரி]*

**பாரி**[6] *pāri,* பெ.(n.) 1. பருத்தது; that which is heavy or big. 2. முதன்மையானது; that which is important "பாரிவிசயம்". 3. குமுகாய செல்வாக்கு உடையவன், மதிப்பிற்குரியவன்; man of consequence, weight or importance.

*[U.bhārī> த. பாரி]*

**பாரி**[7] *pāri,* பெ.(n.) 1. கொட்டு முழக்குடன் புரியும் இராக்காவல்; night-watch with the beat of drum. "விளம்பும் பாரியு மடங்கினது" (கம்பரா.ஊர்தே.158). 2. இராக்காவலாளர் பாடல்; night - watchman's song. சங்கீதப் பாரி, பாறைப்பாரி, மணிப்பாரி (இ.வ.).

த.வ.இராப்பாடகன், இராப்பாடி

*[U.pahra> த. பாரி]*

**பாரிகத்து** *pārikattu,* பெ.(n.) நுண்மை (இ.வ.); minuteness.

*[U.farāqat> த. பாரிகத்து]*

**பாரிகன்** *pārigaṉ,* பெ.(n.) தோட்சுமைக்காரன். (யாழ்.அக.); carrier, porter.

த.வ.சுமைதூக்கி

*[Skt.bhārika> த. பாரிகன்]*

**பாரிகாரிகன்** *pāri-kārigaṉ,* பெ.(n.) மாலை தொடுப்போன் (யாழ்.அக.); one who makes garlands.

*[Skt.pārī-hārika> த. பாரிகாரிகன்]*

**பாரிகாரியம்** *pāri-kariyam,* பெ.(n.) முதன்மை யான பணி (யாழ்.அக.); important business.

*[U.bhārī> த. பாரி+காரியம்]*

**பாரிசச்சூலை** *pāriša-c-cūlai,* பெ.(n.) பக்க ஊதை (இராசவைத்.160.); paralytic attack on one side of the body.

த.வ.கை கால் விழுதல்

*[Skt.pāršva+šūlā> த. பாரிசச்சூலை]*

**பாரிசஞ்செய்-தல்** *pārišañjey-,* 1 செ.குன்றாவி. (v.t.) பொறுப்பாக்குதல்; to entrust. "திருவாவடுதுறை மடத்துப் பாரிசஞ் செய்திருப்பதால்" (T.A.S.i,150).

*[Skt.pāršva> த. பாரிசம்+செய்-தல்]*

**பாரிசம்** *pārišam,* பெ.(n.) 1. பக்கம்; side. "காவிரிக்கு வடபாரிசத்தில்" (திருப்பு.183). 2. உடலின் ஒரு பக்கம்; side of a body. "இரு பாரிசத்திலும் பணிசெயுந் தொழிலாளர் போல்" (தாயு.சித்தர்கணம்.2). 3. வயம் (உ.வ.); care, custody. 4. திசை (வின்.); quarter, region.

*[Skt.pāršva> த. பாரிசம்]*

**பாரிசம்விழு-தல்** *pārišam-viḻu,* 3 செ.கு.வி. (v.i.) 1. பக்க வலிப்பு (பக்கவாதம்) அடைதல்;

to become paralised. 2. சாதல் (மரித்தல்); to die, said of a benefactor.

*[Skt. pārśva> த. பாரிசம்+விழு-தல்]*

**பாரிசவாதம்** *pāriśa-vādam,* பெ.(n.) 1. உடலின் ஒரு பக்கத்தை உணர்ச்சியறச் செய்யும் நோய் வகை (பைஷஜ.302); paralytic attack on one side of the body, Hemiplegia. 2. குடலிறக்கம் (இ.வ.); hernia.

**த.வ.கை கால் விழுதல், பக்கவலிப்பு**

*[Skt. pārśva+vāta> த. பாரிசவாதம்]*

**பாரிசவாயு** *pāriśa-vāyu,* பெ.(n.) பாரிசவாதம் பார்க்க (உ.வ.); see *pāriśa-vādam.*

*[Skt. pārśva+vāyu> த. பாரிசவாயு]*

**பாரிசாதம்** *pāriśādam,* பெ.(n.) ஐவகை (பஞ்ச) மரங் (தரு)களுள் ஒன்று; a tree of svarga, one of pañja-taru. "பாரிசாத நேர்பூக்கவி னிமிர்புயம்" (இரகு.திருவவ.9). 2. முண்முருக்கு (மலை.); night - flowering jasmine. 3. பவள மல்லிகை மர வகை (மலை.); Indian coral tree.

*[Skt. pārijāta> த. பாரிசாதம்]*

**பாரிசு** *pāriśu,* பெ.(n.) மழை (R.T.); rain.

*[U. bariṣ> த. பாரிசு]*

**பாரிசுபட்டி** *pāriśu-paṭṭi,* பெ.(n.) மழை பெய்த அளவைக்குறிக்கும் கணக்கு; account of rainfall.

*[பாரிசு+பட்டி]*

**பாரிசேடப்பிரமாணம்** *pāriśēḍa-p-piramāṇam,* பெ.(n.) எஞ்சுவதைக் கொள்ளுகை ஆகிய ஆணை (பிரமாணம்) (சி.போ.பா.110,புதுப்); (Log.) law of elimination.

*[Skt. pāriśēṣa+pra-māna> த. பாரிசேடப் பிரமாணம்]*

**பாரிசேடம்** *pāriśēḍam,* பெ.(n.) *பாரிசேடப் பிரமாணம்* பார்க்க; see *pāriśēḍa-p-piramāṇam.* "பாரிசேட மதனிற் பரனுக்கு" (ஞானா.5.).

*[Skt. pāriśēṣa> த. பாரிசேடம்]*

**பாரியாத்திரம்** *pāriyāttiram,* பெ.(n.) 449 கோபுரங்களையும் (சிகரம்) 57 மேனிலைக் கட்டுகளையுமுடைய கோயில் (சுக்கிரநீதி, 230); temple having 449 towers and 57 storeys.

*[Skt. pāri-yātra> த. பாரியாத்திரம்]*

**பாரியாள்**[1] *pāri-y-āḷ,* பெ.(n.) பெருத்தவன் (வின்.); stout, robust man.

**த.வ.எருத்தன், கொழுத்தவன்**

*[U. bhāri> த. பாரி+ஆள்]*

**பாரியாள்**[2] *pāriyāḷ,* பெ.(n.) *பாரியை* பார்க்க; see *pāriyai.*

**த.வ. அகமுடையாள், வாழ்வரசி**

*[Skt. bhārya> த. பாரி+ஆள்]*

**பாரியை** *pāriyai,* பெ.(n.) மனைவி; wife.

**த.வ. இல்லாள், வாழ்க்கைத்துணை, மனையாள், அகமுடையாள்**

*[Skt. bhāryā> த. பாரியை]*

**பாரிகத்து** *pārikattu,* பெ.(n.) 1. விடுதலை ஆவணம் (பத்திரம்) (வின்.); release deed. 2. பிரிவினை; partition, division 3. பிரிவினை ஆவணம் (பத்திரம்); partition deed.

*[U. farighkhatti> த. பாரிகத்து]*

**பாலக்கண்ணாடி** *bāla-k-kaṇṇāḍi,* பெ.(n.) சிறுவர்க்கு அமைந்த மூக்குக் கண்ணாடி (வின்.); spectacles adapted to young eyes.

*[Skt. bāla > த. பாலன்+ கண்ணாடி > பாலக் கண்ணாடி]*

**பாலக்கிரகாரிட்டம்** *bāla-k-kirakāriṭṭam,* பெ.(n.) 1. கோள்களின் தீய பார்வையால் குழந்தைகட்கு உண்டாகும் பீடை (சீவக.306, உரை.); frequent sickness of children believed to be due to the malign influence of planets. 2. குழந்தைகளுக்கு உண்டாகும் வயிற்றுப்போக்கு (இ.வ.); inflammatory diarrhoea of infants.

த.வ.கோள் குற்றக் கழிச்சல்

*[Skt.bāla+graha+āīṣa> த. பாலக்கிரகாரிட்டம்]*

**பாலக்கிராணி** *bāla-k-kirāṇi*, பெ.(n.) நோய் வகை (இராசவைத்.159); a kind of disease.

*[Skt.pāla-k-grahaṇi> த. பாலக்கிராணி]*

**பாலகரை** *bāla-karai*, பெ.(n.) குழந்தையிசிவு (M.L.); infantile convulsions.

த.வ.குழந்தை இழுப்பு

*[Skt.bāla+hara> த. பாலகரை]*

**பாலகன்[1]** *bālagaṉ*, பெ.(n.) காப்போன் (வின்.); protector, guardian.

*[Skt.bālaka> த. பாலகன்[1]]*

**பாலகன்[2]** *bālagaṉ*, பெ.(n.) 1. குழந்தை; infant. "பாலகனென்று பரிபவஞ் செய்யேல்" (திவ். பெரியாழ்.1,5,7). 2. புதல்வன் (புத்திரன்); son. "இந்தப் பாலக னிறந்தானென்னா" (அரிச். பு.மயான.8).

*[Skt.bālaka> த. பாலகன்[2]]*

**பாலசிட்சை** *bāla-šiṭšai*, பெ.(n.) 1. குழந்தைகளுக்குக் கற்பித்தல் (உ.வ.); teaching of children. 2. சிறுவர்களுக்கான (தொடக்கப் பாடப்) புத்தகம்; a primer for infants.

*[Skt.bāla+šikṣā> த. பாலசிட்சை]*

**பாலம்[1]** *bālam*, பெ.(n.) நெற்றி (பிங்.); forehead. "தீவிழிப் பாலமும்" (விநாயகபு.11,11).

த.வ.நுதல்

*[Skt.bhāla> த. பாலம்]*

**பாலம்[2]** *bālam*, பெ.(n.) மழு (திவா.); a weapon.

த.வ.கோடரி

*[Skt.bhiṇḍi-pāla> த. பாலம்]*

**பாலமை** *bālamai*, பெ.(n.) அறியாமை; childish innocence. "பாலமை யுடையராகிப் படருறப் படுவதென்னே"(உபதேசகா.சிவபுண்ணிய.339).

த.வ.சிறுபிள்ளைத்தனம், வெகுளித்தனம்

*[Skt.bāla> த. பாலமை]*

**பாலலீலை** *bāla-līlai*, பெ.(n.) 1. குழந்தை விளையாட்டு; play of children. 2. இளைஞரின் இன்ப விளையாட்டு; youthful sport. "பொய்யொன்றுண் மெய்யிற் புகும்பால லீலைதனை" (அருட்பா, i, நெஞ்சறி.533).

*[Skt.bāla+līlā> த. பாலலீலை]*

**பாலலோசனன்** *bāla-lōšaṉaṉ*, பெ.(n.) நெற்றிக்கண்ணுடைய சிவன்; Siva, having an eye on His forehead. "பாலலோசனற் கெனத் திருவிழாவுறப் பணிப்பார்" (உபதேசகா. சிவபுண்ணி.5).

த.வ.நெற்றிக்கண்ணோன், முக்கண்ணன்

*[Skt.bāla+lōcana> த. பாலலோசனன்]*

**பாலவிலோசனன்** *pāla-vilōšaṉaṉ*, பெ.(n.) பாலலோசனன் பார்க்க; see pāla-lōšaṉaṉ. "பால விலோசனர் பாதம்" (உபதேசகா. சிவநாம.133).

*[Skt. bhālā +vilōcana> த. பால விலோசனன்]*

**பாலன்[1]** *bhālaṉ*, பெ.(n.) பாலகன்[2] பார்க்க; see bālagaṉ[2]. "பாலனாய் விருத்தனாகி" (தேவா.8,10).

*[Skt.bāla> த. பாலன்[1]]*

**பாலன்[2]** *bālaṉ*, பெ.(n.) காப்போன்; protector, guardian, used in compounds. "பூபாலன், கோபாலன்".

த.வ. பேணுபவன்

*[Skt.pāla> த. பாலன்[2]]*

**பாலனம்** *bālaṉam*, பெ.(n.) பாதுகாப்பு; protection, defence. "என் பாலனத்துக்குன் பாலனம் வேண்டுங்காண்" (தனிப்பா.i, 344,61).

*[Skt.pālana> த. பாலனம்]*

**பாலனைக்காத்தான்** *bālaṉai-k-kāttaṉ*, பெ.(n.) மணத்தக்காளி (மூ.அ.) (பதார்த்த.690); black nightshade.

*[Skt.bāla> த. பாலன்+ஐ+காத்தான்]*

**பாலாசிரியன்** *bālāśiriyaṉ,* பெ.(n.) சிறுவர்க்குக் (பாலர்) கற்பிக்கும் ஆசிரியன்; teacher of children. "மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார்" (அகநா.92). (S.I.I.iii,154,26).

*[Skt.bāla> த. பாலன்+ஆசிரியன்]*

**பாலாலயம்** *bālālayam,* பெ.(n.) கருவறையைப் பழுதுபார்த்துப் புதுப்பிக்குங் காலத்தில் சிறிது காலம் கடவுளை வேறிடத்தில் எழுந்தருளச் செய்திருக்குஞ் சிறிய ஆலயம்; temporary structure to accommodate a deity when its inner shrine is under repair.

**த.வ.மாற்றுஆலயம், பிள்ளைக்கோயில்**

*[Skt.bālālaya> த. பாலாலயம்]*

**பாலிசம்** *bāliśam,* பெ.(n.) அறியாமை (ஈடு, 6.2:6, ஜீ); ignorance.

**த.வ. மடமை**

*[Skt.bāliśa> த. பாலிசம்]*

**பாலிசன்** *bāliśaṉ,* பெ.(n.) மூடன் (ஈடு, 6,2,6, ஜீ); ignorant person.

**த.வ. முட்டாள், மடையன், அறிவிலி**

*[Skt.bāliśa> த. பாலிசன்]*

**பாலியம்** *bāliyam,* பெ.(n.) 1. இளமை; youth. 2. குழந்தைப் பருவம்; childhood.

**த.வ. 1. விடலை, 2. மழலைப்பருவம்**

*[Skt.bālya> த. பாலியம்]*

**பாலியன்** *bāliyaṉ,* பெ.(n.) 1. இளைஞன்; lad, boy, youth. 2. ஆண் குழந்தை (வின்.) male infant.

**த.வ. விடலை**

*[Skt.bālya> த. பாலியன்]*

**பாலை** *pālai,* பெ.(n.) 1. பெண்; girl. 2. குழந்தை (வின்.); child. 3. பதினாறாண்டுக்குட்பட்ட பெண்; a young woman under 16 years of age. 4. ஒன்று முதல் பதினாறு ஆண்டு வரையுள்ள மகளிர் பருவம் (கொக்கோ.4,2,); the period up to the 16th year in the life of a woman, one of mūṉṟu-paruvam. 5. சிவசத்தி; Siva-sakti.

**த.வ.1. மகளிர், 2. மடந்தை**

*[Skt.bāla> த. பாலை]*

**பாவகம்**[1] *pāvagam,* பெ.(n.) 1. கருத்து; meaning, purpose, intention. "பாவக மின்னதென்று தெரிகிலர்" (கம்பரா.கும்ப.9). 2. ஊழ்கம்; contemplation, meditation. "பாவகமாயிருந்து" (திருப்பு.608). 3. இயல்பு (வின்.); natural state, innate propensity or disposition, nature. 4. உருவம்; appearance, form. "வேடனாம் பாவகங் கொடு நின்றது" (தேவா.533,1). 5. காதலை வெளியிடும் குறிப்பு (வின்.); external expression of amatory feelings. 6. நடிப்பு; pretence. "பாவகம் பலவுஞ் செய்து" (பெரியபு.திருநீலகண்ட.26).

*[Skt.bhāvaka> த. பாவகம்]*

**பாவகம்**[2] *pāvagam,* பெ.(n.) 1. தீ; fire. "பாவகப் பகுவாய் நாகம் (திருவாலவா.36,5). 2. சேங்கொட்டை (யாழ்.அக.); marking nut.

*[Skt.pāvaka> த. பாவகம்]*

**பாவகாரி** *pāva-kāri,* பெ.(n.) கரிசு (பாவம்) செய்தவன்; sinner. "பாவகாரிகள் பார்ப்பரிதென்பரால் தேவதேவன் சிவன் பெருந்தன்மையே (தேவா.1218,5).

*[Skt.pāpa-kārin > த. பாவகாரி]*

**பாவச்சடம்** *pāva-c-caḍam,* பெ.(n.) பழவினைக்கீடாக எடுத்த உடல் (வின்.); bodies assumed by a soul as the effect of its former deeds.

**த.வ.முன்வினை பிறப்பு**

*[Skt.pāpa+jaḍa> த. பாவச்சடம்]*

**பாவச்சுமை** *pāva-c-cumai,* பெ.(n.) துய்த்துக் கழித்தற்குரிய அறங்கடை (வின்.); burden of sin, accumulated evil, to be expiated by suffering.

**த.வ. கழுவாய்த் துன்பம்**

*[Skt.pāpa> த. பாவம்+சுமை]*

**பாவசங்கீர்த்தனம்** *pāva-šaṅgirttaṉam,* பெ.(n.) தன் அறங்கடைகளைக் குருவிடத்தில் சொல்லுகை (கிறித்து.) (வின்.); confession of sin.

**த.வ.குற்றம் ஒப்புவித்தல்**

*[Skt.pāpa+saṅ-kirtana> த. பாவசங்கீர்த்தனம்]*

**பாவசன்மம்** *pāvašaṉmam,* பெ.(n.) அறங்கடையுள்ள பிறவி (வின்.); sinful birth.

**த.வ.முன்வினை பிறப்பு**

*[Skt.pāpa+janman> த. பாவசன்மம்]*

**பாவசுத்தி[1]** *pāva-šutti,* பெ.(n.) அறங்கடை நீங்குகை; removal of sin.

**த.வ.குற்ற நீக்கம்**

*[Skt.pāpa+šuddhi> த. பாவசுத்தி]*

**பாவசுத்தி[2]** *pāva-šutti,* பெ.(n.) மனத்தூய்மை (கோயிலொ.44); purity of heart.

**த.வ.தூய உள்ளம்**

*[Skt.bhāva+šuddhi> த. பாவசுத்தி]*

**பாவசேடம்** *pāvašēḍam,* பெ.(n.) 1. தூய்மை யான (பரிசுத்தம்) ஆடவனிடத்து (புருசன்) எஞ்சியிருக்குந் தீவினை; remains of sin attaching to holy persons. 2. துய்த்துக் கழிக்க வேண்டிய கரும பலன்; demerit of soul remaining at the close of a term of existence to be exhausted in future births.

*[Skt.pāpa+šēṣa> த. பாவசேடம்]*

**பாவதி** *pāvadi,* பெ.(n.) பற்றுச்சீட்டு (ரசீது) (C.G.); receipt for money paid, acknowledgment.

*[U.pāoti> த. பாவதி]*

**பாவநாசம்** *pāva-nāšam,* பெ.(n.) 1. அறங் கடையை நீக்குகை; removal of sin, absolution. "பாவநாச மாக்கிய பரிசும்" (திருவாச.2,57). 2. அறங்கடை (பாவம்) போக்கும் இடம் அல்லது நீர் (தீர்த்தம்) (சேதுபு.பாவ.9.); sacred place or water which removes or absolves from sin.

*[Skt.pāpa+nāša> த. பாவநாசம்]*

**பாவப்படு-தல்** *pāva-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) இரக்கம் காட்டுதல்; take pity on; sympathize. அவனுக்குப் பாவப்பட்டு உதவி செய்தேன் (உ.வ.). புயலில் பெற்றோரைப் பறி கொடுத்த பாவப்பட்ட குழந்தைகள். (உ.வ.).

**த.வ.கரிசனம் காட்டுதல், அருள்கொள்ளல்**

*[Skt.pāpa> த. பாவம்+படு-தல்]*

**பாவப்பிரகாசம்** *pāva-p-piragāšam,* பெ.(n.) ஒரு வடமொழி ஆயுள்வேத நூல்; a Sanskrit Āyurvēdic book (சா.அக.).

*[Skt.pāpa+pra-kāša> த. பாவப்பிரகாசம்]*

**பாவபரிகாரம்** *pāva-parikāram,* பெ.(n.) கழுவாய் (பிராயச்சித்தம்); expiation of sin.

*[Skt.pāpa+pari-hāra> த. பாவபரிகாரம்]*

**பாவபாணம்** *pāva-bāṇam,* பெ.(n.) இச்சையைத் தூண்டி, மனதை மெய் மறக்கச் செய்யும், காமனின் வில்லிலிருந்து வரும் அம்புகள் (சீவக.706, உரை); excited state of mind, considered as Cupid's arrows inducing sexual love, dist.fr.tiraviya pāṇam.

**த.வ.காதல் அம்பு**

*[Skt.bhāva+bāṇa> த. பாவபாணம்]*

**பாவபுண்ணியம்** *pāva-puṇṇiyam,* பெ.(n.) நல்வினை தீவினைகள்; demerits and merits.

**த.வ.நன்மை தீமைகள்**

*[Skt.pāpa+puṇya> த. பாவபுண்ணியம்]*

**பாவம்[1]** *pāvam,* பெ.(n.) 1. தீவினைப் பயன்; accumulated result of sinful actions. "பகைபாவ மச்சம் பழி" (குறள்,146). 2. தீச் செயல் (சூடா.); sinful act, crime. 3. அளறு (பிங்.); hell.

**த.வ. 1. அறங்கடைத்துன்பம் 2. குற்றச் செயல் 3. நிரயம்**

*[Skt.pāpa> த. பாவம்]*

**பாவம்²** *pāvam*, இடை (int.) இரக்கக்குறிப்பு; an exclamation of pity. அவள் மிக ஏழை. பாவம்.

*[Skt.pāpa> த. பாவம்]*

**பாவம்³** *pāvam*, பெ.(n.) 1. ஊழ்கம் (தியானம்) (சூடா.); contemplation, meditations. 2. எண்ணம் (யாழ்.அக.); idea, opinion, conception. 3. உளதாந்தன்மை (பிரபஞ்சவி. 156); state or condition of existence. 4. உணர்வு மெய்ப்பாட்டு நளிநயம் (அபிநயம்); (Nāṭya.) gesture expressive of emotions. "பாவமோடராகம்" (திருவிளை. கான்மா.8). 5. முறைமை (பிங்.); established order 6. விளையாட்டு (இலக்.அக.); sport.

த.வ.1. உள்ளொடுக்கம் 2. கருத்து 3. இருக்கும் நிலை 4. நடனக் குறிப்புச் செய்கை 5. நிலையான முறை

*[Skt.bhāva> த. பாவம்³]*

**பாவம்⁴** *pāvam*, பெ.(n.) மனம், மெய், வாக்கு இவற்றின் நடவடிக்கைகளால் ஏற்படும் ஆதனின் நிலை (நீலகேசி,427,உரை.); (Jaina) the change in the soul, due to the activities of the mind, body and speech.

*[Skt.bhāva> த. பாவம்]*

**பாவம்பழி** *pāvam-paḻi*, பெ.(n.) கொடுந் தீச்செயல்; heinous sin.

த.வ.கொடுங்குற்றம்

*[Skt.pāpa> த. பாவம்+பழி]*

**பாவமன்னிப்பு** *pāva-maṉṉippu*, பெ.(n.) அறங்கடையைப் (பாவம்) பொறுத்து மன்னித்தல் (கிறித்து.); forgiveness of sins.

த.வ.குற்ற மன்னிப்பு

*[Skt.pāpa> த. பாவம்+மன்னிப்பு]*

**பாவமூர்க்கத்தனம்** *pāva-mūrkka-t-taṉam*, பெ.(n.) தான் செய்த அறங்கடைக்கு (பாவம்) இரங்காமை (கிறித்து.); impenitence.

*[Skt. bhāva+mūrkha+tva > த. பாவ மூர்க்கத்தனம்]*

**பாவர்** *pāvar*, பெ.(n.) தீவினையாளர்; sinners. "பாவர் சென்றல்கு நரகம்" (திருக்கோ.337).

த.வ.அறங்கடையாளர்

*[Skt.pāpa> த. பாவர்]*

**பாவரசம்** *pāva-rašam*, பெ.(n.) 1. கருத்து நயம்; beauty of an idea. 2. மெய்ப்பாட்டுச் சுவை (பணவிடு.187); (Nāṭya) aesthetic excellence of gestures.

*[Skt.bhāva+rasa> த. பாவரசம்]*

**பாவலா** *pāvalā*, பெ.(n.) சுற்றித்திரிகை (இ.வ.); loitering.

த.வ.சோம்பித்திரிகை

*[U.āwāra> த. பாவலா]*

**பாவனசம்** *pāvaṉašam*, பெ.(n.) உள்ளிழுத்த மூச்சை வயிற்றில் நிறுத்தும் மூச்சுப் பயிற்சிக்கலை (பிராணாயாம வகை); suppresion of breath retention of vital air which is breathed in. (சா.அக)

**பாவனத்துவனி** *pāvaṉa-t-tuvaṉi*, பெ.(n.) சங்கு (சிந்தாமணி நிகண்டு, 102); conch.

*[Skt.pāvana-dhvani> த. பாவனத்துவனி]*

**பாவனன்** *pāvaṉaṉ*, பெ.(n.) 1. தூய்மை செய்பவன்; one who purifies. 2. ஆஞ்சநேயர்; Hanumāṉ, the son of Wind-God. 3. வீமன் (பாரத.பத்தாம்.142); Bhīma the son of Wind God.

*[Skt.pāvana> த. பாவனன்]*

**பாவனாதீதம்** *bāvaṉātīdam*, பெ.(n.) எண்ணுதற்கரியது; that which transcends thought.

த.வ.கருதத்தக்கது

*[Skt.bhāvaṉā+atīta> த. பாவனாதீதம்]*

**பாவனை** *pāvaṉai*, பெ.(n.) 1. நினைப்பு (மணிமே,30:258); imagination, fancy. 2. தெளிகை (நன்.விருத்.பாயிரவுரை); clear understanding. 3. உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, உண்மையறிவு எனும் ஐவகை மன

வெளிப்பாடுகளுள் ஒன்று (மணிமே.30:189); (Buddh.) a kind of mental effort or reflecton, one of pañja-kandam. 4. ஊழ்கம் (தியானம்); religious meditation. "எம்பாவனை தீர்த்த" (திருநூற்.88). 5. ஊழ்கிக்கப்படுவது (தியானம்) (வின்.); subject of contemplation. 6. ஒப்பு; likeness, similitude. பிள்ளை பாவனையாகச் செய்தான். 7. அடையாளம் (வின்.); repr - sentation, symbol. 8. போலி (வின்.); dissimulation, 9. நடத்தை; manners, deportment, carriage. வடிவழகும் பாவனையும் (இ.வ.). 10. நூற்றெட்டு துணை மறைமங்களுள் (உபநிடதம்) ஒன்று; an Upaniṣad,one of 108.

*[Skt.bhāvanā> த. பாவனை]*

**பாவனைக்கு நட–த்தல்** *pāvaṉaikku-naḍa-,* 3 செ.கு.வி.(v.i.) நடிப்புக் காட்டுதல் (யாழ்ப்.); to keep up appearances.

*[Skt. bhāvanā > த. பாவனை+க்கு+ நட+த்தல்]*

**பாவனைகாட்டு–தல்** *pāvaṉai-kāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. போலச் செய்தல்; imitate. 2. மெய்ப்பாடு, நயநெளிவு காட்டுதல் (அபிநயம்); (Nāṭya) to express by gesturess in dancing or acting. 3. மாற்றுரு கொள்ளுதல்; to assume an appearance, to counterfeit, dissemble. 4. வரைந்து காட்டுதல்; to show by figures or diagrams, to portray.

*[Skt.bhāvanā> த. பாவனை+காட்டு–தல்]*

**பாவாபாவம்** *pāvāpāvam,* பெ.(n.) உண்மையும் இன்மையும்; existence and non-existence.

**த.வ.உளவும் இலவும்**

*[Skt.bhāvā-bhāva> த. பாவாபாவம்]*

**பாவி¹–த்தல்** *pāvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. எண்ணுதல்; to think, conceive. 2. ஆழ்ந்து எண்ணுதல்; to contemplate, meditate. "பாவியேனுன்னையல்லால்" (திவ்.திருமாலை,35). 3. அழகுறு ஒப்பனை செய்தல்; to imagine fancy. "தானுமதுவாகப் பாவித்து" (வாக்குண்.14).

**த.வ.1. கருதுதல் 2. உள்ளொடுக்கம் 3. மினுக்குதல்**

*[Skt.bhāvi> த. பாவி–த்தல்]*

**பாவி²** *pāvi,* பெ.(n.) தீமையாளன்; sinner. "அழுக்கா றெனவொரு பாவி" (குறள், 168).

**த.வ. கொடுமைக்காரன்**

*[Skt.pāpin> த. பாவி²]*

**பாவி³** *pāvi,* பெ.(n.) வரக்கூடியது; that which must happen. "பாவியை வெல்லும் பரிசில்லை" (திருக்கோ.349).

**த.வ.எதிர் வரல்**

*[Skt.bhāvin> த. பாவி³]*

**பாவி⁴** *pāvi,* பெ.(n.) 1. கெடுதல் செய்யாதவன், அமைதியானவன்; inoffensive, harmless, good- natured person. 2. பேதை; person of weak intellect.

**த.வ. கள்ளமிலாதவன்**

**பாவிகம்** *pāvigam,* பெ.(n.) தொடக்கம் முதல் முடிவு வரை அழகுடையதாக அமையும் பாவியப் (காவியம்) பண்பு (தண்டி.89); (Rhet.) the basic idea running through a poem.

**த.வ.பாவிய நடை**

*[Skt.bhāvika> த. பாவிகம்]*

**பாவிட்டன்** *pāviṭṭaṉ,* பெ.(n.) கொடுந்தீமை செய்தவன்; sinful man. "பாவிட்டன் மேலோர் கோபம் பணித்திலா மணத்தினார்" (மேருமந். 745).

*[Skt.pāpiṣtha> த. பாபிட்டன்]*

**பாவேப்பிரயோகம்** *pāvē-p-pirayōgam,* பெ.(n.) "மக்களாற் (சனம்) இன்பப்படுதல் என்பது போன்ற வடமொழி வினைவழக்கு (பி.வி.36,உரை.); impersonal voice in sanskrit, as janēna gamyatē.

*[Skt.bhāvē-prayōga>த. பாவேப்பிரயோகம்]*

**பாற்கரன்** *pāṟkaraṉ,* பெ.(n.) ஞாயிறு; sun.

**த.வ.எரிகதிர்**

*[Skt.bhās-kara> த. பாற்கரன்]*

**பாற்கரியம்** *pāṟkariyam,* பெ.(n.) முழுமுதற் பொருளில் இருந்து உலகம் தோன்றிற்று என்னும் மதம் (சி.சி.பர.பாற்கரி.1,உரை.); the

doctrine which holds that the world is evolved from the supreme being.

*[Skt.Bhāskariya> த. பாற்கரியம்]*

**பாற்குனம்** *pāṟkuṉam,* பெ.(n.) மீனம் (பங்குனி); the month of the Tamil year, March-April.

*[Skt.phalguna> த. பாற்குனம்]*

**பாற்குனி** *pāṟkuṉi,* பெ.(n.) 1. பன்னிரண்டாம் விண்மீனாகிய மானேறு (சூடா.); the 12th nakṣatra. 2. பாற்குனம், 1. (யாழ்.அக.) பார்க்க; see pāṟkuṉam, 1.

*[Skt.bhalguni> த. பாற்குனி]*

**பானகம்** *pāṉagam,* பெ.(n.) 1. சர்க்கரை ஏலம் முதலியன கலந்த குடிநீர்; sweet drink, especially prepared with jaggery and spices. "முப்பழம் பானகம்" (சேதுபு.சேதுபல. 137). 2. நீர்மோர் (யாழ்.அக.); a preparation of butter - milk. 3. பருகும் குடிப்பு, அருந்துதல் (பிங்.); drinking.

**த.வ. பருகம்**

*[Skt.panaka> த. பானகம்]*

**பானம்** *pāṉam,* பெ.(n.) 1. குடிக்கை; drinking சலபானங்கூட இல்லை. 2. அருளொடு செய்யும் செயல்கள் பதினான்கனுள் குடித்தற்கு நீரளிக்கை (நீர்க்கத் தண்டனம்); giving drinking water, one of 14 tayā-virutt. 3. மது அல்லது புளித்த பிற நீரகங்கள்; toddy or other fermented liquor. "பானந்தனையொத்து" (அரிச். பு.நாட்.4). 4. பருகுமுணவு (பிங்.); luquid food.

**த.வ. பானம்**

*[Skt.pāna> த. பானம்]*

**பானீயம்** *pāṉiyam,* பெ.(n.) 1. நீர் (பிங்.); water. "பானீயத்துக் கைவரு மெய்பதையா நிற்பர்" (பாரத.நச்சுப்.21). 2. பருகுமுணவு;drink. "பானீய நிவேதனம்" (திருவிளை. இந்திரன் முடி. 16).

**த.வ.அருந்துணவு**

*[Skt.pāniya> த. பானீயம்]*

**பானு** *pāṉu,* பெ.(n.) 1. கதிரவன் (பிங்.); Sun. 2. ஒளி (பிங்.); brightness 3. அழகு (யாழ்.அக.); beauty. 4. சிற்ப நூல் வகை (இருசமய. சிற்பசாத்.2); a treatise on architecture. 5. தலைவன் (யாழ்.அக.); master 6. அரசன் (யாழ்.அக.); king.

**த.வ. எரியோன்**

*[Skt.bhānu> த. பானு]*

**பானுகம்பன்** *pāṉu-kambaṉ,* பெ.(n.) சிவனிய கூட்டத்தாருள் ஒருவன் (கோயிற்பு.நடராச.6.); a member of Siva's hosts.

*[Skt.Bhānu-kampa> த. பானுகம்பன்]*

**பானுகோபன்** *pāṉu-gōbaṉ,* பெ.(n.) சூரபதுமன் மகன் (கந்தபு.புதல்வ.15.); an Asura, son of Sūrapadmaṉ.

*[Skt.Bhānu-kōpa> த. பானுகோபன்]*

**பானுவாரம்** *pāṉu-vāram,* பெ.(n.) ஞாயிற்றுக் கிழமை; Sunday.

*[Skt.bhānu+vāra> த. பானுவாரம்]*

**பிக்கலம்** *pikkalam,* பெ.(n.) இன்னாரால் எழுதப்பட்டது என்று பொருள்படுவதும் ஆவணம் எழுதினோன் கையெழுத்துக்கு முன் வரையப்படுவதுமான சொல்; term signifying 'written by' and prefixed to the signature of the writer of a document.

*[U.baqalami> த. பிக்கலம்]*

**பிக்காசு** *pikkāsu,* பெ.(n.) குந்தாலி; pick-axe.

**த.வ.கொத்துகுறடு**

*[E.pick-axe> த. பிக்காசு]*



**பிக்காரி** *pikkāri,* பெ.(n.) வறியவன்; poor, miserable, wretched fellow. "பெரிய குடி பெயர்ந்து பிக்காரி யானேனே" (ஆதியூரவதானி,9).

த.வ.ஏழை, ஏதிலி

*[U. bhikāri > த. பிக்காரி]*

**பிங்கலிகை** *pingalikai,* பெ.(n.) ஒண்பான் செல்வங்களுள் ஒன்று (சீவசம். Ms); one of the nine treasures.

*[Skt. pingalikā > த. பிங்கலிகை]*

**பிங்கலை** *pingalai,* பெ.(n.) 1. பத்து வகை நாடித் துடிப்புகளுள் ஒன்று (சிலப்.3,26.உரை); a principal tubular vessel of the human body. 2. வலது மூக்கு வழியாக வரும் மூச்சு (யாழ்.அக.); breath through the right nostril. 3. ஆந்தை வகை (சூடா.); a kind of owl. 4. எண் திசைகளுள் தென்றிசையிலுள்ள பெண் யானை: the female elephant mate of Vāmaṉam guarding the Southern directions. 5. மலைமகள்; Parvathi.

*[Skt. pingala > த. பிங்கலை]*

**பிங்கான்** *pingāṉ,* பெ.(n.) உணவு உண்பதற்கு உரிய தட்டு; plate. அலுமினியப் பிங்கான்/பிங்கானில் சாப்பாடு வை!.

*[Persn. pingān > த. பீங்கான் >பிங்கான்]*

**பிங்கி** *pingi,* பெ.(n.) ஒரு முனிவன்; a sage. "தண்டி குண்டோதரன் பிங்கிருடி" (தேவா. 1225,7.).

*[Skt. bhṛngin > த. பிங்கி]*

**பிச்சடம்** *piccaḍam,* பெ.(n.) 1. ஈயம்; lead. 2. துத்தநாகம்; zinc. 3. ஒரு வகைக் கண்ணோய்; an eye disease. (சா.அக.)

**பிச்சல்** *piccal,* பெ.(n.) கப்பலின் பின்னணியம் (M.Navi); back-part of a ship.

*[Skt. piccha > த. பிச்சல்]*

**பிச்சாணா** *piccāṇā,* பெ.(n.) படுக்கை (உ.வ.); bed.

*[U. bichānā > த. பிச்சாணா]*

**பிச்சுவா** *piccuvā,* பெ.(n.) 1. கையீட்டி (வின்.); dagger. 2. நுனியிற் கூருடைய கத்தி (உ.வ.); a kind of knife.

த.வ. குத்தீட்டி

*[U. bichwā > த. பிச்சுவா]*



**பிசாத்து** *pisāttu,* பெ.(n.) சிறுமை, இழிவு, நொய்மம்; trifle. அதென்ன பிசாத்து (C.G.).

*[U. bisāt > த. பிசாத்து]*

**பிசாகாரம்** *pisākaram,* பெ.(n.) பிச்சையுணவு (வின்.); alms.

*[Skt. bhikṣā+āhāra > த. பிசாகாரம்]*

**பிசுக்கோத்து** *pisukkōttu,* பெ.(n.) கோதுமை முதலியவற்றின் மாவிற் செய்த ஈரட்டி (இக்.வ.); a kind of biscuit.

த.வ. ஈரட்டி

*[E. biscuit > த. பிசுக்கோத்து]*

**பிஞ்சரம்**[1] *piñjaram,* பெ.(n.) பூச்சுப் பொன்துகள் (அரிதாரம்); yellow orpiment. (சா.அக.)

*[Skt. piñjara > த. பிஞ்சரம்]*

**பிஞ்சரம்**[2] *piñjaram,* பெ.(n.) தருப்பை; sacrificial grass.

*[Skt. piñjala > த. பிஞ்சலம்>பிஞ்சரம்]*

**பிஞ்சரம்**[3] *piñjaram,* பெ.(n.) நெஞ்சறை; thorax (சா.அக.).

**பிஞ்சானம்** *piñjāṉam,* பெ.(n.) பொன்; gold. (சா.அக.)

*[Skt. piñjara > த. பிஞ்சரம் >பிஞ்சானம்]*

**பிட்டன்** *pittan,* பெ.(n.) 1. மதத்துக்குப் புறம்பானவன்; excommunicated person, heretic. "பிட்டர்தம் மறவுரை" (தேவா.266,10). 2. புழுக்கொல்லிப்பூடு (மலை.); worm-killer.

த.வ.நம்பாமதத்தோன்

*[Skt. bhrasta > த. பிட்டன்]*

**பிதிருபந்து** *pidiru-bandu,* பெ.(n.) தந்தை வழி நெருங்கிய உறவு; close relative of the father.

*[Skt. pitr+bandhu > த. பிதிருபந்து]*

**பிதிவி** *pidivi,* பெ.(n.) ஊழியன் (C.G.); slave, servant, used in official correspondence.

த.வ. பணியாள்

*[U. fidwi > த. பிதிவி]*

**பிதூரி** *pidūri,* பெ.(n.) சூழ்ச்சி (C.G.); intrigue, plot, conspiracy.

த.வ. ஏய்ப்பு

*[U. fitūri > த. பிதூரி]*

**பிந்து** *pindu,* பெ.(n.) 1. துளி; drop of water. 2. விந்து; semen. 3. ஆற்றல் மெய்ம்மை (சி.சி.2,50,சிவாக்.); sakti the embodiment of energy. 4. புள்ளி (வின்.); dot over a letter, speck, spot, mark.

த.வ. உயிரணு

*[Skt. bindu > த. பிந்து]*

**பிந்துசாரம்** *pindu-šāram,* பெ.(n.) நஞ்சு மருத்துவத் தொடர்பான வடமொழி நூல்; a Sanskrit treatise regarding poisons (சா.அக.).

**பிபாசை** *pipāšai,* பெ.(n.) வேட்கை; thirst. "க்ஷுத்பிபாசைகளாலே நலிவுபட்டவன்" (அட்டதச.அர்த்தபஞ்.பக்.26).

த.வ.வேட்கை

*[Skt. pipāsā > த. பிபாசை]*

**பிபீலிகாசந்தானம்** *pipilikā-šandānam,* பெ.(n.) எறும்புகள் தொடர்ந்தூர்வது போன்ற தொடர்ச்சி (மணிமே.30,38,கீழ்க்குறிப்பு); continuity, as of a line of ants.

*[Skt. pipilikā+san-tāna > த. பிபீலிகாசந்தானம்]*

**பிபீலிகை** *pipiligai,* பெ.(n.) எறும்பு (சூடா.); ant, emmet, pismire.

*[Skt. pipilikā > த. பிபீலிகை]*

**பிம்பப்பிரதிபிம்பபாவம்** *pimba-p-piradi-pimba-pāvam,* பெ.(n.) உருவமும் நிழலுருவமுமாய் அமைந்திருக்குந் தன்மை; the condition of original and its counterfeit.

*[Skt. bimba-prati-bimba-bhāva > த. பிம்பப் பிரதிபிம்பபாவம்]*

**பிம்பம்** *bimbam,* பெ.(n.) 1. உருவம்; form, shape, image. 2. நிழலுருவிற்கு (பிரதிபிம்பம்) மூலப்பொருள்; original. 3. படிமை (பிரதிமை); statue. 4. கொடிவகை; common creeper of the hedges.

த.வ. வடிவம்

*[Skt. bimba > த. பிம்பம்]*

**பிம்பமுத்திரை** *pimba-muttirai,* பெ.(n.) வழிபாட்டு முத்திரை வகை (சைவா.வி.19); a hand-pose in worship.

த.வ. வணக்க மெய்ப்பாடு

*[Skt. bimba > த. பிம்பம்+முத்திரை]*

**பியாக்கு** *piyākku,* பெ.(n.) பண் வகை (Mus.); a musical mode.

*[U. bihāg > த. பியாக்கு]*

**பியாகடம்** *piyākadam,* பெ.(n.) பண் வகை (பரத.ராக.பக்.102.); a specific melody - type.

*[U. bēgadā > த. பியாகடம்]*

**பியானா** *piyānā,* பெ.(n.) ஐரோப்பிய இசைக்கருவி; a musical instrument, piano.

*[E. piano > த. பியானா]*

**பிர்க்கா[1]** *pirkkā,* பெ.(n.) வட்டாட்சியர் பகுதி; division, portion of a taluk, group of villages in charge of a revenue inspector.

*[U. firqā > த. பிர்க்கா]*

**பிர்க்கா[2]** *pirkkā*, பெ.(n.) 1. உடம்பு முழுவதையும் மறைக்கும் நெட்டுடை (அங்கி.); a kind of veil covering the entire body. 2. வண்டி முதலிய ஊர்திகளின் உறை (இ.வ.); cover for vehicles.

த.வ.மூடாப்பு

*[U. burqah> த. பிர்க்கா[2]]*

**பிரக்கியாதன்** *pirakkiyādan*, பெ.(n.) பேர் பெற்றவன், புகழ் பெற்றவன் (சர்வசமய.பக்.39); one who is well-known or famous.

*[Skt. prakhyāta> த. பிரக்கியாதன்]*

**பிரக்கியாதி** *pirakkiyādi*, பெ.(n.) 1. பரப்புரை (பிரசித்தம்.) (வின்.); publicity. 2. புகழ்; fame, celebrity.

*[Skt. pra-khyāti> த. பிரக்கியாதி]*

**பிரக்கினை** *pirakkinai*, பெ.(n.) உணர்ச்சி (உ.வ.); consciousness.

த.வ.நினைவோட்டம்

*[Skt. prajñā> த. பிரக்கினை]*

**பிரகச்சாதகம்** *piraga-c-cādagam*, பெ.(n.) வராகமிகிரர் வடமொழியில் இயற்றிய ஒரு கணிய (சோதிடம்) நூல்; an astrological work in Sanskrit by Varāhamihira.

*[Skt. bṛhat+jātaka> த. பிரகச்சாதகம்]*

**பிரகசனன்** *piragaśanam*, பெ.(n.) 1. சிரிப்பு (யாழ்.அக.); laughter. 2. நையாண்டி (யாழ்.அக.); satire. 3. உருவகங்கள் (ரூபகங்கள்) பத்தனுள் ஒன்று; fance, one of ten rūpakam.

*[Skt. pra-hasana> த. பிரகசனம்]*

**பிரகசுபதி** *piragaśupadi*, பெ.(n.) 1. வியாழன்; the planet Jupiter. 2. தேவகுரு; priest of the Gods. 3. நடப்புக் (சடங்கு) காரியங்கள் செய்யும் சமய ஆசிரியன். (புரோகிதன்) (இ.வ.); priest.

*[Skt. Bṛha-s-pati> த. பிரகசுபதி]*

**பிரகசுபதிசக்கரம்** *piragaśupadi-śakkaram*, பெ.(n.) சக ஆண்டின் (கி.பி.78)போது தோன்றிய வியாழவட்டமான அறுபது ஆண்டுகள் (வின்.); the Jupiter cycle of 60 years.

*[Skt. Bṛha-s-pati> த. பிரகசுபதி+சக்கரம்]*

**பிரகசுபதிசம்பாவனை** *piragaśupadi-śambāvanai*, பெ.(n.) நடப்புக் காரியங்கள் (சடங்கு) செய்யும் சமய மறையோதுவோனுக்குக் கொடுக்கும் பரிசில் (சம்மானம்); gift made at the end of a ceremony to the priest who conducts the rites.

*[Skt. Bṛha-s-pati+sam-bhāvanā> த. பிரகசுபதி சம்பாவனை]*

**பிரகசுபதிமதம்** *piragaśupadi-madam*, பெ.(n.) உலகிய மதம் (சார்வாகமதம்) (தக்கயாகப்.183,உரை.); šārvāka school of philosophy.

*[Skt. Bṛha-s-pati>த. பிரகசுபதி+மதம்]*

**பிரகண்டம்** *piragandam*, பெ.(n.) தோட்பட்டை எலும்பின் (புயம்) முற்பகுதி (யாழ்.அக.); upper arm. 2. தோள் பட்டை எலும்பு (வின்.); bone of the upper arm.

*[Skt. praganda> த. பிரகண்டம்]*

**பிரகத்தம்** *piragattam*, பெ.(n.) விரிந்த கை (யாழ்.அக.); the open hand with the fingers extended.

*[Skt. pra-hasta> த. பிரகத்தம்]*

**பிரகத்வாதம்** *piragat-vādam*, பெ.(n.) வயிற்றுப் பொருமலால் உண்டாகும் நோய் (வின்.); a disease caused by flatulence.

த.வ.வயிற்றுப்புசம்

*[Skt. bṛhat+vaṭā> த. பிரகத்வாதம்]*

**பிரகதாரணியம்** *piragatāraniyam*, பெ.(n.) பத்து மெய்ம்மறை நூல்களுள் (உபநிடதம்) ஒன்று; an Upaniṣad, one of *taśōpaniṣattu*.

*[Skt. Bṛhad-āranya > த. பிரகதாரணியம்]*

**பிரகதி** *piragati,* பெ.(n.) தும்புருவினுடைய வீணை (பரத.ஒழிபி.15); a stringed musical instrument of Tumpuru.

*[Skt. brhatī > த. பிரகதி]*

**பிரகம்பனம்** *pirakambanam,* பெ.(n.) 1. காற்று; air. 2. நிரய (நரகம்) வகை; a hell.

*[Skt. pra-kampana > த. பிரகம்பனம்]*

**பிரகரணம்** *piragaranam,* பெ.(n.) 1. சமயம்; opportunity, occasion. 2. நூற்பிரிவு (அத்தியாயம்); chapter, section. 3. வாய்ப்பு (இ.வ.); context. 4. பத்துவகை நாடகங்களுள் (ரூபகம்) ஒன்று (சிலப்.3,13,உரை,பக்,84, கீழ்க்குறிப்பு.) ; a species of love-drama, one of ten rūpakam. 5. அறம், பொருள் இவற்றைப் பொருளாகக் கொண்ட நாடக வகை. (சிலப்.3,13, உரை.); a drama dealing with aram and porul.

*[Skt. pra-karana > த. பிரகரணம்]*

**பிரகரம்** *piragaram,* பெ.(n.) 1. அடி; blow; beating. "பிரகரத் துயர்தீர" (திருப்பு.310). 2. மாணிக்கக் குற்றத்துள் ஒன்று. (S.I.I.ii/78); a flaw in gem.

*[Skt. pra-hara > த. பிரகரம்]*

**பிரகலாதன்** *piragaladan,* பெ.(n.) இரணிய கசிபுவின் மகன்; a Daitya of great piety, son of Hiranyakašipu. "பிரகலாதனாஞ் சீர் தழைந்தவன்" (பாகவத.7, இரணிய.29).

*[Skt. Prahlāda > த. பிரகலாதன்]*

**பிரகலை** *pirakalai,* பெ.(n.) இசைவுறுப்புகள் நான்களுள் ஒன்று (சிலப்.3,150,உரை.); a component of a musical piece, one of four kīta-v-uruppu.

*[Skt. pra-kalā > த. பிரகலை]*

**பிரகன்னளை** *pirakannalai,* பெ.(n.) அருச்சுனன் கரந்துறைவு (அஞ்ஞாதவாசம்) காலத்தில் பேடியுருக்கொண்டு விராட நகரத்தில் வாழ்ந்து வந்தபோது புனைந்து கொண்ட பெயர் (பாரத.நாடுக.19.); name assumed by Arjuna while he lived *incognito* as a hermaphrodite in Virāṭa city.

*[Skt. Brhannalā > த. பிரகன்னளை]*

**பிரகாசம்** *pirakāšam,* பெ.(n.) 1. ஒளி; brightness, splendour, radiance, reflected light, lustre. "எங்கும் பிரகாசமாய்" (தாயு.திருவருள்விலா.1.). 2. வெயில் (வின்.); sunshine. 3. புகழ் (வின்.); illustriousness, conspicuousness. 4. பண்பு (வின்.); nature, characteristic.

**த.வ.வெளிச்சம்**

*[Skt. pra-kāša > த. பிரகாசம்]*

**பிரகாசன்** *pirakāšan,* பெ.(n.) 1. ஒளி (காந்தி) யுடையோன்; one full of light, mental or spiritual, illustrious person. 2. கடவுளோடு கலந்த முத்தாதன்; soul, liberated from births, illumined by and identified with the Supreme Being.

*[Skt. pra-kāša > த. பிரகாசன்]*

**பிரகாசனம்** *pirakāšanam,* பெ.(n.) 1. *பிரகாசம்,1.* பார்க்க; see *pirakāšam,1.* 2. விரித்து விளக்குகை; exposition. சைவப் பிரகாசனம். 3. வெளிப்படுத்துகை (சங்.அக.); publishing.

*[Skt. pra-kāšana > த. பிரகாசனம்]*

**பிரகாரணம்** *pirakāranam,* பெ.(n.) நன்கொடை (யாழ்.அக.); gift.

*[Skt. pra-hārana > த. பிரகாரணம்]*

**பிரகாரம்** *pirakāram,* பெ.(n.) 1. வழிவகை; manner, mode, way, means. 2. ஒப்பு; likeness, similarity. 3. வகுப்பு (வின்.); kind, species, sort. 4. தன்மை (வின்.); quality, property, nature, essence.

*[Skt. pra-kāra > த. பிரகாரம்]*

**பிரகிருதம்** *pirakirudam,* பெ.(n.) 1. தற்காலம்; present time. 2. வாய்ப்பு (சந்தர்ப்பம்); occasion.

த.வ.நிகழ்காலம்

*[Skt. pra-kṛta > த. பிரகிருதம்]*

**பிரகிருதி** *pirakirudi,* பெ.(n.) 1. மூலம்; cause, original source. 2. மூலப்பகுதி; original producer or passive creative power of the material world. "பிரகிருதிக்குக் குணத்தை நல்கியதார்" (தாயு.பராபர.166). 3. பண்பு (சுபாவம்); nature, character. "உங்கள் பிரகிருதிக்குச் சேர்ந்தோ" (ஈடு,5,9,2). 4. பகுதி (நன்.133,விருத்.); root or uninflected part of a word. 5. குடி (யாழ்.அக.); subject.

*[Skt. pra-kṛti > த. பிரகிருதி]*

**பிரகிருதிகள்** *pirakirudigaḷ,* பெ.(n.) அரசனிடத்து ஊதியம் (வேதனம்) பெற்று அரசியல்தொழில் செய்வோருள் தலைவர் (சுக்கிரநீதி,64.); chief officials of a king; ministers.

*[Skt. pra-kṛti > த. பிரகிருதிகள்]*

**பிரகிருதிதத்துவசாத்திரம்** *pirakirutita-t-tuva-śāttiram,* பெ.(n.) இயற்கைப் பொருணூல், இயற்பியல். (இக்.வ.); physics.

*[Skt. pra-kṛti +tattva + śāstra > த. பிரகிருதிதத்துவசாத்திரம்]*

**பிரகிருதிநியாயப்பிரமாணம்** *pirakiruti-niyāya-p-piramāṇam,* பெ.(n.) இயற்கையா யமைந்த நெறி (வின்.); the law of nature.

*[Skt. pra-kṛti +nyāya+pramāṇa> த. பிரகிருதி நியாயப்பிரமாணம்]*

**பிரகீரணம்** *pirakīraṇam,* பெ.(n.) கரிசு (பாவம்) வகை (வேதாரணி.சேதுசி.10.); a sin.

த.வ. கரிசு, பாழ்வினை

*[Skt. pra-kīrṇa > த. பிரகீரணம்]*

**பிரகுஞ்சம்** *pirakuñjam,* பெ.(n.) ஒரு பலங்கொண்ட நிறுத்தலளவை வகை (நாமதீப. 805); a measure of weight = 1 palam.

*[Skt. pra-kuñca > த. பிரகுஞ்சம்]*

**பிரகுத்தம்** *pirakuttam,* பெ.(n.) மான் கொம்பு (சங்.அக.); stag's horn.

**பிரகேலிகை** *pirakēligai,* பெ.(n.) பிதிர்ச் செய்யுள் (இலக்.அக.); stanza in the form of a riddle.

த.வ.பிசி

*[Skt. pra-hēlikā > த. பிரகேலிகை]*

**பிரகோவம்** *pirakōvam,* பெ.(n.) கடுமை; vehemence, severity. அம்மை பிர கோவமாயிருக்கிறது. (இ.வ.).

த.வ.தீவிரம்

*[Skt. pra-kōpa > த. பிரகோவம்]*

**பிரச்சாரகர்** *pira-c-cāragar,* பெ.(n.) பரப்புரை (பிரச்சாரம்) செய்பவர்; propagandist. மதப் பிரச்சாரகர் / குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரச்சாரகர். (உ.வ.).

த.வ. பரப்புரையாளர்

*[Skt. pra-cāra > த. பிரச்சாரகர்]*

**பிரச்சாரம்** *pira-c-cāram,* பெ.(n.) ஆதரவு தேடி அல்லது மனமாற்றம் ஏற்படுத்த ஒரு கருத்தை அல்லது கொள்கையைப் பரப்புகை; propaganda, campaign, (religious) preaching. "குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரச்சாரம்/தேர்தல் நாள் அறிவிக்கப்பட்டவுடன் கட்சிகள் முழுமூச்சாகப் பிரச்சாரத்தில் இறங்கின/மதப் பிரச்சாரம்".

த.வ. பரப்புரை

*[Skt. pra-cāra > த. பிரச்சாரம்]*

**பிரசக்தி** *piraśakti,* பெ.(n.) உரிய நேரம்; occasion, opportunity.

த.வ.நல்வாய்ப்பு

*[Skt. pra-sakti > த. பிரசக்தி]*

**பிரசங்கம்** *piraśaṅgam,* பெ.(n.) 1. சொற் பொழிவு (உபநியாசம்); discourse, lecture, speech, oration, sermon. 2. வெளிப் படுத்துகை (பகிரங்கம்) (வின்.); proclamation, public declaration.

**த.வ.1. விளக்கவுரை, 2. அறிவுறுத்துகை, 3. பரப்புரை**

**பிரசங்கமேடை** *piraśaṅga-mēḍai,* பெ.(n.) சொற்பொழிவு (உபநியாசம்) செய்தற்கு அமைந்த உயர்ந்த இடம் (இக்.வ.); platform for speakers.

*[Skt. pra-saṅga> த. பிரசங்கம்+மேடை]*

**பிரசங்கயானம்** *piraśaṅga-yāṉam,* பெ.(n.) செல்லுமிடம் பிறர்க்குத் தெரியாதபடி இடம் மாறுதலாகக் குறிப்பிட்டு அரசன் செய்யும் செலவு (யாத்திரை) (சுக்கிரநீதி,337); the march of a king who misleads others about his destination.

**த.வ.மறை செலவு, தெரியாப் பயணம்**

*[Skt. pra-śaṅga > த. பிரசங்க]*

**பிரசங்கி[1]-த்தல்** *piraśaṅgi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சமய அறிவுரை; to discourse, expound, preach. 2. விளம்பரப்படுத்துதல் (வின்.); to publish, proclaim.

*[Skt.pra-śaṅga> த. பிரசங்கம் >பிரசங்கி-த்தல்]*

**பிரசங்கி[2]-த்தல்** *piraśaṅgi-,* 4 செ.குன்றாவி. (v.t.) குறிப்பிட்டுச் சொல்லுதல் (சிவநெறிப். நூல்வர.பக்.2.); to refer to.

*[Skt. pra-śaṅga>த.பிரசங்கம்>பிரசங்கி-த்தல் ]*

**பிரசங்கி[3]** *piraśaṅgi,* பெ.(n.) சொற்பொழி வாற்றுபவன் (உபநியாசகன்); preacher, lecture.

**த.வ. சொற்பொழிவாளர்**

*[Skt. pra-śaṅga > த. பிரசங்கம் > பிரசங்கி]*

**பிரசண்டம்** *piraśaṇḍam,* பெ.(n.) கடுமை, வலிமை; violence, force, strength. "பிரசண்டகோதண்டமும்" (இராமநா.உயுத்.8).

*[Skt. pra-caṇḍa > த. பிரசண்டம்]*

**பிரசண்டமாருதம்** *piraśaṇḍa-mārudam,* பெ.(n.) வலுத்த காற்று; a dreadful tempest. (சா.அக.)

**த.வ.சூறைக்காற்று, புயற்காற்று**

*[Skt.pra-caṇḍa+māruta> த. பிரசண்டமாருதம்]*

**பிரசண்டன்** *piraśaṇḍaṉ,* பெ.(n.) கடுமை யானவன்; powerful, formidable man.

**த.வ. முரடன்**

*[Skt. pra-caṇḍa > த. பிரசண்டன்]*

**பிரசத்தி[1]** *piraśatti,* பெ.(n.) தக்க சமயம்; suitable opportunity.

**த.வ.நல்வாய்ப்பு, தக்க வேளை**

*[Skt. pra-śakti > த. பிரசத்தி]*

**பிரசத்தி[2]** *piraśatti,* பெ.(n.) ஆவணம் (சாசனம்) (T.A.S.iv,46.); publication.

*[Skt. prasiddhi > த. பிரசத்தி]*

**பிரசம்சை** *piraśamśai,* பெ.(n.) புகழ்ச்சி; fame, praise.

**த.வ.பாராட்டு, புகழுரை**

*[Skt. pra-saṃsā > த. பிரசம்சை]*

**பிரசயம்** *piraśayam* பெ.(n.) நலிவொலியை (சுவரிதம்) அடுத்து எடுத்தலோசையைச் (அநுத்தாத்தம்) சேர்த்துக் கூறும்போது உள்ள இசை (ஸ்வரம்.) (பி.வி.40,உரை.); the one occurring in a series of unaccented syllables following a *svarita.*

*[Skt. pra-caya > த. பிரசயம்]*

**பிரசரணம்** *piraśaraṇam,* பெ.(n.) 1. கொள்ளை யிடுகை; dacoity. 2. பகைவரைச் சூழ்ந்து கொள்ளுகை; surrounding the enemy.

**த.வ.முற்றுகை**

*[Skt. pra-saraṇa > த. பிரசரணம்]*

**பிரசலை** *pira-śalai,* பெ.(n.) மனக்கலக்கம் (சீவக.3076,உரை.); agitation, excitement, mental disturbance.

**த.வ.அறிவுப்பிறழ்வு**

*[Skt. pra-calā > த. பிரசலை]*

**பிரசவகாரி** *piraśava-kāri,* பெ.(n.) ஈற்றுளையைப் (பிரசவவேதனை) பெருக்கிக் குழந்தையை (சிசு) விரைவில் வெளிப்படுத்தும் மருந்து (பைஷஜ.13.); parturifacient.

*[பிரசவம்+காரி]*

**பிரசவசன்னி** *piraśava-śaṉṉi,* பெ.(n.) மகப்பேற்றிற்குப் (பிரசவம்) பின் வரும் நளிர்நோய் (சன்னி.) (பைஷஜ.); puerperal

convulsions, eclampsia. 2. ஈன்றபிறகு ஆவுக்கு உண்டாகும் நோய் வகை (இ.வ.); dropping after calving.

த.வ. இழுப்பு நோய்

*[Skt. pra-sava+san-ni > த. பிரசவசன்னி]*

**பிரசவசுரம்** *piraśava-śuram,* பெ.(n.) மகப்பேற்றுக்குப் (பிரசவம்) பின்னர் உண்டாகும் காய்ச்சல் (இங்.வை.); puerperal fever.

*[Skt. pra-sava+juara > த. பிரசவசுரம்]*

**பிரசவப்பெரும்பாடு** *piraśava-p-perumpāḍu,* பெ.(n.) மகப்பேற்றிற்குப் (பிரசவம்) பின்னர் குருதிப்பெருக்கு (சூதகம்.) மிகுதியாய் வெளிப்படுகை (இங்.வை.); uterine haemorrhage after parturition.

*[பிரசவம்+பெரும்பாடு]*

**பிரசவப்பைத்தியம்** *piraśava-paittiyam,* பெ.(n.) மகப்பேற்றிற்குப் (பிரசவம்) பின்னர் உண்டாகும் மனத்தடுமாற்றம் (இங்.வை.); puerperal mania.

த.வ.பேறுகால வருத்தம்

*[Skt.pra-sava+paittiya> த. பிரசவபைத்தியம்]*

**பிரசவம்** *piraśavam,* பெ.(n.) மகப்பேறு; child birth, parturition.

த.வ. பாயம், பயப்பு, ஈனல்

*[Skt. pra-sava > த. பிரசவம்]*

**பிரசவவிடுதி** *piraśava-viḍudi,* பெ.(n.) தாய்சேய் நலவிடுதி; maternity hospital.

த.வ.மகப்பேற்று இல்லம், குழந்தை நலக் காப்பகம்

**பிரசவவேதனை** *piraśava-vētaṉai,* பெ.(n.) மகப்பேறு (பிரசவம்) நிகழ்வதற்காக உண்டாகும் நோவு (உ.வ.); pains of childbirth, labour, labour pain.

த.வ. பேறுகாலத்துன்பம்

*[Skt.pra-sava+vēdanā> த. பிரசவவேதனை]*

**பிரசவவைராக்கியம்** *piraśava-vairākkiyam,* பெ.(n.) வெறுப்பு (வைராக்கியம்) மூன்றனுள் மகப்பேற்றுத் துன்பப் (பிரசவவேதனை) படுபவள் அத்துன்பத்தால் பின்னர்க் காம நுகர்ச்சியை வெறுத்துவிடுவதாக அப்போது கருதும் எண்ணம்; determination of a woman at the time of confinement to abstain in future from intercourse, one of the three kinds of vairākkiyam.

த.வ.பேறுகால உறுதி

*[Skt. pra-sava +vairāgya> த. பிரசவ வைராக்கியம்]*

**பிரசவி-த்தல்** *piraśavi-,* 4 செ.குன்றாவி.( v.t.) ஈனுதல்; to bring forth, as a child.

த.வ. பிள்ளைபெறுதல், பயத்தல், ஈனுதல்

*[Skt. pra-sava > த. பிரசவி-த்தல்]*

**பிரசவீகம்** *piraśavigam,* பெ.(n.) மகப்பேறு மருத்துவம்; midwifery. (சா.அக.)

**பிரசன்னம்** *piraśaṉṉam,* பெ.(n.) 1. தெளிவு; clearness, brightness. "முகம் பிரசன்னமாக இருக்கின்றது" (வின்.). 2. கடவுள் பெரியோர் முதலியோரின் காட்சி; gracious appearance or presence of a deity or sacred person.

த.வ.அருட்காட்சி, கலக்கமின்மை

*[Skt. pra-sanna > த. பிரசன்னம்]*

**பிரசன்னமா-தல்** *piraśaṉṉam-ā,* 6 செ.கு.வி.(v.i.) காட்சி தருதல்; to appear graciously, to become visible, as a deity or sacred person.

*[Skt. pra-sanna > த. பிரசன்னம்+ஆ-தல்]*

**பிரசன்னமுகம்** *piraśaṉṉa-mugam,* பெ.(n.) மலர்ந்த முகம் (வின்.); smiling countenance, benign or gracious look.

த.வ.சிரித்த முகம்

*[Skt. pra-sanna> த. பிரசன்னம்+முகம்]*

**பிரசன்னமுத்திரை** *piraśaṉṉa-muttirai,* பெ.(n.) முத்திரை வகை (சைவாநு.வி.17.); a hand-pose in worship.

த.வ.வணக்க மெய்ப்பாடு

*[Skt. prasanna > த. பிரசன்னம்+முத்திரை]*

**பிரசன்னன்** *piraśannan,* பெ.(n.) காட்சி யருளுபவன் (வின்.); one manifesting himself as an act of grace or kindness.

*[Skt. pra-sanna > த. பிரசன்னன்]*

**பிரசாதஞ்செய்-தல்** *piraśadañ-jey-,* 1 செ.குன்றாவி. (v.t.) அருள் செய்தல்; to bestow, grant, as a favour. "ஸ்ரீமுகம் பிரசாதஞ்செய் தருளி (S.I.I.iii,157,7).

த.வ.இரக்கங்காட்டல்

*[Skt. pra-sāda > த. பிரசாதம்+செய்-தல்]*

**பிரசாதப்படு-தல்** *piraśada-p-padu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. உண்ணுதல்; to eat. "ஊரடங்கலும் பிரசாதப்பட்டு மகிழலாயிற்று" (குருபரம்.513). 2. திருவாணையேற்றல்; to receive the favour or order, as of a king. "முகம்... தலைமேற்கொண்டு பிரசாதப்பட்டு" (S.I.I.iii,157,7).

த.வ. 1.சாப்பிடுதல், 2. அரசாணை ஏற்றல்

*[Skt. pra-sāda > த. பிரசாதம்+படு-தல்]*

**பிரசாதபத்திரம்** *piraśāda-p-pattiram,* பெ.(n.) வீரச்செயல் முதலியவற்றிற்கு மகிழ்ந்து அரசன் கொடுக்கும் நிலம் முதலியவற்றைக் குறிக்கும் ஆவணம். (சுக்கிரநீதி,93); royal grant of land, etc., in appreciation of one's bravery.

த.வ.வீரக்கொடை ஆவணம்

*[Skt. prasāda+patra > த. பிரசாதபத்திரம்]*

**பிரசாதம்[1]** *piraśādam,* பெ.(n.) 1. தெளிவு; clearness. "தெளிவு பிரசாதமென்ன" (வாயுசங்.ஞானயோ.57). 2. அருள், இரக்கச் செயல்; favour, kindness, grace. 3. கடவுளுக்கு ஒப்புவிக்கும் சோறு முதலிய படையல் (S.I.I.iii,248,4.); boiled rice, etc., offered to an idol. 4. சோறு; boiled rice.

*[Skt. pra-sāda > த. பிரசாதம்]*

**பிரசாதம்[2]** *piraśādam,* பெ.(n.) 1. கருப்ப முண்டாக்கு மருந்து; medicine for conception. 2. பிள்ளைப் பேறு; delivery of the child. (சா.அக.)

த.வ. 2. மகப்பேறு, குழந்தைப்பேறு

**பிரசாதருமம்** *piraśā-darumam,* பெ.(n.) 1. குடிக்கடமைகள் (இ.வ.); rules regulating the conduct of citizens. 2. மகவின் கடமை (யாழ்.அக.); duty of a son or daughter.

*[Skt. praja+dharma > த. பிரசாதருமம்]*

**பிரசாதலிங்கம்** *piraśada-lingam,* பெ.(n.) ஆறு வகை இலங்கங்களுளொன்று. (சித்.சிகா.201.); a linga, one of saṭvita-lingam. 2. சிவ பெருமானுக்குப் படையிலிடப்பட்ட பண்டம் (வின்.); offerings that which is dedicated to šiva.

த.வ.சிவபடையலமுது

*[Skt. prasāda+linga > த. பிரசாதலிங்கம்]*

**பிரசாதனம்** *piraśādanam,* பெ.(n.) 1. வெள்ளி (யாழ்.அக.); silver. 2. கொக்கு (சங்.அக.); crane.

*[Skt. prajā-dāna > த. பிரசாதனம்]*

**பிரசாதிபத்தியம்** *piraśādipattiyam,* பெ.(n.) மக்கள் ஆட்சி (இக்.வ.); democracy.

த.வ.குடியாட்சி

*[Skt. prajādhipatya > த. பிரசாதிபத்தியம்]*

**பிரசாந்தி** *piraśāndi,* பெ.(n.) உள்ளும் புறமுமுள்ள அறியாமையை ஒழிக்கை (வாயுசங். ஞானயோ.57); removing ignorance, both internal and external.

*[Skt. praśāndi > த. பிரசாந்தி]*

**பிரசாபத்தியம்** *piraśabattiyam,* பெ.(n.) 1. மணப்பெண்ணிற்குப் பணம் பெறாது மகட்கொடை நேரும் மணவகை; a form of marriage which consists in the gift of a girl by her father to the bridegroom without

receiving bride price from him. 2. பகல் 15 முழுத்தத்துள் ஒன்பதாவதும், இரவு 15 முழுத்தத்துள் எட்டாவதும் ஆன காலம். (விதான.குணாகுண.73,உரை.); the ninth of the 15 divisions of day, and eighth of those of night.

*[Skt. prajāpatya > த. பிரசாதபத்தியம்]*

**பிரசாபதி¹** *pirāšapadi,* பெ.(n.) 1. நான்முகன் (பிங்.); Brahmā. 2. துணை நான்முகன்; upa-Brahmā as Dakṣa. etc., 3. அரசன்; king. 4. ஆண்டு அறுபதனுள் ஐந்தாவது; the fifth year of the Jupiter cycle. 6. மக்கட் பெருக்கம்; increase of population.

த.வ. படைப்புக் கடவுள்

*[Skt. prajā-pati > த. பிரசாபதி]*

**பிரசாபதி²** *pirašāpadi,* பெ.(n.) 1. ஆண் குறி; penis. 2. நெருப்பு; fire. 3. தந்தை (பிதா); father. (சா.அ.).

**பிரசாமம்** *pirašāmam,* பெ.(n.) மனவமைதி (சங்.அக.); tranquillity of mind.

த.வ.உள்ளத்தெளிவு

*[Skt. pra-šama > த. பிரசாமம்]*

**பிரசாரம்** *pirašāram,* பெ.(n.) 1. பரவுகை; extension. 2. பரவச் செய்கை; promulgation, propaganda.

த.வ. பரப்புரை

*[Skt. pra-cāra > த. பிரசாரம்]*

**பிரசாவிருத்தி** *pirašā-virutti,* பெ.(n.) 1. மக்கட் பெருக்கம்; increase of population. 2. கால்வழி பெருக்கம்; increase of progeny.

*[Skt. prajā-vṛddhi > த. பிரசாவிருத்தி]*

**பிரசிசியன்** *pirašišiyan,* பெ.(n.) மாணாக் கனுக்கு மாணாக்கன்; pupil's pupil. "இவ்வுடையார் சிஷ்யரும் பிரசிஷ்யருமாய்" (S.I.I.ii,107).

*[Skt. pra-šiṣya > த. பிரசிசியன்]*

**பிரசித்த கடுதாசி** *pirašitta-kaḍudāši,* பெ.(n.) அறிக்கை ஆவணம்; advertisement, notice, notification proclamation.

*[Skt. pra-siddha > த. பிரசித்தம்+கடுதாசி]*

**பிரசித்தப்படுத்து–தல்** *pirašitta-p-paduttu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. வெளியாக்குதல்; to publish, divulge. 2. விளம்பரஞ் செய்தல்; to promulgate, advertise, proclaim. 3. புகழ் முதலியவற்றைப் பரப்புதல்; to spread, as one's fame.

*[Skt. pra-siddha > த. பிரசித்தம்+படுத்து–தல்]*

**பிரசித்தபத்திரம்** *pirašitta-pattiram,* பெ.(n.) *பிரசித்தகடுதாசி* பார்க்க (வின்.); see *pirašitta-kaḍudāši.*

*[Skt. pra-siddha+patra > த. பிரசித்தபத்திரம்]*

**பிரசித்தபத்திரிகை** *pirašitta-pattirikai,* பெ.(n.) *பிரசித்த கடுதாசி* பார்க்க; see *pirašitta kaḍudāši.*

த.வ.விளம்பரம், வெளிப்படுத்துகை

*[Skt. pra-siddha+patrikā > த. பிரசித்தபத்திரிகை]*

**பிரசித்தம்** *pirašittam,* பெ.(n.) 1. வெளிப்படை; publicity. 2. அறிவிப்பு; promulgation, proclamation, publication, announcement, advertisement. 3. புகழ் (வின்.); fame, celebrity. 4. நன்கு அறியப்பட்ட நிலை; state of being well known. "சிலபதம் பிரசித்த மாகியும்" (பி.வி.18,உரை.).

த.வ.பெயர் பெற்றது, பெயர் போனது, புகழ் பெற்றது, பெருமையுடையது

*[Skt. pra-siddha > த. பிரசித்தம்]*

**பிரசித்தி** *pirašitta,* பெ.(n.) புகழ் (கொ.வ.); fame.

*[Skt. pra-siddhi > த. பிரசித்தி]*

**பிரசினம்** *pirašinam,* பெ.(n.) 1. வினா; question, enquiry. 2. பத்து வகையயான மெய்ம்மறை நூல்களுள் ஒன்று; an upaniṣad, one of tašōpaniṣattu.

*[Skt. pra-šna > த. பிரசினம்]*

**பிரசுரம்¹** *pirašuram,* பெ.(n.) 1. அறிவிப்பு; publishing, notification. 2. நூல் வெளியீடு; publication, edition.

*[Skt. pra-cara > த. பிரசுரம்]*

**பிரசுரம்²** *piraśuram,* பெ.(n.) மிகுதி (இலக்.அக.); immonseness; plenty.

*[Skt. pra-cura > த. பிரசுரம்]*

**பிரசுரன்¹** *piraśuran,* பெ.(n.) வெள்ளிக்கோள் (சாதகசிந்.7.); the planet Venus.

**த.வ.விடிவெள்ளி, விடி மீன்**

**பிரசுரன்²** *piraśuran,* பெ.(n.) மிக்கவன்; one who excels. "திணிசுடர்ப் பிரசுர னிராசி சேர்வுற (அரிசமய.குலசே.32).

*[Skt. pra-cura > த. பிரசுரம்]*

**பிரசுராலயம்** *piraśurālayam,* பெ.(n.) புத்தக வெளியீட்டு நிறுவனம்; publishing house.

**த.வ. பதிப்பகம், வெளியீட்டகம்**

*[Skt. pra-cara > த. பிரசுர+ஆலயம்]*

**பிரசுரி** *piraśuri,* பெ.(n.) செய்தித்தாள் போன்ற வற்றில் கட்டுரை, கதை முதலியவற்றை வெளி யிடுகை, புத்தகம் போன்றவை வெளியிடுகை, பதிப்பிக்கை; publish (an article, a book, etc.,). "பிரசுரிக்கத் தகுதி இல்லை எனக் கதையைத் திருப்பி அனுப்பிவிட்டார்" (உ.வ.).

*[Skt. pra-cāra > த. பிரசுரி]*

**பிரசூதிகா வாயு** *piraśūdikāvāyu,* பெ.(n.) கருவளி (கர்ப்பவாயு); a vital air which assists in parturition.

*[Skt. pra-sūtika+vāyu> த. பிரசூதிகாவாயு]*

**பிரசூதிகை** *piraśūdigai,* பெ.(n.) மகப்பேற்று அறையிலிருப்பவள் (வின்.); woman recently confined.

*[Skt. prasūtikā> த. பிரசூதிகை]*

**பிரசூதி வைராக்கியம்** *piraśūdi-vairākkiyam.* மகப்பேற்று வேதனையால் பின்னர் இச்சையை வெறுத்து விடுவதாக அப்போது கருதும் எண்ணம், உறுதி; determination of a woman at the time of confinement to attain in future from intercourse, one of the three kinds of vairakkiyam.

*[Skt. pra-sava+vairagya> த. பிரசவ வைராக்கியம்]*

**பிரசூனம்** *piraśūnam,* பெ.(n.) பூ (நாமதீப.367.); flower.

**த.வ.மலர்**

*[Skt. pra-sūna> த. பிரசூனம்]*

**பிரசை** *piraśai,* பெ.(n.) 1. குடி; citizen, subject. 2. வழித்தோன்றல்; child, progeny. "உத்தரப் பிரசைப் பலத்தோடு" (சிவதரு.கோபு.162).

**த.வ. 1. மக்கள், 2. கால்வழி, மரபு வழி**

*[Skt. pra-jā > த. பிரசை¹]*

**பிரஞ்சாணி** *pirañjāṇi,* பெ.(n.) ஆணி வகை; french nail, wire nail.

*[E. French > த. பிரஞ்சு+ஆணி]*

**பிரஞ்சிலாகா** *pirañj-ilākā,* பெ.(n.) பிரஞ்சுக்காரர் ஆட்சிக்குட்பட்ட இந்திய நாட்டுப் பகுதி; French territory.

*[Skt. French+Arab. ilaga>த. பிரஞ்சிலாகா]*

**பிரஞ்ஞன்** *piraññan,* பெ.(n.) அறிஞன்; intelligent, wiseman.

**த.வ.புலமையாளன்**

*[Skt. prajñā > த. பிரஞ்ஞன்]*

**பிரஞ்ஞாபங்கம்** *piraññābaṅgam,* பெ.(n.) அறிவுகேடு; unconsciousness.

**த.வ.நினைவு தவறல், நினைவிழப்பு**

*[Skt. prājñā +bhaṅga> த. பிரஞ்ஞாபங்கம்]*

**பிரஞ்ஞாபனபத்திரம்** *piraññābaṉapattiram,* பெ.(n.) ஆசிரியர் முதலான பெரியோர்க்கு வணக்கத்தோடு வரையப்படும் மடல் (சுக்கிரநீதி,93); letter submitted respect - fully to a greatman, such as one's guru.

**த.வ.திருமடல்**

*[Skt. prajñāpana+patra>த. பிரஞ்ஞாபனபத்திரம்]*

**பிரஞ்ஞாபாரமிதை** *piraññābāramidai,* பெ.(n.) பிரஞ்ஞை, 2 பார்க்க; see *piraññai, 2.*

*[Skt. prajñā+pāram-ita>த. பிரஞ்ஞாபாரமிதை]*

**பிரஞ்ஞை** *piraññai,* பெ.(n.) 1. அறிவு; consciousness, knowledge, intelligence.

2. முழு மெய் அறிவு; (Buddh.) perfection in wisdom, one of taca-pāramitai. 3. முன்னிகழ்ந்ததை யறிவுமறிவு (சி.சி.4,28, மறைஞா.); knowledge of past events.

த.வ. உள்ளுணர்வு

*[Skt.prajñā> த. பிரஞ்ஞை]*

**பிரட்சாளனம்** *piratšāḷaṉam,* பெ.(n.) நீராற் கழுவுகை; washing, cleaning or ceremonially purifying with water, ablution.

த.வ.தூயநீராட்டு

*[Skt.prakṣālana > த. பிரட்சாளனம்]*

**பிரணயம்** *piraṇayam,* பெ.(n.) அன்பு (ஈடு); love.

த.வ.காதல்

*[Skt.pra-ṇaya > த. பிரணயம்]*

**பிரணயரோசம்** *piraṇayarōšam,* பெ.(n.) ஊடல்; sulks, bouderie.

*[Skt. pra-ṇaya+rōṣa > த. பிரணயரோசம்]*

**பிரணவம்** *piraṇavam,* பெ.(n.) ஓங்கார மந்திரம்; ōm, the principal mantra of Hindus.

த.வ. ஓம், ஓங்காரம்

*[Skt. pra-ṇava > த. பிரணவம்]*




**பிரணவரூபி** *piraṇavarūbi,* பெ.(n.) ஓங்கார வடிவாயுள்ள இறைவன்; the supreme being, the embodiment of ōm.

*[Skt. pra-ṇava+rūp(a) > த. பிரணவரூபி]*

**பிரணாமம்** *piraṇāmam,* பெ.(n.) கடவுள் அல்லது பெரியோர் முன்பு செய்யும் வணக்கம்; prostration or respedtful salutation before a deity or superior.

த.வ.கும்பிடல், வணக்கம்

*[Skt. pra-ṇāma > த. பிரணாமம்]*

**பிரணீதபாத்திரம்** *piraṇīda-pāttiram,* பெ.(n.) வேள்வி போன்ற நடப்புக் காரியத்திற்கு உரிய ஏனம் (சீவக.2463, உரை.); a cup used in sacrifical ceremonies.

*[Skt. praṇīta+pātra > த. பிரணீதபாத்திரம்]*

**பிரத்தாரம்** *pirattāram,* பெ.(n.) 1. கட்டளை யடியிற் பல்வேறு வகையாக வரக்கூடும் அசைகளையெல்லாம் மொத்தக் கணக்கிடுகை. (யாப்.வி.பக்.471.); enumeration of all the possible combinations of metrical syllables in a given versemode. 2. தாளக் கூறுகளுள் ஒன்று; (Mus.) an element of time-measure, one of ten tāḷa-p-pirāṇam.

*[Skt. pra-stāra > த. பிரத்தாரம்]*

**பிரத்தியக்கம்** *pirattiyakkam,* பெ.(n.) *பிரத்தியட்சம்* பார்க்க; see pirattiyaṭšam. "சுட்டுணர்வைப் பிரத்தியக்க மெனச்சொலி" (மணிமே.29:49).

**பிரத்தியக்கவிருத்தம்** *pirattiyakkaviruttam,* பெ.(n.) காட்சிக்கு மாறுபட்டது; that which is contrary to direct perception. "பிரத்தியக்கவிருத்தங் கண்ணிய காட்சி மாறுகொளலாகும்" (மணிமே.29:148).

*[Skt.pratyakṣa+vṛtta> த. பிரத்தியக்கவிருத்தம்]*

**பிரத்தியகான்மா** *pirattiyakāṉmā,* பெ.(n.) உயிராதன்; individual soul. "பிரத்திய கான்மாவின் சோதியாம்" (வேதா.சூ.106).

*[Skt. pratyag-ātmā > த. பிரத்தியகான்மா]*

**பிரத்தியட்சக்கிரகணம்** *pirattiyaṭša-kiragaṇam,* பெ.(n.) கண்ணுக்குப் புலப்படும் கோள் பற்றுகை; visible eclipse.

*[Skt. pratyakṣa+grahaṇa > த. பிரத்தியட்சக் கிரகணம்]*

**பிரத்தியட்சதரிசனம்** *pirattiyaṭšatarišaṉam,* பெ.(n.) கண்களாற்கண்ட காட்சி (வின்.); ocular vision.

*[Skt. pratyakṣa+daršana > த. பிரத்தியட்சதரிசனம்]*

**பிரத்தியட்சப்பிரமாணம்** *piratiyaṭša-p-piramāṇam,* பெ.(n.) அளவை (பிரமாணம்) கள் ஆறனுள் காண்டலளவை.

*[Skt. pratyakṣa+pra-māṇa > த. பிரத்தியட்சப் பிரமாணம்]*

**பிரத்தியட்சம்** *pirattiyaṭšam,* பெ.(n.) 1. காட்சி; perception. 2. அளவை (பிரமாணம்) ஆறனுள் காண்டலளவை; (Log.) perception, as a mode of proof, one of six Piramāṇam.

*[Skt. prat-yakṣa > த. பிரத்தியட்சம்]*

**பிரத்தியபகாரம்** *pirattyapagāram,* பெ.(n.) தீமைக்கு மாறாக செய்யுந் தீமை (சங்.அக.); retaliation.

**த.வ.பழிக்குப் பழி**

*[Skt. pratyapakāra > த. பிரத்தியபகாரம்]*

**பிரத்தியபிஞ்ஞானம்** *pirattiyapiññaṉam,* பெ.(n.) வேற்றுமையின்மை ஒப்பு (சாதிருசியம்) முதலியவை பற்றிப் பிறக்கும் மீட்டுணர்ச்சி (நீலகேசி,119,உரை.); recognition of identity or similarity.

*[Skt. pratyabhijñāna > த. பிரத்தியபிஞ்ஞானம்]*

**பிரத்தியம்** *pirattiyam,* பெ.(n.) *பிரத்தியட்சம் 2* பார்க்க; see *pirattiyaṭšam.* "மெய்ப்பிரத்திய மனுமானஞ் சாத்தம்" (மணிமே.27:83).

**பிரத்தியயம்** *pirattiyayam,* பெ.(n.) ஈறு (விகுதி) முதலிய இடைச்சொல்; affix or suffix. "மன்னும் பிரத்தியயமே தத்திதாந்தம்" (பி.வி.29).

*[Skt. pratyaya > த. பிரத்தியயம்]*

**பிரத்தியருத்தம்** *pirattiyaruttam,* பெ.(n.) 1. எதிருரை; rejoinder. 2. மறுமொழி; answer.

**த.வ.1. எதிர்விளக்கம், 2. விடைமொழி**

*[Skt. pratyartha > த. பிரத்தியருத்தம்]*

**பிரத்தியவற்கந்தனம்** *pirattiyavaṟkandaṉam,* பெ.(n.) எடுத்துரைப்போனால் எழுதிக் கொடுக் கப்பட்ட செய்திகளை முற்றும் ஒப்புக்கொண்டு வழக்கெதிராளி கூறும் உடன்பாடு (சுக்கிரநீதி, 270.); statement by a defendant explaining his position after admitting the plaintiff's allegations.

*[Skt. pratyava-skandana > த. பிரத்தியவற் கந்தனம்]*

**பிரத்தியவாயம்** *pirattiyavāyam,* பெ.(n.) குற்றம் (யாழ்.அக.); harm.

*[Skt. pratyavāya > த. பிரத்தியவாயம்]*

**பிரத்தியனீகவலங்காரம்** *pirattiyanīka valaṅgaram,* பெ.(n.) வெல்லக்கூடாத உவமேயத்தையொத்த பிறிதொரு பொருள் மேல் உவமைப் பொருள் பகைமை சாதிப்ப தாகக் கூறும் அணி வகை (மாறன.135); a figure of speech in which one is described as trying to injure a person or thing resembling one's enemy when the enemy himself cann't be injured.

*[Skt. pratya nīkā+alam-kāra > த. பிரத்தியனீகவலங்காரம்]*

**பிரத்தியாகதம்** *pirattiyākatam,* பெ.(n.) உள்ளாளம் (கமகம்) பத்தனுள் ஒன்று (பரத.இராக.24.); (Mus.) a succession of staccato notes, one of ten *kamakam.*

*[Skt. pratyā-hata > த. பிரத்தியாகதம்]*

**பிரத்தியாகாரம்** *pirattiyākāram,* பெ.(n.) எண் வகை ஒகத்துள் புலனுறுப்புகளை வெளி நிகழ்வுகளிலிருந்து திருப்புகை; withdrawal of the senses from external objects, one of aṣṭāṅka-yōkam. 2. வடமொழி நூல்களின் முதல் கடைகளில் நின்றவெழுத்துகளைக் கூட்டி இடை நின்றவெழுத்துகளை நீக்கி அனைத்தையுமுணர்த்துங் குறியீடாக வமைக்கை (பி.வி.4.); comprehension of a series of letters of a sūtrā in one syllable by combining its first letter with the last

and omitting the intermediate letters, as ac in sanskrit grammar.

*[Skt. pratyā-hāra > த. பிரத்தியாகாரம்]*

**பிரத்தியாப்திகம்** *pirattyāpdigam,* பெ.(n.) இறந்தவர் பொருட்டு அவர் இறந்த இரண்டாம் ஆண்டு முதல் ஒவ்வொரு ஆண்டும் நடக்கும் நீர்பிண்டப் படையல்; annual ceremany other than the first, for the manes.

**த.வ.ஆண்டு ஈமக்கடன்**

*[Skt. pratyābdika > த. பிரத்தியாப்திகம்]*

**பிரத்தியாலீடம்** *pirattiyalīḍam,* பெ.(n.) 1. வில்லோர் நிலை நான்கனுள் இடக்கால் முந்துற வலக்கால் பின்னுற வைக்கும் நிலை (பிங்.); an attitude in shooting in which the left foot is advanced and the right is drawn back, one of *villor-nilai.* 2. பன்னிரண்டு விரலகத்துக்குள்ளே இரண்டு காலும் அடங்க நிற்கை (தத்துவப்.109,உரை.); a standing posture in which the two legs are within 12 inches of each other.

*[Skt. pratya-līḍha > த. பிரத்தியாலீடம்]*

**பிரத்தியும்னன்** *pirattiyumṉaṉ,* பெ.(n.) 1. கண்ணபெருமானுக்கும் உருக்குமினிக்கும் பிறந்த மகன்; son of Kṛṣṇa and Rukmiṇi. 2. திருமாலின் நிலை ஐந்தனுள் சங்கருடணன், பிரத்தியும்னன், அதிருத்தன் என்ற மூவகை யாகவும், வாசுதேவனைச் சேர்த்து நால்வகை யாகவும் வகைப்படுத்தப்பட்டவருள் ஒருவர் (பரிபா.3,82,உரை.); a manifestation of Viṣṇu, one of four viyūkam.

*[Skt. Pradyumna > த. பிரத்தியும்னன்]*

**பிரத்தியேகம்** *pirattiyēgam,* பெ.(n.) 1. தனிமை; separateness; singleness. 2. சிறப்பியல்பு; peculiarity, singularity.

**த.வ.தனித்தன்மை**

*[Skt. pratyēka > த. பிரத்தியேகம்]*

**பிரத்துவஞ்சாபாவம்** *pirattuvañjābāvam,* பெ.(n.) அழிந்ததனால் அஃதில்லை யென்னும் நிலை (அபாவம்) (சி.சி.அளவை,1.மறைஞா.); non-existence caused by destruction.

*[Skt. pradhvaṃsābhāva > த. பிரத்துவஞ்சாபாவம்]*

**பிரதட்சிணம்** *piratatṣiṇam,* பெ.(n.) வலம் வருகை; circumambulation from left to right.

**த.வ. வலச்சுற்று, வலனேர்பு**

*[Skt. pradakṣiṇa > த. பிரதட்சிணம்]*

**பிரதம்** *piradam,* பெ.(n.) கொடுப்பது; that which gives, used at the end of compounds. ஞானப் பிரதமான நூல். (உ.வ.).

**த.வ.தருவது, அளிக்கும்**

*[Skt. pra-da > த. பிரதம்]*

**பிரதமகாலம்** *piradama-kālam,* பெ.(n.) விடியற்காலம் (யாழ்.அக.); morning.

**த.வ. புலர்காலை**

*[Skt. prathama > த. பிரதமம்+காலம்]*

**பிரதமசாகர்** *piradama-šāgar,* பெ.(n.) முதலில் சுக்கில யசூர் (யஜூர்) மறையைப் படித்து மனனம் செய்ய உரிமைப் பெற்ற பார்ப்பன வகையினர்; a class of Brahmins who are enjoined to study the Sukla-yajur-vēda first.

*[Skt. prathama > த. பிரதமம்+சாகர்]*

**பிரதமசிருட்டி** *piradamaširutti,* பெ.(n.) 1. முதலில் நிகழ்ந்த படைப்பு; first creation. 2. தொடக்கத்திற் படைக்கப்பட்ட பொருள் (வின்.); that which is first created.

*[Skt. prathama+sṛṣṭi > த. பிரதமசிருட்டி]*

**பிரதமபுருடன்** *piradama-puruḍaṉ,* பெ.(n.) படர்க்கை (பி.வி.44,உரை.); third person.

**த.வ.அயலிடம், வேறிடம்**

*[Skt.pirathama+puruṣa> த. பிரதமபுருடன்]*

**பிரதமம்** *piradamam,* பெ.(n.) 1. முதன்மை; priority. 2. தொடக்கம்; beginning, commencement.

த.வ. முன்னுரிமை

*[Skt. prathama > த. பிரதமம்]*

**பிரதமமந்திரி** *piradama-mantiri,* பெ.(n.) ஒரு நாட்டை ஆளும் அமைச்சரவையில் முதன்மைப் பொறுப்பு வகிப்பவர்; Prime Minister, premier.

த.வ. முதன்மை அமைச்சர்

*[Skt. prathama+mantrin > த. பிரதமமந்திரி]*

**பிரதமர்** *piradamar,* பெ.(n.) **பிரதம மந்திரி** பார்க்க; see *piratama-mandiri.*

த.வ. முதன்மை அமைச்சர்

*[Skt. prathama+mantrin > த. பிரதமமந்திரி]*

**பிரதமவாக்கியம்** *piradma-vākkiyam,* பெ.(n.) கருதலளவை உறுப்புகளுளொன்று; major premise.

*[Skt. prathama+vākya> த. பிரதமவாக்கியம்]*

**பிரதமவிசாரணை** *piradamavišāraṇai,* பெ.(n.) தொடக்கத்திற் செய்யும் உசாவுகை; preliminary investigation or enquiry.

த.வ. முதல் உசாவல்

*[Skt. prathama+vi-cāraṇā > த. பிரதம விசாரணை]*

**பிரதமன்**[1] *piradamaṉ,* பெ.(n.) பாற்கன்னல் வகை; a kind of sweet milk-porridge.

*[M. prathaman > த. பிரதமன்]*

**பிரதமன்**[2] *piradamaṉ,* பெ.(n.) தலைவன்; head, chief. "மூடர்க்கெலாம் பிரதமன்" (பாடு.92,8).

*[Skt. prathama > த. பிரதமன்]*

**பிரதமானுயோகம்** *piradamāṉuyōgam,* பெ.(n.) சமணர்களுக்குரிய நான்கு மறைகளில் முதலாவது (நீலகேசி,1,உரை,பக்.9); the first of the four Vēdas of the Jains.

*[Skt. prathama+anuyōga> த. பிரதமானுயோகம்]*

**பிரதமிகர்** *piradamikar,* பெ.(n.) தேவதூதர் வகை (R.C.); archangels.

த.வ.இறைத்தூதர்

*[Skt. prāthamika > த. பிரதமிகர்]*

**பிரதமை** *piradamai,* பெ.(n.) 1. காருவாவிற்குப் பின்னும், வெள்ளுவாவிற்குப் பின்னும் வரும் முதல் நாள் (நிலாமான நாள்) (முதல்திதி); first *titi* after new moon or full moon in a lunar fortnight. 2. கடுக்காய் (வின்.); chebulic myrobalan, being the first of *tiripalai.*

த.வ.ஒரி

*[Skt. prathamā > த. பிரதமை]*

**பிரதரம்** *piradaram,* பெ.(n.) பெரும்பாடு (பைஷஜ.); menorrhagia.

*[Skt. pra-dara > த. பிரதரம்]*

**பிரதரிசிப்பி-த்தல்** *piradaricippi-,* 4 செ.குன்றாவி. (v.t.) விளக்குதல் (சங்.அக.); to explain, illuminate.

*[Skt. pra-darši > த. பிரதரிசிப்பி-த்தல்]*

**பிரதன்** *piradaṉ,* பெ.(n.) கொடையாளன்; bestower, giver, used at the end of compounds, munificent. "வரப்பிரதன்".

த.வ.வள்ளல்

*[Skt. pra-da > த. பிரதன்]*

**பிரதனை** *piradaṉai,* பெ.(n.) 243 தேரும், 243 யானையும், 729 குதிரையும், 1215 காலாளுங் கொண்ட ஒரு படைவகுப்பு (வின்.); division of an army, consisting of 243 chariots, 243 elephants, 729 horses and 1215 foot.

*[Skt. pṛthanā > த. பிரதனை]*

**பிரதாபம்** *piradābam,* பெ.(n.) 1. வீரம்; bravery, heroism. "காமற்றெறு பிரதாபமும்" (சிவப்.பிர. சிவஞா.கலம்.39). 2. பெருமை; greatness, magnificence. 3. புகழ்; fame, glory, celebrity. 4. ஒளி; splendour.

த.வ.1. மறம் 2. செருக்கு 3. பெயர் பெற்ற 4. மிகுவெளிச்சம்

*[Skt. pra-tāpa > த. பிரதாபம்]*

**பிரதாபலங்கேச்சுரம்** *piradābalaṅgēccuram,* பெ.(n.) இதளியம், கந்தகம் முதலியவற்றாற் செய்த கூட்டு மருந்து வகை (பதார்த்த,1224.) (பைஷஜ.153); a medicine, compounded of mercury, sulphur and other ingredients.

[*Skt. pra-tāpa+laṅkēś-vara > த. பிரதா பலங்கேச்சுரம்*]

**பிரதாபி-த்தல்** *piradābi-,* 4 செ.கு.வி.(v.i.) பெருமைப்படுதல் (வின்.); to become glorious, famous or exalted.

த.வ.புகழடைதல், சிறப்படைதல்

[*Skt. pratāpa > த. பிரதாபி-த்தல்*]

**பிரதானகோயில்** *piradāṉakōyil,* பெ.(n.) 1. மூல தெய்வம் உள்ள கோயில்; the shrine of the chief deity in a temple. 2. கிறித்தவர்களின் தலைமைக்கோயில் (கட்டட.நாமா.4.); cathedral.

த.வ.1. கருவறைக்கோயில் 2. தேவாலயம்

[*Skt. pradhāna > த. பிரதானம்+கோயில்*]

**பிரதான நீதிக்காரன்** *piradāṉa-nīdi-k-kāraṉ,* பெ.(n.) தலைமை நடுவர்; (நீதிபதி.) (பாண்டி.); chief judge.

[*Skt. pradhāma > த. பிரதான+நீதிக்காரன்*]

**பிரதானபுருடச்சுரி** *piradāṉa-puruḍaccuri,* பெ.(n.) மலைமகள் (கூர்மபு.திருக்கலியாண, 23); the Goddess Pārvati.

த.வ.உமையாள்

[*Skt. pradhāna-puruṣēśvari > த. பிரதான புருடேச்சுரி*]

**பிரதானபுருடன்** *piradāṉa-puruḍaṉ,* பெ.(n.) முதன்மையானவன்; chief of prominent person.

த.வ.தலைவன், சிறந்தவன்

[*Skt.pradhāna+puruṣa> த. பிரதானபுருடன்*]

**பிரதானபூதம்** *piradāṉa-būdam,* பெ.(n.) முதன்மையானது; that which is chief or important.

[*Skt. pra-dāna > த. பிரதானம்+பூதம்*]

**பிரதானம்** *piradāṉam,* பெ.(n.) 1. இயற்கையின் உட்பொருள்; படைப்பின் மெய்ம்மை; material cause of creation, matter. "இரும்பிரதானத் தெழுமன தத்துவம்" (ஞான.64,1). 2. மிகத் தேவையானது; importance, eminence, essence. 3. தலைமைப்பொருள்; that which is important. "பிரதானத்தோ டப்பிரதானம்" (பி.வி.16,உரை.).

த.வ.1.முதன்மைமெய்ப்பொருள் 2. இன்றி யமையாதது

[*Skt. pradhāna > த. பிரதானம்*]

**பிரதானமடி-த்தல்** *piradāṉam-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) தற்பெருமை கொண்டாடுதல்; to boast, make much of oneself; blow one's own triumph.

த.வ.தம்பட்டம் அடித்தல்

[*Skt. pradhāna > த. பிரதானம்+அடித்தல்*]

**பிரதானன்** *piradāṉaṉ,* பெ.(n.) 1. தலைமை யானவன்; chief man. 2. அரசியற்காரியங்கள் எல்லாவற்றையும் நடத்தும் அமைச்சன் (சுக்கிரநீதி,66.); a minister who attends to all the functions of a state.

த.வ. முதன்மையானவன்

[*Skt. pradhāna > த. பிரதானன்*]

**பிரதானி** *piradāṉi,* பெ.(n.) அமைச்சர்; minister. "திகழ்வடுக நாததுரை மெச்சும் பிரதானி" (தனிப்பா.i.260,1).

[*Skt. pradhāna > த. பிரதானி*]

**பிரதானிக்கம்** *piradāṉikkam,* பெ.(n.) 1. கருவூல அதிகாரியின் அலுவலகம் (வின்.); office of a treasurer. 2. அமைச்சகம்; ministerial office.

[*Skt. pradhāna > த. பிரதானிக்கம்*]

**பிரதானிசோடி** *piradāṉišōḍi,* பெ.(n.) அமைச்சர் பயன்படுத்தும் இலவய நிலம் (S.I.I.); iṉām held on a fixed quit-rent by a minister.

த.வ.இலவய நிலம்

*[Skt. pradhāna > த. பிரதானி+சோடி]*

**பிரதானை** *piradāṉai,* பெ.(n.) மலைமகள் (கூர்மபு.திரு.20.); Pārvati.

த.வ.இறையரசி, உமையவள்

*[Skt. pradhānā> த. பிரதானை]*

**பிரதி**[1] *piradi,* பெ.(n.) 1. ஒத்த தன்மை; likeness. "பிரதிபிம்பம்". 2. மாற்று, நிகரி, பதிலி; substitute. "வயிரத்துக்குப் பிரதி புட்பராகம் வைக்கப்பட்டது". 3. விடை; answer, response. 4. படி; copy, transcript, duplicate. "இது கையெழுத்துப் பிரதியா? 5. நூல்படி; manuscript 6. மாறு, எதிர்ச்சொல்; opposition. நான் சொல்லுவதற் கெல்லாம் பிரதி சொல்லுகிறான். 7. போட்டி; competition. அவன் கடைக்கு இது பிரதியாக வைத்தது. 8. எதிர்வழக்காளி; defendant. அவன் இந்த வழக்கிலே பிரதி (இ.வ.).

*[Skt. prati> த. பிரதி]*

**பிரதி**[2] *piradi,* பெ.எ. (adj.) ஒவ்வொரு; each, every. பிரதி நாளும் வர வேண்டும்.

*[Skt. prati> த. பிரதி]*

**பிரதிக்கடமை** *piradi-k-kaḍamai,* பெ.(n.) செய்ந்நன்றி (கல்வி.வி.1,1,7.); gratitude.

த.வ.நன்றிக்கடன்

*[Skt. prati> த. பிரதி+கடமை]*

**பிரதிக்கிரகம்** *piradikkiragam,* பெ.(n.) 1. கொடை பெறுகை; acceptance of gifts. 2. படையின் பின்புறம், பின்பக்கம் (குறள், 767, அடிக்குறிப்பு.); rear of an army.

த.வ.ஈகை பெறல்

*[Skt. prati-graha> த. பிரதிக்கிரகம்]*

**பிரதிக்கிரகி-த்தல்** *piradikkiragi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கொடை கொள்ளுதல்; to accept a gift.

த.வ. ஏற்றல், ஈகை கொள்ளல்

*[Skt. pratigraha > த. பிரதிக்கிரகி-த்தல்]*

**பிரதிக்கிரமணம்** *piradi-k-kiramaṇam,* பெ.(n.) மன்னிப்பு; pardon. "அப்பாவங்கெடப் பிரதிக்கிரமனஞ் சொல்லி" (நீலகேசி,315, உரை).

த.வ.குற்ற ஒப்புகை, குற்ற வருத்தம்

*[Skt. prati-kramaṇa> த. பிரதிக்கிரமணம்]*

**பிரதிக்கிரியை** *piradi-k-kiriyai,* பெ.(n.) 1. **பிரதி கருமம்** பார்க்க; see *piradikarumam*. 2. கழுவாயாக செய்யுஞ் செய்கை; redress, remedy.

த.வ. கழுவாய், குற்ற ஈடு செயல்

*[Skt. prati+kriya > த. பிரதிக்கிரியை]*

**பிரதிக்கினை** *piradikkiṉai,* பெ.(n.) 1. கருதிய செய்தி (பி.வி.2,உரை.); that which is proposed or resolved upon. 2. ஊக உறுப்புகளில் நிறைவேற்ற (சாதிக்க) வேண்டிய பொருள் (தருக்க.சங்.49); major premise. 3. சூளுறவு; vow, solemn declaration. 4. தீர்மானம்; pledge, resolve. 5. உடன்பாடு (யாழ்.அக.); assent. 6. **பாபசங்கீர்த்தனம்** (கிறித்து.) (வின்.) பார்க்க; see *pabašaṅgirttaṉam.*

த.வ. 1. கருத்தூகம், 3. வெகுண்டுரை, 4. எண்ண முடிவு, 5. ஒத்த முடிவு ஒப்பளிப்பு

*[Skt. prati-jñā> த. பிரதிக்கினை]*

**பிரதிகருமம்** *piradi-karumam,* பெ.(n.) 1. செய்ததற்கு மாறு செய்கை; retaliation, requital. 2. புனைகை (யாழ்.அக.); adornment, decoration.

த.வ.1. பழிவாங்குகை, 2. அழகுபடுத்துகை, ஒப்பனை செய்கை

*[Skt. prati-karman> த. பிரதிகருமம்]*

**பிரதிகுலம்** *piradi-kulam,* பெ.(n.) பிரதிகூலம் பார்க்க;see piratikūlam. "பிரதிகுலமேற் றீதாம்" (சினேந்.443).

*[Skt. prati-kūla> த. பிரதிகூலம்> பிரதிகுலம்]*

**பிரதிகை** *piradigai,* பெ.(n.) தும்புருவுக்குரிய வீணை (பரத.ஒழிபு.15.); a lute of Tumburu.

*[Skt.cf. bṛhatika> த. பிரதிகை]*

**பிரதிச்சீட்டு** *piradi-c-cittu,* பெ.(n.) 1. எதிர் குறிப்புத்தாள்; bond given in return, counter-part. 2. நகல்; copy of a bond.

*[Skt. prati > த. பிரதி+சீட்டு]*

**பிரதிசருக்கம்** *piradi-šarukkam,* பெ.(n.) தட்சன் முதலிய துணை படைப்புக் கடவுளரால் படைக்கப்படும் படைப்பு (மச்சபு.நைமிச.37); secondary creation by the upa-p-piramar.

*[Skt. prati-sarga> த. பிரதிசருக்கம்]*

**பிரதிட்டாகலை** *piratiṭṭākalai,* பெ.(n.) சிவஆற்றலின் ஐந்து கலைகளுள் உயிராதனை வீடுபேற்றில் உய்க்குங் கலை (சி.போ.பா.5,2, பக்.143,புதுப்.); sphere of action of the energy of Siva, which lead the soul to the liberated state, one of pañja-kalai.

*[Skt. prati-ṣṭhā > த. பிரதிட்டா+கலை]*

**பிரதிட்டி-த்தல்** *piradiṭi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கோயில் முதலியவற்றில் தெய்வத்தை நிறுவுதல்; to establish a deity, as in a temple. "அக்கினியைப் பிரதிட்டிப்பதற்கு முன்பே" (சீவக.2464,உரை). 2. நிலை நாட்டுதல்; to settle, as a family.

**த.வ.நிலைக்கச் செய்தல், நிலைகோள் செய்தல்**

*[Skt. prati-.sṭhā > த. பிரதிட்டி-த்தல்]*

**பிரதிட்டை**[1] *piradiṭṭai,* பெ.(n.) 1. தெய்வத்தைப் புதுக்கோயில் முதலியவற்றில் நிறுவுகை; establishing a deity, as in a newly built temple. 2. நிலை பெறுகை; founding as of a family establishing setting in security. "பிராண பிரதிட்டை (இராமநா.உயுத்.5). 3. உயிராதனை வீடுபேற்றில் உய்க்குங் கலை (சி.போ.பா.5,2,பக்.143.புதுப்.); sphere of action of the energy of šiva, which lead the soul, to the liberated state, one of pañca-kalai.

*[Skt. prati-.sṭhā > த. பிரதிட்டை]*

**பிரதிட்டைப்பண்டிகை** *piradiṭṭai-p-paṇḍigai,* பெ.(n.) முதற்பேறுகளைக் கடவுட்குக் கொடுக்கும் காணிக்கைத் திருவிழா (கிறித்து.); feast of dedication.

**த.வ.முதற்காணிக்கை, நேர்த்திக்கடன் விழா**

*[Skt. prati-ṣṭhā > த. பிரதிட்டை+பண்டிகை]*

**பிரதிதானம்** *piradidāṉam,* பெ.(n.) 1. கைம்மாறு; remuneration, gift in return. 2. பிற்பயன் கருதி உதவுங் கொடை; gift made in expectation of a return. 3. சரக்குகளுக்கு விலையாகக் கொடுக்கப்பட்ட பொருள் (சுக்கிரநீதி, 98); price.

**த.வ. 1. சிறுகடன் 2. எதிர்நோக்கு உதவி 3. மாறுகொள்ளல் 4. பண்டமாற்று**

*[Skt. prati-dāna > த. பிரதிதானம்]*

**பிரதிதுரை** *piradituraí,* பெ.(n.) உதவியதிகாரி (வின்.); a deputy governor.

**த.வ.துணை ஆளுநர்**

*[Skt. prati+dhurya > த. பிரதிதுரை]*

**பிரதிதொனி** *piradi-toṉi,* பெ.(n.) எதிரொலி (யாழ்.அக.); echo, reverberation.

**த.வ.எதிரொலி, மாறுஒலி**

*[Skt. prati-dhvani > த. பிரதிதொனி]*

**பிரதிநாதம்** *piradi-nādam,* பெ.(n.) **பிரதிதொனி** (யாழ்.அக.) பார்க்க; see *piradi-toṉi.*

*[Skt. prati+nāda > த. பிரதிநாதம்]*

**பிரதிநாயகன்** *piradināyagaṉ,* பெ.(n.) பாட்டுடைத் தலைவனின் பகைவன்; the chief adversary of the hero of any poetic composition.

**த.வ. கொடும்பன்**

*[Skt. prati +nāyaka> த. பிரதிநாயகன்]*

**பிரதிநிதி** *piradinidi,* பெ.(n.) 1. மாற்று ஆள்; deputy, representative. 2. காலத்தின் தகுதி

நோக்கி ஒரு செயலைச் செய்தற்கும் ஒழிதற்கும் உரிமையுள்ள அமைச்சன் (சுக்கிரநீதி,66.); a minister who does or forbears from doing an act, good or evil, as occasion demands.

த.வ.நிகராளி, நிகராளர், நிகரர்

*[Skt. prati-nidhi> த. பிரதிநிதி]*

**பிரதிப்பிரயோசனம்** *piradi-p-pirayōšaṉam,* பெ.(n.) கைம்மாறு (உ.வ.); benefit in return, consideration, remuneration.

த.வ.எதிர்நோக்கு உதவி

*[Skt. prati+pra-yōjana> த. பிரதிப்பிரயோசனம்]*

**பிரதிபடன்** *piradipaḍaṉ,* பெ.(n.) எதிராளி; opponent, competitor. "ஹேயப்ரதி படனாய்" (திவ்.திருவாய்.4,1,10,பன்னீ.).

த.வ.போட்டியாளர்

*[Skt. prati-bhaṭa> த. பிரதிபடன்]*

**பிரதிபத்தி** *piradipatti,* பெ.(n.) 1. மதிப்பு; regard, respect. ஆசாரியனிடத்தில் பிரதிபத்தி யுள்ளவன். 2. நம்பிக்கை; confidence, faith. மந்திரத்தில் பிரதிபத்தியிருந்தால் பலன் கை கூடும்.

த.வ.மதிப்புரவு

*[Skt. prati-patti> த. பிரதிபத்தி]*

**பிரதிபதம்** *piradipadam,* பெ.(n.) 1. ஒரு பொருட்பன்மொழி (பி.வி.42); synonym. 2. சொற்பொருளுரை; explanation or interpretation, word by word.

த.வ. பொழிப்புரை

*[Skt. prati+pada> த. பிரதிபதம்]*

**பிரதிபந்தகம்** *piradipandagam,* பெ.(n.) தடை (உ.வ.); obstacle, impediment.

த.வ.இடையூறு, தடங்கல், முட்டுக்கட்டை

*[Skt. prati-bandha-ka> த. பிரதிபந்தகம்]*

**பிரதிபந்தம்** *piradibandam,* பெ.(n.) **பிரதிபந்தகம்** (வேதா.சூ.141,உரை) பார்க்க; see *piradipandagam.*

*[Skt. pratibandha> த. பிரதிபந்தம்]*

**பிரதிபலம்** *piradipalam,* பெ.(n.) **பிரதிப் பிரயோசனம்** பார்க்க; see *piradi-p-pirayōšaṉam.*

*[Skt. prati-phala> த. பிரதிபலம்]*

**பிரதிபலனம்** *piradipalaṉam,* பெ.(n.) 1. எதிருரு; reflection, shadow, mirrored image. "பிரதிபலனச் சாயையாகிய சீவேசுர சகத்திற்கு" (வேதா.சூ.56,உரை).

த.வ.எதிர்நிழல், எதிர்சாயை

*[Skt. pratiphalana> த. பிரதிபலனம்]*

**பிரதிபலி-த்தல்** *piradipali-,* 4 செ.கு.வி. (v.i.) கண்ணாடியில் எதிருரு தோன்றுதல் (கைவல். தத்துவ.32,உரை.); to be reflected, as an image in a mirror.

த.வ.எதிரொலித்தல்

*[Skt. prati-phal> த. பிரதிபலி-த்தல்]*

**பிரதிபாத்தியம்** *piradipāttiyam,* பெ.(n.) எடுத்து விளக்கப்படுவது (வேதா.சூ.9,உரை.); that which is explained or propounded.

த.வ.விளக்கவுரை, விரிவுரை

*[Skt. pratipādya > த. பிரதிபாத்தியம்]*

**பிரதிபாதகம்** *piradipādagam,* பெ.(n.) எடுத்து விளக்குவது (வேதா.சூ.9,உரை.); that which explains.

த.வ.விரிவுரை

*[Skt. pratipādaka> த. பிரதிபாதகம்]*

**பிரதிபாதி-த்தல்** *piratipāti-,* 4 செ.கு.வி. (v.t.) எடுத்து விளக்குதல்; to explain, illustrate. "இவ்வருத்தந்தனையே பிரதிபாதிக்கும்" (சூத.எக்.உத்.தைத்தரீக.16).

த.வ.விரிவுரையாற்றுதல்

*[Skt. prati-pad> த. பிரதிபாதி-த்தல்]*

**பிரதிபிம்பம்** *piradibimbam,* பெ.(n.) கண்ணாடி போன்ற பொருளில் தோன்றும் படிவுருவின் தோற்றம்; counterpart of an original, mirrored image.

த.வ.எதிருரு, நிழலுரு

*[Skt. prati+bimba> த. பிரதிபிம்பம்]*

**பிரதிபுண்ணியவராகன்** *piradipuṉṇiya-varāgaṉ,* பெ.(n.) பழைய காசு வகை (பணவிடு.116.); an ancient coin.

[*Skt. prati+puṇya+varāha*> *த. பிரதி புண்ணியவராகன்*]

**பிரதிமத்தியமம்** *piradimattiyamam,* பெ.(n.) எழுவகைப் பண்களுள் நான்காவதாகிய "ம" என்ற பண் (சிலப்.3,23,உரை); (Mus.) highest variety of the fourth note of the gamut, one of šōḍaša-šuram.

[*Skt. prati+madhyana*> *த. பிரதிமத்தியமம்*]

**பிரதிமாலை** *piradi-mālai,* பெ.(n.) ஈற்றெழுத்து கவி (யாழ்.அக.); a stanza which begins with the last word or syllable of another stanza a capping verse.

[*Skt. prati*> *த. பிரதி+மாலை*]

**பிரதிமானம்** *piradi-māṉam,* பெ.(n.) யானைக் கொம்புகளுக்கு இடையிலுள்ள முகப்பகுதி (பிங்.); the part of an elephant's head between its tusks.

த.வ. நுதல்

[*Skt. pratimāna*> *த. பிரதிமானம்*]

**பிரதிமுகம்** *piradimugam,* பெ.(n.) ஐவகை நாடக சந்தியுள் முளைத்து இலை தோன்றி நாற்றாய் முடிவதுபோல நாடகப்பொருள் நிற்பது (சிலப்.3,13,உரை.); that part of a drama which embraces the main action of the play and leads on to the catastrophe, epitasis, one of five kinds of nāḍaka-c-candi.

[*Skt. prati*> *த. பிரதி+முகம்*]

**பிரதிமூர்த்தி** *piradi-mūrtti,* பெ.(n.) 1. ஒத்த வடிவம்; likeness, image, representation. 2. பெயர்த்தெழுதுகை; transcript.

த.வ.ஒத்தபடி, ஒத்த உரு

[*Skt. prati*> *த. பிரதி+மூர்த்தி*]

**பிரதிமை** *piradimai,* பெ.(n.) உருவம்; puppet, figure, effigy, statue, portrait.

த.வ.உருவம், பொம்மை, கொடும்பாவி, சிலை, உருத்தோற்றம்

[*Skt. pratimā*> *த. பிரதிமை*]

**பிரதியத்தனம்** *piradiyattaṉam,* பெ.(n.) 1. எதிரிடை; opposition. 2. சிறைப்படுத்துகை; imprisonment. 3. பழிவாங்குகை; avenging. 4. விருப்பம்; liking.

த.வ.1. நேர் எதிர், 4. ஆசை

[*Skt. prati-yatna*> *த. பிரதியத்தனம்*]

**பிரதியாதனை** *piradiyādaṉai,* பெ.(n.) ஒத்த வடிவம் (யாழ்.அக.); representation, image.

த.வ.சார்பு வடிவம்

[*Skt. prati-yātanā*> *த. பிரதியாதனை*]

**பிரதியுத்தரம்** *piradiyuttaram,* பெ.(n.) மறுமொழி; answer.

த.வ.விடை

[*Skt. pratyuttara*> *த. பிரதியுத்தரம்*]

**பிரதியுபகாரம்** *piradi-y-ubagāram,* பெ.(n.) கைம்மாறு; favour in return, recompense.

த.வ.எதிர்நோக்கு உதவி

[*Skt. pratyupakāra*> *த. பிரதியுபகாரம்*]

**பிரதியோகம்** *piradi-yōgam,* பெ.(n.) 1. எதிரிடை; opposition, contrariety. 2. கூட்டம்; union.

[*Skt. prati-yōga*> *த. பிரதியோகம்*]

**பிரதியோகி**[1] *piradiyōgi,* பெ.(n.) 1. எதிர் மறைவினை; verb implying negation. "விதியனுயோகி மறைபிரதியோகி" (பி.வி. 16,உரை). 2. எதற்கு இன்மை கூறப்படுகிறதோ அது; (Log.) a thing whose non-existence is predicated.

த.வ. எதிர்வினை

[*Skt. prati-yōgin*> *த. பிரதியோகி*]

**பிரதியோகி**[2] *piradiyōgi,* பெ.(n.) எதிராளி (சி.சி.3,4,சிவாக்.); opponent.

[*Skt. prati-yōgin*> *த. பிரதியோகி*]

**பிரதிரூபம்** *piradi-rūbam,* பெ.(n.) **பிரதிமூர்த்தி** (யாழ்.அக.) பார்க்க; see *piradi-mūrtti.*

[*Skt. prati-rūpa*> *த. பிரதிரூபம்*]

**பிரதிலோமசன்** *piradilōmaśan,* பெ.(n.) உயர்குலப் பெண்ணுக்கும் இழிகுல ஆணுக்கும் பிறந்த மகன் (பிங்.); one born of a union between a man of inferior caste and a woman of a superior caste.

*[Skt. prati-lōma-ja> த. பிரதிலோமசன்]*

**பிரதிவசனம்** *piradi-vaśaṉam,* பெ.(n.) 1. மறுமொழி; answer, reply. 2. எதிரொலி (யாழ்.அக.); echo.

**த.வ.1. விடை, 2. மறு ஒலி**

*[Skt. prati-vacana> த. பிரதிவசனம்]*

**பிரதிவத்தூபமை** *piradivattūbamai,* பெ.(n.) மறுபொருளுவமை (தண்டி.30,6.); a kind of simile.

*[Skt. prati-vastūpamā> த. பிரதிவத்தூபமை]*

**பிரதிவாதம்** *piradi-vādam,* பெ.(n.) எதிர்உரை (வாதம்.); defence, replication, answer in law.

*[Skt. prati+vāda> த. பிரதிவாதம்]*

**பிரதிவாதி**[1] *piradi-vādi,* பெ.(n.) 1. எதிர் வழக்கன்; defendant, respondent, the accused. 2. எடுத்துரைப்பில் எதிராளி; opponent in a controversy.

*[Skt. prati+vādin> த. பிரதிவாதி]*

**பிரதிவாதி**[2]**-த்தல்** *piradi-vātd,* 4 செ.குன்றாவி. (v.t.) எதிராடல்; to reply, present a defence.

**த.வ.சொற்போர், சொல்லாடல்**

*[Skt. prati+vāda> த. பிரதிவாதி-த்தல்]*

**பிரதிவாபம்** *piradivābam,* பெ.(n.) மருந்து ஊர்தியில் மருந்தோடு எடுத்துச் செல்லப்படும் துணைப் பொருள் (யாழ்.அக.); any substance taken along with a medicine vehicle.

*[Skt. prati-vāpa> த. பிரதிவாபம்]*

**பிரதிவிம்பம்** *piradivimbam,* பெ.(n.) எதிர் நிழல்; reflection, image, counterpart of an original. "தோன்றிடும் பிரதிவிம்பம்" (இரகு. குசன.27).

**த.வ.எதிருரு, நிழலுரு**

*[Skt. pratibimba> த. பிரதிபிம்பம்]*

**பிரதிவிம்பீகரி-த்தல்** *piradivimpīkari-,* 4 செ.கு.வி. (v.i.) பிரதியுருவந் தோன்றுதல்; to take shape again. "நடராஜ மூர்த்தமே பிரதிவிம்பீகரித்துப் பெரியோனெனச் சொல்ல வந்ததால்" (சந்திரகலாமாலை,15).

*[Skt. prati-bimba+kr> த. பிரதிவிம்பீகரி-த்தல்]*

**பிரதீகாரம்**[1] *piradīkāram,* பெ.(n.) 1. மருத்துவம்; remedy. 2. சினமாறுகை; conciliation. 3. சீர்திருந்துகை; reforming. 4. பழி வாங்குகை; avenging.

**த.வ.1. தீர்வு, 2. அமைதிப்படுகை, 3. நல்வழிப்படுத்துகை, 4. எதிர்பழி தீர்க்கை**

*[Skt. prati-kāra> த. பிரதீகாரம்]*

**பிரதீகாரம்**[2] *piradīkāram* பெ.(n.) 1. கதவு; door. 2. ஏமாற்றுகை; deception.

**த.வ.1. கபாடம் 2. கரவடம்**

*[Skt. pratī-hāra> த. பிரதீகாரம்]*

**பிரதீகாரம்**[3] *piradīkāram,* பெ.(n.) எதிரிடை; opposition. "பெண்ணு மாணும் மன்மையிற் பிரதீகாரமில்லை" (நீலகேசி,96,உரை).

*[Skt. pratī-kāra> த. பிரதீகாரம்]*

**பிரதீதி** *piradīdi,* பெ.(n.) 1. அறிவு (சி.சி.2, 54,சிவாக்.); clear apprehension or insight. 2. புகழ் (யாழ்.அக.); fame. 3. மகிழ்ச்சி; delight. 4. விருப்பம் (யாழ்.அக.); desire. 5. தோன்றுகை; perception.

**த.வ.1. மூளை 2. பெருமை 3. பெருங்களிப்பு, பேருவகை 4. ஆசை 5. உதிக்கை**

*[Skt. pratīti> த. பிரதீதி]*

**பிரதீபம்** *piradībam,* பெ.(n.) 1. எதிர் நிலை; contrariness,opposition. 2. உவமேயங்களை மாற்றிச் சொல்லும் எதிர் நிலை அணி (அணியி.4.); a figure of speech.

**த.வ. மாறுநிலை**

*[Skt. pratīpa> த. பிரதீபம்]*

**பிரதீரம்** *piradīram,* பெ.(n.) கரை (யாழ்.அக.); bank, shore.

த.வ.ஓரம்

*[Skt. pra-tīra> த. பிரதீரம்]*

**பிரதேசம்** *piradēšam,* பெ.(n.) இடம்; place, locality. "ஆன்மா சரீரத்திலே ஒரு பிரதேசத்திலே இருப்பன்" (சி.சி.4,16,மறைஞா.).

த.வ.பகுதி

*[Skt. pra-dēša> த. பிரதேசம்]*

**பிரதை** *piradai,* பெ.(n.) பாண்டுவின் மனைவியான குந்தி தேவி (பாரத.சம்பவ.25.); Kundī, wife of Pāṇḍu.

*[Skt. pṛthā> த. பிரதை]*

**பிரதோடம்** *piradōḍam,* பெ.(n.) 1. ஞாயிறு மறைவிற்கு முன்னும் பின்னுமுள்ள மூன்றே முக்கால் நாழிகை; evening, 3 3/4 nāḻigai before and after sunset. 2. சிவபெருமானை வழிபடுதற்குரியதான கரும்பக்கத்தின் பதின் மூன்றாம் உவா நாள் (கிருஷ்ணத் திரயோதசி) கூடிய மாலைக்காலம்; evening of the 13th *titi* of dark fortnight, considered auspicious for worshipping Siva.

த.வ.பதின்மும்மி

*[Skt. pra-dōsa> த. பிரதோடம்]*

**பிரபஞ்சக்கட்டு** *pirabañja-k-kaṭṭu,* பெ.(n.) உலகப் பற்று; worldly attachment.

த.வ.அன்புத்தளை, உறவுக்கட்டு

*[Skt. pra-pañca> த. பிரபஞ்சம்+கட்டு]*

**பிரபஞ்சகாரியம்** *pirapañja-kāriyam,* பெ.(n.) உலகியல் பற்று, தொடர்பு; secular matter, worldly affair.

த.வ.இம்மைஆசை, உறவுத்தளை, உலகத்தொடர்பு

*[Skt. pra-pañca+kārya> த. பிரபஞ்சகாரியம்]*

**பிரபஞ்சசாகரம்** *pirabañjašāgaram,* பெ.(n.) கடல்போல் பரந்துள்ள உலகியல் பற்று (வின்.); the ocean of worldly attachment.

த.வ.இம்மைப் பற்று, வாழ்க்கைப் பற்று, உலக ஆசை

*[Skt. pra-pañca+šāgara> த. பிரபஞ்சசாகரம்]*

**பிரபஞ்சம்** *pirabañjam,* பெ.(n.) 1. உலகம்; universe, phenomenal world. "பிரபஞ்ச வைராக்கியம்" (திருவாச.). 2. உலக வாழ்வு; mundane existence. 3. உலகியல்; worldliness.

த.வ.1. அண்டம் 2. இம்மை வாழ்க்கை 3. வாழ்வியல்

*[Skt. pra-pañca> த. பிரபஞ்சம்]*

**பிரபஞ்சமயக்கம்** *pirabañja-mayakkam,* பெ.(n.) உலக நிகழ்ச்சிகளிலுள்ள மனமயக்கம்; delusion caused by worldly attachment.

த.வ.அண்டமயக்கம், உலகியல் தடுமாற்றம்

*[Skt. pra-pañca> த. பிரபஞ்சம்+மயக்கம்]*

**பிரபஞ்சமாயை** *pirabañja-māyai,* பெ.(n.) 1. உலகமாயை; illusion of the phenomenon of the world. 2. மூலம்; matter. 3. உலகப் பொருள்களின் போலித் தோற்றரவு; vanity of earthly things.

த.வ. அடிப்படை

*[Skt. pra-pañca> த. பிரபஞ்சம்]*

**பிரபஞ்சவாசனை** *pirabañja-vāšaṉai,* பெ.(n.) உலகத்தின் இன்பதுன்ப நுகர்வு; experience of the joys and sorrows of the world.

*[Skt. pra-pañca+vāsanā> த. பிரபஞ்சவாசனை]*

**பிரபஞ்சவாழ்வு** *pirabañja-vāḻvu,* பெ.(n.) உலக வாழ்க்கை (வின்.); worldly prosperity, temporal enjoyment.

த.வ.இம்மை மகிழ்வு, உலகியல் நுகர்வு

*[Skt. pra-pañca> த. பிரபஞ்சம்+வாழ்வு]*

**பிரபஞ்சவியாபாரம்** *pirabañja-viyābāram,* பெ.(n.) உலகியல் செயல் (வின்.); worldly dealings, earthly concern.

த.வ.நடைமுறை வாழ்க்கை, உலக நடவடிக்கை

*[Skt. pra-pañca+vyāpāra> த. பிரபஞ்ச வியாபாரம்]*

**பிரபஞ்சவிருத்தி** *pirabañja-virutti,* பெ.(n.) 1. உலகச் செயல்கள்; worldly actions, work or trade. 2. போலித் தோற்றரவு (மாயா) செயல்; exhibition or development of Māyā in the production of the universe.

**த.வ.1. அண்ட நிகழ்வுகள் 2. பொய்மைத் தோற்றம்**

*[Skt. pra-pañca+vṛtti> த. பிரபஞ்சவிருத்தி]*

**பிரபஞ்சவிலாசம்** *pirabañja-vilāśam,* பெ.(n.) இன்மைத் தோற்றத்தின் விந்தையூட்டும் பல வகையான அழகு வெளிப்பாடுகள் (வின்.); exhibition of Māya in creation, displaying variety, order and beauty.

**த.வ.பொய்மை வெளிப்பாடு**

*[Skt. pra-pañca+vi-lāsa> த. பிரபஞ்சவிலாசம்]*

**பிரபஞ்சவைராக்கியம்** *pirabañja-vairāk kiyam,* பெ.(n.) உலக வாழ்க்கையி லுண்டாகும் வெறுப்பு; disgust in worldly affairs.

**த.வ. பற்றுநீக்கம்**

*[Skt. pra-pañca+vairāgya> த. பிரபஞ்ச வைராக்கியம்]*

**பிரபஞ்சனன்** *pirabañjaṉaṉ,* பெ.(n.) காற்று (பிங்.); wind.

**த.வ.வளி**

*[Skt. prabhañjana> த. பிரபஞ்சனன்]*

**பிரபஞ்சானுக்கிரகம்** *pirabañjaṉukkiragam,* பெ.(n.) உயிர்களிடத்துக் கடவுள் காட்டும் திருவருள்; grace of deity towards souls of the world.

**த.வ.இறையருள், கடவுள் கருணை, தெய்வ இரக்கம்**

*[Skt. pra-pañca+anu-graha> த. பிரபஞ்சானுக்கிரகம்]*

**பிரபஞ்சி** *pirabañji,* பெ.(n.) உலகை உள்ளடக்கியது (சி.சி.2,50,ஞானப்.); that which constitutes the universe.

**த.வ.விரிந்த அண்டம்**

*[Skt. prapañcin> த. பிரபஞ்சி]*

**பிரபத்தி** *pira-patti,* பெ.(n.) இறைவனிடம் அடைக்கலம் புகுகை; taking refuge, as in God. "பிரபத்தியென்னும் பேருடை நெறியால்" (பிரபோத.45,10).

**த.வ.திருவடிப் பற்றுகை**

*[Skt. pra-patti> த. பிரபத்தி]*

**பிரபதனம்** *pirabadaṉam,* பெ.(n.)இறப்பு (சா.அக.); death.

**த.வ.சாவு, மாள்வு**

**பிரபந்தகற்பனை** *pirabandakaṟpaṉai,* பெ.(n.) கட்டுக்கதை (வின்.); fable, fiction, fictitious language, allegorical expression.

**த.வ.கற்பனைக் கதை, புனை கதை**

*[Skt. pra-bandha> த. பிரபந்தம்+கற்பனை]*

**பிரபந்தம்** *pirabandam,* பெ. (n.) சிற்றிலக்கியம்; fable, fiction.

*[Skt. pra-bandha> த. பிரபந்தம்]*

**பிரபந்தீகரி-த்தல்** *pirabandīkaṟi-,* 4 செ.குன்றாவி. (v.t.) நூலாக இயற்றுதல் (ஈடு,அவ,ஜீ.); to produce in a literary form.

**த.வ.இலக்கியமாக்குதல்**

*[Skt. prabandhīkr> த. பிரபந்தீகரி]*

**பிரபலம்** *pirabalam,* பெ.(n.) 1. புகழ்; fame, celebrity. 2. வல்லமை; strength, power. "பிரபலச்சூரர்" (திருப்பு.613). 3. வலிமை யுள்ளது; that which is powerful or authoritative. "சுருதிகட்குத் தம்முட் பிரபல துர்ப்பலங்கள் அறிய மாட்டாது" (சித். மரபுகண்.பக்.7).

**த.வ.1. பெயர் பெற்றது 2. வலிமை 3. ஆற்றல்**

*[Skt. pra-bala> த. பிரபலம்]*

**பிரபலன்** *pirabalaṉ,* பெ.(n.) புகழ் பெற்றவன் (யாழ்.அக.); famous, renowned or powerful person.

**த.வ.பெயர் பெற்றவன், பெருமை பெற்றவன்**

*[Skt. pra-bala> த. பிரபலன்]*

**பிரபவ** *pirabava,* பெ.(n.) சக ஆண்டு (கி.பி.78) தொடக்கத்தில் வடமொழியாளரின் ஆண்டு கள் அறுபதனுள் முதலாம் ஆண்டு; the first

year of the Jupiter cycle of 60 years.

[**Skt.** *Prabhava> த. பிரபவ*]

**பிரபவாதிச்சுவடி** *pirabavādi-c-cuvaḍi,* பெ.(n.) சிறுவர்களுக்கான இந்துக்களின் ஐந்திய (பஞ்சாங்க) நூல்; a primer explaining the Hindu calender.

**பிரபன்னன்** *pirabaṉṉaṉ,* பெ.(n.) தன்னுடைய ஒரே அடைக்கலம் இறைவனே என்று சரணடைந்தவன்; he who accepts God as his sole refuge.

[**Skt.** *pra-panna> த. பிரபன்னன்*]

**பிரபாகரம்** *pirabākaram,* பெ.(n.) பிரபாகரனென்பவனாற் பரப்புரை செய்யப்பெற்ற (பிரச்சாரம்) மீமாஞ்சமதவகை; a system of Mīmāṣā Philosophy expounded by Prabhākaran.

[**Skt.** *prabhākara> த. பிரபாகரம்*]

**பிரபாகீடம்** *pirabā-kīḍam,* பெ.(n.) மின்மினி (சங்.அக.); fire - fly, glow-worm.

**த.வ.மின்னாம்பூச்சி**

[**Skt.** *prabhā-kīṭa> த. பிரபாகீடம்*]

**பிரபாணி** *pirabāṇi,* பெ.(n.) உள்ளங்கை (யாழ்.அக.); hollow of the hand, palm.

**த.வ.அங்கை**

[**Skt.** *pra-pāṇi> த. பிரபாணி*]

**பிரபாதம்**[1] *pirapādam,* பெ.(n.) 1. செங்குத்து; precipice. 2. மலைவீழருவி; cascade, waterfall. 3. கரை; bank, shore.

**த.வ.1. நெட்டுவாக்கு 2. நீர் வீழ்ச்சி 3. ஓரம்**

[**Skt.** *pra-pāta> த. பிரபாதம்*]

**பிரபாதம்**[2] *pirapādam,* பெ.(n.) விடியற்காலை (யாழ்.அக.); break of day.

**த.வ.வைகறை, விடியற்பொழுது**

[**Skt.** *pra-bhāta> த. பிரபாதம்*]

**பிரபாதம்**[3] *pirapādam,* பெ.(n.) தெரு (யாழ்.அக.); street.

**த.வ.வீதி, பொதுப்பாதை, பொதுவழி**

[**Skt.** *pra-pātha> த. பிரபாதம்*[3]]

**பிரபாதிகம்** *pirapādigam,* பெ.(n.) மயில் (யாழ்.அக.); peacock.

[**Skt.** *prapādika> த. பிரபாதிகம்*]

**பிரபாலன்** *pirabālaṉ,* பெ.(n.) மாணாக்கன் (யாழ்.அக.); disciple, pupil.

**த.வ.கற்பவன், பயில்பவன்**

[**Skt.** *pra-bāla> த. பிரபாலன்*]

**பிரபாவம்** *pirabāvam,* பெ.(n.) 1. மேன்மை; dignity, majesty, pre-eminence, grandeur. 2. புகழ்; glory, renown. 3. ஒளி; light, splendour, lustre. 4. வலிமை; strength, valour.

**த.வ.1. உயர்வு, மதிப்பு 2. பெருமை, 3. வெளிச்சம், 4. ஆற்றல்**

[**Skt.** *pra-bhāva> த. பிரபாவம்*]

**பிரபாவளி** *pirabāvaḷi,* பெ.(n.) திருவாசி (M.E.R.151 of 1924); ornamental arch over the figure of a deity.

**த.வ.இறை ஒளிவட்டம்**

[**Skt.** *prabhāvali> த. பிரபாவளி*]

**பிரபாவனம்** *pirabāvaṉam,* பெ.(n.) குளிர் சோலை (யாழ்.அக.); cool grove.

**த.வ.பூங்காவனம்**

[**Skt.** *prapāvana> த. பிரபாவனம்*]

**பிரபிதாமகன்** *pirapidāmagaṉ,* பெ.(n.) கொட்பாட்டன்; great - grandfather. "பிதாபிதமகர்... பிரபிதாமகரா மருவு மூவர்" (சேதுபு.துராசா.55).

**த.வ.பூட்டன்**

[**Skt.** *prapitāmaha> த. பிரபிதாமகன்*]

**பிரபிதாமகி** *pirapidāmagi,* பெ.(n.) கொட்பாட்டி; great-grandmother.

**த.வ.பூட்டி**

[**Skt.** *pra-pitāmahi> த. பிரபிதாமகி*]

**பிரபு** *pirabu,* பெ.(n.) 1. பெருமையிற் சிறந்தோன்; lord, noble. 2. செல்வன்; a man of wealth.

3. அதிகாரி; a man in power. 4. கொடையாளி (உ.வ.); benefactor. 5. இதளியம் (பாதரசம்) (யாழ்.அக.); quick silver, mercury.

த.வ. 1. மேன்மையானவன், உயர்ந்தோன் 2. பணக்காரன் 3. மேல் அலுவலர் 4. வள்ளல்

*[Skt. pra-bhu> த. பிரபு]*

**பிரபுசத்தி** *pirabu-šatti,* பெ.(n.) மூன்று ஆற்றல்களுள் பொருள் படைகளால் அரசர்க்கு அமையும் ஆற்றல் (இரகு.திக்கு.25.); the power of a king derived from his resources in men and money, one of mu-c-catti.

*[Skt. pra-bhu+šakti> த. பிரபுசத்தி]*

**பிரபுத்தன்** *pirabuttan,* பெ.(n.) 1. விழிப் புள்ளவன்; wakeful person. 2. இளமைப் பருவமடைந்தவன்; one who has attained majority. "குமாரன் பிரபுத்தனானவாறே கொடுக்கச் சொல்லுமா போலே" (குருபரம். 319).

த.வ.1. கவனமுள்ளவன், 2. விடலை, காளையன்

*[Skt. pra-buddha> த. பிரபுத்தன்]*

**பிரபுத்துவம்** *pirabuttuvam,* பெ.(n.) 1. மீப்பெருமையாளன் தன்மை; rank or status of a nobleman. "பிரபுத்துவகுமார" (திருப்பு.870). 2. ஆட்சி; power, sovereignty.

த.வ.பெருந்தகைமை, பெரும்புகழுடைமை

*[Skt. pra-bhu-tva> த. பிரபுத்துவம்]*

**பிரபுமோடி** *pirabu-mōḍi,* பெ.(n.) பெருமிதம்; lordly style.

த.வ.செறுக்கு, உள்ளக்களிப்பு

*[Skt. pra-bhu> த. பிரபு+மோடி]*

**பிரபுலிங்கலீலை** *pirabu-liṅga-līlai,* பெ.(n.) சிவப்பிரகாசரால் கி.பி.1652இல் இயற்றப்பட்ட சிவ எழிலுருவோனான அல்லமாப் பிரபுவின் வரலாறு; a poem on the exploits of Allamā-p-pirapu, a manifestation of šiva, by šiva-p-pirakāšar, composed in A.D.1652.

*[Skt. pra-bhu+liṅga+lila> த. பிரபுலிங்கலீலை]*

**பிரபூதபலி** *pirabhūdabali,* பெ.(n.) இறந்தவர் பொருட்டுப் பத்தாம் நாளில் அடை முதலிய வற்றோடு இடும் சோற்றுப்படையல்; boiled rice and cakes offered to the spirit of the deceased on the tenth day of his death.

த.வ.பிண்டச்சோறு

*[Skt. prabhūbali> த. பிரபூதபலி]*

**பிரபேதம்** *pirabēdam,* பெ.(n.) வகை; kind, variety.

த.வ.பகுப்பு, பிரிவு

*[Skt. pra-bhēda> த. பிரபேதம்]*

**பிரபை**[1] *pirabai,* பெ.(n.) 1. ஒளி; light, radiance, brightness, lustre. "தமனியப் பிரபை" (திருப்பு.319). 2. திருவாசி (S.I.I.ii,136,96); nimbus, halo, aureole over the head of a deity. 3. கொற்றவை (யாழ்.அக.); Durgā.

த.வ.1. வெளிச்சம், 2. ஒளிவட்டம், 3. அம்மன், காடுகாள், காளி, மோடி

*[Skt. pra-bhā> த. பிரபை]*

**பிரபோதசந்திரோதயம்** *prabōda-šandirōdayam,* பெ.(n.) பிரபோத சந்த ரோதயமென்ற வடமொழி நாடகத்தைப் பின்பற்றித் தமிழ் மொழியில் மாதைத் திருவேங்கடநாதர் இயற்றிய வேதாந்தம் தொடர்பான பாவியம்; a metaphysical poem adapted by Mātai-t-tiruvēṅkaṭanādar from a Sanskrit drama of the same name.

*[Skt. prabōdha-candrōdaya> த. பிரபோத சந்திரோதயம்]*

**பிரபோதம்** *pirabōdam,* பெ.(n.) பேரறிவு; wisdom, knowledge.

த.வ.முழு அறிவு, பெரும்புலமை

*[Skt. pra-bōdha> த. பிரபோதம்]*

**பிரபோதனம்** *pirabōdanam,* பெ.(n.) 1. எழுப்புகை; waking. 2. கற்பிக்கை; teaching.

த.வ.1. விழிப்படைகை, 2. சொல்லிக் கொடுக்கை

*[Skt. prabōdhana> த. பிரபோதனம்]*

**பிரபோதிகை** *pirabōdigai,* பெ.(n.) கற்பிப்பது; that which instructs or illuminates. "விதிநிஷேதப் பிரபோதிகையா யிருக்கின்ற" (சி.சி.2,1,ஞானப்.).

த.வ.விளக்குகை

*[Skt. prabōdhikā> த. பிரபோதிகை]*

**பிரமக்கிரந்தி** *birama-k-kirandi,* பெ.(n.) 1. பூணூல் முடிச்சு வகை; a kind of knot tied in the sacred thread. 2. சிவமும் சத்தியும் கூடுதற்கு அறிகுறியாக இடும் தருப்பை முடி வகை (வின்.); tying together two bunches of sacrificial grašs in representation of the union of šiva and šakti.

*[Skt. brahman+granthi> த. பிரமக்கிரந்தி]*

**பிரமகத்தி** *biramakatti,* பெ.(n.) 1. பார்ப்பனக் கொலை; murder of a Brahmin. 2. கொன்றானைத் தொடர்ந்து பற்றும் பார்ப்பனக் கொலைப் பாவம்; sin of Brahminicide, haunting and pursuing the murderer. "பிரமகத்தியி னீங்கிப் பிறங்குவான்" (சேதுபு.தனுக்.57). 3. பார்ப்பனைக் கொலை செய்தோனைத் தொடர்ந்து வரும் இறந்தவனுருவம்; ghost of a murdered Brahmin, believed to haunt the murderer.

த.வ. பார்ப்பனப் பேய்

*[Skt. brahma-hatyā> த. பிரமகத்தி]*

**பிரமகபாலம்** *birama-kabālam,* பெ.(n.) 1. நான்முகனின் ஐந்தாந்தலையைக் கிள்ளி இரப்பு ஓடாகச் சிவன் கைக்கொண்ட தலையோடு; skull of the fifth head of Brahmā, plucked off by Siva and carried in his hand as a begging bowl. 2. இமய மலையிலுள்ள ஒரு தெய்வத்தன்மை வாய்ந்த இடம்; a sacred place of pilgrimage in Badarinath.

த.வ.1. இரப்பு மண்டையோடு, 2. நற்பேறு இடம், தூய இடம்

*[Skt. brahman+kapāla> த. பிரமகபாலம்]*

**பிரமகலை** *birama-kalai,* பெ.(n.) வலது நாசியின் வழியாக வரும் மூச்சுக் காற்று (சா.அ.); vital air passing through the right nostril.

*[Skt. bhrama+kalā> த. பிரமகலை]*

**பிரமகற்பம்** *birama-karpam,* பெ.(n.) 1. நான்முகனது வாழ்நாள்; the age or cosmic period of Brahmā. "முன்னமோர் பிரமகற்ப முடிவினில்" (திருவாலவா.47,1). 2. ஒரு பேரெண் (திவா.); a very large number.

*[Skt. brahman> த. பிரமன்]*

**பிரமகன்னிகை** *birama-kannigai,* பெ.(n.) கலைமகள் (யாழ்.அக.); Sarasvati, the Goddess of learning.

த.வ.நான்முகன் தலைவி, புலமகள்

*[Skt. Brahma-kanyakā> த. பிரமகன்னிகை]*

**பிரமகாதகன்** *birama-kādagan,* பெ.(n.) பார்ப்பனனைக் கொலை செய்தோன் (சங்.அக.); murderer of a Brahmin.

*[Skt. brahman+ghātaka> த. பிரமகாதகன்]*

**பிரமகாயத்திரி** *birama-gāyattiri,* பெ.(n.) பார்ப்பனர் நாள்தோறும் வழிபடும் மந்திரவகை; a sacred mantra repeated by the Brahmins in their daily worship.

*[Skt. brahman+gāyatri> த. பிரமகாயத்திரி]*

**பிரமகீதை** *birama-gīdai,* பெ.(n.) தத்துவ ராயசுவாமிகள் இயற்றிய ஒரு வேதாந்த நூல்; a treatise on Vēdānda by Tattuva-rāyar.

*[Skt. brahman+gita> த. பிரமகீதை]*

**பிரமகுலம்** *birama-kulam,* பெ.(n.) பார்ப்பனக்குலம்; the Brahmin caste.

*[Skt. brahman> த. பிரம்மன்]*

**பிரமகூர்ச்சம்** *birama-kūrccam,* பெ.(n.) 1. தருப்பை முடிச்சு; a knot of darbha graff. "பிரமகூர்ச்சந் தோயுநீர்" (கூர்மபு.தான முறைத்.17). 2. ஆனைந்தை மட்டும்

உட்கொள்ளும் நோன்புச் சிறப்பு; a religious fast in which *pañca-kavviyam* alone is taken. 3. ஆனைந்து; the five products of the cow.

*[Skt. brahman> த. பிரம்மன்]*

**பிரமகைவர்த்தம்** *birama-kaivarttam,* பெ.(n.) பதினெண் தொன்மத்து (புராணம்) ளொன்று; a chief Purāṇa, as of *padiṉeṉ-purāṇam.*

*[Skt. brahma-vaivartta> த. பிரமகைவர்த்தம்]*

**பிரமசடங்கம்** *pirama-šaḍaṅgam,* பெ.(n.) உடலின் ஆறுறுப்புகளைத் தொட்டுப் பலுக்கும் ஆறு மந்திரங்கள் (வின்.1); a group of six mantras recited while touching the six members of the body in consecration.

*[Skt. brahman+ṣaḍ-aṅga> த. பிரமசடங்கம்]*

**பிரமசமாசம்** *pirama-šamāšam,* பெ.(n.) புத்தாக்கம் பெற்ற இந்து சமயங்களுள் ஒன்று; the Brahma Samāj, a reformed sect of the Hinduism.

*[Skt. brahman+samāša> த. பிரமசமாசம்]*

**பிரமசரியம்** *pirama-šariyam,* பெ.(n.) 1. தவமனை நான்கனுள் குருவிடமிருந்து, ஓதுதலும் நோன்பு காத்தலுமாகிய நிலை (சீவக.712); student life, life of one devoted to the study of the Vēdas, one of four ācciramam. 2. திருமணம் இல்லாத வாழ்வு (இ.வ.); celibate life. 3. தவம் (அக.நி.); penance. 4. பார்ப்பனர் (அக.நி.); Brahmins.

*[Skt. brahmacarya> த. பிரமசரியம்]*

**பிரமசாத்தன்** *pirama-šāttaṉ,* பெ.(n.) முருகக் கடவுளது பதினெண்ணுருவங்களுள் ஒன்று (தணிகைப்பு.அகத்தியன்.75); a manifestation of lord Murugan.

*[Skt. brahma-sāstṟ> த. பிரமசாத்தன்]*

**பிரமசாரி** *piramašāri,* பெ.(n.) 1. குழுவிடமிருந்து ஓதுதலும், நோன்பு காத்தலுமாகிய செய் கடன்களை மேற்கொண்டொழுகும் முதலாம் குருகுலத்திலுள்ளவன்; a religious student who prosecutes the study of the Vēdas under a preceptor and leads a life of celibacy, one in the first *ācciramam.* "குறட் பிரமசாரி" (திவ்.பெரியாழ்.4,9,7). 2. திருமண மாகாதவன் (உ.வ.); celibate. 3. வீடுமன் (பீஷ்மர்) (சூடா.); Bhiṣma.

த.வ.மணமிலி

*[Skt. brahma-cārin> த. பிரமசாரி]*

**பிரமசூத்திரம்** *pirama-šūttiram,* பெ.(n.) 1. முப்புரிநூல் (யாழ்.அக.); sacred thread consisting of three strands, worn by Brahmins. 2. வியாசர் செய்த உத்தரமீ மாஞ்சை நூல்; a treattise on Vēdānda philosophy, by the sage Vyāsā.

*[Skt. brahman+sūtra> த. பிரமசூத்திரம்]*

**பிரமஞானம்** *pirama-ñāṉam,* பெ.(n.) 1. கடவுளைப் பற்றிய அறிவு; knowledge of the Supreme Being. 2. எல்லாவற்றையும் முழு முதற்பொருளாகக் காணும் அறிவு; pantheism, wisdom which regards everything as God. 3. சமய நல்லிணக்கம் அமைந்த ஒரு புத்தாக்க மதம் (இக்.வ.); theosophy.

த.வ.பேரறிவு

*[Skt. brahma-jñāna> த. பிரமஞானம்]*

**பிரமதண்டம்** *pirama-taṇḍam,* பெ.(n.) 1. மந்திராயுத வகை; a magical weapon. "வசிட்டனாங் கேந்துமோர் பிரமதண்டம்" (சேதுபு.கவிதீர்த்த.19). 2. ஒகதண்டம் (வின்.); a staff to support the chin, used by yōgis during meditation. 3. நற்செயல்களுக்கு உதவாததாகக் கருதப்படுவதும் கதிரவன் நின்ற விண்மீனுக்குப் பதினைந்தாவதுமான விண்மீன்; the fifteenth *nakṣatra* from that occupied by the sun, considered in auspicious. "பிரமதண்டங் கொடியென்று பொல்லா யோகங்கள்" (விதான. குணாகுண.34).

*[Skt. brahman> த. பிரமன்+தண்டம்]*

**பிரமதாயம்** *pirama-tāyam,* பெ.(n.) பார்ப்பனர்க்கு விடப்படும் இறையிலி நிலம்; land granted to Brahmins free of assessment. "ஐஞ்ஞூறுார் பிரதமதாயங் கொடுத்து" (பதிற்றுப்.இரண்டாம்பத்து, பதிகம்).

த.வ.பார்ப்புத்தாயம்

*[Skt. brahman >த. பிரமன்+தாயம்]*

**பிரமதானம்** *pirama-tāṉam,* பெ.(n.) 1. பார்ப்பனர்க்குச் செய்யும் கொடை; gift to Brahmins. 2. வேதத்தைக் கற்பிக்கை; teaching the vēdas.

*[Skt. brahman> த. பிரமன்+தானம்]*

**பிரமதேயம்** *pirama-tēyam,* பெ.(n.) பார்ப்பனர்க்குக் கொடையாகக் கொடுக்கப்பட்ட ஊர்; village granted to Brahmins and inhabited by them.

*[Skt. brahma> த. பிரமன்+தேயம்]*

**பிரமப்பொழுது** *pirama-p-poḻudu,* பெ.(n.) கதிரவன் எழுவதற்கு இரண்டு நாழிகைக்கு முன்னுள்ள (இரண்டு நாழிகை) நேரம்; the period of time between the fourth and the second nāligai before sunrise. "பிரமப் பொழுதத்திலெழுந்து" (சேதுபு. அமுததீர்த்.11).

த-வ.பிரமமுகூர்த்தம், பிரமமுழுத்தம், பிராமமுழுத்தம்

*[Skt.brahman > த. பிரமன்+பொழுது]*

**பிரமமாராயன்** *pirama-mā-rāyaṉ,* பெ.(n.) பார்ப்பனவமைச்சரின் பட்டப்பெயர்; title of Brahmin ministers in ancient times. "மும்மடிச்சோழ பிரமமாராயன்".

*[Skt.brahman+mahārāja>த. பிரமமாராயன்]*

**பிரமரகசியம்** *pirama-rakašiyam,* பெ.(n.) கடுங்கமுக்கம்; profound secret. "பிரம ரகசியம் பேசி யென்னுள்ளத்தே" (அருட்பா, vi, அருட்பெருஞ்.1046).

*[Skt. brahman+ragashya> த. பிரமரகசியம்]*

**பிரமரி** *piramari,* பெ.(n.) 1. ஒரு வகைக் கூத்து; a kind of dance. 2. ஒரு அருக (சைன) மந்திரம் (மேருமந்.994.); a Jaina mandram.

*[Skt. bhramari> த. பிரமரி]*

**பிரமவாதி** *pirama-vādi,* பெ.(n.) உலகம் நான்முக (பிரம)னிட்ட முட்டை என்று சொற்போரிடுபவன்; one who holds the tenet that the universe is an egg of Brahmā. "பிரமவாதியோர் தேவனிட்ட முட்டை யென்றனன்" (மணிமே.27:96).

*[Skt. brahma-vādin> த. பிரமவாதி]*

**பிரமன்** *piramaṉ,* பெ.(n.) 1. மும்மூர்த்திகளுள் ஒருவரும் படைப்பவனாகக் கருதப்படு பவனுமான நான்முகன்; Brahmā, the creator, one of *tiri-mūrtti.* 2. மூல (பிரகிருதி) மாயை; primordial Matter. 3. பார்ப்பனன்; Brahmin. "பிரமன் முதல் நால்வருணத்து" (திருவானைக். கோச்செங்.69.) . 4. வறட்சுண்டி (சங்.அக.); a sensitive plant.

*[Skt. brahman> த. பிரமன்]*

**பிரமன்படை** *piramaṉ-padai,* பெ.(n.) 1. சுருக்குக் கயிறு (பாசம்); noose, a Brahmā's weapon. 2. தண்டம்; club, a Brahma's weapon.

*[Skt brahmaṉ>த. படை > பிரமன்படை]*

**பிரமனூர்தி** *piramaṉ-ūrdi,* பெ.(n.) ஓதிமம் (அன்னம்) (பிங்.); swan, the vehicle of Brahmā.

த.வ.நான்முகனூர்தி

*[Skt. பிரமன் >த. பிரமன்+ஊர்தி]*

**பிரமாஞ்சலி** *piramāñjali,* பெ.(n.) மறை சொல்லும்போது இரண்டு கைகளையுஞ் சேர்த்து அபிமுகமாக ஏந்துகை; joining the hollowed hands in respectful salutation, while reciting the vēdas.

*[Skt. brahmāñjali> த. பிரமாஞ்சலி]*

**பிரமாண்டம்** *piramāṇḍam,* பெ.(n.) 1. உலகம்; the Universe, considered as an egg of Brahmā. 2. மிகப்பெரியது; that which is large, gigantic, huge or colossal.

"பிரமாண்டமாகச் செய்யும்" (தாயு.தந்தை தாய்.6). 3. பதினெண் தொன்மங்களுள் ஒன்று; a chief Purāṇa one of Padiṉeṉ-purāṇam. 4. பதினெட்டுத் துணைத் தொன்மத் (துணைபுராணத்) தொன்று (பிங்.); a secondary Purāṇa, one of 18 *upa-purāṇam.*

*[Skt. brahmāṇḍa > த. பிரமாண்டம்]*

**பிரமாணம்** *piramāṇam,* பெ.(n.) 1. அளவு (பிங்.); measure, degree, quantity. 2. சான்று; criterion, ground of inference or belief. 3. நெறி; rule, method, order, law. 4. (பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம், உவமானம், அருத்தாபத்தி, அபாவம் (குறள்.252.உரை.) என) அறுவகையாகவும் (பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம், உவமானம், அருத்தாபத்தி, அனுபலத்தி, சம்பவம், ஐதிகம் (வேதா.சூ.20.) என) எண் வகையாகவும்) உண்மை அறிவை அறிதற்கு உதவும் கருவி; means of acquiring certain knowledge according to Kūṟaḷ or eight according to Vēdānda šūḍāmaṇi. 5. கரி, சான்று (சாட்சியம்); proof, testimony, evidence. 6. ஆணை (பிங்.); oath, solemn declaration. 7. ஆவணம்; document. "இந்நிலம் விலை கொண்ட பிரமாணங்கள் கோயிலிலே ஒடுக்கவும்" (S.i.i.iii,215). 8. அரசனாணை (இராசாக் கினை); royal authority, sovereign command. 9. மறை; the Vēdas.

த.வ. சான்று

**பிரமாணவாக்குமூலம்** *piramāṇavakku-mūlam,* பெ.(n.) சூளுரை செய்து அறமன் றத்திற் சொல்லுஞ் செய்தி; deposition, sworn statement, affidavit.

*[Skt. pirahmāṇa+ த. வாக்குமூலம்]*

**பிரமாணன்** *piramāṇaṉ,* பெ.(n.) 1. மெய்யன்; truthful person. 2. திருமால்; Viṣṇu.

*[Skt. piramāṇam>piramaṇaṉ>த. பிரமாணன்]*

**பிரமாதி** *piramādi,* பெ.(n.) சக (கி.பி.78) ஆண்டின்போது தொடங்கிய வடமொழி யாளரின் ஆண்டு அறுபதனுள் பதின் மூன்றாவது; the 13th year of the Jupiter cycle of sixty years.

*[Skt. pramāthin> த. பிரமாதி]*

**பிரமி[1]-த்தல்** *birami-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மயங்குதல்; to be bewildered, confused, perplexed. "மனமே யேன்பிரமிக்கின்றாய்" (ஞானவா.உத்தா.24) 2. திகைத்தல் (உ.வ.); to be astonished or surprised, to wonder, to be amazed.

*[Skt. bhrama> த. பிரமி[1]-த்தல்]*

**பிரமிப்பு** *piramippu,* பெ.(n.) 1. மயக்கம்; be wild erment, confusion, perplexity. 2. திகைப்பு; amazement, astonishment, surprise.

*[Skt. bhrami > த. பிரமிப்பு]*

**பிரமிருதம்** *piramirudam,* பெ.(n.) 1. உழவுத் தொழில்; tillage, cultivation. 2. உழவால் வரும் பொருள்; cultivated produce. "உழவின் வந்துறல் பிரமிருதம்" (காஞ்சிப்பு. ஒழுக்.36).

*[Skt. pra-mṛta> த. பிரமிருதம்]*

**பிரமுகர்** *piramugar,* பெ.(n.) பலராலும் அறியப்பட்டு மதிக்கப்படுபவர், குறிப்பிடத்தக்க பெருமகன்; eminent person, prominent citizen.

த.வ. பெருமகன், பெரும்புள்ளி, பெருந்தகையர்

**பிரமுகன்** *piramgaṉ,* பெ.(n.) சிறந்தோன்; chief, prominent man.

*[Skt. pra-mukha> த. பிரமுகன்]*

**பிரமை** *piramai,* பெ.(n.) 1. மயக்கம்; wondering, bewilderment perplexity, confusion, stupor. "மனக்கவலைப் பிரமையுற்று" (திருப்பு.310). 2. பித்தியம் (பயித்தியம்); insanity, madness. 3. பெருமோகம்; infatuation. "நிமலமூர்த்தி பேரிலே பிரமை கொண்ட பெண்" (குற்றா.குற.38). 4. அறியாமை (யாழ்.அக.); ignorance.

*[Skt. bhrama> த. பிரமை[1]]*

**பிரமோத்தரகாண்டம்** *piramōttara-kāṇḍam,* பெ.(n.) பதினாறாம் நூற்றாண்டில் வரதுங்கராம பாண்டியனியற்றிய ஒரு சிவனியத்தொன்மம்; a Saiva Purāṇa by Varaduṅga-rāma-Pāṇḍiyaṉ, 16th C.A.D.

*[Skt. Brahmōttara-kāṇḍa> த. பிரமோத்தர காண்டம்]*

**பிரமோதூத** *piramōdūda,* பெ.(n.) ஆண்டு அறுபதனுள் நான்காவது; the 4th year of the Jupiter cycle of sixty years.

*[Skt. Pramōdōtha> த. பிரமோதுத]*

**பிரமோற்சவம்** *piramōṟšavam,* பெ.(n.) கோயிலில் ஆண்டுக்கொருமுறை நடக்கும் தலைமைத் திருவிழா; principal annual festival in a temple.

த.வ.பெருவிழா, பெருந்திருவிழா

*[Skt. brahmōtsava> த. பிரமோற்சவம்]*

**பிரயத்தனம்** *pirayattaṉam,* பெ.(n.) முயற்சி; effort, exertion, endeavour.

*[Skt. prayatna> த. பிரயத்தனம்]*

**பிரயாசப்படு-தல்** *pirayāšappaḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. முயற்சியெடுத்தல்; to try, exert oneself, endeavour. 2. வருந்தி யுழைத்தல்; to take pains.

த.வ.பெருமுயற்சியெடுத்தல்

*[Skt. pra-yāsa> த. பிரயாசப்படுதல்]*

**பிரயாசம்** *pirayāšam,* பெ.(n.) 1. முயற்சி; endeavour, effort. 2. உழைப்பு; pains, labour, struggle. 3. தொல்லை, கடினம் (கஷ்டம்); trouble, difficulty, hardship.

*[Skt. pra-yāsa> த. பிரயாசம்]*

**பிரயாணம்** *pirayāṇam,* பெ.(n.) 1. செலவு (பயணம்); travel, journey, tour. 2. இறப்பு (மரணம்); death.

*[Skt. pra-yāṇa> த. பிரயாணம்]*

**பிரயோகம்** *pirayōgam,* பெ.(n.) 1. செலுத்துகை; discharge, as of weapons. 2. பயன் படுத்துகை; use, application to a purpose, use of means. 3. மந்திர ஏவல்; practice of magic. 4. மருந்து; medicine. 5. மேற்கோள்; authority, quotation. 6. உவமை, உவமானம் (யாழ்.அக.); example, illustration. 7. குதிரை (யாழ்.அக.); horse.

*[Skt. pra-yōga> த. பிரயோகம்]*

**பிரயோகவிவேகம்** *pirayōga-vivēgam,* பெ.(n.) வடமொழி இலக்கணவமைதியைத் தழுவிச் சுப்பிரமணிய தீட்சிதர் இயற்றிய தமிழ் இலக்கண நூல்; a treatise on Tamil grammar based on the principles of Sanskrit grammar by šuppira-maṇiya-tiṭcitar.

*[Skt. pra-yōga+vivēka> த. பிரயோகவிவேகம்]*

**பிரயோசனம்** *pirayōšaṉam,* பெ.(n.) 1. பயன்படுகை; usefulness. 2. வரவு (ஆதாயம்); profit, advantage. 3. பயன் (நன்.விருத். சிறப்புப்பாயி.); result of actions, good or bad, reward. 4. சடங்கு; ceremonial rites, as in a wedding.

*[Skt. prayōjana> த. பிரயோசனம்]*

**பிரவகி-த்தல்** *piravagi-,* 4 செ.கு.வி. (v.i.) நீர்ப்பெருக்கெடுத்தல்; to flood, to be in spate.

*[Skt. pravah> த. பிரவகி-த்தல்]*

**பிரவஞ்சன்** *piravañjaṉ,* பெ.(n.) வளி (வாயு) (சங்.அக.); wind.

*[Skt. pra-bhañjana> த. பிரவஞ்சன்]*

**பிரவாகம்** *piravāgam,* பெ.(n.) 1. வெள்ளம்; flood, inundation. "நின்கருணைப் பிரவாக வருளை" (தாயு.எங்குநிறை.6). 2. குளம் (யாழ்.அக.); tank. 3. தொழில் (யாழ்.அக.); action.

*[Skt. pra-vāha> த. பிரவாகம்]*

**பிரவேசம்** *piravēšam,* பெ.(n.) 1. நடிகர் முதலியோர் உள்நுழைதல் (பிரவேசம்); entry, entrance, as of actors. 2. வேலை முதலியவற்றின் தொடக்கம்; entrance in a

work or study, commencement, initiation. 3. வாயில்; place of entry, gateway.

*[Skt. pra-vēša> த. பிரவேசம்]*

**பிரளயகாலம்** *piraḷaya-kālam,* பெ.(n.) உலகத்தின் முடிவு காலம்; cosmic deluge or dissolution.

**த.வ.ஊழிப்பேரழிவு**

*[Skt. pralaya> த. பிரளயம்]*

**பிரளயம்** *piraḷayam,* பெ.(n.) 1. கற்ப முடிவு (கூர்மபு.பிராகிருத.1.); end of a Kalpa when the destruction of the world occurs. 2. அழிவு; dissolution, destruction, annihilation. 3. வெள்ளம் (பிங்.); flood, inundation. 4. ஒரு பேரெண்; a large number. "பிரளயத்தினிற் றிரளவே" (கலிங். 330,புதுப்.) 5. 243 யானைகளும், 243 தேர் களும், 729 குதிரைகளும், 1215 காலாட்களுங் கொண்ட படை (பிங்.); division of an army consisting of 243 elephants, 243 chariots, 729 horses and 1215 foot - soldiers.

**த.வ.ஊழிக்காலம்**

*[Skt. pra-laya> த. பிரளயம்]*

**பிராகாரம்** *pirākāram,* பெ.(n.) 1. கோயிலைச் சுற்றியுள்ள வெளி; court or arcade surrounding a shrine in a temple. 2. மதில் (பிங்.); fort wall.

**த.வ.சுற்றாலை, மதில்**

*[Skt. prākāra> த. பிராகாரம்]*

**பிராகிருதம்** *pirākirudam,* பெ.(n.) 1. வடதமிழ் (பாகதம்) என்னும் வடமொழித் திரிபாயுள்ள மொழி; Prākrit, applied to dialects derived from Sanskrit, which show more or less phonetic, decay. "எகர ஒகரம் பிராகிருதத் திற்கும் உரிய" (நன்.73. விருத்.). 2. மூலம் தொடர்பானது; that which is of material world. "பிராகிருத லோகமே அநித்தியம்" (சி.சி.6.3, சிவாக்.). 3. இயற்கை யானது; that which is natural. 4. அழியத் தக்கது (வின்.); mortality, perishableness.

*[Skt. prakṛta> த. பிராகிருதம்]*

**பிராசாதம்** *pirāšadam,* பெ.(n.) 1. கோயில்; temple. 2. மேன்மாடம்; top story of a lofty building. 3. கருவறை (கர்ப்பக்கிருகம்) (சுக்கிரநீதி,239); the sanctum sanctorum of a temple. 4. ஒரு மந்திரம்; a mantra. "முலைப்பால் பிராசாதஞ் சொல்லி யருத்தி" (திருவானைக்.கோச்செங்.73).

*[Skt. prāsāda> த. பிரசாதம்]*

**பிராணசேதம்** *pirāṇašēdam,* பெ.(n.) உயிர்ச்சிதைவு (சேதம்) (சா.அக.); loss of life.

*[Skt. prāṇa+sētam> த. பிராணசேதம்]*

**பிராணலிங்கம்** *pirāṇa-liṅgam,* பெ.(n.) வீரசைவர்கள் உடலில் அணிந்து வழிபடும் இலிங்கம் (வின்.); the liṅgam worshipped by a Liṅgāyat and worn on his person.

*[Skt. prāṇa> த. பிராணன்+இலங்கம்]*

**பிராணவாயு** *pirāṇa-vāyu,* பெ.(n.) 1. பிராணன், 3 பார்க்க; see pirāṇaṉ. "அறிந்திடும் பிராணவாயு" (சி.சி.3,4). 2. உயிர்வளி; oxygen. 3. நோய் வகை; angina pectoris.

**பிராணன்** *pirāṇaṉ,* பெ.(n.) 1. உயிர் (திவா.); life, vitality. 2. மூச்சு; breath, breathing. 3. பத்து வகை வளி (காற்று)களுள் மூச்சை நிகழ்விப்பது (பிங்.); the vital air of the body which causes respiration, one of taša-vāyu. 4. வலிமை (உ.வ.); strength. 5. ஞாயிறு நடுவில் உள்ள சொற் (வாக்கியப்) பிழை தீர்க்கை (வின்.); correction applied to the Sun's mean position.

*[Skt. prāṇa> த. பிராணன்]*

**பிராணி[1]-த்தல்** *pirāṇi-,* 4 செ.கு.வி. (v.i.) மூச்சுவிடுதல் (திவ்.பெரியதி.1,2,8,வ்யா.); to breathe, respire.

*[Skt. prāṇa> த. பிராணி-,]*

**பிராதானியம்** *pirādāṉiyam,* பெ.(n.) முதன்மை (இ.வ.); importance.

*[Skt. prādhānya> த. பிராதானியம்]*

**பிராதிபதிகம்** *pirādipadigam,* பெ.(n.) பெயர்ப்பகாப்பதம்; base of a noun. "பன்னும் பகாப்பதப்பேரே பிராதிபதிகம்" (பி.வி.7.).

*[Skt. prāti-padika> த. பிராதிபதிகம்]*

**பிராது** *pirādu,* பெ.(n.) முறையீட்டு விண்ணப்பம்; a complaint, suit.

*[U. faryād> த. பிராது]*

**பிராதுபண்ணு-தல்** *pirādu-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) வழக்கிடுதல் (உ.வ.); to lodge or file a plaint or complaint.

**பிராந்தி** *pirāndi,* பெ.(n.) மது; brandy.

*[E. Brandy> த. பிராந்தி]*

**பிராமணபோசனம்** *pirāmaṇa-pōšaṇam,* பெ.(n.) பிராமணர்க்குச் செய்யும் விருந்து (சமாராதனை); a feast for Brahmins.

*[Skt. Brāhmaṇa+bhōjana>த. பிராமண போசனம்]*

**பிராமணம்** *pirāmaṇam,* பெ.(n.) 1. பிராமணர் தொடர்பானது (கூர்மபு.பிருகி.4.); that which relates to or befits a Brahmin. 2. மந்திரப்பகுதியல்லாத மறையின் பகுதி; Brāhmaṇas, a portion of the Vēdas other than the mantras.

*[Skt. brāhmaṇa> த. பிராமணம்]*

**பிராமணன்** *pirāmaṇaṉ,* பெ.(n.) பார்ப்பனன்; Brahmin.

*[Skt. Brāhmaṇa> த. பிராமணன்]*

**பிராமணி**[1] *pirāmaṇi,* பெ.(n.) ஏழு கன்னியருள் ஒருத்தி; Brahmāṇi, consort of Brahmā, one of šattamādar.

*[Skt. Brahmāṇi> த. பிராமணி]*

**பிராமணி**[2] *pirāmaṇi,* பெ.(n.) 1. பார்ப்பனப் பெண்; Brahmin woman. 2. பார்ப்பனன் மனைவி; wife of a Brahmin. "பிராமணிக்குப் பிழைப்பரிது" (உத்தரரா.சம்பு.22). 3. பாம் பரணை; a species of streaked lizard.

*[Skt. Brāhmāṇi> த. பிராமணி]*

**பிராமிசரிநோட்டு** *pirāmišari-nōṭṭu,* பெ.(n.) வேண்டும்போது திரும்பப் பணங்கொடுப்பதாக எழுதித்தரும் கடன் ஆவணம்; promissory note, note of hand.

த.வ. கடன்சீட்டு

*[E. promissary note > த. பிராமிசரி நோட்டு]*

**பிராயச்சித்தம்** *pirāyaccittam,* பெ.(n.) 1. அறங்கடை தணிவிப்புச் சடங்கு (சீவக.910, உரை.); expiatory ceremony for past sins. 2. மரணகாலத்தில் எல்லா அறங்கடைகளுக் கும் விலக்காகச் செய்யப்படும் தணிவிப்புச் சடங்கு; a ceremony performed on the eve of death, in expiation of all sins. 3. தணி விப்புச் சடங்கு; remedy, counteraction; redress. 4. அறநூல் பிரிவு மூன்றனுள் அறங்கடை போக்குந் தண்டனைகளைக் கூறும் பகுதி (குறள்,பரி.அவ.கீழ்க்குறிப்பு.); a section of Dharma - šāstra dealing with punishments as atonement for sins, one of three tarma - nūṟ - pirivu. 5. தண்டனை (சங்.அக.); punishment.

*[Skt. praya-s-citta> த. பிராயச்சித்தம்]*

**பிராயம்** *pirāyam,* பெ.(n.) 1. அகவை; age. "பிராய மிருவது" (திருமந்.863). 2. நிலை; condition, stage. "வியூகம் முக்தப் பிராயர்க்கு" (ஈடு,7,3,3). 3. சமானம்; like, used in compounds. அவனுக்குக் கள் சலப்பிராயம் (இக்.வ.).

*[Skt. prāya> த. பிராயம்]*

**பிரார்த்தனை** *pirārttaṉai,* பெ.(n.) 1. வேண்டுகோள்; prayer, supplication. 2. நேர்த்திக் கடன்; vow. 3. வழிபாடு; worship, prayer, rite. 4. கிறித்தவர்கள் குருமார் மூலம் செய்யும் விண்ணப்ப வகை (R.C.); litany.

*[Skt. prārthanā> த. பிரார்த்தனை]*

**பிரான்** *pirāṉ,* பெ.(n.) 1. தலைவன்; lord, king, chief, master. "கோவணம் பூணுமேனும் பிரானென்பர்" (தேவா.640,7.); 3. கடவுள்; god.

"பிரான் பெருநிலங் கீண்டவன்" (திவ். திருவாய்.1,7,6). 3. சிவன் (சது.); Sivaṉ.

[Skt. bṟhan> த. பிரான்]

**பிரான்மலை** *pirāṉ-malai,* பெ.(n.) பாண்டி நாட்டிலுள்ள சிவன் கோயில்களுள் ஒன்று; an ancient šiva shrine in Pāṇḍya country.

[பிரான்+மலை]

**பிருகற்பதி** *pirugaṟpadi,* பெ.(n.) 1. வியாழன் (திவா.); the planet Jupiter, Guru of the gods. 2. சடங்காளன் (புரோகிதன்); family priest. 3. அறநூலாசிரியருள் ஒருவர்; author of a Smṟti(R.F.). 4. அறநூல் பதினெட் டனுள் பிருகற்பதியால் இயற்றப்பட்ட நூல்; a Sanskrit text-book on Hindu law, ascribed to Bṟhaspati, one of 18 *taruma-nūl.*

[Skt. Bṟhas-pati>த. பிருகற்பதி]

**பிருகா** *pirukā,* பெ.(n.) ஒன்றியம்; division of a taluk or district.

[U. firkā> த. பிருகா]

**பிருந்தாவனம்** *pirundāvaṉam,* பெ.(n.) 1. யமுனைக்கரையில் கோகுலத்துக்குப் பக்கத் திலுள்ளதும் கண்ணபிரான் இளமையில் விளையாடியதுமான காடு (ஈடு,அவ.ஜீ); forest near the town of Gōkula on the Jumna, where Kṛṣṇa played in His child hood. 2. திருந்துழாய்க்காடு (துளசிவனம்); basil garden. 3. கல்லறைக்கட்டடம் (Brāh.); sepulchre of an ascetic.

[Skt. bṟndā-vana> த. பிருந்தாவனம்]

**பிரும்மமுத்திரை** *pirumma-muttirai,* பெ.(n.) கையை விரித்துப் பெருவிரலினை நடுப் பணித்திடப் பிடிப்பதாகிய முத்திரை வகை (செந்.x,425); (šaiva.) a kind of hand-pose.

[Skt. brahma> த. பிரம்ம+முத்திரை]

**பிரேதக்குழி** *pirēdakkuḻi,* பெ.(n.) கல்லறை; grave.

[பிரேதம்+குழி]

**பிரேதகும்பம்** *pirēdakumbam,* பெ.(n.) பிணத்துக்கு உடைக்கும் மட்குடம் (வின்.); earthen pot broken after a corpse is laid on the pyre.

[பிரேதம்+கும்பம்]

**பிரேதபரிசோதனை** *pirēda-parišōdaṉai,* பெ.(n.) இறப்பு (மரணம்) நேர்ந்த காரணத்தை அறியப் பிணத்தை அறுத்து ஆய்கை (C.G.); post-mortem examination.

த.வ. பிண அறுவை

[Skt. prēta+pari-šōdhanā> த. பிரேத பரிசோதனை]

**பிரேதம்** *pirēdam,* பெ.(n.) 1. பிணம்; dead body, corpse. நின்று பேதுறிற் பிரேதம் ( இரகு. இந்தும.84). 2. பேய் (சூடா.); ghose. 3. தெற்கு; south. 4. முன்னோர்; manes. 5. பின்; back.

[Skt. prēta> த. பிரேதம்]

**பிரேதவனம்** *pirēda-vaṉam,* பெ.(n.) இடுகாடு; cremation ground.

[Skt. prēta+vana> த. பிரேதவனம்]

**பிரேதவிசாரணை** *pirēda-visāraṇai,* பெ.(n.) ஐயப்பட்ட இறப்புக் காரணத்தைப் பற்றிய ஆராய்ச்சி (விசாரணை) (C.G.); coroner's inquest.

[Skt. prēta+vi-cāraṇā> த. பிரேதவிசாரணை]

**பிரேமம்** *pirēmam,* பெ.(n.) காதல், அன்பு, மோகம்; love; passion. அவள் மீது அவனுக்கு உள்ள பிரேமத்தின் வெளிப்பாடு இது (இ.வ.).

[Skt. prēmā> த. பிரேமம்]

**பிரேரணை** *pirēraṇai,* பெ.(n.) 1. தூண்டுகை; direction, instigation, inducement. 2. அவையோர் முடிவறிய ஒரு செய்தியை (விடயம்) முதலில் எடுத்துக் கூறுகை; resolution, motion in a meeting.

[Skt. prērana> த. பிரேரணை]

**பில்லு** *pillu,* பெ.(n.) விலைச்சீட்டு; bill.

[E. bill> த. பில்லு]

**பிலவகம்** *pilavagam,* பெ.(n.) 1. குரங்கு; monkey. 2. தவளை; toad.

*[Skt. plavaka> த. பிலவகம்]*

**பினாகினி** *pinākini,* பெ.(n.) தென் பெண்ணையாறு (யாழ்.அக.); the river Pennār.

*[Skt. Pinākini> த. பினாகினி]*

**பினாமி** *pināmi,* பெ.(n.) ஆள் மாற்று சொத்துரிமை; transaction entered into by one person in the name of another.

**த.வ. ஆள்மாற்று**

*[U. benāmi> த. பினாமி]*

**பீங்கான்** *pinkān,* பெ.(n.) ஒரு வகை மண்ணாற் செய்து சுடப்பட்ட பாண்டம்; porcelain, China-ware.

*[Persn. pingān> த. பீங்கான்]*

**பீட்டி** *pitti,* பெ.(n.) உடுப்பில் இரட்டையாக இணைக்கப்பட்ட மார்புத்துணி (வின்.); breast of a garment, stitched in two folds.

*[U. piti> த. பீட்டி]*

**பீடா** *pidā,* பெ.(n.) பாக்குத் தூளுடன் பிற மணப் பொருள்களும் வைத்துச் சுருட்டப் பட்ட வெற்றிலை; roll of betel leaf with pieces of arecanut and aromatic stuff (in India) paan.

**த.வ. சுருள்**

**பீடி**[1] *pidi,* பெ.(n.) சரவளி, பிறங்கடை தலைமுறை (C.G.); generation, lineage.

*[U. pirhi> த. பீடி]*

**பீடி**[2] *pidi,* பெ.(n.) ஒருவகைப் புகைச்சுருட்டு (உ.வ.); a kind of cigarette.

**த.வ. இலைச்சுருட்டு**

*[U. bidi> த. பீடி]*

**பீடை** *pidai,* பெ.(n.) 1. துன்பம்; affliction, sorrow, distress, misery. "பீடை தீர வடியாருக் கருளும் பெருமான்" (தேவா.531,10). 2. காலம், கோள் முதலியவற்றால் நிகழுந் தீமை; in auspiciousness, as of a season, evil influence, as of a planet.

*[Skt. pidā> த. பீடை]*

**பீதலம்** *pidalam,* பெ.(n.) பித்தளை (மூ.அ.); brass.

*[Skt. pitala> த. பீதளம்]*

**பீதன்** *pidan,* பெ.(n.) குடிகாரன், குடிப்பவன்; one who drinks. "மதுவைப் பீதர்க் கிணையும் பேசுவமே" (சிவதரு.பாவ.28).

*[Skt. pita> த. பீதன்]*

**பீதாம்பரம்** *pidāmbaram,* பெ.(n.) 1. பொன்னாலான ஆடை; gold cloth. 2. பொற் கரையுள்ள ஆடை (வின்.); gold bordered silk cloth.

**த.வ. பொன்னாடை**

*[Skt. pitāmbara> த. பீதாம்பரம்]*

**பீதாம்பரன்** *pidāmbaran,* பெ.(n.) பொன் னாடை அணிந்த திருமால் (பிங்.); Tirumāl, as wearing a cloth of gold.

*[Skt. pitāmbara> த. பீதாம்பரன்]*

**பீப்பா** *pippā,* பெ.(n.) எண்ணெய் முதலியன அடைக்கும் மரப்பெட்டி வகை (உ.வ.); barrel, cask.

*[Port. pipa> த. பீப்பா]*



**பீபி** *bibi,* பெ.(n.) முகம்மதிய பெண்ணின் மதிப்புரவுப் பெயர்; title of a Muhammadan lady.

*[U. bibi> த. பீபி]*

**பீமபாகம்** *pima-pāgam,* பெ.(n.) சிறந்த சமையல்; excellent cooking, as that of Bhima.

*[Skt. bhima> த. பீம+பாகம்]*

**பீமன்** *piman,* பெ.(n.) 1. பாண்டுவின் மகன் களுள் இரண்டாமவன்; Bhima, second of the son of Pāṇḍu, renowned for super human courage and strength. 2. தமயந்தியின் தந்தை; father of Damayandi. 3. உருத்திரன்; Rudra.

*[Skt. Bhima> த. பீமன்]*

**பீர்** *pir,* பெ.(n.) 1. முகம்மதியப் பெரியார்; Muhammadan saint. 2. முகம்மதியர் ஊர் வலத்தில் எடுத்துச் செல்லும் அரைத்தேர்; shrine carried in procession by Muhammadans.

*[U. pir> த. பீர்]*

**பீரங்கி** *pirangi,* பெ.(n.) பெருங்குழாயுள்ள வெடிகருவி; cannon, gun.

**த.வ.வேட்டெஃகம், தகரி**

*[Port. firangi> த. பீரங்கி]*



**பீரோ** *pirō,* பெ.(n.) நிலைப்பேழை; book-case, shelf.

*[F. bureau> த. பீரோ]*

**புசபலம்** *pusa-balam,* பெ.(n.) தோள்வலிமை; strength of arm. *"உன்னையறியாதே தன் வரபல புசபலங்களை விசுவசித்திருக்கும் மதிகேடன்" (திவ். திருச்சந். 25, வியா.).*

*[புசம்+பலம்]*

**புசம்** *pušam,* பெ.(n.) 1. தோள்பட்டை; arm, shoulder. 2. கோணத்தின் புறக்கோடு; side of a geometrical figure.

*[Skt. bhuja> த. புசம்]*

**புட்கரணி** *putkarani,* பெ.(n.) கோவிலைச் சேர்ந்த திருக்குளம்; sacred tank belonging to a temple.

*[Skt. puṣkarani> புட்கரணி]*

**புட்கரம்** *putkaram,* பெ.(n.) 1. வடநாட்டில் பொகார் என இக்காலத்தார் வழங்கும் ஒரு தலம்; a celebrated place of pilgrimage, now called Pokhar in Ajmir. 2. வானம் (பிங்.); sky, heaven.

**புட்பகவிமானம்** *putpaga-vimāṇam,* பெ.(n.) குபேரனூர்தி; aerial car of Kubēra. புட்பக விமானம்வந் தவனியை யணுக (கம்பரா. மீட்சி.146).

**புட்பம்** *putpam,* பெ.(n.) 1. மலர்; flower. புட்பவிதி மாலைப்படியே (புட்ப.54). நட்ட கல்லைத் தெய்வம் என்று நாலு புட்பம் சாத்தியே சுற்றி வந்து மொண மொணென்று சொல்லும் மந்திரம் ஏதடா (சிவ.வா.494). 2. வாழை (மலை); plantain. 3. கண்ணோய் வகை (யாழ்.அக.); an eye disease. 4. மகளிர் சூதகம் (யாழ்.அக.); menstruation.

*[Skt. puṣpa> த. புட்பம்]*

**புட்பவதி** *putpavadi,* பெ.(n.) பூப்பெய்தியவள்; girl who has attained puberty. "புட்பவதியாம் வாரகால பலன்" (அறப்.சத.69).

*[Skt. puṣpā-vati> த. புட்பவதி]*

**புட்பாஞ்சலி** *putpāñjali,* பெ.(n.) 1. கை நிறையக் கொண்ட பூ; a handful of flowers. "சாரத்தொடு புட்பாஞ்சலி தாண் மீது சொரிந்தார்"(சிவரக.நைமிச.50). 2. கைக் கொண்ட பூவையிட்டு வழிபடுகை; offering of handful of flowers in worship. 3. இரண்டு கையுங் தடங்கையாக வந்து ஒன்றும் இணைக்கை வகை (சிலப்.3,18.உரை.) (Nāṭya)

a gesture with both hands inwhich they are joined in kuḍaṅgai pose.

த.வ. பூப்படையல்

*[Skt. puṣpa> த. புட்பம்+அஞ்சலி]*



**புடம்** *puḍam,* பெ.(n.) 1. கோள்களின் உண்மை யான நிலை; true daily motion of a heavenly body. 2. ஒரு வகை வானவளவை; celestial longitude. 3. தூய்மை; purity. " புடமாக விளங்குதலால்" (ஞானவா.கற்க.30).

*[Skt. sphuṭa> த. புடம்]*

**புத்தம்** *puttam,* பெ.(n.) புத்த மதம்; Buddhism.

*[Skt. Buddha> த. புத்தம்]*

**புத்தமதம்** *putta-madam,* பெ.(n.) பௌத்த சமயம்; the Buddhist religion.

*[Skt. Buddha > த. புத்த+மதம்]*

**புத்தமித்திரன்** *puttamittiraṉ,* பெ.(n.) 11ஆம் நூற்றாண்டிலிருந்த வீரசோழிய நூலாசிரியர்; šēndaṉ, the author of Viršōḻiyam, 11th century.

**புத்தர்** *puttar,* பெ.(n.) 1. புத்தப்பதவி பெற்ற பெரியோர்கள்; Buddhas, of whom there are several. "எண்ணில் புத்தர்களும்" (மணிமே. 30:14). 3. புத்தமதத்தவர்; Buddhists. "புந்தியில் சமணர் புத்தரென்றிவர்கள்" (திவ்.பெரியதி.9,8,9).

*[Skt. Buddha> த. புத்தர்]*

**புதவாரம்** *puda-vāram,* பெ.(n.) அறிவன் கிழமை; wednesday.

*[Skt. budha+vara > த. புதவாரம்]*

**புதன்** *pudaṉ,* பெ.(n.) 1. கோள் ஒன்பதனுள் ஒன்று (சாதகா.பொது.17); the planet Mercury. one of nine kiragam. 2. அறிவன்கிழமை; wednesday. 3. புலவன் (அக.நி.); wise or learned man, poet. 4. வானவன்; Celestial Being. "புதர்க்கடு வேள்விச்சாலை" (திருவிளை. மாணிக்.31).

*[Skt. Budha> த. புதன்]*

**புதீனா** *pudīṉā,* பெ.(n.) கீரை வகை (மு.அ.); mint.

த.வ. மணக்கீரை

*[U. pudīnā> த. புதீனா]*

**புயங்கமலை** *puyaṅga-malai,* பெ.(n.) ஆதி சேடனது வடிவாகக் கருதப்படும் திருவேங்கட மலை; Tirupati, considered a form of Ādi-šeṣa. "இடபமலைக்கும் புயங்கமலைக்கும்" (அட்டப்.திருவரங்கத்தந்.35).



**புராதன காண்டம்** *purādaṉa-kāṇḍam,* பெ.(n.) விவிலிய நூலின் பழைய ஏற்பாடு (வின்.); the Old Testament.

*[Skt. purātana>த. புராதனம்+காண்டம்]*

**புராதனம்** *purādaṉam,* பெ.(n.) 1. பழமையானது; that which is ancient. "புராதன மறைக்கும்" (அஷ்டப்.திருவரங்கக். 32). 2. பழமை; antiquity. 3. கிழத்தனம்; old age. "புராதனத் தாலல்லா திந்தப் புத்திர சோகத்தாலே புலம்பும்" (உத்தரரா.சம்புவ.22).

4. பழையசோறு (உ.வ.); boiled rice preserved in water.

*[Skt. purātana> த. புராதனம்]*

**புராதனர்** *purādaṉar,* பெ.(n.) முன்னோர் (வீரசோ.அலங்.4.); ancients.

*[Skt. purātana> த. புராதனர்]*

**புருசு** *purušu,* பெ.(n.) அழுக்கெடுக்குங் கருவி வகை (இ.வ.); brush.

**த.வ. தூரி**

*[E. brush> த. புருசு]*

**புருடன்** *puruḍaṉ,* பெ.(n.) 1. ஆடவன்; man (காஞ்சிப்பு.சன.22). 2. பரமான்மா (வின்.); God, as the Supreme Soul. 3. ஆதன்; soul.

*[Skt. puruṣa> த. புருடன்]*

**புருடோத்தமநம்பி** *puruḍōttama-nambi,* பெ.(n.) திருவிசைப்பா பாடிய சிவனடியாருள் ஒருவர்; the author of a *padigam* in Tiru-v-išaippā.

*[Skt. puruṣōttama> த. புருடோத்தமன்+ நம்பி]*

**புருடோத்தமன்** *puruḍōttamaṉ,* பெ.(n.) 1. சிறந்தவன்; most excellent man. பிறர் பொருட்காசையில்லாத செய்கையோன் புருஷோத்தமன் (திருவேங்.சத.53). 2. திருமால்; Tirumāl, as the Supreme Being புருடோத்தமன் தெய்வமென்பதும் (திருவேங். சத.1.) 2. புருடோத்தமநம்பி பார்க்க; see puruḍōttama-nambi.

*[Skt. puruṣōttama> த. புருடோத்தமன்]*

**புரோகிதன்** *purōgidaṉ,* பெ.(n.) 1. சடங்கு செய்விக்குங் குரு; family priest. தூய புரோகிதனும் போந்து (பாரதவெண்.66.புதுப்). 2. ஊர் கணியன்; prognosticator, village astrologer (R.F.). 3. இந்திரன் (சூடா.); Indran.

**த.வ. பூசகன்**

*[Skt. purō-hita> த. புரோகிதன்]*

**புரோசை** *purōšai,* பெ.(n.) யானைக் கழுத்திலிடும் கயிறு; halter or head-stall of an elephant. "புரோசையிற் பயின்ற கழற்கொள் சேவடி" (சூளா.சீய.139).

**புல்லிங்கம்** *pulliṅgam,* பெ.(n.) வடமொழியில் ஆண்பால் (பி.வி.44.); (Gram.) masculine gender, in Sanskrit.

*[Skt. pulliṅga> த. புல்லிங்கம்]*

**புல்லின்** *pulliṉ,* பெ.(n.) கப்பலின் முன் பக்கத்தில் அதன் பாயை இணைக்கும் கயிறு (Naut.); bowline.

*[E. bowline> த. புல்லின்]*

**புலாக்கு** *pulākku,* பெ.(n.) மூக்கில் தொங்கவிடும் அணி வகை; nosependant set with precious stones.

**த.வ. மூக்குத் தொங்கட்டான்**

*[U. bulāq> த. புலாக்கு]*

**புலின்** *puliṉ,* பெ.(n.) கப்பலின் சதுரப்பாய்களை இழுத்துக் கட்டுங் கயிறு (M.navi); bowline.

*[E. bowline > த. புலின்]*

**புலுதசந்தி** *puluda-šandi,* பெ.(n.) உயிரளபெடை தோன்றும் புணர்ச்சி (பி.வி.5, உரை); lengthening of a vowel in the combination of two words, as *irāa-p-pakal.*

*[Skt. pluta > த. புலுதம் + சந்தி]*

**புலுதம்** *puludam,* பெ.(n.) 1. உயிரளபெடை (பி.வி.5, உரை); lengthening a vowel, in poetry. 2. மெய்யெழுத்து (திவா.); consonant. 3. குதிரை நடை வகை ஐந்தனுள் ஒன்று; caper of a horse, one of five *ašuva-kati.* 4. இசையில் 49,152 கணங்கள் கொண்ட காலவகை (பரத. தாள. 27); one of the ten varieties of kālam, which consists of 49,152 *kaṇam.* 5. 12 தாள அளவை உறுப்பு கொண்ட அங்கவகை (பரத. தாள. 35); a variety of aṅgam, which consists of 12 akṣara-kālam.

*[Skt. pluta > த. புலுதம்]*

**புலௌ** *pulau,* பெ.(n.) 1. ஊனொடு கலந்து பக்குவப்படுத்திய உணவு; a kind of dish prepared of cooked meat and boiled rice. 2. அரிசிக் கூழ்வகை; a kind of rice-gruel.

*[U. pulão > த. புலௌ]*

**புவ்வம்** *puvvam,* பெ.(n.) 1. பழைமையானது; that which is ancient. 2. ஒரு சமண தோன்றியம்; a Jaina Agama. *"அங்க புவ்வமாதியாய வாதிநூல்" (காரிகை, உறுப். 13, மேற்.).*

*[Skt. pūrva>pkt. puvva > த. புவ்வம்]*

**புவசம்படு** *puvašampadu,* பெ.(n.) மூன்றெழுத்தில் ஒன்றாகிய 'கிலி'; one of the three mystic letter 'kili'. (சா.அக.)

**புவம்** *puvam,* பெ.(n.) விண்வெளி (ஆகாயம்); space. "புவம்வளிகனல் புனல்புவி" (தேவா.615,1).

*[Skt. bhuva>த. புவம்]*

**புவன்** *puvan,* பெ.(n.) தான் தோன்றிக் கடவுள்; God, as self - existent. *"புவனெம்பிரான்" (திருவாச. 5:9).*

*[Skt. bhuva > த. புவன்]*

**புவனசாத்திரம்** *puvana-šāttiram,* பெ.(n.) நிலவியல் நூல் (வின்.); geography.

*[Skt. bhuvana+šāstra >த. புவனசாத்திரம்]*

**புவனநாயகன்** *puvana-nāyagan,* பெ.(n.) உலகிற்கு இறைவன்; lord of universe. *புவனநாயகனே யகவுயிர்க்கமுதே (திரு விசைப். கருவூர். திருமுகத். 1).*

*[Skt. bhuvana> த. புவனம்+நாயகன்]*

**புவனம்** *pūvanam,* பெ.(n.) 1. உலகம் (பிங்.); world. *புவன மூன்றன் பயனாகி (காஞ்சிப்பு. திருவேகம். 55).* 2. நிலவுலகு (பிங்.); earth. 3. இடம் (வின்.); place, locality. 4. நீர் (பிங்.); water. 5. மாந்த இனம் (வின்.); mankind.

*[Skt. bhuvana> த. புவனம்]*

**புவனமெண்வச்சிரம்** *puvanam-en-vacciram,* பெ.(n.) பளிங்குப் படிகம் (யாழ். அக.); crystal glass.

*[புவனம் + எண் + வச்சிரம்]*

**புவனாத்துவா** *puvanā-t-tuvā,* பெ.(n.) வீடுபேறடையும் வழிகள் ஆறனுள் ஒன்று (சி.சி.8: 6–9, மறைஞா.); a path to salvation in the form of bhuvanas, worlds one of six *attuvā.*

*[Skt. bhuvana+tadhvan > த. புவனாத்துவா]*

**புவனி** *puvani,* பெ.(n.) நிலவுலகம்; earth. *புவனியிற் சேவடி தீண்டினன் காண்க (திருவாச. 3:61).*

*[Skt. bhuvana > த. புவனி]*

**புவனை** *puvanai,* பெ.(n.) மலைமகள்; Pārvati. *புவனை காதலமணியே (திருப்போ. சந். மட்டு. 5).*

**புனர்ச்சனனம்** *punar-c-cananam,* பெ.(n.) 1. மறுபிறவி (வின்.); transmigration of souls, rebirth. 2. கடுந்தொல்லை, கடுநோய் முதலிய நேர்ச்சியினின்று தப்பிப் பிழைக்கை; recovery from serious illness or accident, considered as a rebirth. *அவன் பிழைத்தது புனர்ச்சனனம்.*

*[Skt. punar-janana > த. புனர்ச்சனனம்]*

**புனர்சுரம்** *punar-suram,* பெ.(n.) இடைவிட்டு வருங் காய்ச்சல் நோய் (M.L.); relapsing fever.

*[Skt. punara jvara > த. புனர்சுரம்]*

**புனர்செனனம்** *punar-senanam,* பெ.(n.) **புனர்ப்பவம்** பார்க்க; see *punar-p-pavam.*

**புனர்நவம்** *punarnavam,* பெ.(n.) 1. நகம்; finger or toe nail. 2. வெள்ளைச் சாட்டறணை; trianthema decandra. 3. மூக்கிரட்டை; spreading hog weed - *Boerhaavia diffsusa.* (சா.அக.)

**புனர்நவவாதி** *punarnavavādi,* பெ.(n.) (ஐந்து) பஞ்சமூலம், சாறடை, நரிப்பயற்றங் கொடி, உளுந்துக் கொடி, சித்தாமுட்டி, ஆமணக்கு; the five drugs - castor root, pavonia zeylanica, black gram plant, dew gram plant; *trianthema decandra.* (சா.அக.)

**புனர்ப்பவம்** *punar-p-pavam,* பெ.(n.) மறுமுறை பிறத்தல்; second birth - regeneration. (சா.அக.)

*[Skt. punar > த. புனர்+பவம்]*

**புனர்ப்பாகம்** *punar-p-pāgam,* பெ.(n.) குழைத்த கஞ்சி (உணவு); rice cooked second time.

*[Skt. punar+pāka > த. புனர்ப்பாகம்]*

**புனர்பூசம்** *punar-pūšam,* பெ.(n.) கழை, ஏழாவது நாண்மீன்; the seventh nakṣatra. *புனர்பூசத்துக் கடையின் வெள்ளி எல்லையாக (புறநா. 229, உரை).*

த.வ. கழை

*[Skt. punarvasu > த. புனர்பூசம்]*

**புனர்வசு** *punarvašu,* பெ.(n.) **புனர்பூசம்** பார்க்க; see *punar-pūšam.*

**புனர்விசாரணை** *punar-višāraṇai,* பெ.(n.) மறுவுசாவல்; re-trial.

*[Skt. punar-vicārana > த. புனர்விசாரணை]*

**புனர்விவாகம்** *punar-vivāgam,* பெ.(n.) மறுமணம்; re-marriage, as of widows.

*[Skt. punar-vivāha > த. புனர்விவாகம்]*

**புனராவர்த்தகசுரம்** *punar-āvarttaga-šuram,* பெ.(n.) **புனர்சுரம்** பார்க்க; see *punar-šuram.*

**புனராவர்த்தம்** *punar-āvarttam,* பெ.(n.) மறுதரம் (வின்.); second time, that succeeding the first, as of an occurrence.

*[Skt. punar-āvartta > த. புனராவர்த்தம்]*

**புனர்வாழ்வு** *punar-vālvu,* பெ.(n.) நலிந்தோருக்கு மீண்டும் தரப்படும் நல்வாழ்வு, மறுவாழ்வு; rehabilitation.

*[புனர்+வாழ்வு]*

**புனரமை-த்தல்** *punaramai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. திருத்தி யமைத்தல், சீரமைத்தல்; renovate, rejuvenate. *பாழடைந்த கோயில்களைப் புனரமைக்க அரசு உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.* 2. திரும்ப இயல்பான வாழ்க்கையை மேற்கொள்ள உரிய பயிற்சி அளித்தல்; rehabilitate.

*[புனர்+அமை]*

**புனரமைப்பு** *punaramaippu,* பெ.(n.) 1. கோயில் புதுப்பிப்புப் பணி; renovation. 2. இயல்பான வாழ்க்கையை மேற்கொள்ளப் பயிற்சி அல்லது உதவி; rehabilitation.

*[புனர்+அமைப்பு]*

**புனருத்தம்** *punaruttam,* பெ.(n.) **புனருத்தி** பார்க்க; see *punarutti.*

**புனருத்தி** *punarutti,* பெ.(n.) கூறியது கூறல் (சூடா.); repetition .

*[Skt. punar-ukti > த. புனருத்தி]*

**புனருத்தாரணம்** *punar--uttāraṇam,* பெ.(n.) மீண்டும் நிலை நிறுத்துகை; redemption.

*[Skt. punar-uddhārana > த. புனருத்தாரணம்]*

**புனல்** *punal,* பெ.(n.) ஒடுக்கமான வாயுள்ள ஏனத்தில் நீர்மப் பொருளை ஊற்றுதற்கு உதவுங் கருவி; funnel.

த.வ. வைத்தூற்றி

*[E. funnel > த. புனல்]*



**புனாநவி** *punānavi,* பெ.(n.) புனர்நவம் பார்க்க; see *punarnavam.*

**புனிதம்** *punidam,* பெ.(n.) தூய்மம், நனிதூய்மை, தூய்யம் (திவ். திருமாலை); purity, holiness, sanctity.

*[Skt. punita > த. புனிதம்]*

**புனிதவெள்ளி** *punida-veḷḷi,* பெ.(n.) இயேசு குறுக்கையில் (சிலுவையில்) அறையப்பட்டு இறந்த நாளான வெள்ளிக் கிழமை; Good friday.

*[புனிதம் + வெள்ளி]*

**புனிதன்** *punidan,* பெ.(n.) 1. தூய்மையானவன்; pure, holy person. *"வேதம் விரித்துரைத்த புனிதன்" (திவ். பெரியதி. 2.1:4).* 2. சிவன் (அரு.நி.); Sivan. *"புற்றில் வாளரவு மாமையும் பூண்ட புனிதனார்" (தேவா. 136, 6).* 3. இந்திரன் (திவா.); Indran. 4. அருகன் (திவா.); Arhat. 5. புத்தன் (திவா.); Buddha.

*[Skt. punida > த. புனிதன்]*

**புனியாத்து** *puniyāttu,* பெ.(n.) கடைகால் (C.G.); foundation.

*[U. bunyād > த. புனியாத்து]*

**பூகந்தகம்** *pūkandagam,* பெ.(n.) பதங்கித்த கந்தகம்; sublimed sulphur. 2. கந்தகபற்பம்; calcined sulphur. (சா.அக.).

**பூகம்பம்** *būgambam,* பெ.(n.) 1. நிலவதிர்ச்சி; earthquake. *"பூகம்பம் பிறந்துடுவு மரும்பகலே விழுந்து" (பாரத. சூதுபோர். 259).* 2. ஞாயிறு (ஆதித்தன்) நின்ற நாளுக்கு ஏழாம் நாள் (விதான. குணாகுண. 34); (astrol.) the seventh nakṣatra from that occupied by the sun.

**பூகோளசாத்திரம்** *pūkoḷa-śāttiram,* பெ.(n.) மலை, ஆறு தட்ப வெப்பம் முதலிய நிலவுலகின் இயல்புகளை விளக்கிக் கூறும் நூல்; geography.

த.வ. நிலநூல்

*[Skt. bhū-gōla+śāttiram > த. பூகோளசாத்திரம்]*

**பூகோளம்** *pūgōḷam,* பெ.(n.) நிலவுலக வுருண்டை; the terrestrial globe, the earth.

*[பூ + கோளம்]*

**பூச்சக்கரம்** *pū-c-cakkaram,* பெ.(n.) 1. பூ மண்டலம்; the earth. 2. நில நடுக்கோடு; equator. 3. சக்கரவாணம்; a kind of whirling rocket.

*[Skt. bhū-cakra > த. பூச்சக்கரம்]*

**பூச்சக்கரவாளக்குடை** *pū-c-cakkaravāḷa-k-kuḍai,* பெ.(n.) கோயில் திருவுருவங்களுக்குப் பிடிக்கும் பெரிய வெண்குடை; huge, white temple umbrella. *"மதி கொண்ட பூச்சக்கரவாளக் குடையின்" (திருப்போ. சந்நிதி. அலங்கா. 49).*

*[பூ + சக்கரவாளம் + குடை]*

**பூசாவிதி** *pūśāvidi,* பெ.(n.) அகத்தியர் கருவூரார் முதலியோர் சிதம்பரச் சக்கர முறையும் வாசிதாரணையும் அட்டகர்ம மந்திரமுங் கூறியுள்ள நூல்கள்; text by Agastiar and Karurar on the practice of yoga etc. (சா.அக.)

**பூசாவிருத்தி** *pūśā-virutti,* பெ.(n.) கோயிற் பூசைக்கு விட்ட இறையிலி நிலம்; inam land granted for performing worship in a temple. (I.M.P.N.A.240).

*[Skt. pūjā+vṛuddhi > த. பூசாவிருத்தி]*

**பூதங்குசம்** *pūdaṅguśam,* பெ.(n.) சீழ்ப் புண்ணைக் கரையச் செய்யும் ஒரு மருந்து; a mineral capable of dissolving over growth of flesh in ulcers. (சா.அக.)

**பூதரகிதம்** *pūdaragidam,* பெ.(n.) சிலந்தி; an insect. (சா.அக.).

**பூதிகந்தம்** *pūdi-kandam,* பெ.(n.) 1. கந்தகம்; sulphur. 2. துர்க்கந்தம்; stench. (சா.அக.).

**பூதேவர்** *pūdēvar,* பெ.(n.) பார்ப்பனர்; Brahmans, considered as gods on earth. *"ஒரு கோடி பூதேவரும்" (பாரத. தற்சிறப். 2).*

*[Skt. bhū-dēva > த. பூதேவர்]*

**பூதேவி** *pūdēvi,* பெ.(n.) நிலமகள்; the goddess of earth.

*[பூ + தேவி]*

*[**Skt.** bhū-dēvi > த. பூதேவி]*

**பூந்தி** *pūndi,* பெ.(n.) பணியாரவகை, பொலந்தி (பூந்தி); a kind of confection made of Bengal-gram flour.

**த.வ. பொலந்தி**

*[**U.** būndi > த. பூந்தி]*

**பூபதி** *pūpadi,* பெ.(n.) 1. அரசன்; king, ruler, as lord of the earth. *"புரந்தரனா மெனப் பூபதியாகி" (அட்டப். அழகரந். 5).* 2. பூபதி மாத்திரை (பதார்த்த. 1226) பார்க்க; see *pūpadimāttirai.* 3. பாம்பணை (ஆதிசேடன்) (அரு.நி. 312); *Adišēṣan.*

**த.வ. மன்னன்**

*[**Skt.** bhū+pati > த. பூபதி]*

**பூபதிமாத்திரை** *pūpadimāttirai,* பெ.(n.) ஒரு வகைக் குளிகை (பதார்த்த. 1226); a kind of pill.

**த.வ. நிலக்குளிகை**

*[**Skt.** bhū-pati > த. பூபதி+மாத்திரை]*

**பூபதிரசம்** *pūpadirašam,* பெ.(n.) இதளிய மருந்து வகை (பதார்த்த. 1228); a preparation of mercury.

*[**Skt.** bhū-pati+rašam > த. பூபதிரசம்]*

**பூபன்** *pūpan,* பெ.(n.) அரசன்; sovereign, as protecting the earth. *"பொறையினாற் பெரியன் பூபன்" (சூளா. தூது. 99).*

*[**Skt.** bhū-pa > த. பூபன்]*

**பூபாகம்** *pūbāgam,* பெ.(n.) நிலப்பரப்பு (இக்.வ.); land.

*[**Skt.** bhū-bhāga > த. பூபாகம்]*

**பூபாலன்**[1] *pūpālan,* பெ.(n.) 1. அரசன் (திவா.); king, sovereign. 2. வேளாளன் (பிங்.); vēḷāḷan, agriculturist. 3. மூக்கினடுவில் ஒன்று அல்லது மூன்று சுழிகள் கொண்ட உயர்வகைக் குதிரை (சுக்கிரநீதி, 314); horse with one or three marks at the centre of its nose, as the prince of horses.

*[**Skt.** bhū+bāla > த. பூபாலன்]*

**பூபாலன்**[2] *pūpālan,* பெ.(n.) செவ்வாய் (திவா.); Mars as son of the Earth.

*[**Skt.** bhū+bāla > த. பூபாலன்]*

**பூபாலாசனம்** *pūpālāšanam,* பெ.(n.) ஒக வகை; a kind of yogic posture.

**த.வ. அரசஒகம்**

*[**Skt.** bhū-pāla+sanam > த. பூபாலாசனம்]*

**பூபாளம்** *pūpāḷam,* பெ.(n.) காலையிற் பாடும் ஒரு பண்வகை (பிங்.); a specific melody-type appropriate to early dawn.

*[**Skt.** bhū-pāli > த. பூபாளம்]*

**பூமம்** *pūmam,* பெ.(n.) மிகுதி; abundance, plenty. *"பூமச் சோதியருளால்" (பாடு. 100, சாற்றுபறை).*

*[**Skt.** bhūman > த. பூமம்]*

**பூமாதேவி** *pūmādēvi,* பெ.(n.) நிலமகள்; Goddess of earth. *ஆகாசவாணி பூமாதேவி அறிய. (உ.வ.).*

*[**Skt.** bhū > த. பூ+மாதேவி]*

**பூமி** *pūmi,* பெ.(n.) 1. நிலவுலகு; earth. *"இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்றவாறு" (திருவாச. 20: 10).* 2. நிலமகள்; Goddess of earth. *"பூமி கொழுநன்" (சூடா.).* 3. நிலப்பகுதி; land, soil, ground, plot of land. 4. நிலச் சொத்து; landed property. 5. தேயம்; country, district. 6. இடம்; place. 7. கோணங்களின் கீழ் வரி (யாழ்.அக.); base of geometrical figure. 8. நிலை; a stage or condition in life. *"அஞ்ஞான பூமி, ஞானபூமி" (ஞானவா. உற்ப. 39; 49).* 9. பொறியால் கணித்துக் கொள்வதற்குரிய பொருள்; object of sense-perception. *"ஒருவர்க்கு அறிகைக்குப் பூமியோ என்கிறார்" (ஈடு.).* 10. நாக்கு (இலக்.அக.); tongue.

*[**Skt.** bhūmi > த. பூமி]*

**பூமிசக்கரம்** *pūmi-cakkaram,* பெ.(n.) சித்திரக் கவி வகை (யாப். வி. 497); a kind of metrical composition.

*[பூமி + சக்கரம்]*

**பூமிசருக்கரை** *pūmi-šarukkarai,* பெ.(n.) சீந்தில் சருக்கரை; a bitter substance prepared from the stalk of 'šīndil' moon creeper - Tinosphora Cordifolia alias cocculus cordifolia. (சா.அக.)

**பூமிசாத்திரம்** *pūmi-šāttiram,* பெ.(n.) 1. நிலத்தின் பகுதிகளை விளக்கும் நூல் (நில இயல்); geography. 2. நிலத்தின் அமைப்பைப் பற்றிய நூல் (மண்ணூல்); geology.

*[Skt. bhūmi-šastra > த. பூமிசாத்திரம்]*

**பூமிதானம்** *pūmi-dāṉam,* பெ.(n.) நிலக் கொடை; gift of land, one of taša-tāṉam. *தசதானங்களுள் நிலத்தைத் தானம் பண்ணுகை.*

**த.வ. நிலக்கொடை**

*[பூமி+தானம்]*

**பூமிதேவி** *pūmi-dēvi,* பெ.(n.) நிலமகள்; Goddess of earth. *"பூமிதேவி தான் காண்கலேன் கடியன கண்ணி னாலெனா" (சீவக. 2233).*

*[பூமி+தேவி]*

**பூமிநடுக்கம்** *pūmi-naḍukkam,* பெ.(n.) **பூமியதிர்ச்சி** (யாழ்.அக.) பார்க்க; see *pūmi-y-atircci.*

**த.வ. நிலநடுக்கம்**

**பூமிப்பரீட்சை** *pūmi-p-parīṭcai,* பெ.(n.) 64 கலைகளுளொன்றாகிய நிலத்தியல்பு பற்றியறியும் கலை; one of 64 sciences - Geology. (சா.அக.)

**பூமிபாரம்** *pūmi-pāram,* பெ.(n.) 1. இறை யாண்மை (வின்.); responsibilities of sovereignty. 2. தீயோர் (நிலத்திற்குச் சுமையாயிருப்பவர்); wicked people, as being a burden to the earth. *"பூமிபாரங் களுண்ணுஞ் சோற்றினை வாங்கி" (திவ். பெரியாழ். 4. 4: 5).*

*[பூமி + பாரம்]*

**பூமிபாலன்** *pūmi-bālaṉ,* பெ.(n.) **பூபாலன்** பார்க்க; see *pū-bālaṉ.*

*[பூமி + பாலன்]*

**பூமிபூசை** *pūmi-pūšai,* பெ.(n.) மனையில் கட்டடம் கட்டும் வேலை துவங்குவதற்கு நல்ல நாளைத் தேர்ந்தெடுத்து அந்நாளில் இறைவனை வேண்டிச் செய்யும் பூசை (வீடு கட்டுவதற்கு முன் செய்யும் பூசை); inaugurating the construction work of a building with a puja invoking the blessings of god for successful completion.

*[பூமி + பூசை]*

**பூமிமுனை** *pūmi-muṉai,* பெ.(n.) மூன்று புறங்களிலும் கடல் சூழ்ந்திருக்கும் நிலக்கோடி; cape, promontory.

*[பூமி + முனை]*

**பூமியதிர்ச்சி** *pūmiyatircci,* பெ.(n.) நில நடுக்கம் (பூகம்பம்); earthquake.

*[பூமி+அதிர்ச்சி]*

**பூயம்** *pūyam,* பெ.(n.) 1. புண்சீழ்; purulent matter, pus, suppuration, discharge from an ulcer or wound. 2. வெறுக்கத்தக்க பொருள்; that which is disgusting. *"பூயத்தான் மிக்கதொரு பூதத்தா லாகாதோ" (தனிச் செய்யுட். சி. 29:3).*

*[Skt. pūya > த. பூயம்]*

**பூர்** *pūr,* பெ.(n.) வெள்ளம்; flood. *"பூரம்புராசி" (பாரத. இராச. 116).*

*[Skt. pūra > த. பூர்]*

**பூர்ச்சம்** *pūrccam,* பெ.(n.) மரவகை; Indian birch tree.

*[Skt. bhūrja > த. பூர்ச்சம்]*

**பூர்த்தம்**[1] *pūrttam,* பெ.(n.) குளம் வெட்டல் முதலிய அறச் செயல் (அறப்பணி) (யாழ்.அக.); meritorious work, act of pious liberality; as digging a well.

*[Skt. pūrta > த. பூர்த்தம்]*

**பூர்த்தம்**[2] *pūrttam,* பெ.(n.) நிறைவு; saturation. (சா.அக.)

**பூர்த்தி** *pūrtti,* பெ.(n.) 1. நிறைவு; wholeness, fulness, completeness. 2. நிறைவெய்துகை; satisfaction. 3. தெய்வத்துடன் ஒன்றுதல், கலத்தல் (கடவுளிடத்து ஐக்கியம்) (வின்.); absorption into the deity.

*[Skt. pūrti > த. பூர்த்தி]*

**பூர்த்திபண்ணு-தல்** *pūrtti-paṇṇu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. செய்து முடித்தல்; to complete, finish. 2. நிரப்புதல்; to fill up.

*[Skt. pūrti > த. பூர்த்தி+பண்ணு-தல்]*

**பூர்வ** *pūrva,* பெ.எ. (adj.) 1. முந்திய; former, bygone. 2. பழங்கால, ஆதி; ancient. *"பூர்வக் குடிகள்".*

**பூர்வக்காட்சியனுமானம்** *pūrva-k-kāṭci-y-aṉumāṉam,* பெ.(n.) பட்டறிவை அடிப்படையாகக் கொண்டு அறுதியிடும் உன்னிப்பு (அனுமானம்); a kind of inference which is based on previous experience. *"போது நாற்றத்தாலறிதல் பூர்வக் காட்சியனுமானம்" (சி.சி.அளவை. 12).*

**பூர்வகதை** *pūrva-kadai,* பெ.(n.) 1. பண்டைக் காலக் கதை (பழங்கதை); ancient story. 2. கதையின் முன் தொடர்ச்சி; resume of the narrative.

*[பூர்வம்+கதை]*

**பூர்வகம்** *pūrvagam,* வி.எ. (adv.) முன்னிட்டு; along with. ஞானபூர்வகம்.

*[Skt. pūrvaka > த. பூர்வகம்]*

**பூர்வகருமம்** *pūrva-karumam,* பெ.(n.) முன்னை வினை; result of actions of former births.

*[Skt. pūrva+karumam > த. பூர்வகருமம்]*

**பூர்வகாலம்** *pūrva-kālam,* பெ.(n.) சென்ற காலம்; the past. *"பூர்வ காலத்துப் புண்யவசத்தினால்" (தனிப்பா. i. 266: 3).*

*[பூர்வம்+காலம்]*

**பூர்வகுணம்** *pūrva-kuṇam,* பெ.(n.) மருந்துகளுக்கு இயற்கையாகவே உள்ள குணம்; the natural properties of drug or medicine. (சா.அக.)

*[பூர்வம்+குணம்]*

**பூர்வகுளம்** *pūrvakuḷam,* பெ.(n.) 1. பனி நீர்; dew water. 2. தூய நீர்; crystal or pure water. 3. பனிக்குடத்து நீர்; liquor amni. (சா.அக.)

*[பூர்வம்+குளம்]*

**பூர்வகௌளம்** *pūrva-kauḷam,* பெ.(n.) பண் வகை (பரத. ராக. பக். 103); a specific melody - type.

*[Skt. pūrva+kauḷam > த. பூர்வகௌளம்]*

**பூர்வசன்** *pūrvašaṉ,* பெ.(n.) 1. மூத்த மகன்; eldest son. 2. தமையன்; elder brother. 3. முதல் மனைவிக்குப் பிறந்த புதல்வருள் மூத்தவன்; eldest son by the first married wife, although born subsequent to sons by other wives (R.F.).

*[Skt. pūrva+ja > த. பூர்வசன்]*

**பூர்வசன்மம்** *pūrva-šaṉmam,* பெ.(n.) முற்பிறப்பு; previous or past birth.

*[Skt. pūrva+jaṉmam > த. பூர்வசன்மம்]*

**பூர்வசன்மவாசனை** *pūrvašaṉma-vāšaṉai,* பெ.(n.) முந்திய பிறவியின் தொடர்பு; the propensities of a person in his previous birth which continue to exist in his present life.

*[பூர்வம்+சன்மம்+வாசனை]*

**பூர்வசென்மவாசனை** *pūrvašeṉma-vāšaṉai,* பெ.(n.) *பூர்வசன்மவாசனை* பார்க்க; see *pūrvašanma-vāšaṉai.*

*[பூர்வ+சென்மம் + வாசனை]*

**பூர்வதனம்** *pūrva-daṉam,* பெ.(n.) முன்பே அமைந்துள்ளது (சி.சி.2:33, சிவாக்.); that which exists already.

*[Skt. pūrva+tana > த. பூர்வதனம்]*

**பூர்வதிக்கு** *pūrvatikku,* பெ.(n.) கிழக்கு; east. *"பூர்வதிக்கில் வாழ்வார்க்கு" (சைவச. பொது. 227).*

*[பூர்வம்+திக்கு]*

**பூர்வதிசை** *pūrva-tišai,* பெ.(n.) **பூர்வதிக்கு** பார்க்க; see *pūrva-tikku.*

**பூர்வதுவந்தம்** *pūrva-duvandam,* பெ.(n.) ஊழ்வினைப் பயன் (வின்.); result of past karma.

*[Skt. pūrva+dvand > த. பூர்வதுவந்தம்]*

**பூர்வதொந்தம்** *pūrva-tondam,* பெ.(n.) **பூர்வதுவந்தம்** பார்க்க (வின்.); see *pūrva-duvandam.*

**பூர்வபக்கம்** *pūrva-pakkam,* பெ.(n.) **பூர்வபட்சம்** பார்க்க; see *pūrvapaṭcam.*

**பூர்வபட்சம்** *pūrva-paṭcam,* பெ.(n.) 1. வளர்பிறை; bright fortnight. 2. எதிரியின் சொற்போர் (வாதம்); first part of an argument, containing the views of an opponent, opp. to šittāntam; prima facie view or argument on any question.

*[Skt. pūrva+paṭcam > த. பூர்வபட்சம்]*

**பூர்வபட்சி-த்தல்** *pūrva-paṭci-,* 4 செ.கு றாவி. (v.t.) எதிரி கூறிய மறுப்புரையை எடுத்துக்காட்டி விடையளித்தல்; to state the opponent's views and arguments for the purpose of answering them. *"ஓரர்த்தத்தைத் தாயார் வார்த்தையாலே பூர்வபட்சித்து மகள் வார்த்தையாலே சித்தாந்திக்கிறது" (திவ். திருநெடுந். 18, வியா).*

*[Skt. purva+pakṣa > த. பூர்வபட்சி-த்தல்]*

**பூர்வபதம்** *pūrva-padam,* பெ.(n.) தொகை மொழியுள் முதலிலுள்ள சொல் (பி.வி.22, உரை); first member of a compound word.

*[Skt. pūrva+pata > த. பூர்வபதம்]*

**பூர்வபற்குனி** *pūrva-paṟkuṉi,* பெ.(n.) கணை விண்மீன் (பூரம்) (வின்.); the 11th nakṣatra.

*[Skt. pūrva+phalgunī > த. பூர்வபற்குனி]*

**பூர்வபுண்ணியத்தானம்** *pūrva-puṇṇiya-t-tāṉam,* பெ.(n.) பிறப்பியத்தில் (சாதகம்) முன்னை நல்வினையைத் தெரிவிக்கும் ஐந்தாம் வீடு (C.G.); fifth house in a horoscope, showing past meritorious deeds.

*[Skt. pūrva+puṇya+sthāna> த. பூர்வ புண்ணியத்தானம்]*

**பூர்வபுண்ணியம்** *pūrva-puṇṇiyam,* பெ.(n.) முன்னை நல்வினை (வின்.); meritorious deeds of past births.

*[Skt. pūrva+puṇya > த. பூர்வபுண்ணியம்]*

**பூர்வம்¹** *pūrvam,* பெ.(n.) குறிப்பிடும் ஒன்றின் நிறைந்த தன்மை (அல்லது) அடிப்படை என்ற பொருளில் பெயர்ச் சொற்களோடு இணைந்து வரும் சொல்; combining with nouns to give the sense of the nature of being full (with the thing mentioned) basis (of).

**பூர்வம்²** *pūrvam,* பெ.(n.) 1. தொடக்கம் (ஆதி); first, beginning. 2. பழைமை; antiquity, oldness. 3. கிழக்கு; east. 4. முதன்மை (வின்.); periority, precedence. 5. முற்காலம்; former time.

*[Skt. pūrva > த. பூர்வம்]*

**பூர்வம்³** *pūrvam,* வி.எ.(adv.) **பூர்வகம்** பார்க்க; see *pūrvāgam.*

**பூர்வமாய்** *pūrvam-āy,* வி..எ.(adv.) **பூர்வகம்** (வாயுசங். பலவ. 3) பார்க்க; see *pūrvagam.*

**பூர்வமீமாஞ்சை** *pūrva-mīmāñjai,* பெ.(n.) மறையில் கூறப்படும், வினை, ஓகம், சமயவழிபாடு முதலியவற்றை விளக்கிக் கூறும் சைமினி முனிவர் எழுதிய கலைநூல்; system of Indian philosophy, founded by Jaimini, investigating and determining the nature of dharma or the duties, rites, and rituals enjoined by the Vēdic law and also incidentally enunciating the correct principles of Vēdic exegesis, dist. fr. *uttaramīmāñjai.*

*[பூர்வம்+மீமாஞ்சை]*

**பூர்வவேதம்** *pūrva-vēdam,* பெ.(n.) தொடக்கக் (ஆதி) காலத்து மறைகள். இவை 4 வகை தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், சாம வேதம் என்பன; the preancient Vedam which consists of four parts - Thaithirium poudikam, Thalavakāram and Sāmam. (சா.அக.)

1. தைத்திரியம் – அற ஒழுக்கமாகிய ஐந்து பெரிய வேள்விகளைப் பற்றிச் சொல்வது.

2. பௌடிகம் – பொருள் பற்றிய ஒழுக்கமாகிய அரச நீதியைப் பற்றியது.

3. தலவகாரம் – முல்லை நிலத்துச் செய்கை யாகிய கற்பொழுக்கத்தை அறிவிப்பது.

4. சாமவேதம் – அறம், பொருள், இன்பம் ஆக இம்மூன்றின் நிலையாமை பற்றியும் அதற்கு மேலுள்ள வீடு பேறாகிய அழிவற்ற பேரின்பப் பொருளைப் பற்றியும் நன்கு விளக்குவது.

**பூர்வாங்கம்**[1] *pūrvāṅgam,* பெ.(n.) திருமணம் முதலியவற்றுக்குறுப்பாய் அவற்றின் முன்னிகழ்த்தப்படுவது; anything preliminary, the preliminary rites forming part of a ceremony, as marriage.

*[Skt. pūrva+aṅga > த. பூர்வாங்கம்]*

**பூர்வாங்கம்**[2] *pūrvāṅgam,* பெ.(n.) மேல் நிலையில் பாடும் இசை ஓசைகளுள் முதல் நான்கு (Mus.of.Ind.63); lower tetrachord of the octave.

*[Skt. pūrvāṅga > த. பூர்வாங்கம்]*

**பூர்வாசாரம்** *pūrvāšāram,* பெ.(n.) பழைய வழக்கம்; ancient custom. *"பூர்வாசாரங் கொண்டு இறையிலியாக" (S.I.I.vi, 145).*

*[Skt. pūrva+ācāra > த. பூர்வாசாரம்]*

**பூர்வாசிரமம்** *pūrvāširamam,* பெ.(n.) துறவியின் முந்திய நிலை; previous stage of life, as of an ascetic.

*[Skt. pūrva+āšrama > த. பூர்வாசிரமம்]*

**பூர்வாப்பியாசம்** *pūrvā-p-piyāšam,* பெ.(n.) தொன்று தொட்ட வழக்கம் (வின்.); ancient usage or custom; manners and customs of former times.

*[Skt. pūrva+abhyāsa > த. பூர்வாப்பியாசம்]*

**பூர்வாபரம்** *pūrvābaram,* பெ.(n.) மணவினை பிணவினைக்குரிய மந்திரங்கள்; collection of mantras, used in marriages and funerals.

*[Skt. pūrva+param > த. பூர்வாபரம்]*

**பூர்வார்சிதம்** *pūrvāršidam,* பெ.(n.) முன்னோர் ஈட்டிய பொருள்; ancestral property.

*[Skt. pūrva+arjita > த. பூர்வார்சிதம்]*

**பூர்விகன்** *pūrvigaṉ,* பெ.(n.) அகவை (வயது) முதிர்ந்தவன் (கோயிலொ. 29); old man.

*[Skt. pūrvika > த. பூர்விகன்]*

**பூர்வீகசரித்திரம்** *pūrvīka-sarittiram,* பெ.(n.) பழைய வரலாறு (வின்.); ancient history.

*[Skt. pūrvīka+caritra > த. பூர்வீகசரித்திரம்]*

**பூர்வீகம்** *pūrvīgam,* பெ.(n.) 1. முற்காலம்; antiquity, old times. 2. மூலம் (வின்.); origin.

*[Skt. pūrvika > த. பூர்வீகம்]*

**பூர்வோத்தரம்** *pūrvōttaram,* பெ.(n.) 1. முழு விளக்கம்; முழுச்செய்தி (விருத்தாந்தம்); all

the circumstances, antecedent and subsequent. *"அவனைப் பூர்வோத்தரங் களைக் கேட்குமளவில்" (கோயிலொ. 30).* 2. வடகிழக்கு; north east.

த.வ. தொய்வரவு

*[Skt. pūrvōt-tara > த. பூர்வோத்தரம்]*

**பூர்வோத்தரவிருத்தம்** *pūrvōttara-viruttam,* பெ.(n.) முன்னொடு பின் மாறுபடுகை; self-contradiction, inconsistency.

*[Skt. pūrvōttara+viruddha > த. பூர்வோத்தர விருத்தம்]*

**பூர்னீசு** *pūrṇīśu,* பெ.(n.) கம்பளிப் போர்வை (C.G.); flannel or woollen covering.

*[U. būrnis > த. பூர்னீசு]*

**பூரட்டாதி** *pūraṭṭādi,* பெ.(n.) முற்கொழுங்கால் என்னும் இருபத்தைந்தாம் நாண்மீன்; the 25th nakṣatra.

*[Skt. prōṣṭhapada > த. பூரட்டாதி]*

**பூரணகருப்பம்** *pūraṇa-karuppam,* பெ.(n.) எல்லா உறுப்புகளும் வெளித்தோன்றி அமையப் பெற்று உடம்பும் நன்னிலை எய்தி காணும் நிலைமை; நிறைந்த கருப்பம்; full term or period of pregnancy. (சா.அக.).

**பூரணகருப்பிணி** *pūraṇa-karuppiṇi,* பெ.(n.) நிறைமாத பிள்ளைத்தாய்ச்சி; நிறைசூலி; woman in advanced state of pregnancy.

*[Skt. pūrṇa+garbhiṇi > த. பூரணகருப்பிணி]*

**பூரணகலசம்** *pūraṇa-kalaśam,* பெ.(n.) **பூரணகும்பம்** பார்க்க; see *pūraṇakumbam.*

**பூரணகிரகணம்** *pūraṇa-kirakaṇam,* பெ.(n.) முழுக்கோள் பற்றுகை; total eclipse.

த.வ. நிறைகோள்பற்று

*[Skt. pūrṇa+grahaṇa > த. பூரணகிரகணம்]*

**பூரணகுணம்** *pūraṇa-kuṇam,* பெ.(n.) முழுமையாக நலமடைதல்; complete cure. (சா.அக.)

**பூரணகும்பம்** *pūraṇa-kumbam,* பெ.(n.) மாவிலை தருப்பை முதலியவற்றால் ஒப்பனை செய்து நீர் நிறைக்கப்பட்ட குடம்; pot full of water and decorated, used on auspicious occasions. *"பூரண கும்பமும் பொலம்பாலி கைகளும்".* (மணிமே. 1:44)

த.வ. நிறைகுடம்

*[Skt. pūrṇa > த. பூரணம்+கும்பம்]*

**பூரணகும்பமரியாதை** *pūraṇa-kumba-mariyādai,* பெ.(n.) நற்காரியங்களுக்காக முகாமையா (முக்கியமா)னவர்களுக்குத் தரப்படும் மதிப்புரவு; welcome accorded to dignitaries with - pūraṇakumba (usually in a temple).

*[பூரணம்+கும்பம்+மரியாதை]*

**பூரணத்திற்புக்கியாடல்** *pūraṇattir-pukkiyāḍal,* பெ.(n.) உடலினின்று உயிரை தன்னிச்சைப்படி பிரித்தலும் மறுபடி உடலிற் கொண்டு வந்து சேர்த்தலும் ஆகிய கூடு விட்டு கூடு பாய்கை; soul passing from one body to the other. (சா.அக.)

**பூரணத்துவம்** *pūraṇattuvam,* பெ.(n.) நிறைவான நிலை; perfection, wholeness.

**பூரணபாத்திரம்** *pūraṇa-pāttiram,* பெ.(n.) 1. 256 சிறங்கையரிசி கொள்ளும் ஏனம் (பாத்திரம்); a vessel of the capacity of 256. handful of rice. 2. **பூரண கும்பம்** பார்க்க; see *pūraṇa-kumbam.*

*[Skt. pūrṇa+pāttiram > த. பூரணபாத்திரம்]*

**பூரணபிண்டம்** *pūraṇa-piṇḍam,* பெ.(n.) முழுவளர்ச்சி பெற்ற கரு; full grown foetus. (சா.அக.).

*[பூரணம்+பிண்டம்]*

**பூரணம்**[1] *pūraṇam,* பெ.(n.) 1. நிறைவு (பிங்.); fullness, plenitude, perfection. 2. முழுமை; entireness, whole. 3. மிகுதி (யாழ்.அக.); plenty. 4. முடிவு; consummation,

accomplishment. *"அக்காரியம் பூரண மாயிற்று".* 5. பொந்திகை (திருப்தி); satisfaction, gratification. *அவனுக்கு இப்போதுதான் மனம் பூரணமாயிற்று.* 6. ஐந்து விரல்களையும் விலக வைத்து நீட்டிக்காட்டும் அவிநயக்கை வகை (வின்.); gesture in which the five fingers are held out straight and apart from one another.

*[Skt. pūrṇa > த. பூரணம்]*

**பூரணம்²** *pūraṇam,* பெ.(n.) 1. இரண்டாவது மூன்றாவது (எண் வரிசைமுறைப் பெயர்) என எண்கள் நிறுத்த முறையைக் குறிக்கும் எண்; ordinal. *" எண்கள் நான்கும் ஈண்டுப் பூரணப் பொருளவாய் நின்றன ".* (பரிபா. 3, 78, உரை); 2. பணியாரத்தினுள்ளீடு; pie inside a pastry or confection. 3. பிதிர்ப்பிண்டம் (யாழ்.அக.); cake offered to the manes. 4. ஆடையின் குறுக்கிழை (யாழ்.அக.); woof. 5. மழை (யாழ்.அக.); rain.

*[Skt. pūraṇa > த. பூரணம்]*

**பூரணம்³** *pūraṇam,* பெ.(n.) 1. உடம்பின் அறிவுக்கண்; eye of wisdom. 2. குழிப் புண்ணில் ஆற்றக் கூடிய மருந்தை நிரப்புதல்; to fill the per-ferating ulcer with medicine. 3. முழுமையான ஆயுள்வேத மருந்து; a medicine containing gold, mercury and sulphur. 4. இலவங்கப் பட்டை; cinnamam bark. 5. பெண்குறி; female private part. (சா.அக.)

**பூரணமதுமேகம்** *pūraṇa-madumēgam,* பெ.(n.) முக்கோள் வேறுபாட்டினால் நோயாளியை நெடு நாளைக்கு உயிருடன் வைத்திருக்கும் ஒரு வகை நீரழிவு நோய்; diabetes which does not end the life. (சா.அக.)

*[பூரணம்+மதுமேகம்]*

**பூரணன்** *pūraṇaṉ,* பெ.(n.) 1. குணங்கள் நிரம்பினவன்; perfect being; one perfect in all attributes. 2. கடவுள்; God, as the most perfect. *"பூரணன் றிருமுன்னர்" (சிவரக. மேரு. 20).* 3. மூர்த்த பாடாணம் (சங்.அக.); a kind of prepared arsenic.

*[Skt. pūrṇa > த. பூரணன்]*

**பூரணை¹** *pūraṇai,* பெ.(n.) 1. நிறைவு; fullness, perfection. *"பூரணையாற் பதினாற் கயிற்றோக் கப்புவன மெல்லாம்"* (திருநூற். 91). 2. வெள்ளுவா, நிறையுவா; the tank to the north of a full moon. 3. ஐம்மி, பதின்மி, உவா என்ற நிலவு நாள்கள் (திவா.); the 5th, 10th and 15th *titi* in a lunar fortnight. 4. நிலவுலகிற்கு மேல் தேவர்களால் உருவாக்கப்பட்ட சிவனாலயத்தின் (சமவ சரணத்தின்) வடப்புறமுள்ள வாவி (மேருமந். 1086, உரை).

*[Skt. pūrṇā > த. பூரணை]*

**பூரணை²** *pūraṇai,* பெ.(n.) ஐயனார் தேவி (பிங்.); the consort of Aiyaṉār.

*[Skt. pūraṇai > த. பூரணை]*

**பூரணைகேள்வன்** *pūraṇai-kēḷvaṉ,* பெ.(n.) ஐயனார் (பிங்.); Aiyaṉār, as husband of *Pūraṇai.*

*[Skt. pūraṇi > த. பூரணை+கேள்வன்]*

**பூரத்திரயம்** *pūra-t-tirayam,* பெ.(n.) கணை (பூரம்), முற்குளம் (பூராடம்), முற்கொழுங்கால் (பூரட்டாதி) என்ற விண்மீன்கள் (விதான. குணாகுண. 13, உரை); the 11th, 20th and 25th naksatras.

*[Skt. pūra+traya > த. பூரத்திரயம்]*

**பூரா¹** *pūrā,* கு.பெ.எ.(adj.) 1. முழுவதுமான; complete, full, whole. 2. முழுவதும்; fully, completely.

*[U. pūrā > த. பூரா]*

**பூரா²** *pūrā,* பெ.(n.) **பூராசருக்கரை** (C.G.) பார்க்க; see *pūrāšarukkarai.*

*[U. būrā > த. பூரா]*

**போடகம்** *pōḍagam,* பெ.(n.) 1. புண் (வின்.); boil, tumour. 2. அம்மைக் கொப்புளம் (சங்.அக.); pock in small pox. 3. கொப்புளிப்பான் (சங்.அக.); measles. 4. அம்மை (இ.வ.); small pox.

*[Skt. sphōṭaka > த. போடகம்.]*

**போடசெமிக்கி** *pōḍašemikki,* பெ.(n.) வயிறு; stomach (சா.அக.).

**போடம்[1]** *pōḍam,* பெ.(n.) 1. தகர்க்கை (சேதுபு. வேதா.34, கீழ்க்குறிப்பு); slapping. 2. சொல்லுக்கு அடிப்படையாய் முதற் காலந்தொட்டு உள்ள பொருளை உணர்த்த வல்ல நாதம் (பி.வி.181); eternal and imperceptible element of sounds and words and the real vehicle of the idea which flashes on the mind when a sound is uttered.

த.வ. ஓசை

*[Skt. sphōta > த. போடம்.]*

**போடம்[2]** *pōḍam,* பெ.(n.) தேசம் ஐம்பத் தாறனுள் ஒன்று (திருவேங்.சத.97); a country one of 56 *tēšam.*

*[Skt. bhōta > த. போடம்.]*

**போடோபில்லி** *pōḍōpilli,* பெ.(n.) சீன நாட்டுச் செடி; a chinese plant (சா.அக.).

**போத்தல்** *pōttal,* பெ.(n.) கண்ணாடிக் குப்பி (இ.வ.); bottle.

*[E. bottle > த. போத்தல்.]*

**போத்தா** *pōttā,* பெ.(n.) 1. **போக்தா** பார்க்க; see *bōktā. "நானே போத்தா" (விநாயகபு.83, 85).* 2. உண்போன்; one who eats.

*[Skt. bhōktā > த. போத்தா.]*

**போத்தி** *pōtti,* பெ.(n.) இறந்துபோனவ-ன்-ள்; deceased person. *"ஆஜரிருக்கும் குடிபோத்தி யென்னவும்" (தாசீல்தார்நா.69).*

*[Skt., Arab. fauti > த. போத்தி.]*

**போத்திராயுதம்** *pōttirāyudam,* பெ.(n.) **போத்திரி** பார்க்க (சங்.அக.); see *pōddiri.*

*[Skt. pōtr-āyudha > த. போத்திராயுதம்.]*

**போத்திரி** *pōttiri,* பெ.(n.) பன்றி (சூடா.); hog, pig.

*[Skt. pōtrin > த. போத்திரி.]*

**போத்திருத்துவம்** *pōttiruttuvam,* பெ.(n.) 1. நுகர்ச்சிக்கு வினைமுதலாதற்றன்மை (சி.சி.2, 80, சிவஞா.); condition of being the enjoyer. 2. நுகரும் தன்மை (சி.சி.2, 80); capacity or desire for enjoyment.

*[Skt. bhōktr-tva > த. போத்திருத்துவம்.]*

**போதக்கிரியை** *pōdakkiriyai,* பெ.(n.) குளிர்க் காய்ச்சலால் தானே புலம்பிக் கொண்டே உடுத்திருக்கும் துணியைக் கிழித்தும், உண்ணாமல் மயக்கத்தோடு கிடக்கும் ஒரு செய்கை; a delirious condition marked by crying, fainting, tearing of the cloth worn by him, etc. (சா.அக.).

**போதகசிலேட்டுமம்** *pōdakašlēṭṭumam,* பெ.(n.) 1. நாவிலிருக்கும் ஒரு வகை நீர்ப்பசை; a variety of kapham named போதகம், which is said to be at the tongue (சா.அக.).

**போதககுரு** *pōdaka-kuru,* பெ.(n.) சாத்திரப் பொருளை அறிவிக்கும் குரு (விவேகசிந்.பக். 28); preceptor who explains the purport of the *šāstras.*

*[Skt. bōdhaka > த. போதககுரு.]*

**போதகப்புல்** *pōdaga-p-pul,* பெ.(n.) ஒரு வகைப் புல்; a kind of grass (சா.அக.).

**போதகநாறி** *pōdaganāṟi,* பெ.(n.) கொள்ளிக் கட்டைத் தேக்கு; a kind of tree (சா.அக.).

த.வ. கருந்தேக்கு

**போதகம்[1]** *pōdagam,* பெ.(n.) 1. இளமை (பிங்.); youthfulness, infancy, furenility.

2. யானைக்கன்று (பிங்.); elephant calf. *"வேழப் போதகமன்னவன் தாலோ" (திவ். பெருமாள்.7,1).* 3. யானை; elephant. *"போதகமொன்று கன்றி" (கம்பரா.விபீடண. 113).* 4. விலங்கின் பிள்ளை (சூடா.); young of animals. 5. ஓரறிவுயிரின் இளமை; (தொல். பொ.580); sapling.

*[Skt. pōtaka > த. போதகம்¹.]*

**போதகம்²** *pōdagam,* பெ.(n.) பசளை என்னும் கீரை வகை; malabar night shade.

*[Skt. pōtaka > த. போதகம்².]*

**போதகம்³** *pōdagam,* பெ.(n.) 1. அறிவுரை; spiritual teaching, as by a guru to his disciple. 2. சொல்லிக் கொடுத்த அறிவு; instruction, tutoring. அவனுக்கு அப்படிப் போதகம்.

*[Skt. bōdhaka > த. போதகம்.]*

**போதகம்⁴** *pōdagam,* பெ.(n.) 1. காஞ்சிரை; nuxvomica tree. 2. குழந்தைப் பருவம்; infancy. 3. புலி, சிங்கம் இவைகளின் குட்டி; the young of tiger, lion etc. 4. திப்பிலி; long pepper. 5. நாக்கிலுள்ள ஒரு வகை நீர்ப்பசை; a variety of kapham. 6. வாலைப்பூநீர்; dew. (சா.அக.).

**போதகம்⁵** *pōdagam,* பெ.(n.) போதகா, பேரண்டம், தலையோடு; cranium (சா.அக.).

**போதகன்** *pōdagaṉ,* பெ.(n.) 1. **போதகா சிரியன்** பார்க்க; see *pōdagāśiriyaṉ.* *"நியதிபுரிந் தருளுவான் போதகன்" (சைவச. ஆசார.30).* 2. நாட்டையர்; pastor, ordained minister. 3. ஒற்றன் (யாழ்.அக.); spy.

*[Skt. bōdhaka > த. போதகன்.]*

**போதகாசிகம்** *pōdakāśikam,* பெ.(n.) மட்டிச் சாம்பிராணி; benzoin (சா.அக.).

**போதகாசிரியன்** *pōtagāśiriyaṉ,* பெ.(n.) 1. கல்வி கற்றுக்கொடுப்போன்; teacher. *"நாலுரை போதகாசிரியர்" (இலக்.கொத். பாயி.6).* 2. குருவம் (சைவச.ஆசார.28, உரை); a religious preceptor, one who initiates into religious mysteries.

*[Skt. bōdhaka+āšārya > த. போதகா சிரியன்.]*

**போதகிவர்த்தமம்** *pōdagi-varttamam,* பெ.(n.) கண் இமைகளினுட் பாகத்தில் செந்நிறமான கட்டிகளுண்டாகி அரத்தம் வடிந்து கொண்டு நமைச்சலுடன் கூடிய மிக்க வலியை யுண்டாக்குமோர் கண்ணோய்; a number of red boils or postules resembling red mustard seeds attended with pain, itching and exudation of blood (சா.அக.).

**போதகி** *pōdagi,* பெ.(n.) 1. சளியின் மேலீட்டினாலேற்படும் கண்களில் கடுகள வுள்ள கட்டிகள்; small mustard size blabs in the eye due to excess of phlegm humour. 2. பெண் ஊர்க்குருவி; a female species of sparrow. 3. பசளைக் கொடி; spinach climber. 4. வேங்கை மரம்; a tree pterocarpus marsupium. 5. சீரகம்; cumin seed. 6. ஒரு வகைக் கண்நோய்; a kind of eye disease. 7. **போதகிவர்த்தமம்** பார்க்க; see *pōtagivarttamam* (சா.அக.).

**போதச்சயம்** *pōdaccayam,* பெ.(n.) ஒரு வகை மயக்கம், அதிசுழுத்தி; a long or prolonged sleep (சா.அக.).

த.வ. நீள்துயில்

**போதசு** *pōdašu,* பெ.(n.) ஒரு வகைப்பூடு; an herb (சா.அக.).

**போதத்தம்** *pōdattam,* பெ.(n.) சிவப்பு மந்தாரை; a tree (சா.அக.).

**போதநாசினி** *pōdanācini,* பெ.(n.) கோவைக்கொடி; a creeper-Bryonia grandis (சா.அக.).

**போதப்பிரகாரம்** *pōda-p-piragāram,* பெ.(n.) இலக்கணம், பரீக்கை எண்ணம் என்ற தருக்கவாதப் பிரிவு (வின்.); terms, in three divisions, viz., *uttēcam, ilakkaṇam, parikkai.*

*[Skt. bōdha+pra-kāra > த. போதப்பிரகாரம்]*

**போதம்[1]** *pōdam,* பெ.(n.) 1. மெய்யறிவு (ஞானம்) (சூடா.); wisdom. *"போத மொத்தனன் மாருதி" (கம்பரா.முதற்போர்.222).* 2. அறிவு; knowledge, understanding, intelligent. *"போதத்தி னகன்று" (பெருங். உஞ்சைக்.43, 61).*

*[Skt. bōdha > த. போதம்[1].]*

**போதம்[2]** *pōdam,* பெ.(n.) 1. மரக்கலம் (திவா.); vessel, ship, boat. *"போதங்கொ ணெடுந் தனிப் பொருவில் கூம்பொடு" (கம்பரா. பள்ளிபடை.68).* 2. தாழி (பரணி) விண்மீன் நாள் (பிங்.); the second naksatra. 3. மனைக்கட்டு (யாழ்.அக.); house site

*[Skt. pōta > த. போதம்[2].]*

**போதம்[3]** *pōdam,* பெ.(n.) யானைக்கன்று; young of an elephant (சா.அக.).

**போதயத்தம்** *pōdayattam,* பெ.(n.) பட்டாணி; pea pulse (சா.அக.).

**போதயந்தரத்தான்** *pōdayandarattāṉ,* பெ.(n.) சிறுகாடை; a bird; quail (சா.அக.).

**போதவாகன்** *pōda-vāgaṉ,* பெ.(n.) தோணி யோட்டுபவன் (சங்.அக.); boatman.

த.வ. ஓடக்காரன்

*[Skt. pōta-vāha > த. போதவாகன்.]*

**போதனம்[1]** *pōdaṉam,* பெ.(n.) 1. **போதனை** (யாழ்.அக.) பார்க்க; see *pōdaṉai.* 2. தூபங்காட்டுகை; waving incense.

*[Skt. bōdhana > த. போதனம்.]*

**போதனம்[2]** *pōdaṉam,* பெ.(n.) 1. புகை காட்டல்; funigating, exposing. 2. அறிவு; knowledge. 3. பாதாளமூலி; a creeper.

**போதனமரம்** *pōdaṉa-maram,* பெ.(n.) காசுக்கட்டி உண்டாகு மரம்; catchu nigrum (சா.அக.).

**போதனாசக்தி** *pōdaṉā-šakti,* பெ.(n.) கற்பிக்குந் திறமை (வின்.); ability to teacher.

*[Skt. bōdhanā-šakti > த. போதனாசக்தி.]*

**போதனாமுறை** *pōdaṉā-muṟai,* பெ.(n.) கல்வி கற்பிக்கும் நெறி; mod. method in teaching.

*[Skt. bhō-dhanā > த. போதனா+முறை.]*

**போதனாவாக்கி** *pōdaṉā-vākki,* பெ.(n.) செம்முள்ளி; a red species of the Indian shade (சா.அக.).

**போதனை[1]** *pōdaṉai,* பெ.(n.) 1. கற்பிக்கை; teaching, instruction, advice, inculcation. *"போதனை செய்ய வல்லார்" ( தாயு.கற்புறு.3).* 2. அறிவு; knowledge, wisdom. 3.தூண்டுகை; instigation, counsel, tutoring, used ironically. *"துன்மார்க்க போதனை செய்தனன்றோ" (தாயு.கற்புறு.4).*

த.வ. அறிவுறுத்தம்

*[Skt. bōdhaṉā > த. போதனை.]*

**போதனை[2]** *pōdaṉai,* பெ.(n.) **போதனமரம்** பார்க்க; see *pōdaṉa-maram* (சா.அக.).

**போதாயனர்** *pōdāyaṉar,* பெ.(n.) 1. அற (தரும) நூலும் கற்ப நூலுமியற்றிய ஒரு முனிவர்; a writer of Dharmasāstra and Kalpa. 2. போதாயனீயத்தில் கூறப்பட்ட முறை (விதி)களைப் பின்பற்றுபவர்; follower of the kalpa or the manual of rites of *bōdhāyana.*

*[Skt. bōdhāyana > த. போதாயனார்.]*

**போதாயனீயம்** *pōdāyaṉiyam,* பெ.(n.) வைதிகச் சடங்குகளைச் செய்யுமுறை கூறும் (கற்ப) நூல்வகை (தொல்.பொ.75, உரை); a kalpa or ceremonial guide containing short aphoristic rules for the performance of *vēdic*sacrifices.

*[**Skt.** bōd-hāyaniya > த. போதாயனீயம்.]*

**போதாலயம்** *pōdālayam,* பெ.(n.) அறிவுக் கிருப்பிடம்; temple of wisdom. *"போதா லயத்துட்புலன்" (திருமந்.1707).*

**த.வ. அறிவாலயம்**

*[**Skt.** bōdhālaya > த. போதாலயம்.]*

**போதி[1]-த்தல்** *pōdi,* 4 செ.கு.வி.(v.i.) விருப்ப முண்டாதல்; to have inclination. *"போதித்த போது வருவேன்" (நாஞ்.).*

*[**Skt.** bōdha > த. போதி-த்தல்.]*

**போதி[2]** *pōdi,* பெ.(n.) 1. அறிவு; wisdom, knowledge. *"போதிச் செல்வம் பூண்டவர்" (சீவக.366).* 2. அரசமரம்; pipal, as the tree of wisdom. *"போதிமன்றத்து" (சிலப்.23, 76).*

*[**Skt.** bōdhi > த. போதி[2].]*

**போதிகைப்பலகை** *pōdikai-p-palagai,* பெ.(n.) தூணின் தலையில் வைக்கும் பலகை; (pond.) entablature.

**த.வ. அரசாணிப் பலகை**

*[**Skt.** bodhgai > த. போதிகை+பலகை.]*

**போதிசத்துவன்** *pōdi-šattuvav,* பெ.(n.) 1. அறிவு முதிர்ந்து அடுத்தபிறவியில் புத்தனாக ஆவதற்குரியோன் (மணிமே.பக். 506, அரும்.); buddhist ascetic who has arrived at the stage when there is only one more birth before attaining buddhahood. 2. புத்தன்; Gautama, the Buddha.

*[**Skt.** bōdhi-sattva > த. போதிசத்துவன்.]*

**போதியல்** *pōdiyal,* பெ.(n.) போதிகைப் பலகை (இ.வ.); see *pōdikai-palagai.*

**த.வ. அரசாணிப் பலகை**

*[**Skt.** bodhgai > த. போதியல்.]*

**போல்சாவி** *pōlšāvi,* பெ.(n.) உட்டுளையுள்ள திறவுகோல் (இ.வ.); tubular key.

**த.வ. பெண் சாவி**

*[**T.** bōlu > த. போல்சாவி.]*

**போல்மரம்** *pōlmaram,* பெ.(n.) வண்டியின் முன்புறத்துள்ள நீண்ட மரக்கட்டை (இ.வ.); wooden shaft fitted to the fore-part of a vehicle.

**த.வ. மூக்கணைமரம்**

*[**E.** pole > த.போல்+மரம்.]*

**போல்மூங்கில்** *pōle-mūṅgil,* பெ.(n.) மூங்கில் வகை; hollow bamboo bambusa arundinaca typica.

**த.வ. துளைமூங்கில்**

*[**T.** bōlu > த. போல்+மூங்கில்.]*



**போனகம்** *pōṉagam,* பெ.(n.) 1. உணவு; food. *"நால்வகைப் போனகமேந்தி" (மணிமே.28, 242).* 2. அன்னம் (சைவச. பொது.454); boiled rice. 3. அப்பவருக்கம் (பிங்.); a kind of cake. 4. உண்ணுகை (பிங்.); eating.

**த.வ. ஆகூமுணவு**

**பௌகண்டம்** *paukaṇḍam,* பெ.(n.) ஆறு முதல் பத்து அகவை (வயது) வரையுள்ள குழந்தைப் பருவம் (விசாரசந்.பக்.343); period in the life of a child, between the ages of six and ten.

*[Skt. pauganda > த. பௌகண்டம்.]*

**பௌசம்** *paušam,* பெ.(n.) சுறவ (தை) மாதம் (வின்.); the lunar month of Tai.

*[Skt. pausa > த. பௌசம்.]*

**பௌசிகம்¹** *paušigam,* பெ.(n.) **பௌடியம்¹** பார்க்க; see *pauḍiyam.*

**பௌசிகம்²** *paušigam,* பெ.(n.) **பௌடியம்²** பார்க்க; see *pauḍiyam.*

**பௌசியம்¹** *paušiyam,* பெ.(n.) பௌடியம் (வின்.); a Purana.

**பௌசியம்²** *paušiyam,* பெ.(n.) வருங்காலம்; the future. *"பௌசியப் பிரதிபந்தம்" (பஞ்சதசப்.பக்.84).*

*[Skt. bhavsyat > த. பௌசியம்.]*

**பௌசுதாரி** *paušutāri,* பெ.(n.) குற்ற நேர் கேட்புக்குரிய (விசாரணைக்குரிய)வன் (C.G.); magisterial, criminal.

*[U. faujddri > த. பௌசுதாரி.]*

**பௌசுதாரிக்கட்டளை** *paušutāri-k-kaṭṭaḷai,* பெ.(n.) குற்றச்சாட்டு நடவடிக்கை (C.G.); criminal proceedings.

*[U. faujdāri > த. பௌசுதாரி+கட்டளை.]*

**பௌஞ்சு** *pauñju,* பெ.(n.) **பவுஞ்சு** பார்க்க (வின்.); see *pauñju.*

*[U. fauz > த. பௌஞ்சு.]*

**பௌட்கரம்** *pauṭkaram,* பெ.(n.) 1. சிவனிய துணைத் தொன்மங்களுள் ஒன்று; a secondary Saiva Agama. 2. பாஞ்சராத்திர சங்கிதைகளு ளொன்று; a *Pāñjharātra Samhita.*

*[Skt. pauskara > த. பௌட்கரம்.]*

**பௌட்டிகம்** *pauṭṭigam,* பெ.(n.) 1. **பவுட்டிகம்** பார்க்க (சங்.அக.); see *pavuṭṭigam,* a ceremony. 2. நிலத்தில் விழுமுன் தாமரை யிலையில் ஏந்திய பசுஞ்சாணம் (சைவச. பொது.169, உரை); cow dung gathered on a lotus-leaf before it falls to the ground.

*[Skt. pauṣṭika > த. பௌட்டிகம்.]*

**பௌடிகம்¹** *pauḍigam,* பெ.(n.) **பௌடியம்¹** பார்க்க (திவா.); see *pauḍiyam.*

**பௌடிகம்²** *pauḍigam,* பெ.(n.) **பௌடியம்²** பார்க்க (திவா.); see *pauḍiyam.*

**பௌடியம்¹** *pauḍiyam,* பெ.(n.) இருக்கு மறை (வேதம்) (கலித்.கடவுள்.உரை); rig *vēda.*

*[Skt. bahvrc > த. பௌடியம்.]*

**பௌடியம்²** *pauḍiyam,* பெ.(n.) **பவிடிய புராணம்** (திவா.) பார்க்க; see *paviḍiya-purāṇam.*

*[Skt. bhavisyat > த. பௌடியம்.]*

**பௌண்டரிகம்** *pauṇḍarigam,* பெ.(n.) ஈகம் (பவுண்டரிகம்); a sacrifice.

*[Skt. pauṇḍarika > த. பௌண்டரிகம்.]*

**பௌண்டிரம்** *pauṇḍiram,* பெ.(n.) 1. ஒரு நாடு (வின்.); a country, said to include part of South Bihar and Bengal. 2. **பவுண்டம்** பார்க்க; see *pavuṇḍam.*

*[Skt. pauṇḍra > த. பௌண்டிரம்.]*

**பௌண்டிரவம்** *pauṇḍiravam,* பெ.(n.) பாஞ்சாலிக் கொடி எனும் ஒரு வகைக் கொடி; a kind of climber. (சா.அக.).

**பௌண்டு¹** *pauṇḍu,* பெ.(n.) 1. **பவுண்டு¹** பார்க்க; see *pavuṇḍu.* 2. **பவுன், 1** பார்க்க; see *pouṉ,1.*

*[E. pound > த. பௌண்டு.]*

**பௌண்டு²** *pauṇḍu,* பெ.(n.) **பவுண்டு²** பார்க்க; see *pavuṇḍu²* .

*[E. pound > த. பௌண்டு.]*

**பௌத்தம்** *pauttam,* பெ.(n.) புத்தமதம் (சூடா.); Buddhism.

*[Skt. Bauddha > த. பௌத்தம்.]*

**பௌத்தரதாமரை** *pauttara-tāmarai,* பெ.(n.) குளிர்தாமரை; lotus (சா.அக.).

**பௌத்தரன்** *pauttaraṉ,* பெ.(n.) **பௌத்திரன்**[1] (யாழ்.அக.) பார்க்க; see *pauttiraṉ.*

**பௌத்தன்** *pauttaṉ,* பெ.(n.) 1. புத்த சமயத்தான் (திவா.); Buddhist. 2. **பௌத்தாவதாரம்** (பிங்.) பார்க்க; see *pauttāvatāram.*

*[Skt. Bauddha > த. பௌத்தன்.]*

**பௌத்தாவதாரம்** *pauttāvatāram,* பெ.(n.) திருமாலின் தோற்றரவுகளில் ஒன்று (பிங்.); Buddha an incarnation of Visṇu.

*[Skt. buddha+avatara > த. பௌத்தாவதாரம்.]*

**பௌத்தி** *pautti,* பெ.(n.) இறப்பு (வின்.); death.

*[U. faut > த. பௌத்தி.]*

**பௌத்திரத்தினை** *pauttirattiṉai,* பெ.(n.) மஞ்சள் தினை; yellow Itallian millet (சா.அக.).

**பௌத்திரநெல்லி** *pauttiranelli,* பெ.(n.) அரிநெல்லி; joose-berry. (சா.அக.);



**பௌத்திரப்புல்** *pauttirappul,* பெ.(n.) தருப்பைப் புல்; sacrificial or sacred grass.

**பௌத்திரபோளம்** *pauttirapōḷam,* பெ.(n.) **கரியபோளம்** பார்க்க; see *kariya-pōḷam* (சா.அக.).

**பௌத்திரம்**[1] *pauttiram,* பெ.(n.) சிறுநீரக (பவுத்திர) நோய்; urinary fistula.

*[Skt. bhagandara > த. பௌத்திரம்.]*

**பௌத்திரம்**[2] *pauttiram,* பெ.(n.) பவித்திரம்[1],1. (யாழ்.அக.); sacredness; purity.

*[Skt. pavitra > த. பௌத்திரம்[2].]*

**பௌத்திரம்**[3] *pauttiram,* பெ.(n.) 1. **பௌத்திர ரோகம்** பார்க்க; see *pauttira-rōgam.* 2. மூலத்தில் (வாயு) கண்டு மேகநீர் உண்டாகிப் புரையோடிச் சீழ்ப் பாய்ச்சல் கண்டு முளைவிழும் ஒருவகை நோய்; fistula in anus due to other causes than venereal (சா.அக.).

**பௌத்திரமுருங்கை** *pauttira-muruṅgai,* பெ.(n.) புனல் முருங்கை; a kind of drumstick (சா.அக.).

**பௌத்திராயம்** *pauttirāyam,* பெ.(n.) **செந்திராய்** பார்க்க; see *śendirāy* (சா.அக.).

**பௌத்திராவம்** *pauttirāvam,* பெ.(n.) ஊதளை; physic nut plant (சா.அக.).

**பௌத்திரரோகம்** *pauttira-rōgam,* பெ.(n.) சிற்றின்பத்தினால் கனல் மிகுதியாகிப் படையுண்டாகிப் புணர்உறுப்பிற்கும் எருவாய்க்கும் இடையில் கொடியில் அடிநரம்பின் மேலாவது அதன் இரு பக்கத்திலாவது, அண்டம், அபானவாயு ஆகிய இவைகளிலாவது நமைச்சலெடுத்து வீங்கி நொந்து கொப்புளித்து சீழும் சலமும் வடிந்து பிறகு புரையோடி நரம்பழுகி, கண்கள் உண்டாகி அதன் வழியே சிறுநீரும் மலமும் இறங்கி அதனால் உடம்பு மெலிந்து சாப்பாடு செல்லாது களைப்பை யுண்டாக்கும் ஒரு வகை மூலநோய்; a deep narrow sinuous ulcer extending between the surface of the body and internal an

cavity near the anus said to have been caused by accumulation of venereal secretions due to excess of heat caused by sexual intercourse (சா.அக.).

*[பௌத்திரம்+ரோகம்.]*

**பௌத்திரவிரல்** *pauttira-viral,* பெ.(n.) மோதிர விரல்; ring finger (சா.அக.).

*[பௌத்திரம்+விரல்.]*

**பௌத்திரன்**[1] *pauttiraṉ,* பெ.(n.) மகன் வழிப் பேரன்; grandson who is a son's son. *"உம்பத்திர பௌத்திரர் தங்களுக்கும்... அருந்துயரில்லையே" (உத்தரா. திருவோலக். 20).*

*[Skt. pautra > த. பௌத்திரன்.]*

**பௌத்திரன்**[2] *pauttiraṉ,* பெ.(n.) தூய்மை யானவன் (யாழ்.அக.); holly person.

*[Skt. பவித்ரம்→பவித்ரன்→ பௌத்திரன்.]*

**பௌத்திரி** *pauttiri,* பெ.(n.) மகன் வயிற்று மகள்; grand daughter who is a son's daughter.

*[Skt. pautri > த. பௌத்திரி.]*

**பௌத்துவம்** *pauttuvam,* பெ.(n.) பச்சை மணிக்கல் (மரகதம்); a precious gem; emerald (சா.அக.).

**பௌதிகக்கவர்ச்சி** *paudiga-k-kavarcci,* பெ.(n.) வேதியியல் கவர்ச்சி; chemical attraction of atoms of the element of others resulting in chemical compound (சா.அக.).

*[பௌதிகம்+கவர்ச்சி.]*

**பௌதிகக்கிரணம்** *paudiga-k-kiraṇam,* பெ.(n.) வேதியல் கதிர்; chemical ray (சா.அக.).

*[பௌதிகம்+கிரணம்.]*

**பௌதிகக்கூட்டு** *paudiga-k-kūṭṭu,* பெ.(n.) வேதியியற் கலவை; chemical composition (சா.அக.).

*[பௌதிகம்+கூட்டு.]*

**பௌதிகக்கூட்டுப்பாடு** *paudiga-k-kūṭṭuppāḍu,* பெ.(n.) வேதியியல் கலவை; chemical composition (சா.அக.).

*[பௌதிகம்+கூட்டுப்பாடு.]*

**பௌதிகக்கூறுபாடு** *paudiga-k-kūṟupāḍu,* பெ.(n.) வேதியியல் கூர்ந்தாய்வு; chemical analysis (சா.அக.).

*[பௌதிகம்+கூறுபாடு.]*

**பௌதிகசந்தி** *paudiga-sandi,* பெ.(n.) வேதியியல் இணைவு; chemical union (சா.அக.).

*[பௌதிகம்+சந்தி.]*

**பௌதிகசரக்கு** *paudiga-šarakku,* பெ.(n.) வேதியியல் மருந்துவகை; chemical drug as delirium. (சா.அக.).

*[பௌதிகம்+சரக்கு.]*

**பௌதிகசரீரம்** *paudiga-šarīram,* பெ.(n.) 1. பூதவுடம்பு; physical body. 2. ஐம்பூதத்திற் குரிய வுடம்பு; body consisting of elements (சா.அக.).

*[பௌதிகம்+சரீரம்.]*

**பௌதிகசாத்திரம்** *paudiga-šāttiram,* பெ.(n.) இயற்கைத் தத்துவநூல்; physical science.

**த.வ. இயற்பியல்**

*[Skt. bhautika+šastra > த. பௌதிகசாத்திரம்.]*

**பௌதிகஞானம்** *paudiga-ñāṉam,* பெ.(n.) 1. ஐம்பூதத் தொடர்பான வுடம்பிற்குரிய அறிவு; wisdom of man in his physical body. 2. புத்த மதத்திற் கூறிய அறிவு; the eminence of wisdom related to Buddhistic philosophy.

*[பௌதிகம்+ஞானம்.]*

**பௌதிகப்பிரமசாரி** *paudika-p-piramašāri,* பெ.(n.) மாணிய நோன்பு முடித்து மணம் புரிவோன் (சிவதரு.பரி.2, உரை); Brahmin

youth who marries upon the completion of his duties as a Brahmacarin.

*[பௌதிகம்+பிரமசாரி.]*

**பௌதிகபரீட்சைசாலை** *paudiga-pariṭcai šālai,* பெ.(n.) வேதியியல் ஆராய்ச்சி செய்யுமிடம்; chemical laboratory (சா.அக.).

*[பௌதிகம்+பரீட்சைசாலை.]*

**பௌதிகபாவனை** *paudiga-pāvaṉai,* பெ.(n.) கடவுளை உருவனாக ஊழ்கம் செய்கை (சங்.அக.); meditation of God, as having form.

*[Skt. bhautika > த. பௌதிகபாவனை.]*

**பௌதிகபிரிவினை** *paudiga-pirivinai,* பெ.(n.) வேதியியல் விதிப்படி ஒரு பொருளி லிருந்து பிரிதல்; chemical decomosition (சா.அக.).

**பௌதிகபுலன்** *paudiga-pulaṉ,* பெ.(n.) ஐம்புலனிலொன்று; one of the five physical senses (சா.அக.).

**பௌதிகம்** *paudigam,* பெ.(n.) 1. ஐம்பூதத் தொடர்பானது; that which pertains to the five elements; that which is physical. *"தேகங்களத்தனையு மோகங் கொள் பௌதிகம்" (தாயு.பரிபூ.2).* 2. உலகம் (வின்.); the world.

**பௌதிகமங்கை** *paudiga-maṅgai,* பெ.(n.) பொன்னாங்கண்ணி என்னும் மூலிகை; sessile plant (சா.அக.).

*[பௌதிகம்+மங்கை.]*

**பௌதிகயோகசந்நியாசி** *paudiga-yōgašanniyāši,* பெ.(n.) பௌதிக பாவனைச் செய்வோன் (சங்.அக.); ascetic practising *pautika-pāvaṉai.*

*[பௌதிகம்+ஓகம்+சந்நியாசி.]*

**பௌதிகவாதம்**[1] *paudiga-vādam,* பெ.(n.) உலோகாயதமதம் (பிரபஞ்சவி); materialism.

*[Skt. bhautika+vāta > த. பௌதிகவாதம்.]*

**பௌதிகவாதம்**[2] *paudiga-vādam,* பெ.(n.) வேதியியல் நூல்; chemistry (சா.அக.).

*[பௌதிகம்+வாதம்.]*

**பௌதிகவாதி** *paudiga-vādi,* பெ.(n.) வேதியியல் வல்லுநர்; chemist (சா.அக.).

*[பௌதிகம்+வாதி.]*

**பௌதிகன்** *paudigaṉ,* பெ.(n.) சிவபிரான் (யாழ்.அக.); *Sivaṉ.*

*[Skt. bhautika > த. பௌதிகன்.]*

**பௌதிகாசாரியன்** *paudikāšāriyaṉ,* பெ.(n.) மூத்த குருக்களின் உதவியாளன்; assistant to the head priest.

*[பௌதிகம்+ஆசாரியன்.]*

**பௌந்திரம்** *paundiram,* பெ.(n.) மூலநோய்; piles.

*[Skt. bhagandara > த. பௌந்திரம்.]*

**பௌமம்**[1] *paumam,* பெ.(n.) நிலம் தொடர் பானது (வின்.); that which is produced in or related to the earth.

*[Skt. bhauma > த. பௌமம்.]*

**பௌமம்**[2] *paumam,* பெ.(n.) நிலத்திற் பிறப்பன; physical bodies (சா.அக.).

**பௌமன்** *paumaṉ,* பெ.(n.) 1. செவ்வாய்; the planet Mars, as the son of Earth. *"பௌமனுக்கான செழுமண்" (அறப்.சத.50).* 2. நரகாசுரன் (யாழ்.அக.); Narahasura.

*[Skt. bhauma > த. பௌமன்.]*

**பௌமசுநானம்** *pauma-šunāṉam,* பெ.(n.) தூய்மையான அரசு துளசி முதலிய மரஞ் செடிகளின் அடிமண்ணை உடல்மீது தூவிக் கொள்ளுவதான குளியல் (வின்.); purification by sprinkling with dust taken from the vicinity of sacred trees, shrubs, etc.

*[Skt. bhauma+snāna > த. பௌமசுநானம்.]*

**பௌமி** *paumi,* பெ.(n.) நிலமகளின் புதல்வி யாகிய சீதை (சங்.அக.); Sita, as daughter of the Earth.

[**Skt.** *bhaumi* > த. *பௌமி.*]

**பௌர்ணசந்திரன்** *paurṇa-šandiran,* பெ.(n.) நிறைமதி; full moon.

[**Skt.** *pūrṇa+ṣandra* > த. *பௌர்ணசந்திரன்.*]

**பௌர்ணமாசம்** *paurṇa-māšam,* பெ.(n.) நிறை நிலா நாளில் (பௌர்ணமி) செய்யும் வேள்வி; sacrifice on a full moon day.

[**Skt.** *paurṇamāsa* > த. *பௌர்ணமாசம்.*]

**பௌர்ணமி** *paurṇami,* பெ.(n.) நிறைமதி நாள்; full moon day.

**த.வ.** முழு நிலவு

[**Skt.** *paurṇami* > த. *பௌர்ணமி.*]

**பௌர்ணமிச்சந்துக்கட்டு** *paurṇami-šandu-k-kaṭṭu,* பெ.(n.) நோயாளிக்கு ஆகாததாகக் கருதப்படும் நிறைமதி நாளும் அதற்கு முன்னும் பின்னுமுள்ளனவுமான நாள்கள்; the full moon day and the days just before and after the full moon, as unfavourable to patients.

[**Skt.** *paurṇami* > த. *பௌர்ணமி+சந்துக் கட்டு*]

**பௌர்ணிமை** *paurṇimai,* பெ.(n.) **பௌர்ணமி** (சங்.அக.) பார்க்க; see *paurṇami.*

**பௌரகம்**[1] *pauragam,* பெ.(n.) நகரை யடுத்தப் புறச்சோலை (யாழ்.அக.); grove adjoining a city.

[**Skt.** *pauraka* > த. *பௌரகம்.*]

**பௌரகம்**[2] *pauragam,* பெ.(n.) நொச்சி; a garden plant, chastity plant (சா.அக.).

**பௌரம்** *pauram,* பெ.(n.) நகரத் தொடர்பானது (சங்.அக.); that which pertains to a city.

[**Skt.** *paura* > த. *பௌரம்.*]

**பௌரவர்** *pauravar,* பெ.(n.) புரு மன்னனின் குலத்தார்; descendants of Puru.

[**Skt.** *paurava* > த. *பௌரவர்.*]

**பௌரன்** *pauraṉ,* பெ.(n.) நகரத்தில் வாழ்பவன்; urban man.

[**Skt.** *paura* > த. *பௌரன்.*]

**பௌராணிகம்** *paurāṇigam,* பெ.(n.) **பௌராணிகச்சமயம்** (வின்.) பார்க்க; see *paurāṇiga-c-camayam.*

[**Skt.** *paurā-ṇika+* > த. *பௌராணிகம்+சமயம்*]

**பௌராணிகமதம்** *paurāṇiga-matam,* பெ.(n.) தொன்மத்தைப் பின்பற்றும் சமயம்; a system of doctrines founded on the *purāṇas.*

[**Skt.** *paurā-ṇika* > த. *பௌராணிகம்+மதம்.*]

**பௌராணிகமந்திரம்** *paurāṇiga-mandiram,* பெ.(n.) ஓங்காரம் சேராத மந்திரம் (யாழ்.அக.); mantra without pranava.

[**Skt.** *paurā-ṇika* > த. *பௌராணிகம்+ மந்திரம்*]

**பௌராணிகன்** *paurāṇigaṉ,* பெ.(n.) 1. தொன்மக் கொள்கையுடையவன் (சி.சி.1, 1 மறைஞா.7); one who follows the *purāṇas.* 2. தொன்மக்கதைகளை எடுத்துரைப்பவன்; one who expounds the *purāṇa* stories.

[**Skt.** *pauranika* > த. *பௌராணிகன்.*]

**பௌரி** *pauri,* பெ.(n.) பெரும்பண்வகை (பிங்.); a musical, mode, one of *perum-paṇ.*

**பௌரிக்காய்** *paurikkāy,* பெ.(n.) சவுரிக்காய்; fruit of climber (சா.அக.).

**பௌரிகன்** *paurigaṉ,* பெ.(n.) குபேரன் (யாழ்.அக.); Kubera.

[**Skt.** *bhaurika* > த. *பௌரிகன்.*]

**பௌருசம்** *paurušam,* பெ.(n.) ஆண்டகைமை (வின்.); manliness, nobleness.

[**Skt.** *paurusa* > த. *பௌருசம்.*]

**பௌருசத்துவம்** *paurušattuvam,* பெ.(n.) ஆண் தன்மை; manly power.

**பௌருசேயம்** *paurušēyam,* பெ.(n.) மாந்தனாற் செய்யப்பட்டது (சி.சி.அளவை.13, சிவாக்.); that which is man made.

[*Skt. paurusēya > த. பௌருசேயம்.*]

**பௌரைக்கல்** *pauraikkal,* பெ.(n.) கற்சிட்டம்; over burnt brick (சா.அக.).

**பௌரோகித்தியம்** *paurōgittiyam,* பெ.(n.) போற்றாளித்துவம் (வின்.); priesthood.

[*Skt. paurōhitya > த. பௌரோகித்தியம்.*]

**பௌலசுதியன்** *paulašudiyaṉ,* பெ.(n.) 1. இராவணன்; *Rāvaṇa.* 2. குபேரன்; *Kubēra.*

[*Skt. paulastya > த. பௌலசுதியன்.*]

**பௌலுருவி** *pauluruvi,* பெ.(n.) புல்லுருவி; honey suckle mistletoe.

**பௌவம்**[1] *pauvam,* பெ.(n.) **பவ்வம்**[1] (சூடா.) பார்க்க; see *pavvam.*

[*Skt. parvan > த. பௌவம்*[1].]

**பௌவம்**[2] *pauvam,* பெ.(n.) 1. **பவ்வம்**[2] பார்க்க; see *pavvam. "திறை பிறழிய விரும்பௌவத்து" (பொருந.178).* 2. ஆழம்; deep. *"பௌமார் கடல்" (தேவா.556, 8).* 3. உப்பு (யாழ்.அக.); salt.

**பௌவம்**[3] *pauvam,* பெ.(n.) 1. கடல்; sea; ocean. 2. உப்பு; salt. 3. நுரை; forth. 4. நீர்க்குமிழ்; water bubble (சா.அக.).

**பௌழியசரணத்தார்** *pauḻiya-šaraṇattār,* பெ.(n.) இருக்குவேதிகள்; *Rg Vēdins.*

[*Skt. bahurc > த. பௌழியசரணத்தார்.*]

**பௌழியசரணம்** *pauḻiya-šaraṇam,* பெ.(n.) **பௌடியம்**[1] பார்க்க; see *pauḍiyam.*

[*Skt. bahurc > த. பௌழியசரணம்.*]

**பௌழியம்** *pauḻiyam,* பெ.(n.) **பௌடியம்**[1] பார்க்க; see *pauḍiyam. "சந்தோகா பௌழியா" (திவ்.பெரியதி.7, 7, 2).*

**பௌழியன்**[1] *pauḻiyaṉ,* பெ.(n.) சேர மன்னனான பூழியன்; *Chēra* king.

[*Skt. bahura > த. பௌழியன்.*]

**பௌழியன்**[2] *pauḻiyaṉ,* பெ.(n.) இருக்கு மறையில் வேதத்தால் விவரிக்கப்படுபவனான கடவுள்; God as described in the Rig *vēda. "சந்தோகன் பௌழியன்" (திவ்.பெரியதி.5, 5, 9).*

[*Skt. bahurc > த. பௌழியன்.*]

**பௌளி** *pauḷi,* பெ.(n.) பண் (இராக) வகை (பரத. இராக.56); a specific melody-type.

**பௌன்** *pauṉ,* பெ.(n.) பொற்காசு, பவுன்; pound sterling.

[*E. pound > த. பௌன்.*]



**பௌனர்ப்பவன்** *pauṉarppavaṉ,* பெ.(n.) புத்திரர் பன்னிரு வகையினருள் ஒருத்தியிடம் முதற்கணவனுக்குப் பிறந்தவனும் கைம்பெண்ணானபின் அவளை மணந்த இரண்டாங் கணவனால் மகனாகக் கருதப்படுபவனுமான மகன் (ஏலாதி.31); son born to a woman by her first husband considered as a son of the husband who marries her on her widowhood one of 12 *puttiraṉ.*

[*Skt. paunarbhava > த. பௌனர்ப்பவன்.*]

# ம

**மக்கனம்** *makkaṉam,* பெ.(n.) 1. மூழ்குகை; immersion. 2. அவமானம்; disgrace.

*[Skt. magna > த. மக்கனம்.]*

**மக்கா** *makkā,* பெ.(n.) அரேபியாவிலுள்ளதும் முகம்மது பிறந்ததால் பேர் பெற்றதுமான இடம்; Mecca, one of the two chief cities of Arabia, celebrated as the birth-place of Muhammad. *"வேரியம் பணைசூழ் மக்க மிக்கொக்கு" (திருவிளை.நரியா.105).*

*[Ar. makkah > த. மக்கா.]*

**மக்கி**[1] *makki,* பெ.(n.) ஈ (C.G.); fly.

*[Skt. maksikā > த. மக்கி.]*

**மக்கி**[2] *makki,* பெ.(n.) வெண்பார்க்கல் (J.); marl, calcareous earth.

*[Skt. makkōla > த. மக்கி.]*

**மக்கினம்** *makkiṉam,* பெ.(n.) 1. அழுந்துகை; immersion. *"மக்கினம் பட்டுள்ளே மருவி யிருந்தாண்டி" (பட்டினத்துப்.பக்.235).* 2. அவமானம்; disgrace. *"அந்தச் சபையில் அவன் மக்கினப்பட்டான்".*

*[Skt. magna > த. மக்கினம்.]*

**மக்பி** *makpi,* பெ.(n.) கமுக்கமான (C.G.); secret, confidential.

*[Ar. mahfī > த. மக்பி.]*

**மக்பூல்** *makpūl,* பெ.(n.) ஒப்பளிப்புச் செய்யப் பட்டது (C.G.); that which is approved.

*[Ar. maqbūl > த. மக்பூல்.]*

**மக்மல்** *makmal,* பெ.(n.) கனமாய் மெத்தென் றிருக்கும் பட்டுவகை (வின்.); velvet.

*[H. magmul > த. மக்மல்.]*

**மக்ரிபு** *makribu,* பெ.(n.) மாலைத் தொழுகை; prayer at sunset (muham.).

*[Skt., Ar. maghrib > த. மக்ரிபு.]*

**மகத்து** *magattu,* பெ.(n.) 1. பெரியது; that which is great, large or huge. *"மகத்தாகி நின்றனை நீ" (தாயு. பராபர.226).* 2. அதிகம் (வின்.); greatness, intensity. 3. பெருமை யானது; that which is magnificent, exalted, majestic. *"மகத்தான பன்னிரு வெய்யவர்" (குலோத். கோ.18).* 4. பேராதன்(யாழ்.அக.); great person, in a religious or moral sense; saint. 5. நாடு (இலக்.அக.); country. 6. நூற்றெட்டுபநிடதங்களுள் ஒன்று; an Upanisad, one of 108.

*[Skt. mahat > த. மகத்து.]*

**மகத்துவம்** *magattuvam,* பெ.(n.) பெருமை; greatness, magnificence, majesty, excellence. *"மகத்துவமாப் பிரமாண்டமாகச் செய்யும்" (தாயு.தந்தைதாய்.6).*

*[Skt. mahat-tva > த. மகத்துவம்.]*

**மகதம்** *magadam,* பெ.(n.) 1. தேசம் ஐம்பத் தாறனுள் இராசகிருகத்தைத் தலைநகராகக் கொண்ட ஒரு தேசம்; country of South Bihar with Rājagraha as its capital, one of 56 *tēsam.* 2. நடுநாட்டில் திருக் கோவலூரைச் சார்ந்த ஒரு பகுதி; country about *Tiru-k-kovalūr* in South Arcot Dt. 3. பதினெண்மொழியுள் ஒன்று (நன்.272, உரை); the language of Magadha, one of *patiṉeṇmoḻi.*

*[Skt. magadha > த. மகதம்.]*

**மகதேசன்** *magadēšaṉ,* பெ.(n.) 1. மகத தேசத்தரசன் (பாரத.இரா.17); king of Magadha. 2. நடுநாட்டைச் சார்ந்த மகத நாட்டுச் சிற்றரசன்; king of a part of the country in *Naḍu-nāḍu. "மகதேச னாறைநகர் காவலன்" (பெருந்தொ.1192).*

*[Skt. magadhaiša > த. மகதேசன்.]*

**மகதை**[1] *magadai,* பெ.(n.) திப்பிலி (சங்.அக.); long pepper.

*[Skt. māgadhī > த. மகதை.]*

**மகதை**[2] *magadai,* பெ.(n.) **மகதம், 2** பார்க்க; see *magadai.*

**மகதைசுவரியம்** *magadai-šuvariyam,* பெ.(n.) பெருஞ்செல்வம்; great opulence.

*[Skt. mahat+aišvarya > த. மகதைசுவரியம்.]*

**மகரத்துவசம்** *magarattuvašam,* பெ.(n.) ஒரு மருந்து; a kind of medicine (சா.அக.).

**மகரதோரணம்** *magara-tōraṇam,* பெ.(n.) சுறவ (மகர)வடிவமைந்த ஒப்பனைத் தொங்கல்; ornamental hangings representing makara fishes. *"மதிதொட நிவந்தன மகரதோரணம்" (கம்பரா.மந்தரை.31).*

*[Skt. makara-tōraṇa > த. மகரதோரணம்.]*

**மகரந்தம்** *magarandam,* பெ.(n.) 1. மலர்த் துகள் (திவா.); filament of the lotus; pollen and anther of flowers. 2. பூந்தேன் (பிங்.); nectar or honey of flowers. 3. கள் (பிங்.); toddy. 4. வண்டு; honey-bee. 5. குயில் (மூ.அ.); Indian cuckoo.

*[Skt. makaranda > த. மகரந்தம்.]*

**மகரராசி** *magara-rāši,* பெ.(n.) சுறவம், பத்தாம் ஓரை; capricorn of the zodiac.

*[Skt. makara+raci > த. மகரராசி.]*

**மகரரேகை** *magara-rēgai,* பெ.(n.) செல்வந்த னென்பதைக் காட்டுங் குறியாக உள்ளங் கையில் அமையும் கைவரி வகை (இரேகை வகை) (சங்.அக.); line on the palm of hand, believed to indicate wealth.

**த.வ. மீனக்கைவரி**

*[Skt. makara > த. மகரரேகை.]*

**மகரவலயம்** *magara-valayam,* பெ.(n.) **மகரப்பகுவாய்** பார்க்க; see *magara-p-paguvāy. "மகரவலய மணிதிகழ் நுதலியர்" (பரிபா.10, 77).*

*[Skt. makara > த. மகரம்+வலயம்.]*

**மகரவாகனன்** *makara-vāgaṉaṉ,* பெ.(n.) வருணன் (சங்.அக.); Varuṇaṉ.

*[Skt. makara+vāhana > த. மகரவாகனன்.]*

**மகரவியூகம்** *magara-viyūgam,* பெ.(n.) மகரமீனின் வடிவான படைவகுப்பு; array of army in the shape of a *magaram. "வருபடை தன்னை நிறுத்தி விதம்பட மகரவியூகம் வகுத்து" (பாரத. பதின் மூன்றாம்.7).*

*[Skt. magara+vyūha > த. மகரவியூகம்.]*

**மகரவீணை** *magara-viṇai,* பெ.(n.) **மகரயாழ்** பார்க்க; see *magara-yāḻ. "தீந்தொடை மகரவீணைத் தெள்விளி" (சீவக.608).*

**த.வ. சுறவ யாழ்**

*[Skt. makara > த. மகரம் + வீணை.]*

**மகராகரம்** *magarāgaram,* பெ.(n.) கடல் (யாழ்.அக.); sea.

*[Skt. makarā-kara > த. மகராகரம்.]*

**மகராங்கம்** *magarāṅgam,* பெ.(n.) கடல் (யாழ்.அக.); sea.

*[Skt. makarāṅka > த. மகராங்கம்.]*

**மகராங்கன்** *magarāṅgaṉ,* பெ.(n.) **மகரக் கொடியோன்** பார்க்க (சங்.அக.); see *magara-k-kōḍiyōṉ.*

*[Skt. makarāṅka > த. மகராங்கன்.]*

**மகராசன்** *maga-rāšaṉ,* பெ.(n.) **மகாராசன்** பார்க்க; see *magārāšaṉ. "வருராம தேவ மகராசன்" (நம்பியுலா.).*

*[Skt. mahā-rāja > த. மகராசன்.]*

**மகராசா** *maga-rāšā,* பெ.(n.) **மகாராசன்** பார்க்க; see *magārāšaṉ.*

*[Skt. mahā-rāja > த. மகராசா.]*

**மகராசி** *maga-rāši,* பெ.(n.) 1. இராணி; queen. 2. பெருஞ்சொத்துள்ளவள்; wealthy blessed woman. *"மகராசியாக விருப்பாயே" (திருவாரூ.குற.).*

*[Skt. maha-rājñī > த. மகராசி.]*

**மகராசுவன்** *magarāšuvaṉ,* பெ.(n.) **மகரவாகனன்** (யாழ்.அக.) பார்க்க; see *magarāgaṉaṉ.*

*[Skt. makarāšva > த. மகராசுவன்.]*

**மகராட்டிரம்** *magarāṭṭiram,* பெ.(n.) **மகாராட்டிரம்** (யாழ்.அக.) பார்க்க; see *magārāṭṭiram.*

**மகராயனம்** *magarāyaṉam,* பெ.(n.) கதிரவன் வடக்கு நோக்கித் திரும்புங்காலம் (பஞ்.); winter solstice.

*[Skt. makarāyana > த. மகராயனம்.]*

**மகராலயம்** *magarālayam,* பெ.(n.) கடல் (திவா.); sea, as the abode of fish. *"வானுமின்றி மகராலயமு மின்றி" (தக்கயாகப்.408).*

*[Skt. maka-rālaya > த. மகராலயம்.]*

**மகரி** *magari,* பெ.(n.) கடல் (சங்.அக.); sea.

*[Skt. makarin > த. மகரி.]*

**மகரிகை** *magarigai,* பெ.(n.) 1. அணி முதலிய வற்றிலமைந்த சுறாமீன் வடிவு; the figure of shark, as in ornaments. *"மகரிகை வயிர குண்டலமலம்புந்... தோள்புடை வயங்க" (கம்பரா.நித்னை.17).* 2. **மகரம்**[1], **4** பார்க்க; see *magaram. "மாதின் மகரிகை வயங்கு பொற்பூண் சூழுறு கவானே" (கந்தபு. மாயை.56).* 3. தோரணம் (சது.); ornamental hangings. 4. மகரவடிவாய்ச் செய்த பெட்டி; a shark-shaped box. *"மகரிகை நிறைய" (பெருங்.மகத.17, 161).*

*[Skt. makarika > த. மகரிகை.]*

**மகரிசி** *magariśi,* பெ.(n.) தவமுனிவர்; great sage.

*[Skt. maharsi > த. மகரிசி.]*

**மகரூர்** *magarūr,* பெ.(n.) உறுதியாக்கப் பட்டது (P.T.L.); that which is fixed or established.

*[Ar. muqarrar > த. மகரூர்.]*

**மகலோகம்** *magalōgam,* பெ.(n.) மேலேழுலகத் தொன்று (திவா.); an upper world, fourth of *mēl-ēl-ulagam. "கோவுலோக மகலோக மடையக் குமுறவே" (தக்கயாகப்.704).*

*[Skt. maharlōka > த. மகலோகம்.]*

**மகவான்**[1] *magavāṉ,* பெ.(n.) 1. இந்திரன் (திவா.); Indra. *"மகவான்மக ளிரங்கின னரற்ற" (பாரத.பதின்மூன்.168).* 2. சிவன் (சங்.அக.); Sivaṉ.

*[Skt. magha-vāṉ > த. மகவான்.]*

**மகவான்**[2] *magavāṉ,* பெ.(n.) வேள்வி செய் பவன்; sacrificer. *"வேதாவை மிக்க மகவானாகக் கூட்டி" (தேவை.15).*

*[Skt. makha-vān > த. மகவான்[2].]*

**மகற்பலம்** *magaṟ-palam,* பெ.(n.) பெரும் பலன்; great, important result. *"மகற்பல வாஞ்சையாலே" (சிவதரு.பாம.47).*

*[Skt. mahat+phala > த. மகற்பலம்.]*

**மகா** *magā,* பெ.(n.) 1. பெருமையான; great, high, exalted, dignified, noble, honourable. *"மகாசபையோம்" (S.I.I.i, 68).* 2. அளவற்ற; immense, prodigious, stupendous, monstrous, extreme. 3. உயர்ந்த; superior, paramount. 4. மிகுந்த; intense.

*[Skt. mahat > த. மகா.]*

**மகாஅகதம்** *magā-agadam,* பெ.(n.) நஞ்சு முறிக்கும் செய்முறையைக் குறிக்கும் பெயர்; the name of an antitoxic preparation (சா.அக.).

**மகாஅவிழ்தம்** *magā-aviḻdam,* பெ.(n.) சுக்கு; dried ginger (சா.அக.).

**மகாஅவுசதநாசனி** *magā-avuḍata-nāšaṉi,* பெ.(n.) பூசணிக்காய்; pumpkin (சா.அக.).

**மகாக்கினி**[1] *magākkiṉi,* பெ.(n.) வேள்வித்தீ (ஓமாக்கினி) ( யாழ்.அக.); sacrificial fire.

*[Skt. makhāgni > த. மகாக்கினி.]*

**மகாக்கினி**[2] *magākkiṉi,* பெ.(n.) 1. காட்டுத்தீ (காடாக்கினி); great fire which see. 2. அழல்விரி தீச்சுடர் (தீபாக்கினி); moderate fire spreading flames (சா.அக.).

**மகாகச்சம்**[1] *magā-kaccam,* பெ.(n.) கடல் (யாழ்.அக.); sea.

த.வ. மாக்கடல்

*[Skt. mahā-kacha > த. மகாகச்சம்.]*

**மகாகச்சம்**[2] *magākaccam,* பெ.(n.) 1. பெருங்கடல்; ocean. 2. மலை; mountain (சா.அக.).

**மகாகண்டம்**[1] *magā-gaṇḍam,* பெ.(n.) பாலி மொழியிலுள்ள ஒரு புத்தமத நூல் (மணிமே. பக்.366); a Buddhistic work in *pāli* language.

த.வ. மாகண்டம்

**மகாகண்டம்**[2] *magā-gaṇḍam,* பெ.(n.) பெரிய முள்ளங்கி; large raddish (சா.அக.).

த.வ. மாகண்டம்



**மகாகன்னி** *magā-kaṉṉi,* பெ.(n.) இந்திர பாடாணம் என்னும் செய்ந்நஞ்சு; a variety of arsenic (சா.அக.).

த.வ. மாகன்னி

**மகாகணம்** *magākaṇam,* பெ.(n.) குழந்தை கட்கு நாக்கு, உதடு புண்ணாகி, கண் வெளுத்து, உடல் வெதும்பிக் காணும் ஒரு வகைக் கணை நோய்; a congenital disease of the children marked by anemia, ulcerated tongue and lips (சா.அக.).

த.வ. மாக்கணம்

**மகாகணரோகம்** *magāgaṇa-rōgam,* பெ.(n.) குழந்தை நோய் வகை (சீவரட்.); a disease of children.

த.வ. மாக்கண நோய்

*[மகாகணம் + ரோகம்.]*

**மகாகதம்** *magā-kadam,* பெ.(n.) 1. காய்ச்சல்; fever. 2. மிகுந்த வெப்பம்; intense heat. 3. மிகுந்த சினம்; great anger (சா.அக.).

த.வ. மாகதம்

**மகாகதி** *magā-gadi,* பெ.(n.) மேற்கதி (யாழ்.அக.); upward progress.

த.வ. மாக்கதி

*[Skt. mahā-gati > த. மகாகதி.]*

**மகாகந்தம்**[1] *magā-kandam,* பெ.(n.) பூண்டு, உள்ளி (யாழ்.அக.); garlic.

த.வ. மாக்கந்தம்

*[Skt. mahā-kanda > த. மகாகந்தம்.]*

**மகாகந்தம்**[2] *magā-kandam,* பெ.(n.) 1. வெண்காயம் அல்லது உள்ளி; onion or garlic. 2. அரிசந்தனம்; red sandal (சா.அக.).

த.வ. மாக்கந்தம்

**மகாகபித்தம்** *magākapittam,* பெ.(n.) வில்வம் (மூ.அ.); bael.

*[Skt. mahā-kapittha > த. மகாகபித்தம்.]*

**மகாகபெலம்** *magāgapelam,* பெ.(n.) கொம்மட்டி; a creeping plant-water melon (சா.அக.).

**மகாகர்வம்** *magā-karvam,* பெ.(n.) பத்திலக் கங்கோடி (பிங்.); ten billions.

*[Skt. mahā-kharva > த. மகாகர்வம்.]*

**மகாகல்யாணகம்** *magākalyāṇagam,* பெ.(n.) உடலை தூய்மையாக்குவதும் நினைவை வலுப்படுத்துவதுமான ஒருவகை நெய்; a medicinal ghee in ayurveda for insanity an for strengthening memory (சா.அக.).

**மகாகவம்** *magā-kavam,* பெ.(n.) பெரும்போர் (யாழ்.அக.); great war.

*[Skt. mahā+āhava > த. மகாகவம்.]*

**மகாகவி** *magā-kavi,* பெ.(n.) பெரும்புலவர் (பெருங்கவி); great poet. *"மகாகவி யொருவர் ஒரு காவியத்தில் இட்டனர்" (தக்கயாகப்.8, உரை).*

**த.வ. பெரும்பாவலர்**

*[Skt. mahā-kavi > த. மகாகவி.]*

**மகாகற்பம்[1]** *magā-kaṟpam,* பெ.(n.) கற்பம் பல கொண்ட முடிவுகாலம் (வின்.); a great cycle of time consisting of many a *kaṟpam.*

*[Skt. mahā-kalpa > த. மகாகற்பம்[1].]*

**மகாகற்பம்[2]** *magā-kaṟpam,* பெ.(n.) 1. சிறந்த கற்பமூலிகை; a superior drug to prolong life; drug of all healing potency. 2. சித்தர்கள் பயன்படுத்தும் ஒரு சிறந்த மருந்து; a superior medicinal preparation used by siddhars to secure immortal youth (சா.அக.).

**மகாகற்பம்[3]** *magākaṟpam,* பெ.(n.) **மகா கர்வம்** பார்க்க (நாமதீப.801); see *magā-karvam.*

**மகாகாசம்[1]** *magā-kāšam,* பெ.(n.) பெருஞ்சிரிப்பு (யாழ்.அக.); loud laughter.

*[Skt. mahā-hāsa > த. மகாகாசம்.]*

**மகாகாசம்[2]** *magā-kācam,* பெ.(n.) **மகா காயம்[2]** பார்க்க (வின்.); see *makā-kāyam.*

*[Skt. mahākāša > த. மகாகாசம்[2].]*

**மகாகாசம்[3]** *magā-kāšam,* பெ.(n.) 1. ஒரு வகைக் காசநோய்; a kind of virulent asthma or bronchitis. 2. பரவெளி; atmosphere or ether (சா.அக.).

**மகாகாமி** *magā-kāmi,* பெ.(n.) 1. மிக்க காமங் கொண்டவன்; a lascivious person. 2. முத்திருக்கஞ்செவி என்னும் மூலிகை; a plant, which see (சா.அக.).

**த.வ. மாகாமி**

**மகாகாயம்[1]** *magā-kāyam,* பெ.(n.) 1. பெரிய உருவம் அல்லது யானை; elephant. 2. பருத்தவுடம்பு; a stout body (சா.அக.).

**த.வ. மாகாயம்**

**மகாகாயம்[2]** *magā-kāyam,* பெ.(n.) பெரு வெளி (இலக்.அக.); (Phil.) expanse of space, as unlimited, opp. to *kuṭākāyam.*

**த.வ. மாகாயம்**

*[Skt. mahā-kāša > த. மகாகாயம்[2].]*

**மகாகாயன்** *magā-kāyaṉ,* பெ.(n.) பனி மலையின் தெற்கு வாயில் காப்போன் (சங்.அக.); the guard at the Southern gate of mt. *kailāsa.*

**த.வ. மாகாயன்**

*[Skt. mahā-kāya > த. மகாகாயன்.]*

**மகாகாலங்கம்** *magā-kālaṅgam,* பெ.(n.) ஆதொண்டை என்னும் மூலிகை; a throng shrub (சா.அக.).

**மகாகாலம்** *magā-kālam,* பெ.(n.) 1. நெடுங் காலம்; a long time. 2. மாமரம்; mango tree. 3. குறட்டை என்னும் மூலிகை; korattay (சா.அக.).

**த.வ. மாக்காலம்**

**மகாகாலன்** *magā-kālaṉ,* பெ.(n.) உருத்திரன் (அபி.சிந்.); rudra, as the final destroyer.

*[Skt. mahā- > த. மகா+காலன்.]*

**மகாகாளமூர்த்தி** *magā-kāḷamūrtti,* பெ.(n.) **மகாகாலன்** பார்க்க (தக்கயாகப்.271, விசேடக்.); see *magākālaṉ.*

*[Skt. mahā-kāla > த. மகாகாளம்+மூர்த்தி.]*

**மகாகாளர்** *magā-kāḷar,* பெ.(n.) 1. **மகாகாலன்** (சங்.அக.) பார்க்க; see *magā-kālaṉ.* 2. மகாசாத்தாவின் வீரருள் தலைமை பெற்றவன்; a servant of *makā-cāttā.* *"மகாகாளர் வருபடலம்" (கந்தபு.).*

**த.வ. மாகாளர்**

*[Skt. mahā- > த. மகா+(காலன்) > காளர்.]*

**மகாகாளி**[1] *magākāḷi,* பெ.(n.) சத்திகளி லொருத்தி (தக்கயாகப்.107, உரை); a *śakti.*

**த.வ. மாகாளி**

*[Skt. mahā-> த. மகா+காளி.]*

**மகாகாளி**[2] *magā-kāḷi,* பெ.(n.) ஆட்டுச்செவி அல்லது ஆடு தின்னாப்பாலை என்னும் மூலிகை; a bitter prostate plant (சா.அக.).

*[Skt. mahā> த. காளி.]*

**மகாகாளிசரண்** *magākāḷi-śaraṇ,* பெ.(n.) களாவிழுது (தைலவ.தைல.119); the aerial root of *kalā* plant.

**மகாகாளை** *makā-kāḷai,* பெ.(n.) ஒன்பான் செல்வங் (நிதி) களிலொன்று (அபி.சிந்.940); one of *nava-niti.*

*[Skt. mahā-kālā > த. மகாகாளை.]*

**மகாகிதி** *magā-kidi,* பெ.(n.) கோடிகோடா கோடி (த.நி.போ.பக்.25); a great number, one thousand trillions.

**மகாகிரிவம்** *magā-kirivam,* பெ.(n.) ஒட்டகம் (யாழ்.அக.); camel.

*[Skt. mahā-griva > த. மகாகிரிவம்.]*

**மகாகிருதம்** *magā-girudam,* பெ.(n.) தூய்மை செய்த வெண்ணெய்; fresh clarified butter (சா.அக.).

**மகாகீரிவம்** *magā-kirivam,* பெ.(n.) 1. ஒட்டகம்; camel. 2. நீண்ட கழுத்து; long neck (சா.அக.).

**த.வ. ஒட்டகம்**

**மகாகுட்டம்** *magā-kuṭṭam,* பெ.(n.) பெருநோய்; leprosy (சா.அக.).

**த.வ. பெருங்குட்டம்**

**மகாகுண்டலினி** *magā-kuṇḍaliṉi,* பெ.(n.); மூலாதாரத்திலுள்ள பாம்பின் வடிவமைந்த ஒரு ஆற்றல் (பிரபோத.44,20); the cosmic energy in the form of serpent, abiding in the *mūlādhāra.*

**மகாகுணபாடம்** *magā-guṇapāḍam,* பெ.(n.) தேரையர் செய்த ஒரு தமிழ் மருத்துவ நூல்; a Tamil medical science (சா.அக.).

**த.வ. மாகுணபாடம்**

**மகாகும்பம்** *magā-kumbam,* பெ.(n.) நூறாயிரங் கோடி (திவா.); a great number, billion.

**த.வ. மாகும்பம்**

*[Skt. mahā-kumbha > த. மகாகும்பம்.]*

**மகாகும்பாவம்** *magā-kumbāvam,* பெ.(n.) 1. குமிள் அல்லது குமிழ்; Kashmere tree. 2. மேகாதிவாதம், கபம், கிரகணி, பாண்டு இவற்றை நீக்கும் ஒரு மூலிகை; it is useful for anaemia, diarrhoea (chronic) rheumatism etc. (சா.அக.).

**மகாகும்பி** *magā-kumbi,* பெ.(n.) சாம்பற் பூசணி (மலை.); ash-gourd.

மறுவ. பெரும்பூசணி, மாகும்பி

**மகாகுமரி** *magā-kumari,* பெ.(n.) குங்குமச் செவ்வந்தி; a big variety of red chamomile (சா.அக.).

**த.வ. மாகுமரி**

**மகாகுழம்பு** *magā-kuḻambu,* பெ.(n.) அகத்தியர் பெருங்குழம்பு என்னும் மெழுகு

வடிவிலான மருந்து வகை; a wax like medicine (சா.அக.).

த.வ. மாக்குழம்பு

**மகாகெசம்** *magā-kešam,* பெ.(n.) மாந்தர் கைக்கு நூறுமுழங்கொண்ட அளவு (த.நி. போ.); hundred cubits.

*[Skt. mahā-gaja > த. மகாகெசம்.]*

**மகாகெந்தம்** *magā-kendam,* பெ.(n.) சீதேவி செங்கழுநீர் என்னும் மூலிகை; a kind of herb (சா.அக.).

*[மகா+கந்தம்→கெந்தம்.]*

**மகாகெந்தா** *magā-kendā,* பெ.(n.) கறுப்புக் கடலை; a black gram (சா.அக.).

*[மகா + கெந்தா.]*

**மகாகைலாயம்** *magā-kailāyam,* பெ.(n.) சிவபெருமான்(பிரான்) வீற்றிருக்கும் மலை; the great *kailāsa*, abode of Sivan.

*[Skt. mahā-kailāsa > த. மகாகைலாயம்.]*

**மகாகோடாசுழிமாத்திரை** *magākōḍā-šuḻimāttirai,* பெ.(n.) மாலைக்கண் காமாலை, சோகை, நச்சுக் குற்றம், விப்புருதி, பீலிகை, காசம், புண் முதலியவற்றைக் குணமாக்கும். தாளகம், வீரம், கவுரி, லிங்கம், பாடாணம், சூதம், கெந்தி, துரிசு, வெண்காரம், அன்ன பேதி, பால்துத்தம், மனோசிலை, செப்புத் தொட்டி, படிகாரம், வாளம், இவற்றைத் தூய்மை செய்து கடைச் சரக்குகளுடன் சேர்த்து அணியம் செய்து சித்த நூலிற் கண்ட அளவுப்படி கொடுக்கும் மாத்திரை; a pill containing the above drugs which is used for jaundice, dropsy, bronchitis diseases of spleen, night blindness etc. (சா.அக.).

*[Skt. mahā> த. கோடாசுழி+மாத்திரை]*

**மகாகோடி** *magā-kōḍi,* பெ.(n.) ஒரு பேரெண் (நாமதீப.80, உரை.); a great number.

த.வ. மாகோடி

*[மகா+கோடி.]*

*[Skt. mahā-kōṭi > த. மகாகோடி.]*

**மகாகோணி** *magā-kōṇi,* பெ.(n.) இலக்கங் கோடா கோடி (யாழ்.அக.); a great number, ten trillions.

த.வ. மாகோணி

*[Skt. mahā-kṣōṇi > த. மகாகோணி.]*

**மகாகோரம்** *magā-kōram,* பெ.(n.) 1. நிரய (நரக) வகை (வின்.); a hell. 2. கண்ணால் பார்க்க முடியாத வன்கொடுமை (உ.வ.); atrociousness, awfulness.

*[Skt. mahā-ghōra > த. மகாகோரம்.]*

**மகாகோளி**[1] *magākōḷi,* பெ.(n.) கற்க மருந்து வகை; a medicinal drug. *வாலுகம் மகாகோளி மகிழும்" (தைலவ.தைல.77).*

**மகாகோளி**[2] *magākōḷi,* பெ.(n.) அறியப்படாத ஒருவகை மூலிகை; unidentified plant (சா.அக.).

த.வ. மாகோளி

**மகாகோசம்** *magā-kōsam,* பெ.(n.) பேரொலி (சங்.அக.); great tumult or noise.

த.வ. பெருங்கூச்சல், பெருங்கூவல்

*[Skt. mahā-ghōsa > த. மகாகோசம்.]*

**மகாகோசா** *magā-kōšā,* பெ.(n.) மாமரக் குடும்பத்தைச் சேர்ந்த பிசிடேசியா இண்டகிரி மாமரத்தில் தோன்றும் கொம்பு போன்ற புது வளர்ச்சியான கற்கடகசிங்கி; a growth like the claws of crab seen on the leaves. petioles of pistacia integerrima; galls of pistacia integerrima (சா.அக.).

த.வ. மாகோசா

**மகாங்கம்** *magāṅgam,* பெ.(n.) ஒட்டகம் (யாழ்.அக.); camel.

*[Skt. mahāṅga > த. மகாங்கம்.]*

**மகாச்சாயம்** *magā-c-cāyam,* பெ.(n.) ஆல்; banyan.

*[Skt. mahā-chāya > த. மகாச்சாயம்.]*

**மகாச்சுவாலம்** *magā-c-cuvālam,* பெ.(n.) வேள்வித் தீ வகை (யாழ்.அக.); a sacrificial fire.

**த.வ. பேரொளிப்பிழம்பு**

*[Skt. mahā-jvāla > த. மகாச்சுவாலம்.]*

**மகாசக்தி** *magā-šakti,* பெ.(n.) 1. சிவசத்தி; *šakti*, the female energy of God *šivan*. 2. குமாரக் கடவுள் (யாழ்.அக.); Skanda.

**த.வ. மாசத்தி, பெருஞ்சத்தி.**

*[Skt. mahā-šakti > த. மகாசக்தி.]*

**மகாசகா**[1] *magā-šakā,* பெ.(n.) 1. வாடா மல்லிகை (மலை.); bachelor's buttons. 2. மறு தோன்றிமரம்; a tree yielding unfading flowers.

*[Skt. mahā-sahā > த. மகாசகா.]*

**மகாசகை** *magāšagai,* பெ.(n.) **மகாசகா** (வின்.) பார்க்க; see *magā-cagā.*

**மகாசங்கம்**[1] *magā-šangam,* பெ.(n.) மாநாடு (வின்.); great council of a nation.

**த.வ. பெருமன்றம், மாநாடு**

*[Skt. mahā-sangha> த. மகாசங்கம்.]*

**மகாசங்கம்**[2] *magā-šangam,* பெ.(n.) 1. ஆயிரம் கோடாகோடி (பிங்.) (த.நி.போ.25); a great number, hundred thousand billions. 2. குபேரன் செல்வத்துளொன்று (பிங்.); a treasure of *kubēra.* 3. நெற்றி (யாழ்.அக.); forehead. 4. மாந்தவெலும்பு வகை (யாழ். அக.); a human bone.

*[Skt. mahā-šanga > த.மகாசங்கம்.]*

**மகாசங்கம்**[3] *magāšangam,* பெ.(n.) 1. எலும்பு; bone. 2. நெற்றி; fore head (சா.அக.).

**மகாசங்காரம்** *magāsangāram,* பெ.(n.) ஊழி முடிவு; the final dissolution of the universe.

**த.வ. ஊழிமுடிவு**

*[Skt. mahā-samhāra > த. மகாசங்காரம்.]*

**மகாசங்கை** *magā-sangai,* பெ.(n.) சங்கை பதின்மடங்கு கொண்டது (சங்.அக.); a great number, consisting of ten *šangai.*

**த.வ. மாசங்கை**

*[Skt. mahā-canda > த. மகாசங்கை.]*

**மகாசண்டம்** *magā-šandam,* பெ.(n.) நிரய (நரக) வகை (சிவதரு. சுவர்க்கநரக.708); a hell.

*[Skt. mahā-canda > த. மகாசண்டம்.]*

**மகாசண்டன்** *magā-šandan,* பெ.(n.) எமனது ஏவலாளரில் ஒருவன்; a servant of Yama. *"ஓத நமனுற்ற மகாசண்டன்" (சிவதரு. சுவர்க்கநரக.101).*

*[Skt. mahā-canda > த. மகாசண்டன்.]*

**மகாசதாசிவன்** *magāšatāšivan,* பெ.(n.) இருபத்தைந்து திருமுகத்தையுடையவனாயும் சதாசிவமூர்த்திக்கு மேற்பட்டவனாயுமுள்ள சிவத்திருமேனி(அபி.சிந்.); (šaiva)manifestation of šivan.

**த.வ. மாசதாசிவன்**

*[Skt. mahā-sadā-šiva > த. மகாசதா சிவன்.]*

**மகாசதிக்கல்** *magā-satikkal,* பெ.(n.) உடன் கட்டையேறிய கற்புடையாட்டியின் நினைவாக அவளுடைய வடிவம் பொறித்த சிலை; stone in memory of a chaste woman who immolates herself on the funeral pyre of her deceased husband.

*[Skt. mahā-satī > த. மகாசதி+கல்.]*

சதி என்னும் வடசொல் மனைவி எனப் பொருள்படும். உடன்கட்டை ஏறியதால் வணங்கத் தக்க பெருமையுடையவளாகக் கருதப்பட்டதால் மகாசதிக்கல் எனும் கற்சிலை நாட்டப்பட்டது.

**மகாசப்தமி** *maha-šaptami,* பெ.(n.) இரத சப்தமி (பஞ்.); the seventh day in the bright fortnight of the lunar month of *mākam.*

*[Skt. mahā > த. மகாசப்தமி.]*

**மகாசபை** *magā-šabai,* பெ.(n.) ஊர்ப் பொதுக் காரியங்களை ஆளுவம் செய்யும் அதிகார அவை (S.I.I.i, 60, 69); great assembly for the administration of public affairs.

**த.வ.** மாமன்றம்

*[Skt. mahat +> த. மகாசபை.]*

**மகாசம்பு** *magā-šambu,* பெ.(n.) பெருநாவல்; a tree yielding a large variety of jambo fruits (சா.அக.).

*[மகா+சம்பு.]*

**மகாசம்மோகனம்** *magā-cammōgaṉam,* பெ.(n.) விழித்திருப்பவர்களை மெய்ம்மறந்து உறக்கம் கொள்ளச் செய்யும் மந்திர வகை (சங்.அக.); a mantra used to induce sound sleep in others.

*[Skt. mahā-sam-mōhana > த. மகாசம் மோகனம்.]*

**மகாசமுத்திரம்** *magā-šamuttiram,* பெ.(n.) 1. பெருங்கடல் (தக்கயாகப்.140, உரை); ocean. 2. ஒரு பேரெண் (நாமதீப.800, உரை); a great number, as a hundred.

*[மகா+சமுத்திரம்.]*

*[Skt. mahat > த. மகா+சமுத்திரம்.]*

**மகாசயம்**[1] *magāšayam,* பெ.(n.) பெருங்கடல் (யாழ்.அக.); ocean.

*[Skt. mahā-šaya > த. மகாசயம்.]*

**மகாசயம்**[2] *magā-šayam,* பெ.(n.) கொடிய ஈளைநோய்; advanced consumption.

**மகாசயன்** *magā-šayaṉ,* பெ.(n.) பெருமகன் (யாழ்.அக.); lord, noble.

**த.வ.** பெருமான்.

*[Skt. mahāšaya > த. மகாசயன்.]*

**மகாசலம்** *magā-šalam,* பெ.(n.) புண்ணிய நீர் (தக்கயாகப்.247, உரை); sacred water.

**த.வ.** மாசலம்.

*[Skt. mahā-jala > த. மகாசலம்.]*

**மகாசனசுரோத்திரியம்** *magācaṉa-curōttiriyam,* பெ.(n.) சிற்றூரில் பொது மக்களுக்காகத் தள்ளுபடி செய்த வரி (G.Tn.D.I.311); a partial remission of assessment in a village on account of occupation.

*[Skt. mahā-jana > த. மகாசன சுரோத்திரியம்.]*

**மகாசனி** *magā-šaṉi,* பெ.(n.) வாலுளுவை யரிசி; seed of intellect tree -Celastrus paniculata (சா.அக.).

**மகாசாகரம்** *magā-šāgaram,* பெ.(n.) சாகரம் பதினெட்டுக்கொண்ட பேரெண் (த.நி.போ.பக்.25); a great number consisting of 18 *sākaram.*

*[Skt. mahā-sāgara > த. மகாசாகரம்.]*

**மகாசாகை** *magā-šāgai,* பெ.(n.) மரத்தின் பெருங்கிளை (S.I.I.ii, 201); main branch of a tree.

*[Skt. mahā-šākhā > த. மகாசாகை.]*

**மகாசாத்தா** *magā-šāttā,* பெ.(n.) ஐயனார் (கந்தபு.மகாசாத்.); *Aiyaṉār,* nom. sing. of *mahā-šāstr.*

*[Skt. mahā-šāsta > த. மகாசாத்தா.]*

**மகாசாத்திரன்** *magā-šāttiraṉ,* பெ.(n.) 1. சமயங்களின் மூலநூல்களைப் பயின்றவன்; one who is versed in the basic texts of the various systems of religion. 2. ஐயனார் (சிலப்.9, 15, உரை) பார்க்க; see *aiyaṉār.*

*[Skt. mahā-šāstra > த. மகாசாத்திரன்.]*

**மகாசாந்தபனம்** *magā-šāntapaṉam,* பெ.(n.) முதனாள் கோசலமும், இரண்டாம் நாள் கோமயமும், மூன்றாம் நாள் பாலும், நாலாம் நாள் தயிரும், ஐந்தாம் நாள் நெய்யும், ஆறாம் நாள் தருப்பை நீரும் உண்டு நோற்கும் ஒரு நோன்பு (சங்.அக.); a fast in which the

six articles, viz., cow's urine, cow-dung, milk, curds, ghee and water consecrated with quitch grass, are taken, one on each of six consecutive days.

*[Skt. mahā-sāntapana > த. மகா சாந்தபனம்]*

**மகாசாமந்தன்** *magā-šāmandaṉ,* பெ.(n.) பெரும்படைத்தலைவன்; generalissimo; vassel chief. *"மகா சாமந்தாதிபதி சிக்க வீரபத்திர நாயகர்" (I.M.P.Sm.103).*

**த.வ. மாசாமந்தன்.**

*[Skt. mahā-sāmanta > த. மகாசாமந்தன்.]*

**மகாசாயம்** *magā-šāyam,* பெ.(n.) ஆலமரம்; banyan tree (சா.அக.).

**மகாசாரக்கந்தம்** *magāšārakkandam,* பெ.(n.) பேரீச்சு; date wild variety (சா.அக.).

**மகாசாரம்** *magāšāram,* பெ.(n.) சிறு விடுகொள்; horsegram, a shrub. (சா.அக.).

**மகாசாலி**[1] *magā-cāli,* பெ.(n.) பெரும்பீர்க்கு (சங்.அக.); a kind of spongegourd.

**த.வ. மாசாலி.**

**மகாசாலி**[2] *magā-šāli,* பெ.(n.) 1. சிவப்பு நெல்; red paddy. 2. வெள்ளையரிசி; white rice. 3. கோதுமை; wheat (சா.அக.).

**த.வ. மாசாலி.**

**மகாசாலினி** *magāšāliṉi,* பெ.(n.) தின்பீர்க்கு; a climber (சா.அக.).

**த.வ. மாசாலினி.**

**மகாசிங்கி** *magā-ciṅgi,* பெ.(n.) கருஉயிர்நீர் (சங்.அக.); semen virile.

**த.வ. மாசிங்கி.**

**மகாசிங்கிச்சுண்ணம்** *magā-šiṅgi-c-cuṉṉam,* பெ.(n.) துருசுச் சுண்ணம்; calcined white powder of copper sulphate (சா.அக.).

**மகாசித்தன்** *magā-šittaṉ,* பெ.(n.) பனி மலையின் (கைலாசத்தின்) கீழைவாயில் காப்போன் (அபி.சிங்.); guard at the eastern gate of *Kailāsa.*

*[Skt. mahā-siddha > த. மகாசித்தன்.]*

**மகாசித்திரசயானம்** *magā-šittira-šayāṉam,* பெ.(n.) தாளிப்பனை; talipot palm (சா.அக.).

**மகாசிந்தாதிலேகியம்** *magā-šindādi-lēgiyam,* பெ.(n.) (அகத்தியர்வல்லாதி–600–ல்) கூறப்பட்டுள்ள தீராத பாண்டு காமாலை, சோகை ஆகியவற்றிற்குக் கொடுக்கும் ஒரு வகை இளகியம்; an electuary preparation as in Agastiar Vallathi 600. It is useful in jaundice, dropsy, anaemia etc. (சா.அக.).

**மகாசிராவி** *magā-širāvi,* பெ.(n.) கோவைக் கொடி; a climbing plant (சா.அக.).

**மகாசிரோட்டம்** *magāširōṭṭam,* பெ.(n.) கடுங்கழிச்சல்; chronic diarrhoea (சா.அக.).

**மகாசிவராத்திரி** *magā-šivarāttiri,* பெ.(n.) கும்ப (மாசி) மாதத்துக் கரும்பக்கத்துப் (கிருட்ணபட்சத்து) பதினான்மியும் முக்கோல் (திருவோணம்) நாண்மீனும் கூடிய இரவு; the night of the dark fortnight in the month of *māci,* sacred to Siva, when the 14th tithi and *šravana*-are current.

**த.வ. மாசிவனிரவு.**

*[Skt. mahat > த. மகா+சிவராத்திரி.]*

**மகாசீனம்** *magā-šiṉam,* பெ.(n.) சீனதேசம் (வின்.); China proper.

*[Skt. mahat > த. மகா+சீனம்.]*

**மகாசுக்கம்** *magāšukkam,* பெ.(n.) **மகாகசா** பார்க்க; see *magākaša* (சா.அக.).

**மகாசுகந்தரசம்** *magā-šugandarašam,* பெ.(n.) **இருசுவசற்பாட்சி** பார்க்க; see *irušuvašaṟpāṭci* (சா.அக.).

**த.வ. மாசுகந்தரசம்.**

**மகாசுகம்** *magā-cugam,* பெ.(n.) புணர்ச்சி, மகிழ்வு (யாழ்.அக.); sexual intercourse.

*[Skt. mahā-sukha > த. மகாசுகம்.]*

**மகாசுராங்கிசக்குளிகை** *magāurāṅgiša-k-kuḷigai,* பெ.(n.)நாட்காய்ச்சல் இருமுறைக் காய்ச்சல், மும்முறைக் காய்ச்சல், நால்முறைக் காய்ச்சல் மற்றும் அனைத்துக் காய்ச்சலுக்குக் கொடுக்கும் ரசம், கெந்தி, ஊமத்தம் விதை, திரிகடுகு சமன்கொண்டு எலுமிச்சம் பழச் சாற்றினால் அரைத்துருட்டிய மாத்திரை; ; a mediated pill prepared with mercury, sulphur, etc. for fevers (சா.அக.).

**மகாசுவாசரோகம்** *magā-šuvāša-rōgam,* பெ.(n.) மூச்சு நோய் வகையுள் ஒன்று (சீவரட்.58); a disease affecting respiration.

*[Skt. mahā-švāsa-rōga > த. மகாசுவாச ரோகம்.]*

**மகாசுவாசம்** *magā-šuvāšam,* பெ.(n.) கண்டத்தில் கலகல வென்ற ஓசையுடன் விடும் பெரும் மூச்சு; a disease in which the patient breaths heavily lying unconcious, and a low rattling sound in the throat, eyes fixed in gaze and with cramps at his sides (சா.அக.).

**மகாசுவாலை** *magā-šuvālai,* பெ.(n.) விலைமகளிர் அடையும் நிரயவகை (அபி.சிந்.); a hell for unchaste women.

*[Skt. mahā-jvālā > த. மகாசுவாலை.]*

**மகாசுவேதம்[1]** *magā-šuvēdam,* பெ.(n.) வாலுளுவை (மலை.); climbing staff plant.

*[Skt. mahā-švētā > த். மகாசுவேதம்'.]*

**மகாசுவேதம்[2]** *magāšuvēdam,* பெ.(n.) சிறு வாலுளுவை; intellect plant (சா.அக.).

**மகாசுவேதை** *magāšuvēdai,* பெ.(n.) கலைமகள் (யாழ்.அக.); goddess of learning.

*[Skt. mahā-švētā > த. மகாசுவேதை.]*

**மகாசூசிகை** *magā-šūšigai,* பெ.(n.) பெரியம்மை (தஞ்.சர.iii, 68); small-pox.

*[Skt. mahā+ > த. மகாசூசிகை.]*

**மகாசூத்திரன்** *magā-šūttiran,* பெ.(n.) இடையன் (யாழ்.அக.); cow-herd.

*[Skt. mahā-šūdra > த. மகாசூத்திரன்.]*

**மகாசூதம்** *magā-cūdam,* பெ.(n.) போர்ப் பறை (யாழ்.அக.); war-drum.

*[Skt. mahā-sūta > த. மகாசூதம்.]*

**மகாசூரன்** *magā-šūran,* பெ.(n.) 1. பெரு வீரன்; a great warrior. 2. திறமை மிகுந்தவன்; very able man.

*[Skt. mahā-šūra > த. மகாசூரன்.]*

**மகாசூலை** *magāšūlai,* பெ.(n.) மூட்டு வலி நோய் வகை; rheumatism (சா.அக.).

**மகாசேனன்** *magā-cēnan,* பெ.(n.) 1. படைத் தலைவன் (யாழ்.அக.); generalissimo, commander of a large force. 2. படைத் தளபதியான குமாரக் கடவுள்; skandha, as the general of celestual forces. 3. அருகன்; arhat. 4. புத்தன்; the Buddha.

*[Skt. mahā-sēna > த. மகாசேனன்.]*

**மகாசைவம்** *magā-caivam,* பெ.(n.) சிவ னியம் பதினாறனுள் திருநீறு, அக்கமணி பூண்டு சடைவளர்த்துச் சிவனைச் சமகுண னாகவும் குணமிலியாகவும் எண்ணி வழிபாடு செய்ய வேண்டுமெனக் கூறுஞ் சமயம்; *(šaiva.)*a *šaiva* sect which holds that the initiate should wear holy ashes, rudrak beads and matted hair, and meditate on *šiva*, in his conditioned and unconditioned forms one 16 Saivam, q.v.

த.வ. மாசிவனியம்.

*[Skt. mahā-šaiva > த. மகாசைவம்.]*

**மகாசைவன்** *magā-caivan,* பெ.(n.) சிவ தீக்கை பெற்ற பார்ப்பனன் (சைவச.பொது. 475); *(šaiva)*brahmin who has been initiated.

*[Skt. mahā-šaiva > த. மகாசைவன்.]*

**மகாசோபம்** *magā-cōpam,* பெ.(n.) நூறு கோடி, கோடாகோடி (த.நி.பேர்.பக்.25); a great number, hundred thousand trillions.

*[Skt. mahā-ksōbhya > த. மகாசோபம்.]*

**மகாத்திரம்** *magāttiram,* பெ.(n.) தேக்கு; teak - *Tectona grandis* (சா.அக.).

**மகாத்தியாகம்** *magāttiyāgam,* பெ.(n.) பெருந்துறவு; complete renunciation of the world.

*[Skt. mahā-tyāga > த. மகாத்தியாயகம்.]*

**மகாத்துமா** *magāttumā,* பெ.(n.) பேராதன் (மிகு முது முனிவர்); highly spiritual person; exceedingly wise man; lofty soul.

*[Skt. mahātmā > த. மகாத்துமா.]*

**மகாத்மியம்** *magātmiyam,* பெ.(n.) **மாகாத்மியம்** (த.நி.போ.பக்.247) பார்க்க; see *māgātmiyam.*

*[Skt. māhāt-mya > த. மகாத்மியம்.]*

**மகாதசம்** *magātaśam,* பெ.(n.) மாவிலிங்கம்; a tree - *crataeva religiosa* (சா.அக.).

**மகாதசை** *magā-daśai,* பெ.(n.) பிறப்பியக் காரருக்கு ஒரு கோளின் நடப்புக்காலம்; (Astrol.) period of influence of a planet with reference to the natal house in a horoscope.

*[Skt. mahā+daśa > த. மகாதசை.]*

**மகாதண்பனை** *magādaṉpaṉai,* பெ.(n.) ஒரு பேரெண் (நாமதீப.801); a great number.

*[Skt. mahat > த. மகா+தண்பனை.]*

**மகாதந்தம்** *magātandam,* பெ.(n.) 1. யானை (யாழ்.அக.); elephant. 2. யானைக் கொம்பு; tusk of an elephant.

*[Skt. mahā-danta > த. மகாதந்தம்.]*

**மகாதமனி** *magātamaṉi,* பெ.(n.) நெஞ்சாங் குலையின் இடது பக்கத்தினின்று கிளம்பும் ஒரு பெரிய செவ்விரத்தக் குழல்; a large artery starting from the left ventricle of the heart-Aorta (சா.அக.).

**மகாதலம்**[1] *magā-talam,* பெ.(n.) 1. நிலவுலகம் (பிங்.); the earth. 2. அரிதாரம் (சங்.அக.); yellow orpiment.

*[Skt. mahā-sthalī > த. மகாதலம்¹.]*

**மகாதலம்**[2] *magātalam,* பெ.(n.) கீழேழுலகத் தொன்று (சூடா.); a nether world, fifth of *kīḻ-ēḻ-ulagam.*

**த.வ. பேரிடம்.**

*[Skt. mahātala > த. மகாதலம்².]*

**மகாதலம்**[3] *magātalam,* பெ.(n.) 1. புண்ணியத் தலம்; sacred place. 2. முதன்மைத் தலம் (வின்.); head quarters; chief place; court.

*[Skt. mahā-sthala > த. மகாதலம்³.]*

**மகாதலம்**[4] *magātalam,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment (சா.அக.).

**மகாதனம்** *magā-daṉam,* பெ.(n.) 1. பொன்; gold. 2. வேளாண்மை; agriculture. 3. நறுமணப்புகை; incense.

*[Skt. mahā-dhana > த. மகாதனம்.]*

**மகாதாது** *magā-tādu,* பெ.(n.) பொன் (யாழ்.அக.); gold.

*[Skt. mahā-dhātu > த. மகாதாது.]*

**மகாதானம்**[1] *magātāṉam,* பெ.(n.) மன்னவராற் செய்யப்படும் கொடை வகை (த.நி.போ.பக்.25); a kind of gift made by kings.

**த.வ. பெருங்கொடை.**

*[Skt. mahā > த. மகா+தானம்¹.]*

**மகாதானம்**[2] *magātāṉam,* பெ.(n.) பெரிய கொட்டை; a big seed (சா.அக.).

**மகாதிக்தம்** *magātikdam,* பெ.(n.) மருந் தூட்டப்பட்ட கசப்புச் சுவையுடைய நெய்; abitter medicated ghee given for skin

diseases. It is a Ayurvedic preparation (சா.அக.).

**மகாதி** *magāti,* பெ.(n.) திப்பிலி; long pepper plant (சா.அக.).

**மகாதிசை**[1] *magā-disai,* பெ.(n.) நாற்பெருந் திசை; the four cardinal points.

த.வ. மாத்திசை.

*[Skt. mahat > த. மகா+திசை[1].]*

**மகாதிசை**[2] *magā-tišai,* பெ.(n.) **மகாதசை** பார்க்க; see *magā-tasai.*

*[Skt. mahā+dašā > த. மகாதிசை[2].]*

**மகாதிம்பம்**[1] *magā-timbam,* பெ.(n.) **மகாநிம்பம்**[2], **1** (சங்.அக.) பார்க்க; see *maganimbam.*

**மகாதிம்பம்**[2] *magā-timbam,* பெ.(n.) பெரு மரம்; a tree (சா.அக.).

**மகாதிரகிருதம்** *magādirakirudam,* பெ.(n.) குட்ட நோய் வகைகள் எல்லாவற்றிற்கும் தரப்படும் ஒரு வகை மருந்து நெய்மம்; a medicinal ghee used for all kinds of leprosy (சா.அக.).

**மகாதிராவகம்** *magātirāvagam,* பெ.(n.) ஆயுள்வேத முறைப்படி சித்திர மூலவேர், நாயுருவி, புளியம்பட்டை, இலைக்கள்ளி, பிரம்பு, மூக்கிரட்டை, முதலியவற்றைச் சுட்டுச் சாம்பலாக்கி மற்ற கடைச் சரக்குகளுடன் சேர்த்து வாலையிலிட்டு வடிக்கும் எரிநீர்; an ayurvedic preparation obtained by distilling the ashes of some plants along with some bazaar drugs (சா.அக.).

**மகாதிலதம்** *magātiladam,* பெ.(n.) சாரிபாதி; கோட்டியை(பைத்தியத்தை) ப் போக்கும் ஒரு மூலிகை; an unidentified plant said to cure madness or insanity. (சா.அக.).

**மகாதிவ்விய** *magādivviya,* பெ.(n.) மருந்து கலக்கப்பட்ட மெழுகு வகை; a wax like medicinal preparation (சா.அக.).

**மகாதீவு** *magā-tivu,* பெ.(n.) மாலத் தீவுகள் (வின்.); the maldives.

*[Skt. mahat > த. மகா+தீவு.]*

**மகாதுந்துமி** *magā-tundumi,* பெ.(n.) போர்ப்பறை (யாழ்.அக.); war-drum.

த.வ. பெருந்துந்தூமி.

*[Skt. mahat > த. மகா+துந்துமி.]*

**மகாதுருவம்** *magāturuvam,* பெ.(n.) வெண்கடம்பு; white cadamba (சா.அக.).

**மகாதேசம்** *magā-tēšam,* பெ.(n.) இதளியம் (பாதரசம்) (மூ.அ.); mercury.

*[Skt. mahā-tējas > த. மகாதேசம்.]*

**மகாதேவர்திருமஞ்சனம்** *magātēvar-tirumañjanam,* பெ.(n.) வடமுனைத்தீ (வடவாமுகாக்கினி) (தக்கயாகப்.379, உரை); the submarine fire.

*[Skt. mahādavar > த. மகாதேவர் + திரு மஞ்சனம்.]*

**மகாதேவன்** *magā-dēvan,* பெ.(n.) **1.** கடவுள்; god. **2.** சிவபெருமான் (பிரான்); *Śivan*, as the great God. **3.** வருணன் (வின்.); *Varuna.*

த.வ. மாதேவன், பெருவுடையார்.

*[Skt. mahā-dēva > த. மகாதேவன்.]*

**மகாதேவி**[1] *magā-dēvi,* பெ.(n.) **1.** மலைமகள் (பார்வதி) (தக்கயாகப்.80, உரை); *pārvati,* as the consort of *Śiva.* **2.** தலைமையரசி; chief queen. *"வாணாதி ராசர் மகாதேவியார்" (S.I.I.iii, 399).*

*[Skt. mahā-dēvi > த. மகாதேவி.]*

**மகாதேவி**[2] *magādēvi,* பெ.(n.) வையங் காப்பவளாகிய மலைமகள்; the geat mother (சா.அக.).

**மகாதோசக்குறி** *magā-dōšakkuri,* பெ.(n.) உந்தியில் ஒரு விரல் பொருந்தும் அளவு எக்கி உயர எழும்பினால் இத்தோசமாம்; a symptom or morid condition- தோஷம்.

**மகாதோசநீக்கி** *magātōšanikki,* பெ.(n.) 1. **சித்தா மல்லி, சிற்றாமல்லி** பார்க்க; see *sittāmalli, sirrāmalli.* 2. பாவட்டை; a small tree - *Pavata indica* (சா.அக.).

**மகாதோசம்** *magā-dōsam,* பெ.(n.) பாழ்வினை, பெரும்பாவம் (கொ.வ.); great sin.

*[Skt. mahā-dōsa > த. மகாதோசம்.]*

**மகாதோரணம்** *magā-tōranam,* பெ.(n.) கோயில் விளகு வகை (M.E.R., 608 of 1916); a kind of temple lamp.

*[Skt. mahāt > த. மகா+தோரணம்.]*

**மகாதோரை** *magā-tōrai,* பெ.(n.) ஒரு பேரெண் (யாழ்.அக.); a great number.

*[Skt. mahat > த. மகா+தோரை.]*

**மகாந்தம்** *magāndam,* பெ.(n.) மலர்த்துகள் (மகரந்தம்); pollen (சா.அக.).

**மகாநங்கை** *magā-nangai,* பெ.(n.) மிளகாய்; chilly (சா.அக.).

**மகாநட்சத்திரம்** *magānatcattiram,* பெ.(n.) குறித்த நாளில் நிலவொடு (சந்திரனுடன்) கூடியிருக்கும் விண்மீன் (நட்சத்திரம்) (இ.வ.); lunar asterism occupied by the moon on a particular day.

**த.வ. பெருவிண்மீன்**

*[Skt. mahat > த. மகாநட்சத்திரம்.]*

**மகாநடன்** *magā-nadan,* பெ.(n.) சிவ பெருமான் (பிரான்) (யாழ்.அக.); *Šivan,* as the great dancer.

**த.வ. மாநடன்**

*[Skt. mahā-nata > த. மகாநடன்.]*

**மகாநடனன்** *magā-nadanan,* பெ.(n.) **மகாநடன்** (சங்.அக.) பார்க்க; see *magā-nadan.*

*[Skt. mahā-natana > த. மகாநடனன்.]*

**மகாநதி** *magā-nadi,* பெ.(n.) 1. பேராறு; great river. 2. கங்கை (சங்.அக.); the Ganges. 3. மகாநதியென்னும் ஆறு (இக்.வ.); the river *mahānadi.*

*[Skt. mahā-nadi > த. மகாநதி.]*

**மகாநந்தை** *magānandai,* பெ.(n.) கள்; toddy (சா.அக.).

**த.வ. மாநந்தை**

**மகாநரகம்** *magā-naragam,* பெ.(n.) நிரய (நரக) வகை (யாழ்.அக.); a hell.

*[Skt. mahā-naraka > த. மகாநரகம்.]*

**மகாநவமி** *magā-navami,* பெ.(n.) கலைமகள் விழா நிகழும் ஒன்பான் இரவின் இறுதி நாள்; the last day of *navarāttiri,* as a day sacred for the worship of *Sarasvati.*

**த.வ. மாத்தொண்மி**

*[Skt. mahā+ > த. மகாநவமி.]*

**மகாநாகம்** *magā-nāgam,* பெ.(n.) 1. சுர புன்னை; long leaved two sepalled gamboge. 2. பெரும்பாம்பு; great cobra.

*[Skt. mahā-nāga > த. மகாநாகம்.]*

**மகாநாடு** *magā-nādu,* பெ.(n.) பொது மக்களின் கூட்டம்; great assembly or council held by headmen; general meeting of all the members of a society; conference.

**த.வ. மாநாடு**

*[Skt. mahat > த. மகா+நாடு.]*

**மகாநாதம்¹** *maga-nādam,* பெ.(n.) 1. சங்கு (யாழ்.அக.); conch. 2. பேரொலி; great noise. 3. இசைக் கருவி; a wind instrument. 4. அரிமா (சிங்கம்); lion. 5. யானை; elephant. 6. மேகம்; cloud.

**த.வ. மாநாதம்**

*[Skt. mahā-nāda > த. மகாநாதம்.]*

**மகாநாதம்²** *magānādam,* பெ.(n.) 1. பொன்; gold. 2. பொன்னிமிளை; a kind of yellow bismuth (சா.அக.).

*[மகா+நாதம்.]*

**மகாநாமியம்** *magā-nāmiyam,* பெ.(n.) மதத் தொடர்பான செயல் வகை (த.நி.போ.பக்.24); a religious observance.

*[Skt. mahā-nāmnika > த. மகாநாமியம்.]*

**மகாநாராயணம்** *magā-nārāyaṇam,*பெ.(n.) நூற்றெட்டு (உபநிடதங்கள்) துணைத் தொன் மங்களுள் ஒன்று; an upaṅisad, one of 108.

*[Skt. maha-nārāyaṇa > த. மகாநாராயணம்.]*

**மகாநாரி** *magānāri,* பெ.(n.) மகாநாகம் பார்க்க; see *magā-nāgam* (சா.அக.).

**மகாநாளிகம்** *magā-nāḷigam,* பெ.(n.) போரில் பயன்படும் இயந்திர வகை (சுக்கிரநீதி, 80); a kind of war-machine.

*[Skt. mahā-nālika > த. மகாநாளிகம்.]*

**மகாநிகற்பம்** *magā-nigaṟpam,* பெ.(n.) ஒரு பேரெண் (வின்.); a great number.

*[Skt. mahā-nikharva > த. மகாநிகற்பம்.]*

**மகாநிசி** *magā-niśi,* பெ.(n.) நள்ளிரவு (யாழ்.அக.); midnight.

*[Skt. mahā-niśi> த. மகாநிசி.]*

**மகாநித்திரை** *magā-nittirai,* பெ.(n.) பெருந் துயில் (மரணம்) (யாழ்.அக.); death, as the long sleep.

**த.வ. மீளாத்துயில்**

*[Skt. mahā-nidrā > த. மகாநித்திரை.]*

**மகாநிதி** *maga-nidi,* பெ.(n.) குபேரன் நிதி களிலொன்று (யாழ்.அக.); a treasure of *Kubēra.*

*[Skt. mahā-nidhi > த. மகாநிதி.]*

**மகாநிம்பம்**[1] *magā-nimbam,* பெ.(n.) மலைவேம்பு (மூ.அ.); Persian lilac.

**த.வ. மாநிம்பம்**

*[Skt. mahā-nimba > த. மகாநிம்பம்.]*

**மகாநிம்பம்**[2] *magā-nimbam,* பெ.(n.) 1. பூவரசு மரம்; portia tree. 2. பெரிய வேம்பு; big species of neem tree. 3. நூறாண்டு அகவையுடைய வேப்ப மரம்; a margosa tree of 100 years old. 4. சர்க்கரை வேம்பு; neem whose bark is sweet to taste (சா.அக.).

**மகாநிம்பம்**[3] *magā-nimbam,* பெ.(n.) பெரு மரம் (மலை.); toothed-leaved tree of Heaven.

**மகாநியோகம்** *maga-niyōgam,* பெ.(n.) அரசனது ஆணை; royal command. *"மகா நியோகமும் புறப்பட்டு" (S.I.I.iv, 152).*

**த.வ. அரசகட்டளை**

*[Skt. mahā+ yōga> த. மகாநியோகம்.]*

**மகாநிர்குண்டிதைலம்** *magānirkuṇḍi-tailam,* பெ.(n.) கண்ணோய், தலைநோய் ஆகியவற்றுக்குத் தலை முழுகும் நெய்மம்; a bathing oil prepared out of nocci vitex negundo (சா.அக.).

**மகாநிரயம்** *magā-nirayam,* பெ.(n.) நிரய வகை (மணிமே.6, 181, அரும்.); a hell.

**த.வ. மாவளறு.**

*[Skt. mahā-niraya > த. மகாநிரயம்.]*

**மகாநீலம்** *magā-nīlam,* பெ.(n.) 1. கையாந்த கரை, என்னும் மூலிகை (மலை.) ; a plant growing in wet places. 2. மரகதம் (யாழ்.அக.); emerald.

**த.வ. மாநீலம்.**

*[Skt. mahā-nīla > த. மகாநீலம்.]*

**மகாநேமி** *magānēmi,* பெ.(n.) காக்கை; crow (சா.அக.).

**மகாநைவேத்தியம்** *magā-naivēttiyam,* பெ.(n.) கடவுட்குப் படைக்கும் அன்னம்; main offerings made to a deity, as cooked rice.

*[Skt. mahā+naivēdya > த. மகாநைவேத்தியம்.]*

**மகாநோன்பு** *magā-nōṉbu,* பெ.(n.) ஒன்பானிராத் திருவிழா (இ.வ.); festival of *nava-rāttiri.*

த.வ. மாநோன்பு

*[Skt. mahat > த. மகா+நோன்பு.]*

**மகாப்பிரகாசத்தி** *magā-p-piragā-šatti,* பெ.(n.) காக்கைப்பொன் (அப்பிரகம்) (சங்.அக.); mica.

த.வ. தகட்டிழை

*[Skt. mahā+pra-kāša > த. மகாப்பிரகா+சத்தி]*

**மகாப்பிரசாதம்** *magā-p-piracādam,* பெ.(n.) கோயில்களில் கடவுளுக்குப் படைத்து அடியவர்களுக்கு கொடுக்கும் பொங்கல் முதலியன (இ.வ.); food, sweet meats, etc., which are offered to an idol and distributed afterwards to devotees.

த.வ. அருட்படையல்

*[Skt. mahā+pra-sāda > த. மகாப்பிரசாதம்]*

**மகாப்பிரதோசம்** *magā-p-piratōšam,* பெ.(n.) இரண்டு பக்கங்களிலும் வரும் பதின்மும்மியொடு (திரயோதசியோடு) கூடிய கதிரவன் மறையும் வேளை; evening twilight of the 13th titi of the bright and dark fortnights.

*[Skt. mahā-pradōsa > த. மகாப் பிரதோசம்]*

**மகாப்பிரபு** *magā-p-pirabu,* பெ.(n.) 1. பெருஞ் செல்வன்; great, lord; wealthy person. 2. பெருங்கொடையாளி; a person of great liberality.

*[Skt. mahatprabu > த. மகாப்பிரபு.]*

**மகாப்பிரளயம்** *magā-p-piraḷayam,* பெ.(n.) 1. உலகம் முடிகின்ற ஊழியிறுதி; final dissolution of the world at the end of a kalpa or the period of Brahma's lifetime, dist. fr. *avāntara-p-piraḷayam.* 2. ஒரு பேரெண் (வின்.); a great number.

த.வ. பேரூழி

*[Skt. mahā-pralaya > த. மகாப்பிரளயம்.]*

**மகாப்பிரத்தானம்** *magā-pirattāṉam,* பெ.(n.) 1. வடதிசை நோக்கிச் செல்லும் மீளாப் பெரும்பயணம்; the great journey northward, made with the intention of ending one's days. 'மகாப்பிரத்தான பருவம்' 2. அருகக் கடவுளின் பஞ்ச கல்யாணத் தொன்றாகிய பெருந்துறவு (திருநூற்.பு.உரை); (Jaina.) the great renunciation of Arhat, one of *pañca-kalyāṇam.*

த.வ. பெரும்பிரிவு.

*[Skt. mahā-prasthāna > த. மகாப் பிரத்தானம்]*

**மகாப்பிராசத்தி** *magā-prāšatti,* பெ.(n.) ஒரு வகை அப்பிரகம்; a kind of mica (சா.அக.).

**மகாப்பிராணம்** *magā-p-pirāṇam,* பெ.(n.) காக்கை (சங்.அக.); crow.

*[Skt. mahā-prāṇa > த. மகாப்பிராணம்.]*

**மகாப்பிரியபான்னி** *magā-p-piriyapāṉṉi,* பெ.(n.) சிறுவிடு கொள்; which see (சா.அக.).

**மகாப்பிராணன்** *magā-p-pirāṇaṉ,* பெ.(n.) வலிந்து பலுக்கப்படும் மெய்யெழுத்து (பி.வி.4, உரை); aspirate.

த.வ. மூச்சொலி.

*[Skt. mahā-prāṇa > த. மகாப்பிராணன்.]*

**மகாபஞ்சகாவியகிருதம்** *magāpañša-kaviya-kirudam,* பெ.(n.) மருந்தூட்டப் பெற்ற ஒரு வகை நெய்; a medicated ghee used for epilepsy, insanity dropsy, abdominal tumour, piles, chlorosis and jaundice (சா.அக.).

**மகாபஞ்சமூலம்** *magā-pañja-mūlam,* பெ.(n.) ஐந்து வகையான மரத்தின் வேர்ப் பட்டைகள் சேர்ந்த கூட்டு (வில்வம், முன்னை, ஈசுரமூலி, பாதிரி, பெருமரம்); the roots of the five trees or plants which see (சா.அக.).

**மகாபட்சி** *magā-patci,* பெ.(n.) ஆந்தை (சங்.அக.); owl.

த.வ. பெரும் பறவை.

*[Skt. mahā-paksin > த. மகாபட்சி.]*



**மகாபத்திர** *magāpattira,* பெ.(n.) பூசபத்திரி; a plant to help pooja (சா.அக.).

**மகாபத்திரம்**[1] *magā-pattiram,* பெ.(n.) பனைமரம் (சங்.அக.); palmyra tree.

*[Skt. mahā-patra > த. மகாபத்திரம்.]*

**மகாபத்திரம்**[2] *magā-pattiram,* பெ.(n.) 1. வில்வ இலை; leaf of bael tree.

**மகாபத்திரி** *magā-pattiri,* பெ.(n.) சிவப்பு ஆமணக்கு; red castor plant (சா.அக.).

**மகாபதுமபெந்தம்** *magāpatuma-pentam,* பெ.(n.) சித்திரக் கவி வகை (மாறனலங்.283, உரை); a kind of cittirakavi of great complexity.

*[Skt. mahā-padma > த. மகாபதும பெந்தம்.]*

**மகாபதுமம்** *magāpadumam,* பெ.(n.) 1. குபேரன் ஒன்பான் குவைகளுள் ஒன்று; one of nine treasures of *Kubēra.* 2. ஒரு பேரெண் (பிங்.); a great number. 3. வெண்டாமரை (யாழ்.அக.); white lotus. 4. 176 கொடுமுடிகளையும் 22 மேனிலைக் கட்டுகளையுமுடைய கோயில் (சுக்கிரநீதி. 230); a temple of 176 towards and 22 storeys. 5. **மகாபதுபெந்தம்** பார்க்க; see *magāpadupendam.*

த.வ. பெருந்தாமரை.

*[Skt. mahā-pandma > த. மகாபதுமம்.]*

**மகாபதுமன்** *magā-paduman,* பெ.(n.) எட்டு மாநாகங்களுள் நிலத்தை வடப்பக்கத்தில் தாங்கும் நாகம் (பிங்.); the divine serpent which supports the earth in the north one of *astamā-nākam.*

*[Skt. mahā-padma > த. மகாபதுமன்.]*

**மகாபதுமவிசர்ப்பி** *magāpaduma-višarpi,* பெ.(n.) சிறுவர்களுக்குத் தலையிலும் கீழ் வயிற்றிலுமுண்டாகி இறப்பையுண்டாக்கும் புண்; a kind of scabis (சா.அக.).

த.வ. பெரும்புண். (முதலில் நரம்பின் வழியாக நெற்றியில் கண்டு, பிறகு மார்பிலிறங்கி கடைசியாகக் குதத்திலிறங்கும்)

மறுவ. பாலவிசர்ப்பி

**மகாபரணி** *magā-parani,* பெ.(n.) தென் புலத்தார்க்குச் (பிதிரர்களுக்கு) சிறப்பானதும் மகாளயபக்கத்தில் வருவதுமான பரணி (விண்மீன்) (பஞ்.); the day of the second naksatra, in *makālaya-patcam,* auspicious for worshipping the manes.

த.வ. பெரும்பரணி.

*[Skt. mahā-bharani > த. மகாபரணி.]*

**மகாபலம்**[1] *magā-palam,* பெ.(n.) வில்வம்; bael.

*[Skt. mahā-phala > த. மகாபலம்.]*

**மகாபலம்**[2] *magā-palam,* பெ.(n.) மயிர் மாணிக்கம் என்னும் கொடி வகை; cypress-vine. (சா.அக.);

*[Skt. mahā+phala]*

**மகாபலம்³** *magā-palam,* பெ.(n.) 1. கொழிஞ்சி; orange tree. 2. பேராமுட்டி; pavonia odorata. 3. தென்னை; coconut tree. 4. கொம்மட்டி மாதுளை; a kind of citron. 5. தூதுவளை; a thorny shrub. 6. கொழுமிச்சை, ஒரு வகை நார்மரம்; இதன் பட்டியினின்று சணலைப் போன்ற நார் எடுக்கப்படும்; flax tree-sida rhomboides the bark yields a flax like fibre (சா.அக.).

*[Skt. mahā+phala]*

**மகாபலன்** *magāpalaṉ,* பெ.(n.) 1. வலு மிக்கவன்; strong person. 2. காற்று (வின்.); air, wind.

*[Skt. mahā-bala > த. மகாபலன்.]*

**மகாபலா** *magā-palā,* பெ.(n.) 1. பேராமுட்டி என்னும் மூலிகை; a plant-*pavonia adorata.* 2. வரித்தும்மட்டி என்னும் படர்கொடி; a creeper.

**மகாபலி** *magā-pali,* பெ.(n.) மாவலி என்னும் அரசன்; an Asura sovereign.

**த.வ. மாவலி.**

*[Skt. mahā-bali > த. மகாபலி.]*

**மகாபலிகம்** *magā-paligam,* பெ.(n.) வெள்ளைப் பூசணி; ash gourd (சா.அக.).

**மகாபலை** *magā-palai,* பெ.(n.) வில்வம் (தைலவ.தைல.); bael tree.

*[Skt. mahā-phala > த. மகாபலை.]*

**மகாபவன்** *magā-pavaṉ,* பெ.(n.) வெள்ளி (யாழ்.அக.); *cukkiraṉ.*

*[Skt. maghā-bhava > த. மகாபவன்.]*

**மகாபற்பம்** *magā-paṟpam,* பெ.(n.) **மகா பதுமம்,** (திவா.) பார்க்க; see *magā-padumam.*

**மகாபற்பன்** *magā-paṟpaṉ,* பெ.(n.) **மகாபதுமன்** பார்க்க; see *magā-padumaṉ.*

**மகாபாகவதம்** *magā-pāgavadam,* பெ.(n.) கி.பி. 1543-ல் நெல்லி நகர் வரதராச ஐயங்கார் வடமொழியினின்று தமிழ் மொழியிற் செய்யுளாக இயற்றிய பாகவத நூல்; a Tamil version of the Sanskrit Bhagavatam by Varadaraja Aiyanga of Nellinakar, 1543 A.D.

*[Skt. mahat+bhāgavata > த. மகாபாகவதம்.]*

**மகாபாகன்** *magā-pāgaṉ,* பெ.(n.) நற் பேறுள்ளவன்; blessed person. *"பண்டிதனும் மகாபாகனும் கிருதார்த்தனும்" (சி.சி.பு.84, சிவாக்.).*

*[Skt. mahā-bhāga > த. மகாபாகன்.]*

**மகாபாசகன்** *magā-pācakaṉ,* பெ.(n.) புத்தபிக்கு (யாழ்.அக.); a Bauddha mendicant.

**த.வ. மாபாசகன்.**

*[Skt. mahā-pāsaka > த. மகாபாசகன்.]*

**மகாபாதகம்** *magāpādagam,* பெ.(n.) ஐம்பெருங்கேடு (பஞ்சமா பாதகம்); the five heinous crimes. *"மகாபாதகந் தீர்த்த திருவிளையாடல்" (திருவாலவா.).*

*[Skt. mahā-pātaka > த. மகாபாதகம்.]*

**மகாபாபத்தழகி** *magā-pāpattaḻagi,* பெ.(n.) சீவகமூலி; which see (சா.அக.).

**மகாபாரதம்** *magā-pāratam,* பெ.(n.) 1. வடமொழியில் பாண்டவர் வரலாற்றைக் கூறும் வியாசபாரதம்; the great sanskrit epic, dealing with the story of the *pāṇḍavas,* by the sage *vyāsa.* 2. பெருந்தேவனார், வில்லிபுத்தூரர், நல்லாப் பிள்ளை போன்றோர் தமிழில் இயற்றிய பாரத நூல்கள்; the tamil renderings of the *Mahābhārata,* by *peruntēvaṉār, villiputtūrar* and N*allāppiḷḷai.*

**த.வ. மாபாரதம்.**

*[Skt. mahā-bhārata > த. மகாபாரதம்.]*

**மகாபாரதவிருத்தி** *magā-pārada-virutti,* பெ.(n.) கோயிலில் மகாபாரதம் படித்துச் சொற்பொழிவு செய்வதற்கு விடப்படும் மானியம் (I.m.p.Tn.91); allowance for expounding the *Mahābhārata* in a temple.

*[Skt. mahā-bhārata+vṛtti > த. மகாபாரத விருத்தி]*

**மகாபாரிசவாதம்** *magāpāriśa-vatham,* பெ.(n.) கையுங் காலும் ஒரு பக்கங்கனத்து, திமிர்த்து, உடல் வீழ்ந்து, நாவு தடுமாறிப் பிழைக்கும் வழியில்லாத தீராத வலிப்பை (சன்னியை) யுண்டாக்குமோர் ஊதை நோய் (யூகி.1200); para plegia (சா.அக.).

த.வ. பெருமுடக்குநோய்.

**மகாபிண்டம்** *magā-piṇḍam,* பெ.(n.) இயல், இசை, நாடகம் போலப் பல பிண்டங்களை உறுப்பாகக் கொண்ட பெருநூல் (மாறனலங். 20); a big treatise consisting of several *piṇḍam.*

த.வ. மாபிண்டம்

*[Skt. mahat > த. மகா+பிண்டம்.]*

**மகாபித்தம்**[1] *magā-pittam,* பெ.(n.) **மகாகபித்தம்** (சங்.அக.) பார்க்க; see *magā-kapittam.*

த.வ. பெரும்பித்தம்.

**மகாபித்தம்**[2] *magā-pittam,* பெ.(n.) வில்வ மரம்; bael tree (சா.அக.).

**மகாப்பிரதானன்** *magā-p-piratāṉaṉ,* பெ.(n.) தலைமைப் படைத் தளபதி (M.E.R. 497 of 1926); commandar in chief.

த.வ. முதன்மையன்.

*[Skt. mahā t+pradhāna > த. மகாப்பிரதானன்.]*

**மகாபிரதானி** *magāpiratāṉi,* பெ.(n.) தலைமையமைச்சர்; prime minister.

*[Skt. mahāt > த. மகாபிரதானி.]*

**மகாபிரளயம்** *magā-piraḷayam,* பெ.(n.) உலகம் முடிகின்ற ஊழியிறுதி; dissolution of universe; deluge (வின்.). 2. ஒரு பேரெண்; a great number.

த.வ. பேரூழி.

**மகாபிராணம்** *magā-prāṇam,* பெ.(n.) காக்கை; crow (சா.அக.).

த.வ. பெருங்காக்கை.

**மகாபுடம்**[1] *magā-puḍam,* பெ.(n.) நிலத்தில் ஒன்றரை முழச் சதுரமும், இரண்டு முழ ஆழமுள்ள பள்ளத்தில் காட்டெருவையிட்டுப் போடும் புடம் (உ.வ.); calcination of metals by placing them in a heap of burning *kāṯṯerce* in a pit one cubit and a cialf square and two cubits deep.

*[Skt. mahat > த. மகா+புடம்.]*

**மகாபுடம்**[2] *magāpuḍam,* பெ.(n.) நான்கு முழ அகலம், நீளம், ஆழமுள்ள சதுரப் பள்ளத்தில் அல்லது குழியில் 1000, வரட்டியில் போடும் மருந்துப் புடம்;a process of calcining medicines in a pit measuring 2yds x 2yds x 2yds or 2 cubic yeards with 1000, cowdung cakes. The luted cuucible withe medicine is placed in the centre of the pile or above 750 cakes and set fire with camphor when all the cakes are completly burnt into ashes and cooled the crucible is taken out and opened (சா.அக.).

த.வ. மாப்புடம்.

**மகாபுராணம்** *magāpurāṇam,* பெ.(n.) 1. முதன்மையான பதினெண் தொன்மங்கள் (தக்கயாகப். 113, உரை). ; the 18 chief *purāṇas.* 2. ஒரு சமண சமயத் தொன்மம்; a *jaina purāṇa.*

*[Skt. mahā-puraṇa > த. மகாபுராணம்.]*

**மகாபுருடன்** *magā-puruḍaṉ,* பெ.(n.) நற்குணம் வாய்ந்தவன்; a man distinguished for great personal qualities.

*"அடைக்கலமெனத் தேடிவருவோர்தனமக் காக்குமவனே மகாபுருடனாம்" (அறப.சத. 17).*

*[Skt. mahā-purusa > த. மகாபுருடன்.]*

**மகாபூ** *magā-pū,* பெ.(n.) பெருஞ்சீரகம் அல்லது சோம்பு; anise-*Aniseed-Anetham foeniculum* (சா.அக.).

**மகாபூசிதம்** *magā-pūśidam,* பெ.(n.) **பெருஞ்சீரகம், மகாபூ** பார்க்க்; see *peruñciragam, magāpū* (சா.அக.).

**மகாபூசுரபி** *magā-pū-śurabi,* பெ.(n.) புன்னை; a tree (சா.அக.).

**த.வ. பெரும்புன்னை.**

**மகாபூதகடிதானம்** *magāpūtakaḍitāṉam,* பெ.(n.) கொடை வகை (S.I.I.vii, 21); a kind of gift.

**மகாபூதம்** *magā-pūdam,* பெ.(n.) ஐம்பெரும்பூதங்கள்; gross elements opp. to *taṉmāttirai. "பூமி முதலான மகாபூதங்களைந்தும்" (பு.வெ.8, 33, உரை).*

**த.வ. பெரும்பூதம்.**

*[Skt. mahā-bhūta > த. மகாபூதம்.]*

**மகாபூரணசந்திரோதயம்** *magā-pūraṇa-cantirōtayam,* பெ.(n.) மருந்து வகை (தஞ்.சர.iii, 68); a kind of medicine.

*[Skt. mahā+pūranam+candra+udaya > த. மகாபூரண சந்திரோதயம்.]*

**மகாபூரி** *magā-pūri,* பெ.(n.) ஒரு பேரெண் (பிங்.); a great number, ten quintillions.

*[Skt. mahat > த. மகா+பூரி.]*

**மகாபெலா** *magā-pelā,* பெ.(n.) பேராமுட்டி (மலை) பார்க்க; see fragrant sticky mallow.

*[Skt. mahā-balā > த. மகாபெலா.]*

**மகாபேகன்** *magā-bēgaṉ,* பெ.(n.) தவளை; frog (சா.அக.).

**த.வ. மாப்பேகன்**

**மகாபைசாசிகம்** *magāpaiśāśigam,* பெ.(n.) மனநோயைக் குணமாக்கும் மருந்தூட்டப்பட்ட நெய்; a medicated ghee for insanity (சா.அக.).

**மகாபோதி** *magā-pōti,* பெ.(n.) கௌதமர் தங்கியிருந்து அறிவு எழுச்சி பெற்றுப் புத்தரான அரசமரம் (மணிமே.11, 43, உரை); the Bo-tree in Gayāunder which the Buddha received enlightment.

**த.வ. பெரும்போதி.**

*[Skt. mahā-bōdhi > த. மகாபோதி.]*

**மகாம்** *magām,* பெ.(n.) முகாம் (இ.வ.) பார்க்க; see halting place, camp.

*[Ar. mugām > த. மகாம்.]*

**மகாமகம்** *magā-magam,* பெ.(n.) பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வருவதும் கும்ப (மாசி) மாதத்தில் வியாழன் முழு நிலாவொடு கொடுநுகம் விண்மீன் (மகம்) சேரப்பெறுவதுமான நன்னாளில் கும்பகோணத்தில் நிகழும் முழுக்கு விழா; the great luni-solar festival at kumbakonam, held once in 12 years in *māci* when jupiter is in leo and the full moon is in or about makam.

*[மகா+மகம்.]*

**த.வ. மாமாங்கம்.**

*[Skt. mahā-maghā > த. மகாமகம்.]*

**மகாமகரப்பூ** *magā-magarappū,* பெ.(n.) வழலை; which see (சா.அக.).

**மகாமகரம்** *magā-magaram,* பெ.(n.) ஒரு பேரெண் (நாமதீப.801); a great number.

*[மகா+மகரம்.]*

*[Skt. mahā-makara > த. மகாமகரம்.]*

**மகாமகவிருட்சம்** *magā-maga-viruṭśam,* பெ.(n.) கற்பக மரம்; a celestical tree which gives whatever is wished for (சா.அக.).

*[மகாமக + விருட்சம்.]*

**மகாமகோபாத்தியாய** *magā-makōpātti-yāya,* பெ.(n.) அரசினரால் பெரும் புலவர் களுக்கு அளிக்கப்படும் பட்டம்; a title confered by the Government on scholars.

*[Skt. mahā-mahōpādhyāya > த. மகாமகோபாத்தியாய.]*

**மகாமசானம்** *magā-macāṉam,* பெ.(n.) காசி நகரம் (யாழ்.அக.); Benares city.

த.வ. பெருஞ்சுடலை.

*[Skt. mahā-śmaśṉa > த. மகாமசானம்.]*

**மகாமண்டபம்** *magā-maṇḍabam,* பெ.(n.) கோயிலில் அர்த்த மண்டபத்தை அடுத்துள்ள பெரிய மண்டபம் (I.m.p.Tn.270); large pillared-hall next to the *artta-maṇḍapam* in a temple.

த.வ. பெருமண்டபம்.

*[Skt. mahat > த. மகா+மண்டபம்.]*

**மகாமண்டலிகன்** *magā-maṇḍaligaṉ,* பெ.(n.) **மகாமண்டலேசுவரன்** பார்க்க; see *magāmaṇḍalēśuvaraṉ.*

*[Skt. mahā-maṇḍalika > த. மகாமண்லிகன்.]*

**மகாமண்டலேசுவரன்** *magā-maṇḍalē śuvaraṉ,* பெ.(n.) மண்டலத்தை யாளும் தலைவன் (அதிபதி); Governor. *"மகாமண்டலேசுவர ராமராஜ திம்மராஜ விட்டல மகாராஜா" (I.m.p.Tn.275).*

*[Skt. mahā-maṇḍalēśvara > த. மகாமண்டலேசுவரன்.]*

**மகாமண்டூரம்** *magā-maṇḍūram,* பெ.(n.) பாண்டு நோயைத் தீர்க்கும் மருந்து (பதார்த்த.1210); a medicine for a anemia.

*[Skt. mahā-maṇḍūra > த. மகா மண்டூரம்.]*

**மகாமதம்** *magā-madam,* பெ.(n.) 1. மத யானை (யாழ்.அக.); elephant in rut. 2. வெறி; blinding excitement.

த.வ. மிகுமதம்.

*[Skt. mahā-mada > த. மகாமதம்.]*

**மகாமந்திரம்** *magā-mandiram,* பெ.(n.) மூலமந்திரம்; chief mantra.

த.வ. மாமந்திரம்.

*[Skt. mahā-mantra > த. மகாமந்திரம்.]*

**மகாமந்திரமூர்த்திகள்** *magā-mandira-mūrttigaḷ,* பெ.(n.) ஏழுரைக்கோடியினரான உயர்தர ஆன்மாக்கள் (வின்.); a class of souls of superior order, numbering seventy five millions.

*[Skt. mahat+mantra > த. மகாமந்திரம்+மூர்த்திகள்.]*

**மகாமந்திரி** *magā-mandiri,* பெ.(n.) முதன்மை மந்திரி (யாழ்.அக.); prime minister.

த.வ. முதன்மை அமைச்சர்.

*[Skt. mahat > த. மகா+மந்திரி.]*

**மகாமரு** *magā-maru,* பெ.(n.) கருப்பு வாகை; black speicies of sirissa (சா.அக.).

**மகாமாத்திரன்** *magā-māttiraṉ,* பெ.(n.) 1. மந்திரி; minister. 2. செல்வன்; wealthy man. 3. யானைப்பாகன்; mahout.

*[Skt. mahā-mātra > த. மகாமாத்திரன்.]*

**மகாமாத்திரி** *magā-māttiri,* பெ.(n.) 1. குருவின் மனைவி (யாழ்.அக.); preceptor's wife. 2. செல்வி; wealthy woman.

*[Skt. mahā-mātrī > த. மகாமாத்திரி.]*

**மகாமாயாசக்தி** *magā-māyā-cakti,* பெ.(n.) 1. **மகாமாயை, 1** (தக்கயாகப்.104, உரை) பார்க்க; see *magā-māyai.*

*[Skt. mahā-māyā+śakti > த. மகாமாயாசக்தி.]*

**மகாமாயி** *magā-māyi,* பெ.(n.) கொற்றவை (வின்.); durgā.

த.வ. மாமாயி, மகமாயி.

*[Skt. mahā-māyī > த. மகாமாயி.]*

**மகாமாயை** *magā-māyai,* பெ.(n.) 1. மலை மகள் (யாழ்.அக.); *pārvatī.* 2. தூய மாயை (சங்.அக.); (*śaiva*) pure *māyā.*

*[Skt. mahā-māyā > த. மகாமாயை.]*

**மகாமார்க்கம்** *magā-mārkkam,* பெ.(n.) சிறந்த சமயநெறி; great religion, as a path to salvation. *"வேதமார்க்கம் முதலிய மகாமார்க்கங்களை" (தக்கயாகப்.7, உரை).*

த.வ. பெருநெறி.

*[Skt. mahā-mārga > த. மகாமார்க்கம்.]*

**மகாமாரி** *magā-māri,* பெ.(n.) 1. கொற்றவை (துர்க்கை); *durgā.* 2. கொள்ளைநோய்; plague, epidemic disease.

த.வ. மாமாரி.

*[Skt. mahā-mārī > த. மகாமாரி.]*

**மகாமால்** *magā-māl,* பெ.(n.) வில்வ இலை; leaf of bael tree (சா.அக.).

மறுவ. *மகாபத்திரம்.*



**மகாமிருகம்** *magā-mirugam,* பெ.(n.) யானை (யாழ்.அக.); elephant.

*[Skt. mahā-mrga > த. மகாமிருகம்.]*

**மகாமிருத்து** *magā-miruttu,* பெ.(n.) சிவபிரான் (யாழ்.அக.); *śivan.*

*[Skt. mahā-mrtyu > த. மகாமிருத்து.]*

**மகாமிருத்துயஞ்சயம்** *magā-miruttu yañcayam,* பெ.(n.) ஒரு மந்திரம்; a mantra.

*[Skt. mahā+purnam > த. மகாமிருத்து யஞ்சயம்.]*

**மகாமுகம்** *magā-mugam,* பெ.(n.) முதலை (யாழ்.அக.); crocodile.

*[Skt. mahā-mukha > த. மகாமுகம்.]*

**மகாமுத்திரை** *magā-muttirai,* பெ.(n.) திரிசூல முத்திரையில் தர்ச்சனியை அநாபிகை வளைப்பதாகக் காட்டும் முத்திரை (செங்.10); (*śaiva.*) a hand-pose in which the ring-finger in *tiricūla-muttirai* close round the forefinger.

*[Skt. mahā-mudrā > த. மகாமுத்திரை.]*

**மகாமுனி** *magā-muṉi,* பெ.(n.) 1. பெருந்தவ முனிவன்; eminent sage. 2. அகத்தியர் (வின்.); agastya. 3. புத்தன் (யாழ்.அக.); the Buddha.

த.வ. மாமுனி.

*[Skt. mahā+muni > த. மகாமுனி.]*

**மகாமூர்க்கம்** *magā-mūrkkam,* பெ.(n.) நாரத்தை; bitter orange tree (சா.அக.).

த.வ. பெருங்கொழிஞ்சி.

**மகாமூலி** *magā-mūli,* பெ.(n.) 1. ஆகா சகருடன் கிழங்கு; sky root-climbing shrub. 2. கற்பத்துக்கு உதவும் சட்டமுனியின் ஊதை (வாத) நூல் 1000த்தில் சொல்லியுள்ள 23 சிறந்த மூலிகைகள்; the 23 superior drugs related in the Tamil alchemical science 1000 of the siddhar named satta muni- All healing drugs of high potency (சா.அக.).

த.வ. மாமூலி.

**மகாமெலம்** *magā-melam,* பெ.(n.) கொம்மட்டி (சங்.அக.); country cucumber.

**மகாமேகராசாங்கதைலம்** *magā-mēga-rāšāṅga-tailam*,பெ.(n.) மருந்தெண்ணெய் வகை (தைலவ.தைல.135, வரி, 3, உரை); a medicinal oil.

*[Skt. mahat+mēka+rājāṅga+taila > த. மகாமேக ராசாங்கதைலம்.]*

**மகாமேகரோகம்** *magā-mēga-rōgam*, பெ.(n.) பிரமேகம், வெட்டை நோய்; gonorrhoea. (சா.அக.).

**மகாமேதை** *magā-mēdai*, பெ.(n.) 1. பேரறிவு; great intellect. 2. பேரறிவாளன்; man of great intellect. 3. மருளுமத்தை என்னும் மூலிகை (மலை.); cockle-bur.

த.வ. மாமேதை.

*[Skt. mahat+mēdhā > த. மகாமேதை.]*

**மகாமேதோ** *magā-mētō*, பெ.(n.) **மகாமேதை** பார்க்க; see *magā-mēdai* (சா.அக.).

**மகாமேரு** *magā-mēru*, பெ.(n.) மேருமலை (பிங்.) mt. *mēru*. *"சாற்று மகாமேருவரைச் சிகரத் துற்றால்" (சிவரக.சிவதன்மா.21).*

த.வ. மாமேரு

*[Skt. mahā-mēru > த. மகாமேரு.]*

**மகாமேருதானம்** *magā-mēru-dāṉam*, பெ.(n.) மன்னவர் புரியும் கொடை வகை (த.நி.போ.பக்.25); a kind of gift made by kings.

*[Skt.mahā-mēru+ > த. மகாமேருதானம்.]*

**மகாமேருப்பிரசம்சை** *magā-mēru-p-pirašamšai*, பெ.(n.) அளவு கடந்த புகழ்ச்சி; immoderate praise. *"தெரிந்தவர் போலக் காட்டி மகாமேருப்பிரசம்சை பண்ணினீர்" (சிவசம. பக்.36).*

*[Skt. mahā-mēru > த. மகாமேருப் பிரசம்சை.]*

**மகாயக்கியம்** *magā-yakkiyam*, பெ.(n.) **மகாயஞ்ஞம்** பார்க்க; see *magāyaññjam*.

த.வ. மாவேள்வி.

**மகாயஞ்ஞம்** *magā-yaññam*, பெ.(n.) **மகாயாகம்** பார்க்க; see *magā-yāgam*.

த.வ. மாவேள்வி.

*[Skt. mahā-yajña > த. மகாயஞ்ஞம்.]*

**மகாயாகம்** *magā-yāgam*, பெ.(n.) பஞ்சமகா யாகம் (யாழ்.அக.); the five sacrifices.

த.வ. ஐம்மாவேள்வி.

*[Skt. mahā-yāga > த. மகாயாகம்.]*

**மகாயானம்** *magā-yāṉam*, பெ.(n.) பௌத்தசமய வகை (நீலகேசி, 342, உரை); a school of Buddhism.

*[Skt. mahā-yāna > த. மகாயானம்.]*

**மகாயுகம்** *magā-yugam*, பெ.(n.) நான்கு யுகங் கூடியதும் 43,20,000 வருடங்கள் கொண்டதுமான காலம் (வின்.); colossal cycle of time, comprising the four yugas, reckoned as 43,20,000 solar years.

த.வ. மாவூழி.

*[Skt. mahā-yuga > த. மகாயுகம்.]*

**மகாயோசனை** *magā-yōšaṉai*, பெ.(n.) கோடி யோசனை (நாமதீப.800, உரை); a crore of *yōcaṉai*.

*[Skt. mahat+yōjanā > த. மகாயோசனை.]*

**மகாயோனி** *magā-yōṉi*, பெ.(n.) காற்றா (வாயுவா)னது அல்குல் (யோனி) கருப்பம் இவ்விடங்களில் புகும்போது அல்குலில் சதை வளர்ந்து பருமனாக பருக்கும் ஒரு வகையான, பெண்களுக்குண்டாகும் நோய்; a disease of the vagina wherein it is extremely dilated (சா.அக.).

த.வ. மாயோனி.

**மகாரசசூதம்** *magā-raša-šūdam*, பெ.(n.) ஓர் உயர் வகை தேமா (மூ.அ.); a superior kind of mango tree.

*[Skt. mahā-rāja-cūta > த. மகாரசசூதம்.]*

**மகாரசதம்** *magā-šacadam*, பெ.(n.) பொன் (யாழ்.அக.); gold.

*[Skt. mahā-rajana > த. மகாரசதம்.]*

**மகாரசம்** *magā-rašam*, பெ.(n.) 1. மரவகை (சங்.அக.); a tree. 2. கஞ்சி (யாழ்.அக.); gruel.

*[Skt. mahā-rasa > த. மகாரசம்.]*

**மகாரசனம்** *magā-rašaṉam,* பெ.(n.) **மகாரசதம்** (யாழ்.அக.) பார்க்க; see *magā-rašadam.*

*[Skt. mahā-rajana > த. மகாரசனம்.]*

**மகாரசிங்கி** *magāra-šiṅgi,* பெ.(n.) நாதம்; ovum (சா.அக.).

**மகாரசிதம்** *magārašidam,* பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

**மகாரசிதகாரம்** *magāra-šidakāram,* பெ.(n.) மிளகு; pepper (சா.அக.).

*[மகா+ரசிதகாரம்.]*

**மகாரணியம்** *magāraṇiyam,* பெ.(n.) பெருங்காடு (வின்.); great forest.

**த.வ. பெருங்காடு.**

*[Skt. mahā-raṇya > த. மகாரணியம்.]*

**மகாரதம்** *magā-radam,* பெ.(n.) 1. மகா ரதனுடைய தேர் (பொருட்.நி.); the chariot of a *makāratan.* 2. பேராசை; great desire.

**த.வ. பெருந்தேர்.**

*[Skt. mahā-ratha > த. மகாரதம்.]*

**மகாரதன்** *magā-radaṉ,* பெ.(n.) தான் ஒருவனாகிப் பதினாயிரம் வீரரை எதிர்த்துப் பொரவல்ல தேர்வீரன் (பாரத.அணிவ.1); a warrior on a chariot, capale of fighting single-handed against 10,000 warriors, one of four *tēr-vīrar,* q.v.

**த.வ. பெருந்தேரன்.**

*[Skt. mahā-ratan > த. மகாரதன்.]*

**மகாரபஞ்சகம்** *magārapañjagam,* பெ.(n.) மகரவெழுத்தில் தொடங்கும் மது, மச்சம், புலால் (மாமிசம்) முத்திரை, மைதுனம் என்ற ஐந்து வகைகள் (தக்கயாகப்.51, விசேடக் குறிப்பு.); the five objects whose names begin with the consonant ma, viz., *matu, maccam, mānicam, muttirai, maituṉam.*

**த.வ. ஐம்மகரம்,**

*[மகார+பஞ்சகம்.]*

**மகாரம்** *magāram,* பெ.(n.) 1. கல்லுப்பு; rock salt. 2. மகாரவெழுத்து; the mystic letter 'ம' (சா.அக.).

**மகாரவி** *magāravi,* பெ.(n.) கறுப்பரிசி; black rice (சா.அக.).

**மகாரவுப்பு** *magāra-v-uppu,* பெ.(n.) கல்லுப்பு (மூ.அ.); rock-salt (சா.அக.).

**மகாராசமிருகாங்கம்** *magārāša-miru-kāṅgam,* பெ.(n.) ஈளைநோய் தீர்க்குங் வடிநீர் வகை (பதார்த்த.219); a decoction for the cure of asthma.

*[Skt. mahārāj-mrgāṅka > த. மகாராச மிருகாங்கம்.]*

**மகாராசன்** *magārācaṉ,* பெ.(n.) 1. **மகா ராசா, 1, 2, 3** பார்க்க; see *magārāšā.* 2. கவலை யற்றவன் (யாழ்.அக.); person free from cure. 3. சமண குரு (யாழ்.அக.); Jaina priest.

*[Skt. mahā-rāja> த. மகாராசன்.]*

**மகாராசா** *magā-rācā,* பெ.(n.) 1. பேரரசன்; paramount king, monarch. 2. குபேரன் (வின்.); *kubēra.* 3. பெருஞ்செல்வன்; very wealthy man. 4. அரசு அளித்து வரும் ஒரு பட்டம் (இக்.வ.); a title conferred by the Government.

**த.வ. பேரரசன்.**

*[Skt. mahā-rāja > த. மகாராசா.]*

**மகாராசி** *magā-rāši,* பெ.(n.) **மகராசி, 2** (உ.வ.) பார்க்க; see *magā-rāši.*

*[Skt. mahā-rājñi > த. மகாராசி.]*

**மகாராட்டிரம்** *magārāṭṭiram,* பெ.(n.) 1. ஒரு நாடு (யாழ்.அக.); the mahratta country. 2. ஒரு மொழி; the mahratta language.

*[Skt. mahā-rāṣṭra > த. மகாராட்டிரம்.]*

**மகாராணி** *magā-rāṇi,* பெ.(n.) பேரரசி; empress. *"மகாராணி மங்கம்மா"*.(உ.வ.)

*[Skt. mahā-rājñi > த. மகாராணி.]*

**மகாராசமிருகாங்கம்** *magā-rāša-mirugāṅgam,* பெ.(n.) சளி, ஈளைநோய், வீக்கம் முதலிய நோய்களைப் போக்கும் ஓர் ஆயுள் வேத மாத்திரை; an Ayurvedic medicine used for consumption, bronchitis, anaemia etc (சா.அக.).

**மகாராசயோகி** *magārāšayōgi,* பெ.(n.) பச்சைக் கருப்பூரம்; crude comphor (சா.அக.).

**மகாராசன்** *magā-rāšan,* பெ.(n.) 1. பேரரசன்; monarch. 2. குபேரன்; *kubēra.* 3. பெருஞ்செல்வன்; very wealthy man. 4. கவலையற்றவன் (யாழ்.அக.); person free from care. 5. சமணகுரு (யாழ்.அக.); Jaina priest.

*[Skt. mahā-rājā > த. மகாராசா.]*

**மகாராசாதுறவு** *magārāšā-duṟavu,* பெ.(n.) குமார தேவரியற்றிய ஒரு நூல்; a work by *kumāra-tevar.*

*[மகாராசா+துறவு.]*

**மகாராட்டிரம்** *magā-rāṭṭiram,* பெ.(n.) 1. ஒரு மாநிலம்; the mahratta country. 2. மராட்டிய மொழி; the Maharatta language.

**மகாராத்திரம்** *magā-rāttiram,* பெ.(n.) நள்ளிரவு (யாழ்.அக.); mid night.

*[Skt. mahā-rātra > த. மகாராத்திரம்.]*

**மகாரிட்டம்** *magāriṭṭam,* பெ.(n.) மலைவேம்பு; mountain neem (சா.அக.).

**மகாருத்திரர்** *magā-ruttirar,* பெ.(n.) சிவபெருமான் (சி.போ.பா.1, பக்.54); lord *Šiva.*

**த.வ. உருத்திரன்.**

*[Skt. mahā-rudra > த. மகாருத்திரர்.]*

**மகாரூபகம்** *magā-rūpagam,* பெ.(n.) ஒரு நாடகத் தமிழ் நூல் (யாழ்.அக.); a work probably written in *nāṭaka-t-tamil.*

*[Skt. mahā-rūpaka > த. மகாரூபகம்.]*

**மகாரூபை** *magā-rūpai,* பெ.(n.) 1. நல்லுருவுள்ளவள்; woman of beautiful form. 2. பார்வதி (கூர்மபு.திருக்கல்.21); *pārvati.*

*[Skt. māhā-rūpā > த. மகாரூபை.]*

**மகாரேவதம்** *magārēvadam,* பெ.(n.) முட்பலாசு என்னும் முள்முருக்கு மரம்; a tree erythrina indica (சா.அக.).

*[Skt. mahā+revadam]*

**மகாரோகம்** *magā-rōgam,* பெ.(n.) குட்டம் முதலிய பெருநோய் (சங்.அக.); leprosy and other serious diseases.

**த.வ. பெருநோய்.**

*[Skt. mahā-rōga > த. மகாரோகம்.]*

**மகாரௌரவம்** *magā-rauravam,* பெ.(n.) நிரய வகை (சங்.அக.); a hell.

*[Skt. mahā-raurava > த. மகாரௌரவம்.]*

**மகால்** *magāl,* பெ.(n.) அரண்மனை; palace. *"திருமலைநாயக்கர் மகால்".*(உ.வ.).

*[U. mahal > த. மகால்.]*

**மகாலக்குமி** *magā-lakkumi,* பெ.(n.) திருமகள்; *Laksmi.*

*[Skt. mahā-laksmi > த. மகாலக்குமி.]*

**மகாவாதம்** *magā-vādam,* பெ. (n.) 1. பெருங்காற்று; tempestuous wind. 'மகாவாதம் சென்று தாக்கிய பொழுது' (தக்கயாகப். 144. உரை) 2. **மகாவாதரோகம்** பார்க்க; see magāvādarōgam.

*[Skt. mahā-vāda > த. மகாவாதம்.]*

**மகாவாதரோகம்** *magā-vādarōgam,* பெ. (n.) வாதக் குடைச்சல் நோய் (பைஷஜ); nervous disease, palsy.

**மகாவித்துவான்** *makā-viṭṭūvān,* பெ. (n.) பெரும்புலவன் என்னும் பட்டம்; a title meaning `great scholar'

**த.வ. பெரும்புலவன்**

*[Skt. mahā-vidvān > த. மகாவித்வான்.]*

**மகாவிரதம்** *magā-viradam,* பெ. (n.) 1. சைவ சமயத்தின் உட்சமய மாறனுளொன்றான மாவிரதம். (யாழ். அக.); a section of *Saivaisam.* 2. சைன விரத வகை. (சீவக. 2818, உரை.); (Jaina.) a kind of vow.

*[**Skt.** mahā-virata > த. மகாவிரதம்.]*

**மகாளயம்** *magāḷayam,* பெ. (n.) 1. கன்னி (புரட்டாசி) மாதத்துக் கரும்பக்கம்; the dark fortnight in ther lunar month of Bhādrapada. 2. தென்புலத்தார்க்குக் கன்னித் (புரட்டாசி) திங்களில் வரும் கரும்பக்கத்தில் செய்யும் நினைவேந்தல் நிகழ்ச்சி; offerings to deseased ancestors made during *magāḷayam.*

*[**Skt.** mahālaya > த. மகாளயம்.]*

**மகான்** *magāṉ,* பெ. (n.) பெருந் தன்மையுள்ள பெருமகன்; a respectable the man. 'மூலப்பகுதியான மகானுண்டாகும்' (பாகவ. சுக முன் 2.5.).

*[**Skt.** mahān > த. மகான்.]*

**மகிடமர்த்தனி** *magiḍa-marttaṉi,* பெ. (n.) மலைமகள் (துர்கை) (சங். அக.). Durgā.

*[**Skt.** mahisa-mardani > த. மகிடமர்த்தனி மகிசம் – எருமை. மர்த்தனி – கொன்றவள்]*

**மகிபாலன்** *magi-pālaṉ,* பெ. (n.) அரசன் (பிங்.); king, monarch.

*[**Skt.** mahī-pāla > த. மகிபாலன்]*

**மகிமா** *magimā,* பெ. (n.) எண் வகை ஆற்றலுள் (அட்டமாசித்திகளுள்) விருப்பம் போல உருவத்தைப் பருக்கச் செய்யும் பேராற்றல்; the supernatural power of increasing size of will one of *aṣṭamāśitti.* *"உள்ளும்புறனு நிறையும் பெருமைதனை யன்றோ மகிமா வென்னும்" (திருவிளை. அட்டமா. 23.);*

*[**Skt.** mahimā ≥ த. மகிமா.]*

**மகிமை** *magimāi,* பெ. (n.) 1. பெருமை. greatness, grandeur, glory, majesty. *"மங்கல மகிமை மாநகர்" (திருப்பு. 16);* 2. மதிப்புரவு (வின்.); Honour, dignity; respectability.

**மகிமைப்படுத்து-தல்** *magimāi-p-paḍuttu-*5 செ.கு.வி. (v.i.) 1. மதிப்புரவு செய்தல்; to magnify, glorify, dignify. 2. புகழ்தல் (வின்.); to extol, praise.

**த.வ. பெருமைப்படுத்துதல்**

*[**Skt.** mahimāi > த. மகிமை+படுத்து–.]*

**மகேச்சுரர்** *makēccurar,* பெ. (n.) சிவனடியார். (சிலப்பிர. 48, உரை.); devotees as Siva.

*[**Skt.** māhēśvara > த. மகேச்சுரர்.]*

**மகேசன்** *makēšaṉ,* பெ. (n.) சிவபிரான்; Siva. மேலவர்க் கல்லா லின்றே விழுமிய மகேச நாமம் (இரகு. யாக. 58).

*[**Skt.** māhēša > த. மகேசன்.]*

**மகேந்திரம்** *makēntiram,* பெ. (n.) 1. ஒரு மலைத் தொடர்; a range of mountains. 2. கஞ்சம் மாவட்டத்திலுள்ள ஒரு மலை; a mountain 32 miles south - west of Berhampore, in Ganjam of with ancient Siva shrine. மந்திர மாமலை மகேந்திர வெற்பன் (திருவாச. 2, 100).

**த.வ. மாவிந்தம்**

*[**Skt.** māhēndra > த. மகேந்திரம்.]*

**மகோதரம்** *magōdram,* பெ. (n.) பெருவயிற்று நோய்; dropsy of the abdomen, ascitis.

**த.வ. பெருவயிற்றுநோய்**

*[**Skt.** மகா + உதரம்.]*

**மகோந்நதம்** *magōnnadam,* பெ. (n.) பனைமரம் palmyra tree - Borassus flabellifer. (சா. அக.)

*[**Skt.** மகா + உன்னதம்.]*

**மகோற்சவம்** *makōṟcavam,* பெ. (n.) பெரிய திருநாள்; great festival.

த.வ. பெருவிழா

[Skt. māhōt-sava > த. மகோற்சவம்.]

**மகோன்மதம்** *makōṉmadam,* பெ. (n.) மிகு மயக்க வெறி. (யாழ். அக.); extreme intoxication.

[Skt. māhōnmada > த. மகோன்மதம்.]

**மகோன்னதம்** *makōṉṉadam,* பெ. (n.) 1. மிக்க உயரம்; height, loftiness. 2. உயர்ந்த நிலை; high rank, high position. 3. பனை. (மூ.அ); palmyra, palm.

[Skt. mahōn-nata > த. மகோன்னதம்.]

**மங்களாசாசனம்** *maṅgaḷāšāšaṉam,* பெ. (n.) 1. நன்மையை வேண்டுகை; invocation of blessings by great persons. மங்களா சாச னத்தின் மற்றுள்ள வாழ்வார்கள் தங்களார் வத்தளவு (உபதேசரத். 18); 2. ஆழ்வாராதி யாரால் துதிக்கப் பெறுகை; benediction on a sacred place, as by Aḻvārs, etc. 3. பெரியோர்களின் வழிபாடு; worship by great men. பெருமாளை மங்களாசாசனம் செய்தாயிற்றா?.

[Skt. maṅgalāšāsana > த. மங்களாசானம்.]

**மங்களாரத்தி** *maṅgaḷāratti,* பெ. (n.) 1. கடவுளுக்குச் சுழற்றியெடுக்கும் கருப்பூர ஆரத்தி; waving of camphor before a deity. 2. மங்கலகாலங்களில் மஞ்சணீர் சுற்றுகை; ceremony of waving turmeric water in a dish on auspicious occasions.

[Skt. maṅgalam+arathi > த. மங்களாரத்தி]

**மச்சக்காவடி** *macca-k-kāvaḍi,* பெ.(n.) மீன் கலயங்கள் கொண்ட காவடி; a *kāvaḍi* with vessels containing fish.

[Skt. matsya+காவடி]

[மச்சம் + காவடி]

**மச்சக்கொடி** *macca-k-koḍi,* பெ.(n.) காமனுக்கும் பாண்டியனுக்கும் உரியதான மீன்கொடி (வின்); banner of *Kāma* and the *Pāṇḍyas* bearing fishen sign.

[மச்சம் + கொடி]

**மச்சகந்தி** *maccakandi,* பெ.(n.) பரிமளகந்தி (பாரத); *Vyāsa's* mother.

[Skt. matsyagandhi > த. மச்சகந்தி]

**மச்சத்தில்செனித்தமலக்கல்** *maccattil-šeṉitta-malakkal,* பெ.(n.) பொன்னம்பர்; amber of a gold colour a mineral describes in the Tamil siddha medical science.

**மச்சதேசம்** *mscc-dēšam,* பெ. (n.) ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று; a country in Central, India one of 56 *dēšam.*

[Skt. matsya+tēsa > த. மச்சதேசம்]

**மச்சபுராணம்** *macca-purāṇam,* பெ.(n.) 1. பதினெண் தொன்ம (புராண)த்துள் மீன்தோற்றரவு எடுத்த திருமாலால் சிவனுடைய பெருமை விளங்க அறிவுரைப் பெற்ற தொன்மம் (பிங்); a chief Purāṇa in honour of *Siva,* narrated by Viṣṇu in His fish in carnation, one of *patiṉeṅpurāṇam.* 2. திருநெல்வேலி வடமலையப்ப பிள்ளை யினால் கி.பி. 1706-இல் தமிழில் மொழி பெயர்த்துப் பாடப்பெற்ற நூல்; a metrical rendering of *matsya-purāṇa* in Tamil by *Vaṭamalaiyappa Piḷḷaiyan* of Thirunelveli, 1706 A.D.

[Skt. matsya+purāṇa > த. மச்சபுராணம்]

**மச்சம்**[1] *maccam,* பெ.(n.) 1. மீன்; fish. 2. திருமாலின் முதலாம் தோற்றரவு; fish-incarnation of Viṣṇu, one of tašāvatāram. 3. மீன ஓரை; pisces of the zodiac. 4. மீன (பங்குனி) மாதம்; month of paṅguṉi. *"பயமார் கடமச்சத்திற்குந் திரிக்குள்"* (தைலவ. பாயி. 55). 5. **மச்ச புராணம்,1** பார்க்க; see macca-dēšam. 6. **மச்சதேசம்** பார்க்க; see *"மச்சநாடன்"* (பாரத. நிரை. 65).

[Skt. matsya > த. மச்சம்]

**மச்சம்²** *maccam,* பெ.(n.) மாற்றறிய வைத்திருக்கும் பார்வைப் பொன்; piece of gold kept for a sample. *"வன்றொண்டர் மச்சம் வெட்டிக் கைக் கொண்டு"* (பெரியபு. ஏயர்கோன். 109.).

*[I. matstsu, K. macca> த. மச்சம்]*

**மச்சம்பி** *maccambi,* பெ.(n.) 1. தமக்கை கணவன்; elder sister's husband. 2. அம்மான் மகன்; maternal uncle's son. 3. அத்தை மகன்; paternal aunt's son. 4. கணவனுடைய தமையன்; husband's elder brother.

**மச்சமுனி** *maccamuni,* பெ.(n.) பதினெண் சித்தருள் ஒருவரும் மருத்துவ நூலியற்றிய வருமான ஒரு சித்தர்; a reputed mystic, author of treatises on medicine, one of Patinen-Cittar.

**மச்சயந்திரம்** *macca-yandiram,* பெ.(n.) அம்பெய்வதற்கு மீன் வடிவாயமைத்த குறி (அபி. சிந்.); mark for archers in the shape of a fish.

*[மச்ச + யந்திரம்]*

**மச்சரம்** *maccaram,* பெ.(n.) 1. பொறாமை (வின்); envy; jealousy at another's success or prosperity. 2. போட்டி; competition, rivalry.

*[Pkt. maccara>Skt. mātsara>த. மச்சரம்]*

**மச்சராசன்** *macca-rāšan,* பெ.(n.) 1. மீன்களின் தலைவன்; king of fishes. *"மச்சராசன் மேல் வரவே"* (தக்கயாகப். 469). 2. மச்ச தேசத்தரசன்; king of Matsya country.

*[Skt. matsyarāja > த. மச்சராசன்]*

**மச்சரூபன்** *macca-rūban,* பெ.(n.) காய்ச்சு நஞ்சு; a kind of arsenic. (சா.அக.)

**மச்சவிளக்கம்** *macca-viḷakkam,* பெ.(n.) மீன்களைப் பற்றிய நூல் (பாண்டி.); treatise on marine zoology.

*[மச்சம் + விளக்கம்]*

**மச்சனா** *maccana,* பெ.(n.) முள்ளங்கி; raddish (சா.அக.).

**மச்சாமேகம்** *maccā-mēgam,* பெ.(n.) இது நாவல் வேரினால் தீரும் நோய் வகை; a variety of mega disease it is curses by the infusion of the root of jambolana.

**மச்சாழ்வி** *maccāḻvi,* பெ.(n.) **மச்சாவி** (M.E.R. 479 of 1917 - B) பார்க்க; see *maccāvi.*

**மச்சிகம்** *maccigam,* பெ.(n.) முடிதிருத்தத் தொழில் (நீலகேசி, 280.); barber's work.

**மச்சிகன்** *maccigan,* பெ.(n.) வணிகன்; trader. *"மச்சிகனெழுந்து கம்பவாணரை மகிழ்ந்து போற்றி"* (திருவிரிஞ்சைப். வழித்துணை – 42).

**மச்சிபம்** *maccibam,* பெ.(n.) கடுகுரோகிணி (மலை); chiristmas rose.

**மச்சியம்¹** *macciyam,* பெ.(n.) **மச்சம்¹** பார்க்க; see *maccam.*

**மச்சியம்²** *macciyam,* பெ.(n.) கடுகுரோகிணி; a root uses as purgative. (சா.அக.)

**மச்சியராசன்** *macciya-rāšan,* பெ.(n.) மச்சராசன் (தக்கயாகப் 469, உரை, பார்க்க; see *maccarāšan.*

**மச்சியாச்சி** *macciyācci,* பெ.(n.) மச்சியாத்தி பார்க்க; see *macciyātti.*

**மச்சியாத்தி** *macciyātti,* பெ.(n.) பொன்னாங் கண்ணி; sessile plant. (சா.அக.)

**மச்சேந்திரநாதர்** *maccēndira-nādar,* பெ.(n.) நவநாத சித்தருளொருவர் (சது.); a mystic, one of *navanāda-šittar.*

*[Skt. matsyēndra-nātha> த. மச்சேந்திரநாதர்]*

**மச்சேந்திரநாதன்** *maccēndira-nādan,* பெ.(n.) நவநாத சித்தரில் ஒருவர்; one of the *Siddhars.* (சா.அக.)

**மச்சேந்திரன்** *maccēndiraṉ*, பெ.(n.) மச்ச முனி நாயனார்; a *Siddhar*. (சா.அக.)

**மச்சைசமுற்பவம்** *maccai-šamurbavam*, பெ.(n.) மாதப்போக்கின் போது வெளியாகும் கெட்ட அரத்தம் (சுரோணித நீர்); menstrual blood. (சா.அக.).

**மச்சைதாதுக்கிருமி** *maccaitādu-k-kirumi*, பெ.(n.) எலும்புச் சோற்றை உண்ணும் நுண்ணுயிரி; parasite or germ that eats the bone marrow. (சா.அக.)

**மச்சைதாதுகதசுரம்** *maccatādukada-šuram*, பெ.(n.) எலும்புச் சோற்றைத் தாக்கும் காய்ச்சல்; a fever affecting the marrow of the bone. (சா.அக.)

**மச்சைவித்திரதி** *maccaivittiradi*, பெ.(n.) எலும்புச் சோற்றைத் தாக்கும் ஒரு கட்டி; abscess affecting the marrow. (சா.அக.)

**மசக்கல்** *mašakkal*, பெ.(n.) தன்வசமாக்கல்; to bewitch; to enchant; to charm.(சா.அக.)

**மசமசப்பு** *mašamašappu*, பெ.(n.) சொறிவு; itching sensation.(சா.அக.)

**மசரசமலர்** *mašarasa-malar*, பெ.(n.) 1. குழந்தைகளுக்குக் கருப்பாக நுரைத்து கழியும் ஒரு வகை நோய்; a disease in children accompanies by black mucus clots. 2. செறி புழு; a kind of worm in the in festine. (சா.அக.)

**மசரா** *mašarā*, பெ.(n.) உட்கிடைக் கிராமம்; hamlet.

**மசரைப்புழு** *mašarai-p-pulu*, பெ. (n.) **மசரசமலர்** பார்க்க; see *mašarasa-malar*. (சா.அக.)

*[மசரை+புழு]*

**மசனம்** *mašaṉam*, பெ. (n.) வருத்துகை (சங். அக.); trouble someness.

*[Skt. masana > த. மசனம்]*

**மசாகம்** *mašāgam*, பெ.(n.) குருவி (சங். அக.); small bird.

*[Skt. mašāka > த. மசாகம்]*

**மசாரம்** *mašāram*, பெ.(n.) 1. பைம்மணி; a precious gem. 2. நீல அரத்தினம்; a blue gem. (சா.அக.).

**மசால்சி** *mašālši*, பெ.(n.) 1. தீவட்டி பிடிப்பவன் (வின்.); torch - bearer. 2. விளக்குத் துடைத் தேற்றுபவன் (இ.வ.); servant who trims the lamps.

*[U. mashalci > த. மசால்சி]*

**மசால்தோசை** *mašaldōšai*, பெ.(n.) உருளைக் கிழங்கு உசிலையை உள்ளே மடித்துத் தரப்படும் தோசை; a dosai with a filling of fried potato and onion. *"உணவு விடுதிக்கு வருபவர்கள் அதிகம் விரும்பிச் சாப்பிடுவது மசால்தோசை".*

**த.வ. உசிலைத் தோசை**

*[U. mashal > த. மசால்]*

**மசால்வடை** *mašāl-vaḍai*, பெ.(n.) வெங் காயமும் பிறவும் கலந்த வடைப் பணிகார வகை; a kind of vaḍai made with onions and condiments.

**த.வ. உசிலை வடை**

*[U. masāla > த. மசால்]*

**மசாலா** *mašālā*, பெ.(n.) பொதுவாக புலால் உணவில் பயன்படுத்தப்படும் கசகசா, இலவங்கப்பட்டை, பூண்டு முதலியவை சேர்த்து அரைக்கப்பட்ட கலவை; mixed condiments and spices (for meat dishes); curry stuff. *'மசாலா இல்லாமல் கறிக்குழம்பு சுவை இருக்காது'.* 2. மரக்கறி சமையலில் துவையல் போல் அரைக்கப்பட்ட தேங்காய் அல்லது மிளகாய்; mashed coconut or chilli in vegetarian preparations. 3. உருளைக் கிழங்குத் துண்டுகளோ, மிளகாய், வெங்காயம் முதலியவற்றைக் கலந்து தாளித்துச் செய்யப்பட்ட கலவை; boiled potato mixed

with chilli and onion. 'பூரிக்கு இன்னும் கொஞ்சம் மசாலா போட்டுக் கொள்!' (பே.வ.). 4. திரைப்படம், நாடகம் முதலியவற்றில் மக்கள் விரும்பி பார்க்கக் கூடிய பொழுதுபோக்குப் பகுதிகளான சண்டை, பாட்டு, காதல் காட்சி முதலியவை குறிப்பிட்ட அளவில் நிறைந்த கலவை; (of film, play) a mix of stereotype box-office elements. *'சரியான மசாலாப் படம், இதற்கு எப்படி பரிசு கிடைத்தது?" (உ.வ.).*

**த.வ. உசிலை**

**மசிகாந்தசாதி** *mašigānda-šādi,* பெ.(n.) சைதன்னிய பிரகாசி சாதியாகிய ஆண் சாதிவகையில் ஒன்று; one of the four classification of men. (சா.அக.).

**மசிகூபி** *maši-kūpi,* பெ.(n.) எழுதுமை வைக்குங்குப்பி; ink-bottle, ink-stand.

**த.வ. மைக்குப்பி**

*[Skt. maṣi-kūpi > த. மசிகூபி]*

**மசிதானி** *maši-dāṉi,* பெ.(n.) மைக்கூடு (யாழ். அக.); ink-bottle.

**த.வ. மைக்கூடு**

*[Skt. maṣi-dhāna > த. மசிதானி]*

**மசிமை** *mašimai,* பெ.(n.) பெருமை; greatness. *"மசிமையில் கூறைதாராய்"* (திவ். நாய்ச். 3,9).

*[Skt. mahimā > த. மசிமை]*

**மசியகிரி** *mašiyagiri,* பெ.(n.) மேற்கூரை, மேற் கவிகை; canopy. "திருத்திரை கட்டுகிறதும் மசியகிரி கட்டுகிறதும்" (கோயிலொ. 96).

*[மசிய + கிரி]*

*[Skt. masaka-hari > த. மசியகிரி]*

**மசியம்** *mašiyam,* பெ.(n.) 1. கருஞ்சீரகம்; black cumin seeds. 2. மிளகு; pepper. (சா.அக.)

**மசிலி**[1] *mašili,* பெ.(n.) **மசியகிரி** (இ.வ.) பார்க்க; see mašiyagiri.

**மசிலி**[2] *mašili,* பெ.(n.) பாதையில் தங்கிச் செல்லும் இடம் (P.T.L.); stage in a journey.

*[U. mazil > த. மசிலி]*

**மசிலிக்கால்** *mašili-k-kāl,* பெ.(n.) மேற்கவிகை கட்டுங் கட்டிலின் மேற்கால் (இ.வ.); the four posts of a cot.

*[மசிலி + கால்]*

**மசுமாஞ்சரி** *mašumāñjari,* பெ.(n.) உத்தா மணி; a creeior (சா.அக.).

**மசூதி** *mašūdi,* பெ.(n.) பள்ளிவாசல்; mosque.

*[U. masjid > த. மசூதி]*

**மசூரம்** *mašūram,* பெ.(n.) 1. தவச வகையுள் ஒன்று (சுக்கிர– நீதி, 321.); a kind of pulse. 2. மூட்டுப்பூச்சி (சங். அக.); bug.

*[Skt. masūra > த. மசூரம்]*

**மசூரி**[1] *mašūri,* பெ.(n.) **மசூரிகை** (வின்.) பார்க்க; see *mašūrigai*

*[Skt. masūrika > த. மசூரி]*

**மசூரி**[2] *mašūri,* பெ.(n.) **மசூதி** (சங். அக.) பார்க்க; see *mašūdi*

*[Skt. masjid > த. மசூதி]*

**மசூரிகம்**[1] *mašūrigam,* பெ.(n.) **மசூரிகை** (வின்.) பார்க்க; see *mašurigai*

**மசூரிகம்**[2] *mašūrigam,* பெ.(n.) **மசூரி**[1] பார்க்க; see *mašūri* (சா.அக.).

**மசூரிகாரோகம்** *mašūrigārōgam,* பெ. (n.) சுரத்தினால் உடம்பு முழுதும் குருவெழும்பும் நோய்; a disease -eruptive fevers. (சா.அக.)

**மசூரிகை** *mašūrigai,* பெ. (n.) பெரியம்மை நோய் (வைசூரி) (இ.வ.); small-pox.

*[Skt. masūrikā > த. மசூரிகை]*

**மசோதா** *mašōdā,* பெ.(n.) 1. மூல ஆவணத்துக்கு முன் படி; rough draft, as of a document. 2. சட்டமாவதற்கு முன் சட்டமன்றத்தில் கொண்டு வரப்படும் சட்ட முன்வரைவு (இக். வ.); draft bill of an act.

**த.வ. முன் வரைவு**

*[U. musau-wada > த. மசோதா]*

**மஞ்சக்கல்** *mañjakkal,* பெ.(n.) நூற்றிருபது இயற்கைச் சரக்குகளுள் ஒன்று; one of the 120 natural drugs. (சக. அக.).

**மஞ்சகணை** *mañjakaṉai,* பெ.(n.) சுரம், வேட்கை இவற்றிற்குப் பயன்படும் ஒரு சரக்கு; a drug used for fever and thirst. (சா. அக.).

**மஞ்சகம்** *mañjagam,* பெ.(n.) கொக்கு; a bird-stork. (சா. அக.).

**மஞ்சகாசிரயம்** *mañjakāširayam,* பெ.(n.) மூட்டுப் பூச்சி; bug. (சா.அக.)

**மஞ்சரி**[1] *mañjari,* பெ.(n.) 1. பூங்கொத்து (பிங்.); cluster of flowers. *"மாணிக்க மஞ்சரியின்........ஒளிசேர்"* (திவ். இயற். பெரிய. 26). 2. பூமாலை (பிங்.); flower garland. 3. தளிர் (பிங்.); shoot, sprout. 4. மலர்க் காம்பு (வின்.); flower stalk. 5. ஒழுக்கம் (சூடா.); rectitude; conformity to rules of conduct. 6. **மஞ்சரிப்பா** (யாழ். அக.) பார்க்க; see mañjari-p-pā. 7. மருந்து வகை (யாழ். அக.); a kind of medicine. 8. முத்து (சங். அக.); pearl.

*[**Skt.** mañjarī > த. மஞ்சரி]*

**மஞ்சரி**[2] *mañjari,* பெ.(n.) நாயுருவி (மலை); plant growing in hedges and thickets.

*[**Skt.** khara-mañjarī > த. மஞ்சரி]*

**மஞ்சரி**[3] *mañjari,* பெ.(n.) பண் வகை (பரத. ராக– பக்.102.); a specific melody-type.

**மஞ்சரி**[4] *mañjari,* பெ.(n.) தொகுப்பு; collection. 'சிறுகதை, மஞ்சரி'. (உ.வ.).

**மஞ்சரிப்பா** *mañjari-p-pā,* பெ.(n.) பனுவல் வகை; a kind of poetic composition. *"கிருஷ்ணராயற்கு மஞ்சரிப்பா................செய் ஞானப்ர காச குருராயன்"* (தொண்டை. சத. 95.)

*[**Skt.** mañjari > த. மஞ்சரி]*

**மஞ்சரிப்புட்பம்** *mañjari-p-puṭpam,* பெ.(n.) புங்கு; a tree.(சா.அக.).

**மஞ்சரீகம்** *mañjarīgam,* பெ.(n.) மருக் கொழுந்து (மூ.அ.); southern wood.

**மஞ்சல்** *mañjūl,* பெ.(n.) **மஞ்சூர்** (இ.வ.) பார்க்க; see mañjūr.

**மஞ்சலி** *mañjali,* பெ.(n.) உருத்திர சடை; sweet basil. (சா.அக.).

**மஞ்சலோகயம்** *mañjalōgayam,* பெ.(n.) தூக்கணாங்குருவி; a bird which see the loxia bird that builds hanging nests on the top of tree. (சா.அக.).

**மஞ்சிட்டிமேகம்** *mañjiṭṭimēgam,* பெ.(n.) சிறுநீரில் காணப்படும் ஒருவகைக் காரப் பொருள்; an alkaloid substance found in the urine. (சா.அக.).

*[மஞ்சிட்டி + மேகம்]*

**மஞ்சிடாலிகம்** *mañjiḍāligam,* பெ.(n.) மலை நொச்சி; hill nocci. (சா.அக.).

**மஞ்சிடாலை** *mañjiḍālai,* பெ.(n.) வாழை; plantain. (சா.அக.).

**மஞ்சிடாவிகம்** *mañjiḍāvigam,* பெ.(n.) கண் சிவந்து கண்ணீர் வடிகை; an eye disease marked by redness of the eye and watering. (சா.அக.).

**மஞ்சிபத்திரி** *mañji-pattiri,* பெ.(n.) 1. ஒரு நறுமணப்பூண்டு; a fragrant leaf. 2. காட்டு மல்லிகை; jasminum Angustifolium. 3. மகர வாழை; a kind of plantain. (சா.அக.).

**மஞ்சிலை** *mañjilai,* பெ.(n.) செங்கல்; brick. (சா.அக.).

**மஞ்சினி** *mañjiṉi,* பெ.(n.) புழுங்கலரிசி; boiled rice. (சா.அக.).

**மஞ்சீரம்** *mañjīram,* பெ.(n.) காற்சிலம்பு; tinkling anklet. *"மஞ்சீர மாறாவனகிரி"* *(அழகர்கல. 8)*

*[**Skt.** mañjīra > த. மஞ்சீரம்]*

**மஞ்சுகம்** *mañjugam,* பெ.(n.) கொக்கு; stork. (சா.அக.).

**மஞ்சூர்** *mañjūr,* பெ.(n.) ஏற்றுக்கொள்ளப் பட்டது; that which is accepted or approved.

*[U. manzūr > த. மஞ்சூர்]*

**மஞ்சூரம்**[1] *mañjūram,* பெ.(n.) கடலை (பிங்); bengal gram.

*[Skt. masūra > த. மஞ்சூரம்]*

**மஞ்சூரம்**[2] *mañjūram,* பெ.(n.) மஞ்சாடி மரம்; barbadoes. *"மஞ்சூர் மிலக்கங்கொண்டு"* (வீரவன. உமையாண். 20)

**மஞ்சூருத்திரவு** *mañjūr-uttiravu,* பெ.(n.) உறுதி செய்யப்பட்டதைக் குறிக்குங் கட்டளை (இ.வ.); order of confirmation.

*[மஞ்சூர் + உத்திரவு]*

**மஞ்சொட்டி** *mañjotti,* பெ.(n.) பூடுவகை; a kind of herb.

**மட்சத்திரியம்** *matšattiriyam,* பெ.(n.) பேய்ச் சுரை; a wild and bitter gourd. (சா.அக.).

**மட்சிகம்** *matšigam,* பெ.(n.) ஈ (சங்.அக.); fly.

*[Skt. makṣika > த. மட்சிகம்]*

**மட்சிகை** *matšigai,* பெ.(n.) மட்சிகம் (சங். அக.) பார்க்க; see matšigam.

*[Skt. makṣikā > த. மட்சிகை]*

**மட்சிமயம்** *matšimayam,* பெ.(n.) அதிமதுரம்; liquorice. (சக. அக.)

**மணிலா** *manilā,* பெ.(n.) நிலக்கடலை; peanut, groundnut.

மணிலா தேயத்திலிருந்து கொண்டு வந்து பயிர் செய்யப்பட்டமையால் இதற்கு இப்பெயர் உண்டாயிற்று.

**மணிலாக்கடலை** *manilākkadalai,* பெ.(n.) வேர்க்கடலை; ground nut exported from Manilla. (சா.அக.).

**மணிலாக்கயிறு** *manilā-k-kayiru,* பெ.(n.) பேயன் வாழை நாராற் செய்த கயிறு; manilla rope.

*[மணிலா + கயிறு]*

*[E. manilla + karyiru > த. மணிலாக்கயிறு]*

**மணிலாக்கிச்சிலி** *manilā-k-kiccili,* பெ.(n.) கத்தூரி எலுமிச்சை; lime berry - tree of manila.

*[மணிலா + கிச்சிலி]*

**மணிலாக்கொட்டை** *manilā-k-kottai,* பெ. (n.) நிலக்கடலை; peanut; ground-nut.

*[மணிலா + கொட்டை]*

**மணிலாச்சுருட்டு** *manilā-c-curuttu,* பெ.(n.) ஒரு வகைப் புகைச் சுருட்டு; Manila cheroot.

*[மணிலா + சுருட்டு]*

**மணிலாத்தா** *manilāttā,* பெ.(n.) மணிலா சீத்தாப்பழம்; manilla custard apple. (சா.அக.).

**மணிலாப்பயறு** *manilappayaru,* பெ.(n.) வேர்க்கடலை; groundnut. (சா.அக.).

**மத்திபகந்தம்** *mattibakandam,* பெ.(n.) மாமரம்; mango tree. (சா.அக.).

**மத்திபம்** *mattibam,* பெ.(n.) **மத்திமம்** பார்க்க; see mattimam. (சா.அக.).

**மத்திம** *mattima,* பெ.(n.) நடு; sub acute. (சா.அக.).

**மத்திமக்கிராமம்** *mattima-k-kirāmam,* பெ.(n.) பண்வகை (பரத. இராக. 80); a melody type.

*[Skt. modhyama + kirāma > த. மத்திமக்கிராமம்]*

**மத்திமக்கூர்மை** *mattima-k-kūrmai,* பெ.(n.) நிலச்சாரம் (யாழ். அக.); salt extracted from sesame seeds.

*[Skt. madhyan > த. மத்திம + கூர்மை]*

**மத்திமகண்டம்** *mattima-kaṇḍam,* பெ.(n.) ஒன்பான் (நவ) கண்டத்தில் ஒன்று (பிங்); a continent, one of navakaṇḍam.

*[Skt. madhyama > த. மத்திம]*

**மத்திமகாலம்** *mattima-kālam,* பெ.(n.) விரைவு இல்லாமல் நடுத்தரமாகப் பாடும் முறை; medium speed in singing, moderato.

**த.வ. நடுவண் காலம்**

*[Skt. madhyama > த. மத்திம]*

**மத்திமச்சம்** *mattimaccam,* பெ.(n.) வாலுழுவை (சங்.அக.); black oil tree.

**மத்திமசங்காரம்** *mattima-šaṅgāram,* பெ.(n.) மாயை வரை அழிக்கப்படும் சங்காரம் (சி.சி. 1, 35, மறைஞா.); partial dissolution of the universe.

*[Skt. madhyama + sam-hāra > த. மத்திமசங்காரம்]*

**மத்திமசாகசம்** *mattima-šāgašam,* பெ. (n.) ஐந்நூறு பணம் அளவுள்ள தண்டத்தொகை (சுக்கிரநீதி, 172.); fine of 500 fanams.

*[Skt. madhyama+sāhasa > த. மத்திமசாகசம்]*

**மத்திமதீபம்** *mattima-dipam,* பெ. (n.) இடைநிலைத் தீவகம் (சீவக. 27, உரை.); a figure of speech.

*[Skt. madhyama+dvīpa > த. மத்திமதீபம்]*

**மத்திமதேசம்** *mattima-dēšam,* பெ.(n.) இமயமலைக்குத் தெற்கும், விந்தியத்திற்கு வடக்கும். வினசனத்துக்குக் கிழக்கும், பிரயாகைக்கு மேற்குமுள்ள நாட்டுப்பகுதி; midland country lying between the *Himālayas* on the north, the *Vindhayas* on the south, *Vinasana* on the west and *Prayaga* on the east.

*[Skt. madhyama+tēja > த. மத்திமதேசம்]*

**மத்திமப்பிரகிருதி** *mattima-p-pirakirudi,* பெ.(n.) உடம்பில் பித்தத்தின் தன்மை அதிகமாகப் பெற்றிருத்தல்; billous temperament of the body. (சா.அக.)

**மத்திமபதலோபன்** *mattimapada-lōpaṉ,* பெ.(n.) நடுச்சொல் தொக்க தொகை (பி.வி.21, உரை.); compound word which omits the middle member.

*[Skt. madhyama + pada + lopa > த. மத்திமபதலோபன்]*

**மத்திமபரிசம்** *mattima-parišam,* பெ.(n.) கோள்மறைப்புத் தொடக்கத்தின் நடுவேளை (வின்.); mean time of the beginning of an eclipse.

*[Skt. madhyama+sparša > த. மத்திமபரிசம்]*

**மத்திமபுடம்** *mattima-puḍam,* பெ.(n.) கோள் அளவை வகை (வின்.); mean longitude of a planet.

*[Skt. madhyama+sphuḍā > த. மத்திமபுடம்]*

**மத்திமபுத்தி** *mattima-putti,* பெ.(n.) கோளின் நாலும் இயங்கு வகை (வின்.); (Astron) mean daily motion of a planet.

**மத்திமபுருடன்** *mattima-puruḍaṉ,* பெ.(n.) முன்னிலை இடம் (பி.வி. 44.); second person.

**த.வ. முன்னிலை**

*[Skt. madhyama+purusa > த. மத்திமபுருடன்]*

**மத்திமபூமி** *mattima-būmi,* பெ.(n.) 1. உலகத்தின் நடுப்பாகம் (இக்.வ.); torrid zone. 2. குளிர்ச்சியும் வெப்பமும் சமமான நிலம் (வின்.); temperate zone.

**மத்திமம்[1]** *mattimam,* பெ.(n.) 1. நடு (சூடா.); middle position. 2. நடுத்தரம்; mediocrity; what is middling or ordinary. 3. மட்டமானது; anything interior or dull. "அவனுக்குக் காது மத்திமம்". 4. சமனிசை (பரத. இராக. 13.) (சூடா.); middle sound. 5. ஏழிசைகளில் நான்காவதாகிய 'ம' என்ற பண் (சிலப். 3,23,

உரை); fourth note of the gamut. 6. இலயை வகை (பரத. தாள. 51.); a variety of *ilayai* of moderate speed. 7. இடையுறுப்பு (பிங்.); the waist. 8. **மத்திமதேசம்** பார்க்க; see *mattima-dēšam* "மத்திம நன்னாட்டு" (சிலப். 15, 178) 9. சராசரியளவை (வின்.); mean average. 10. அசுவகதி ஐந்தனுள் ஒன்று (குறள், 814, உரைக்குறிப்பு); a pace of horse, one of five *ašuva-kadi*.

**மத்திமம்²** *mattimam,* பெ.(n.) நடுவு நிலைமை என்னுஞ் சுவை (தொல். பொ. 245, இளம்பூ.); *šānta rasa*, the sentiment of tranquility.

*[Skt. madhyama > த. மத்திமம்]*

**மத்திமம்³** *mattimam,* பெ.(n.) குறைந்த பார்வை; short sightedness. (சா.அக.)

**மத்திமவிம்சதி** *mattima-vimšadi,* பெ.(n.) அறுபது ஆண்டுக் கணக்கில் சர்வசித்து முதல் பிராபவ ஆண்டு வரையுள்ள இடையிருபது ஆண்டுகள் (பஞ்.); the second period of 20 years from *šarvašittu* to *parāpava* in the jupiter cycle.

*[மத்திமம் + விம்சதி]*

*[Skt. madhyma+vimcati > த. மத்திமவிம்சதி]*

**மத்திமன்** *mattiman,* பெ.(n.) 1. எளிமையாக இருப்பவன்; man of ordinary abilities. 2. நடுநிற்போன்; impartial person; unpire. 3. நடுத்தரமானவன் (யாழ். அக.); person of middling status or position.

*[Skt. madhyama > த. மத்திமன்]*

**மத்தியமாவதி** *mattiyamāvadi,* பெ.(n.) பண் வகை; (Mus.) a melody type.

*[Skt. madhyamāvati > த. மத்தியமாவதி]*

**மத்தியரேகை** *mattiya-rēgai,* பெ.(n.) நிலநடுக்கோடு (பூமத்திய ரேகை) (இக்.வ.); equator.

*[Skt. madhya-rēkhā > த. மத்தியரேகை]*

**மத்தியத்தம்** *mattiyattam,* பெ.(n.) அமைவு செய்தல், இணக்கம் செய்தல் (பஞ்சாயத்து); mediation, arbitrators.

த.வ. **இணக்கம்**

*[Skt. madhyastiba > த. மத்தியத்தம்]*

**மத்தியத்தர்** *mattiyattar,* பெ.(n.) இணக்கம் செய்வோர்(பஞ்சாயத்தார்); panchāytdārs, arbitrators, umpires.

த.வ. **இணக்கர், நடுவர்**

*[Skt. madhyastha > த. மத்தியத்தர்]*

**மத்தியானசுரம்** *mattiyānašuram,* பெ.(n.) நடுப்பகலில் காணும் ஒரு வகைக் காய்ச்சல்; a fever appearing at noon. (சா. அக.).

*[Skt. madhyana > த. மத்தியான]*

**மத்தியானம்** *mattiyānam,* பெ.(n.) நடுப்பகல் (பிங்); noon, mid-day. *"மத்தியானமு மானயு மகன்ற பின்"* (பிரபோத. 10, 12).

த.வ. **நண்பகல்**

*[Skt. madhyāhna > த. மத்தியானம்]*

**மத்தோன்மத்தன்** *mattōnmattan,* பெ.(n.) 1. முழுப் பித்தன்; person who has gone utterly mad. *"எனை மத்தோன் மத்தனாக்கி"* (திருவாச. 34, 3). 2. மிகச் செருக்கு உடையோன்; person eaten up with pride.

*[Skt. mattōnmatta > த. மத்தோன்மத்து]*

**மதனி** *madani,* பெ.(n.) 1. **மதினி** பார்க்க; see madini. *"இச்சீதையும் உன் மதனி"* (இராமநா. அயோத். 21).

**மதினி** *madini,* பெ.(n.) 1. அண்ணன் மனைவி; elder brother's wife. 2. மைத்துனி (இ.வ.); wife's sister. 3. மாமன் மகளிருள் தனக்கு மூத்தவள்; daughter of one's maternal uncle, older than oneself. 4. தமையன் மகள்; elder brother's daughter.

**மதியம்** *madiyam,* பெ.(n.) 1. நடு; centre. "ஓரினன் மதியத்தினை யோதுமே" (மேருமந். 1127). 2. நடுப்பகல் (இ.வ.); noon, midday.

*[Skt. madhya > த. மதியம்]*

**மதுசூதனன்** *madušūdaṉaṉ,* பெ.(n.) திருமால் (மதுவென்னும் அசுரனைக் கொன்றவன்); Viṣṇu, as the slayer of madhu.

*[Skt. madhu+šūdana > த. மதுசூதனன்]*

**மதுசூதன்** *madušūdaṉ,* பெ. (n.) **மதுசூதனன்** பார்க்க; see madušūdaṉaṉ "மதுசூதனையயன்றி மற்றிலே னென்று" (திவ். திருவாய். 2,7,6.)

**மதுரகவி** *madura-kavi,* பெ. (n.) 1. நாற்கவிகளுள் இனிமை பெருகப் பாடும் பாவலன் (கவி) (பிங்.); poem specially characterised by mellifluous language, one of nāṟ - kavi. 2. இன்கவி பாடும் புலவன்; poet who composes poems in mellifluous language. 3. நம்மாழ்வாரின் மாணாக்கரும் நாலாயிரம் தெய்வப் பனுவலில் (திவ்யப் பிரபந்தத்தில்) 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற பனுவல் பாடிய வருமான ஆழ்வார்; (திவ். கண்ணிநுண். 10.) a Vaiṣṇava saint an disciple of *Nammāḻvār,* the author of *Kaṇṇinuṇ-šiṟuttāmbu* in *Divya-p-pirapandam.*

*[Skt. madura-kavi > த. மதுரகவி]*

**மம்மதுகான்வராகன்** *mammadukāṉ-varāgaṉ,* பெ. (n.) காசு வகை (பணவிடு. 116.); a coin.

*[Ar. மகமதுகான் + வராகன்]*

**மம** *mama,* பெ.அ. (adj.) என்னுடைய; mine. *"மமவி நாயகன்"* (திருப்பு. 16.).

*[Skt. mama > த. மம]*

**மமதை** *mamadai,* பெ. (n.) செருக்கு; conceit, vanity. *"பரசுராமனுக்கு மமதையைப் பிரித்து"* *(இராமநா. பாயி. 5).*

*[Skt. mama-tā > த. மமதை]*

**மய்யம்** *mayyam,* பெ. (n.) நடு, இடை (இ.வ.); middle, centre.

*[Skt. madhya > த. மய்யம்]*

**மயுராசன்** *mayūrāšaṉ,* பெ. (n.) குபேரன் (யாழ்.); kubēra, as lord of kinnaras.

**மயூரகதி** *mayūragati,* பெ. (n.) குதிரை நடை ஐந்தனுள் மயில் போன்ற நடை; a pace of horse, remembling that of a Peacock.

**மயூரம்** *mayūram,* பெ.(n.) 1. மயில் (சூடா.); peacock. "வழிக்குத் துணை வடிவேலும் ....... மயூர முமே" (கந்தரலங். 70.) 2. **மயூராசனம்** பார்க்க; see mayūrāšaṉam. "மயூர முழங்கை யிரண்டு முந்திப் புறத்தழுந்தப் புவிகை யூன்றி யகமொருமித் தடிநீட்டித் தலைநிமிர்த்து வைகல்" (பிரபோத. 44,10.). 3. **மயூரகதி** பார்க்க; see mayūra-kadi. 4. செடி வகை; peacock's crest. 5. வாதநாராயணம்; flamboyant. 6. ஒருவகை சிறு மரம்; false peacock's foot tree. 7. நாயுருவி; a plant growing in hedges and thickets. 8. குராசானி என்னும் ஓமமுண்டாகும் ஒருவகைப் பூடு; black henbane.

*[Skt. mayūra > த. மயூரம்]*

**மயூராசனம்** *mayūrāšanam,* பெ. (n.) ஒகவகையிலொன்று; a kind of posture.

**மயேச்சரன்** *mayēccuraṉ,* பெ. (n.) 1. சிவன்; Sivaṉ. 2. யாப்பிலக்கண நூலாசிரியருள் ஒருவர்; the author of a treatise on prosody. "மயேச்சுரர் முதலாகிய ஒரு சார் ஆசிரியர்." (காரிகை, உறுப்பு. 14. உரை.).

த.வ. பெருவுடையார்

*[Skt. mahēšvara > த. மயேச்சுரன்]*

**மாகதர்** *māgadar,* பெ. (n.) 1. வடநாட்டிலுள்ள மகதநாட்டார். (யாழ்.அக.); inhabitants of Magadha, in North India. 2. தென்னாட்டுள்ள நடுநாடாகிய மகதநாட்டினர்; (msc); inhabitants of *naṭunāṭu.* 3. அரசர் திருமுன் இருந்து அவர் புகழ்பாடும் தொழிலினர் (சிலப் 5, 48.); professional Minister's who assuming a sitting posture in the presence of sovereigns sing their praises and exploits.

*[Skt. māgadha > த. மாகதர்.]*

**மாகதி** *māgadi*, பெ. (n.) 1. பிராகிருத மொழி வகை; Māgadhī, a secondary prākṟt language. 2. திப்பிலி (மலை); long pepper. 3. முல்லைவகை (நாமதீப. 346.); trichotomus - flowering smooth jasmine. 4. ஊசிமுல்லை (பிங்.); eared jasmine 5. சீனிச்சருக்கரை (சங். அக.); sugar.

*[Skt. māgadhī > த. மாகதி.]*

**மாகம்**[1] *māgam*, பெ. (n.) கொடுநுகம் (மகம்) (விண்மீன்) (பிங்.); the 10th nakṣatra.

*[Skt. maghā > த. மாகம்[1].]*

**மாகம்**[2] *māgam*, பெ. (n.) 1. மேலிடம்; upper space. 'மாக மாடத்து' (கம்பரா. மிதிலைக் 83.) 2. வானம்; sky, air, atmosphere. 'மாக விசும்பின்' (புறநா. 35). 3. மேல் உலகம்; *svarga* 'மாகந் தொட நனி நிவந்த கொடி' (ஞானா. 34,15). 4. திக்கு point of the compass. 'மாகநீள் விசும் பிடை' (சீவக. 569.). 5. மேகம் cloud. (சீவக. 569. உரை.); cloud.

*[Skt. maghā-kha > த. மாகம்.]*

**மாகாணம்** *māgāṇam*, பெ. (n.) 1. நாட்டுப் பகுதி; district, province. 2. ஒரு வரியதி காரியின் (கர்ணத்தின்) ஆய்கையின் கீழ் உள்ள பல சிற்றூர்கள் அடங்கிய நாடு; division of a taluk, consisting of several villages, under the management of one *karnam* (R.F.). 3. மக்கள் கூட்டம்; group of dependants gathered for a common purpose. 'ஆள் மாகாணம்'

*[U. makān > த. மாகாணம்.]*

**மாகாத்மியம்** *māgātmiyam*, பெ. (n.) மகிமை, grreatness.

*[Skt. māhāt-mya > த. மாகாத்மியம்.]*

**மாகாளன்** *māgāḷaṉ*, பெ. (n.) 1. மகாசாத் தனுடைய தலைமைக் கணக்கன்; the chief attendant of *makāśātta*. 'வீர மாகாள னென்போன்' (கந்தபு. மாகாளர்வரு.3) 2. சிவகணத்தலைவரில் ஒருவன் (அபி. சிந்), a commander of Siva's hosts.

*[Skt. mahā-kāla > த. மாகாளன்.]*

**மாங்கலியசூத்திரம்** *māṅgāliya-śūttiram*, பெ. (n.) 1. தாலிச்சரடு (சிலப். 1, 47, அரும்.); the cord of the marriage-badge.

*[Skt. māṅgalya+sūtra > த. மாங்கலிய சூத்திரம்]*

**மாங்கலியப்பிச்சை** *māṅgāliya-p-piccai*, பெ. (n.) தான் தாலியுடன் வாழும் வகையில் தன் கணவனுயிரைக் காக்குமாறு ஒருத்தி வேண்டுகை; intercession of a wife for the life of her husband, as pleading for the retention of her tali.

*[Skt. māṅgalya > த. மாங்கலியப்பிச்சை.]*

**மாங்கலியம்** *māṅgāliyam*, பெ. (n.) தாலி (சிலப். 2, 63 உரை.); marriage badge.

*[Skt. māṅgalya > த. மாங்கலியம்.]*

**மாங்கிசம்** *māṅgiśam*, பெ. (n.) இறைச்சி (மாமிசம்); flesh; meat. 'மாங்கிசத்துடனே விரவின சோறு' (சிலப் 5, 68, அரும்.)

*[Skt. māṃsa > த. மாங்கிசம்.]*

**மாச்சரியம்** *māccariyam*, பெ. (n.) 1. பொறாமை; envy. 'மாச்சரியத் தாலிகழின் வந்த தென்' (உபதேசரத். 2). 2. பகைமை; *malice; hostility*. 'மாச்சரியங் கொண்டரக்கர் அட்ட திசை மேலும் மேவினார்' (இராமநா. யுத். 88.).

*[Skt. mātsarya > த. மாச்சரியம்.]*

**மாசூல்** *māśūl*, பெ. (n.) பயிரின் விளைச்சல்; product of a field, produce of grain.

*[U. māhsul > த. மாசூல்.]*

**மாசூன்** *māśūṉ*, பெ. (n.) சுவையும் நறுமணமும் ஊட்டிய மயக்கவுணவு வகை (C.G.).; an inebriating preparation, sweetened and spiced.

*[U. májūn > த. மாசூன்.]*

**மாஞ்சா** *māñjā*, பெ. (n.) காற்றாடிக் கயிற்றில் தடவுதற்குக் கண்ணாடிப் பொடியோடு கலந்த பிசின் வகை; a kind of glue, prepared with glass - dust and used to rub the kite-string.

*[U. māñjā > த. மாஞ்சா.]*

**மாத்துவம்** *māttuvam*, பெ. (n.) மாத்துவரின்" (துவைதம்) இருமைக் கோட்பாடு; dualist or *Dvaita* school of Madhva.

*[Skt. mādhva > த. மாத்துவம்.]*

**மாத்துவர்** *māttuvar*, பெ. (n.) மாத்துவர் மதத் தினரான துவைதிகள்; followers of *Madhva's Dvaita* philosophy.

*[Skt. mādhva > த. மாத்துவர்.]*

**மாதா** *mādā*, பெ. (n.) 1. தாய் (பிங்.); mother 'மாதாபிதாவாகி' (தேவா. 1227,7). 2. மலைமகள் (பிங்.); Pārvatī. 3. கலைமகள் (பிங்.); Saraswati. 4. அறிபவன் (சங். அக.); the knower.

*[Skt. mātā > த. மாதா]*

**மாதுலன்** *mādulan*, பெ. (n.) 1. தாயுடன் பிறந்த ஆண், மாமன்; maternal uncle. 'ஒரு சாரவன் மாதுலனென (கல்லா. 43, 24) 2. பெண் கொடுத்த மாமன்; father-in-law. 3. 'நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்' (கம்பரா. ஆற்றுப். 3.)

*[Skt. mātula>த. மாதுலன்.]*

**மாந்திரீகன்** *māntirīgan*, பெ. (n.) மந்திர ஆற்றலால் சிறந்த ஆற்றலைச் செலுத்துபவன் (இ.வ.); one who exercises supernatural powers by means of mantras.

*[Skt. māntrika>த. மாந்திரீகன்.]*

**மாபாடியம்** *mā-pāṭiyam*, பெ. (n.) 1. பேருரை; elaborate commentory. *'சிவஞானபோத மாபாடியம்'* 2. பாணினி சூத்திரங்களுக்குப் பதஞ்சலியார் செய்த பேருரை. (நன். 373, விருத்.); Patañjali's commentary on the Sūtras of pāṇini.

*[Skt. mahā-bhāṣya>த. மாபாடியம்.]*

**மாமிசபட்சணம்** *māmisa-paṭcaṇam*, பெ. (n.) ஊனுணவு; flesh eating.

*[Skt. māṃsa+paṭcana>த. மாமிசபட்சணம்.]*

**மாமிசபட்சணி** *māmiša-paṭcaṇi*, பெ. (n.) 1. ஊனுண்போன் (வின்.); flesh eater. 2. புலாலுண்ணும் விலங்கு (இக்.வ.); flesh eating animal, dist. fr. šāka-paṭcaṇi.

*[Skt. māṃsa+paṭcana>த. மாமிசபட்சணி.]*

**மாமிசம்** *māmišam*, பெ. (n.) 1. தசை; flesh muscle. 2. இறைச்சி; meat.

*[Skt. māṃsa>த. மாமிசம்.]*

**மாமூல்** *māmūl*, பெ. (n.) பழைய வழக்கம்; that which is established, customary or usual, established usage, immemorial custom.

*[Skt. māmūl>த. மாமூல்.]*

**மாமூல்கடமை** *māmūl-kaḍamai*, பெ. (n.) குலவழக்கப்படி ஏற்பட்ட வரித்திட்டம் (உ.வ.); revenue rate fixed by longstanding custom.

*[Skt. māmūl>த. மாமூல்+கடமை.]*

**மாயாவாதம்** *māyā-vādam*, பெ. (n.) உலகம் யாவும் மாயையே என்று பௌத்தம் அத்துவைத மதங்களில் கூறப்படும் கொள்கை; the doctrine that regards the material universe as an illusion, applied to the doctrines of the Advaita and Buddhism. *'மிண்டிய மாயாவாத மென்னுஞ் சண்ட மாருதம்' (திருவாச. 4, 54.)*

*[Skt. māyā+vāta>த. மாயாவாதம்.]*

**மாயூரம்** *māyūram*, பெ. (n.) 1. மயில்; Peacock; (திருவானைக்வுலா. 233.) (வின்.) 2. தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஒரு சிவன் கோயில்; māyavaram, a siva shrine in the Tanjore District.

*[Skt. māyūra+vāta>த. மாயூரம் >த. மயில்]*

**மார்க்கம்** *mārkkam*, பெ. (n.) 1. வழி (பிங்.); road, path, way, orbit. 2. நெடுந்தெரு (பிங்.); street, long street, 3. ஒழுங்கு (.உ.வ.); regularity, order. 4. முறை; manner. 'இன் னுயிர் போமார்க்கம்' (நாலடி, 323). 5. ஒழுக்கம் (வின்.); conduct, behaviour, course of duty. 6. சமயம் (பிங்); religion. 7. மூலம்; first principle, cause. 8. குலம்;

lineage, line of family. 'அவன் வேரற மார்க்க முடித்த விலாளிகள் நாயகன்' (திருப்பு. 266.). 9. மறுதலை. (அக.நி.); alternative. 10. ஆராய்ச்சி (யாழ்.அக.); investigation. 11. வழி; ways, means. *'மார்க்கமொன்றறிய மாட்டா மனிசரிற் றுரிசனாய மூர்க்கனேன்' (திவ். திருமாலை, 32.)* 12. **மார்கழி.** பார்க்க; see *margali.* 13. மான்மணத்தி. (யாழ். அக.); musk. 14. அகப்பொருட்டுறை. (இலக். வி. 583. உரை.); theme of love poetry. 15. கூத்து வகை. (பிங்.); a kind of dance. 16. தாள வகையுள் ஒன்று (சது); an element of time-measure, one of ten *tāla-p-pirāṇam.* 17. குதிரையடி நிலை; pace of horse. *'பரிப்புரவி மார்க்கம் வருவார்.' (பரிபா. 9, 51.)* உலகம் (யாழ். அக.); world.

*[Skt. mārga>த. மார்க்கம்.]*

**மார்கழி** *mārgaḻi,* பெ. (n.) சிலைத் திங்கள் சூரிய மாதம் பன்னிரண்டுள் ஒன்பதாவது; the ninth solar month = December - January. *"மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்' (திவ். திருப்பா..1)*

*[Skt. mārgaśīsa>த. மார்கழி.]*

**மார்வாரி** *mārvāri,* பெ. (n.) வடஇந்தியாவிலுள்ள மார்வார் நாட்டிலிருந்து வந்து கொடுக்கல் வாங்கல் வணிகம் முதலிய தொழில் புரியும் ஓர் இனத்தவர்; a caste of traders and money lenders, from *Mārwār* in North India.

*[Skt. mārwārī>த. மார்வாரி.]*

**மார்வாடி** *mārvāṭi,* பெ. (n.) **மார்வாரி** பார்க்க; see mārvāri.

**மார்த்தாண்டன்** *mārttāṇḍaṉ,* பெ. (n.) கதிரவன் (பிங்.); the sun. *'மார்த்தாண்டர் பன்னிருவ ருலாவல் போலும்' (திருப்போ. சந்த ஊசல்.2.)*

*[Skt. mārtāṇda>த. மார்த்தாண்டன்.]*

**மார்ச்சாலநியாயம்** *mārccalaniyāyam,* பெ. (n.) ஒரு தலை சார்பான முடிவு (வின்.); biassed judgment, as that of a cat.

*[Skt. mārjāla+nyāya>த. மார்ச்சாலநியாயம்]*

**மார்ச்சாலம்** *mārccālam,* பெ. (n.) 1. பூனை; cat. 2. கோமேதகம்; a gem, cat's eye - cinnamon stone 3. மரநாய்; pole, cat or palmyra dog. (சா.அக.).

*[Skt. mārjāla>த. மார்ச்சாலம்.]*

**மாரணஞ்செய்தல்** *māraṇañ-jēy,* தொ.பெ. (vbl.n.) இறக்கும்படியாக மந்திரத்தால் அல்லது செய்வினையால் செய்கை; causing death by magic or witch craft.

**மாரணம்** *māraṇam,* பெ. (n.) 1. இறப்பு; death. "மாரணஞ் செயலன்றி வதிவனோ" (சேதுபு. இராமனருச். 188). 2. அழிவு (இலக். அக.); destruction. 3. எட்டுவகை கருமத்துள் ஒருவனை மந்திரத்தாலிறக்கச் செய்யும் கலை; the art of causing one's death by incantation, one of *aṣṭa-karumam.* 'நெஞ்சமாகிய பாதரச மாரணமாய் விடும்' (தாயு. பாயப்புலி. 25.). manthiram causing death. (சா.அக.).

*[Skt. māraṇa>த. மாரணம்.]*

**மாரணமந்திரம்** *māraṇamandiram,* பெ. (n.) இறப்பை உண்டாக்கும் மந்திரம்; *mandiram* causing death. (சா.அக.).

**மாரணவேதர்** *māraṇa-vēdar,* பெ. (n.) பொன்னாக்கும் முறைகளை இயற்றிய சித்தர்களிலொருவர்; one of the siddhars who is an alchemist. (சா.அக.).

**மாரீசம்** *mārīśam,* பெ. (n.) 1. ஏய்ப்பு, வஞ்சகம் (வின்.); hypocrisy, dissimulation. 2. மூர்ச்சை. (இராசவைத். 103); swoon.

*[Skt. mārīca>த. மாரீசம்.]*

**மாரீசன்** *mārīśaṉ,* பெ. (n.) இராமாயணத்தில் இராவணன் ஏவலாற் பொன்மானுருக் கொண்ட அரக்கன்; a *Rākṣasa,* who, in the guise of a golden deer and at *Rāvaṇa's* instigation, enticed Rāma away from his

hermitage. *'இந்திய மடக்கி நின்ற மாரீச னிருக்கை சேர்ந்தான்' (கம்பரா. மாரீச. 169.).*

*[Skt. Mārica>த. மாரீசன்.]*

**மாருதம்** *mārudam,* பெ. (n.) காற்று (பிங்.); wind. *'மறிகடலு மாருதமும்'* (திவ். இயற். 1, 10).

*[Skt. māruta>த. மாருதம்.]*

**மாருதகணம்** *māruda-kaṇam,* பெ. (n.) தேமாங்கனி என்னும் வாய்பாடு பற்றி வருவதும் நூன்முதற் செய்யுளின் முதலில் அமையத் தகாததும் அமங்கலமுமான செய்யுட்கணம். (திவா.); metrical foot of nēr and one nirai (two), as *tēmāṅgaṉi,* considered inauspicious at the commencement of a poem.

**மாருதன்** *mārudaṉ,* பெ. (n.) காற்றுக்கடவுள்; Vāyu, the God of wind. *"மாருத னிசைந்து ...தேரின் மீமிசைப் பாய்ந்து" (கந்தபு. படைபெ.2)*

*[Skt. māruta >த. மாருதன்.]*

**மாருதி** *mārudi,* பெ. (n.) 1. அனுமான்; Hanuman, as a son of the wind-god. 'மாருதியல்ல னாகி னீயெனு மாற்றம் பெற்றேன்' (கம்பரா. அங்கத.13). 2. வீமன் (பிங்); *Bhīmasēna,* as a son of the wind-god.

*[Skt. māruti>த. மாருதி.]*

**மால்[1]** *māl,* பெ. (n.) 1. எழுதகக்கருவி (வின்.); wooden mould for forming the mouldings of a pillar or cornice of wall. 2. செங்கற் கட்டளை. (இ.வ.); mould for making bricks. 3. காளவாய். (இ.வ.); brick - kiln. 4. முன் வடிவு (மாதிரி) (வின்.); form, plan, fashion. 5. எல்லை. (வின்.); demarcation, limit. 6. வலை வகை (வின்.); a kind of net. 7. கொட்டில், இலாயம் (வின்.); stable, stall. 8. அரசிறை வகை. (வின்); quit - rent. 9. சொத்து; property.

*[Ar. māl>த. மால்.]*

**மால்[2]** *māl,* பெ. (n.) அரண்மனை; Palace. 'திருமலைநாயக்கர்மால்'

*[Ar. mahall>த. மால்.]*

**மால்குசாரி** *māl-kušāri,* பெ. (n.) வரிசெலுத்து தற்குரிய நிலம் (C.G.); land liable to pay revenue to government, opp. to *lākiraj.*

*[U. māl-guzārī >த. மால்-குசாரி.]*

*[Skt. māruta >த. மாருதகணம்.]*

**மால்சாமீன்** *māl-šāmīṉ,* பெ. (n.) பிணைய சொத்து (C.G.); property security.

*[Ar. māl + zāmin>த. மால்சாமீன்.]*

**மால்தார்** *māltār,* பெ. (n.) உரிமையன் (இ.வ.); proprietor.

*[Ar. māl >த. மால்தார்.]*

**மால்பண்டாரி** *māl-paṇḍāri,* பெ. (n.) 1.வீட்டுப் பொருள்களைப் பாதுகாக்கும் மேலாள்; steward, store keeper. 2. கப்ப லுரிமையாளனுடைய கீழாள் (Naut.); clerk of a ship owner.

*[Ar. māl +paṇṭāri>த. மால்பண்டாரி.]*

**மால்போடு-தல்** *māl-pōṭu-,* 20 செ.கு.வி. (v.i.) எல்லை வரைதல் (இ.வ.); to draw a plan; to demarcate.

*[Ar. māl >த. மால்+போடு-தல்.]*

**மால்முடி-தல்** *māl-muḍi-,* 4 செ.கு.வி. (v. i.) வலை பின்னுதல் (இ.வ.); to make a net.

*[Ar. māl >த. மால்முடி-தல்.]*

**மால்வெட்டு-தல்** *māl-veṭṭu-,* 5 செ.கு.வி. (v. i.) முன்வடிவு (மாதிரி) செய்தல். (வின்.); to out a form or pattern, make a plan or diagram. 2. பாத்தியமைத்தல் (யாழ். அக.); to form plots bounded by ridges. 3. கையூட்டு தருதல்; to bribe (இ.வ.).

*[Ar. māl >த. மால்+வெட்டு-தல்.]*

**மாலதி** *mālati,* பெ. (n.) 1. மல்லிகை (சூடா.); arabian jasmine. 2. சிறு செண்பகம் (சூடா.); cenpaka flower tree. 3. சந்திரிகை. (இலக். அக.); moon light. 4. விளக்குத் தண்டு (பிங்.); lamp-stand. 5. நிருவாணம்; salvation.

*[Skt. mālatī >த. மாலதி.]*

**மாலாதீபகம்** *mālāa-tipagam,* பெ. (n.) 1. ஒரு சொல் மாலைபோலத் தொடர்ந்து எல்லா வாக்கியங்களோடும் சென்று பொருள்

தருவதாகிய அணிவகை.; (rhet.)a figure of speech in which a word is taken with several successive sentences and construced.

[Skt. mālā-dipaka >த. மாலாதீபகம்.]

**மாலிக்** *mālik,* பெ. (n.) 1. சொத்துக்கு உரியவன்; (C.G.) proprietor, owner, master. 2. இறைவன்; lord,king.

[Ar. mālik >த. மாலிக்.]

**மாலிசு** *mālišu,* பெ. (n.) குதிரை முதலிய வற்றைத் தேய்த்துத் தூய்மைப் படுத்துகை (இ.வ.); rubbing, as a horse; scrubbing, polishing, as a floor.

[Persn. mālish >த. மாலிசு.]

**மாலியவான்** *māliyavāṉ,* பெ. (n.) 1. இராவணன் பாட்டனாகிய தலைமை யமைச்சன். (கம்பரா. இலங்கைகா. 6.); a *Rāksasa, grandfather* and chief counsellor of *Rāvaṇa.* 2. ஒரு மலை. (கந்தபு. அண்டகோ. 34.) a mount.3. 513 சிகரங்களையும் 65 மேனிலைக் கட்டுகளை யுமுடைய கோயில் (சுக்கிரநீதி, 230); temple with 513 towers and 65 floors.

[Skt. Mālyavān >த. மாலியவான்.]

**மாலின்யம்** *māliṉyam,* பெ. (n.) 1. கேடுறுகை; being spoiled. 2. அழுக்கு (இலக். அக.); dirt.

[Skt. mālinya >த. மாலின்யம்.]

**மாலினி** *māliṉi,* பெ. (n.) 1. காளி (பிங்.); durgā. 2. மலைமகள் (நாமதீப. 20.); Pārvati.

[Skt. mālinī >த. மாலினி.]

**மாலுதானம்** *mālutāṉam,* பெ. (n.) பச்சைப் பாம்பு. (சூடா.); whipsnake.

[Skt. māludhāna >த. மாலுதானம்.]

**மாலுமி** *mālumi,* பெ. (n.) கப்பலோட்டி (பிங்.); captain of a vessel, pilot, navigator.

[U. muallin >த. மாலுமி.]

**மாவுத்தன்** *māvuttaṉ,* பெ. (n.) யானைப்பாகன்; elephant-driver. *'மாவுத்தர் நெய்ய வேலெடுத்து' (பணவிடு.261.).*

[H. māhaut >த. மாவுத்தன்.]

**மாளயம்** *māḷayam,* பெ. (n.) 1. மாளயபட்சம்; the dark fortnight in the lunar month of Bhādrapada. *'கன்னி வியன்றிங்கள் வெண்டிங்கள் மெலியும் பக்க மாளயத்தை'* (சேதுபு. துராசா. 13). 2. முன்னோற்குக் கன்னி (பாத்திரபத) மாதத்துக் கரும்பக்கத்து கிருட்டிணபட்சம்)ச் செய்யும் சடங்கு; offerings to deceased ancestors made during Makāḷayam.

[Skt. māhālaya >த. மாளயம்.]

**மாளவகவுளம்** *māḷava-kavuḷam,* பெ. (n.) ஓர் பண் வகை; a musical mode.

[Skt. mālavi-gauda >த. மாளவகவுளம்.]

**மாளவம்** *māḷavam,* பெ. (n.) ஐம்பத்தாறு நாடு களுள் ஒன்று; country of Malwa, one of 56 *tēcam. 'வான்குளம் புடையன மாளவத் தகத்த' (சீவக. 2159).*

[Skt. Mālava >த. மாளவம்.]

**மானசதீட்சை** *māṉaša-tīṭcai,* பெ. (n.) நோன்புவகை ஏழனுள் சீடனது மனத்துள் ஒகசித்தியால் ஆசிரியன் நுழைந்து அவனுக்கு மன, மொழி, மெய் ஆகியவற்றால் தூய தாக்கும் நோன்பு வகை (சைவச. ஆசாரி. 65, உரை); (šaiva) a mode of initiation in which a guru spiritually enters his disciple's mind by yōga and purifies him, one of seven tīṭcai.

[Skt. mānasa+tīkṣa >த. மானசதீட்சை.]

**மானசாரம்** *māṉašāram,* பெ. (n.) *சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று;* a treatise on architecture, one of 32 širpa-nūl. *'மானகற் பாரியஞ் சிருட்ட மானசாரம்' (இருசமய. சிற்பசாத். 2).*

[Skt. māna-sāra >த. மானசாரம்.]

**மானசீகம்** *māṉasīgam,* பெ. (n.) மனத்தில் மட்டும் இருப்பது, உள்ளத்தில் நினைப்பது ; that which is or which is done in the mind.

'அவர் பிழைக்க வேண்டும் என்று மானசீகமாக வணங்கினாள். என்னுடைய மானசீக குரு.' (உ.வ.).

**மானிடசென்மம்** *mānida-šenmam*, பெ. (n.)
1. மக்கட் பிறப்பு; birth as a human being.
2. மானிடம் (வின்.); mankind, ingeneral.

த.வ. மாந்தப்பிறப்பு

*[Skt. mānusa+janma>த. மானிடசென்மம்]*

**மானியம்** *māniyam*, பெ. (n.) 1. சிற்றூர் மேம்பாட்டுக்காகச் செய்த நன்மைக்குப் பலனாக விடப்பெற்ற இறையிலி நிலம்; land held either rent free or at a low rate of rent in consideration of services rendered to a village community (R.F.) 2. நிலத்தின் தீர்வையை மானமாகப் பெறும் கற்கழுவனீர்; grant of revenue of a certain extent of land. 3. அளவிடுகை. (யாழ். அக.); computation.

*[Pkt. mānya >த. மானியம்.]*

**மானுடதீர்த்தம்** *mānuda-tirttam*, பெ. (n.) ஐவகை தெய்விய நீர்த்துறைகளுள் சிறு விரல் மூலம் விடும் மந்திர நீர் (சைவச பொது. 66,உரை); sanctified water ceremoniously poured down through the little finger one of pañca-tirttam.

*[Skt. mānusa+tirtha >த. மானுடதீர்த்தம்.]*

**மானுடம்** *mānudan*, பெ. (n.) **மானிடசென்மம்** பார்க்க; see mānita - senmam. 'கிலுத்த மானுட மலான மற்றை மானுடமில்லை' (காஞ்சிப்பு. நகரேற். 106.) 'ஊர்வபதி னொன்றா மொன்பது மானுடம்' (குறள்/, 62, உரை). 2. மானிடவேள்வி. (வின்.); mānita-vēlvi.

*[Skt. mānusa >த. மானுடம்.]*

**மிசல்கர்ணம்** *mišal-karnam*, பெ. (n.) தலைமைக் கணக்கன் (அ) சரியாய் நியமனம் பெற்ற கணக்கன்; (C.G.) principal or regularly appointed a ccountant of a village.

*[Skt. karna+ U. misl >த. மிசல் கர்ணம்.]*

**மிசல்தீர்வை** *mišal-tirvai*, பெ. (n.) பக்க நிலங்கட்கு அமைந்த தீர்வையை ஒட்டி ஏற்படுத்தப்பட்ட தீர்வை; (C.G.) assessment on a field made of the same rate as that of adjacent lands.

*[U. misl >த. மிசல்தீர்வை.]*

**மிசல்பந்தி** *mišalpanti*, பெ. (n.) ஒவ்வொரு சிற்றூரிலும் சிற்றூர் வேலைக்காரரின் பெயர்களைப் பதிவு செய்திருக்கும் நூல்; (C.G.) register of the names of persons holding the village offices in each village.

*[U. misl >த. மிசல்பந்தி.]*

**மிசிர்தேசம்** *mišir-tēšam*, பெ. (n.) எகிப்து தேசம்; egypt.

*[Ar. mišr-tēsal >த. மிசிர்தேசம்.]*

**மிசிரவர்ணம்** *mišira-varnam*, பெ. (n.)
1. சாதிக்கலப்பு (வின்.); mixed class or tribe.
2. கலப்பு நிறம்; mixed colour.

*[Skt. mišra+rarna >த. மிசிரவர்ணம்.]*

**மிசிரன்** *miširan*, பெ. (n.) கல்வி முதலியவற்றால் உயர்ந்தவருக்கு வழங்கும் பட்டப்பெயர் 'பட்டபாண மிசிரன் (வின்.); a honorific title affixed to names of great man and scholars.

*[Skt. mišra >த. மிசிரன்.]*

**மிட்டாய்** *mittāy*, பெ. (n.) பண்ணிகார வகை; sweetmeat.

*[Ar. mitāyi >த. மிட்டாய்.]*

**மிட்டாய்க்காரன்** *mittāy-k-karan*, பெ. (n.) மிட்டாய் விற்பவன்; confectioner, dealer in sweetmeats.

*[Ar. mitāyi >த. மிட்டாய்க்காரன்.]*

**மித்தாச்சமயம்** *mittā-c-camayam*, பெ. (n.) பொய்ச்சமயம்; false religion. 'மித்தாச்சமயத் தனை வரும்' (திருநூற். 90.)

*[Skt. mithya >த. மித்தாச்சமயம்.]*

**மித்தியம்** *mittiyam*, பெ. (n.) பொய்; (யாழ். அக.) lic, falehood.

*[Skt. mithya >த. மித்தியம்.]*

**மித்தியாநயம்** *mittiyā-nayam,* பெ. (n.) ஏழிசை நயங்களைப் பிழைபடப் பயன்படுத்தும் முறை. (மேரு மந் 704 உரை.); (jaina.) flase application of the seven fold formula of the doctrine of qualified predication.

*[Skt. mithyā-naya>த. மித்தியாநயம்.]*

**மித்தியாவாதி** *mittiyā-vādi,* பெ. (n.) பொய்யன் (ஈச்சுரநிச்சயம், 179.); liar.

*[Skt. mithyā-vādin>த. மித்தியாவாதி.]*

**மித்திரத்துரோகி** *mittira-t-turōgi,* பெ. (n.) நண்பன் போல் நடித்துத் தீங்கு புரிவோன் (வின்.); traitor,asbetrayingfriendship.

*[Skt. mitra+drōhin >த. மித்திரத் துரோகி.]*

**மித்திரபேதம்** *mittira-pēdam,* பெ. (n.) நட்பினரைப் பிரிக்கை (பஞ்சதந். கதைவா. 9.); sowing discord among friends.

*[Skt. mitra + bhēda >த. மித்திரபேதம்.]*

**மித்திரம்** *mittiram,* பெ. (n.) நட்பு; friendship, affection. 'மித்திர வச்சிரவ ணற்கு விருப்பர் போலும்' (தேவா. 598,9)ழு

*[Skt. mitra >த. மித்திரம்']*

**மித்திரன்** *mittiran,* பெ. (n.) 1. நண்பன்; friend, ally,adherent. 'மித்திரர் வதன நோக்கான்' (கம்பரா. மாயாசீ. 60). 2. உறவினன். (நாமதீப. 188); relative. 3. பன்னிருஆதித்தரு ளொருவன். (நாமதீப. 66.); a deity representing the sun, one of tuvātacātittar. 4. கதிரவன்; sun.

*[Skt. miśtra >த. மித்திரன்.]*

**மிதாசனம்** *mitāsanam,* பெ. (n.) அற்பவுணவு (யாழ். அக.); scanty food.

*[Skt. mitāśana>த. மிதாசனம்.]*

**மிதுனராசி** *midunarāśi,* பெ. (n.) ஆண்–பெண் இரட்டை ஓரை; twin sign of the zodic - gemini.

**த.வ. ஆடவை**

*[Skt. mituna+rasi > த. மிதுனராசி.]*

**மிராசு** *mirāšu,* பெ. (n.) 1. நிலவுரிமை, அது தொடர்பாக குலமுறையாய் வரும் முழு உரிமை (W.G.); absolute hereditary right or claim to lands or office. 2. குல வழியாய் வந்த சொத்து (வின்.); heritage, patrimony.

*[U. mirāsia>த. மிராசு.]*

**மிராசுதாரன்** *mirāšu-tāran,* பெ. (n.) நில வுரிமைக்காரன் (வின்.); hereditary proprietor or any right to office or property.

**த.வ. நிலக்கிழான்**

*[U. mirāsi> த. மிராசுதாரன்.]*

**மிராண்டி** *mirāṇṭi,* பெ. (n.) **மிருகாண்டி** பார்க்க; see mirukāṇdi.

**மிருகசிரம்** *miruga-širam,* பெ. (n.) 1. ஆட்காட்டி விரலையும் சுண்டு விரலையும் நிமிர்த்தி மற்ற விரல்களை ஒரு சேர வைக்கும் முத்திரை வகை. (பரத. பாவ. 18.) (Nāṭya) a hand - pose in which the index finger and the little finger are stretched out and the rest are kept closed. 2. **மிருக சீருடம்** பார்க்க; see miruga-širiḍam.

*[Skt. mṛga-širas>த. மிருகசிரம்.]*

**மிருகசீருடம்** *miruga-širuḍam,* பெ. (n.) மாழ்கு, ஐந்தாம் விண்மீன்; the fifth nakṣatra.

*[Skt. mṛga-širsa>த. மிருகசீருடம்.]*

**மிருகத்தனம்** *miruga-t-tanam,* பெ. (n.) விலங்கின் தன்மை; beastly nature - brutishness.

**மிருகம்**[1] *mirugam,* பெ. (n.) 1. மான் (சூடா.); deer, an telope. 2. விலங்கின் பொது (சூடா.); animal in general. 3. பன்றி (வின்.); pig, hog. 4. யானைவகை (யாழ். அக.); a kind of elephant. 5. கத்தூரிமான் (யாழ். அக.); musk deer. 6. **மிருகசீருடம்** (யாழ். அக.) பார்க்க; see miruga-širudam. 7. பாம்பு; snake. (நாமதீப. 258.).

**மிருகாண்டி** *mirugāṇṭi,* பெ. (n.) விலங்காண்டி (வின்.); rustic; ill - bred person.

*[Skt. mṛga>த. மிருகாண்டி.]*

**மிருணாலி** *mirunāli,* பெ. (n.) தாமரை (மூ.அ.); lotus.

*[Skt. mrnāli>த. மிருணாலி.]*

**மிருத்தியு** *miruttiyu,* பெ. (n.) 1. இறப்பு; death. 'மிருத்தியுவை வெல்வான்' (சேதுபு. துரா.27). 2. இயமன். (யாழ். அக.); yama. 3. தீராப்பகைவன்; inveterate enemy. 'அவன் எனக்கு மிருத்தியுவாய்த் தலைப்பட்டான்.' 4. ஆணவமலம். (சி.போ. 4,2, சிற். பக். 96.); (šaiva.) matter which is eternally encasing the soul.

*[Skt. mrtyu>த. மிருத்தியு.]*

**மிருத்து**[1] *miruttu,* பெ. (n.) மண்; earth. 'இரு நில மிருத்திட்டு' (மதுரைப்பதின். 62.).

*[Skt. mrt>த. மிருத்து[1]]*

**மிருத்து**[2] *miruttu,* பெ. (n.) 1. இறப்பு; death. 2. எமன்; yama.

*[Skt. mrtya>த. மிருத்து[2]]*

**மிருதங்கம்** *mirudangam,* பெ. (n.) 1. மத்தளம் (உ.வ.); a kind of drum. 2. ஒலி; (யாழ். அக.) noise. 3. மூங்கில் (யாழ். அக.); bamboo. யதிகளில் ஒன்று. (பரத. தாள. 53.); a kind of yati.

*[Skt. mrdanga>த. மிருதங்கம்]*

**மிருதாரசிங்கி** *mirudārašingi,* பெ. (n.) 1. தூய்மை செய்யப்படாத ஈயம்.; (m.m. 472); impure oxide of lead, plumbi oxidum. 2. ஈயம் (யாழ். அக.); lead. 3. வைப்பு நஞ்சு வகை. (பதார்த்த 1159, தலைப்பு.); a plant. பூடுவகை. (யாழ். அக.)

*[U. murdāsing>த. மிருதாரசிங்கி.]*

**மிருதி** *mirudi,* பெ. (n.) 1. நினைவு; remembrance. 'யதார்த்த மிருதிஞானத் திற்கு விடயமாய்' (சிவசம. பக். 41.) 2. அறநூல்; smrti, Hindu Law treatise. 3. அறநூல் வல்லோன்; one learned in *smrti.* 'மெய்யா மிருதிகள்' (திருவிளை. உலவாக். 19). 4. மலை மகள்; Pārvati. (கூர்மபு. தருக் கலியாண. 22.)

*[Skt. smrdi>த. மிருதி.]*

**மிருது**[1] *mirudi,* பெ. (n.) 1. மென்மை (சூடா.); softness. 2. சாந்தம் (சங். அக.); gentleness, mildness, benignancy. 3. மந்தம் (யாழ். அக.); slowness. 4. மழுங்கல். (யாழ். அக.); bluntness. 5. நொய்ம்மை (யாழ். அக.); low quality. 6. இசைவகையுள் ஒன்று (பரத. இராக 47.); a kind of musical note. 7. **மிருதுபலா.** (சங். அக.) பார்க்க; see *mirudupalā.* 8. சமுத்திரப் பாலை. (மலை.); elephant creeper. 9. வெள்ளரி (நாமதீப. 336.); cucumber.

*[Skt. mrdu>த. மிருது]*

**மிருது**[2] *mirudu,* பெ. (n.) **மிருதி1** (அரு. நி) பார்க்க; see miruti[1]

*[Skt. mrti>த. மிருது.]*

**மிருதுளம்** *mirudulam,* பெ. (n.) மென்மை யானது; that which is soft, tender. *'மிருதுள மிருதுள நவமணி' (திருப்பு. 319.).*

*[Skt. mrdula>த. மிருதுளம்]*

**மிலாகத்து** *milākattu,* பெ. (n.) சந்திப்பு (P.T.L.); meeting, interview.

*[H. milāp>த. மிலாகத்து]*

**மிலேச்சத்தனம்** *milēcca-t-tanam,* பெ. (n.) அநாகரிகம்; barbarism.

*[Skt. mlēccha>த. மிலேச்சத்தனம்]*

**மிலேச்சம்** *milēccam,* பெ. (n.) 1. சரசுவதி ஆற்றின் வடகரையில் பழந்திரவிடர் வாழ்ந்த நாடு (சது.); Non-Aryan country situated on the northern bank of river Sarasvadi.

*[Skt. mlēccha>த. மிலேச்சம்]*

**மிலேச்சன்** *milēccan,* பெ. (n.) 1. நாகரிகமற்ற புறநாட்டான்; barbarian, uncivilised foreigner. 'மிலேச்ச ரேறலின்' (சீவக. 216). 2. திருத்தமற்ற மொழியைப் பேசுவோர். (சீவக. 93 உரை); person speaking barbarous language. 3. அறிவீனன் (யாழ். அக.); ignorant person. 5. வேடன் (யாழ். அக.); hunter. 6. தாழ்ந்தோன் (யாழ். அக.); low person. 7. ஆரியன்; aryan. (அக.நி.)

*[Skt. mlēccha>த. மிலேச்சன்]*

**மிலேச்சாசம்** *milēccāāšam,* பெ. (n.) கோதுமை. (மலை); wheat.

*[Skt. mlēcchāša>த. மிலேச்சாசம்]*

**மீமாஞ்சை** *mimāñjai,* பெ. (n.) 1. பூர்வ மீமாஞ்சை உத்தரமீமாஞ்சை என்ற இரு பிரிவினையுடையதாய் வேதவேதாந்தப் பொருள்களை விவரித்தற்குக் கருவியாயுள்ள சாத்திரம்; the twin systems of *Pūrva Mīmāmsā* and *Uttara Mīmānsā,* being the means of understanding the *Vēda* and *Vēdānta.* 2. பூர்வ மீமாஞ்சை எனும் இந்துமதக் கொண்முடிபு; a system of Hindu Philosphy . *'புவனியுற்ற தருக்கமும் பொருந்திய மீமாஞ்சையும்' (மச்சபு. பிரமமு. 4).*

*[Skt. mīmāmsā>த. மீமாஞ்சை]*

**முக்கியத்தர்** *mukkiyattar,* பெ. (n.) 1. செல் வாக்கும் சிறப்பும் உடையவர் முதன்மை யானவர்; person of importance. "உயர் முக்கியஸ்தர்கள் கூடிப் பேசி என்ன முடிவு செய்தார்கள்"

**மறுவ. முதன்மையாளர், முந்தாளி, முகத்தாளி, பெருமகன்.**

*[Skt. mukyasta>த. முக்கியத்தர்]*

**முக்கியத்துவம்** *mukkiyattuvam,* பெ. (n.) சிறப்பு பொருந்திய தன்மை; importance. "இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த நகரமிது".

**மறுவ. முதன்மை, முகாமை**

*[Skt. mukhya+tva>த. முக்கியத்துவம்]*

**முக்கியம்** *mukkiyam,* பெ. (n.) 1. சிறப்புடையது; that which is primary, principal or important. "முடித்துக் கொண்ட முக்கியமும்" (திவ். திருவாய். 5, 10, 9) 2. தலைமை; greatness, eminence, superiority. "பிண்டியா ரடியாரென்னு முக்கியமே" (திருநூற். 73.)

**மறுவ. முகாமை, முதன்மை**

*[Skt. mukhya>த. முக்கியம்]*

**முக்தசர்**[1] *muktašar,* பெ. (n.) உட்கருத்து (சராம்சம்); gist, abstract. "அவன் பிராதின் முக்தசர் என்ன?"

**மறுவ. உட்கருத்து**

*[U. mukhtasar>த. முக்தசர்]*

**முக்தசர்**[2] *muktašar,* பெ.அ. (adj.) சுருக்கமான; abbreviated, brief, short.

*[U. mukhtasar>த. முக்தசர்]*

**முக்தா** *muktā,* பெ. (n.) ஒரு சிற்றூரின் வரை யறுத்த மொத்தத் தீர்வை; (C.G.) rent fixed for a village as a whole.

*[U. maqta>த. முக்தா]*

**முக்தியார்** *muktiyār,* பெ. (n.) பிறருக்காக வழக்கை வாதிப்போன்; a attorney, pleader.

*[U. mukhtar>த. முக்தியார்]*

**முக்தியார்நாமா** *muktiytār-nāmā,* பெ. (n.) அதிகார ஆவணம் (பத்திரம்)(C.G.); power of attorney.

*[U. mukhtār+nāmā>த. முக்தியார்நாமா]*

**முகத்தமா** *mugattamā,* பெ. (n.) செய்தி (இ.வ.); case; affair.

*[U. muqadama>த. முகத்தமா]*

**முகமல்** *mugamal,* பெ. (n.) மிகுதியான எடை கொண்டிருக்கும் பட்டு வகை (வின்.); velvet.

*[Ar. makhmal>த. முகமல்]*

**முகரீர்** *mugarīr,* பெ. (n.) எழுத்தன் (குமாஸ்தா); clerk, writer, scribe.

*[Ar. muharrir>த. முகரீர்]*

**முகாசா** *mugāšā,* பெ. (n.) வேலையின் பொருட்டு வரியில்லாமலும் வரி குறைத்தேனும் கொடுக்கப்படும் இறையிலிச் சிற்றூர் (M.M 506); village or land assigned to an individual, either rent free or at a low quit-rent, on condition of service.

*[H. mukhāsā>த. முகாசா]*

**முகாந்தரம்** *mugāndaram,* பெ. (n.) 1. கரணியம்; cause, reason. 2. மூலம்; means. "யார் முகாந்தரம் போனால் இது கைகூடும்?" (இ.வ.). 3. வேறு செய்தி (விஷயம்); another matter. "இதுவும் முகாந்தராமாய்ச் செல்லு கிறதோ" (ஈடு 9,8,3.)

*[Skt. mukha + antara>த. முகாந்தரம்]*

**முகாபிலா** *mugāpilā,* பெ. (n.) படி முதலிய வற்றை மூலத்துடன் ஒத்துப் பார்க்கை (வின்); examination, comparison, as of a copy with the original.

*[Ar. muqabila>த. முகாபிலா]*

**முகாம்** *mugām,* பெ. (n.) சுற்றுப்பயணத்தில் கூடாரமடித்துக் குறுகிய காலம் தங்கும் இடம்; a camp.

த.வ. தாவளம்

*[Ar. muqām>த. முகாம்]*

**முகூர்த்தக்கால்** *mugūrttakkāl,* பெ. (n.) திருமணப் பந்தர்க்கு நல்வேளையில் முதலாக நாட்டும் கம்பம் (தம்பம்) (வின்); first post fixed at an ausicious moment for a marriage.

த.வ. முழுத்தக்கால்

*[Skt. muhūrta>த. முகூர்த்தம்+கால்]*

**முகூர்த்தம்** *mugūrttam,* பெ. (n.) 1. நேரம்; moment, time. 2. ஒன்றரை மணி நேரங் கொண்ட ஒரு காலவளவை; a division of time = 3 3/4 nalikai = 1 1/2 hours. "படுங் கலை முகூர்த்தங் காட்டைகளென்றா". (காஞ்சிப்பு. காயாரோகண. 2) 3. இரண்டு நாழிகை கொண்ட காலப்பகுதி (மேருமந் 94, உரை); (Jaina.) a division of time of 2 nāḷikai.4. நல்லோரை; auspicious time. "ஒப்பகன்றிடு முகூர்த்தமிவ் வெல்லை" (கந்தபு. தெய்வயா. 187) 5. திருமணம்; marriage, wedding.

த.வ. முழுத்தம்

*[த. முழுத்தம் > Skt. muhūrta > த. முகூர்த்தம்]*

**முச்சலிக்கா** *muccalikkā,* பெ. (n.) 1. உடன் படிக்கை; note of hand, written obligation, agreement, bond; deed; counter part of lease, as by a tenant to his landlord. 2.பிணை ஆவணம்; recognisance, bail, penalty bond.

த.வ. ஒப்பந்தம்

*[Skt. mucalka >த. முச்சலிக்கா]*

**முச்சி** *mucci,* பெ. (n.) 1. அலுவலர்களுக்கு எழுது பொருள் முதலியன அணியம் செய்து கொடுக்கும் வேலையாள் (C.G.); stationer, one who serves out stationery in a public office. 2.தோல் வினைஞன் (C.G.); one who works in leather. 3. உறைகாரன் (அக.நி.); sheath maker. 4. தச்சன்; carpenter, cabinet-maker. 5. வண்ணம் பூசுபவன்; painter.

*[H. mūci >த. முச்சி]*

**முசரப்பு** *mušarappu,* பெ. (n.) கணக்கு ஆய்வாளன் (P.T.L.); accountant, examiner of accounts.

*[Ar. mishrif >த. முசரப்]*

**முசரா** *mušarā,* பெ. (n.) திசை (திக்கு) (M. Navi.); direction.

*[Ar. miajrā >த. முசரா]*

**முசல்மான்** *mušalmāṉ,* பெ. (n.) முகமதியன்; muhammad.

*[Arab. muslimūn >த. முசல்மான்]*

**முசாபர்கானா** *mušabarkāṉā,* பெ. (n.) பயணிகள் விடுதி (இ.வ.); traveller's bungalow.

த.வ. பயணியர் மாளிகை

*[Ar. muslāfir-khāna >த. முசாபர்கானா]*

**முசீபத்து** *mušipattu,* பெ. (n.) துன்பம்; distress, misfortune. *"முசீபத்தைப் போக்கிப் பரக்கத்து உண்டாக்கும்" (மகி. க.* ii, 94.)

*[Ar. musībad >த. முசீபத்து]*

**முசுலீம்** *mušulīm,* பெ. (n.) முகமதியன்; muhammadan.

*[Ar. muslim >த. முசுலீம்]*

**முட்டிவாங்கி** *muṭṭivāṅgi,* பெ. (n.) பிடியரிசி வாங்கும் பிச்சைக்காரன்; recipient of doles, mean beggar. *"முஷ்டிவாங்கிப் பயலோ மோப்பாச்சு" (விறலிவிடு. 772).*

*[Skt. musti >த. முட்டி + வாங்கி]*

**முண்டா** *muṇḍā,* பெ. (n.) தோள்; shoulder, upperarm *"முண்டாத்தட்டிச் சண்டைக்கு அழைக்கிறான்".*

*[U. mōndhā >த. முண்டா]*

**முண்டாசு** *muṇḍāšu,* பெ. (n.) தலைப் பாகைவகை; a kind of headdress, small looseturban. *"கொடுத்தானோர் முண்டாசு" (விறலிவிடு. 1116).*

த.வ. தலைக்கட்டு

*[H. muṇḍāsā<muṇḍa+vāsās>த. முண்டாசு]*

**முண்டாபனியன்** *muṇḍābaṉiyaṉ,* பெ. (n.) தோள் (முண்டா) தெரியும்படியான உள் ளொட்டி; sleeveless vest.

த.வ. உள்ளொட்டி

*[Skt. mōṇḍha >த. முண்டாபனியன்]*

**முத்தாய்** *muttāy,* பெ. (n.) வழக்காளி (C.G.); the complainant, the plaintiff.

*[Ar. muddaā >த. முத்தாய்]*

**முத்தாயலே** *muttāyalē,* பெ. (n.) எதிர் வழக் காளி (C.G.); the accuseed the defendant.

*[Ar. muddaā-alayh >த. முத்தாயலே]*

**முத்தீது** *muttitu,* பெ. (n.) முன்னேற்பாடு (பாண்டி); preparedness.

த.வ. முன்அணியம்

*[Ar. mustaid >த. முத்தீது]*

**முபலகு** *mupalagu,* பெ. (n.) எண்ணினாலன்றி எழுத்தினாற் காட்டும் மொத்தத் தொகை (C.G.); total, especially written in words instead of figures.

*[U. mublas >த. முபலகு]*

**முரப்பா** *murappā,* பெ. (n.) பாகில் ஊறவைத்த தின்பண்டம்; preserved jam.

*[H. murabbā >த. முரப்பா]*

**முலகாத்து** *mulakāttu,* பெ. (n.) சந்திப்பு (இ.வ.); interview, meeting.

த.வ.நேர்காணல், செவ்வி.

*[Ar. mulāqāt >த. முலகாத்]*

**முலாம்** *mulām,* பெ. (n.) பொன் வெள்ளிப்பூச்சு; gilding, electro-plating.

த.வ.மேற்பூச்சு

*[Ar. mulammā >த. முலாம்]*

**முன்சி** *muṉši,* பெ. (n.) மொழி கற்பிக்கும் ஆசிரியன்; languageteacher.

*[Ar. munshi >த. முன்சி]*

**முனிசீப்பு** *muṉišsippu,* பெ. (n.) 1. சிற்றூர்த் தலைவன் (வின்.); village headman. 2. நயன் (நீதி) வழங்கும் ஒரு வகை அலுவலன்; district munsif, presiding officer in certain subordinate court of justice.

*[Ar. munsif >த. முனிசீப்பு]*

**மூசிகவாகனன்** *mūšiga-vāgaṉaṉ,* பெ. (n.) பெருச்சாளியை ஊர்தியாக உடையவனாகக் கருதப்படும்) பிள்ளையார்; Ganēšaṉasriding thebondicoot. "முப்பழநுகரும் மூசிக வாகன" (விநாயகர் அகவல்).

*[Skt. mūsika+vāhana>த. மூசிகவாகனன்.]*

**மூர்க்கத்தனம்** *mūrkkattaṉam,* பெ. (n.) விலங் கியல்பு; கடுங்கொடுமை; wild behaviour.

த.வ.விலங்கியல்பு, வன்கொடுமை

*[Skt. mūrkha >த. மூர்க்கம்.]*

**மூர்க்கநாயனார்** *mūrkkanāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர். (பெரியபு.); a canonized šaiva saint, one of 63.

**மூர்க்கம்** *mūrkkam,* பெ. (n.) 1. மூடத்தன்மை (வின்.); foolishness, stupidity. 2. கடுஞ்சினம்; rage, fury, wrath. "மூர்க்கத்தவனை நரங்கலந்த சிங்கமாய்க் கீண்ட" (திவ். இயற். 2, 84.) 3. ஒட்டாரம், பிடிவாதம் (வின்.); obstinacy. 4. பகை. (வின்.); opposition, hatred. 5. முரட்டுத்தனம் (இ.வ.); violence, force. 6. நாகப்பாம்பு (யாழ். அக.); cobra. 7. மலப்பைச் சிறுபுழு (சங். அக.); thread worm.

*[Skt. mūrkha >த. மூர்க்கம்.]*

**மூர்த்தம்** *mūrttam,* பெ. (n.) 1. வடிவுடைப் பொருள்; that which has form, figure, shape or body. "அன்மையின் மூர்த்தம்" (ஞான. 55,2) 2. உடல் (சூடா.); body. 3. உறுப்பு (பிங்.); limb.

*[Skt. mūrta >த. மூர்த்தம்]*

**மூர்த்தன்னியம்** *mūrttsnniyam,* பெ. (n.) 1. முதன்மைச்சிறப்பு; prominence. 2. மீறுகை; high handedness.

*[Skt. mūrdhanya > த. மூர்த்தன்னியம்]*

**மூர்த்தன்னியன்** *mūrttannian,* பெ. (n.) 1. முகாமையானவன்; chieftaincy, pre-eminence. மும்மதமால்யானை மூர்த்தன் னியனை (விறலிவிடு.24). 2. ஊக்கமிகுதி யுடையவன்; person of great energy.

**மூர்த்தி** *mūrtti,* பெ. (n.) 1. உடல்; body. "ஒத்தொளிரு மூர்த்தியார்" (சூளா.குமார.1) 2. வடிவம்; form, figure. "அன்பெனு மூர்த்தியார்" (பெரியபு. மூர்த்தி.9). 3. கடவுள்; God. "திரிமூர்த்தி". 4. அருகன் (திவா.); arhat. 5. புத்தன் (திவா.); the Buddha. 6. சிவன். (யாழ். அக.); šiva. 7. சத்தியோசாதத்தின் ஆற்றல் (சத்தி) (சதாசிவ); the šakti of cattiyōcātam. 8. துறவுக்கோலம்பூண்டவன் (சீவக. 3071.); ascetic, one who performs penance. 9. பெரியார்; saint, sage, great personage, a term of reverence. "ஓதுவார்மூர்த்தி". 10. தலைவன் (யாழ். அக.); lord. 11. பொருள் (யாழ். அக.); matter, substance. 12. நடை, நாகரிகம் (யாழ். அக.); style, fashion.

*[Skt. mūrti > த. மூர்த்தி]*

**மூர்த்திகரம்** *mūrttikaram,* பெ. (n.) 1. தெய்வச் செயல்; divine act. 2. தெய்வத் தன்மை (வின்.); divinity, divine nature.

*[Skt. mūrti kara > த. மூர்த்திகரம்.]*

**மெக்கா** *mekkā,* பெ. (n.) முகம்மதியர்க்கு முதன்மையான வழிபாட்டிடமான அரேபியா விலுள்ள ஒரு நகரம்; a city in Arabia, being the chief place of pilgrimage for the muhammadans.

*[Ar. makka > த. மெக்கா.]*

**மேகக்கரப்பன்** *megakkarappan,* பெ. (n.) மேக நோயினால் குழந்தைகளின் உடம்பின் காணும் சொறி சிரங்கு; skin afffections of the children caused by congenital heat.

**மைக்கா** *maikkā,* பெ. (n.) காக்கைப் பொன்; mica.

*[E. mica > த. மைக்கா.]*

**மைசூர்** *maišūr,* பெ. (n.) கருநாடக மாநிலத்தின் ஒரு நகரம், எருமையூர்; Mysore, a city of Karnataka State.

*[Skt. mahisa-pura > த. மைசூர்.]*

**மைசூர்க்கட்டு** *maišūr-k-kattu,* பெ. (n.) தலைப்பாகை வகை; a mode of tying turban, as peculiar to the Mysoreans.

**மைசூர்ப்பாகு** *maišūr-p-pāku,* பெ. (n.) ஒரு வகை இனிப்புப் பணிகாரம்; a kind of sweet confection.

த.வ. பாகடை

*[Skt. masura > த. மைசூர்ப்பாகு.]*

**மைத்திரம்** *maittiram,* பெ. (n.) 1. நட்பு; love, friendship. 2. பகல் முழுத்தங்களுள் மூன்றாவது; (விதான. குணா. 73, உரை) the third of the 15 divisions of the day.

*[Skt. maitra > த. மைத்திரம்.]*

**மைத்திரி** *maittiri,* பெ. (n.) 1. நட்பு; friendship. 2. **மைத்திரிபாவனை** பார்க்க; see maittiri-pāvanai. *"மைத்திரி கருணா முதிதை" (மணிமே. 30 : 256.)*

*[Skt. maitrī > த. மைத்திரி.]*

**மைத்திரியாழ்வார்** *maittiriyālvār,* பெ. (n.) the Buddha of the future. மயித்திரியாழ்வார் (மணிமே. புத்தசரித். பக். 30 கீழ்க் குறிப்பு.) பார்க்க; see mayittiriyālvār.

**மைத்திரிபாவனை** *maittiripāvanai,* பெ. (n.) எல்லாவுயிர்களிடத்தும் அன்பு பாராட்டி அவற்றின் நல்வாழ்வைக் கருதி பௌத்த துறவி புரியும் ஊழ்க (தியான) வகை; (மணிமே. பக். 387) a form of meditation which developes a feeling of followship with all beings, practised by monks.

**மைதானம்** *maitānam,* பெ. (n.) திறந்த வெளியிடம் (இ.வ.); a plain, open field, maidan.

**த.வ. வெள்ளிடை**

*[U. maidān>த. மைதானம்.]*

**மைதிலி** *maithili,* பெ. (n.) சீதை (மிதிலை யரசன் மகள்); as daughter of the king of Mithilā. *"இலக்குமனோடு மைதிலியும் .....துதி செய்ய நின்ற. (திவ். பெரியதி. 2,3,7)*

*[U. maithilī>த. மைதிலி.]*

**மைதுனம்** *maituṉam,* பெ. (n.) 1. புணர்ச்சி (பிங்.); copulation, sexual union. *"வதுவைச் சடங்கதனை மைதுனமாக் கொண்ட" (ஒழிவி. கிரியை. 16)* 2. திருமணம்; marriage.

*[Skt. maithuna>த. மைதுனம்.]*

**மையத்து** *maiyattu,* பெ. (n.) பிணம்; corpse.

*[Ar. mayyit>த. மையத்து.]*

**மைல்** *mail,* பெ. (n.) 5280 அடி அல்லது 1760 கசங்கொண்ட நீட்டலளவு (இக்.வ.); 1760 yards.

*[E. mile>த. மைல்.]*

**மைனர்** *maiṉar,* பெ. (n.) சட்டப்படி சொத் தாளுதல் முதலியவற்றிற்குரிய பருவம் எய்தாதவன்; minor, person under age.

**த.வ. இளந்தை, இளந்தாரி**

*[E. minor>த. மைனர்.]*

**மைனர் விளையாட்டு** *maiṉar-viḷaiyāṭṭu,* பெ. (n.) சிறு வயதில் கண்டபடி செலவு செய்கை; lavish expenditure by a person in his nonage.

**த.வ. வீணடிப்பு**

*[Skt. minor>த. மைனர் விளையாட்டு.]*

**மொகரம்** *mogaram,* பெ. (n.) முகமதியப் பண்டிகை; a Muhammadan festival in the Arabic month.

*[Ar. muharram > த. மொகரம்.]*

**மோகரம்** *mūgaram,* பெ. (n.) 1. பேராரவாரம்; roar. "பன்றி பெரு மோகரத் தோடு" (பாரத. அருச்சுனன்றவ. 95) 2. உக்கிரம் (யாழ். அக.); vehemence; rage.

*[Skt. mukhar>த. மோகரம்.]*

**மோகரா** *mōgara,* பெ. (n.) பத்து அல்லது பதினைந்து ரூபாய் மதிப்புள்ள பொற்காசு (நாணய) வகை; gold coin, varying in value from 10 to 15 rupees.

*[Persn. mohar>த. மோகரா.]*

**மோகனச்சுண்ணம்** *mōhanā-c-cuṉṉam,* பெ. (n.) மயக்கப்பொடி; magic powder used for fascinating a person. "சிலைவேள் விட்ட மோகனச்சுண்ணம்" (பாரத. சம்பவ. 94).

*[Skt.mōhana+cūṉṉa>த. மோகனச்சுண்ணம்.]*

**மோகனநாட்டியம்** *mōgaṉa-naṭṭiyam,* பெ. (n.) மகளிர் கூத்து; (யாழ். அக.) dancing by women.

*[Skt.mōhana>த. மோகனம்+நாட்டியம்.]*

**மோகனம்** *mōgaṉam,* பெ. (n.) 1. மயக்க முண்டாக்குகை; bewildering, confusing. 2. மனமயக்கம்; confusion of mind mental perturbation. "மோகனமின் முனி" (சேதுபு. வேதா.11) 3. எண்வகைக் கடமைகளுள் (அஷ்டகருமத்துள்) ஒன்றும் அறுபத்து நான்குகலையுள் ஒன்றுமான பிறரை மயங்கச் செய்யும் வித்தை; magic are of facinating a person, one of asṭa-karumam, also one of arupattu-nālu-kalai. 4. காமன் ஐங்கணை களுள் மோகமுண்டாக்கும் அம்பு; (யாழ். அக.). one of the five arrows of Kāma that makes a person infatnated. 5. பஞ்சபாணச் செயல்களுள் ஒன்றான ஆசைமிகுகை; (பிங்.) infatuation as the effect of mōkaṉam, one ofpañca-pāṇa-ccyal. 6. ஓர் இராகம்; (mus) a specific melody-type. 7. ஏமாற்றுகை; (யாழ். அக.). deceiving, cheating.

**மோகாதி** *mōkāti,* பெ. (n.) காமம், வெகுளி, மயக்கம் என்ற முக்குற்றங்கள்; (யாழ். அக.) the three defects or infirmilies, viz., kāmam, veguḷi, mayakkam.

*[Skt.mōha>த. மோகாதி.]*

**மோகி-த்தல்** *mōki-,* 4 செ.கு.வி. (v.i) 1. மணந் திகைத்தல்; to be confused, bewildered. (வினாயகபு. 74. 218) 2. காமத்தால் மயங்குதல்; to be infatuated with love.

*[Skt.mōha>த. மோகித்தல்.]*

**மோகினி**[1] *mōgini,* பெ. (n.) மயக்கும் அணங்கு; enchanting woman. "அடைய மோகினி களாயினர் கொல்" (தக்கயாகப். 87.) 2. கண்டோரை மயங்கச் செய்யும் பெண் வடிவான திருமாலின் தோற்றரவு (அவதாரம்) *"மோகினியாகிய நின்வடிவினைக் கண்டு"* (பரிபா. 3.33.உரை) in carnation of Visṇu as a fascinating woman. 3. அசுத்தமாயை (šaiva) impure māyā. "பிரியா மோகினிப் பெரும்போகத்தை" (ஞானா. 1,29) 4. பெண் பேய் வகை; a class of demoness. *"மோக மோகினிகள் யோக யோகினிகள்" (தக்கயாகப். 593)*

*[Skt.mōhini>த. மோகினி.]*

**மோகினி**[2] *mōkkiṇi,* பெ. (n.) கோயில் நிலங் களைக் கைக்கொண்டதற்கு மாற்றாக அரசாங் கத்தார் ஆண்டுதோறும் அக்கோயிற்குச் செலுத்தும் தொகை; compensation in money given annually by the government to templess for resuming heir lands.

*[U.muyin>த. மோகினி.]*

**மோகூப்** *mōkup,* பெ. (n.) வேலையினின்றும் நீக்கி விடுகை (C.G); suspension, dismissal.

*[Arab.mauqūf>த. மோகூப்.]*

**மோசகன்** *mōsagaṉ,* பெ. (n.) 1. விடு விப்போன்; deliverer. 2. வெளிவிடுவோன்; one who passes or lets out. *"நந்தனவனத்து மோசகனை மலமதனை" (சிவதரு. சுவர்க்க நகர. 175)* 3. துறவி. (யாழ். அக.); ascetic.

*[Skt.mōcaka>த. மோசகன்.]*

**மோசனம்**[2] *mōšaṉam,* பெ. (n.) விடுபடுகை; liberation,deliverance. *"பாசமோசனந்தான் பண்ணும்படி". (சி.சி.8,3) (சூடா.)*

*[Skt.mōcana>த. மோசனம்.]*

**மோசு** *mōšu,* பெ. (n.) மிக்க விருப்பம்; ardent desire, longing. *"அதன் மேல் எனக்கு மோசு".*

*[Ar.mauj>த. மோசு.]*

**மோசூல்** *mōcūl,* பெ. (n.) 1. காவற்காரன்; guard. (w) 2. வரி செலுத்தாதவன் அல்லது கடன்காரன் மீது வைக்கும் அரசாங்கக்காவல்; (C.G) guard placed over a revenue defaulter or a civil debtor. 3. ஒருவன் வீட்டுவாயிலிலிருந்து கடன் தொகை தண்டுகை; compelling payment of a debt by sitting at the debtor's door.

*[Ar.mohassil>த. மோசூல்.]*

**மோட்சகாலம்** *mōṭca-kālam,* பெ. (n.) கோள் மறைப்பின் (கிரகண) முடிவு வேளை; (w) (Astron.) the time of the last contact emersion of an eclipse.

*[Skt.mōksa>த. மோட்சகாலம்.]*

**மோட்சதீபம்** *mōṭca-tipam,* பெ. (n.) 1. இறந்தவர் பொருட்டுக் கோயிற் கோபுரத்தில் ஏற்றும் விளக்கு; lamp lighted in temple-towers in commemoration of dead persons. 2. **மோட்ச விளக்கு** பார்க்க 1,2. (W.)

*[Skt.mōksa>த. மோட்சதீபம்.]*

**மோட்சம்** *mōṭcam,* பெ. (n.) 1. விடுபடுகை; liberation, release, escape. 2. முத்திநிலை; final emancipation, release from transmigration, solvation. 3.பதமுத்தி; heaven. 4. நவபதார்த்தங்களுள் வினைத் தொடர்பினின்றும் முற்றும் நீங்கு நிலை. (சீவக. 2814. உரை) (Jaina.) complete deliverance, state of the soul in which it is freed - from all bondage of karma, and has passed for ever beyond the possibility of rebirth, one of nava-patārttam.

த.வ. வீடுபேறு

*[Skt.mūksa>த. மோட்சம்.]*

**மோட்சவிளக்கு** *mōṭca-vilakku,* பெ. (n.) வீரசைவரது பிணத்தின் முன்பு கொண்டு போகப்படுவதும் மயானத்தில் புதை குழியில்

வைக்கப்படுவதுமான விளக்கு; lamp lighted and carried before the corpose or placed at the burial place, among lingayats. 2. உரோமன் கத்தோலிக்க கிறித்தவருள் இறந்தவர் பொருட்டு ஏற்றப்படும் விளக்கு; lamp lighted for the dead, among Roman Catholics.

*[Skt.moksa>த. மோட்சவிளக்கு.]*

**மோட்டா** *mōṭṭā,* பெ.அ. (adj.) 1. பெரிய; large, great, big. 2. கீழ்த்தரமான; shoddy, trashy. 3. முருடான; coarse, rough, unrefined. *"மோட்டாத்துணி"*

*[Hind.mōta>த. மோட்டா.]*

**மோட்டாக்குறுவை** *mōṭṭā-k-kuruvai,* பெ. (n.) மூன்று மாதத்தில் விளையக்கூடிய குறுவை நெல்வகை; (loc) a coarse paddy which matures in 3 months.

*[H. mōta>த. மோட்டா+குறுவை.]*

**மோதகம்** *mōtakam,* பெ. (n.) 1. அப்பவகை; cake of rice flour made into a ball and boiled or steamed. *"வகையமை மோதகம்" (மதுரைக். 626)* 2. கொழுக்கட்டை; *(கந்தபு. காவிரி.25)* a bolus - like preparation of rice - flour. 3. பிட்டு; a kind of pudding made of flour. *"காழியர் மோதகத் தூழுறு விளக்கமும்" (சிலப். 6, 137.)* 4. தோசை; a kind of flour-cake 5. மகிழ்ச்சி; (W) delight, mirth. 6. இணக்கம்; (யாழ். அக.) agreement, suitability.

*[H.mōdaka>த. மோதகம்]*

**மோதபர்** *mōtapar,* பெ.அ. (adj.) நம்பிக்கையான; (C.G.) respectable, trustworthy.

*[Ar.mutabar>த. மோதபர்]*

**மோதம்** *mōdam,* பெ. (n.) 1. மகிழ்ச்சி; jay, rejoicing, gladness. "முன்புற்றது கண்டெழு மோதமுறா (வேதாரணி. பிரமோப.16). 2. களிப்பு; intoxication. 3. வாசனை; smell, scent, perfume. 4. ஓமம்[1] (மலை); aja-mōdā, bishop's weed.

*[Skt.mōda>த. மோதம்]*

**மோதரிபா** *mōdaripā,* பெ. (n.) தொழில்வரி; (W) professional tax formerly levied on the manufacturing and trading communities.

*[U.mutarifa>த. மோதிரிபா]*

**மோய்** *mōy,* பெ. (n.) தாய்; mother, *"உன் மோயின் வருந்தழும்" (திவ். பெருமாள் 9.9.)*

*[H.mai>த. மோய்]*

**மோயன்** *mōyaṉ,* பெ. (n.) 1. பணியாளர் (W) estabishment. 2. கோயிற் படித்தரக்காரர்; loc. members of a temple establishment.

*[U.muyin>த. மோயன்]*

**மோரா**[1] *mōrā,* பெ. (n.) மோகராநாணயம் (சங். அக.); a gold coin, mohur.

*[Persn.mohar>த. மோரா]*

**மோரா**[2] *mōrā,* பெ. (n.) மயிற்பீலி; peacock's feather.

*[Palc.mōrō>த. மோரா]*

**மோரா**[3] *mōrā,* பெ. (n.) எலும்பின் உள்ளீடு; marrow.

*[E.marrow>த. மோரா]*

**மோரி** *mōri,* பெ. (n.) சிறுவடிகால்; small water course, channel gutter. *"தன் வயலுக்கு மோரி ஒன்று வெட்டினான்."* Loc.

*[U. mūri>த. மோரி]*

**மோரியர்** *mūriyar,* பெ. (n.) 1. மௌரிய வமிசத்தவர்; the Mauryas. *"மோரியர் தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு." (அகநா. 281.).* 2. வித்தியாதரர் (புறநா. 175. உரை); Vittiyātarar, a class of semi - divine beings. 3. நாகர் (புறநா. 175. உரை) Nāgas.

*[Skt. maurya>த. மோரியர்]*

**மோலி** *mōli,* பெ. (n.) 1. **மௌலி** பார்க்க; crown. *"இளையவற் கவிந்த மோலி யென்னையுங் கவித்தி யென்றான்"* (கம்பரா. விபீடண. 145)

*[Skt. mauli>த. மோலி]*

**மோனம்** *mōṉam,* பெ. (n.) 1. **மௌனம்** பார்க்க; crown. *"வேள்வியின் மோனமும் பாழ்பட"* (கம்பரா. நிகும் பலை. 59)

*[Skt. mauna>த. மோனம்]*

**மோனமுத்திரை** *mōna-muttirai,* பெ. (n.) அமைதி (மோன) நிலையைக் காட்டும் முத்திரை வகை; hand pose assumed in an attitude of silence in regligious contemplation. இறைவன் மோன முத்திரையத்தனாய் (திருமுருகு–112,உரை).

*[Skt.mauna>த. முத்திரை]*

**மோனி** *mōṉi,* பெ. (n.) 1. **மௌனி** பார்க்க; person who has taken a vow of silence.

*[Skt. maunin>த. மோனி]*

**மௌசு** *maucu,* பெ. (n.) 1. மிகுந்த ஆசை; ardent, desire, longing. *"அதின் பேரில் எனக்கு மௌசு"* 2. சரக்கின் பிரியம்; being in great demand, as an artical. 3. கவர்ச்சி; (Loc.) attractiveness. 4. ஆடம்பரம்; pomp *"கலியாணம் மௌசாக நடந்தது."* Loc.

*[U. mouz>த. மௌசு]*

**மௌட்டியம்** *mauṭṭiyam,* பெ. (n.) அறியாமை; (W) ignorance, folly.

*[Skt. maudhya>த. மௌட்டியம்]*

**மௌராசு** *maurāsu,* பெ. (n.) பரம்பரை யுரிமையாற் பெற்றது; (C.G) that which is hereditary or inherited, inheritance.

*[Ar. maurāāss>த. மௌராஸ்]*

**மௌரியர்** *mauriyar,* பெ. (n.) **மோரியர்** பார்க்க;

*[Skt. maurya>த. மௌரியர்]*

**மௌல்வி** *maulvi,* பெ. (n.) முகம்மதிய மத அறிஞன்; muhammadan lawyer, expounder of mohammadan law, learned, religious muslim. (R.F.)

*[Ar. maulawi>த. மௌல்வி]*

**மௌலன்** *maulaṉ,* பெ. (n.) நற்குலத்தான் (யாழ். அக.); born of a good family.

*[Skt. maula>த. மௌலன்]*

**மௌலானா** *maulāṉa,* பெ. (n.) **மௌல்வி** பார்க்க;

*[Arab. maulānā> த. மௌலானா]*

**மௌலி** *mauli,* பெ. (n.) 1. மயிர் முடி; (திவா.) tuft or lock of hair left unshaven on the crown of the head. 2. கடை முடி (அக.நி.) matted locks, as of an ascetic. 3. சடை முடி; crown diadeon. "தாரணி மௌலி பத்தும்" (கம்பரா. கும்பகர்ண 1.) (பிங்.). 4. தலை; head. (அக.நி.). 5. தார்; (அக.நி.) wreath of flowers. 6. கோபுர முதலியவற்றின் சிகரம்; Loc. ornamental head or top, as of a tower. 7. கள்; (யாழ். அக.) toddy.

*[Skt. mauli>த. மௌலி]*

**மௌவல்** *mauval,* பெ. (n.) 1. காட்டு மல்லிகை; wild jasmine. *ஞாழன் மௌவல் (குறிஞ்சிப்.81).* 2. முல்லை (சூடா.); Arabian jasmine. 3. தாமரை; lotus. *மௌவ னீண்மலர் மேலுறை வானொடு (தேவா.1213,13).*



**மௌனம்** *mauṉam,* பெ. (n.) அமைதி, பேசாமை; silence, muteness, taciturnity. (திருக்களிற்றுப். 28. உரை.)

**த.வ. முன்னம், ஒடுக்கம்**

*[Skt. mauna>த. மௌனம்]*

# ய

**யக்கராசன்** *yakka-rāšaṉ,* பெ.(n.) குபேரன் (இயக்கர்களுக்கு அரசன்); Kubēran as the lord of the Yaksas.

*[Skt. Yakṣa-rāja> த. யக்கராசன்]*

**யக்கராத்திரி** *yakka-rāttiri,* பெ.(n.) நளி (கார்த்தி கை) மாதத்து முழு நிலவு (யாழ். அக.); the full moon in the month of Kārthikai.

*[Skt. Yakṣa+த. யக்கராத்திரி]*

**யக்கன்** *yakkaṉ,* பெ.(n.) 1. **இயக்கன்** பார்க்க; see iyakkaṉ. 2. குபேரன்; Kuberan as the lord of the Yaksas.

*[Skt. Yakṣa> த. யக்கன்]*

**யக்கிஞம்** *yakkaiñam,* பெ.(n.) யக்கியம் (தக்கயாகப். 344. உரை) பார்க்க : see yakkiyam

**யக்கிஞமூர்த்தி** *yakkiña-mūrtti,* பெ.(n.) 1. தீக் கடவுள் (தக்கயாகப்.344.உரை); the God of fire. 2. **யாக்கியபுருடன்** பார்க்க; see yakkiya puruḍaṉ.

*[Skt. Yajña+மூர்த்தி]*

**யக்கியசூத்திரம்** *yakkiya-šūttiram* பெ. (n.) **யக்கியோபவீதம்** பார்க்க; see Yakkiyōpavitam.

*[Skt. Yajña+šūtram+ த. யக்கியசூத்திரம்]*

**யக்கியபசு** *yakkiya-pašu,* பெ.(n.) வேள்வியில் காவு கொடுப்பதற்குரிய விலங்கு (யாழ்.அக); the animal offered in sacrifice.

*[Skt. Yajña+ த. யக்கியபசு]*

**யக்கியபுருடன்** *yakkiya-puruḍaṉ,* பெ.(n.) திருமால் (யாகத்தின் உருவினன்) (சங்.அக.); Tirumāl as assuming the form of sacrifice.

**யக்கியம்** *yakkiyam,* பெ. (n.) 1. **யஞ்ஞம்** பார்க்க; see yaññam. 2. துவாபர யுகம் (யாழ்.அக.); dvāpara, the third yuga.

*[Skt. Yajña> த. யக்கியம்]*

**யக்கியயோக்கியம்** *yakkiya-yōkkiyam,* பெ.(n.) அத்தி (சங்.அக) country fig.

*[Skt. Yajña-Yōgya> த. யக்கிய யோக்கியம்]*

**யக்கியாரி** *yakkiyāri,* பெ.(n.) தக்கன் யாகத்தையழித்தவனாகிய சிவன்; Šiva, as the destroyer of Daksa's sacrifice.

*[Skt. Yajñāri> யக்கியாரி]*

**யக்கியோபவீதம்** *yakkiyōbaveedam,* பெ.(n.) இருபிறப்பாளர் இடத்தோளின் மீதிருந்து மார்பின் குறுக்கே அணியும் பூணூல்; the sacred thread, worn by the members of the first three castes, across the chest and over the left shoulder.

*[Skt. Yajñōpavita> யக்கியோபவீதம்]*

**யக்கேசன்** *yakkēšaṉ,* பெ.(n.) குபேரன்; Kubēran.

*[Skt. Yakṣēša> யக்கேசன்]*

**யக்ஞம்** *yakñam,* பெ.(n.) **யஞ்ஞம்** பார்க்க; see yaññam.

த.வ. வேள்வி

*[Skt. Yakñam> யக்ஞம்]*

**யக்ஞோபவீதம்** *yakñōpavīdam,* பெ. (n.) **யக்கியோபவீதம்** பார்க்க; see yakkiyōpavītam.

*[Skt. Yajñōpavīta> த. யக்ஞோவீதம்]*

**யகிர்த்துச்சூலை** *yakirttu-c-cūlai,* பெ.(n.) கல்லீரல் வீங்கும் நோய் ; hepatitis.

*[Skt. Yakṛt+சூலை > யகிர்த்துச்சூலை]*

**யசசு** *yasasu,* பெ.(n.) புகழ்; honour, glory, fame, renown.

*[Skt Yašas> யசசு]*

**யசசுவி** *yasasuvi,* பெ.(n.) புகழாளன் (சங்.அக.); illustrious person, renowned man.

*[Skt. Yašasuvin> யசசுவி]*

**யசமான்** *yašamāṉ,* பெ. (n.) **யசமானன்**,2. பார்க்க; see yašamāṉaṉ. (கொ.வ.)

*[Skt. Yajamāna > த. யசமானன் – யசமான்]*

**யசமானன்** *yasamāṉaṉ,*பெ.(n.) 1. ஓகத் தலைவன்; sacrificer. 2. தலைவன்(கொ.வ.); master, lord, patron. 3. வீட்டுத்தலைவன்; head of a family.

*[Skt. Yajamāna > த. யசமானன்]*

**யசனம்** *yasaṉam,*பெ.(n.)வேள்வி செய்கை (சூடா); the act of sacrificing.

*[Skt. Yajana> யசனம்]*

**யசு** *yašu,*பெ.(n.) வேதம்நான்கனுள் இரண்டாவது (சிலப்.பக்.339); Yajur-vēda, the second of the four Vēdas.

*[Skt. Yajus> த. யசு]*

**யசுசு** *yacucu,* பெ. (n.) **யசு** பார்க்க; see yašu.

*[Skt. Yajus> த. யசுசு]*

**யசுர்** *yašur,* பெ. (n.) **யசு** பார்க்க; see yašu.

*[Skt. Yajus> த. யசு]*

**யசுர்வேதம்** *yašur-vētam,* பெ. (n.) **யசு** பார்க்க; see yašu

*[Skt. Yajus>veda]*

**யசுரு** *yašuru,* பெ. (n.) **யசு** பார்க்க; see yašu.

**யசோதரகாவியம்** *yasōtharakāviyam,*பெ.(n.) உச்சயினி நகரத்து அரசனாகிய யசோதரனைப் பற்றிக் கூறும் ஒரு சைனகாப்பியம்; a Jaina poem on Yasōdhara, a king of Ujjain.

*[Skt. Yašōdhara+> யசோதர காவியம்.]*

**யசோதை** *yasōthai,* பெ.(n.)கண்ணபிரானை வளர்த்த தாய்; foster - mother of Krishna.

*[Skt. Yajšōdā>யசோதை]*

**யசோவதி** *yašōvati,* பெ. (n.) மேருவுக்கு வடகீழ்பால் ஈசானனுக்குரிய நகரம் (சங்.அக.); the city of Īšāna, situate to the north-east of mount, Mēru.

*[Skt. Yajšōvathi>யசோவதி]*

**யஞ்ஞம்** *yaññam,* பெ.(n.)ஓகம்; sacrifice, sacrificial worship, offering of an oblation.

*[Skt. Yajna>யஞ்ஞம்]*

**யஞ்ஞமூர்த்தி** *yañña-mūrtti,*பெ.(n.) **1. யக்கிய புருடன்** பார்க்க; see yakkiyapuruḍaṉ. **2.யக்கிஞமூர்த்தி,1.** பார்க்க; see yakkiña mūrtti.

**யஞ்ஞவராகம்** *yaññavarākam,* பெ. (n.) திருமால் பன்றியாக உருவெடுத்தத் தோற்றரவு; the boar-incarnation of Viṣṇu.

**யஞ்ஞன்** *yaññaṉ,* பெ. (n.) நெருப்புக் கடவுள்; the god of fire *"இரை யாசையால் வந்த யஞ்ஞா"* (தக்கயாகப்.302)

*[Skt. Yajna>யஞ்ஞன்]*

**யஞ்ஞோபவீதம்** *yaññōpavītam,* பெ.(n.) **யக்கியோபவீதம்** பார்க்க; see yakkiyōpavītam.

**யட்சம்** *yatšam,* பெ.(n.)1. நாய் – dog 2. மந்திரம் -mantra

*[Skt. Yakṣam>யட்சம்]*

**யட்சவாசம்** *yaṭšavāšam,* பெ.(n.) ஆலமரம்; (தக்கயாகப்.534.உரை.)banyan tree.

*[Skt. Yakṣavāsa> த.யட்சவாசம்]*

**யட்சன்** *yatšaṉ,* பெ.(n.)1. இயக்கன்; yakṣa 2. குபேரன்; Kuberan, the lord and wealth **3. இயக்கன்,2.** பார்க்க; see iyakkaṉ.

*[Skt. Yakṣa>த. யட்சன்]*

**யட்சிணி** *yatšiṇi,* பெ.(n.)1. இயக்கி; female yakṣa 2. குபேரனுடைய மனைவி; wife of Kubēran,3.கொற்றவைக்குப் பணி செய்யும் பெண் கடவுள் a goddess in the service of Durgā.

*[Skt. Yakṣiṇi> யட்சிணி]*

**யட்டி1** *yaṭṭi,* பெ. (n.) அதிமதுரச்செடி; liquorice plant.

**யட்டி2** *yaṭṭi,* பெ.(n.) தண்டாயுதம். (அக.நி); club.

**யட்டி3** *yaṭṭi,* பெ. (n.) ஊன்று கோல் (யாழ்.அக.) staff, walking stick.

**யட்டி** *yatti*, பெ.(n.) முத்தாரம் (யாழ்.அக.); pearl necklace.

*[Skt. Yaksti> த. யட்டி]*

**யத்தனம்** *yattanam*, பெ.(n.) முயற்சி; effort, exertion. எத்தனம் பார்க்க; see ettanam.

*[Skt. Yatna> த.யத்தனம்]*

**யத்தினம்** *yattinam*, பெ.(n.) 1. முயற்சி; effort, exertion. 2. **எத்தனம்** பார்க்க; see ettanam.

**யதா** *yathā*, கு.வி.எ.(adv) எவ்வாறு (வின்); according as, in the same manner as.

*[Skt. Yathā> யதா]*

**யதாசக்தி** *yatā-šakti*, கு.வி.எ. (adv.) இயன்றளவு (கொ.வ); to the best of one's ability as far as possible.

*[Skt. Yatha-šakti> த.யதாசக்தி]*

**யதாநகல்** *yatā-nagal*, பெ.(n) சரியானபடி (நகல்); நேர்ப்படி; true copy.

*[Skt. Yata+ப.நகல்]*

**யதாப்பிரகாரம்** *yadā-p-piragāram*, கு.வி.எ. (adv.) 1. அதுவேபோல; (வின்) in like manner. 2. வழக்கப்படி; (உ.வ.) as usual.

**யதாப்பிரதி** *yātā-p-pirati*, பெ.(n) **யதாநகல்** பார்க்க; see yatānakal.

**யதார்த்தம்** *yadārttam*, பெ.(n) உண்மை; (உ.வ) truth; reality.

*[Skt. Yathārtham+ த. யதார்த்தம்]*

**யதார்த்தவாதி** *yatārttavāti*, பெ.(n) உண்மை பேசுவோன்; truth-speaker.

*[Skt. Yathārtha-vādin>யதார்த்தவாதி]*

**யதா–தானம்** *yatā-tānam*, பெ.(n) முன்னிருந்த இடம்; (உ.வ.) former place, status quo ante.

*[Skt. Yathā-sthāna>யதாதானம்]*

**யதாத்திதம்** *yatā-titam*, கு.வி.எ. (adv.) உள்ளபடி, just as it is; in fact, actually.

*[Skt. Yathā-sthita>யதாத்திதம்]*

**யதி** *yati*, பெ.(n) 1. துறவி; ascetic. *"யதியாகி யவணிருந்த தோழன்றன்னை"* (பாரத. அருச்சுனன்றீர்.53). 2. சீரோசை முடியுமிடம் (தண்டி.110.உரை.); (pros.) caesura. 3. சொற்றொடரில் நிறுத்திப் படிக்கும் இடம் (யாழ். அக.); pause in read. 4. தாளப் பிராணம் பத்தனுள் அங்கம் பலவற்றையும் ஒழுங்கு செய்வது (பரத.தாள.25); (mus.) the element of time measure which specified the different modes of arranging aṅkams, one of tāḷa-p-pirāṇam. 5. அடக்கம் (யாழ்.அக.); restraint. 6. இளைப்பாற்றி (யாழ்.அக.); that which relieves fatigue. 7. ஒன்றிப்பு (யாழ்.அக.); concentration. 8. மோனை (வின்); alliteration. 9. கைம்பெண் (யாழ்.அக.); widow.

*[Skt. Yati>த. யதி]*

**யதிதிமதி** *yaditimadi*, பெ. (n) அசையும் மற்றும் அசையா சொத்துகள்; movable and immovable property.

**யதிப்பிரட்டம்** *yadi-p-pirattam*, பெ.(n) **யதிவழு** (தண்டி.111, குமாரசு. உரை) பார்க்க; see yativaḷu.

*[Skt. Yati+bhrasta>த. யதிப்பிரட்டம்.]*

**யதிபங்கம்** *yati-paiṅkam*, பெ. (n.) **யதிவழு** பார்க்க; see yativaḷu.

*[Skt. Yati+bhaṅga>த. யதிபங்கம்.]*

**யதிபதி** *yati-pati*, பெ.(n) யதிராசன்; பார்க்க; see yatirāsan.

*[Skt. Yati+pati> யதிபதி.]*

**யதிபாத்திரம்** *yati-pāttiram*, பெ.(n) இரவலர் கை ஏனம்; (பிச்சைப் பாத்திரம்) begging bowl. (யாழ்.அக.);

*[Skt. Yati+pattiram> யதிபாத்திரம்.]*

**யதிபாரா** *yatipārā*, பெ.(n.) **இதிபாரா** பார்க்க; see Idipārā.(C.G.)

*[Skt. Yatit+para> யதிபாரா]*

**யதியாசாரம்** *yati-y-āšāram*, பெ.(n.) சமண (சைன) முனிவர்கள் ஒழுகுதற்குரிய நெறி(விதி)களைக் கூறும் நூல்; (மேருமந்.424, உரை.); a treatise on the conduct of jaina ascetices.

**யதிவழு** *yati-vaḷurāšan,* பெ.(n.) ஓசையறும்வழி நெறிப்படவராமல் நிற்பது. (தண்டி.110); (pros) misplaced caesura.

**யதீந்திரசரணர்** *yatīntira-šaraṇar,* பெ.(n.) கூரத்தாழ்வார். (சங்.அக.); Kūrattāḷvār, a disciple of Rāmānjuar.

*[Skt. Yatīndra-caraṇa> த. யதீந்திரசரணர்.]*

**யதீந்திரப்பிரவணப்பிரபாவம்** *yatīntira-p-piravaṇa-pirapāvam.*பெ.(n.) பிள்ளைலோகாரிய சீயர் இயற்றியதும் மணவாளமாமுனிகளின் வரலாற்றைக் கூறுவதுமாகிய நூல்; a biography of Maṇavāla-mā-muṉi by Pillailōkāriyajiyar.

**யதீந்திரப்பிரவணர்** *yatīntira-p-piravaṇar,* பெ.(n.) மணவாளமாமுனி a vaiṣṇava ācāryar.

*[Skt. Yatīndra-pravaṇa>த. யதீந்திரபிரவணர்.]*

**யதீந்திரன்** *yatindiraṉ,*பெ.(n.)யதிராசன் பார்க்க; see yadirāšan.

*[Skt. Yatīndra> த. யதீந்திரன்.]*

**யது** *yatu,* பெ.(n.) நிலவு குலத்து(சந்திர வம்சத்து) யாதவ இனத்து மூல புருடனாகிய அரசன்; (பாரத); an ancient king of the lunar race, the founder of the yādava dynasty.

*[Skt. Yadu> த. யது]*

**யதுநாதன்** *yatu-nātāṉ,* பெ. (n.) கண்ணன்; lord Kṛṣṇa.

*[Skt. Yadu-nātha > த. யதுநாதன்.]*

**யதேச்சம்** *yatēccam* (adv.) யதேச்சையாய் பார்க்க; see yatēccaiyāy.

*[Skt. Yathēccan> த. யதேச்சம்.]*

**யதேச்சாதிகாரம்** *yatēccadikāram* பெ. (n.) விருப்பப்படி ஆணை செலுத்துகை; un controlled exercise of power; autocracy.

த.வ. தன்னெடுப்பு, அதிகாரம்

*[Skt. Yathēccādhikāra> த. யதேச்சாதிகாரம்.]*

**யதேச்சை** *yatēccai* கு.வி.எ. (adv) யதேச்சையாய் பார்க்க; see yatēccaiyāy.

த.வ. தன்போக்கு

*[Skt. Yathēccanm> த. யதேச்சை.]*

**யதேச்சையாய்** *yatēccai-y-āy,* கு.வி.எ. (adv.) விருப்பின்படி (கோயிலொ.25); to one's satisfaction; according to one's wish or inclination or pleasure.

த.வ. தன்போக்காக

**யதேந்திரியம்** *yadēndiriyam,* பெ. (n.) கற்புடைமை; (சங்.அக) chastity.

*[Skt. Yatēndriya> த. யதேந்திரியம்.]*

**யதோத்தேசபக்கம்** *yatōttēša-pakkam,* பெ.(n.) ஒரு சொல் நின்றுழி நின்று பலச்சூத்திரங்களும் பலவோத்துக்களும் தன் பொருளே நுதலிவரச் செய்வது (நன். எழுத்து.விருத்.பக்.29.); (gram) method of interpretation in a treatise, by which the sense of the sūtras and the subsections of a chapter is controlled by its heading .

*[Skt. Yathōddēša-pakṣa> த. யதோத்தேசபக்கம்.]*

**யந்திரக்கல்** *yandira-k-kal,* பெ. (n.) இயந்திரத்தால் இறுக்கியாக்கப்பட்ட செங்கல். (C.E.M.); pressed brick, as machine-made.

*[Skt. Yantra> த. யந்திரக்கல்]*

**யந்திரகிரகம்** *yantira-kirakam,* பெ. (n.) 1.பொறி (சூத்திரம்);machine 2. செக்கு; oil-mill.

**யந்திரசாபம்** *yantira-šāpam,* பெ. (n.) கொற்றவில் (தக்கயாகப்.643); victorious bow.

*[Skt. Yantra+cāpa> த. யந்திரசாபம்]*

**யந்திரசாத்திரம்** *yantira-šattiram,* பெ.(n.) 1. எந்திரப் பொறிகளைப் பற்றிய நூல்; treatise on mechanics. 2. மந்திரச்சக்கரம் அமைப்பதைத் தெரிவிக்கும் நூல் (யாழ்.அக.) treatise on the art of constructing diagrams for magical incantations.

*[Skt. Yantra->த. யந்திரம் ]*

**யந்திரம்** *yantiram,* பெ.(n.) 1. சூத்திரப்பொறி; machine, mechanical contrivance. *"இக்கரை யந்திரத்துட் பட்டதென்ன"* (அஷ்டப், திருவேங்கடத்தத். தனியன்) 2. மந்திரச்சக்கரம்; diagrams for magical incantations. *"யந்திரங்கள் வரைந்து கட்டி"* (தக்கயாகப்.175). 3.தேர் (பிங்); chariot, car. 4. திரிகை. (யாழ்.அக.); grinding-mill. 5.செக்கு. (யாழ்.அக.); oil-mill. 6. தீக்கடைகோல் (யாழ்.அக.); fire-drill.

*[Skt. Yantra> த. யந்திரம்]*

**யந்திரலோகம்** *yantira-lōgam,* பெ. (n.) பயறு; pulse.

*[Skt. Yantra> த. யந்திரம் + லோகம்]*

**யந்திரவாவி** *yantira-vāvi,* பெ. (n.) எந்திரயுதவியால் நீரை நிறைத்தற்கும் போக்குதற்குரிய நீர்நிலை (சிலப்.3.45 அரும்); tank or reservoir filled or emptied by mechanical means.

*[Skt. Yantra>த. யந்திரம்]*

**யந்திரவூர்தி** *yantira-vūrdi,* பெ. (n.) யந்திரவுதவியாற் செல்லுதற்குரிய ஊர்தி (வாகனம்) (வின்); conveyance moved by mechanism.

*[Skt. Yantra> த.யந்திரம்+ ஊர்தி]*

**யந்திரதாபனம்** *yantira-tāpanam,* பெ.(n.) தகடு முதலியவற்றில் விரும்பிய பயனை விளைக்கும் மந்திரசக்கரம்(ஸ்தாபிக்குஞ் சடங்கு) உருவாக்கும் செயல்; ceremonial fixing of a plate or palm leaf engraved with magical diagrams.

*[Skt. Yantra + stapa> த. யந்திரதாபனம்]*

**யந்திரு** *yantiru,* பெ. (n.) 1. ஆளுவோன்; ruler. 2. குதிரைப்பாகன்; horse-groom. 3. தேர்ப்பாகன்; charioteer.

*[Skt. Yantṛ > யந்திரு]*

**யமகண்டம்** *yama-kaṇḍam,* பெ. (n.) 1. ஒவ்வொரு நாளிலும் காலனுக்கு (எமனுக்கு) உரியதாகக் கருதப்பட்ட மூன்றே முக்கால் நாழிகைப் பொழுது; (Astrol.) the period of 1.5 hours of a day, presided over by yama and hence considered in-auspicious. 2. ஒருவன் வாணாளில் (ஆயுளில்) உயிருக்கு பேரிடைஞ்சலான (அபாயமான) காலம்; the period of danger to one's life.

*[Skt. Yama >த. யம + கண்டம்]*

**யமகண்டம்பாடு–தல்** *yamakandam-pāḍu,* (செ.கு.வி) (v.i). உயிருக்கு பேரிடைஞ்சலான கட்டுப்பாட்டுக் (அபாயமான நிபந்தனைக்) குட்பட்டு பாடுதல்;to compose verses under stringent conditions, the penalty for the breach of which is death.

*[Skt. Yama>த.யம+ கண்டம் +பாடு]*

**யமகண்டவேளை** *yamakaṇḍ-a-vēḷai,* பெ.(n.) யமகண்டம் பார்க்க; see yama-kaṇḍam.

*[Skt. Yama> த. யம + கண்டவேளை]*

**யமகண்டன்** *yamakaṇḍaṉ,* பெ.(n.) 1. வலியோன்; strong, powerful person. *"அந்த யமகண்டனை யார் வெல்லுகிறது"* (குருபரம்.190) 2. ஒரு காணாக் கோள்; an invisible planet. 3. **யமகண்டம்** பார்க்க; see yamakaṇḍam.

*[Skt. Yama> த. யம கண்டன்]*

**யமகம்** *yamagam,* பெ.(n.) வந்த எழுத்துகளே பொருள் வேறுபடச் செய்யுளின் சீர் அல்லது அடிகளிற் பின்னும் வருவதாகிய மடக்கு என்னும் அணி.(தண்டி.90 வரை) repetition, in a stanza, with changes of meaning sometimes effected by changes in the division of words, dist. fr. tiripu.

*[Skt. Yamaka > த. யமகம்]*

**யமகவந்தாதி** *yamaga-v-andādi,* பெ.(n.) யமகத்தோடு வரும் அந்தாதி; a kind of antāti poem with yamakam in each verse. *"யமக வந்தாதியை வாசிமினே"* (அஷ்டப். திருவரங்கத் தந். தனியன்).

*[Skt. Yamaka> த. யமகவந்தாதி]*

**யமகாதன்** *yama-gādagaṉ,* பெ. (n.) 1. பேராற்ற லுள்ளவன் .(உ.வ); man of great ability. 2. மிகச் சமர்த்தன்; man of great intelligence. 3. மிகவும் பொல்லாதவன்; wicked man.

*[Skt. Yama+ த. யகமகாதன்]*

**யமகாளிந்தி** *yama-kāḷindi,* பெ. (n.) சரயுநதி; the river Sarayū. (யாழ்.அக.)

*[Skt. Yamakālindī + யமகாளிந்தி]*

**யமகிங்கரன்** *yama-kingaraṉ,* பெ. (n.) 1. **யமதூதன்1** பார்க்க; see yama-dūdaṉ. 2. **யமபடன்** பார்க்க; see yamapaḍaṉ.

**யமகீடம்** *yama-kēḍam,* பெ. (n.) புழுவகை; wood-louse. (சங்.அக.).

*[Skt. Yama-kiṭa> த.யமகீடம்]*

**யமசபம்** *yamaśapam,* பெ. (n.) காலனது அவை (இயமனது சபை) (யாழ்.அக.); yama's court.

*[Skt. Yama-sabha+ த.யமசபம்]*

**யமதக்கினி** *yamatakkiṉi,* பெ.(n.) a sage சமதக்கினி எனும் முனிவன்; பார்க்க; see samtakkiṉi.

*[Skt. Jamadagni> த.யமதக்கினி]*

**யமதங்கி** *yamataṅki,* பெ.(n.) a sage சமதக்கினி; பார்க்க;(தொல்.பாயி.உரை); see samtakkiṉi.

*[Skt. Yamadagni> த.யமதங்கி]*

**யமதங்கிமைந்தன்** *yamatdaṅgi-main-taṉ,* பெ.(n.)பரசுராமன்; paraśurāma யமதங்கி–மைந்தனைச் சாரவே (பாரத.குருகுல.134);

*[யமதங்கி+மைந்தன்]*

*[Skt. Jamadagni>த. யமதங்கி]*

**யமதர்மராசன்** *yama-tarma-rāsaṉ,* பெ.(n.)1. காலன்; yaman 2. நடுவு நிலை குன்றாதவன்; just, upright man.

*[Skt. Yama + tarama+rājan > த. யமதர்மராஜன்]*

**யமதூதன்** *yama-dūdan,* பெ.(n.)1. காலனது தூதன்; messenger of yama. 2. யமதூதி; பார்க்க; see yama-dudi.(யாழ்.அக.)

*[யமன் + தூதன்]*

*[Skt. Yama >த. யம]*

**யமதூதி** *yama-dūdi,* பெ.(n.) நாகத்தின் நச்சுப்பல் நான்கனுளொன்று (சீவக.1288.உரை); a fang of the serpent, one of four naccu-p-pal, q.

*[Skt. Yama+dūti>த. யமதூதி]*

**யமப்பிரியம்** *yama-p-piriyam,* பெ.(n.) 1. அத்தி country fig 2. ஆலமரம் banyan.

*[Skt. Yama+priya>த. யமப்பிரியம்]*

**யமபகினி** *yamapagiṉi,* பெ. (n.) யமுனை நதி; the river yamunai. (யாழ்.அக.)

*[Skt. Yama+bhagini>த. யமபகினி]*

**யமபடம்** *yama-patam,* பெ.(n.) யமஉலகத்தின் விவரங்களையும் அங்கே பாவிகள் நுகரும் துன்பங்களையுங் காட்டும் சித்திரப்படம்; map or picture of yama's world, showing in detail the tortures inticted on sinners.

*[Skt. Yama > த. யமபடம்]*

**யமபடன்** *yama-paṭaṉ,* பெ. (n.) இயமனது ஏவலாள்;servant of yama *"யமபடரெனுந்திமிர மணுகாக் கதி"* (தாயு.மலைவளர்.1)

*[Skt. Yama>த. யம]*

**யமபுரம்** *yama-puram,* வெ.(n.)எமனுடைய பட்டணம்(சங்.அக.); yaman's city.

*[Skt. Yama>த. யமபுரம்]*

**யமபுரி** *yama-puri,* யமபுரம் பார்க்க; see yama-puram "யமபுரியேறுவர்" (பெருந்தொ.1176).

**யமயாதனை** *yama-yātaṉai,* பெ.(n.)இயம வேதனை பார்க்க; see yama-vētaṉai.

*[Skt. Yama+ yātaṉai > த. யமயாதனை]*

**யமரதம்** *yama-ratam,* பெ.(n.) **யமவாகனம்** பார்க்க; see yama-vāgaṉam.

*[Skt. Yama+ratha>த. யமரதம்]*

**யமராசன்** *yama-rāšaṉ,* பெ.(n.) **இயமன்** பார்க்க; see yaman. *"அடைமொரு தண்டி லெற்றும் யமராசன்"* (தக்கயாகப். 444)

*[Skt. Yama-rāja> த. யமராசன்]*

**யமலோகம்** *yama-lōgam,* பெ. (n.) 1. எமனுடைய உலகம்; yaman's world. 2. நரகம்; hell; place of torture.

*[Skt. Yama >த. யமலோகம்]*

**யமவாதை** *yama-vātai,* பெ.(n.) **யமவேதனை** பார்க்க; see yama-vēdaṉai.

*[Skt. Yama+vātai> த. யமவாதை]*

**யமவிரதம்** *yama-viratam,* பெ. (n.)1. இயமத்தைக் கடைபிடிக்கை; practice of iyamam; (யாழ்.அக.) 2. ஒருபாற்கோடாது (பாரபட்சமின்றி) அரசுமுறை நடத்துகை;

impartial adminis- tration of government.

*[Skt. Yama> த. யம + விரதம்]*

**யமவேதனை** *yama-vēdaṉai*,(n.) பெருந்துன்பம் (கொ.வ) excruciating pain.

*[Skt. Yama+vēdaṉai> த. யமவேதனை]*

**யமளம்** *yamaḷam*, பெ. (n.) இணை; இரட்டை (யாழ்.அக.) couple; pair; twins.

*[Skt. Yamaḷa> த. யமளம்]*

**யமற்கோளம்** *yamaṟkōḷam*, பெ. (n.) கடுக்காய் chebulic myrobalan.

**யமன்** *yamaṉ*, பெ. (n.) 1. எண்திசைக் காவலருளொருவனும் தென்திசைக்கு உரியவனுமான கடவுள் (திவா.); yaman, the God of death, regent of the South, one of aṣṭa-tikku-p-pālakan. q.v. *"எருமைப் பகட்டின் மிசை யமனேறவே"* (தக்கயாகப். 463.); 2. நாகத்தின் நச்சுப்பல் நான்கனுளொன்று (சீவக. 1288, உரை); a fang of the serpent, one at four naccu-p-pal. q.v.

*[Skt. Yama> யமன்]*

**யமனி** *yamaṉi*, பெ.(n.) யமபுரம் பார்க்க; see yamapuram. *"யமனி சாரும்"* (சிவதரு. சுவர்க்க நரக.41)

*[Skt. Sam-yamanī> த.யமனி]*

**யமனிகை** *yamaṉigai*, பெ.(n.) யவனிகை பார்க்க; see yavaṉigai.

*[Skt. Yavanikā> யமனிகை]*

**யமுனை** *yamunai*, பெ.(n.)பிரயாகையிற் கங்கை யாற்றுடன் கலக்கும் ஓர் ஆறு; Jamuna which joins the Ganges at Prayāga. யமுனைக் கரைக்கென்னை யுய்த்திடுமின் (திவ்.நாய்ச்.12,4)

*[Skt. Yamuna > த. யமுனை]*

**யமுனைத்துறைவன்** *yamunai-t-turaivaṉ*, பெ.(n.)1. கண்ணன்; Kannan, as lord of the region of the Jamuna. *"தூய பெருநீர் யமுனைத் துறைவனை"* (திவ்.திருப்பா.5). 2. மாலியச்சான்றோரான ஆளவந்தார்; a Vaishnava accaryar. எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் (திவ்.இராமாநூசநூற்.21.).

**யாகத்தம்பம்** *yāga-t-tamapam*, பெ. (n.) வேள்வித் தூண், யூபம். (தக்கயாகப்.505.உரை); sacrificial post.

*[யாகம் + தம்பம்]*

*[Skt. Yāga > த. யாக + தம்பம்]*

**யாகத் திரவியம்** *yāga-t-tiraviyam*, பெ.(n.) வேள்விப் பொருள்; articles of sacrifice.

*[Skt. Yāga +tiraviyam> யாகதிரவியம்]*

**யாக நிலை** *yāga-nilai*, பெ.(n.)யாகசாலை பார்க்க; see yāga-šālai. *"வான்றருஞ் சுரபி யாக நிலைபுக"* (இரகு. தேனுவ.52.)

*[Skt. Yama+> த. யாகம் + நிலை]*

**யாகப்பிறையான்** *yāga-p-piṟaiyāṉ*, பெ.(n.) தக்கனது ஓகத்தினால் தோன்றிய நிலவு; the moon arising our of Daksa's sacrificial fire."யாகப்பிறையா னினியென்னகம் புகுந்து (தக்கயாகப்.63, விசேடக் குறிப்பு)

*[Skt. Yāga> யாகம் + பிறையான்]*

**யாகபத்தினி** *yāga-pattiṉi*, பெ.(n.)1. யாகபதியின் மனைவி; wife of yāga pati or sacrificer, as taking part in the sacrifical ceremonies. *"இவர் தமக்குரியாளகிய யாகபத்தினியுமான*(பாரத.சூது.199)" 2.திரௌபதி;(யாழ்.அக.) Draupadi.

*[Skt. Yāga+pattiṉi> த. யாகபத்தினி]*

**யாகபதி** *yāga-pati*, பெ.(n.)1. வேள்வியியற்றுபவன்; one who performs a sacrifice; 2. இந்திரன்; (இலக்.அக.) Indraṉ.

*[Skt. Yāga+ > யாகபதி]*

**யாகபன்னி** *yāga-paṉṉi*, பெ.(n.)1. யாகபத்தினி பார்க்க;see yāga-pattiṉi மாமியென் றியாக பன்னியை (தக்கயாகப்.504)

*[Skt. Yāga+ paṉṉi> த. யாகபன்னி]*

**யாகபாகம்** *yāga-pāgam*, பெ.(n.)1. அவிர்ப்பாகம்; (யாழ்.அக.) libertions or oblations offered in sacrifices.

*[Skt. Yāga> த. யாகம் + பாகம்]*

**யாகபாரி** *yāga-pāri,* பெ.(n.)யாகதட்சிணை (யாக புருடன் மனைவி) "தக்கணை யாக பாரியென" (இரகு. அரசி.20); fees given at a sacrifice, considered as the wife of sacrifice personified.

*[Skt. Yāga+bhāryā> த. யாகபாரி]*

**யாகபேரம்** *yāka-pēram,* பெ.(n.)கோயிலுள் ஓகச் சாலைக்குரிய மூர்த்தி (Loc); the idol that presides over the sacrificial hall of a temple.

*[Skt. Yāga+bēra> யாகபேரம்]*

**யாகபோசனர்** *yāga-pōsaṉar,* பெ.(n.) வானோர்; (யாழ்.அக.) Gods.

*[Skt. Yāga+ pōsaṉar> த. யாகபோசனர்]*

**யாகம்** *yāgam,* பெ.(n.)1. பதினெட்டு வகைப்பட்ட வேள்வி; (திவா) sacrifice, of eighteen kinds.2. ஐவகை(ஓகம்);sacrifice of five kinds.3. ஐவகையாகம்; venetics of siritual discipline.4. திருவாராதனம்; worship.

*[Skt. Yāga> த. யாகம்]*

**யாகமண்டபம்** *yāga-maṇḍapam,* பெ.(n.) யாகசாலை பார்க்க; see yāga-sālai.

*[Skt. Yāga > த. யாகம் + மண்டபம்]*

**யாகவிபாகம்** *yāka-vipāgam,* பெ.(n.) ஓகத்திற் கிடைக்கும் அவிர்ப்பாகம்; oblations at a sacrifice."இழைத்த யாகவிபாக முற்பட வுண்ணலாம்" (தக்கயாகப்.248)

*[Skt. Yāga+vib>த. யாகவி]*

**யாகவுப்பு** *yāga-v-uppu,* பெ.(n.) பூரணாதியுப்பு (மூ.அ.) பார்க்க; see pūraṇātiuppu.

*[Skt. Yāga >யாக + உப்பு]*

**யாகுவம்** *yākuvam,* பெ.(n.) சாவகத்தீவு (யாழ்.அக.) the island of Java.

*[Perh. Yāvaka > த. யாகுவம்]*

**யாங்கர்** *yāṅkar,* பெ.(n.) அரக்கர்; rākṣasas (அக.நி.).

**யாசகத்திருநாள்** *yāśaka-t-tiruñal,* பெ.(n.) பலரிடத்தும் இரந்து பெற்று நடத்துந் திருவிழா(இ.வ.); festival performed by raising donations to meet the expenses.

*[Skt. Yācaka > த. யாசகம்]*

**யாசகம்**[1] *yāśagam,* பெ.(n.) இரப்பு; begging "யாசகத்தினிழி வரவு" (சேது.சேதுசருக்.மே)

*[Skt. Yācaka > த. யாசகம்]*

**யாசகம்**[2] *yāśagam,* பெ.(n.) 1. அரசயானை; Royal elpehant.2. மதயானை; rutting elephant.

*[Skt. Yājaka > த. யாசகம்]*

**யாசகன்**[1] *yāsakaṉ,* பெ.(n.) இரப்போன்;(திவா) beggar menddicant.

*[Skt. Yācaka > த. யாசகன்]*

**யாசகன்**[2] *yāśakaṉ,* பெ.(n.) வேள்வி செய்விப்பவன்; priest offciating at a sacrifice.

*[Skt. Yājaka > த. யாசகன்]*

**யாசனம்** *yāśaṉam,* பெ.(n.) வேதியனாக இருந்து யாகஞ்செய்விக்கை; enabling one to perrform a sacrifice by officiating as priest.

*[Skt. Yājana > த. யாசனம்]*

**யாசனை** *yāsaṉai,* பெ.(n.) 1. வேண்டுதல்; request. 2. பிச்சை (சங்.அக) alms.

*[Skt. Yācanā > த. யாசனை]*

**யாசி–த்தல்** *yāci-,* (செ.கு.வி) இரத்தல் beg; to ask alms. "எத்தகையோர்களும் யாசிக்கப்படும் அத்தகை வித்தக" (விநாயகபு. 4.73.36)

*[Skt. Yāci> த. யாசி]*

**யாசிதகம்** *yāsitagam,* பெ.(n.) 1. வட்டி முதலியன இன்றித் திருப்பிக் கொடுப்பதாகப் பெற்ற பொருள்; (சுக்கிரநீதி,96) that which is lent without interest.2. வாடகையின்றி பயன்படுத்தித் திருப்பிக் கொடுப்பதாகப் பெற்ற பொருள்; thing borrowed for use without rent.

*[Skt. Yācitaka > த. யாசிதகம்]*

**யாசிதம்** *yāsi-dam,* பெ(n.) **யாசிதகம்** பார்க்க; see Yāši-tagam (சுக்கிரநீதி,141)

[**Skt.** *Yācita>* *த. யாசிதம்*]

**யாஞ்ஞுவல்கியம்** *yāññavalkiyam,* பெ (n.) 1. நூற்றெட்டு மறைமங்களுள்(உபநிடதம்) ஒன்று; an upanisad, one of 108. 2. அற(தரும) நூல் பதினெட்டினொன்று; a sanskrit text book of Hindu law, ascribed to yājñavalkya, one of 18 tarumanūl, q.v. n opanisad, one of 108.

[**Skt.** *Yājñavalkya>* *த. யாஞ்ஞுவல்கியம்*]

**யாத்திராகமம்** *yāttirāgamam,* பெ (n.) விவிலியநூலுட் பழைய ஏற்பாட்டின் உட்பிரிவு (கிறித்து); the book of exodus, in the Old Testament.

[**Skt.** *Yatrā+āgama>* *யாத்திராகமம்*]

**யாத்திராகரணம்** *yāttirākaranam,* பெ (n.) 1. வழிச்செலவு செய்கை (பயணம் பண்ணுகை); travelling, make expedition. 2. பொழுது போக்கு; hobby.

[**Skt.** *Yātrā+karana>த. யாத்திராகரணம்*]

**யாத்திராதானம்** *yāttirā-tānam,* பெ (n.) 1. விழா (யாத்திரை), திருவிழா (உற்சவம்) இவற்றின் தொடக்கத்தில் அவை இடையூறின்றி முற்றுப் பெறுமாறு கொடுக்கும் கொடை (தானம்); propitiatory gift made at the beginning of a journey or of a festival to insure its sucessful termination. 2. சாகுந்தறுவாயிற் கொடுக்கும் கொடை (தானம்); propitiatory gift made in-death-bed.

[**Skt.** *Yātrā+sthāna>த. யாத்திராதானம்*]

**யாத்திராப்பிரசங்கம்** *yāttirāpirasaṅgam,* பெ (n.) செலவில் (யாத்திரை) இருக்கை (யாழ்.அக.); being on tour.

[**Skt.** *yātrā+pra-saṅga>த. யாத்திராபிரசங்கம்*]

**யாத்திரிகர்விடுதி** *yāttirigar-viḍudi,* பெ.(n.) செலவு(பிரயாணஞ்) செய்வோர் தங்குதற்குரிய கட்டடம்; travellers bungalow.

[**Skt.** *Yātrika >* *த. யாத்திரிகர்+ விடுதி*]

**யாத்திரிகன்** *yāttirigaṉ,* பெ.(n.) கோயில்களுக்குச் செலவு (தலயாத்திரை) செய்வோன்; traveller, pilgrim.

[**Skt.** *Yātrika >* *த. யாத்திரிகன்*]

**யாதசாம்பதி** *yātaśāmpadi,* பெ. (n.) மழைக் கடவுள் (வருணன்) (யாழ்.அக.) Varunan.

[**Skt.** *Yādasāmpat >* *த. யாதசாம்பதி*]

**யாதபதி** *yādapati,* பெ. (n.) 1. கடல்; sea. 2. மழைக்கடவுள் (வருணன்); varunan.

[**Skt.** *Yādaḥ-pati >* *த. யாதபதி*]

**யாதம்**[1] *yātam,* பெ.(n.) யானைத் தோட்டி (வின்); elephant goad.

[**Skt.** *Yāta >* *த. யாதம்*]

**யாதம்**[2] *yātam,* பெ. (n.) யாதவம் (யாழ்.அக.) பார்க்க; see yadavam.

**யாதவம்** *yādavam,* பெ.(n.) மாட்டுமந்தை (யாழ்.அக.); stock of cattle.

[**Skt.** *Yādava >* *த. யாதவம்*]

**யாதவர்** *yādavar,* பெ.(n.) 1. யதுவமிசத்தவர்; yādavas as descendants of yadu."சேதிபர் யாதவரே" (கலிங்.316,புதுப்.)2. இடையர்(பொ.வ); persons of the cowherd caste.

[**Skt.** *Yādava >* *த. யாதவர்*]

**யாதவன்** *yādavaṉ,* பெ.(n.) கண்ணபிரான்; kṛṣṇa."யாதவன் துவரைக்கிறையாகிய மாதவன்" (பெரியபு.திருமலை.14)

[**Skt.** *Yādava >* *த. யாதவன்*]

**யாதவி** *yādavi,* பெ.(n.) 1. குந்தி; Kunti, as a female descendant of yadu."இறைவனு மகிழ்ந்து பின்னும் யாதவிக்குரைப்ப"(பாரத சம்பவ.85) 2. சிவை(உமை) (யாழ்.அக.); the Goddess Umā, as the sister of kṛṣṇa.

[Skt. Yādavī > த. யாதவி]

**யாதனம்¹** *yatanam,* பெ.(n.) 1. யாதனை, 1,3 பார்க்க; see yātanai, 1,3.

**யாதனம்²** *yātanam,* பெ.(n.) 1. மரக்கலம் (சது.) boat. 2. தெப்பம் (யாழ்.அக.); raft.



**யாதனாசரீரம்** *yātanāšarīram,* பெ.(n.) அளறு (நரகம்) நுகர்தற்குரிய உடல் (தேகம்); the body created to undergo the experiences of hell "பாவம் யாதனாசரீர நல்குமாறு" (ஞானவா.சித்.18)

[Skt. Yātana +šarīrā > த. யாதனாசரீரம்]

**யாதனை** *yatanai,* பெ.(n.) 1. நோவு (வேதனை); pain, agony, torment, suffering. "அடைந்தடைந் திங்கி யாதனையா வறிந்ததல்லால்" (தாயு.ஆகார.30) 2. அளறு (நரக)த் துன்பம் வேதனை (சூடா); the tortures of hell."யாதனையுண்டு கொல்" (சிவதரு. சுவர்க்க நரக.188). 3. துக்கம் (பிங்) anguish

[Skt. Yādava > த. யாதவர்]

**யாதவர்** *yādavar,* பெ.(n.) 1. யதுவமிசத்தவர்; yādavas as descendants of yadu "சேதிபர் யாதவரே" (கலிங்.316,புதுப்.) 2. இடையர் (பொ.வ); persons of the cowherd caste. "யாதனையுண்டு கொல்" (சிவதரு. சுவர்க்க நரக.188) 3. வருத்தம் (பிங்.); anguish, distress.

[Skt. Yātanā > த. யாதனை]

**யாதாத்மியம்** *yādādmiyam,* பெ.(n.) உண்மை-யான நிலை; exact condition, true state.

[Skt. Yāthātmya > த. யாதாத்மியம்]

**யாதாயாதமாயலை-தல்** *yātāyātamāyalai,* செ.கு.வி (v.i.) போவதும் வருவதுமாய் அலைதல் (பார்ப்); to be wandering to and fro.

**யாதார்த்தியம்** *yātārttiyam,* பெ.(n.) உண்மை (சத்தியம்) (இலக்.அக.); truth.

[Skt. Yāthārthya > த. யாதார்த்தியம்]

**யாதாத்து** *yātāttu,* பெ.(n.) 1. நினைவுக்குறிப்பு; written memorandum. 2. ஒத்த வேலை செய்வோர் அவ்வேலை பற்றித் தம்முள் எழுதும் நினைவுக்குறிப்பு; official memorandum addressed by one official to another of equal status. 3. ஆவணங்களில் (பத்திரம்) வரிப் பிளப்பு முதலியவற்றைக் குறிக்குங் குறிப்பு. (இ.வ.); memorandum of interlineation, etc., in a document.

த.வ. இடைக்குறிப்பு

[Skt. Yāddāṣt > த. யாதாத்து]

**யாதி** *yadi,* பெ.(n.) 1. நினைவு; memory."எனக்கு யாதி இல்லை". 2. ஆழ்ந்த கருத்து; deep thought.

[U. Yād > த. யாதி]

**யாதிகன்** *yadigan* பெ.(n.) வழிச்செல்வோன் (சங்.அக.) traveller.

[Skt. Yātika > த. யாதிகன்]

**யாபனம்** *yābanam,* பெ.(n.) 1. பொழுது போக்குகை; whiling away one's time. 2. தாமதிக்கை; delaying. 3. இகழுகை; despising.

[Skt. Yāpana > த. யாபனம்]

**யாம்மியோத்தராந்தம்** *yāmmiyōttarāntam,* பெ.(n.) (வானியல்) வான அளவில் தெற்கு வடக்காகவுள்ள தொலைவு(C.G.); (Astron) azimuth, as the distance from north to south.

[Skt. Yāmya+uttara+antara>த.யாம்மி-யோத்தராந்தம்]

**யாமளருபதேசம்** *yāmaḷarubadēšam,* பெ.(n.) ஒரு நுண்ணுத்தி (தாந்திரிகம்) நூல் (தக்கயாகப் 168, உரை); a tantric treatise.

[Skt. Yāmala+upadēša > த. யாமளருபதேசம்]

**யாமளாக்கினி** *yāmaḷākkini*, பெ. (n.) பெருங் கொற்றவையாகிய காளியின் தீ (தக்கயாகப். 666. உரை); the fire of Mahākāli.

**யாமளாசாரியர்** *yāmaḷāšāriyar*, பெ.(n.) யாமளாகமத்தின் வழியொழுகும் பெரியோர். (தக்கயாகப். 51, உரை.); the principal followers of yāmaḷākamam.

[Skt. Yāmala+ācārya > த.யாமளாசாரியர்]

**யாமளேந்திரர்** *yāmaḷēndirar*, பெ.(n.) இசைத் தமிழ் நூலாசிரியருளொருவர்; (சிலப். உரைப்பாயி); author of a treatise on icai-t-tamil.

**யாவத்தீவு** *yāvattīvu*, பெ.(n.) யவத்தீவு (வின்); the Island of Java.

த.வ. யாவம், யாவா

[Skt. Yava-dvīpa > த. யாவத்தீவு]

**யுக்தம்** *yuktam*, பெ. (n.) 1. தகுதி (கொ.வ.); fitness, suitablenes, propriety. 2. தொடர் மொழியினிறுதியில் கூடினது என்ற பொருளில் வருஞ்சொல்; the second member of a compound word meaning that which is combined 'with'.

[Skt. Yukta > த. யுக்தம்]

**யுக்தி** *yukti*, பெ.(n.) 1. பொருத்தம்; fitness. 2. கருதுகோள் (அனுமானம்); inference. 3. காரணம் (நியாயம்) (வின்); reason, argument. 4. கூரியவறிவு; keen understanding, acute intellect. 5. சூழ்ச்சி (கொ.வ.); plan,scheme, device. 6. அறிவுரை புத்திமதி (வின்); counsel, advice. 7. பகுத்தறிவு (விவேகம்) (வின்); discrimination. 8. ஆராய்வு (வின்); deleberation. 9. சூழ்ச்சி (உபாயம்) (வின்); expedient, artifice.

[Skt. Yukti > த. யுக்தி]

**யுக்மம்** *yukmam*, பெ.(n.) இணை, இரட்டை; pair, couple, brace.

[Skt. Yugma > த. யுக்மம்]

**யுகசந்தி** *yugašandi*, பெ.(n.) (வானியல்) ஒரு ஊழியின் (யுகம்) முடிவினின்றும் அடுத்த ஊழியின் (யுகம்) தொடக்கத்தினின்றும் சேர்த்ததும் முன் ஊழியின் ஆறிலொருபங்குமான காலப்பகுதி; (Astron.) period comprising the end of the next equivalent to one-sixth of the duration of the earlier yuga.

[Skt. Yuga+sandhi > த. யுகசந்தி]

**யுகதருமம்** *yuga-tarumam*, பெ.(n.) நூலின்படி (சாத்திரம்) அந்த அந்த ஊழியில் (யுகம்) நடக்கவேண்டிய நடைமுறை (வின்); the characteristics of a particular yuga as detailed in the šāstras.

த.வ. ஊழிநடப்பு

[Skt. Yuga > த. யுகம் + தருமம்]

**யுகந்தரம்** *yugandaram*, பெ.(n.) 1. ஏர்க்கால்; pole of a carriage to which the yoke is fixed. 2. ஒரு நாடு; a countsry.

[Skt. Yugan-dhara> த. யுகந்தரம்]

**யுகப்பிரளயம்** *yuga-p-piraḷayam*, பெ.(n.) நான்கு ஊழியின்(யுகம்)முடிவில் நிகழும் அழிவு (பிரளயம்) (வின்); cosmic deluge at the end of a cycle of yugas.

[Skt. Yuga+pra-laya > த. யுகப்பிரளயம்]

**யுகபத்திரிகை** *yugapattirigai*, பெ.(n.) மரவகை; ašokatree.

[Skt. Yugapatitikā > த. யுகபத்திரிகை]

**யுகபேதம்** *yuga-bēdam*, பெ.(n.) ஊழிகளுக்குள் (யுகம்) உண்டாகும் நடைமுறையின் வேறுபாடு (வின்); the difference in characteristics between one yuga and another.

[Skt. Yuga+bhēda > த. யுகபேதம்]

**யுகம்[1]** *yugam*, பெ.(n.) 1. கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம், என்ற நால்வகைப்பட்ட நீடிய காலம்.(பிங்); age, aeon, a long period of time, of which there are fair,viz.,kiruta-yukam, tiretā-yukam, tuṉāpara-yukam, kali-yukam. 2. இரட்டை; pair, coule, brace" பதயுகத் தொழில் கொடு" (கம்பரா.நகரப்.49) 3. நுகம் (யாழ்.அக.) yoke. 4. நான்கு முழுங்கொண்ட அளவு

(யாழ்.அக.); a measure of four cubits.

*[Skt. Yuga > த. யுகம்1]*

**யுகம்**2 *yugam*, பெ. (n.) உலகம் (பூமி) (பிங்); earth.

**யுகமுடிவு** *yugamudivu*, பெ.(n.) ஊழியின்(யுகம்) முடிவு (யாழ்.அக.) ; the end of a yuga.

*[Skt. Yuga > த. யுகம்]*

**யுகவத்திரகம்** *yugavattiragam*, பெ.(n.) திருவாத்தி (தைலவ.தைல.51.); holy mountain ebony.

*[Skt. Yugapatraka > த. யுகவத்திரகம்]*

**யுகளம்** *yugaḷam*, பெ. (n.) இரட்டை; pair, brace. "சேவடி யுகள மல்லது (பதினொ. மூத்த பிள்ளையாக)"

த.வ. இணை

*[Skt. Yuga la > த. யுகளம்]*

**யுகளி** *yugaḷi*, பெ.(n.) யுகளம் (வின்) பார்க்க ; see yugalam.

*[Skt. Yugali > த. யுகளி]*

**யுகாதி** *yugāti*, பெ.(n.) 1. ஊழியின் (யுகம்) தொடக்கம் (சங்.அக.); beginning of the year. 2. தெலுங்கர், கன்னடர் முதலியோரின் ஆண்டுப் பிறப்பு ; the new year day of the Telugus and the Kanarese. 3. அருகன்; Arhat. 4. கடவுள் (யாழ்.அக.) ; god.

*[Skt. Yugādi > த. யுகாதி]*

**யுகாந்தப்பிரளயம்** *yugānta-p-piraḷayam*, பெ. (n.) யுகப்பிரளயம் (வின்) பார்க்க; see yuga-p-piraḷayam.

*[Skt. Yugānta+Pra-laya > த. யுகாந்தப் பிரளயம்]*

**யுகாந்தம்** *yugāndam*, பெ.(n.) 1. ஊழியின் (யுகம்) முடிவு(வின்) ; the end of yuga. 2. யுகப்பிரளயம் (யாழ்.அக.) பார்க்க ; see yuga-p-piraḷayam.

*[Skt. Yugānta > த. யுகாந்தம்]*

**யுகாந்தாக்கினி** *yugāntākkiṉi*, பெ.(n.) ஊழித்தீ (தக்கயாகப். 67,உரை) ; the all consuming fire at the end of a cycle of yugas.

*[Skt. Yugantāgni > த. யுகாந்தாக்கினி]*

**யுஞ்சானன்** *yuñšāṉaṉ*, பெ.(n.) ஒகப் பயிற்சி (யோகாப்பியாசம்) செய்வோன் (கங்.அக.) ; one who practises yōga, yogi.

*[Skt. Yuñjāna > த. யுஞ்சானன்]*

**யுத்தகளம்** *yuttakaḷam*, பெ.(n.) போர்க்களம் (பிங்); battle-field.

*[Skt. Yuddha > த. யுத்தம்+களம்]*

**யுத்தசன்னத்தன்** *yuttašaṉṉattaṉ*, பெ. (n.) போர்க்கோலங் கொண்டவன் (வின்); one armed or equipped for battle.

*[Skt. Yuddha+san-naddha > த. யுத்த சன்னத்தன்]*

**யுத்தசன்னாகம்** *yutta-šaṉṉāgam*, பெ.(n.) போருக்கு முன்னேற்பாடு (ஆயத்தம்) (வின்); preparation for battle, preparedness for war.

*[Skt. Yuddha+san-nāha > த. யுத்த சன்னாகம்]*

**யுத்தசன்னியாசம்** *yuttašaṉṉiyāšam*, பெ.(n.) சூளுறவு(சபதம்) செய்து போர்த் தொழிலினின்று நீங்குகை(வின்); renunciation of military life, under a vow.

*[Skt. Yuddha+san-nyāsa > த. யுத்த சன்னியாசம்]*

**யுத்தநாதி** *yuttanādi*, பெ.(n.) (வானியல்) குறித்தகாலத்திலுள்ள கோள் இயக்கப் (அயனசலன) பாகை (வின்); (Astron.) precession of the equinoxes at a given time.

*[Skt. Yukta+nāti > த. யுத்தநாதி]*

**யுத்தநாதிவாக்கியம்** *yuttanādivākkiyam*, பெ.(n.) கோள் இயக்க (அயனசலன) வாய்பாடு (வின்); (Astron.) table of the precession of the equinoxes for a given time.

**யுத்தம்**1 *yuttam*, பெ.(n.) போர்(பிங்); battle, fight, war.

*[Skt. Yuddha > த. யுத்தம்1]*

**யுத்தம்**2 *yuttam*, பெ.(n.) 1. பொருத்தம்(வின்); fitness, proriety. 2. யுத்தம்,2 (வின்) பார்க்க; see yuktam,2. 3. நான்கு முழங்கொண்ட அளவு. (யாழ்.அக.); a measurement.

*[Skt. Yukta > த. யுக்தம்,2]*

**யுத்தமுகம்** *yuttamugam*, பெ.(n.) போர்முனை(வின்) ; battle front.

*[Skt. Yuddha+ > த.யுத்தம் + முகம்]*

**யுத்தரங்கம்** *yuttaraṅgam*, பெ.(n.) போர்க்களம் ; theatre of war, field of battle.

*[Skt. Yuddha> த. யுத்தம்+அரங்கம்]*

**யுத்தவீரன்** *yuttaviran*, பெ.(n.) போர் வீரன்; warrior.

*[Skt. Yuddha> த. யுத்தம் + வீரன்]*

**யுத்தவேது** *yuttavēdu*, பெ.(n.) பொருத்தமான ஏதுவைக் கொண்ட அணிபுனைவு (அலங்காரம்) (யாழ்.அக.); (Rhet.) a figure of speech in which an appropriate reason is suggested.

*[Skt. Yuddha+ த. யுத்தம் + வேது]*

**யுத்தாயுத்தம்** *yuttāyuttam*, பெ.(n.) தக்கதுந் தகாததும்; what is proper and what is improper, propriety and impropriety.

*[Skt. Yuktāyukta > த. யுத்தாயுத்தம்]*

**யுத்தி** *yutti*, பெ.(n.) யுக்தி பார்க்க; see yukti.

*[Skt. Yukti > த. யுத்தி]*

**யுத்திக்காரன்** *yuttikkāran*, பெ.(n.) கூரிய அறிவுள்ளவன் (வின்); man of keen, resourceful intellect.

*[Skt. Yukti > த. யுத்தி + காரன்]*

**யுத்திசித்தி** *yutticitti*, பெ.(n.) ஏரணதருக்கத் தால்(தருக்கரீதியால்) ஏற்படும் முடிவு (வின்); logical or rational conclusion.

**யுத்திநியாயம்** *yuttiniyāyam*, பெ.(n.) யுத்திவாதம் பார்க்க ; yuttivātam.

*[Skt. Yukti+nyāya > த. யுத்திநியாயம்]*

**யுத்தி யுத்தர்** *yutti yuttar*, பெ. (n.) ஏரணவல்லான் (தார்க்கிகர்) (வின்); logicians.

*[Skt. Yukti+yukta > த. யுத்தியுத்தர்]*

**யுத்திவாதம்** *yuttivādam*, பெ. (n.) நூல் (சாத்திரம்) ஆதாரங்களைக் கொள்ளாமல் அறிவு (புத்தி) வன்மையைக் கொண்டு தருக்கம் செய்கை (வாதிடுகை) (கொ.வ); argument founded on pure reason and not on scriptural authority.

*[Skt. Yukti+vāda > த. யுத்திவாதம்]*

**யுத்தோன்முகன்** *yuttonmugan*, பெ.(n.) போருக்கு அணியமாய்(ஆயத்தம்) இருப்பவன். (தக்கயாகப். 228,உரை); one who is prepared and ready for war.

*[Skt. Yuddhōn > த. யுத்தோன்+முகன்]*

**யுதிட்டிரன்** *yuttiṭṭiran*, பெ.(n.) பாண்டவருள் மூத்தவனான தருமபுத்திரன்(பாரத.); Dharmaputra, the eldest of the Pāṇḍavas.

*[Skt. Yudhi-ṣṭhira > த. யுதிட்டிரன்]*

**யுவ** *yuva*, பெ.(n.) வியாழன் வட்ட ஆண்டு அறுபதனுள் ஒன்பதாவது (பெரியவரு); the 9th year of the Jupiter cycle.

*[Skt. Yuvan > த. யுவ]*

**யுவதி** *yuvatit*, பெ.(n.)1. இளம் பெண்; young woman. 2. பதினாறு அகவையுடைய பெண். (சூடா); girl of 16 years.

*[Skt. Yuvati > த. யுவதி]*

**யுவராசன்** *yuvarāšan*, பெ.(n.) இளவரசன் (வின்); heir-apparent to the throne, crown-prince.

*[Skt. Yuva-rāja > த. யுவராசன்]*

**யுவன்** *yuvan*, பெ.(n.) இளைஞன்(வின்); young man.

*[Skt. Yuvan > த. யுவன்]*

**யுவா** *yuvā*, பெ.(n.) யுவன் பார்க்க; see yuvan.

**யுனானி** *yunāni*, பெ.(n.) முகம்மதிய மருத்துவர் கையாளும் கிரேக்க மருத்துவ முறை; Greek school of medicine practised by Indian muhammadans.

*[Skt. Yunāni > த. யுனானி]*

**யூகசாலி** *yugašāli*, பெ.(n.) அறிவுக்கூர்மை யுள்ளவன்; quick witted person.

*[Skt. ūha > த. யூகம்+சாலி]*

**யூகம்[1]** *yūgam,* பெ.(n.) 1. கருங்குரங்கு; black monkey "யூகமொடு மாமுக முசுக்கலை" (திருமுரு.302.) (பி.ங்.) 2. பெண்குரங்கு (திவா.); female monkey.

**யூகம்[2]** *yūgam,* பெ.(n.)ஒருவகைப்புல் (அக.நி.); broomstick grass.

*[Skt. ūhani > த. யூகம்[2]]*

**யூகம்[3]** *yūgam,* பெ.(n.)பேன்(யாழ்.அக.); louse.

*[Skt. yuka > த. யூகம்[3]]*

**யூகம்[4]** *yūgam,* பெ.(n.)1. உன்னிப்பு, கருதுகை (உத்தேசம்); guess, conjecture. 2. பகுத்தறிவு (விவேகம்) (யாழ்.அக.); discrimination, keen preception, understanding. 3. கருத்து; intent, import. 4. காந்தி (யாழ்.அக.); brilliance. 5. ஏரணம், தருக்கம்; reason , logic.

*[Skt. ūha > த. யூகம்]*

**யூகம்[5]** *yūgam,* பெ.(n.)1. படையின் அணிவகுப்பு; arrangement or disposition of the forces for fighting military array."சக்கரயூகம் பிக்கு" (கம்பரா. நிகும்பலை.69). 2. படை (சூடா); army, host 3. உடற்குறை (பிங்); headless trunk of a body.

*[Skt. vyūha > த. யூகம்[5]]*

**யூகம்[6]** *yūgam,* பெ.(n.)கோட்டான் (பிங்); rock horned owl

**யூகவான்** *yūgavāṉ,* பெ.(n.)யூகி1 (யாழ்.அக.) பார்க்க; see yūgi

*[Skt. ūhavān > த. யூகவான்.]*

**யூகி[1]** *yūgi,* பெ.(n.) அறிவாளி(புத்திசாலி)(வின்) ; wise man, ingenious person, man of keen understanding

*[Skt. ūhin > த யூகி.]*

**யூகி[2]–த்தல்** *yūgi,-* 4 செ.குன்றா.வி. (v.t.) 1. கருதுதல் (உத்தேசம்); guess conjecture. 2. கருதுதல் (அனுமானித்தல்) (கொ.வ.); to infer conclude. 3. ஆராய்தல் (யாழ்.அக.); to examine scrutinise

*[Skt. ūha > த. யூகி[2].]*

**யூகி[3]** *yūgi,* பெ.(n.)வத்சனான உதயணனிடம் அரசு நுண்ணுத்தியில் (இராச்சியதந்திரம்) வல்லவனாக இருந்த(நிபுணன்) மந்திரி; a minister of udayaṇa, king of vasta, famous for his political wisdom. "யூகிபோதரவு" (பெருங்.இலாவாண. 8, தலைப்பு.)

*[Skt. yaugandarāyaṇa > த.யூகி[3].]*

**யூகிப்பயில்** *yūgi-p-payil,* பெ. (n.) குழூஉக்குறிகளாலான மொழி. (வின்.); a kind of secret language.

*[Skt. yuki+த.யூகி.]*

**யூகிபாசை** *yūgibāšai,* பெ.(n.) யூகிப்பயில்(வின்) பார்க்க; see yūgipayil.

*[Skt. ūhin +bhāṣā> த. யூகிபாசை.]*

**யூகை[1]** *yūgai,* பெ.(n.) யூகம்[3] பார்க்க; see yūgam.

*[Skt. yūkā > த. யூகை[1].]*

**யூகை[2]** *yūgai,* பெ.(n.) துவரையின்(யவை) எட்டிலொரு பங்கான அளவு (கந்தபு. அண்ட கோ.5.); a linear measure =1/8 of yavai.

**யூகை[3]** *yūgai,* பெ.(n.) 1. யூகம்[4], 2 (யாழ்.அக.) பார்க்க ; see yūgam[4],2. 2. மூலத்திலிருந்து உரைகாரர் கருதும் (அனுமான) கருத்து; inference from a text, drawn by its commentator. 3. கல்வி(வின்) ; learning, erudition. 4. அறிவாளி(வின்) ; erudite person.

*[Skt. ūha > த. யூகை[3].]*

**யூதநாதன்** *yūdanādaṉ,* பெ.(n.) யூதபம் (சூடா) பார்க்க ; see yudabam.

*[Skt. yūtha+nātha > த. யூதநாதன்.]*

**யூதநாயகன்** *yūda nāyagaṉ,* பெ.(n.) படைத்தலைவன்; commander."யூதநாயகரோடு ரகேசரை" (தக்கயாகப்.609)

*[Skt. yūktha+nayaga>த. யூதநாயகன்]*

**யூதப்பிரட்டன்** *yūdapiraṭṭaṉ,* பெ.(n.) தன்னினத்தைவிட்டுப் பிரிந்த யானை. (யாழ்.அக.); elephant which has strayed away from its herd.

*[Skt. yūtha>த. யூதப்பிரட்டன் ]*

**ரிசி** *riṣi,* பெ.(n.) முனிவன்; sage, saint.

*[Skt. ṛṣi > ரிசி]*

**ரித்ததிதி** *rittatiti,* பெ.(n.) நான்காவது, ஒன்பதாவது, பதினான்காவது ஆகிய பிறைநாட்களைக் குறிக்கும் பொதுச்சொல்; a common term for the fourth, nineth and fourteenth titi of the lunar fortnight.

**த.வ. ஐந்திடையிட்டபிறைநாள்**

*[Skt. rikta-tithi > ரித்ததிதி]*

**ரிபு** *ripu,* பெ.(n.) பகைவன்; enemy.

*[Skt. ripu > ரிபு]*

**ரியாயத்** *riyāyat,* பெ.(n.) வரியின் தள்ளுபடி; abatement of assessment.

**ரிவாசா** *rivāšā,* பெ.(n.) வழக்கம்; custom, practice, usuage.

*[Arab. riwāj > ரிவாசா]*

**ரிவாசு** *rivāšu,* பெ.(n.) ரிவாசா பார்க்க; see rivājā.

**ரீகர்** *rīgar,* பெ.(n.) கரிசல்தரை; black cotton soil.

*[U. rēgar > ரீகர்]*

**ரீங்காரம்** *rīṅgāram,* பெ.(n.) வண்டு முதலியவற்றின் நீள்மென் ஒலி; humming as of bees.

**ரீதி** *rīdi,* பெ.(n.) 1. நிலைமை; "காலரீதி" state, condition. 2. முறை; mode, method, model, system.

*[Skt. rīti > ரீதி]*

**ரீதிகௌளை** *rītikauḷai,* பெ.(n.) ஒரு பண்வகை; a melody type.

*[Skt. 'rīti-gauḍa > ரீதிகௌளை]*

**ரீப்தாங்கல்** *rīp-tāṅgal,* பெ.(n.) கப்பற்பாயின் உறுப்புகளுள் ஒன்று ; reef-band.

*[E. reef > ரீப்தாங்கல்]*

**ரீப்பர்** *rīppar,* பெ.(n.) வரிச்சல் பட்டை; reeper, long strip or lath of palmyra or other timber.

*[Mhr.rip> E. reeper > ரீப்பர்]*

**ரீப்பா** *rīppā,* பெ.(n.) ரீப்பர் பார்க்க; see rēppar.

**ருக்** *ruk,* பெ.(n.) இருக்கு மறை(வேதம்); Rg-vēda. 2. வேதமந்திரம்; vēdic hymn.

*[Skt. ṛk > ருக்]*

**ருக்கா** *rukkā,* பெ.(n.) சீட்டு; note, chit, memorandum.

*[U. ruqqā > ருக்கா]*

**ருக்மிணி** *rukmiṇi,* பெ(n.) திருமாலின் மூத்த மனைவி; šri Krishna's first wife.

*[Skt.rukmanimā> ருக்மிணி]*

**ருசி** *ruši,* பெ.(n.) உருசி பார்க்க; see uruši.

*[Skt. ruci > ருசி]*

**ருசு** *rušu,* பெ.(n.) 1. சான்று; proof. 2. கையெழுத்து; signature.

*[U. rujū > ருசு]*

**ருசுச்செய்—தல்** *rusu-c-cey,* செ.கு.வி. (v.i.) மெய்ப்பித்தல்; to prove or establish by evidence; to bring home, as a charge or accusation.

*[U. rujū > த. ருசுச்செய்தல்]*

**ருசுப்படுத்து—தல்** *rušu-p-paḍuttu-,* செ.கு.வி. (v.i.) ருசுச்செய்—, பார்க்க; see rucuccey-,.

**ருசுப்பண்ணு—தல்** *rušu-p-paṇṇu-,* செ.கு.வி. (v.i.) ருசுச்செய்—, பார்க்க; see rucuccey-,.

**ருசுப்பொறுப்பு** *rušu-p-poṟuppu,* பெ. (n.) உண்மையெனக் காட்ட வேண்டிய பொறுப்பு; burden of proof.

**ருசுப்போடு—தல்** *rušu-p-pōḍu-,* செ.கு.வி. (v.i.) கையெழுத்துப்போடுதல்; to affix one's signature.

**ருசும்** *rušum,* பெ.(n.) சில பணியாளர் வழக்கமாகப் பெறும் உரிமைப்பணம்; fees, money, payments received by public officers,as perquisites attached to their office.

*[U. rūsūm > ருசும்]*

**ருசுவு** *rušuvu,* பெ.(n.) ருசு பார்க்க; see rušu.

**ருத்திரகணப்பெருமக்கள்** *ruttira-kaṇa-p-perumakkaḷ,* பெ(n.) ஒரு சார் சிவனடியார் ; the a cḷass of šaiva devotees.

*[Skt.rudra+த. ருத்திர+கணம்+பெருமக்கள் ]*

**ருத்திரவீணை** *ruttira-viṇai,* பெ.(n.) உருத்திர வீணை பார்க்க; see uruttiraviṇai.

*[Skt. rudra+vīna > ருத்திரவீணை]*

**ருத்திரன்** *ruttiraṉ,* பெ.(n.) உருத்திரன் பார்க்க; see uruttiraṉ.

*[Skt. rudra > ருத்திரன்]*

**ருத்ராட்சம்** *rutrāṭcam,* பெ.(n.) உருத்திராட்ச மணி; rudrak bead.

**த.வ. அக்கமணி**

*[Skt. rudrākṣa > ருத்ராக்ஷம்]*

**ருத்திராபிடேகம்** *ruttirāpiḍsegam,* பெ.(n.) உருத்திரசூத்தத்தைச் சொல்லி துய்மையான நீரால் நீராட்டுதல்; a ceremonial bath in water sanctioned with the recital of uruttiracū-ttam.

*[Skt. rudre+abhiṣēka > ருத்திராபிடேகம்]*

**ருப்பு-தல்** *ruppu,* செ.கு.வி.(v.i.) தோசை மாவு முதலியன அரைத்தல்; to grind.

*[T.K. rubbu > ருப்பு]*

**ருப்புக்கல்** *ruppu-k-kal,* பெ.(n.) ஆட்டுக்கல் ; stone mortar.

**ருப்புக்குழவி** *ruppu-k-kuḷavi,* பெ.(n.) மாவரைக்குங் குழவி; stone roller for grinding.

**ருப்புரல்** *ruppural,* பெ.(n.) ருப்புக்கல் பார்க்க; see ruppukkal.

**ருப்புலக்கை** *ruppulakkai,* பெ.(n.) மாவிடிக்கும் உலக்கை; pestle for grinding flour.

**ருமாலை** *rumālai,* பெ.(n.) தலைப்பாகை; a head dress.

*[Persn. rūmāl > ருமாலை]*

**ருமானி** *rumāṉi,* பெ.(n.) மாதுளம் வித்தைப் போன்ற சிவந்த நிறமுள்ள மாம்பழவகை; a round reddish mango fruit as resembling in colour the pips of pomegranate.

**த.வ. செம்மாங்கனி**

*[U. rummāni > ருமானி]*

**ரூட்டி** *rūṭṭi,* பெ.(n.) தொந்தரை; annoyance; trouble. "ரூட்டி செய்தல் தேதென்று" (விறலிவிடு.855)

*[Skt. rusṭi > ரூட்டி]*

**ரூட்டியடி-த்தல்** *rūṭṭi-y-aḍi-,* செ.குன்றாவி.(v.t.) தொந்தரை செய்தல்; to cause annoyance.

*[Skt. rusṭi > ரூட்டியடி]*

**ரூடி** *rūḍi,* பெ.(n.) இடுகுறிப் பெயர்; term used in its conventional sense.

*[Skt. rūdhi > ரூடி]*

**ரூப்காரி** *rūp-kāri,* பெ.(n.) வழக்கு நடவடிக்கை; judicial proceeding.

*[Persn. rupkāri > ரூப்காரி]*

**ரூப்ரூப்** *rūprūp,* து.வி.(adv.) முன்னிலையில்; in person, in one's presence, personally, face to face.

*[Persn. rūbrū > ரூப்ரூப்]*

**ரூபகதாளம்** *rūpaga-tāḷam,* பெ.(n.) ஏழு தாளத்தொன்று; a variety of time measure, one of catta-tāḷam.

**த.வ. உருவகத்தாளம்**

*[Skt. rūpaka > ரூபகதாளம்]*

**ரூபகம்** *rūpagam,* பெ.(n.) 1. உருவகம்; metapher. 2. ரூபகதாளம் பார்க்க; see rūpakatāḷam 3. பத்துவகைப்பட்ட நாடகம்; drama of which there are ten species.

*[Skt. rūpaka > ரூபகம்]*

**ரூபம்** *rūpam,* பெ.(n.) 1. உருவம்; form, appearance, figure likeness. 2. ஒளியாகிய புலன்; sense of sight. 3. அழகு; beauty.

*[Skt. rūpa > ரூபம்]*

**ரூபலாவண்ணியம்** *rūpa-lāva-ṇṇiyam,* பெ.(n.) வடிவழகு; beauty of form, loveliness.

*[Skt. rūpa+lāvaṇya > ரூபலாவண்ணியம்]*

**ரூபவதி** *rūpavadi,* பெ.(n.) வடிவழகுள்ளவள்; beautiful, handsome woman.

**த.வ. வடிவழகி**

*[Skt. rūpa-vatī > ரூபவதி]*

**ரூபா** *rūpā,* பெ.(n.) ரூபாய் பார்க்க; see rūpāy.

*[Skt. rūpya > ரூபா]*

**ரூபாய்** *rūpāy,* பெ.(n.) ஒரு தோலா எடையுள்ள வெள்ளி நாணயவகை; a current silver coin of180 gr, composed of 165 parts pure silver and 15 parts alloy=1 tola in weight.

**த.வ. வெண்பொன்**

*[Skt. rūpya > ரூபாய்]*

**ரூபாவதி** *rūpāvadi,* பெ(n.) மேளகர்த்தாக்களு ளொன்று; a primary rāga.

**ரூபாவரி** *rūpā-vari,* பெ.(n.) தோட்டக்கால்களுக்கு விதிக்கும் வரிவகை; a special tax on garden lands.

**ரூபி[1]-த்தல்** *rūpi,* செ.கு.வி. (v.i.) மெய்ப்பித்தல்; to prove, demonstrate.

*[Skt. rūpa > ரூபி]*

**ரூபி[2]** *rūpi,* பெ.(n.) 1. உருவமுடையது; that which has shape, visible object, as having form. 2. அழகுடையவன்/ள்; handsome, well-shaped person.

*[Skt. rūpin> ரூபி]*

**ரூல்கட்டை** *rūl-kaṭṭai,* பெ.(n.) ரூலர்(இக்.வ) பார்க்க; see rūlar.

*[E. rule > ரூல்+கட்டை]*

**ரூல்கம்பு** *rūl-kambu,* பெ.(n.) ரூலர் பார்க்க; see rūlar.

*[E. rule+ கம்பு[1] >ரூல்+கம்பு]*

**ரூல்கழி** *rūl-kaḻi,* பெ.(n.) ரூலர்(சிக்.வ.) பார்க்க; see rūlar.

*[E. rule+ கழி[1] >ரூல்+கழி]*

**ரூல்தடி** *rūl-taḍi,* பெ.(n.) ரூலர் பார்க்க; see rūlar.

*[E. rule+ தடி[2] >ரூல்+தடி]*

**ரூலர்** *rūlar,* பெ.(n.) கோடு இடுதற்குதவுங் கோல்; ruler.

**த.வ. கோட்டுக்கோல்**

*[E. ruler > ரூலர்]*

**ரெட்டநாடி** *reṭṭa-nāḍi,* பெ.(n.) இரட்டை நாடி பார்க்க; see iraṭṭai nāḍi. "அவன் ரெட்ட நாடி"

**ரெட்டி** *reṭṭi,* பெ.(n.) தெலுங்கு நாட்டினின்று குடியேறிய உழுதுண்ணுந் தொழிலினர்; an immigrant caste of telugu cultivators.

*[T.K. reḍḍi > த. ரெட்டி]*

**ரெட்டு** *reṭṭu,* பெ.(n.) இரட்டு 2 (வின்.) பார்க்க; see iraṭṭu.

*[T.K. reṭṭu > த. ரெட்டு]*

**ரெப்பை** *reppai,* பெ.(n.) கண்இமை; eyelid.

*[T. reppa,k.reppe > த. ரெப்பை]*

**ரெம்மி-த்தல்** *remmi,* செ.கு.வி. (v.i.) பொருத்துதல்; to join as boards or planks.

*[E. ram > த. ரெம்மி]*

**ரேக்கு** *rēkku,* பெ.(n.) 1. பூவிதழ்; petal of flowers. 2. தங்கம் முதலியவற்றின் மெல்லிய தகடு; toil of metal."தங்கரேக்காற் சமைத்திட்டபாரக் கொங்கைகைக் குறியும்" (தனிப்பா.1-378,21)

*[U. rēk > த. ரேக்கு]*

**ரேக்ளா** *rēkḷā,* பெ.(n.) ரேக்ளாவண்டி பார்க்க; see rēkḷa-vaṇḍi

*[U. rēkḷa > த. ரேக்ளா]*

**ரேக்ளாவண்டி** *rēkḷa-vaṇḍi,* பெ.(n.) ஒருவன் மாத்திரம் உட்கார இடமுள்ள ஒற்றை மாட்டுவண்டி வகை; a kind of single bullock-cart with only one seat.

**த.வ. ஒற்றை வண்டி**

*[U. rēkḷa+ > த. ரேக்ளா+வண்டி]*

**ரேகடி** *rēkaḍi,* பெ.(n.) கரிசல் நிலம்; black cotton soil.

[U. rēgar >T. rēgaḍi> த. ரேகடி]

**ரேகாம்சம்** *rēgāmšam,* பெ.(n.) குறிப்பிட்ட வரிகை (ரேகை)க்குந் துவக்கமாகக் கொண்ட வரிகை (ரேகை)க்கும் இடைப்பட்ட கோணத்தின் நடுஅளவு; longitude.

த.வ. வரிகைக் கோணம்

*[Skt. rēkhā+amša > த. ரேகாம்சம்]*

**ரேகாமூலம்** *rēkā-mūlam,* பெ. (n.) அடிப்படை ஆவணத்தின் மூலச்சான்று; documentary evidence.

*[Skt. rēkha+ > ரேகா+மூலம்]*

**ரேகை**[1] *rēgai,* பெ(n.) நாணயவகை; a coin.

**ரேகை**[2] *rēgāi,* பெ.(n.)1. (வரிகை) இரேகை பார்க்க; see irēkai. 2. கோளங்களில் துருவத்தின் வழியே செல்வதாகக் கருதப்படுங்கோடு; meridian.

த.வ. வரிகை

*[Skt. rēkhā > த. ரேகை]*

**ரேங்கு—தல்** *rēṅgu-,* செ.குன்றாவி(v.t.) சினமூளுதல்; to rage, to be angry.

*[T.K. rēgu > த. ரேங்கு]*

**ரேணு** *rēṇu,* பெ(n.) பொடி; dust.

*[**Skt.** rēnu> ரேணு ]*

**ரேந்தா** *rēndā,* பெ.(n.) சித்திரப்பின்னற்குரிய ஊசி வகை; a needle used in embroidery work.

**ரேந்தாத்தையல்** *rēndā-t-taiyal,* பெ.(n.) பூவேலைத் தையல்; lace-work.

**ரேந்தை** *rēndai,* பெ.(n.) ரேந்தாத்தையல் பார்க்க; see rēntā-ttaiyal.

**ரேவதி** *rēvadi,* பெ. (n.) இருபத்தேழாம் நாள்மீன்; the 27th nakṣatra.

*[Skt. rēvatī > த. ரேவதி]*

**ரேவு** *rēvu,* பெ.(n.)1. இறங்கு துறை; landing place, ford, port, harbour. 2. ஆயத்துறை; custom-house.

*[T.K. rēvu > ரேவு]*

**ரேழி** *rēḻi,* பெ.(n.) இரேழி பார்க்க; see irēḻi.

*[இடைகழி–டேகழி–ரேழி]*

**ரொக்கக்காரன்** *rokka-k-kāran,* பெ. (n.) 1. முதலாளி; capitalist. 2. பணக்காரன்; rich man as having cash.

**ரொக்கசாமீன்** *rokka-šāmīṉ,* பெ.(n.) பணமாகக் கொடுக்கும் பிணை; security in money, cash security.

**ரொக்கப்பட்டா** *rokka-p-paṭṭā,* பெ.(n.) பணத்துக்குக் குத்தகையாக விடப்படும் நிலத்திற்குக் கொடுக்கப்படும் பட்டா; a patta for land leased for cash rent.

**ரொக்கம்** *rokkam,* பெ.(n.)அணியமாக இருக்கும் பணம்; cash, ready money.

த.வ. கைப்பணம்.

*[K. rokka > Skt. rōka>த. ரொக்கம்]*

**ரொக்க வியாபாரம்** *rokka-viyābāram,* பெ.(n.) பணத்திற்குப் பண்டங்களை விற்கும் வியாபாரம்; cash transactions.

த.வ. கைப்பணவணிகம்.

*[Skt. rōka+viyāpāra >த. ரொக்கவியாபாரம்]*

**ரொக்காதாயம்** *rokkātāyam,* பெ.(n.)1. பணமாக வரும் வரும்படி; cash receipts or income. 2. செலவு நீங்கிய மிச்சவரும்படி; net profit.

த.வ. கைப்பணவருவாய்.

*[Skt. rōka+ > த. ரொக்காதாயம்]*

**ரொச்டு** *rocṭu,* பெ.(n.)1. தொந்தரவு; trouble, annoyance. 2. சீர்குலைகை; confusion, disorder.

*[T.K. rosṭu > ரொச்டு]*

**ரொட்டி** *roṭṭi,* பெ.(n.) கோதுமை மாவாற் செய்த உணவு வகை; bread, wheaten cake.

த.வ. உருட்டி, அடை

*[U. rōṭi(k.roṭṭi) > த. ரொட்டி]*

**ரோக்கா** *rōkkā,* பெ.(n.)1. ரோகா பார்க்க; see rōkā. 2. கடன் தொகையைக் குறிக்கும் உறுதிச்சீட்டு; a written acknowledgment of a debt. 3. பணம் அல்லது பண்டங்களை யனுப்புமாறு கூறும் அரசு ஆணை (அப.பா); an order issued by the government authorising specific payments or supplies.

[U. ruqqā > ரோக்கா]

**ரோகசாந்தி** *rōga-śāndi,* பெ.(n.) நோய் குணமாகை; alleviation or cure of disease. 2. நோய் நீங்கும் பொருட்டுச் செய்யுஞ் சடங்கு வகை; a purificatory ceremony for the cure of diseases.

த.வ. நோய்தணுப்பு

[Skt. rōga > த. ரோக+சாந்தி]

**ரோகநிதானம்** *rōga-nidānam,* பெ.(n.) நோயை இன்னதென்று கண்டறிகை; diagnosis of disease.

த.வ. நோய்நோட்டம்

[Skt. rōga+ > த. ரோக+நிதானம்]

**ரோகநிவாரணம்** *rōka-nivāraṇam,* பெ.(n.) நோய் நீங்குகை; cure of disease.

[Skt. rōga+ > த. ரோக+நிவாரணம்]

**ரோகா** *rōga,* பெ. (n.) 1. துண்டு; bit, piece. 2. சீட்டு; note, chit.

[U. ruqqā > ரோகா]

**ரோகி** *rōgi,* பெ.(n.) நோயாளி; diseased person.

[Skt. rōgin > ரோகி]

**ரோச்** *rōc,* பெ.(n.) 1. நாள் வழிக்கணக்கு; journal, day-book. 2. நாள்; day.

[Skt. rōz > த. ரோச்]

**ரோச்கார்** *rōckār,* பெ.(n.) தொழில்; service, employment.

[Persn. rōzgār > த. ரோச்கார்]

**ரோசனபிளாசுதிரி** *rōsana-p-pilāsuṭiri,* பெ.(n.) ஒட்டுத்துணி; sticking plaster, resinplaster, emplastrum resinae.

த.வ. ஒட்டொட்டி

**ரோசனம்** *rōśaṉam,* பெ.(n.) காய்ச்சியபிசின்; resin.

[E.Rosin > த. ரோசனம்]

**ரோசம்** *rōṣam,* பெ.(n.) 1. மானம் ; keen sensibility, high sense of honour. 2. கோபம்; anger.

[Skt. rōsa > த. ரோசம்]

**ரோசனா** *rōsaṉa,* பெ.(n.) பார்ப்பார், பக்கிரி, ஏழை போன்றவர்க்குக் கொடுக்கும் நாட்படி; a daily allowance granted to Brahmins, fakirs and poor persons.

[Hind. rōzīnā > த. ரோசீனா]

**ரோசா** *rōśa,* பெ.(n.) பூச்செடி வகை ; rose.

[Lat. rosa > த. ரோசா]

**ரோசாம்பரம்** *rōcāmbaram,* பெ (n.) பூச்செடிவகை; a flowering plant.

**ரோதம்**[1] *rōdam,* பெ.(n.) 1. நீர்க்கரை; bank, shore. " சீத ரோதக் குருதித் திரையொரீஇ" (கம்பரா. இராவணன்கோ.2). 2. அணை; dam.

[Skt. rōdha > ரோதம்]

**ரோதம்**[2] *rōdam,* பெ.(n.) ரோதனம்[2] பார்க்க; see rōtaṉam.

[Skt. rōda > ரோதம்]

**ரோதனம்**[3] *rōdaṉam,* பெ.(n.) தடை; obstruction.

[Skt. rōdhana > ரோதனம்]

**ரோந்தடி-த்தல்** *rōndaḍi,* செ.கு.வி.(v.i.) 1. இரவில் ஊரைச் சுற்றிச் சென்று காத்தல்; to keep watch at night. 2. அலைந்து திரிதல்; to roam,wander about. " உத்தியோகத்துக்கு ரோந்தடிக்கிறான்"

**ரோந்து** *rōndu,* பெ.(n.) இராக்காவல்; night patrol.

[Fr. ronde > ரோந்து]

**ரோந்தை** *rōndai,* பெ.(n.) 1. சீத்தை (அசங்கியம்); filthiness.

**ரோம்புவாசல்** *rōmbuvāśal,* பெ. (n.) கப்பலில் பெரிய பாய்மரத்தின் கீழுள்ள அடித்தளத்துக்குச் செல்லும் வழி; main hatch way.

**ரோமம்** *rōmam,* பெ.(n.) மயிர்; hair.

[Skt. rōma > த. ரோமம்]

**ரோமாபுரி** *rōmā-puri,* பெ.(n.) இத்தாலிய தேசத்துத் தலைநகர்; rome.

[Lat. Roma+ > த. ரோமா+புரி]

**ரோமான்கத்தோலிக்கன்** *rōmāṉ-kattōlikkaṉ,* பெ.(n.) கிறித்தவரில் ஒரு பிரிவினன்; Roman Catholic.

[E.romancatholic>த.ரோமான் கத்தோலிக்கன்]

**ரௌத்திராகாரம்** *rauttirākāram,* பெ.(n.) வன் கொடுமையின் (பயங்கரத்தின்) வடிவு; embodiment of ferocity.

[Skt. raudra +ākāra> த. ரௌத்தராகாரம்]

# ல

**லக்கடியடி–த்தல்** *lakkaḍiyaḍi-,* செ.கு.வி. (v.i.) மிகவும் துன்பப்படுதல்; to be in great difficulties. *"அவன் சோற்றுக்கு லக்கடி யடிக்கிறான்"* (இ.வ.).

*[Skt. lakḍi> த. லக்கடி]*

**லக்கம்** *lakkam,* பெ.(n.) 1. குறியிலக்கு; target, butt, aim. 2. நூறாயிரம்; one lakh, 100,000. *"இலக்கத்தொன்பதின்மர்"* (கந்தபு.திருவவதார.127). 3. எண்; number, digit. *"அந்தமென்று சொல்வதே... கணைக்கிலக்கம்"* (கந்தபு.சிங்கமு.386). 4. எண் குறி; numerical figure. *"குறியிலக்கமெழுதே"* (தைலவ.பாயி.15).

*[Skt. lakṣa> த. லக்கம்]*

**லக்காடி** *lakkāḍi,* பெ.(n.) தீயவன், கொடும்பன்; (சோதா.) (இ.வ.); rowdy, rascal.

*[Ar. laṅkgar> த. லக்காடி]*

**லக்காளி** *lakkāḷi,* பெ.(n.) ஒருவசைச் சொல் (இ.வ.); a term of abuse.

**லக்கி** *lucky,* பெ.(n.) நற்பேறு, ஆகூழ், நல்வாய்ப்பு; good luck.

*[E. lucky> த. லக்கி]*

**லக்கிடி** *lakkiḍi,* பெ.(n.) விறகு; fire wood.

*[Hind. lakḍi> த. லக்கிடி]*

**லக்கினம்** *lakkiṉam,* பெ.(n.) 1. பிறக்கும்போது தோற்றமாயுள்ள (உதயம்) ஓரை (ராசி.); (Astrol.) sign rising at the moment of one's birth. *"ஒடை மாகளிநனானுதயராசி"* (கம்பரா. திருவவ.110). 2. தற்காலத்துத் தோன்றும் ஓரை (உதிக்குமிராசி.) (வின்.); sign rising at the time. 3. நன்முழுத்தம் (சுபமுகூர்த்தம்) (இரகு.முடிசூ.63); hour fixed for auspicious ceremonies.

த. வ. பிறப்போரை

*[Skt lagna> த. லக்கினம்]*

**லக்குவா** *lakkuvā,* பெ.(n.) பக்கவலிப்பு நோய் (பட்சவாதம்.); paralysis.

*[U. laqwa> த. லக்குவா]*

**லக்குறடு** *lakkuṟaḍu,* பெ.(n.) பழுக்கக் காய்ந்தவற்றைப் பற்றவுதவுங் குறடு; fire-tongs, pincers for handling heated articles.

த.வ. பற்றுக்குறடு

*[U. lag> த. லக்+குறடு]*



**லக்கோடா** *lakkōḍā,* பெ.(n.) லகோடா பார்க்க; see *lagōḍā.*

**லக்திக்காரன்** *lakti-k-kāraṉ,* பெ.(n.) லக்திதாரன் பார்க்க; see *laktitāraṉ.*

*[U. lagtē> த. லக்தி]*

**லக்திதாரன்** *laktitāraṉ,* பெ.(n.) அண்டை நிலக்காரன் (C.G.); owner of an adjoining land.

*[U. lagtē+dār> த. லக்திதாரன்]*

**லகம்** *lagam,* பெ.(n.) லகான் பார்க்க; see *lagāṉ.* "முதுகிற் கலணையிட்டு லகமிட்டு" (கொண்டல் விடு.).

*[U. lagan> த. லகான்]*

**லகரம்** *lagaram,* பெ.(n.) லகாரம் (இ.வ.) பார்க்க; see lagāram.

**லகரி¹** *lagari,* பெ.(n.) பேரலை; great wave. "பொங்கு லகரிச் சாமர மிரட்ட" (பிரபோத.30,42).

*[Skt. lahari> த. லகரி]*

**லகரி²** *lagari,* பெ.(n.) 1. கசமத்தப் பிசின் (அபின்.); opium. 2. மயக்கம் உண்டுபண்ணும் பொருள்; intoxicant. 3. மது முதலியவற்றால் உண்டாகும் மயக்கம்; intoxication.

**லகாம்** *lagām,* பெ.(n.) லகான் பார்க்க; see lagāṉ.

*[Skt. lagām > த. லகாம்]*

**லகாய்¹-த்தல்** *lagāy-,* செ.கு.வி. (v.i.) செயல் வெற்றி பெறுதல் (காரியசித்தி); to prosper in an eminent degree, to be successful.

*[Hind. lagānā (K. logāysu) > த. லகாய்-த்தல்]*

**லகாய்²-த்தல்** *lagāy-,* செ.கு.வி. (v.i.) 1. தண்டித்தல்; to deal severely, to chastise. 2. நிரம்ப உண்ணுதல்; to eat to satiety.

*[Hind. lagānā (K. lagāysu) > த. லகாய்-த்தல்]*

**லகாரம்** *lagāram,* பெ.(n.) இலட்சத்தைக் குறிக்கும் ஒரு சொல்; a term denoting a lakh. *"அவருக்கு ஒரு லகாரம் இருக்கும்".* (இ.வ.).

**லகாவ்** *lagāv,* வி.எ. (v.imp.) அடி என்னேவல்; to beat. *"லகாவ், லகாவ் இந்த லண்டனைப் பாவிச் சண்டாளனை"* (பிரதாப.விலா.102).

*[Hind. lagav > த. லகாவ்]*

**லகான்** *lagāṉ,* பெ.(n.) கடிவாள வார்; rein.

*[Hind. lagām > த. லகான்]*

**லகிமா** *lagimā,* பெ.(n.) ஒரு பொருளை கனமற்றதாக்கும் ஆற்றல்; the supernatural power of levitation, one of aṣṭamā-citti, q.v.

*[Skt. laghiman-*

**லகு** *laghu,* பெ.(n.) த. .elief.

*[Skt. laghu > த. லகு]*

**லகுத்வம்** *lagutvam,* பெ.(n.) எளிது (இலேசு); lightness, ease.

*[Skt. laghu-tva > த. லகுத்வம்]*

**லகுபசணம்** *lagupaśaṉam,* பெ.(n.) சிற்றுண்டி (இக்.வ.); light refreshments.

**லகுலாட்சி** *lagulāṭci,* பெ.(n.) வீணை வகை (பரத. ஒழிபி.16); a kind of lute.

**லகுவுபிகுவாய்** *laguvupiguvāy,* வி.அ. (adv.) ஏற்றதோர் முறையில்; by some means or other; in anyway possible.

**லகோடா** *lagōḍā,* பெ.(n.) 1. மெழுகாற் பூசப்பட்டது (இ.வ.); that which is besmeared with lac. 2. தாளுறை, காகிதவுறை (வின்.); envelope of paper, as sealed or wafered.

*[Hind. lakhōṭā > த. லகோடா]*

**லகோடாப்பற்று** *lagōḍā-p-paṟṟu,* பெ.(n.) மிகச்சிறியவளவு (இ.வ.); lit. small particles of cooked rice for gumming envelopes.

*[Hind. lakhōṭā > த. லகோடா]*

**லங்கடா** *laṅgaḍā,* பெ.(n.) நொண்டி (இ.வ.); lame person.

*[Persn. laṅgdā > த. லங்கடா]*

**லங்கணம்** *laṇgaṇam,* பெ.(n.) பட்டினி (இ.வ.); fasting.

*[Skt. laṅghana > த. லங்கணம்]*

**லங்கர்** *laṇgar,* பெ.(n.) நங்கூரம்; anchor.

*[Persn. laṇgar > த. லங்கர்]*

**லங்கர்கானா** *laṅgarkāṉā,* பெ.(n.) அன்னசாலை (வின்.); alms-house.

*[Persn. laṅgar-khānā > த. லங்கர்கானா]*

**லங்கர்பாய்-தல்** *laṅgarpāy-,* செ.கு.வி. (v.i.) நங்கூரம் பற்றுதல்; to be moored, to be at anchor.

*[Persn. laṅgar > த. லங்கர்]*

**லங்கரடி-த்தல்** *laṅgaraḍi-,* செ.கு.வி. (v.i.) 1. நங்கூரம் போடுதல்; to cast anchor. 2. அந்தரடித்தல்; to turn a somersault.

**லங்கனம்** *laṅgaṉam,* பெ.(n.) 1. கடல் முதலியன வற்றைக் கடக்கை; crossing, as of the sea. 2. நெறி (நியமம்) தவறுகை; violation of

prescribed rules. *"சமயலங்கனமுந் தெய்வ நிந்தையுஞ் செய்தனர்"* (பெரியபு. திருநாவுக்.83). 3. லங்கணம் பார்க்க; see langanam.

*[Skt.laṅghana> த. லங்கனம்]*

**லங்குனி** *laṅguṇi,* பெ.(n.) குதிரையின் பற்களுக்கு உண்டாகும் அசைவு (அசுவசா.7.); looseness of tooth of a horse.

**லங்கேச்சுரம்** *laṅgēccuram,* பெ.(n.) ஒரு வகை மாத்திரை (பதார்த்த.1224); a kind of medicinal pill.

*[Skt.laṅkēśvara> த. லங்கேச்சுரம்]*

**லங்கேச்சுரரசம்** *laṅgēccuraraśam,* பெ.(n.) மருந்து வகை (பைஷஜ.154); a kind of medicinal preparation.

*[Skt.laṅkēśvara+rasa> த. லங்கேச்சுரரசம்]*

**லங்கோடா** *laṅgōḍā,* பெ.(n.) லங்கோடு பார்க்க; see laṅgōḍu.

**லங்கோடி** *laṅgōḍi,* பெ.(n.) லங்கோடு (இ.வ.) பார்க்க; see laṅgōdu.

*[Hind laṅgiṭi> த. லங்கோடி]*

**லங்கோடு** *laṅgōḍu,* பெ.(n.) சல்லடம் (இ.வ.); strip of cloth fitted to the loin, as of a wrestler.

*[Hind.laṅgōṭa> த. லங்கோடு]*

**லச்சாதத்தம்** *laccātattam,* பெ.(n.) நன்னாளில் தரப்படும் நன்கொடை; customary presents made to relations or friends on auspicious occasions.

*[Skt.lajja+> த. லச்சாதத்தம்]*

**லச்சி¹** *lacci,* பெ.(n.) குப்பைக்காரி (இ.வ.); scavenger woman.

*[T.lacci> த. லச்சி]*

**லச்சி²-த்தல்** *lacci-ttal,* செ.கு.வி. (v.i.) கூச்சமடைதல் (தக்கயாகப்.326,உரை.); to be shy.

*[Skt.laj> த. லச்சி-த்தல்]*

**லச்சை¹** *laccai,* பெ.(n.) 1. கூச்சம் (பிங்.); bashfulness, coyness, shyness. 2. வெட்கம்; shame.

*[Skt. lajjā> த. லச்சை¹]*

**லச்சை²** *laccai,* பெ.(n.) லச்சி¹ பார்க்க; see lacci¹.

**லச்சை³** *laccai,* பெ.(n.) தொந்தரவு; trouble, annoyance. "என்னை லச்சை பண்ணாதே".

**லசுகர்¹** *laśukar,* பெ.(n.) 1. மாலுமி; lascar, sailor. 2. உதவியாள் முதலியோர்; labourer, tent-pitcher.

*[E.lascar> த. லசுகர்]*

**லசுகர்²** *laśukar,* பெ.(n.) படை; army.

*[Persn.laṣkar> த. லசுகர்]*

**லசுதர்** *laśutar,* பெ.(n.) ஒப்பனைத் தொங்கல்; prismatic glass pendants of a chandelier.

*[E.lustre> த. லசுதர்]*

**லசுனி** *laśuṇi,* பெ.(n.) மாணிக்க குணத்தொன்று; a property of rubies. "குழியும் லசுனியு முடையது" (S.I.I.ii,81).

**லஞ்ச்** *lunch,* பெ.(n.) நண்பகலுணவு; meal taken in the middle of the day.

த. வ. நள்ளுணா.

*[E. lunch> த. லஞ்ச்]*

**லஞ்சம்** *lañjam,* பெ.(n.) கையூட்டு (பரிதானம்); bribe.

*[Skt. laṃcā> த. லஞ்சம்]*

**லஞ்சாக்கொடுக்கு** *lañja-k-koḍukku,* பெ.(n.) பரத்தையின் (அவிசாரி) மகன்; whoreson.

**லஞ்சாகோர்¹** *lañjakōr,* பெ.(n.) கையூட்டு (பரிதானம்) வாங்குவோன்; one who habitually receives bribes.

*[Skt. laṃcā+U.khōr>த. லஞ்சாகோர்]*

**லஞ்சாகோர்²** *lañjākōr,* பெ.(n.) தீயொழுக்கமுள்ள பெண்; loose woman.

**லட்சகம்** *latcakam,* பெ.(n.) இலக்கணப் பொருளில் வருஞ்சொல்; word in its secondary signification.

*[Skt.lakṣaka > த. லட்சகம்]*

**லட்சணம்** *latcaṇam,* பெ.(n.) இலக்கணம் பார்க்க; see ilakkaṇam. "சைதன்யம் சலட்சணமாயினும் விலட்சணம்" (கைவல். தத்துவ.1.உரை).

*[Skt.lakṣaṇa> த. லட்சணம்]*

**லட்சணை** *latcaṇai,* பெ.(n.) இலக்கணை பார்க்க; see ilakkaṇai. secondary significative capacity of a word.

*[Skt. lakṣaṇa> த. லட்சணை]*

**லட்சதீபம்** *latcatīpam,* பெ.(n.) கோயிலில் நூறாயிரம் (இலட்சம்) விளக்குகள் ஏற்றும் திருவிழா; festival of illuminating a temple, by burning 1,00,000 lights.

*[Skt. lakṣaṇa> த. லட்ச + தீபம்]*

**லட்சம்** *latšam,* பெ.(n.) நூறாயிரம் (வின்.); lakh.

*[Skt. lakṣa> த. லட்சம்]*

**லட்சாதிபதி** *latšādibadi,* பெ.(n.) நூறாயிரம் உருவாய்க்கு (ரூபாய்) மேற் பெறுமானமுள்ள சொத்து (ஆஸ்தி) யுடையவன்.

*[Skt. lakṣa+adhipati> த. லட்சாதிபதி]*

**லட்சியம்** *lakṣyam,* பெ.(n.) குறிக்கோள்; aim.

*[Skt. lakṣya>த. லட்சியம்]*

**லட்சுமி** *latšumi,* பெ.(n.) இலக்குமி பார்க்க; see ilakkumi.

*[Skt.lakṣmi> த. லட்சுமி]*

**லட்சுமிகடாட்சம்** *latcumi-kaṭāṭcam,* பெ.(n.) திருமகளின் கடைக்கண்; prosperity, as due to the grace of Lakṣmi.

**லட்சுமி நரசிம்மன்** *latcuminarašimman,* பெ.(n.) திருமகளைத் தழுவிய கோலத்துடன் உள்ள நரசிம்ம வடிவம்; Narasimha in his pose of embracing Lakṣmi.

**லட்சுமி நாராயணன்** *latšumi-nārāyaṇan,* பெ.(n.) திருமகளைத் தழுவிய நிலையில் காணப்படுந் திருமாலின் வடிவம்; Viṣṇu in his pose of embracing Lakṣmī.

**லட்சுமிபஞ்சமி** *latcumi-pañcami,* பெ.(n.) திருமகளுக்குரிய (சித்திர)மாதத்து முழுநிலா நாளுக்கு அடுத்த ஐந்தாம் நாள்; the fifth titi of the bright fortnight in the lunar month of caittiram, as sacred to Lakṣmī.

**லட்டு** *lattu,* பெ.(n.) இன்னுருண்டை; ball-shaped sweet meat.

*[Skt.laḍḍu> த. லட்டு]*

**லடாய்** *laḍāy,* பெ.(n.) 1. சண்டை; fight, fighting. 2. வாய்க்கலகம்; bickering, abusive quarrel.

*[Hind.laḍāī> த. லடாய்]*

**லடி** *laṭi,* பெ.(n.) சுமார் 440 கசவளவுள்ள சரிகைக் கண்டு; skein of lace, nearly 440 yards.

*[Hind.laḍī> த. லடி]*

**லடு** *laṭu,* பெ.(n.) 1. கப்பலில் கயிறு ஒழுங்காகச் செல்லுதற் பொருட்டு அமைத்த கருவி வகை; fairlead; thimble or cringle to guide a rope. 2. கடலின் ஆழமளப்பதற்கு விடப்படுங் கயிற்றில் கட்டியிருக்கும் ஈயக்குண்டு; plummet.

*[Hind.lāṭṭa> த. லடு]*

**லண்டன்**[1] *lanḍan,* பெ.(n.) 1. கல்லுளிமங்கன் பார்க்க; see kallulimaṅkan. 2. சண்டி; stubborn man. 3. நெறி கெட்டவன்; man of loose conduct. "இந்த லண்டனை... நன்றாய் லகாவ்" (பிரதாப.விலா.102).

*[K.lambani> த. லண்டன்]*

**லண்டன்**[2] *lanṭan,* பெ.(n.) ஆண்குறி; membrum virile.

*[Hind lanḍ> த. லண்டன்]*

**லண்டன்சீனி** *lanṭan-šīni,* பெ.(n.) வெள்ளைச் சர்க்கரை; white sugar.

*[E.london> த. லண்டன்+சீனி]*

**லண்டி** *lanṭi,* பெ.(n.) 1. சண்டி; stubborn. intractable woman. 2. தீயநடத்தையுடைய பெண்; woman of loose conduct.

**லண்டு** *lanḍu,* பெ.(n.) சண்டித்தனம் (இ.வ.); stubbornness.

*[Hind. launḍa > த. லண்டு]*

**லத்தா** *lattā,* பெ.(n.) உதை; blow, kick. "நான் உனக்கு ஒரு லத்தா கொடுப்பேன்" (இ.வ.).

*[Hind. lat > த. லத்தா]*

**லத்தாடு** *latāḍu,* பெ.(n.) நோய்; vexation, agitation.

*[K. latāḍu > த. லத்தாடு]*

**லத்தி**[1] *latti,* பெ.(n.) குதிரை, யானை, கழுதை, ஒட்டகம் இவற்றின் சாணி; dung of horses, asses, elephants, camels.

த.வ. புட்டை, விட்டை

*[T.K. laddi > த. லத்தி]*

**லத்தி**[2] *latti,* பெ.(n.) லதி பார்க்க; see lati.

**லத்தி போடு-தல்** *latti-pōḍu-,* செ.கு.வி. (v.i.) மிகவும் அஞ்சுதல்; பயப்படுதல்; to be afraid.

**லத்தை**[1] *lattai,* பெ.(n.) குறித்த விண்மீன்களில் நிலவோடு தீயகோள் கூடுவதாலுண்டாம் தீப்பயன் (பஞ்.); evil effect due to the conjunction of a malefic planet and the moon in particular nakṣatras.

**லத்தை**[2] *lattai,* பெ.(n.) அருள்; mercy, compassion "லத்தையுற் றருள்வாய்" (கந்தரந்.6).

*[Perh. labdhā > த. லத்தை]*

**லத்தீன்** *latiṉ,* பெ.(n.) இத்தாலிய தேசத்தில் முற்காலத்தில் வழங்கின மொழி;

*[E. latin > த. லத்தீன்]*

**லதாக்கிருகம்** *latā-k-kirugam,* பெ.(n.) கொடியால் அமைந்த வீடு; creeper - bower.

*[Skt. latāgṛha > த. லதாக்கிருகம்]*

**லதாங்கி** *latāṅgi,* பெ.(n.) 1. கொடி போன்ற உடலுள்ள பெண்; woman of siender, creeper like form. 2. ஒருவகைப்பண்; a specific melody type.

*[Skt. latāṅgī > த. தொங்கி]*

**லதாவேட்டிதம்** *latā-vēṭṭitam,* பெ.(n.) கொடி போலச் சுற்றித் தழுவும் (ஆலிங்கன) வகை; a mode of sexual embrace, lickened to a creeper clinging round a tree.

*[Skt. latā+vēṣṭita > த. லதாவேட்டிதம்]*

**லதி** *lati,* பெ.(n.) கழி; staff cane, cudgel.

*[U lāṭhi > த. லதி]*

**லதை** *latai,* பெ.(n.) இலதை[1],1, பார்க்க; see ilatai,

*[Skt. latā > த. லதை]*

**லப்தம்** *laptam,* பெ.(n.) அடையப் பெற்றது; gain, acquisition, that which is obtained.

*[Skt. labdha > த. லப்தம்]*

**லப்தகானி** *lapta-kāṉi,* பெ.(n.) பஞ்சதந்திரத்துள் பேரிழத்தலைப்பற்றிக் கூறுவதான நான்காம் பகுதி; artta-nācam, the fourth section of pañcatantiram, treating of the loss of what was gained.

*[Skt. labdha+kāni > த. லப்தகானி]*

**லப்பக்கத்தி** *lappa-k-katti,* பெ.(n.) மக்கு வைக்குங் கருவி; putty-knife.

**லப்பம்** *lappam,* பெ.(n.) பலகை முதலியவற்றில் இடைவெளியின்றி இசைத்தற்குரிய மக்கு; putty, a kind of cement used to fill up cracks in wood, etc.

த. வ. மக்கு

*[Prob. lēpya > த. லப்பம்]*

**லப்பை** *lappai,* பெ.(n.) தென்னிந்தியக் கடற்கரைப் பகுதிகளில் வாழும் தமிழ்ப்பேசும் முகம்மதியர்; a class of Tamil speaking Muhammadans found chiefly on the coasts of south India.

**லபக்கெனல்** *lapakkeṉal,* பெ.(n.) 1. விரைவுக் குறிப்பு; suddenness. 2. விழுங்குதற்குறிப்பு; gulping.

*[U. lapak > த. லபக்கெனல்]*

**லபி-த்தல்** *lapi,* 4 செ.கு.வி. (v.i.) பெறுதல், வெற்றியடைதல்; to be gained, obtained, to accure, to succeed, come to a successful issue. "காணரிய பெரியோர்க டெரிசனம் லபிப்பதே கண்ணிணைகள் செய்புண்ணியம்" (அறப்.சத.76). பெறுதல்; to obtain. "ஆதிப்பிரம்மா ஸ்ரீரங்க விமானத்தை லபித்து" (கோயிலொ. 2.).

*[Skt.labh> த. லபி]*

**லபோலபோவெனல்** *lapō-lapō-v-eṉal,* பெ. (n.) திறந்துள்ளவாயால் துக்கங் காரணமாகக் கையால் அடித்துக் கொள்ளுதற்குறிப்பு; expression of beating the open mouth with the palm of the hand on account of sorrow.

**லபோலபோபண்டிகை** *lapō-lapō-paṇṭikai,* பெ.(n.) காமன் பண்டிகை (அகங்கையால் வாயிலடித்துக் கொள்ளும் திருவிழா); the spring festival in honour of kāma, as the occasion in which the beating of the open mouth with the palm is a marked feature.

**லம்பாடி** *lampāḍi,* பெ.(n.) 1. அலைந்து திரியும் ஒரு சாதி; a wandering caste. 2. ஊர் ஊராய்த் திரிவோன்; vagrant. 3. மாட்டுச்சாதி வகை; a breed of cattle.

*[T.iambāḍi> த. லம்பாடி]*
*[K lambāṇi>த. லம்பாடி]*

**லம்பு**[1] *lampu,* பெ.(n.) தொந்தரவு; trouble.

**லம்பு**[2]**-தல்** *lampu,* பெ.(n.) அசைதல்; to be unsteady to shake.

**லயம்** *layam,* பெ.(n.) இலயம் பார்க்க; see ilayam. "ஒன்றோடொன்றாகவே பற்றிலயமாம் போதினில்" (தாயு.சித்தர்.3).

*[Skt.laya> த. லயம்]*

**லயாவத்தை** *layāvattai,* பெ.(n.) உலகத்தை ஒடுக்கு நிலை; stage of involuion of the universe; stage of absorption of the universe by the supreme being.

*[Skt.laya+avasthā> த. லயாவத்தை]*

**லயி-த்தல்** *layi,* 4 செ.கு.வி. (v.i.) ஒன்றுதல்; chose intimacy.

*[Skt.lay > த. இலயி]*

**லலனாமணி** *lalaṉā-maṇi,* பெ.(n.) லலனை பார்க்க; see *lalaṉai.*

*[Skt.lalanā> த. லலனாமணி]*

**லலனை** *lalaṉai,* பெ.(n.) பெண்; woman.

*[Skt.lalanā> த. லலனை]*

**லலாடம்** *lalāṭam,* பெ.(n.) 1. நெற்றி; forehead. 2. மணி முடி (கிரீட)வுறுப்பு வகை; a part of the crown.

*[Skt.lalāṭa> த. லலாடம்]*

**லலாடலிபி** *lalāṭa-lipi,* பெ.(n.) தலையெழுத்து; hand writing of fate.

*[Skt.lalāṭa+lipi> த. லலாடலிபி]*

**லலிதாசகசுரநாமம்** *lalitāśakaśuranāmam,* பெ.(n.) உமா தேவியின் ஆயிரந்திருநாமக் கோவை. (தக்கயாகப்.76,விசேடக்.); the thousand holy names of the Goddess Pārvatī.

*[Skt.lalitā+sahasranāma>த.லலிதாசகசுரநாமம்]*

**லலிதை** *lalitai,* பெ.(n.) 1. உமை; Pārvatī. 2. பண் வகை; a specific melody-type.

*[Skt.lalitā> த. லலிதை]*

**லவ்வாலவ்வா** *larvā-lavvā,* பெ.(n.) லவாலவா (இ.வ.) பார்க்க; see *lavālavā.*

**லவக்குலவக்கெனல்** *lavakku-lavakkeṉal,* பெ.(n.) 1. ஒட்டக்குறிப்பு; a galloping sound. 2. விரைந்து விழுங்குதற்குறிப்பு; gobbling in eating.

**லவங்கம்** *lavaṅgam,* பெ.(n.) இலவங்கம் பார்க்க; see ilavaṅgam.

*[Skt.lavaṅga>.த. லவங்கம்]*

**லவடா** *lavaḍā,* பெ.(n.) ஆண்குறி; membrum virile.

*[Hind laurā > த. லவடா]*

**லவண்டி** *lavaṇḍi,* பெ.(n.) லண்டி பார்க்க; see laṇḍi.

*[Hind launḍi> த. லவண்டி]*

**லவணசமுத்திரம்** *lavaṇašamuttiram,* பெ.(n.) உப்புக்கடல் பார்க்க; see uppukkaḍal. "அமிர்து கடைந்து லவண சமுத்திரத்தென உணர்க" (தக்கயாகப்.248.உரை).

*[Skt.lavaṇa+> த. லவண + சமுத்திரம்]*

**லவம்** *lavam,* பெ.(n.) 1. பசுவின் வால் மயிர்; hair of cow's tail. "குசலவங்களாற் றுடைத்துக் குறிக்கொண்டார்கள்" (உத்தரரா.இலவ.75). 2. காலவகை; a variety of kālam. "கணமோரெட்டும் லவ மெனப்படுமே" (பரத.தாள.27). 3. மிகச் சிறுபகுதி; little, small particle.

*[Skt.lava> த. லவம்]*

**லவணம்** *lavaṇam,* பெ.(n.) உப்பு; salt.

*[Skt lavaṇa> த. லவணம்]*

**லவலேசம்** *lava-lēcam,* பெ.(n.) சிற்றளவு; smallest degree "நிலைகாணோம் லவலேசம்" (இராமநா.ஆரணிய.3).

*[Skt lava+lēša> த. லவலேசம்]*

**லவாடி** *lavāṭi,* பெ.(n.) வேசி; prostitute.

**லவாலவா** *lavā-lavā,* பெ.(n.) லவாலவா என்று பாடிக் கொண்டு பந்தடிக்கும் சிறுவர் விளையாட்டு; children's game of ball, accompanied by singing lavā-lavā.

**லவுக்கார்** *lavukkār,* பெ.(n.) சன்னமாய்ப் பூசாத சுண்ணாம்புப் பூச்சு; rough plastering with chunam

*[U lēva > lēpa >த. லவுக்கார்]*

**லவுண்டி** *lavuṇṭi,* பெ.(n.) லண்டி பார்க்க; see laṇḍi.

**ளிதம்** *laḷitam,* பெ.(n.) 1. திருவிளையாட்டு; wantonness, dalliance, sport. "சிட்டர் பரிபால ளிதக்கார" (திருப்பு.55). 2. கருணை; grace, charm. 3. இனிமையான; sweetness. 4. எளிமை; case, facility. 5. சிவாகமத்துள் ஒன்று (சைவச.பொது.335,உரை.); one of 28 civākamam.

*[Skt.lalita> த. ளிதம்]*

**ளிதை** *laḷitai,* பெ.(n.) லலிதை,1. (நாமதீப.24) பார்க்க; see lalitai.

*[Skt.lalitā> த. ளிதை]*

**லாக்அப்** *lock-up,* பெ.(n.) சிறைவைப்பு; put into a prison.

*[E. lock-up> த. லாக்அப்]*

**லாக்குப் போடுதல்** *lākku-p-pōḍu,* செ.கு.வி. (v.i.) மிகவும் துன்பப்படுதல் (செ.அ.); to be in great straits, to be hard put to it.

**லாகவம்** *lākavam,* பெ.(n.) லகுத்துவம் பார்க்க; see laguttuvam.

*[Skt lāghava> த. லாகவம்]*

**லாகிரி** *lākiri,* பெ.(n.) லகரி² பார்க்க; see lakari.

**லாகினி** *lākiṇi,* பெ.(n.) தந்திர சாத்திரங்களிற் கூறப்பட்ட ஒரு சார் பெண் கடவுள் (செ.அ.); a class of goddesses mentioned in Tāntric lore.

*[Skt. lākini> த. லாகினி]*

**லாகு** *lāku,* பெ.(n.) லகுத்வம் (வின்.) பார்க்க; see lakutvam.

**லாகுலுக்சான்** *lāku-lukcāṉ,* பெ.(n.) லாபநட்டம் (செ.அ.); profit and loss.

*[Hind. lāha> த. லாகுலுக்சான்]*

**லாகை¹** *lākai,* பெ.(n.) பாங்கு; ஒயில்; manner, style.

*[I. Lāgu> த. லாகை]*

**லாகை²** *lākai,* பெ.(n.) அந்தரடிக்கை (உ.வ.) (செ.அ.); somersault.

*[Skt. lāga> த. லாகை]*

**லாசார்படு–தல்** *lacār-paḍu,* செ.கு.வி. (v.i.) உதவியற்று வருந்துதல்; to be helpless, forlorn.

*[Hind. lāchar> த. லாசார்படு–தல்]*

**லாசுபறுவான்** *lācupaṟuvāṉ,* பெ.(n.) கப்பற்பாய்தாங்குங்கட்டை (செ.அ.); yard arm.

**லாட்டரி** *lottery,* பெ.(n.) ஏலச்சீட்டு; lottery.

*[E. lottery> த. லாட்டரி]*

**லாடக்காரன்** *lāṭa-k-kāraṉ,* பெ.(n.) லாடங்கட்டுபவன் (செ.அ.); farrier.

**லாடங்கட்டு–தல்** *lāṭaṅ-kaṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.) குதிரை முதலியவற்றின் கால்கட்கு இரும்புத் தகடு தைத்தல் (செ.அ.); to shoe as a horse.

**லாடசங்கிலி** *lāṭa-šaṅkili,* பெ.(n.) லாடர் சங்கிலி (இ.வ.) பார்க்க (செ.அ.); see lāḍaršaṅkili.

**லாடம்**[1] *lāṭam,* பெ.(n.) ஒரு தேசம்; a country.

*[Skt. Lāṭa> த. லாடம்]*

**லாடம்**[2] *lāṭam,* பெ.(n.) a country. இலாடம்[2] பார்க்க (செ.அ.); see lāḍam.

*[Skt. lāḍha> த. லாடம்]*

**லாடம்**[3] *lāṭam,* பெ.(n.) forehead. இலாடம்[3] பார்க்க (செ.அ.); see ilāḍam.

*[Skt. Lalāṭa> த. லாடம்]*

**லாடம்**[4] *lāṭam,* பெ.(n.) குதிரை முதலியவற்றின் குளம்புகளுக்கு அடிக்கும் இரும்புத்தகடு; horse shoe.

*[U. lāda> த. லாடம்]*

**லாடர்சங்கிலி** *lāḍar-saṅkili,* பெ.(n.) இலாடசங்கிலி பார்க்க (செ.அ.); see ilāḍasaṅkili.

*[Skt. lāta> த. லாடர்சங்கிலி]*

**லாடன்** *lāṭaṉ,* பெ.(n.) இலாடன் பார்க்க (செ.அ.); see *ilāḍaṉ.*

*[Skt. lāta> த. லாடன்]*

**லாடு** *lāṭu,* பெ.(n.) a ball shaped sweet meat. இலட்டு பார்க்க; see ilaṭṭu.

*[Skt. Lāḍḍu> த. லாடு]*

**லாடுலகாடு** *lāṭulakāṭu,* பெ.(n.) தொந்தரவு; trouble scrape, difficulty. "லாடுலகாடு யார் படுகிறது?" (செ.அ.).

**லாண்டரி** *laundry,* பெ.(n.) வெளுப்பகம்; laundry.

*[E. lāundry> த. லாண்டரி]*

**லாத்தித்தள்ளு–தல்** *lātti-t-taḷḷu,* 5 செ.கு.வி. (v.i.) கிறுகிறுத்து விழச்செய்தல் (செ.அ.); to make dizzy or giddy.

**லாத்து**[1] *lāttu,* பெ.(n.) லத்தா பார்க்க (செ.அ.); see lattā.

**லாத்து**[2]**–தல்** *lāttu-,* செ.கு.வி. (v.i.) 1. புடைத்தல்; (செ.அ.); to belabour, beat heavily. 2. பிடித்தலைத்தல்; to seize and jerk to and fro. 3. நடை தடுமாறுதல் (செ.அ.); to tumble, to be shaky in gait.

**லாத்து**[3]**–தல்** *lāttu-,* செ.கு.வி. (v.i.) to walk about, to ride about. உலாத்து[1] பார்க்க; see ulāttu.

**லாந்தர்** *lāntar,* பெ.(n.) ஒரு வகைக் கண்ணாடி விளக்கு (செ.அ.); lantern.

**த. வ. கைவிளக்கு**

*[Fr. Lanterne> த. லாந்தர்]*



**லாந்தல்** *lāntal,* பெ.(n.) லாந்தர் பார்க்க (செ.அ.); see lāntar.

**லாந்து**[1] *lāntu,* பெ.(n.) 1. பரவுகை; spreading out. 2. பாய்ச்சல்; peunce. "ஒரே லாந்தாக லாந்திப்பிடி" (செ.அ.).

**லாந்து**[2] *lāntu,* பெ.(n.) கல்லைக் குத்து நிலையில் அடுக்குதல் (செ.அ.); terracing, setting bricks on edge

*[Hind. Ladāo> த. லாந்து]*

**லாந்து**[3]**–தல்** *lāndu,* 5 செ.கு.வி. (v.i.) மேற்றளம் போடுதல் (செ.அ.); to put up a terrace.

**லாபநட்டம்** *lāpa-nattam,* பெ.(n.) வரவும் இழப்பும் (செ.அ.); profit and loss.

த. வ. ஆகுபோகு

*[Skt. Lābha+naṣṭa> த. லாபநட்டம்]*

**லாபம்** *lapam,* பெ.(n.) இலாபம் பார்க்க; see ilāpam.

*[Skt.lābha> த. லாபம்]*

**லாபலோபம்** *lāpa-lōpam,* பெ.(n.) லாபநட்டம் பார்க்க; see lāpanattam.

*[Skt.lābha+lōpa> த. லாபலோபம்]*

**லாயக்கு** *lāyakku,* பெ.(n.) 1. தகுதி; fitness, suitbleness. 2. செருக்கு; haughtiness.

*[Arab Lāiaq> த. லாயக்கு]*

**லாயம்** *lāyam,* பெ.(n.) குதிரைகட்டுமிடம் (செ.அ.); stable for horse.

*[I lāyamu> K. lāya>த. லாயம்]*

**லாயர்** *lāwyer,* பெ.(n.) வழக்குரைஞர்; lawyer

*[E. lāwyer>த. லாயர்]*

**லாரி** *lorry,* பெ.(n.) சரக்குந்து; lorry.

*[E. lorry>த. லாரி]*

**லாலனம்** *lālaṇam,* பெ.(n.) லாலனை பார்க்க; see lālaṇai.

*[Skt lālana>த. லாலனம்]*

**லாலனை** *lālaṇai,* பெ.(n ) 1. கொஞ்சுகை; fondling, curessing, coaxing. 2. தாங்குகை (செ.அ.); support

*[Skt. lālanā>த. லாலனை]*

**லாலா** *lālā,* பெ.(n.) 1. வட நாட்டிலிருந்து தமிழ்நாட்டிற் குடியேறிய இந்து வணிகன்; a caste of Hindu merchants who migrated into the Tamil country from Northern India. 2. ஒரு சிறப்புப் பெயர்; a term of respect. 3. ஒரு செல்லப்பெயர்; a term of endearment. "நந்தலாலா" (செ.அ.).

*[Hind. lālā>த. லாலா]*

**லாலாடிகம்** *lālāṭikam,* பெ.(n.) தழுவுகை, ஆலிங்கன வகை (செ.அ.); a mode of sexual embrace.

*[Skt. Lālāṭika>த. லாலாடிகம்]*

**லாலி**[1] *lāli,* பெ.(n.) கந்தை (செ.அ.); rag.

*[Prob. lāṭa>த. லாலி]*

**லாலி**[2] *lāli,* பெ.(n.) திருமணம் முதலியவற்றிற் பாடப்படுவதும் அடிதோறும் லாலி என்று முடிவதுமான மங்களப் பாட்டு வகை; song consisting of eulogies, compliments, congratulations, etc. sung at weddings and other auspicious occasions, every line; endding in lāli. 2. இச்சகவார்த்தை; flattery, adulation. 3. தாலாட்டு (செ.அ.); lullaby.

*[T.K. lāli>த. லாலி]*

**லாவண்யம்** *lāvaṇyam,* பெ.(n.) எழில், ஒளிரும் அழகு (செ.அ.); beauty; grace; loveliness; charm.

*[Skt. Lāvaṇya>த. லாவண்யம்]*

**லாவண்யார்ச்சிதம்** *lāvaṇyā-rccitam,* பெ.(n.) இலாவண்ணியார்ச்சிதம் பார்க்க; see ilāvaṇṇiyārccitam.

*[Skt. lāvaṇya+ārjita>த. லாவண் யார்ச்சிதம்]*

**லாவணம்** *lāvaṇam,* பெ.(n.) இலாவணம் பார்க்க; see ilāvaṇam.

*[I lāvaṇamu,K.Lavaṇa>த. லாவணம்]*

**லாவணி** *lāva-ṇi,* பெ.(n.) மராட்டிய மொழியிலுள்ள இசைப்பாட்டு வகை (செ.அ.); a Maharatta melody.

*[Mhr. lāvaṇi > த. லாவணி]*

**லாவாதேவி** *lāvā-tēvi,* பெ.(n.) லேவாதேவி பார்க்க; see lēvādevi.

**த. வ. கொள்கொடை, கொடுக்கல் வாங்கல்**

*[U. Lāwādēvi > த. லாவாதேவி]*

**லாவு-தல்** *lāvu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பரவுதல்; to spread around. 2. இறாஞ்சுதல் (செ.அ.); to pounce or dart upon.

**லாவுபண்ணு-தல்** *lāvu-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வழக்காடுதல்; to be constantly questioning and disputing. 2. செருக்குறுதல் (செ.அ.); to be have in a haughty manner.

*[E law > த. லாவு+பண்ணுதல்]*

**லாளிதம்** *lāḷidam,* பெ.(n.) அழகு; beauty, grace, charm. "மதகும்பலாளிதக் கரியென" (திருப்பு.194).

*[Skt. Lālitya > த. லாளிதம்]*

**லிகிதம்** *likidam,* பெ.(n.) இலிகிதம் பார்க்க; see iligitam.

*[Skt. likhita > த. லிகிதம்]*

**லிங்கம்** *lingam,* பெ.(n.) இலிங்கம் பார்க்க; see ilingam. "விழுந்தது லிங்கம்" (திருமந்.455).

*[Skt. linga > த. லிங்கம்]*

**லிங்காபட்டியம்** *lingā-paṭṭiyam,* பெ.(n.) அமரகோசம் என்ற வடமொழி நிகண்டுக்கு லிங்காபட்டர் எழுதிய உரை (செ.அ.); a commentary on Amarakōśa by Lingābhaṭṭa.

*[Skt. Lingā-bhaṭṭiya > த. லிங்காபட்டியம்]*

**லிங்கபுராணம்** *linga-purāṇam,* பெ.(n.) A purāṇa. இலிங்கபுராணம் (தக்கயாகப். 340.உரை) பார்க்க; see ilinga-purāṇam.

**லிங்காயத்து** *lingāyattu,* பெ.(n.) வீரசைவர்; one who wears a miniature lingam suspended from the neck. இலிங்கங்கட்டி பார்க்க; see ilingan-kaṭṭi.

*[Skt. lingāyat > த. லிங்காயத்து]*

**லிடாலிடநியாயம்** *liṭāliṭa-niyāyam,* பெ.(n.) நக்கினதையே திரும்ப நக்குவதுபோல் ஒரு முறையிலேயே பலகாலும் பார்க்கும் நியாய வகை; a Nyāya in illustration of repeatedly addressing oneself to one aspect of a matter, as licking what is already licked. "லிடாலிட நியாயமாக அவ்விட மாத்திரையே நோக்குவார்க்கு" (சிவசமவா.பக்.42).

*[Skt. lāḍhālīḍha > த. லிடாலிடநியாயம்]*

**லிபாபா** *lipāpā,* பெ.(n.) கடிதவுறை (செ.அ.); envelope, cover, wrapper.

*[Arab. Lifāfa > த. லிபாபா]*

**லிபி** *lipi,* பெ.(n.) 1. எழுத்து; letter of alphabet. 2. விதி (செ.அ.); destiny, fate.

*[Skt. lipi > த. லிபி]*

**லீலாவதி** *līlāvati,* பெ.(n.) 1. அழகிய பெண்; charming or beautiful woman. 2. பாசுகராசாரியரால் இயற்றப்பெற்ற ஒரு கணித நூல் (செ.அ.); a mathematical treatise by Bhāskarācārya.

*[Skt. līlāvati > த. லீலாவதி]*

**லீலாவிபூதி** *līlā-vipūti,* பெ.(n.) பிராகிருதவுலகங்கள்; the material worlds, as exhibiting the divine sportiveness in their creation, preservation and destruction.

*[Skt. līlā-vibhūti > த. லீலாவிபூதி]*

**லீலாவினோதம்** *līlā-vinōtam,* பெ.(n.) உல்லாச விளையாட்டு (செ.அ.); diversion, pastime, sport.

*[Skt. līlā+vinōta > த. லீலாவினோதம்]*

**லீலை** *līlai,* பெ.(n.) 1. விளையாட்டு; play. 2. கடவுள் முதலியவற்றின் விளையாடல்; sport, as of a deity. 3. சுரதல் விளையாட்டு (செ.அ.); a morous sport, sexual intercourse.

*[Skt. Līlā> த. லீலை]*

**லீவு** *leave,* பெ.(n.) விடுப்பு; leave.

*[Eng. leave> த. லீவு]*

**லுக்சான்** *lukcāṉ,* பெ.(n.) லுச்சாண் பார்க்க; see luccāṉ.

**லுங்கி** *luṅki,* பெ.(n.) முகம்மதியரணியும் ஆடை வகை; a coloured cloth worn by Muhammadans.

*[Persn luṉgi> த. லுங்கி]*

**லுச்சா** *luccā,* பெ.(n.) தூர்த்தன்; vagabond, rake, profligate.

*[U lucchā> த. லுச்சா]*

**லுச்சான்** *luccāṉ,* பெ.(n.) இழப்பு (செ.அ.); loss.

*[Arab nuqsān> த. லுச்சான்]*

**லுத்தன்** *luttaṉ,* பெ.(n.) ஈயாமாரி; (உலோபி); miser. "லுத்தனுக்கு இரட்டிச் செலவு".

*[Skt. lubdha> த. லுத்தன்]*

**லுப்தம்**[1] *luptam,* பெ.(n ) 1. எழுத்துக் கேடு; elision 2. அழிவு; injury, destruction, 3. இழப்பு (செ.அ.); loss, deprivation.

*[Skt lupta> த. லுப்தம்]*

**லுப்தம்**[2] *luptam,* பெ.(n.) இவறன்மை, ஈயாமை, (உலோபம்); covetousness, miserliness.

*[Skt lubdha> த. லுப்தம்]*

**லுப்தன்** *luptaṉ,* பெ.(n.) இவறன் (உலோபி) (செ.அ.); miser

*[Skt lubdha> த. லுப்தன்]*

**லுப்தோபமை** *luptōpamai,* பெ.(n.) தொகையுபம் பார்க்க; see tokaiyuvamam.

*[Skt luptōpamā> த. லுப்தோபமை]*

**லூட்டி** *lūṭṭi,* பெ.(n.) 1. கொள்ளை; plunder, pillage, loot. 2. தொந்தரவு (செ.அ.); trouble annoyance.

*[Hind. lūṭ> த. லூட்டி]*

*[K. Lūṭi]*

**லூடி** *luṭi,* பெ.(n.) 1. லூட்டி, 1 பார்க்க; see lūṭṭi. 2. லூட்டி, 2 பார்க்க; see lūṭṭi

**லூதாதந்து நியாயம்** *lūtātantu-niyāyam,* பெ.(n.) சிலந்தி தன் வாயாலிழைத்த நூலைத் தானே யுட்கொள்வது போல் தான் செய்ததைத்தானேயழிப்பதாகக் கூறும் நெறி (செ.அ.); a nyāya, in illustration of the principle of an author destroying his own creation even as a spider eats up the thread which it throws out.

*[Skt. lūtā-tantu+niyāya> த. லூதாந்து நியாயம்]*

**லெக்கு** *lekku,* பெ.(n.) இலக்கு; aim.

**லெகு** *leku,* பெ.(n.) இலகு பார்க்க; see ilaku.

**லெச்சி** *lecci,* பெ.(n.) லச்சி பார்க்க; see lacci.

**லெச்சை** *leccai,* பெ.(n.) இலச்சை பார்க்க; see ilaccai.

**லெட்டர்** *letter,* பெ.(n.) மடல்; letter.

*[E. letter> த. லெட்டர்]*

**லெப்பை** *leppai,* பெ.(n.) லப்பை (வின்) பார்க்க; see lappai.

**லெவலேசம்** *levalēcam,* பெ.(n.) லவலேசம் பார்க்க; see lavalēcam.

**லெவை** *levai,* பெ.(n.) பள்ளிவாசல் வழிபாடு செய்வோன் (செ.அ.); priest in a mosque.

*[Heb Levi> த. லெவை]*

**லேககன்** *lēkakaṉ,* பெ.(n.) எழுத்து வேலை செய்பவன் (செ.அ.); writer.

*[Skt lēkhaka> த. லேககன்]*

**லேகணி** *lēkaṇi,* பெ.(n.) லேகனி பார்க்க; see lēkaṉi.

**லேகம்¹** *lēgam,* பெ.(n.) லேகியம் பார்க்க; see lēkiyam.

*[Skt. lēha > த. லேகம்]*

**லேகம்²** *lēgam,* பெ.(n.) எழுத்து (செ.அ.); writing, letter.

*[Skt. lēkha > த. லேகம்]*

**லேகனி** *lēgani,* பெ.(n.) எழுதுகோல் (செ.அ.); pen, style.

*[Skt. lēkhanī > த. லேகனி]*

**லேகா** *lēka,* பெ.(n.) லேகாவுண்டை பார்க்க; see lēgavundai.

*[Prob. lēhya > த. லேகா]*

**லேகாவுண்டை** *lēga-v-undai,* பெ.(n.) கஞ்சாவுண்டை (செ.அ.); ball of ganja.

**லேகியம்** *lēkiyam,* பெ.(n.) 1. இளகியம் (நக்கியுண்ணு வதற்கு உரியது); food that is eaten by licking. 2. நக்கியுண்ணும் மருந்து வகை (செ.அ.); electuary, in medicine. 3. லேகாவுண்டை பார்க்க; see lēkāvundai.

*[Skt. Lēhya > த. லேகியம்]*

**லேகை** *lēkai,* பெ.(n.) இரேகை பார்க்க; see irēkai. "சங்கலேகையும் சக்கிரலேகையும்" (சூளா.குமார.45).

**லேசம்** *lēcam,* பெ.(n.) 1. அற்பம்; small bit particle. 2. இரண்டு கலை கொண்ட காலவளவு; a measure of time equal to two kalai. 3. இலேசவணி (செ.அ.); a figure of speech.

*[Skt. lēśa > த. லேசம்]*

**லேசு¹** *lēcu,* பெ.(n.) இலேசு பார்க்க; see ilēšu.

**லேசு²** *lēcu,* பெ.(n.) 1. ஒரு வகை ஒப்பனைப் பின்னற்றுணி; lace. 2. சரிகை (செ.அ.); silver or gold lace.

*[E. lace > த. லேசு]*

**லேஞ்சி** *lēñci,* பெ.(n.) கைக்குட்டை kerchief, scarf.

*[Port. Lengo > த. லேஞ்சி]*

**லேஞ்சு** *lēñcu,* பெ.(n.) லேஞ்சி பார்க்க; see lēñci.

**லேட்** *late,* பெ.(n.) காலத்தாழ்வு; late.

*[E. late > த. லேட்]*

**லேணி** *lēni,* பெ.(n.) கடன் வாங்குகை (செ.அ.); borrowing.

*[Hind. lēnā > த. லேணி]*

**லேணிதாரன்** *lēnitāran,* பெ.(n.) கடன் கொடுத்தவன் (செ.அ.); creditor.

*[Hind. lēnādār > த. லேணிதாரன்]*

**லேபனம்** *lēpanam,* பெ.(n.) 1. பூச்சு; anointing, smearing. "ம்ருகமத படீர லேபன" (திருப்பு.43). 2. பூசும் பொருள்; plaster, ointment, unguent, salve. 3. தாதுவன்மை (செ.அ.); virility, erection of penis.

*[Skt. lēpana > த. லேபனம்]*

**லேலம்** *lēlam,* பெ.(n.) ஏலம் (செ.அ.); auction.

*[Port. leilao > த. லேலம்]*

**லேவாதேவி** *lēvātēvi,* பெ.(n.) கொடுக்கல் வாங்கல் (செ.அ.); money - dealings.

*[Hind. lēwādēī > த. லேவாதேவி]*

**லேவாலேவி** *lēvālēvi,* பெ.(n.) லேவாதேவி பார்க்க; see lēvātēvi.

**லேனாதேனா** *lēnātēnā,* பெ.(n.) லேவாதேவி பார்க்க; see lēvātēvi.

*[Hind. lēnādēnā > த. லேனாதேனா]*

**லொங்காரி** *lonkāri,* பெ.(n.) அடங்காப்பிடாரி (செ.அ.); termagant.

*[Arab. langar > த. லொங்காரி]*

**லொங்கு-தல்** *lonku-,* 5 செ.கு.வி. (v.i.) பணிந்து நடத்தல் (செ.அ.); to be humble, submissive, to be servile.

*[I. longu > த. லொங்கு]*

**லொங்குலொங்கெனல்** *lonku-lonkenal,* பெ.(n.) உடலின் தளர்ச்சிக்குறிப்பு (செ.அ.); signifying physical exhaustion.

**லொசுக்கு** *losuku*, பெ.(n.) ஒன்றுமின்மை (செ.அ.); almost nothing, nothingness.

**லொட்டி**[1] *loṭṭi*, பெ.(n.) 1. கள்; tōddy. "அவன் பணமெல்லாம் லொட்டியிற் போடுகிறான்", 2. கள் இறக்கும் குடுவை (செ.அ.); small earthen pot for drawing toddy.

*[I loṭṭi > த. லொட்டி]*

**லொட்டி**[2] *loṭṭi*, பெ.(n.) ரொட்டி பார்க்க; see roṭṭi.

**லொட்டி மூஞ்சி** *loṭṭi-mūñci*, பெ.(n.) கட்குடியன் (செ.அ.); drunkard.

*[I loṭṭi > த. லொட்டிமூஞ்சி]*

**லொட்டுலொடுக்கு** *loṭṭuloḍukku*, பெ.(n.) லொட்டு லொசுகு பார்க்க; see loṭṭu losuku

**லொட்டுலொசுகு** *loṭṭulosuku*, பெ.(n.) சில்லறைப் பொருள்கள் (செ.அ.); odds and ends, stray articles

**லொட்டை** *loṭṭai*, பெ.(n.) தாழ்ந்தது; anything inferior 2. லொட்டையாட்டம் பார்க்க; see loṭṭai-y-āṭṭam. 3. ஒரு வகைப் பணிகாரம் (செ.அ.); a kind of cake

*[Skt lōṣṭa > த. லொட்டை]*

**லொட்டைதாளி-த்தல்** *loṭṭai-tāḷi-*, 4 செ.கு.வி. (v.i.) ஏழையாதல் (செ.அ.); to become a pauper, to be impoverished.

*[Skt lōṣṭa > த. லொட்டைதாளி]*

**லொட்டையாட்டம்** *loṭṭai-y-āṭṭam*, பெ.(n.) கோலி விளையாட்டு வகை (செ.அ.); a game of marbles.

*[Skt. lōṣṭa > த. லொட்டையாட்டம்]*

**லொடலொட்டை** *loṭaloṭṭai*, பெ.(n.) 1. கட்டுக்குலைந்தது; anything rickety. 2. உள்ளீடின்றிக் கூடானது; anything hollow or empty. 3. பயனற்றது (செ.அ.); anything useless

**லொடலொட-த்தல்** *loḍa-loḍa-*, 4 செ.கு.வி. (v.i.) 1. கட்டுக்குலைதல்; to become rickety; to be dismembered, to become loose 2. உள்ளீடின்றிக் கூடாயிருத்தல்; to be hollow or empty. 3. பயனற்றுப் போதல் (செ.அ.); to become useless.

**லொடலொடவெனல்** *loḍa-loḍa-v-enal*, பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; ratting or rumbling. 2. கட்டுக்குலைவின் குறிப்பு (செ.அ.); ricketiness.

**லொடுக்கு** *loḍukku*, பெ.(n.) உள்ளே வெற்றிடமாகை; emptiness, hollowness, want of solidity. "லொடுக்கு விழுந்து போயிற்று" (செ.அ.).

**லொடுக்கு லொடுக்கெனல்** *loḍukku-loḍu-kkenal*, பெ.(n.) 1. குதிரை வண்டி முதலியன ஓடும்போது ஆட்டங்கொடுத்தற் குறிப்பு (செ.அ.); signifying shakiness, as of a running carriage. 2. லொடலொடவெனல் பார்க்க; see loḍaloḍavenal. 3.லொங்கு லொங்கெனல் பார்க்க; see lōṅguloṅgenal.

**லொத்து-தல்** *lottu-*, 4 செ.கு.வி. (v.i.) நையப்புடைத்தல் (செ.அ.); to beat or strike hard, to belabour.

*[U. lāt > த. லொத்து]*

**லொத்துகத்தோல்** *lottuka-t-tōl*, பெ.(n.) வெள்ளிலத்தியின் பட்டை (செ.அ.); bark of lodhra tree.

**லொத்து லொத்தெனல்** *lottu-lottenal*, பெ.(n.) 1. நையப்புடைத்தற்குறிப்பு; beating hard, giving repeated blows. 2. உள்ளீடற்ற பொருளைத் தட்டுங்கால் எழும் ஒலிக்குறிப்பு (செ.அ.); hollow sound.

**லொள்ளெனல்** *loḷḷenal*, பெ.(n.) நாய் குரைத்தற்குறிப்பு (செ.அ.); expr. of dog's bark.

**லோக்கியம்** *lōkkiyam*, பெ.(n.) லௌகீகம், 1, பார்க்க; see laukīkam. "சகல லோக்கியமே தானாளுறு மசுர பார்த்திபனோடே" (திருப்பு.1080).

*[Skt. lōkya > த. லோக்கியம்]*

**லோககண்டகன்** *lōga-kantagan,* பெ.(n.) மிகக்கொடியோன் (உலகத்துக்கு முட் போன்றவன்) (செ.அ.); very troublesome or wicked man, as a thorn afflicting the world.

*[Skt. lōka+kantaka > த. லோககண்டகன்]*

**லோககதி** *lōga-kati,* பெ.(n.) உலக நடைமுறை (செ.அ.); way of the world.

*[Skt. lōka+kati > த. லோககதி]*

**லோககர்த்தா** *lōga-kartta,* பெ.(n.) உலகத்துக்கு முதல்வன் (செ.அ.); Lord of the world.

*[Skt. lōka > த. லோககர்த்தா]*

**லோகசஞ்சாரம்** *lōka-cañcāram,* பெ.(n.) பல நாடுகளில் பயணம் செய்கை; travelling in different countries of the world. 2. வெளி முயற்சி (செ.அ.); business outside one's house, outwork.

**லோகசஞ்சாரி** *lōga-cañcāri,* பெ.(n.) பல நாடுகளில் பயணம் செய்வோன் (செ.அ.); traveller in many lands.

*[Skt. lōka > த. லோகசஞ்சாரி]*

**லோகசாட்சி** *lōga-cākṭṣi,* பெ.(n.) கடவுள் (செ.அ.); god, as the universal witness.

*[Skt. lōka > த. லோகசாட்சி]*

**லோகசிந்தூரம்** *lōka-cintūram,* பெ.(n.) அயச்சிந்தூரம் (செ.அ.); hydrated peroxide of iron-Ferrugo.

*[Skt. lōha > த. லோகசிந்தூரம்]*

**லோகத்திரயம்** *lōka-t-tirayam,* பெ.(n.) மூவுலகு (செ.அ.); the three worlds.

*[Skt. lōka > த. லோகத்திரயம்]*

**லோகதருமணி** *lōka-tarmaṇi,* பெ.(n.) a mode of initiation. உலோகதருமிணி பார்க்க; ulōkataruminị.

*[Skt. lōka > த. லோகதன்மணி]*

**லோகப்பிரசித்தம்** *lōga-p-pirašittan,* பெ.(n.) உலகத்தாரால் நன்கறியப்பட்டது (செ.அ.); that which is universally known.

**லோகபத்ததி** *lōgapattati,* பெ.(n.) லோககதி பார்க்க; see lōgakati.

**லோகபாலகர்** *lōga-pālagar,* பெ.(n.) 1. லோகபாலர்,1 பார்க்க; see lōkapālar. "அட்ட லோக பாலகரே" (தக்கயாகப்.468). 2. லோகபாலர்,2 பார்க்க; see lōgapālar.

*[Skt. lōka-pālaka > த. லோகபாலகர்]*

**லோகபாலர்** *lōka-pālar,* பெ.(n.) 1. எண்டிசைக் காவலர்; regents of the eight directions 2. அரசர்; kings. "லோகபால ரெயில் காவல் கூர்" (தக்கயாகப்.17).

*[Skt. lōka-pāla > த. லோகபாலர்]*

**லோகம்**[1] *lōgam,* பெ.(n.) உலகம்; world. "எல்லா லோகங்களும் இவருடைய" (தக்கயாகப். 38. உரை).

*[Skt. lōka > த. லோகம்]*

**லோகம்**[2] *lōkam,* பெ.(n.) மாழை; metal.

*[Skt. lōha > த. லோகம்]*

**லோகமரியாதை** *lōgamariyātai,* பெ.(n.) உலகவழக்கம் (செ.அ.); customs and manners of a country

த.வ. உலகநடை

*[Skt. lōka > த. லோகமரியாதை]*

**லோகமாதா** *lōga-mātā,* பெ.(n.) 1. உலக மாதா பார்க்க; see *ulakamātā* 2. இலட்சுமி (செ.அ.); Lakṣmi.

*[Skt. lōka+mātṛ > த. லோகமாதா]*

**லோகயாத்திரை** *lōga-yāttirai,* பெ.(n.) லோககதி பார்க்க; see *lōgakati.* "இது ஒரு லோகயாத்திரை". (ஈடு,4,9,6).

**லோகரஞ்சனம்** *lōga-rañcanam,* பெ.(n. உலகிற்கு மகிழ்ச்சி தருவது (செ.அ.); that which is popular or pleasing to the world.

**லோகரட்சை** *lōga-raṭcai,* பெ.(n.) உலகத்தைக் காக்கை (செ.அ.); protection of the world. "லோகரட்சையுந் தனுர்வேத வில்வலியும்" (தக்கயாகப்.468, உரை).

**லோகரட்சகன்** *lōgaraṭcakan,* பெ.(n.) உலகத்தைக் காப்போன் (செ.அ.); saviour of the world.

**லோகரூடம்** *lōga-rūṭam,* பெ.(n.) 1. தேசமெங்கும் பெரும்புகழ் பெற்றது (செ.அ.); that which is famous throughout the land. 2. லோக மரியாதை பார்க்க; see lōgamariyātai.

*[Skt lōha+rūḍha> த. லோகரூடம்]*

**லோகவிருத்தாந்தம்** *lōgaviruttāntam,* பெ.(n.) 1. லோகாசாரம் பார்க்க; see lōgāšāram.2. ஊர்ப்பேச்சு (செ.அ.); rumour.

**லோகவேடணை** *lōgavēḍaṇai,* பெ.(n.) உலகவேடணை (நாமதீப.576) பார்க்க; see ulakavēḍaṇai.

**லோகாக்கிரசித்தர்** *lōgākkira-šittar,* பெ.(n.) தேவருட் சிறந்த ஒரு சாரார் (தக்கயாகப். 352.உரை); a superior class of celestials.

*[Skt loha+agra+siddha > த. லோகாக்கிரசித்தர்]*

**லோகாசாரம்** *lōgašāram,* பெ.(n.) உலகத்தாரொழுக்கம் (செ.அ.); customs of the people, ways of the world, common practice.

*[Skt lōha+ācāra> த. லோகாசாரம்]*

**லோகாசாரியர்** *lōgāšāriyar,* பெ.(n.) பிள்ளைலோகாசாரியர் பார்க்க; see piḷḷai-lōgāšāriyar.

*[Skt Lōkācārya> த. லோகாசாரியர்]*

**லோகாதிபதி** *lōgātipati,* பெ.(n.) உலகமுதல்வன்; lord of the Universe. 2. மாமன்னன் (செ.அ.); Emperor.

*[Skt lōkādhipati> த. லோகாதிபதி]*

**லோகாதீதம்** *lōgātitam,* பெ.(n.) உலகத்துக்கு அப்பாற்பட்டது (செ.அ.); the supernatural; the ultra-mundane.

*[Skt. lōkātita> த. லோகாதீதம்]*

**லோகாந்தரம்** *lōgāntaram,* பெ.(n.) வேறுலகம் (செ.அ.); the world beyond.

*[Skt. lōkāntara> த. லோகாந்தரம்]*

**லோகாந்தரமடை-தல்** *lōgāntaramaḍai,* 2 செ.கு.வி. (v.i.) இறத்தல், மரணமடைதல் (செ.அ.); to die.

**லோகாபவாதம்** *lōkāpavātam,* பெ.(n.) பெரும்பழி (செ.அ.); censure of the world, public scandal.

*[Skt lōkā-pavāda> த. லோகாபவாதம்]*

**லோகாபிராமம்** *lōkāpirāmam,* பெ.(n.) 1. உலகத்திற்கு மகிழ்ச்சி தருவது; that which is pleasing to the world. 2. ஊர்ப்பேச்சு (செ.அ.); general talk, rumour. "லோகாபிராமமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்".

*[Skt lōkā-bhirāma> த. லோகாபிராமம்]*

**லோகாயதம்** *lōgāyatam,* பெ. (n.) உலோகாயதம் பார்க்க; see ulōkāyatam.

*[Skt. lōkāyata> த. லோகாயதம்]*

**லோகாயதன்** *lōgāyatan,* பெ. (n.) உலோகாயதன் பார்க்க; see ulōkāyatan. "லோகாயதன் சமயநடை சாராமல்" (தாயு.மௌன.4.).

*[Skt lōkāyata> த. லோகாயதன்]*

**லோகாலோகம்** *lōkālōkam,* பெ.(n.) சக்கரவாளம்; a mythical range of mountains.

*[Skt lōkā-lōka> த. லோகாலோகம்]*

**லோகிதம்** *lōkitam,* பெ.(n.) செந்நிறமானது (செ.அ.); redness, that which is red. "லோகிதமலரோடும்" (இரகு.திக்குவி.264).

*[Skt. lōhita> த. லோகிதம்]*

**லோகோத்தமரசம்** *lōkōttamarašam*, பெ.(n.) ஒரு வகைப் பேதி மருந்து (செ.அ.); a purgative.

*[Skt. lōkōttama-rasa > த. லோகோத்தமரசம்]*

**லோகோத்தரம்** *lōkōttaram*, பெ.(n.) மிகச் சிறந்தது (செ.அ.); that which is excellent in every way.

*[Skt. lōkōttara > த. லோகோத்தரம்]*

**லோகோபகாரம்** *lōkōpakāram*, பெ.(n.) உலக நன்மை (செ.அ.); public good, general good.

*[Skt. lōkōpakāra > த. லோகோபகாரம்]*

**லோட்டா** *lōṭṭā*, பெ.(n.) 1. நீர் குடிக்கப் புயன்படும் ஏனம்; pipkin, a small metal pot, generally of brass. 2. கழுத்தணி வகை (செ.அ.); a necklace of gold beads.

*[U. lōṭā > த. லோட்டா]*

**லோடா** *lōṭā*, பெ.(n.) லோட்டா,1 (வின்.) பார்க்க; see lōṭṭā.

**லோடு** *lōḍu*, பெ.(n.) குறைவு (செ.அ.); loss, deficiency.

*[Hind. luṭ > த. லோடு]*

**லோத்திரம்** *lōttiram*, பெ.(n.) வெள்ளி லோத்திரம் (செ.அ.); lodhra tree.

*[Skt. lōdhra > த. லோத்திரம்]*

**லோத்துகம்** *lōttukam*, பெ.(n.) லோத்திரம் பார்க்க; see lōttiram.

**லோந்து** *lōntu*, பெ.(n.) இராவுக்காவல் (செ.அ.); night patrol.

*[Fr. ronde > த. லோந்து]*

**லோபம்**[1] *lōpam*, பெ.(n.) 1. கெடுதல் (விகாரம்); elision. "ஆதேசலோபம்" (பி.வி.26). 2. குறைவு (செ.அ.); defect, deficiency. "மந்திர கிரியாலோப மின்றியே" (அறப்.சத.81).

*[Skt lōpa > த. லோபம்]*

**லோபம்**[2] *lōpam*, பெ.(n.) 1. உலோபம்[1] பார்க்க; ulōpam. "லோப மருளின்மை கூடக் கலந்துள்ளிருக்க" (தாயு.சின்மயா.3). 2. கடுஞ்செட்டு (உ.வ.); stinginess.

*[Skt. lōbha > த. லோபம்]*

**லோபன்** *lōpan*, பெ.(n.) miser. உலோபன் பார்க்க; see ulōpan. "லோபன் மகன் டம்பன்" (செ.அ.).

*[Skt. lōbha > த. லோபன்]*

**லோபி**[1] *lōpi*, பெ.(n.) உலோபி பார்க்க; see ulōpi.

*[Skt. lōbhin > த. லோபி]*

**லோபி**[2]**-த்தல்** *lōpi*, செ.கு.வி.(v.i.) உலோபி[2] பார்க்க; see ulōpi.

*[Skt. lōbha > த. லோபி]*

**லோபி**[3]**-த்தல்** *lōpi*, 4 செ.கு.வி. (v.i.) உலோபி[3] பார்க்க; see Ulōpi.

*[Skt. lōpa > த. லோபித்தல்]*

**லோபு-தல்** *lōpu*, 5 செ.குன்றாவி. (v.i.) உலோபு பார்க்க; see ulōpu. "லோபியுண்ணார்" (தேவா.55.7).

*[Skt lōpa > த. லோபு]*

**லோபை** *lōpai*, பெ.(n.) பார்வதி (கூர்மபு. திருக்கலி.22); Pārvatī.

*[Prob. lōbhā > த. லோபை]*

**லோம்பர்** *lōmpar*, பெ.(n.) இரும்பு வகை (இ.வ.); a kind of iron.

**லோல்படு-தல்** *lōl-paṭu-*, 20 செ.கு.வி. (v.t.) 1. திண்டாடுதல்; to wander about restlessly, to be tossed about. "அவன் அங்குமிங்கும் லோல்படுகிறான்". 2. மலிந்து கிடத்தல் (உ.வ.) (செ.அ.); to be over plentiful, as a commodity.

*[Skt. lōla > த. லோல்படு-தல்]*

**லோலக்கம்** *lōlakkam*, பெ.(n.) திண்டாட்டம்; restless wandering. "அவன் அங்குமிங்கும் லோலக்கமாடுகிறான்" (செ.அ.).

[Skt. lōla> த. லோலக்கம்]

**லோலக்கு** *lōlakku,* பெ.(n.) லோலாக்கு பார்க்க; see lōlākku.

**லோலம்** *lōlam,* பெ.(n.) 1. அலைவு; unsteadiness, restlessness. 2. ஆசைப் பெருக்கம் (செ.அ.); greediness, lustfulness.

[Skt lōla> த. லோலம்]

**லோலயப்படு-தல்** *lōlaya-p-paṭu,* 20 செ.கு.வி. (v.i ) லோல்படு (உ.வ.) பார்க்க; see lōlpaṭu.

**லோலன்** *lōlaṉ,* பெ.(n.) 1. விளையாடித் திரிபவன்; one who is sportive or playful. "முத்தலைச் சூலனே லோலனே" (அறப்.சத.17). 2. பெண்டிரை நாடித் திரிபவன் (செ.அ.); one who dallies with woman.

[Skt. lōp> த. லோலன்]

**லோலாக்கு** *lōlākku,* பெ.(n.) காதில் தொங்கவிடும் அணி வகை (செ.அ.); a pendant suspended from the lobe of the ear.

[Skt. lōlak> த. லோலாக்கு]



**லோலாயப்படு-தல்** *lōlāya-p-paḍu,* 20 செ.கு.வி. (v.i.) லோல்படு (உ.வ.) பார்க்க; see lōlpaṭu.(செ.அ.).

**லோலாயம்** *lōlāyam,* பெ.(n.) லோலக்கம் பார்க்க; see lōlakkam.

[Skt. dōlāyamāna> த. லோலாயம்]

**லோலோவென்றலை-தல்** *lōlōveṉṟalai,* 2 செ.கு.வி. (v.t.) திண்டாடித் திரிதல்; to wander restlessly (செ.அ.).

**லோன்** *loan,* பெ.(n.) கடன்; loan.

[E. loan> த. லோன்]

**லௌகிகதந்திரம்** *laukika-tantiram,* பெ.(n.) உலக செய்திகளில் திறமை (செ.அ.); skill or tact in worldly affairs.

[Skt. laukika> த. லோ]

**லௌகிகதருமம்** *laukika-tarumam,* பெ.(n.) உலகியல் (செ.அ.); ways of the world.

**லௌகிகப்பிரக்கிரியை** *laukika-p-pirakkiriyai,* பெ.(n.) உலகவழக்கு (பி.வி.18,உரை.) (செ.அ.); usage in common speech.

**லௌகிகம்** *laukikam,* பெ.(n.) லௌகீகம் பார்க்க; see laukīkam.

**லௌகிகன்** *laukikaṉ,* பெ.(n.) லௌகீகன் பார்க்க; see laukikaṉ.

**லௌகீகம்** *laukīkam,* பெ.(n.) 1. உலகிற்குரியது; wordly affairs, that which is of the world. 2. உலகப்பற்றுடைமை (வின்.); worldliness. 3. அலுவல் (செ.அ.); office.

[Skt. laukika> த. லௌகீகம்]

**லௌகீகவிருத்தி** *laukīka-virutti,* பெ.(n.) வைதீகவிருத்தியை விடுத்து உலக நடைக்குரிய தொழில்களில் முயலுகை (செ.அ.); secular pursuits, opp. to vaitīka virutti.

**லௌகீகன்** *laukīkaṉ,* பெ.(n.) 1. உலகப்பற்றுடையவன்; one who is worldly-minded. 2. சமயவொழுக்க விதிகளைச் சரிவரப் பின்பற்றாதவன்; one who does not strictly adhere to the prescribed rites and observances, dist. fr. vaitikaṉ. 3. உலகியலில் (லௌகீகவிருத்தியில்) ஒழுகுபவன்; one who follows secular pursuits. 4. உலகியலறிந்தவன் (செ.அ.); one who is worldly - wise.

[Skt. laukika> த. லௌகீகன்]

# வ

**வக்காலத்து** *vakkālattu,* பெ. (n.) முறை மன்ற வழக்கு நடத்துவதற்கு வழக்கறிஞருக்குக் கொடுக்கும் அதிகார ஆவணம் (பத்திரம்) (வின்.); (legal) Power of attorney given to a lawyer for conducting a case.

*[U. wakālat>த. வக்காலத்து]*

**வக்கிரம்** *vakkiram,* பெ. (n.) 1. வளைவு; curve, bend, winding. "வக்கிர சாபமழைபொழிந்து" (பாரத. இரண்டா. 12) 2. வட்டம்; (பிங்.) circle. 3. சென்ற வழி மீளுகை; (பிங்.) retracing one's steps. 4. நேர்மையற்ற செலவு; (அக.நி.) irregular course. 5.கொடுமை; (பிங்.). cruelty, malignancy, as of a planet. 6. பொய்; (திவா.). lie. 7. வஞ்சனை; (வின்.). fraud, dishonesty. 8. கோணல் வழி; perversity. 9. பொறாமை; envy 10. கலக்கம்; confusion.

*[Skt. vakra>த. வக்கிரம்]*

**வக்கிரன்** *vakkiran,* பெ. (n.) 1. மாறுபாடுள்ளவன்; perverse, cross-grained person. 2. குரூரன்; (வின்.) cruel man. 3. சனி; (இலக். அக.) saturn. 4. செவ்வாய்; (பிங்.) mars. 5. உருத்திரன்; (யாழ். அக.). Rudra. 6. திருமாலால் அழிக்கப்பட்ட ஓர் அசுரன்; an asura slain by Viṣṇu. "வக்கிரனை வடிவழித்த மாயவனா" (பெருந்தொ. 865.)

*[Skt. vakra>த. வக்கிரன்]*

**வக்கீல்** *vakkīl,* பெ. (n.) முறை மன்றத்தில் பிறருக்காக வழக்கை எடுத்து வாதிப்போர்; authorized attorney, counsel at law, pleader. 2. மணவுடன் படிக்கையில் மணப்பெண் சார்பான செயல் புரிபவன்; one who represents the bride in a contract of marriage.

*[U. wakīl>த. வக்கீல்]*

**வக்தா** *vaktā,* பெ. (n.) எடுத்துச் சொல்லுவோன்; one who speaks or expounds. 2. பேச்சாளி; orator.

*[Skt. vaktā>த. வக்தா]*

**வக்து** *vaktu,* பெ. (n.) காலம், வாய்ப்பு (இ.வ.); time, season opportunity.

*[Arab. vaqt>த. வக்து]*

**வகி-த்தல்** *vaki-,* 4 செ.கு.வி. (v.i.) தாங்குதல்; to bear, carry, as a load, to undertake, as a responsible work, to maintain, support, as a family, to endure, as fatigue, etc. *'குடும்ப பாரத்தை வகிக்கிறான்.'*

*[Skt. vah>த. வகி]*

**வச்சணத்தி** *vaccaṇatti,* பெ. (n.) அன்பு, வாற்சல்லியம் (அருங்கலச். 23); tenderness, affection, fondness, love.

*[Skt. vatsala >த. வச்சணத்தி]*

**வச்சணந்திமாலை** *vaccaṇandimālai,* பெ. (n.) தம் ஆசிரியரான வச்சணந்தி முனிவர் பெயரால் குணவீரபண்டிதரென்பவர் வெண்பா யாப்பில் இயற்றிய பாட்டியல் நூல்; a treatise on poetics, in veṇpā verse, by Guṇavīrapāṇḍidar, named after his preceptor Vaccaṇaandi.

**வச்சத்தொள்ளாயிரம்** *vacca-t-tōḷḷāyiram,* பெ. (n.) வச்சதேயத்தரசனைப் பற்றித் தொள்ளாயிரம் வெண்பாக்களால் அமைந்த ஒரு நூல்; (வீரசோ. அலங்.11, உரை). a poem of 900 veṇpā verses on the king of Vatsa, not extant.

**வச்சம்** *vaccam,* பெ.(n.) 1. இந்தியாவின் வடபாகத்துள்ள நாடு; an ancient province in North India. *'வச்சத்திளங்கோவை' (வீரசோ. அலங். 11, உரை.)*

*[Skt. vatsa > த. வச்சம்]*

**வச்சயம்** *vaccayam,* பெ. (n.) 1. கலைமான் (பிங்.); stag. 2. கருநிறமுள்ள மான் வகை; black stag.

*[Skt. vatsaka > த. வச்சயம்]*

**வச்சிரக்கட்டு** *vaccira-k-kaṭṭu,* பெ. (n.) வலுவான அமைப்பு; strong - build.

*[வச்சிரம் + கட்டு]*

*[Skt. vajra > த. வச்சிரம்]*

**வச்சிரக்கோட்டம்** *vaccira-k-kōṭṭam,* பெ. (n.) காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனது வச்சிராயுதம் நிற்க அமைந்த கோயில்; an ancient temples at Kāviri-p-pūmpattinam, where Indra's thunderbolt was installed. *'வச்சிரக் கோட்டது மணங்கெழுமுரசம்' (சிலப். 5, 141.)*

**வச்சிரகங்கடம்** *vaccira-kaṅgadam,* பெ. (n.) மிக்க உறுதியுள்ள சட்டை வகை (யாழ். அக.); a cloth of great durability.

*[Skt. vajra +kaṅkaṭa>த. வச்சிரகங்கடம்]*

**வச்சிரகங்கடன்** *vaccira-kaṅgadan,* பெ. (n.) அனுமான் (யாழ். அக.); Hanumān

*[Skt. vajra + kaṅkata>த. வச்சிரகங்கடன்]*

**வச்சிரசரீரம்** *vaccira-carīram,* பெ. (n.) உறுதியான உடம்பு (பிங்.); robust, strong body. *'அத்தயிரைக் குடித்துத் தடித்து வச்சிர சரீரம் பெற்றார்' (தக்கயாகப் 54 , உரை.)*

*[Skt. vajra + sarira>த. வச்சிரசரீரம்]*

**வச்சிரப்படையோன்** *vaccira-p-padaiyōn,* பெ.(n.) இந்திரன்; Indra, as armed with the thunderbolt.

**வச்சிரம்** *vacciram,* பெ. (n.) 1. இருதலைச் சூலமாய் நடுவுபிடியாயுள்ள ஓராயுதம். (சிலப் 2, 46 – 8 உரை); thunderbolt, a weapon sharp-edged at both ends and held in the middle. *'கூர்கெழு வச்சிரங்கொண்டு' (பெருங். மகத. 27, 167)* 2. மிகவும் உறுதியானது; that which is excedingly strong, hard or adamant. *'வள்ளிதழ் மாலை மார்பன் வச்சிர மனத்தனானான் (சீவக. 2732).* 3. வைரமலை (சூடா.); diamond, as very hard. 4. மரத்தின் காழ். core of a tree. *"வெளிறுமுன் வித்திப் பின்னை வச்சிரம் விளைத்தலாமோ"* (சீவக. 2613.); 5. சதுரக்கள்ளி (சூடா.); squre sparge. 6. மல்லர் கருவி வகை (வின்.); a weapon used by boxers. 7. ஒரு வகைப் பசை; a kind of glue. 8. சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; a treatise on architecture, one of 32 cirpanul, q.v. 9. ஒக மிருபத்தேனுள் ஒன்று (சோதிட சிந்); (Astron.) a division of time, one of 27 yokam, (q.v.).

*[Skt. vajra >த. வச்சிரம்]*

**வச்சிரயாப்பு** *vaccira-yāppu,* பெ. (n.) 1. மரங்களை வச்சிரப் பசையினாற் சேர்க்கை; gluing, in woodwork. *'அச்சு மாணியும் வச்சிரயாப்பும்' (பெருங். உஞ்சைக் 58, 47)* 2. வச்சிராயுதத்தால் எழுதியது போன்று என்றும் அழியா எழுத்து; indelible writing, as the marks made by the vaccirā-yutam *'நின்றது கிழமை நீங்கா வச்சிர யாப்பின்' (சீவக. 544.)*

*[வச்சிரம் + யாப்பு]*

*[Skt. vajra >த. வச்சிரம்]*

**வச்சிரரேகை** *vaccira-rēgai,* பெ. (n.) பெண் மகப்பேறடைவதைக் குறிப்பதாகக் கருதப்படும் உள்ளங்கை வரி வகை (சிவக். பிரபந். சரபேந்திர குற. 51,1.); (palmistry.) a kind of distinctive mark in the palm of the hand, believed to indicate female issue.

*[Skt. vajra+rēkha >த. வச்சிரரேகை.]*

**வச்சிரவண்ணன்** *vaccira-vaṇṇaṉ,* பெ. (n.) செல்வக் கடவுள்; Kuberan, the god of wealth. *"வச்சிர வண்ணன் காப்ப வாழிய ரூழி" (சீவக. 2494.)*

*[Skt. vaiśravaṇa >த. வச்சிரவண்ணன்.]*

**வச்சிராப்பியாசம்** *vacciräppiyāšam,* பெ. (n.) (கணிதம்) பெருக்கல் வகை. (வின்.); (Arith.) cross multiplication.

*[Skt. vajrābhyāsa >த. வச்சிராப்பியாசம்.]*

**வச்சை** *vaccai,* பெ. (n.) 1. வாஞ்சை (இலக். அக.); kindness. 2. இவறன்மை (உலோபம்); avarice, stinginess. *'நலிவுசெயுநற் குதவும் வச்சைமாக்கள்' (இராகு. இந். 25.).*

*[Skt. vāñch >த. வச்சை.]*

**வசந்தபஞ்சமி** *vasanta-pañšami,* பெ. (n.) காமனுக்குரியதாய் மாகமாதத்து வெண்பக்க (சுக்கிலபட்ச)த்து வரும் ஐந்தாம் நாள் (பஞ்.); the 5th titi of the bright fortnight in the lunar month of makam, as sacred to kāma.

*[Skt. vasanta+pnjami >த. வசந்தபஞ்சமி.]*

**வசந்தபயிரவி** *vašanta-payiravi,* பெ. (n.) ஒரு பண் வகை. (வின்.); a specific melody type.

த.வ. வேனிற் பண்.

*[Skt. vasanta+bhairavi>த. வசந்தபயிரவி]*

**வசந்தம்** *vašantam,* பெ. (n.) 1. இளவேனில் (பிங்.); the spring season. 2. மேழம் (சித்திரை) மாதம் (பிங்.); the month of cittirai. 3. நறுமணம் (சூடா.); scent fragrance. 4. கந்தப்பொடி (சது.); scented powder. 5. ஓர் இசைப் பண். (பரத. இராக. 56) a specific melody type. 6. மகிழ்வான உரையாடல் (சல்லாபம்) (பிங்.). pleasant conversation. 7. சிறிய முத்து (யாழ். அக.); small pearl.

த.வ. இளவேனில்

*[Skt. vasanta>த. வசந்தம்]*

**வசந்தமாலை** *vašantamālai,* பெ. (n.) தென்றலைச் சிறப்பித்துக் கூறும் சிற்றிலக்கிய (பிரபந்த) வகை. (இலக். வி. 836.); an antāti verse describing the south-wind one of 96 pirapantam. (q.v.)

*[Skt. vasanta >த. வசந்தமாலை.]*

**வசந்தருது** *vašanta-rutu,* பெ. (n.) இளவேனில் (பிங்.); spring season.

*[Skt. vasanta+rutu>த. வசந்தருது.]*

**வசந்தன்** *vašantaṉ,* பெ (n.) 1. காமன் (பிங்.); Kāman the god of love. 2. காமனுக்குத் தோழனும் இளவேனில் காலத்துக்குரியவனுமான ஒரு தேவன்; Vasanta the god of spring and friend of Kāman 'சித்திரை வசந்தன் வருசெவ்வியுடன் மகிழா' (பாரத சம்பவ. 101.). 3. தென்றல்; the south-wind. 'வஞ்ச வசந்தனைநீ வாவென்று' (காளத். உலா, 479) 4. கூத்து வகை; a kind of dance.

*[Skt. vasanta >த. வசந்தன்.]*

**வசந்தனடி-த்தல்** *vašantaṉ-adi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கும்மியடித்தல் (வின்.); to perform the kummi dance. 2. வசந்தன் கூத்து ஆடுதல் (யாழ். அக.); to dance the vacantaṉ dance.

*[Skt. vasanta >த. வசந்தனடி-த்தல்.]*

**வசநாபி** *vasanāpi,* பெ. (n.) வசம்பு (அ) தான்றி வேரிலிருந்து எடுக்கப்படுங் கொடிய நஞ்சுவகை; a strong poison said to be prepared from vasampu or according to some, from tāṉṟiroot.

**வசியம்** *vaciyam,* பெ. (n.) 1. வயப்படுகை; being docile or subjugated. 2. காதல்; great attachment, devoted love *"ஒய்வறு வசிய முண்டாய்"* (கொக்கோ. 1, 28) 3. கைவயம் (வின்.); actual possession.

[Skt. vaśya > த. வசியம்]

**வசீகரசக்தி** *vacikara-sakti,* பெ. (n.) 1. மனத்தைக் கவரும் ஆற்றல்; power of attraction. 2. வசியஞ் செய்யும் ஆற்றல்; magic spell, hypnotic power.

த.வ. வயக்காற்றல்

[Skt. vaśi-kara > த. வசீகரம்]

**வசீகரணம்** *vacikaranam,* பெ. (n.) 1. வயப்படுத்துகை; subjugation, attraction. 2. காமன் கணைகளுள் வசீகரத்தைச் செய்யும் அம்பு; the arrow of Kāma that subjugation a person. 3. அறுபத்து நாலு கலையுள் பிறரை வயஞ் செய்வதாகிய வித்தை (வின்.); art of subjugation by magic one of arupattunālu-kalai

த.வ. வயப்பாடு

[Skt. vaśi-karana > த. வசீகரணம்]

**வசீகரம்** *vacikaram,* பெ. (n.) ஈர்ப்பு; attract.

**வசீகரன்** *vacikaran,* பெ. (n.) வசியப்படுத்துவோன் (யாழ். அக.); one who fascinates and charms

[Skt. vaśi-kara>த. வசீகரன்.]

**வசூல்** *vacūl,* பெ. (n.) 1. சேகரிப்பு; collection. 2. சேகரிக்கும் வரி முதலியன; (C G ) collections, as of revenue.

[U. wasūl >த. வசூல்.]

**வசூல்பாக்கி** *vacūl-pākki,* பெ. (n.) நிலுவைத் தொகை (வின்.); uncollected balance

[U. wasūl >த. வசூல்.]

**வசூலி–த்தல்** *vacūli-,* 4 செ.கு.வி. (v.i.) வரி முதலியவற்றைத் தண்டுதல்; to collect, as revenue. இந்த ஆண்டு இன்னும் வரி வசூலிக்கவில்லை. (உ.வ.)

[U. wasūl > த. வசூல்.]

**வமிசம்** *vamicam,* பெ. (n.) 1. குலம்; race, imeage, descent, family. 2. மூங்கில்; bamboo. 3. வேய்ங்குழல்; flute pipe.

[Skt. vaṃśa>த. வமிசம்]

**வமிசாவளி** *vamicāvali,* பெ. (n.) கொடி வழி உறவின் முறையைத் தெரிவிக்கும் அட்டவணை; genealogical tree.

[Skt. vaṃśāvali>த. வமிசாவளி]

**வயசு** *vayacu,* பெ. (n.) 1. பருவம் (பிராயம்); period of lifetime from birth. 2. இளமை (யௌவனம்); yourth, juvenility.

**வயோதிகன்** *vāyōtikan,* பெ. (n.) கிழவன்; old man.

[Skt. vayōdhika>த. வயோதிகன்]

**வயோதிகம்** *vāyōtigam,* பெ. (n.) முதுமை; old age.

[Skt. vayōdhika>த. வயோதிகம்]

**வரம்** *varam,* பெ. (n.) 1. தெய்வம் முதலியவற்றாற் பெறும் பேறு; boon gift blessing by a deity or a great person. *"காதலி னுவந்து வரங் கொடுத்தன்றே (திருமுரு. 94)* 2. உதவி (அனுக்கிரகம்); grace, favour, help. 3. அருள் (ஆசீர்வாதம்) (யாழ். அக.); blessing. 4. வேண்டுகோள்; supplication, solicitation, entreaty, request. *"வசையிலாள் வரத்தின் வந்தாள்" (சீவக. 201.)* 5. விருப்பம்; desire. 6. மேன்மை; excellence, eminence. 7. ஒரு நிதி; a treasure. 8. சூழல் (யாழ். அக.); enclosed space. 9. எறும்பு; ant.

[Skt. vara>த. வரம்]

**வருடப்பிறப்பு** *varuda-p-pirappu,* பெ. (n.) 1. புது ஆண்டுத் தொடக்கம்; beginning or commencement of a new year. 2. ஆண்டின் முதல் நாள்; new year day.

**வருடபலன்** *varuda-palan,* பெ. (n.) ஐந்திரத்தின் (பஞ்சாங்கம்) படி அவ்வவ்வாண்டுக்குக் கோள் (கிரக) நிலையில் உண்டாகும் பலன்; the predictions for the year calculated from the position of the planets at the commencement of the new year.

**வருடம்** *vārutam,* பெ. (n.) 1. ஆண்டு (பிங்.); year. 2. மழை (பிங்.) rain. *"தேனென்னுங் கால வருடம் வருடிக்க வல்ல" (தக்கயாகப். 68. உரை.)*

*[Skt. vāṛsa>த. வருடம்]*

**வனம்** *vaṉam,* பெ. (n.) 1. காடு (சூடா.); forest. *"வனமே மேவி ..... எவ்வாறு நடந்தனை" (திவ். பெருமாள் தி. 9,2)* 2. ஊர்சூழ்சோலை (சூடா.); pleasure grove, grotto about a town. 3. சுடுகாடு; cremation ground. 4. நீர் (திவா.); water. 5. மலையருவி (யாழ். அக.); water fall. 6. உறைவிடம்; abode residence. "வாவியுமலருமாகத் துஞ்சுவ வனங்களெல்லாம்" (இரகு. நகர. 38). 7. வழி; (பிங்.) way. 8. துளசி (சூடா.); holybasil. 9. புற்று (சங். அக.); ant hill.

*[Skt. vana>த. வனம்]*

**வனவாசம்** *vaṉa-vācam,* பெ. (n.) காட்டில் வாழ்க்கை; dwelling or residing in a forest. *"பஞ்சபாண்டவர் வனவாசம்"*

**த.வ. காடுறைவு**

*[Skt. vana-vāsa>த. வனவாசம்]*

**வாக்கியக்கட்டளை** *vākkiya-k-kaṭṭaḷai,* பெ. (n.) நன்கு யாத்த சொற்றொடர்; clause or sentence of literary finish. *"எழுத்தானே கட்டப்பட்ட வாக்கியக் கட்டகைக் கூறுபாடுகளும்" (சிலப். 3, 45 உரை. பக். 108.)*

**த. வ. தொடராக்கச் செப்பம்**

*[Skt. vakya>த. வாக்கியக்கட்டளை]*

**வாக்கியம்** *vākkiyam,* பெ. (n.) 1. சொல்; speech, saying, assertion, statement, command, words. பிதுர்வாக்கியம்; 2. எழுவாய் பயனிலை முதலியவற்றால் பொருள் நிரம்பிய சொற்றொடர்; sentence; proposition containing the subject, object and predicate. *"வல்லோர் வகுத்த வாசனை வாக்கியம்"* (பெருங். உஞ்சைக் 34, 27.) 3. பழமொழி; aphorism, proverb. 4. கதிரவக் கொண்முடிபினின்று வேறுபட்டதும் தென் இந்தியாவில் நடைபெறுவதுமான பிறப்பியக்கணக்கு முறை; (Astron.) mode of reckoning followed in southern India, as distinguished from that followed in the sūrya siddhānta. 5. பிறப்பியக் கணித வாய்பாடுவகை; (வின்.) astronomical table. 6. மேற்கோள்; authoritative quotation. *"வாக்கியஞ் சொல்லி யாரொடும் வகையலாவகை செய்யன்மின்"* (தேவா. 999.10.).

**த.வ. முற்றுத்தொடர், கிளவியம்**

*[Skt. vākya>த. வாக்கியம்]*

**வாக்கியார்த்தம்** *vākkiyārttam,* பெ. (n.) 1. சொற்றொடர்ப் பொருள்; meaning of a passage. 2. ஒரு பொருண்மேல் நேர்க்கூற்று அயற்கூற்றாக நிகழ்த்தும் உரை; (log.) argumentative exposition of a text.

**த.வ. தொடர்ப்பொருண்மை**

*[Skt. vāky ārtha> த. வாக்கியார்த்தம்]*

**வாக்கு¹** *vākku,* பெ. (n.) 1. திருத்தம்; perfection, correctness. *"வாக்கணங்கார் மணிவீணை" (சீவக. 1473).* 2. திருந்திய வடிவு; refined form, shape. *"வாக்கமை கடு விசைவில்" (கலித். 137.)*

**த.வ. செப்பம், செப்பமான வடிவம்**

*[Skt. bhiga>த. வாக்கு]*

**வாக்கு²** *vākku,* பெ. (n.) 1. புலன்கள் ஐந்தனுள் பேசற் கருவியான வாய். (பிங்.); mouth, the organ of speech, one of five karumēntiriyam, q.v. 2. சொல். (திவா.); word, speech. *"வாக்கினாற்றெருட்டுவாரில்லை" (கம்பரா. பிரமா. 201.)* 3. காணாவொலி (அசரீரி); voice from heaven. 4. சொல்லாணை (வாக்குத்தத்தம்); promise. *"அவனுக்கு அப்படி வாக்குக் கொடாதே"* 5. புகழ்ச்சிச் சொல்; word of praise, encomium *"வாக்கமையுருவின் மிக்கான்" (சீவக. 1258).* 6. எளிதிற் கவிபாடுந் திறம்; capacity to compose poems with felicity. *"அந்த புலவர் வாக்குள்ளவர்"* 7. நூலின் நடை; style. *"அந்த நூலின் வாக்குச் சிறந்தது."*

8. சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்ற நால் வகைப்பட்ட ஒலி; speech form, of four kinds, viz, cūkkumai, paicanti, mattimai, vaikari. *"நிகழ்த்திடும் வாக்கு நான்கும்" (சி.சி. 1,24).* 9. ஓரிடத்திற்கு உரியவனாக ஒருவனைத் தேர்ந்தெடுப்பது முதலியவற்றில் தன் எண்ணத்தைத் தெரிவிக்கும் உரிமை; right to vote.

*[Skt. vāc> த. வாக்கு]*

**வாக்குரிமை** *vākkurimai,* பெ. (n.) பொதுச்சபையின் உறுப்பினராகப் பிறனைத் தேர்ந்தெடுத்தல் முதலியவற்றின் அனுமதியுரிமை (இக்.வ.); franchise, right of voting.

த.வ. ஓட்டுரிமை

*[Skt. vāc> த. வாக்கு]*

**வாகடம்** *vākaṭam,* பெ. (n.) மருத்துவ நூல் (தக்கயாகப். 553, உரை.); medical science, medical treatise.

த.வ. மருத்துவநூல், (வழக்கு – மாட்டு வாகடம், குதிரை வாகடம்)

*[Skt. vāgbhaṭa> த. வாகடம்]*

**வாகன்** *vākaṉ,* பெ. (n.) ஊர்தியுடையவன்; one who possesses a conveyance. *"கொண்டல் வாகனும் குபேரனும்." (பாரத. குருகுல. 29).*

*[Skt. vāha> த. வாகன்]*

**வாகனம்** *vākaṉam,* பெ. (n.) 1. ஊர்தி; vehicle, conveyance, animal to ride on, a horse, elephant, etc. carriage, wagon, van *"உயர்ந்த வாகனயானங்கள்" (பெரியபு. தடுத்தாட். 20.)* 2. சீலை (யாழ். அக.); cloth 3. புடைவை முதலியவற்றை வைத்துக் கட்டும் முரட்டுத் துணி (யாழ். அக.); rough cloth, used in packing. 4. விடாமுயற்சி (யாழ். அக.); perseverance.

த.வ. ஊர்தி

*[Skt. vāhana> த. வாகனம்]*

**வாகினி** *vākiṉi,* பெ. (n.) 1. படை (பிங்); army, host. 2. 81 யானைகளும் 81 தேர்களும் 243 குதிரைகளும் 405 காலாட்களும் உள்ள படையின் வகுப்பு; a division of an army consisting of 81 elephants, 81 chariots, 243 horse and 405 foot. *"வண்மை தலைவருமோ வாகினிக ளாவோமோ"* (ஆதியூரவதானி. 45.) 4. ஒரு பேரெண். (பிங்.); a great number.

*[Skt. vāhini> த. வாகினி[1]]*

**வாச்சியம்** *vācciyam,* பெ. (n.) 1. சொல்லின் பொருள்; meaning of a word, signification of a term. *"வாதவூரன்......வாசக முதற்கு வாச்சியம்" (சிவப். பிரபந். நால்வர்.)* 2. சொல்லக்கூடியது; that which can be stated in words. 3. வெளிப்படையானது; that which is manifest or clear. 4. நிந்தை (வின்.); blame, censure, reproch. 5. இசைக்கருவி வகை; musical instrument. *"கூத்து விகற்பங்களுக்கு அமைந்த வாச்சியக் கூறுகளும்" (சிலப். 3,14, உரை.)*

*[Skt. vādya> த. வாச்சியாம்]*

**வாச்தவம்** *vāctavam,* பெ. (n.) மெய்ம்மை; reality, truth.. *"தர்ப்பணத்திற் களிம்பு வாஸ்தவம்" (கைவல். சந். 69.).*

*[Skt. vāstava > த. வாசத்தவம்]*

**வாசகம்[1]** *vācakam,* பெ. (n.) 1. சொல்; speech, word of mouth. *"சிறியோர்க்கருளியவுயர்மொழி வாசகம்" (பெருங். வத்தவ. 13, 116.)* 2. செய்தி; message. *"மல்குநீர்க் கண்ணேற்கோர் வாசகங்கொண்டருளாயே"* (திவ். திருவாய். 1,4,5). 3. சொற்றொடர்; sentence, composition. *"வடமொழி வாசகஞ்செய்த நல்லேடு" (சிலப். 15,58).* 4. செய்யுள்; *(சிலப். 13,93 உரை)* poetical composition, verse. 5. பிறர் கேட்க உருச் செய்கை; *(சைவச. பொது. 152. உரை.).* audible muttering of a mantra. 6. உரைநடை (இக்.வ.); prose. 7. வாய்பாடு; form of speech; grammatical. *"முராரிகள் என்பது பன்மை வாசகம்" (தக்கயாகப். 79, உரை.).* 8. கடிதம் (வின்.); letter, epistle. 9. போற்றிப் பாடல்கள்; words of praise. *"வாசகஞ்*

*செய்ய நின்ற திருமாலை" (திவ். பெரியாழ். 4,1,5,).*

*[Skt. vācaka> த. வாசகம்]*

*[த. வாள் > Skt. vāc-vācaka]*

**வாசஞ்செய்-தல்** *vāšañ-cey-,* செ.கு.வி. (v.i.) வசித்தல்; to dwell, inhabit, lodge.

*[Skt. vāsa> த. வாசம்]*

**வாசம்** *vāšam,* பெ. (n.) 1. வாசனை; scent. 2. இலா மிச்சை; a grass with fragrant roots. 3.நெய்; ghee. 4. நீர்; water. 5.சாதிலிங்கம்; vermilion. 6. சண்பகம்; a fragrant flower. 7. அரிசி; rice. 8. காற்று; wind. (சா.அக.).

**வாசி[1]** *vāci,* பெ. (n.) 1. வேறுபாடு; difference. *"ஈசனிலைமைக்கு மேனையிமையோர் நிலைக்கும் வாசியுரை" (ஏகாம். உலா. 483).* 2. இயல்பு; causulity, nature, characteristic. *"அரக்கனவன் குலத்துவாசி" (இராமநா. ஆரணி. 25.).* 3. தகுதி; fitness, propriety. *"ஏறினா னவ்வாசியை வாசியாக" (திருவாலவா. 28, 45).* 4. நல்ல நிலைமை; good, improved condition. அவனுக்குடம்பு வாசிதான். 5. நிமித்தம்; ground, cause. நீ வாராதவாசி காரியங்கெட்டது. (வின்.) 6. வீதம்; rate, as of interest, portion. *"செலவளவு மாகாணிவாசியும் நாலுமாவாசியும் கழித்து"* (S.I.I. (iii), 123.). 7. நாணயவட்டம்; discount, in changing money. *"வாசி தீரவே காசு நல்குவீர்" (தேவா. 572,1.).*

*[Skt. perh. bhāj. தெ.க. vāsi > த. வாசி [1]]*

**வாசி[2]** *vāśi,* பெ. (n.) 1. குதிரை (பிங்.); horse. *"ஏறினானவ் வாசியை (திருவாலவா. 28, 45.).* 2. இரலை (அசுவதி). (சூடா.) the first nakṣatra " 3. அம்பு (யாழ். அக.); arrow. 4. மூச்சு (யாழ். அக.); breath. 5. முறைமை (நியாயம்) (யாழ். அக.); justice.

*[Skt. vājin > த. வாசி [2]]*

**வாசி[3]** *vāśi,* பெ. (n.) வாழ்பவன் (வசிப்பவன்); dwellor, inhabitant. காசிவாசி

*[Skt. vāsin > த. வாசி[3]]*

**வாசிகை** *vāśigai,* பெ. (n.) 1. தலைமாலை (பிங்.); wreath, as of flowers, pearls, etc. worn on the head. 2.மாலை; garland. *"வெண்முத்த வாசிகைத்தாய்" (திவ். இயற். திருவிருத். 50.). (திவா.);* 3.செறியக்கோத்த மாலை (பிங்.); garland of flower strung thickly together.

*[Skt. vāsa > த. வாசிகை']*

**வாசிட்டம்** *vāśiṭṭam,* பெ. (n.) 1. அறநூல் பதினெட்டனுள் ஒன்று (பிங்.); a Sanskrit text - book on Hindu law ascribed to Vasiṣṭha, one of 18 tarama - nūl, q.v.

*[Skt. vāsıṣtha > த. வாசிட்டம்]*

**வாசிட்டலைங்கம்** *vāśiṭṭalaiṅkam,* பெ. (n.) 1 துணைத்தொன்மங்கள் பதினெட்டனுள் ஒன்று (பிங்.); a secondary purāna,oneof18upa-purāṇam.q.v. *"வாசிட்டலைங்கத்தேதமின்றிய சிலதெரிந்து" (திருக்காளத். 4. நூல்வர. 2)*

*[Skt. vāśiṣṭha-laiṅga> த. வாசிட்டலைங்கம்]*

**வாதம்[1]** *vādam,* பெ. (n.) 1. சொல்; utterance. *"எஞ்சலின் மந்திரவாதமன்றி" (பெரியபு. திருஞான. 911).* 2. வாதம் முதலியவற்றில் ஒரு பக்கத்தை யெடுத்துக் கூறுகை; argument. 3. எதிர்வாதம் (சூடா.); disputation, contention. *"வாதமா றொன்றின்றித் தோற்றான் புத்தன்" (பெரியபு. திருஞான. 924).* 4. உரையாடல் (யாழ். அக.); conversation. 5. பொன்னாக்க வித்தை (இரசவாதவித்தை); alchemy. *"வகரமாதி மூன்றாகிய வசியமே வாதம்" (திருவிளை. எல்லாம் வல்ல. 17.).* 6. உச்சி வாதம்; 7. எரிவாதம்; 8. தானாத்திரம் வாதம்; 9. ஈரல் வாதம்; 10.கடுப்பு வாதம்; 11. முடங்கினி வாதம்; 12. திமிர் வாதம்;

13. முழங்கால் வாதம்; 14. கழல் வாதம்; 15. தண்டு வாதம்; 16. சுரோணித வாதம்; 17. குடல் வாதம்; 18. கிளிகை வாதம்; 19. குளிச வாதம்; 20. சூசிகா வாதம் இதன்றியும் வாதம் மேலும் 80 வகையாம் vatha disease are 80, names of some are given above. (சா.அக.).

*[Skt. vāda> த. வாதம்]*

**வாதம்²** *vādam,* பெ. (n.) 1. காற்று (பிங்.); wind, air. மாவாதஞ் சாய்த்த மராமரமே போல்கின்றார் (கம்பரா. நகர்நீங்கு. 99). 2. உடலில் வளி மிகுதலாகிய பிணிக்கூறு (பிங்.); windy humour of the body. *"வாதபித்த கபமென ...... மூவரும் ........ நலித்தனர்" (உத்தரரா. அரக்கர் பிறப். 31.).*

**த.வ. வளி, ஊதை**

*[Skt. vāda> த. வாதம்]*

**வாதம்³** *vādam,* பெ. (n.) **வில்வம்** (மலை); பார்க்க; see bael.

*[Skt. puti-vāta> த. வாதம்³]*

**வாதப்பிடிப்பு** *vāda-p-pidippu,* பெ. (n.) ஊதையினால் ஏற்படும் எலும்புப் பொருத்துப் பிடிப்பு; contraction due to rheumatism. (சா.அக.)

*[வாதம் + பிடிப்பு]*

**வாதாவி¹** *vādāvi,* பெ. (n.) 1. **வாதாபி1** பார்க்க; see vādāpi. *"இளவல் வாதாவி யென்போன்" (கந்தபு. வில். வாதா. வதைப். 2.).* 2. மேலைச்சாளுக்கியரின் தலைநகர்; Bādāmi, the capital of the Western Caḷukyas *"வடபுலத்து வாதாவித் தொன்னகரந் துகளாக" (பெரியபு. சிறுத்தொண்.6.).*

*[Skt. vādāpi> த. வாதாவி]*

**வாதி¹-த்தல்** *vādi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. வருத்துதல்; to torment, afflict, trouble. *"மாவலி வாதிக்க வாதிப்புண்டு" (திவ். திருவாய். 7,5,6).* 2. தடுத்தல்; to hinder, obstruct. *"தத்தங் குடிமையான் வாதிப்பட்டு" (நாலடி.66.).*

**த.வ. நலிதல்**

*[Skt. bādh> த. வாதித்தல்]*

**வாதி²-த்தல்** *vādi,* 4 செ. குன்றாவி. (v.t.) வாதாடுதல்; to argue, dispute, to asseverate.

**த.வ. எதிராடல்**

*[Skt. vāda-,> த. வாதித்தல்]*

**வாதி³** *vādi,* பெ. (n.) 1. எடுத்துப்பேசுபவன்; one who advocates. *"சோற்றுத் துறையர்க்கே வாதியாய்ப் பணி செய்" (தேவா. 391,4).* 2. சொற்போரிடுபவன்; disputant, debater. *"வாதிகையன்ன கனவக்கதி ரிறைஞ்சி" (மலைபடு. 112.)* 3. வழக்குத் தொடுப்போன்; complainant, plaintiff; opp. to pirati-vāti. 4. புலமையோர் நால்வருள், வாதில் ஏதுவும் மேற்கோளும் எடுத்துக்காட்டிப் பிறர்கோள் மறுத்துக் தன்கொள்கையை நிலைநிறுத்துவோன்; (யாப். வி. பக். 514.) (பிங்.); scholar who by adducing reasons and quoting authorities confutes the statements of his opponent and establishes his own, one of four pulamaiyōr, q.v. 5. பொன்னாக்கம் செய்பவன்; alchemist. *"தோன்றினன் மனமருள் செய்வதோர் வாதி" (கந்தபு. பார்க். 116.).*

*[Skt. vādin> த. வாதி³]*

**வாதுமை** *vādumai,* பெ. (n.) 1. மரவகை; common almond, m,tr., prunus amygdalus. 2. நீண்ட மரவகை; Indian almond, 1,tr., termin-alia ctappa.

*[Skt. vādāma> த. வாதுமை]*

**வாதுவன்** *vāduvan,* பெ. (n.) 1. குதிரைப்பாகன்; groom. *"காழோர் வாதுவர்" (சிலப். 22, 12).* 2. யானைப்பாகன் (பிங்.); mahout.

*[Skt. bādh > த. வாதுவன்]*

**வாதுளம்** *vādulam,* பெ. (n.) சிவத்தோன்றியங்கள் (சிவாகமம்) இருபத்தெட்டனுளொன்று; an ancient Šaivascripturein Sanskrit, one of 28 šivākamam, q.v. *"வாதுள முதலிய தந்திரத் தொகுதி" (கந்தபு. சூரனமைச். 129).*

*[Skt. vādula > த. வாதுளம்]*

**வாதை** *vādai,* பெ. (n.) 1. துன்பம்; affliction, torment, distress. *"வாதைப் படுகின்ற வானோர்" (தேவா. 570,2,).* 2. துன்பம் (வேதனை) செய்யும் நோய். (பிங்.); painful disease.

*[Skt. bādhā > த. வாதை]*

**வாந்தி** *vāndi,* பெ. (n.) கக்கல்; (நாமதீப. 600.); vomiting, ejecting from the mouth.

த.வ. வாயாலெடுத்தல், உமித்தல்

*[Skt. vānti > த. வாந்தி']*

**வாந்திபேதி** *vāndi-pedi,* பெ. (n.) நச்சுக் கழிச்சல் நோய் (இக்.வ.); cholera, as attended with vomiting and purging.

த.வ. கக்கல் கழிச்சல்

*[Skt. vāndi+peti > த. வாந்திபேதி]*

**வாந்தியுப்பு** *vāndi-y-uppu,* பெ. (n.) கக்கலுண்டாக்கும் உப்பு. (இங். வை.); tartar emetic, potassio tartras.

த.வ. கக்கல் உப்பு

*[Skt. vandi > த. வாந்தி]*

**வாந்தியெடு-த்தல்** *vāndi-y-edu-,* 4 செ.குன்றாவி. (v.t.) கக்கல் செய்தல்; to vomit.

த.வ. கக்கு

*[Skt. vāndi > த. வாந்தியெடு-த்தல்]*

**வாபசுபெறு-தல்** *vāpasuperu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. போட்டி முதலியவற்றிலிருந்து விலகுதல்; முறைப்படி அறிவித்த ஒன்றை திரும்பப்பெறுதல்; withdraw from a competition, etc. withdraw an application, a notice, etc. கடைசி நேரத்தில் அந்த வீரர் இருநூறு மீட்டர் பந்தயத்திலிருந்து வாபசு பெற்றுக் கொண்டார்./ வேட்பு மனுக்களை வாபசு பெற நாளை தான் கடைசி நாள்/ தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தை வாபசு பெற்றாலொழிய பேச்சுவார்த்தை இல்லை என்கிறார்கள். 2. பொருளையோ பணத்தையோ திரும்பப் பெற்றுக் கொள்ளுதல்; take back. அந்தக் கடையில் எந்த ஒரு பொருளையும் வாபசு பெற மாட்டார்கள்/ தைலம் வலியைப் போக்காவிட்டால் உங்கள் பணத்தை வாபசு பெற்றுக் கொள்ளலாம். 3. அனுப்பிய படைகளை திரும்ப வருமாறு செய்தல்; with draw, recall the army. ஆக்கிரமித்த இடங்களிலிருந்து படைகளை அந்த நாடு வாபசு பெற வேண்டும்/ போர் முனையில் தன் நிலைகளை இழந்த படைகளை அதிக சேதம் இல்லாமல் வாபசு பெற்றுக் கொண்டது. (கிரியா.).

**வாமம்** *vāmam,* பெ. (n.) 1. அழகு. (பிங்.); beauty. *"வாமச் சொரூப முடையோய்" (இரகு. திக்குவி. 140.)* 2. ஒளி. (சூடா.); light, brightness, splendour. *"வாம மேகலை மங்கையோடு" (கம்பரா. கைகேசி. 49.)* 3. இடப்பக்கம்; left side. *"வாமத்தாண் மேல் வர வலத்தாண் மேனின்று" (திருவாலவா. 32, 8).* 4. நேர்மையின்மை; unrighteousness, injustice. *"வாமப்போர் வயப்பிசாசனும்" (கம்பரா. படைத்தலை. 49.)* 5. எதிரிடை (வின்.); opposition. 6. தீமை; evil, baseness. *"வாமக்கள்ளைக் குடித்தவர் போல" (குற்றா. குற. 105).* 7. அகப் புறச்சமயம்

ஆறனுள் அனைத்துலகும் சத்தியின் பரிணாமமே என்றும் சத்தியுடன் இலயித்தலே முத்தியென்றும் கூறும் மதம் *(சி.போ.பா அவையடக். பக். 50.);* (Šaiva) a šaiva sect which declares that the whole universe is a manifestation of šakti, and that salvation consists in absorption in her, one of six aka-p-pura-camayam. q.v. 8. பாம்பு வகை (வின்.); a kind of snake. 9. முலை (வின்.); woman's breast. 10. செல்வம் (வின்.); riches.

*[Skt. vāma > த. வாமம்]*

**வாமன்** *vāman,* பெ. (n.) 1. அருகன்; Arhat. *"வார்தளிர்ப்பிண்டி வாம" (சீவக. 3018).* 2. புத்தன்; Buddha. *"காமற் கடந்த வாமன் பாதம்" (மணிமே. 5, 77).* 3. சிவபிரான்; Šiva. *"கங்கை சூடும் வாமனை" (தேவா. 1050, 4).*

*[Skt. vāma > த. வாமன்¹]*

**வாமனக்கல்** *vāmana-k-kal,* பெ. (n.) இறையிலி நிலங்களின் எல்லை குறிக்க நாட்டப்படும் வாமனாவதாவுருவமைந்த கல் (insc); boundary stone of lands granted for religious purpose, as carved with the figure of Vāmana.

*[வாமனன் + கல்]*

*[Skt. vāmana > த. வாமனன்]*

**வாமனன்** *vāmanan,* பெ. (n.) பத்து தோற்றரவத்து (தசாவதாரத்து)ள் குறள் வடிவாய் அவதரித்த திருமால். (பிங்.); Tirumal his dwarf incarnation, one of tacāvatāram, q.v. *"வாமனன் மண்ணிது வென்னும்" (திவ். திருவாய். 4, 41.)*

*[Skt. vāmana > த. வாமனன்]*

**வாயசி** *vāyasi,* பெ. (n.) பெண் காக்கை. (இலக். அக.); hen-crow.

*[Skt. vāyasī > த. வாயசி]*

**வாயு** *vāyu,* பெ. (n.) 1. காற்று (பிங்.); wind, air. 2. ஐம்பூதத்துள் ஒன்று; an element, one of pañca-pūdam. *"அதன் கண் வாயு வெளிப்பட்டு" (மணிமே. 27, 209).* 3. எண்டிசைத் தேவருள் வடமேற்கு மூலைக்குத் தலைவனான தேவன்; Vāyu, the wind-god, regent of the north-west, one of the asṭa-tikku-p-pālakar. 4. வயிற்றுப் பொருமல்; flatulence.

**த.வ. வளி**

*[Skt. vāyu > த. வாயு]*

**வார்த்திகம்¹** *vārttigam,* பெ. (n.) நூற்பாவின் (சூத்திரம்) கருத்தை விளக்கும் ஒரு வகை யுரை (சி. போ. 1, பக் 41.); supplementary rule added to a sūtra critical gloss or annotation.

*[Skt. vārttika > த. வார்த்திகம்¹]*

**வார்த்தை¹** *vārttai,* பெ. (n.) 1. சொல்; word, phrase. 2. மறுமொழி (பிங்.); reply. 3. உறுதிமொழி; promise 4. செய்தி; news, intelligence, tiding. ஒரு வாணிகனை யாட்கொண்ட வார்த்தை (தேவா. 414, 7.).

**வார்னீசு** *vārnīcu,* பெ. (n.) மரப்பொருள் முதலியவற்றிற் பூசப்படும்மினுக்கெண்ணெய்; varnish.

**த.வ. மினுக்கெண்ணெய்**

*[E. varnish > த. வார்னீசு]*

**வாரண்டு** *vāranṭu,* பெ. (n.) 1. ஆளைக் கட்டுப்படுத்திப் பிடிக்க அரசால் விடுக்கப்படும் கட்டளை; warant for arrest. 2. பிணை (இ.வ.); security.

**த.வ. பிடி**

*[E. warrant > த. வாரண்டு]*

**வாரம்** *vāram,* பெ. (n.) 1. ஞாயிறு, திங்கள், செவ்வாய், அறிவன் (புதன்), வியாழன், வெள்ளி, காரி (சனி) என்ற ஏழு கிழமைகள்; days of the week, numbering seven, viz., āti-vāram, cōma-vāram, maṇkaḷa-vāram, caumiya-vāram, kuru-vāram, cukkira-vāram, cani-vāram. 2. ஏழு கிழமைகள் கொண்ட காலப்பகுதி. (பிங்.); week.

[Skt. vāra > த. வாரம்¹]

**வால்மீகி** vālmīki, பெ. (n.) வடமொழியில் இராமாயணமியற்றிய முனிவர் (வின்.); a sage, the author of the Rāmāyana.

[Skt. vālmīki > த. வால்மீகி]

**வாலிபம்** vālipam, பெ. (n.) இளமை; youth, juvenility. *"வாலிப மங்கை" (திருப்பு. 1141.).*

த.வ. இளந்தை, வாலை

[Skt. bālya > த. வாலிபம்]

**வான்மீகி** vāṉmīki, பெ. (n.) **வால்மீகி** பார்க்க; see vālmīki. *"வாங்கரும் பாத நான்கும் வகுத்த வான்மீகி யென்பான்" (கம்பரா. நாட்டுப். 1.)*

[Skt. vālmīki > த. வான்மீகி]

**வானப்பிரசுதம்** vāṉappirastam, பெ. (n.) 1. ஒழுகலாறு (ஆச்சிரமம்) நான்கனுள் மனைவியுடன் காட்டிற்குச் சென்று தவஞ் செய்யும் நிலை. (சி.சி. 8, 11, மறைஞா.) life of a vāṉappirastaṉ one of four ācciramam. 2. காட்டிருப்பை. (மலை); wild mahwa.

[Skt. vānaprastha > த. வானப்பிரசுதம்]

**வானி** vāṉi, பெ. (n.) படை (பிங்.); army. *"பாண்டவர் வானி குலைந்தவே" (சேதுபு. இராமதீ. 34.)*

[Skt. vāhinī > த. வானி¹]

**விசக்கடி** viśā-k-kaṭi, பெ. (n.) 1. நஞ்சு விலங்குகளால் தீண்டப்படுகை; poisonous bite, bite of venomous reptiles or animals. 2. பெருந்துன்பம்; serious trouble. *"எனக்கு ஒருபெரிய விஷக்கடியாயிற்றே"*

த.வ. நச்சுக்கடி

**விசக்கண்** viśā-k-kaṇ, பெ. (n.) தீமை பயக்கும் பார்வையுள்ள கண்; evil eye.

த.வ. நச்சுக்கண்

[Skt. viśa > த. விசம்]

**விசக்கல்** visā-k-kal, பெ. (n.) 1. விசத்தையெடுப்பதாகக் கருதப்படுங்கல் (வின்.); a stone supposd to absorb poison. 2. காலில் பட்டால் பட்ட இடத்தில் விசமுண்டாக்கும் கல்; poisonous stone that causes pain when it priks the foot

த.வ. நச்சுக்கல்

[Skt. viśa > த. விசம்]

**விசக்காய்ச்சல்** visā-k-kāyccal, பெ. (n.) 1. இசிவு சுரம்; enteric fever, typhoid. 2. சுரநோய்வகை (வின்.); pestilential fever.

த.வ. நச்சுக்காய்ச்சல்

[Skt. visa > த. விசம்]

**விசக்காற்று** visā-k-kāṟṟu, பெ. (n.) 1. நச்சுத்தன்மையுள்ள காற்று; poisonous wind. 2. வாடைக் காற்று; northerly wind.

த.வ. நச்சுக்காற்று

**விசகடிகை** visakaḍigai, பெ. (n.) விண்மீன்களால் ஏற்படும் தீய காலம் (சோதிடம்) (விதான. குணகல. 25, உரை.); inauspicious period in the duration of a naksatra.

**விசகிருமிநியாயம்** visakiruminiyāyam, பெ. (n.) நஞ்சி(விசத்தி)லுண்டாகும் புழுப்போல் தீயதிற் பழகுவோர்க்கு அது தீங்காகத் தோன்றாமை குறிக்கும் நெறி; nyāya of the worm bred in poison, illustrating the principle that an evil to which a person in accustomed will not appear to him as an evil.

**வியாக்கியானம்** viyākkiyāṉam, பெ. (n.) உரை; exposition, explanation, comment, commentary. *"தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம்.....வியாக்கியானஞ் செய்து" (சிவ.சம.33).*

த.வ. விளக்கவுரை

*[Skt. vyākhyāna > த. வியாக்கியானம்]*

**வியாகரணம்** *viyākaranam,* பெ. (n.) 1. அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றான இலக்கணம்; grammar, one of arupattunālukaai, q.v.; 2. வேதாங்கம் ஆறனுள் ஒன்றான வடமொழியிலக்கணம்; Sanskrit grammar, one of six vētāṅkam. *"ஐந்திரத் தொடக்கத்து வியாகரணமும்" (கலித். கடவுள்வா. உரை.)*

**த.வ. இலக்கணம்**

*[Skt. vyākarana > த. வியாகரணம்]*

**வியாகரி-த்தல்** *viyākari-,* 4 செ.கு.வி. (v.i.) விரித்துரைத்தல்; to propound, explain. *"வாக்கிய முப்பதினால் வகை செய்து வியாகரித்தோம்"*

*[Skt. vyā-kr > த. வியாகரி-த்தல்]*

**வியாகுலம்** *viyākulam,* பெ. (n.) 1. துக்கம்; sorrow, trouble. 2. கவலை; anxiety. *"ஏழைகள் வியாகுலமி தேதென வினாவி" (திருப்பு. 176.),* 3. மயக்கம் (இ.வ.); perplexity, bewilderment.

**த.வ. துயரம்**

*[Skt. vyākula > த. வியாகுலம்]*

**வியாச்சியம்** *viyācciyam,* பெ. (n.) 1. வழக்கு; dispute. 2. முறைமன்ற (நியாய) வழக்கு (இக்.வ.); law-suit.

*[Skt. vyāja > த. வியாச்சியம்]*

**வியாசபாரதம்** *viyāša-bāradam,* பெ. (n.) வியாசர் இயற்றிய வடமொழி மகாபாரதம்; the Maga Bhārada composed by Vyāsain Sanskrit.

*[Skt. vyāsa+bhārata > த. வியாசபாரதம்]*

**வியாசம்** *viyāšam,* பெ. (n.) 1. பிரிவு, பகுக்கை; separation, division, classification. 2. ஒரு செயலைப் பற்றி எழுதும் கட்டுரை (இக்.வ.); written paper, essay. 3. அற (தரும) நூல் பதினெட்டனுள் வியாசர் இயற்றியதாகக் கூறப்படும் சுமிருதி; a Sanskrit text-book on Hindu law, aescribed to vyāsa, one of 18 taruma-nūl, q.v.

*[Skt. vyāsa > த. வியாசம்]*

**வியாசன்** *viyāšan,* பெ. (n.) வேதங்களை வகுத்தவனும் பிரம்மசூத்திரம் பாரதம் பதினெண்புராணம் முதலிய நூல்களை இயற்றியவனுமான முனிவன்; an ancient sage, the original compiler of the four vēdas and author of the brahma sutras, the mahābhārata, the 18 chief purānas, etc,.

*[Skt. vyāsa > த. வியாசன்]*

**வியாதன்**[1] *viyādan,* பெ. (n.) 1. வியாசன்; the sage vyāsa. *"வியாதனாய்......மாமறை நான்கென வகுத்து..........உரைத்தான்" (பாகவத. 1, மாயவனமி. 33).* 2. வேடன்; hunter.

*[Skt. vyāsa > த. வியாதன்]*

**வியாதி** *viyādi,* பெ. (n.) 1. நோய்; disease, ailment, sickness, malady. *"ஆதியும் வியாதியுமின்றி" (ஞானவா. மாவலி. 28.).* 2. தொழுநோய்; leprosy.

*[Skt. vyādhi > த. வியாதி]*

**வியாதிக்காரன்** *viyādi-k-karan,* பெ. (n.) நோயாளி; (வின்.) sickman.

**த.வ. நோயாளி**

*[Skt. vyādhi > த. வியாதி]*

**வியாதிசாந்தி** *viyādi-sāndi,* பெ. (n.) நோய்நீங்கச் செய்யும் சடங்குவகை; a propitiatory ceremony for the cure of disease.

*[Skt. vyādhišānti > த. வியாதிசாந்தி]*

**வியாதிபரீட்சை** *viyādi-parițcai,* பெ. (n.) நாடி முகம் மலம் மூத்திரம் கண் நா உடல் தொனி என்ற எட்டினால் நோயைச் சோதிக்கை; diagnosis of a diseae by an examination

of nāṭi, mukam, malam, mūttiram, kaṇ, nācariram, toṉi.

**வியாதுதம்** *viyātutam,* பெ. (n.) இயங்கியற்பொருள்; movable thing.

*[Skt. vyādhūta>த. வியாதுதம்]*

**வியாப்தம்** *viyāptam,* பெ. (n.) பரப்பப்பட்டது; that which is pervaded.

*[Skt. vyāpta>த. வியாப்தம்]*

**வியாப்தி** *viyāpti,* பெ. (n.) 1. எங்குமிருக்கை; omni presence. 2. பரந்திருக்கை; pervasion.

**வியாப்பியம்** *viyāppiyam,* பெ. (n.) 1. பரப்பப்படுவது that which is pervaded. *"அரனவற்கு வியாப்பியமே விமலை"* (சிவதரு. சிவஞான. 22).

**வியாபகம்** *viyāpagam,* பெ. (n.) 1. பரவியிருக்குந் தன்மை; pervasion, diffusion. 2. எங்குமிருக்குந்தன்மை; omnipresence. 3. எங்கும் அறியப்படுந்தன்மை; being widely known. "அவன் வியாபகமுள்ளவன்".

*[Skt. vyāpaka>த. வியாபகம்]*

**வியாபகன்** *viyāpagaṉ,* பெ. (n.) 1. கடவுள் (எங்குமிருப்பவன்); god as omnipresent. 2. எங்கும் அறியப்படுத்தன்மை படைத்தவன்; widely known person.

**வியாபகி** *viyāpagi,* பெ. (n.) எங்கும் வியாபிக்குஞ் சிவசத்தி.energy of Siva, a all - pervasive. *"விமலை வியாபகி"* (சிவதரு சிவஞானயோ. 22.);

**வியாபரி[1]–த்தல்** *viyāpari-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தொழிற்படுதல்; to operate, act. to be worked. 2. நன்கொடை சேகரித்தல்; to collect funds, as for a festival. *"இந்த உற்சவத்தை அவர் வியாபரித்துப் பண்ணுகிறார்."*

**வியாபரி[2]–த்தல்** *viyāpari-,* 11 செ.கு.வி. (v.i.) சொல்லுதல்; to tell.

**வியாபாதம்** *viyāpātam,* பெ. (n.) வஞ்சகம்; evil design.

**வியாபாதனம்** *viyāpātaṉam,* பெ. (n.) கொலை; murder, killing.

*[Skt. vyāpādana>த. வியாபாதனம்]*

**வியாபாரச்சரக்கு** *viyāpāu-c-carakku,* பெ. (n.) விலைபடுதற்கான பண்டம்; articles of merchandise

**வியாபாரம்** *viyāpāram,* பெ. (n.) 1. தொழில் ; action, operation, funtion. மண் முதலைந்திற்கும் வியாபாரம் 2. வாணிகம்; trade, commerce transaction.

**வியாபாரி** *viyāpāri,* பெ. (n.) வாணிகன்; merchant, dealer, trader

*[Skt. vyāpārin>த. வியாபாரி]*

**வியாபி[1]** *viyāpi,* பெ. (n.) எங்கும் நிறைந்திருப்பது. that which is all - pervasive, as air. *"சித்தன் மெய்த்தகு குணமிலி வியாபி"* (ஞானா. 1,7);

**வியாபி–த்தல்** *viyābi-,* 4 செ.கு.வி. (v.i.) எங்கும் பரந்து நிறைந்திருத்தல்; to pervade. "எங்கும் வியாபித்துணர்வா முனக்கு" (தாயு. பாயப்புலி. 52.).

*[Skt. vyāp> த. வியாபி]*

**வியாபிருதி** *viyāpiruti,* பெ. (n.) மறைக்கப்படாதிருக்கை being uncovered or open. *"லகுதை வியாபிருதி"* (சிவப்பிர. 30.).

**வியாபினி** *viyāpiṉi,* பெ. (n.) 1. சோடசகலைகளுள் ஒன்று. a mystic centre in the body, one of coṭacakalai, q.v. இதன் மேனாலின் வியாபினி (தத்துவப் 141.); 2. எங்கும் நிறைந்திருப்பது (யாழ். அக.); that which is all - pervasive.

**வியாமம்** *viyāmam,* பெ. (n.) நான்குமுழம்; fathom, the length of the extended arms.

*[Skt. vyāma>த. வியாமம்]*

**வியாமோகம்** *viyāmōgam,* பெ. (n.) பெருமோகம் (திவ். திருவாய். 6,1 பன்னீ.பர.); excessive attachment.

*[Skt. vyāmoha>த. வியாமோகம்]*

**வியாயாமம்** *viyāyāmam,* பெ. (n.) உடற் பயிற்சி (சுகசந்.71.); bodily exercise.

*[Skt. vyāyāma>த. வியாயாமம்]*

**வியாயோகம்** *viyāyōgam,* பெ. (n.) ரூபகம் பத்தனுள் காமமும் ஆசியமும் நீங்கி தலைவனது வீரச்செயலைக் கூறும் ஓரங்கமுடைய நாடக வகை. (சிலப். பக். 84, கீழ்க்குறிப்பு.); a species of drama in one act, describing a military or heroic exploit and excluding the sentiments of love and mirth, one of ten rūpakam. q.v

**வியார்த்தி** *viyārtti,* பெ. (n.) பொருள்; meaning, exposition.

**வியாவகாரிகம்** *viyāvakārigam,* பெ. (n.) வழக்கத்தில் இருப்பது (வேதா. சூ. 32.); that which relates to everyday life or practice

**வியாவர்த்திதம்** *viyāvarttitam,* பெ. (n.) இணையாவினை (அபிநய)க்கைவகை. (சீவக. 1257, உரை.); a hand-pose.

**வியாவிருத்தி** *viyāvirutti,* பெ. (n.) தள்ளுகை; exclusion; rejection.

**வியாளக்கிராகி** *viyāḷa-k-kirāgi,* பெ. (n.) **பிடாரன்** பார்க்க; see pidāraṉ

**வியாளம்** *viyāḷam,* பெ. (n.) 1. பாம்பு (சூடா); snake. 2. புலி; tiger. 3. யாளி; a mythological animal. 4. கெட்ட குணமுள்ள யானை; vicious elephant. (w).

**வியாளவரி** *viyāḷa-vari,* பெ. (n.) கோயிற் கருவறை (கர்ப்பக்கிரக) மதிலின் உச்சியில் யாளியுருவிலமைந்த ஒப்பனை (அலங்கார) வரி; a line of carbel stones having yāḷi images, in the inner shrine of a temple.

**வியாளவியூகம்** *viyāḷa-viyūgam,* பெ. (n.) பாம்பு வடிவான படையமைப்பு (சுக்கிரநீதி, 338.); serpent-like array of an army.

**வியானபூமி** *viyāṉa-pūmi,* பெ. (n.) சுடுகாடு (யாழ்.அக.); burial and burning ground.

**வியானன்** *viyāṉaṉ,* பெ. (n.) பத்துவளி (தசவாயு)யுள் ஒன்றானதும் அரத்த வோட்டத்தை யுண்டாக்குவதுமான வளி; the vital air of the body, which causes circulation of blood, one of taca-vāyu, q.v.

*[Skt. vyāna>த. வியானன்]*

**வியுற்பத்தி** *viyuṟpatti,* பெ. (n.) 1. மொழிப் பொருட்காரணம் (யாழ்.அக.); (gram ) etymological origin, derivatrion. 2. கல்வியறிவு; proficiency in language, literature, etc.

**வியுற்பத்திபண்ணு-தல்** *viyuṟpatti-paṇṇu-,* 11 செ.குன்றாவி (v.t.) புதிதாயுண்டாக்குதல்; to create a new.

**வியுற்பன்னன்** *viyuṟpaṉṉaṉ,* பெ. (n.) கல்வியறிவுள்ளவன்; erudite scholar, one who is proficient in language, literature, etc.

**வியூககாரன்** *viyūkakāraṉ,* பெ. (n.) தையற்காரன் (யாழ். அக.). tailor.

**வியூகபேதம்** *viyūka-pētam,* பெ. (n.) படையணி முறிகை (யாழ். அக.); breaking of the serried ranks of an army.

**வியூகம்** *viyūkam,* பெ. (n.) 1. படை வகுப்பு (குறள். 767, உரை.); military array. 2. திருமால் நிலை ஐந்தனுள் சங்கருஷணன் பிரத்தியும்நன் அநிருத்தன் என்று மூவகையாகவும் வாசுதேவனைச் சேர்த்து நால்வகையாகவுமுள்ள நிலை. (அஷ்டாதச. தத்வத். 3,43.) (பரிபா. 3, 81, உரை.); manifestation of visṇu as three divinities, viz , caṅkarusaṇaṉ or as four

divinities, including vācutēvaṉ, one of five Tirumāl-nilai, q.v. 3. திரள்; multitude, collection. 4. விலங்கின் கூட்டம். (சூடா.); herd, flock.

**வியூகாவதாரம்** *viyūgāvatāram,* பெ. (n.) 1. **வியூகம்** பார்க்க; see viyugam. *"சங்கருடணர் அநிருத்தரென்னு நால்வியூகாவதாரம்"* (பிரபோத. 45,4).

**வியோகம்** *viyogam,* பெ. (n.) 1. சாவு; death. 2. பிரிவு; separation. *"யோக வியோக முடைத்தோன்"* (ஞானா 61, 9.); 3. பிறவி நீக்கம்; (வின்.) release from births.

**வியோமம்** *viyomam,* பெ. (n.) வானம் (ஆகாசம்) (பிங்.); sky atmosphere. *"நாமமும் வடிவுங் கிளைத்திடு வியோம வடிவமாய்த் தோன்றும்"* (திருக்காளத். பு. சிவமான்.22.).

**வியோமமஞ்சரம்** *viyoma-mañcaram,* பெ. (n.) கொடி (சங்.அக.); flag.

*[**Skt.** vyoma+manjara]*

**வியோமமண்டலம்** *viyoma-maṇḍalam,* பெ. (n.) **வியோமமஞ்சரம்** பார்க்க (சங்.அக.); see *viyoma-mañcaram.*

*[**Skt.** vyoma+mandala]*

**வியோமரூபிணி** *viyoma-rūpiṇi,* பெ. (n.) சோடசகலையுளொன்று; a mystic centre in the body, one of coṭaca-kalai. *"நிற்கின்ற வியோம ரூபிணி நீலாகாயம்"* (தத்துவப். 142.).

**வியோமாட்சரேகை** *viyomāṭcarēkai,* பெ. (n.) கோள் (கிரகங்)களின் அட்சாம்ச நிலை; (வின்.) (āstron.) celestial latitude, as of planets.

**விர்த்தாந்தம்** *virttāntam,* பெ. (n.) **விருத்தாந்தம்** பார்க்க; see viruttāntam.

**விர்த்தி**[1] *virtti,* பெ. (n.) **விருத்தி**[1] பார்க்க; see virutti.

**விர்த்தி**[2] *virtti,* பெ. (n.) **விருத்தி**[2] பார்க்க; see virutti.

**விரக்தம்** *viraktam,* பெ. (n.) **விரத்தம்** பார்க்க; see viratam.

**விரக்தி** *virakti,* பெ. (n.) **விரத்தி** பார்க்க; see viratti.

**விரகசன்னதம்** *viraga-caṉṉatam,* பெ. (n.) **விரகநோய்** பார்க்க; see virakanōi. *"விரக சன்னதமேற்ற"* (தாயு. எங்கு நிறை. 10.)

**விரகதாபம்** *viraga-tāpam,* பெ. (n.) **விரகநோய்** பார்க்க ; see virakanoy

**விரகநோய்** *viraga-nōy,* பெ. (n.) காதலர்க்குப் பிரிவாலுண்டாகும் துன்பம்; distress or sorrow of lovers due to separatrion from each other.

*[**Skt.** viraha+த. நோய்]*

**விரகம்** *viragam,* பெ. (n.) 1. பிரிவு; separation, especially of lovers. 2. **விரக நோய்** பார்க்க; see viraga nōy. 3. உலர்த்துகை; drying up. மண் முதலைந்திற்கும் வியாபாரம் பொறை பிண்டீகரணம் பாகமொடு விரக மிடங்கொடையாகும் (வேதா. சூ. 77); 4. காமம்; lasciviousness, lust. (w).

**விரகவேதனை** *viraga-vētaṉai,* பெ. (n.) **விரக நோய்** பார்க்க; see viraga nōy

**விரகறம்** *virakaṟam,* பெ. (n.) வெள்ளைச்சாரணை; horse purslane.

**விரகறியாளன்** *virakaṟi-y-āḷaṉ,* பெ. (n.) அறிவுடையோன் wise man நறும் பூங்கரந்தை விரகறியாளர் மரபிற் சூட்ட (புறநா. 289).

**விரகாவத்தை** *virakavattai,* பெ. (n.) பிரிந்த காதலர் துன்புறும் நிலை; love-lorn condition of sparated lovers.

**விரகி** *viraki,* பெ. (n.) பிரிவாற் காமநோயுற்றவ–ள்–ன்; one pining from the seperation one's beloved. 2. காமி; (வின்.) lascivious person.

**விரகிணி** *virakiṉi,* பெ. (n.) 1. காதலனை பிரிந்தவள்; woman separated from her lover. 2. சம்பளம்; salary, wages.

**விரகிதன்** *virakitaṉ,* பெ. (n.) தனியே விடப்பட்டவன்; lonely man.(இலக்.அக.).

**விரசம்** *virasam,* பெ. (n.) 1. வெறுப்பு; dislike a version 2. நிந்தை; (யாழ். அக.) censure.

*[Skt. vi-rasa > த. விரசம்]*

**விரசமாக்கு–தல்** *viracam-ākku-,* செ. குன்றாவி (v.t.) கெடுத்து விடுதல் to spoil mismanage. காரியத்தை விரசமாக்கி விடாதே.

**விரசாநதி** *virasā-nadi,* பெ. (n.) பரமபதத்தின் புறத்ததோர் யாறு; a river the borders on Viṣṇu's heaven

**விரணகாசம்** *viraṇa-kāšam,* பெ. (n.) கருவிழியிற் படரும் கண்ணோய் வகை (சீவரட். 261.); a disease of the eye causing film over the pupil of the eye.

*[Skt. vraṇa + kāca > த. விரணகாசம்]*

**விரணகாரி** *viraṇakāri,* பெ. (n.) 1. புண்ணைச் சுடும் மருந்து (பைஷஜ.); caustic. 2. தோலினை (சருமத்தை)ப் புண்ணாக்கும் மருந்து (இங். வை. 31.); escharotic.

**விரணகிரந்தி** *viraṇa-kiranti,* பெ. (n.) புற்று நோய் (இங். வை. 307.); cancer.

**விரணசன்னி** *viraṇa-caṉṉi,* பெ. (n.) இசிவு நோய்வகை; (பைஷஜ.) tetanus.

**விரணப்பரு** *viraṇa-p-paru,* பெ. (n.) கடைக்கண் விளிம்பில் உண்டாகுஞ் சிறுபரு; (சீவரட்.269.) pimple in the eye.

**விரணம்**[1] *viraṇam,* பெ. (n.) 1. காயம்; wound, sore, bruise. 2. சிலந்திப்புண்; boil. 3. புண்கட்டி (வின்.); ulcer. 4. முறிவு; fracture 5. பகைமை; enmity, hatred. *"தங்கண் மேல் விரணமதாகி" (கந்தபு. இரணியன்யுத்.3)*

*[Skt. vraṇa > த. விரணம்]*

**விரணம்போக்கி** *viraṇam-pōkki,* பெ. (n.) ஆடு தின்னாப்பாளை; (வின்.) worm - killer.

**விரணவாதம்** *viraṇa-vātam,* பெ. (n.) நோய் வகை (கடம்ப. பு. இலீலா. 123.); a disease.

**விரணவைத்தியன்** *viraṇa-vāittiyaṉ,* பெ. (n.) புண்ணுக்கு பண்டுவம் செய்வோன்; surgeon.

**விரத்தம்** *virattam,* பெ. (n.) 1. உலகப் பற்றுவிடுகை; (வின்.) renunciation. 2. வெறுப்பு; (சங். அக.) dislike.

**விரத்தன்** *virattaṉ,* பெ. (n.) 1. உலகப் பற்றில்லாதவன் man free from worldly attachments. *"விரத்தரிற் றலைவனாகி"* (கந்தபு. கயமுகனுற் 31.); 2. தவசி; male ascetic. 3. மணமின்றி இருப்பதாக உறுதி செய்து கொண்டவன். (வின்.) man who has taken a vow of celibacy.

*[Skt. vi-rakta > த. விரத்தன்]*

**விரத்தி**[1] *viratti,* பெ. (n.) 1. உலகப் பற்றில்லாதவள்; woman free from worldly attachments. 2. தவத்தி; female ascetic. 3.மணமின்றி இருப்பதாக உறுதி செய்து கொண்டவள்;(வின்.) woman who has taken a vow of celibacy.

**விரத்தி**[2] *viratti,* பெ. (n.) 1. பற்றின்மை (சூடா.); freedom from worldly attachments; renunciation of worldly pleasures. 2. வெறுப்பு; dislike.

*[Skt. vi-rakti > த. விரத்தி]*

**விரதங்கா–த்தல்** *virataṅ-kā-,* செ.கு.வி. (v.i.) நோன்பு மேற்கொண்டொழுகுதல்; (வின்.) to observe a vow.

**விரதத்துவம்** *viratattuvam,* பெ. (n.) பட்டினி நோன்பு முதலியவற்றால் உடலை ஒறுக்கும் நிலை; (வின்.)state of self-inficted austerity.

**விரதநியமம்** *virata-niyamam,* பெ. (n.) 1. நோன்போடு ஒழுகுகை; observing austerities. 2. தீட்சை செய்விக்கை; (வின்.) act of religious initiation.

**விரதம்**[1] *viradam,* பெ. (n.) 1. நோன்பு; religious vow act of austerity, holy practice as fasting, continence etc. *"ஊக்கித்தாங் கொண்ட விரதங்கள் (நாலடி. 51.)* 2. கொள்கையில் கொண்ட மனவுறுதி (சங்கற்பம்) (பிங்.); solemn vow,, oath. "தன்னுடன் பிறந்த முன்னவர் விரத முடித்து"(S.I.I.iv. 94) 3. நல்வினைப் பயன் (புண்ணியம்) ஏழனுள் ஒன்றான தவம் (சூடா.); penance, one of seven puṉṉiyam. 4. நடப்பு நிகழ்வினை (சுமாவர்த்தனம்);aceremony.

த.வ. நோன்பு

*[**Skt.** vrata > த. விரதம்]*

**விரதம்பிடி—த்தல்** *viratam-piḍi-,* செ.கு.வி. (v.i.) பட்டினி கிடத்தல்; (வின்.) to fast.

**விரதமிறக்கு—தல்** *viratam-iṟakku-,* செ.கு.வி. (v.i.) மனவுறுதி (சங்கற்பித்து) கொண்டு நடத்தும் நோன்பை (விரதத்தை) அமைதி (சாந்தி) செய்து முடித்தல்; to celebrate the conclusion of a religious vow or fast with appropriate ceremonies.

**விரதவுத்தியாபனம்** *virata-v-uttiyāpaṉam,* பெ. (n.) நோன்பு (விரத) முடிக்கும் அமைதி (சாந்திச்) நிகழ்வு (சடங்கு) (யாழ். அக.); ceremonies at the conclusion of a viratam.

**விரதி** *virati,* பெ. (n.) 1. நோன்பு மேற்கொண்டோன்; one who has taken a religious vow *"விரிகடை விரதிகள்" (தேவா. 700, 3 ).* 2. துறவி (சது.); one who has renounces the world. 3. ஓதல் திருவாழ்வன் (பிரமசாரி); celibate student. "அருத்திடுகக வன்னாதி 4. சுமா வர்த்தனம்; a ceremony.

த.வ. நோன்பி

*[**Skt.** vrata > த. விரதம்]*

**விரயம்** *virayam,* பெ. (n.) 1. பயனில்லாச் செலவு; expenditure without utility. 2. மிகுசெலவு (வின்.); extravagance, waste, prodigality. 3. பேதியாகை (வின்.) கழிச்சல்; purging.

*[**Skt.** vyaya > த. விரயம்]*

**விராகம்** *virāgam,* பெ. (n.) பற்றின்மை, in difference to worldly pleasures, absence of passion or attachment. *"விராகத்தை சனி முயன்று"* (ஞானவா. வீதக. 31)

**விராணி** *virāṇi,* பெ. (n.) யானை; (சங். அக.) elephant.

**விராத்தக்காரன்** *virātta-k-kāran,* பெ. (n.) வரி தாண்டுவோன்; (w) collector of revenue.

**விராத்தம்** *virāttam,* பெ. (n.) வரி வாங்குதல்; (வின்.). collection of revenue.

*[**U.** barāt > த. விராத்தம்]*

**விராத்தியன்** *virāttiyaṉ,* பெ. (n.) குல நெறியை விட்டதால் குலத்திற்குப் புறம்பானவன்; (w) one who has lost caste through non-observance of caste-rules. 2. வேளாப்பார்ப்பான் சாதிக் கலப்பு காரணமாக ஓதுதல் மறுக்கப்பட்ட பார்ப்பனப் பிரிவினன்; mixed caste Brahmins banned from reciting vedas.

**விராதம்** *virātam,* பெ. (n.) 1. கைவேலை; manual labour. 2. நாட்கூலி வேலை; day-labour.

**விராதன்** *virāttan̠*, பெ. (n.) இராமபிரானாற் கொல்லப்பட்ட ஓர் அரக்கன். (கம்பரா. விராத.); a rāksasa slain by Rāman̠.

**விராதனன்** *virātan̠an̠*, பெ. (n.) கொலைஞன் (நிகண்டு. 196.); murderer.

**விராதீனன்** *virātīn̠an̠*, பெ. (n.) 1. நாட்கூலிக்காரன்; day-labourer. 2. வேலையில்லாதவன்; unemloyed person.

**விராமம்** *virāmam*, பெ. (n.) 1. முடிவு; (யாழ். அக.) cessation, termination, end. 2. ஒற்றெழுத்து (பிங்.); consonant. 3. இளைப்பாறுகை; rest.

**விராய்** *virāy*, பெ. (n.) 1. விறகு; fuel fire wood. வல்விராய் மாய வெரிதழல் (நீதிநெறி. 64.) 2. பூச்செடிவகை; a flowering plant. விராய்மலர்க்கோதை (பெருங். வத்தவ. 12, 38, அரும்.).

**விராயம்** *virāyam*, பெ. (n.) தளவாடம்; (யாழ். அக.) materials, as for a piece of work.

**விராலம்** *virālam*, பெ. (n.) பூனை; (சங். அக.) cat.

**விரீகி** *virīki*, பெ. (n.) 1. நெல்; (திவா.) (சீவக. 89, உரை). paddy 2. அரிசி; (சங். அக.). rice. 3. காரேலம்; (யாழ். அக.). a kind of cardamom

**விரீடம்** *virīṭam*, பெ. (n.) வெட்கம்; (இலக். அக.). shame.

*[Skt. vriḍā > த. விரீடம்]*

**விருக்கம்** *virukkam*, பெ. (n.) மரம்; (சூடா.). tree.

**விருக்கவீடு** *virukka-vīḍu*, பெ. (n.) மரப்பொந்து; (சங்.அக.). hollow in a tree.

**விருக்கத்திரணம்** *viruka-t-tirapam*, பெ. (n.) மூங்கில் (மலை); bamboo.

**விருகதூமம்** *virugatūmam*, பெ. (n.) நீர்மேற்படக் கொடி வகை; (மூ.அ.). a water-plant.

*[Skt. vrkadhūmaka > த. விருகதூமம்]*

**விருகம்** *virugam*, பெ. (n.) விலங்கு; animal beast. *"பல்விருக மாகி"* (திருவாச. 1, 27);

*[Skt. mruha > த. மிருகம் – விருகம்]*

**விருகற்பதி** *virukaṟpadi*, பெ. (n.) வியாழன்; (யாழ்.அக.) jupiter.

*[Skt. brhaspati > த. விருகற்பதி]*

**விருகு** *virugu*, பெ. (n.) வெருகு; (மலை.) long-rooted arum.

**விருகோதரன்** *virugotaran̠*, பெ. (n.) பீமன்; (பிங்.) (செந்நாயது போன்ற வயிற்றை யுடையவன்) Bhīma, the second son of Pāṇḍu, as having a belly like that of a wild dog.

*[Skt. vikōdara > த. விருகோதரன்]*

**விருச்சிகம்**[1] *viruccigam*, பெ. (n.) 1. தேள் (திவா.); scopion. 2. ஓரை (ராசி) மண்டலத்தின் எட்டாம் பகுதி (திவா.); scorpio of the zodiac. 3. நளி (கார்த்திகை)த் திங்கள்; the eighthsolar month. "விருச்சிகத்துறு மாறனாள்" (தணிகைப்பு. இந்திர. 18.) 4. நண்டு (இலக். அக.); crab.

த.வ. நளி

*[Skt. vrščika > த. விருச்சிகம்]*

**விருட்சம்** *viruṭcam*, பெ. (n.) மரம்; tree. "விருட்சத்துக்கும் வல்லிசாதி சசிபங்களுக்கும் பிராணனு முள" (தக்கயாகப் 38, உரை.)

*[Skt. vṛksa > த. விருட்சம்].*

**விருட்சராசன்** *viruṭca-rāšan̠*, பெ. (n.) அரசமரம் (மூ.அ.); pipal.

*[Skt. vṛksa-rāja > த. விருட்சராசன்].*

**விருட்டி** *viruṭṭi*, பெ. (n.) மழை; rain. அதிவிருட்டி (குற்றா. தல. சிவபூசை. 46.).

*[Skt. vṛṣṭi > த. விருட்டி].*

**விருட்டிணி** *viruṭṭin̠i*, பெ. (n.) கண்ணபிரான் (இலக். அக.); Lord Krishnan.

**விருடகம்**[1] *virudagam,* பெ. (n.) எலி (அரு.நி.); rat.

**விருடகம்**[2] *virudagam,* பெ. (n.) பூனை (அரு.நி.); cat.

**விருடபம்** *virudapam,* பெ. (n.) எருது (யாழ். அக.); bull.

**விருடம்** *virudam,* பெ. (n.) 1. **விருடபம்** பார்க்க; see virudapam 2. எலி; rat. 3. தருமம்; virtue, justice. 4. மேன்மை; excellence.

**விருடலம்** *viruṭalam,* பெ. (n.) 1. குதிரை (யாழ். அக.); horse. 2. உள்ளி; garlic.

**விருடலோசனன்** *viruda-locaṉaṉ,* பெ. (n.) எலி (யாழ். அக.); rat.

**விருடாங்கம்** *virudāṅkam,* பெ. (n.) தாமிரபரணிப் பகுதி (பிரதேசம்) (நாமதீப. 503.); the region of the river Tāmiraparṇi.

**விருடியம்** *virudiyam,* பெ. (n.) பருத்திருக்கை; (நாமதீப. 769.) becoming fat or bulky.

*[**Skt.** vṛṣya > த. விருடியம்]*

**விருத்தக்கலித்துறை** *viruṭṭa-k-kalittuṟai,* பெ. (n.) கலித்துறைப்பா வகை; (சீவக.1, உரை.) a kind of kalitluṟai verse.

**விருத்தகங்கை** *viruṭṭa-kaṅkai,* பெ. (n.) கோதாவரி (சூடா.); the river Godāvari.

*[**Skt.** vṛddha-gaṅgā > த. விருதகங்கை]*

**விருத்தகந்தி** *viruṭṭa-kanti,* பெ. (n.) செய்யுட்கதியிற் பெரும்பாலும் பயின்று வரும் சொல் (வசனம்) (இலக். அக.); prose with rhymes and rhythms peculiarly appropriate to verse, poetic prose.

**விருத்தகிரி** *viruṭṭa-kiri,* பெ. (n.) **விருத்தாசலம்** பார்க்க; see

**விருத்தசங்கம்** *viruṭṭa-caṅkam,* பெ. (n.) கிளிஞ்சல் (சங்.அக.); mussel shell.

**விருத்தசம்பந்தம்** *viruṭṭa-campantam,* பெ. (n.) தகாததென்று விலக்கப்பட்ட முறை யினரை மணம்புரிகை; marriage with in the prohibited degrees of consanguinity, as invalid and condemned by law (R.F.).

**விருத்தசேதனம்** *viruṭṭa-cētaṉam,* பெ. (n.) ஆண்குறியின் முன்தோலை எடுத்துவிடுஞ் சடங்கு; circumcision.

**விருத்தபோசனம்** *viruṭṭa-pocaṉam,* பெ. (n.) பழைய சோறு (யாழ். அக.); cooked rice preserved in cold water.

**விருத்தம்**[1] *viruṭṭam,* பெ. (n.) வட்டம் (சூடா.); circle, anything circular. கருவிருத்தக் குழி நீத்த பின் (திவ். இயற். திருவிருத். தனியன்); 2. சொக்கட்டானாட்டத்தில் விழும் தாயவகை; a fall of dice which entitles the player to another throw. 3. பாவினம் மூன்றனுள் ஒன்று (யாப்.வி.56.); a kind of verse, one of three pāviṉam q.v. 4. ஒழுக்கம்; conduct *"விருத்தமாதவரை நோக்கி முறுவலன் விளம்ப லுற்றான்"* (கம்பரா. கங்கை. 41.); 5. செய்தி (யாழ். அக.); news. 6. தொழில்; (யாழ். அக.); work, employment. 7. ஒரு சிற்பநூல் (பொ.நி.); a treatise on architecture. 8. ஆமை (யாழ். அக.); tortoise. 9. வெள்ளெருக்கு (மலை.); white madar.

**விருத்தம்**[2] *viruṭṭam,* பெ. (n.) 1. மக்கட்பருவம் ஆறனுள் ஒன்றான மூப்பு. (சூடா.) old age, one of the six makkaṭ-paruvam. ஒரு விருத்தம்புக் குழலுறவீர் (திவ். இயற். திருவிருத். தனியன்); q.v. 2. பழமை; (வின்.) antiquity. 3. அறிவு (யாழ். அக.); knowledge, wisdom.

*[**Skt.** vṛddha > த. விருத்தம்]*

**விருத்தம்[3]** *viruttam,* பெ. (n.) 1. முரண்; contrariety, opposition. *"விருத்தம தணையும்"* (ஞான. 63,7); 2. முன்பகை (விரோதம்); hostility, enmity, hatred. 3. குற்றம்; fault. பேரறிவினார்கண்ணும்பட்ட விருத்தம் பலவானால் (பழமொ. 228); 4. பொல்லா வொழுக்கம் (திவ். இயற். திருவிருத். தனி. வியா.); wicked conduct. 5. இடையூறு; obstacle, hindrance. "அந்தக் காரியத்துக்கு விருத்தம் பண்ணுகிறான்" 6. ஏதுப் போலிகளு ளொன்று (மணிமே. 29, 192.); (Log.) a fallacy.

**விருத்தம்[4]** *viruttam,* பெ. (n.) கூட்டம்; multitude, host. *"விருத்தம் பெரிதாய் வருவானை"* (திவ். நாய்ச். 14, 7);

**விருத்தமல்லிகை** *virutta-malligai,* பெ. (n.) குட மல்லிகை; (மூ.அ.) Arabian jasmine.

**விருத்தவிலக்கணம்** *virutta-v-illakkaṇam,* பெ. (n.) பனுவல் (பிரபந்தம்) தொண்ணுற்றாறனுள் அரசனது வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடை இவ்வொன்பதனையும் பப்பத்து விருத்தத்தால் ஒன்பது வகையுறப் புகழ்ந்து பாடும் பனுவல் (பிரபந்தம்) (சது.); a poem dealing with the bow, sword, spear, sceptre, elephant, horse, country, capital city and liberality of a king, each being praised in a decade of stanzas of a particular rhythm, one of 96 pirapantam, q.v.

**விருத்தன்** *viruttaṉ,* பெ. (n.) 1. முதுமையோன்; aged person. 2. மேலோன்; great man. *"வானவிருத்தனே போற்றி"* (திருவாச. 5, 61).

**விருத்தாசலம்** *viruttacalam,* பெ. (n.) கடலூர் மாவட்டத்திலுள்ள ஒரு சிவதலம்; a Šiva shrine in the Cuddalore District.

த.வ. முதுகுன்றம், பழமலை

**விருத்தாசாரம்** *viruttācāram,* பெ. (n.) பழந்தொடர்பு (பூர்வாசாரம்); (C.G.) ancient custom followed by one's ancestors for generations.

**விருத்தாந்தம்** *viruttāntam,* பெ. (n.) 1. நிகழ்ச்சி (சம்பவம்); occurrence, incident, event. 2. வரலாறு; account, history. 3. செய்தி; tidings, news, rumour, report. 4. பொருள்; subject, topic. 5. கதை; (w.) fable, story. 6. இயல்பு (சுபாவம்); (யாழ். அக.) nature. 7. வகை; kind, sort. 8. விதம் (யாழ். அக.); manner. 9. முழுமை; (யாழ். அக.) fullness. entirety. 10. இளைப்பாறுகை; (யாழ். அக.) rest, leisure.

**விருத்தாப்பியம்** *viruttāppiyam,* பெ. (n.) முதுமை; (w.) old age.

**விருத்தான்னம்** *viruttāṉṉam,* பெ. (n.) **விருத்தபோசனம்** பார்க்க; (சங். அக.). see.

**விருத்தி[1]** *virutti,* பெ. (n.) 1. ஒழுக்கம்; conduct, behaviour. *"விருத்தி, வேதியரோ, டெதிர்மேயினான்"* (கம்பரா. குகப். 73). 2. இயல்பு (சுபாவம்) (யாழ். அக.); nature. 3. தொழில்; emloyment, business. விருத்தி மாதர் விலக்க (சீவக. 1374.); 4. தொண்டு; devoted service. *"கடிமலர்வாளெடுத்தோச்சி...... ருத்திகுழக்க வல்லோர்கட்கு"* (தேவா. 292, 8); devoted service. 5. வாழ்வு வழி (சீவனம்) means of livelihood. என் விருத்தி உஞ்சவிருத்தி; 6. வாழ்நிலைக்காக (சீவிதமாக) விடப்பட்ட நிலம்; grand of land for one's livelihood or maintenance, inam land. *"சைவனாகி நம் விருத்தியும் தவிர்க்கும்"* (பெரியபு. திருநாவுக். 82.); 7. அடிமை; (வின்.) slavery. 8. விரிவுரை (நன். 22); gloss, elaborate commentary. 9. உரியபொருள்; (அக.நி.)

proper meaning. 10. உரியசொல்; (அக.நி.) proper word. 11. சாத்துவரி, ஆரபடி, கைசிகி, பாரதி என நான்கு வகைப்பட்ட நாடகநூலின் நடை; (drama.) style of dramatic composition, of four kinds, viz, cāttuvati, ārapaṭi, kaiciki, pārati. சாத்துவதி, ஆரபடி, கைசிசி, பாரதி யென விருத்தி நான்கு வகைப்படும் (சிலப். 3, 13 உரை, பக். 82); 12. ஆசனம்; posture. *"ஒன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தி"* (சிலப். 8,25); 13. தூய்மை; neatness, cleanliness, (Nāñ). 14. வட்டம்; (யாழ். அக.) circumference, circle. 15. சொக்கட்டான் ஆட்டத்தில் தொடர்ச்சியாக விழுந் தாயம்; (வின்.) a series of throws in one's turn in dice play.

*[Skt. vṛtti > த. விருத்தி]*

**விருத்திக்கடன்** *virutti-k-kaṭaṉ,* பெ. (n.) வட்டிக்கு வாங்குங் கடன்; Interest-bearing debt. "குன்றாவிருத்திக் கடன்கொண்டு" (திருவிளை. உலவாக்கோட்டை. 7).

**விருத்திசந்திரன்** *virutti-cantiraṉ,* பெ. (n.) வளர்பிறை; waxing moon. (C.G.).

**விருத்திசூதகம்** *virutti-cūtakam,* பெ. (n.) குடும்பத்தில் குழந்தை பிறந்ததாலுண்டாந் தீட்டு; pollution on account of birth of a child in a family.

**விருத்தியன்** *viruttiyaṉ,* பெ. (n.) வேலையாள்; servant, slave. (w.).

**விருத்தியுபாயம்** *virutti-y-upāyam,* பெ. (n.) உயிர் வாழ்க்கைக்குச் (சீவனஞ்) செய்யும் வழி; means of livelihood.

**விருத்தியுரை** *virutti-y-urai,* பெ. (n.) விருத்தி[1], 8 பார்க்க; see virutti.

**விருத்திரன்** *viruttiraṉ,* பெ. (n.) விருத்திராசுரன் பார்க்க; see viruttirāšuran "ஈங்குவன் விருத்திரனென்ப" (திருவிளை. இந்திரன். 17)

**விருத்திராசுரன்** *viruttiracuraṉ,* பெ. (n.) இந்திரனால் (வதை) கொலையுண்ட ஓர் அசுரன்; an asura slain by Indra. *"வீரமிக்க விருத்திராசுரனைக் கொன்ற வோதரும் பழியாலஞ்சி"* (திருவாலவா. 1, 2).

**விருத்திராரி** *viruttirāri,* பெ. (n.) விருத்திராசுரனைக் கொன்றவனான இந்திரன் (திவா.); Indira, as the slayer of Virittirācuraṉ.

**விருத்துப்பட்டிகை** *virutti-p-paṭṭikai,* பெ. (n.) பழைய வரி வகை; an ancient tax.

**விருத்தூண்** *viruttūṇ,* பெ. (n.) புத்துணவு (இலக். அக.); fresh food.

**விருத்தை** *viruttai,* பெ. (n.) 1. அதிக வயதானவள் (பிங்.); aged woman. 2. ஐம்பத்தைந்து அகவையைக் கடந்தவள்; a woman past her 55th year. *"முதியளாம் விருத்தை தன்னை"* (கொக்கோ. 4,4) (Erot.)

**விருதம்** *virutam,* பெ. (n.) வெள்ளெருக்கு (சங். அக.); white madar

**விருதர்** *virutar,* பெ. (n.) வீரர்; warriors. *"வாளிகொண்ட விருதர்"* (பாரத. வாரணா. 76.).

**விருதா** *virutā,* பெ. (n.) வீண், வீணாய்; uselessness, fruitlessness; that which is vain or profitless; uselessly. *"விருதாவலைந் துழலு மடியேன்"* (திருப்பு. 102.).

**விருதாவளி** *virutāvaḷi,* பெ. (n.) அரசர் முதலியோர் பெறும் பட்ட வரிசை; detailed statement of titles.

**விருதாவன்** *virutāvaṉ,* பெ. (n.) பயனற்றவன்; good for-nothing fellow. *"போக்கிடமற்ற விருதாவனை ஞானிகள் போற்றுத லற்றது"* (திருப்பு. 266)

**விருந்தாவனம்** *viruntāvanam,* பெ. (n.) கண்ணபிரான் விளையாடியதும் யமுனைக்கரையி லுள்ளதுமான ஒரு தலம்; Bṛndāvanam, the scene of Kṛṣṇa's sports, near Gokula on the banks of the Jumna. *"விருந்தாவனத்தே கண்டோமே"* (திவ். நாய்ச். 14).

**விரேசனம்** *virēcanam,* பெ. (n.) 1. மலங்கழிகை purging, evacuation of bowels. *"கடுக்காய்கள் விரேசனத்தைப் பண்ணும்"* (ஞானவா. சிகித். 49) 2. பேதிமருந்து; purgative.

**விரேசி–த்தல்** *virēci-,* 4 செ.கு.வி. (v.i.) கழிச்சல்; to purge, have evacuations.

**விரோசனம்** *virosanam,* பெ. (n.) 1. கழிச்சல் (பேதி) மருந்து: purgative. *"மறுவறுவிரோசனந்தான் வருஷத்திரண்டு முறை"* (குரே. சத. 19); 2. பேதியாகை; purging. *"வசம்பைச் சுட்டருந்த ஓதிய விரோசன மொழியுமே"* (பாலவா. 1078.).

**விரோசனன்** *virosanan,* பெ. (n.) 1. சூரியன்; (பிங்.) sun. *"விரோசனன் சுதனை"* (பாரத. வாசுதே. 2); 2. சந்திரன் (யாழ். அக.); moon. 3. தீ அக்கினி (யாழ். அக.); agni. 4. மகாபலியின் தந்தையும் பிரகலாதனுடைய மகனுமான ஓரசுரன் (அபி. சிந்.); an asura son of Prahlāda and father of Bali.

**விரோதக்காரன்** *virota-k-kāran,* பெ. (n.) பகைவன்; enemy.

**விரோதகிருது** *virotakirutu,* பெ. (n.) **விரோதிகிருது** பார்க்க; see virodhikirtu.

**விரோதசிலேடை** *virōta-šilēṭai,* பெ. (n.) முன்னர் சிலேடிக்கப்பட்ட பொருள்களுள் ஒன்று பின்னர் வரும் பொருள்களோடு விரோதிப்பத் தொடுக்கப்படுஞ் சிலேடை (தண்டி. 75, 6); verbal antithesis following a verbal similitude.

**விரோதம்¹** *virōtam,* பெ. (n.) 1. பகை; hatred, animosity, enmity. 2. மாறுபாடு; contrariety, diversity. 3. **விரோதவணி** பார்க்க; (Rhet.) see virōdavani. 4. இருள்; (அக.நி.) darkness.

**விரோதம்²** *virōtam,* பெ. (n.) மயிர்; (அக.நி.) hair.

**விரோதம்பேசு–தல்** *virotam-pēcu-,* செ.கு.வி. (v.i.) 1. பொறாமை கொண்டு சொல்லுதல்; to speak enviously or spitefully. 2. எதிரிடையாகப் பேசுதல்; to speak against or in opposition.

**விரோதவணி** *virōta-v-aṇi,* பெ. (n.) சொல்லாலாவது பொருளாலாவது மாறுபாட்டுத் தன்மை தோன்ற உரைக்கும் அணி (தண்டி. 80); a figure of speech in which antithesis or opposition in words or in sense occurs.

**விரோதவுவமை** *virōta-v-uvamai,* பெ. (n.) உவமான வுவமேயங்கள் தம்முள் எதிர்மாறான (விரோத) குணமுடையனவாகச் சொல்லும் உவமை வகை; (தண்டி. 31,4); a kind of simile in which the objects compared with each other are described as having opposite characteristics.

**விரோதார்த்தம்** *virotārttam,* பெ. (n.) 1. எதிர்மாறான பொருள்; contrary meaning. 2. விடாப்பிடியாய் எதிர்க்கை; intentional opposition.

**விரோதி¹** *viroti,* பெ. (n.) 1. பகைவன் (சத்துரு); enemy. 2.ஆண்டறுபதனுள் இருபத்து மூன்றாவது (பெரியவரு.); the 23rd year of the Juiter cycle.

**விரோதி²–த்தல்** *viroti,* 4 செ.கு.வி. (v.i.) 1. பகைத்தல்; to hate. *"விரோதித்துவிரலிற் சுட்டி"* (சீவக. 3080); 2. முரண்படுதல்; to be contrary, inconsistent. *"நீ முன் சொல்லியதோடு பின் சொல்வது விரோதிக்கும்"*. 3. எதிர்த்து நிற்றல்; to oppose to with stand resist. (w)

**விரோதிகிருது** *virotikirutu,* பெ. (n.) ஆண்டறுபதனுள் நாற்பத்தைந்தாவது; (பெரியவரு.); the 45th year of the Jupiter cycle.

**விரோதிசுவரூபம்** *viroti-svarūpam,* பெ. (n.) மாலியத்தின் ஐந்து உண்மை (அர்த்தபஞ்சங்)களுள் வீடடைதற்கு இடையூறுயுள்ளதன் தன்மை; (அஷ்டாதச. பக். 25.) obstacle to final bliss, one of artta pañcakam. q.v.

**விவசாயம்** *vivaśayam,* பெ. (n.) 1. தொழில்; active occupation. 2. முயற்சி; effort. 3. வேளாண்மை; agriculture, cultivation. 4. வணிகம்; buying and selling, trade.

*[Skt. vyavasāya > த. விவசாயம்]*

**விவத்தை[1]** *vivāttai,* பெ.(n.) 1. முடிவு; settlement. 2. ஒழுங்குமுறை; settled principle.

*[Skt. vyava-sthā> த. விவத்தை].*

**விவரம்** *vivāram,* பெ.(n.) 1. தொளை (துவாரம்); fissure hole, cavity hollow. 2. மலைக்குகை; cave. 3. இடைவெளி; intervening space. 4. வரலாற்றுக் குறிப்பு; particulars, details.

**விவாகத்திரீ** *vivāgattri,* பெ.(n.) முறைப்படி திருமணம் செய்து கொண்ட மனைவி; lawfully wedded.

**விவாகம்** *vivāgam,* பெ.(n.) திருமணம்; marriage. *"விவாகமும் காருகத்தமும் கூறினமையும்"* (சிலப். 9,28. உரை).

*[Skt. vivāha> த. விவாகம்].*

**விவாதம்** *vivādam,* பெ.(n.) 1. தருக்கம்; dispute, wordy warfare. *"இருவரும் விவாதம் பண்ணி"* (உத்தரா. இலவண. 6) 2. அறமன்றத்தில் நடைபெறும் வழக்கு; legal dispute lawsuit.

*[Skt. vivāda> த. விவாதம்].*

**விவிலியமதம்** *viviliya-matam,* பெ. (n.) கிறித்தவ மதம்; christianity.

*[Gr. biblia+mata> த. விவிலியமதம்].*

**விவேகசிந்தாமணி** *vivēka-cintāmaṇi,* பெ. (n.) ஒரு வேதாந்த நூல்; (w) vēdānta philosophy.

**விவேகபருவம்** *vivēka-paruvam,* பெ. (n.) பகுத்தறியும் பருவம் (பிராயம்); (வின்.) age of discretion.

**விவேகம்** *vivēkam,* பெ. (n.) 1. பகுத்தறிவு; discrimination, the capacity to reason and distinguish. *"நித்திய வநித்தியங்க ணிண்ணயந் தெரிவிவேகம்"* (கைவல். தத். 8); 2. அறிவு (புத்தி)க் கூர்மை; ingenuity, penetration, right judgment. (w.) 3. பாயிரம்; preface of book.

**விவேகி[2]-த்தல்** *vivēki-,* 4 செ.கு.வி. (v.i.) பகுத்தறிதல்; to discriminate, to understand with discrimination.

**விவேசனம்** *vivēcaṉam,* பெ. (n.) பகுத்தறிவு; discrimination, distinguishing truth from falsehood, reality from semblance.

**வினோத்தி** *viṉoddi,* பெ. (n.) ஒரு முக்கியப் பொருள் பிறிதொரு முக்கியப் பொருளோடு பொருந்தாதாயின் முக்கியத் தன்மையைப் பெறாதெனக் கூறும் அணிவகை; (மாறனலங். 236, பக். 355.). a figure of speech in which a thing or fact is said to lose its importance if it is not accompanied by another thing or fact.

**வினோதக்கூத்து** *viṉota-k-kūttu,* பெ. (n.) அரசர் முன்பு நடிக்கும் வெற்றிக் கொண்டாட்டக் கூத்து; (சிலப். 3, 13, உரை, பக். 81). dance performed in the presence of kings in celebration of their victories.

**வினோதபைரவம்** *viṉotapairavam,* பெ. (n.) மருந்துக்குளிகை வகை; (பதார்த்த. 1209.) a medicinal pill.

**வினோதம்** *vinetam,* பெ. (n.) 1. அவா (யாழ். அக.); desire. 2. இயற்கைக்கு மாறானது; (யாழ். அக.) quaintness, quixotism.

**வினோதன்** *vinotan,* பெ. (n.) 1. ஒன்றில் ஈடுபட்டு அதிலேயே பொழுது போக்குபவன் (யாழ். அக.); votary, devotee. 2. அகமகிழ்வோன் (உற்சாகி); jolly person.

**வினோதி¹-த்தல்** *vinoti-,* 4 செ.கு.வி. (v.i.) விளையாடுதல்; to be playful. *"மெல்ல நடந்து வினோதித்து"* (திருக்காளத். பு. தாருகா. 17.).

**வினோதி²** *vinoti,* பெ. (n.) **வினோதன்** பார்க்க (யாழ். அக.); see vinōdan

**வேசியாசாரியன்** *vēciyācāriyan,* பெ. (n.) நட்டுவன் (யாழ். அக.); dancing master.

*[Skt.vēšyāacārya> த. வேசியாசாரியன்]*

**வேணுகானம்** *vēnu-kānam,* பெ. (n.) புல்லாங்குழலிசை; music of the reed-pipe.

**வேணுகோபாலன்** *vēnu-kopālan,* பெ. (n.) புல்லாங்குழல் வாசிக்குங் கண்ணபிரான்; kṛṣṇa, as a cowherd playing the reed-pipe.

**வேணுசம்** *vēnucam,* பெ. (n.) மூங்கிலரிசி; (இலக். அக.) bamboo seed.

**வேணுநாதன்** *vēnu-nātan,* பெ. (n.) குழல் வாசிப்போன்; (யாழ். அக.) flute-player.

**வேணுபலம்** *vēnu-palam,* பெ. (n.) **வேணுசம்** பார்க்க; (மூ. அ.) see vēnucam

**வேத்திரப்படை** *vēttira-p-patai,* பெ. (n.) பிரம்பாகிய ஆயுதம்; cane as a weapon. *"வேத்திரப்படையாற் றாக்கி"* (திருவிளை. பாயி. 17,.

**வேத்திராசனம்** *vēttirācanam,* பெ. (n.) பிரப்பம்பாய் (இலக். அக.); rattan mat.

*[Skt.vētra+āsana> த. வேத்திராசனம்]*

**வேதக்கட்டி** *vēta-k-katti,* பெ. (n.) வேதத்தை நன்கு ஓதியவன்; one who has learned the Vēdas by heart.

**வேதக்காரன்** *vēta-k-kāran,* பெ. (n.) கிறித்தவன்; christian.

**வேதக்கொடியோன்** *vēta-k-kotiyon,* பெ. (n.) துரோணாசாரியன்; (பிங்.) Dronācārya.

**வேதகம்¹** *vētakm,* பெ. (n.) 1. வேறுபடுத்துகை; distingushing. *"உயிரு மாயா வுடலையும் வேதகஞ்செய் தாணடவங்கணனே"* (கோயிற்பு. இரணிய. 56); 2. வேறுபாடு; differentiating, change, modification. *"விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே"* (திருவாச. 49, 1); 3. பகைமை (விரோதம்); dissension, disunion. *"அவனால் இவ்வளவு வேதகமு முண்டாயிற்று"* 4. இரண்டகம் (துரோகம்); treachery treason. வேதகமுண்டானால் இராச்சியம் சளைக்கும். 5. புடமிடுகை; refining, as of gold. 6. புடமிட்ட பொன்; refined gold. *"விளக்காகின்ற வேதகமே"* (தாயு. பெற்றவட் 10.); 7. இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கும் பண்டம்; agent to transmute baser metals into gold. *"இன்புறு வேதகத் திரும்பு பொன்னானாற் போல"* (பெரியபு கண்ணப். 154); 8. சிறுதுகில் (பிங்.); small fine cloth.

**த.வ. வேறாக்கம்**

*[Skt.bhēdaka> த. வேதகம்]*

**வேதகம்²** *vētakam,* பெ. (n.) 1. கர்ப்பூரம் (இலக். அக.); camphor 2. தவசம், (தானியம்) (யாழ். அக). grain.

**வேதகம்³** *vētagam,* பெ. (n.) வெளிப்படுத்துகை; disclosure. "இரகசியத்தை வேதகம் பண்ணலாகாது"

**த.வ. வெளிப்பாடு**

**வேதகருப்பன்** *vēta-k-karuppan,* பெ. (n.) 1. பிரமன் (யாழ். க.); Brahma. 2. பார்ப்பான்; Brahmin.

*[வேதம் + கருப்பன்]*

*[**Skt.** vēda> த. வேதம்]*

**வேதகலாபம்** *vētakalāpam,* பெ. (n.) மதப்பற்றுக் காரணமாக விளைக்கும் துன்பம் (இம்சை); (வின்.) religious persecution.

**வேதகன்¹** *vētakaṉ,* பெ. (n.) ஒன்றின் தன்மையை வேறுபடுத்துவோன் one who transmutes or changes the nature of things. *"போதகன் வேதகன் பொருவிலன்"* (சிவதரு. கோபுர. 104.).

**வேதகன்²** *vētagaṉ,* பெ. (n.) அறிவிப்பவன்; one who reveals. *"வித்தகன் வேதக னாதி விளம்பிய வாய்மொழி"* (சிவதரு. சிவஞானதான. 21).

*[**Skt.** vēda-ka> த. வேதகன்]*

**வேதகிரி** *vēta-kiri,* பெ. (n.) திருக்கழுக்குன்றம்; the hill of Tiru-k-kaḻu-k-kuṉṟam.

**வேதகீதன்** *vēta-kītaṉ,* பெ. (n.) (வேதத்தினாற் புகழ்ந்து பாடப்படுவோன்) கடவுள்; god as praised in the vēdas. *"வேதியா வேதகீதா (தேவா. 870, 1) நச்சுநா கணைக்கிடந்த நாதன் வேத கீதனே"* (திவ். திருச்சந். 117);

**வேதகோட்டி** *vēta-koṣṭi,* பெ. (n.) கோயில் முதலியவற்றில் வேதம் ஓதும் பார்ப்பனர் தொகுதி; band of brahmins chanting vēdas, in temple, etc.

**வேதங்கம்** *vētaṅkam,* பெ. (n.) ஒருவகைத் துகில் (சிலப். 14, 108, உரை.); a kind of fine cloth.

**வேதசங்கிதை** *vēta-caṅkitai,* பெ. (n.) சிறுசிறுவாக்கியமாகவன்றித் தொடர்ச்சியாக ஓதப்படும் வேதப்பகுதி; portions of the vedas recited in long sections.

*[**Skt.** vēda-samhita> த. வேதசங்கிதை]*

**வேதசம்¹** *vētacam,* பெ. (n.) 1. பிரம்புவகை (இலக். அக.); rattan palm. 2. நாணற்புல் (ஈடு.); sacred grass.

**வேதசம்²** *vētacam,* பெ. (n.) பெருவிரலடி (யாழ். அக.); part of the hand under the root of the thumb.

*[**Skt.** vēdhasa> த. வேதசம்]*

**வேதசாட்சி** *vēta-catci,* பெ. (n.) மதத்தை நிலைநாட்டுவதற்காக உயிர்கொடுத்தவன்; martyr for religion. R.C.

**வேதசாத்திரம்** *vēta-sāttiram,* பெ. (n.) 1. வேதமாகிய நூல்; the vēdas. 2. வேதங்களும் அதன் அங்கங்களாகிய சாத்திரங்களையும் நன்கு ஓதியவன்; the vedas and the sastras. 3. சமயஞானம்; theology. (chr).

**வேதசாத்திரி** *vēta-sāttiri,* பெ. (n.) 1. வேதங்களையும் சாத்திரங்களையும் நன்கு ஓதியவன்; (வின்.) one learned in the vedas and sastras.

**வேதசாரம்¹** *vēta-cāram,* பெ. (n.) 1. வேதத்தின் சாரமானது; the essence of the vedas. *"ஆகையால் இது சகல வேதசாரம்"* (அஷ்டாதச. முமுட்சுப். திருமந்திர. 34). 2. **வேதசிரசு** பார்க்க; (சங். அக.) see vētaciracu.

**வேதசாரம்²** *vētacāram,* பெ. (n.) **வேதசம்¹** பார்க்க; (சங். அக.) see vēdacam¹

**வேதசிரசு** *vēta-ciracu,* பெ. (n.) உபநிடதம் (சி.போ.வ.தீ. 32.); the upanisads.

*[**Skt.** vēda-širas> த. வேதசிரசு]*

**வேதஞ்ஞன்** *vētaññaṉ,* பெ. (n.) வேதமறிந்தவன் (இலக். அக.); vedic scholar.

*[Skt. vēda-jña > த. வேதஞ்ஞன்]*

**வேதத்தன்** *vētattaṉ,* பெ. (n.) பிரமன்; Brahmā. *"வெங்கா தராவுக்குச் செய்தானிலைமலர் வேதத்தனே"* (தனிப்பா. 1, 225, 16.).

**வேதத்திரயம்** *vēta-t-tirayam,* பெ. (n.) இருக்கு யசு சாமம் என்ற மூன்று வேதங்கள்; the three Vēdas rukku, yacu, cāmam.

**வேததத்துவம்** *vēta-tattuvam,* பெ. (n.) வேதத்தின் மெய்ப்பொருள்; (யாழ். அக.) the Vēdic truth.

**வேதநாதன்** *vēta-nātaṉ,* பெ. (n.) **வேதநாயகன்** பார்க்க; see vēda-nāyagan. *"வேதாநாரதனைப் பாடலே கடன்"* (திருவிளை. விறகு. 69);

**வேதநாயகன்** *vēta-nāyagaṉ,* பெ. (n.) (வேதங்களுக்குத் தலைவன்) கடவுள்; god, as the lord of thevēdas. *"வேதநாயகன் மார்பகத் தினிது வீற்றிருக்கும் ஆதிநாயகி"* (கம்பரா. அகலிகைப் 16.).

**வேதநாயகி** *vēta-nāyagi,* பெ. (n.) 1. பார்வதி; Pārvati. *"வேதநாயகி தோகை விழுங்கவே" (தக்கயாகப் 609).* 2. இலக்குமி; Laksmi.

**வேதநாவர்** *vēta-nāvar,* பெ. (n ) பிராமணர்; Brahmins *"வேதநாவர் விரும்புந் திருக் கண்ணபுரத் தாதியானை"* (திவ். திருவாய். 9, 10, 9).

**வேதநீயம்** *vētaniyam,* பெ. (n.) எண்குற்றங்களுள் ஒன்றாய் இன்ப துன்பங்களை நுகர்விக்கும் கருமம் (பிங்.) (சிலப். 29, 277 உரை.); the karma which causes one of experience pleasure and pain, one of eṅkuṟṟam.

**வேதநூ**ட *vēta-nūl,* பெ. (n.) **வேதசாத்திரம்** பார்க்க; see vedacāstiram. *"வேதநூற் பிராய நூறு"* (திவ். திருமாலை.3)

**வேதப்பிரமாணம்** *vēta-p-pirāmāṇam,* பெ. (n ) வேதமாகிய அளவை; the Vēdas, considered as a source of right knowledge.

**வேதப்பிரமாணியம்** *vēta-p-pirāmāṇiyam,* பெ. (n.) வேதம் பிரமாணமாயிருக்குந் தன்மை; the authority or evidence of the Vēdas. *"பௌத்தர் வேதப்பிராமாணியம் கொள்வதில்லை"*

**வேதப்பிரான்** *vēta-p-pirāṉ,* பெ. (n.) **வேதநாயகன்** பார்க்க; see vēda-nāyagan. மெய்க்கொண்டு வந்து புகுந்து வேதப்பிரானார் கிடந்தார் (திவ். பெரியதி. 5,2,1).

**வேதப்புரட்டு** *vēta-p-puraṭṭu,* பெ. (n.) 1. வேதவாக்கியங்களைப் புரட்டிக் கூறுகை; tampering with the Vēdas. 2. புறமதம்; Heresy.

**வேதபாகியம்** *vēta-pākiyam,* பெ. (n.) வேதத்துக்குப் புறம்பானது; that which is outside the authority of the Vēdas.

*[Skt. vēda+bāhya > த. வேதபாகியம்]*

**வேதபாகியன்** *vēta-pākiyaṉ,* பெ. (n.) வேதத்துக்குப் புறம்பானவன்; one who does not believe in the authority of the Vēdas.

**வேதபாடசாலை** *vēta-pādasālai,* பெ. (n.) வேதங்கள் கற்பிக்கப்படும் பள்ளிக்கூடம்; school where the Vēdas are taught.

**வேதபாடம்** *vēta-pādam,* பெ. (n.) 1. வேதமோதுகை; study of the Vēdas. 2. வேத மோதும் முறை; the mode of reciting the Vēdas.

**வேதபாரகன்** *vēta-pārakaṉ,* பெ. (n.) 1. (வேதங் கரைகண்டவன்) பிராமணன்; brahmin, as well versed in the Vēdas. மணிமுத்தின் சிவிகை நின்றும் வேதபாரக ரிழிந்து; (பெரியபு. திருஞான. 1019). (பிங்.) 2. யூதவேதத்தை விளக்குபவன்; study of the Vēdas. 2. வேத மோதும் முறை; scribe, expounder of the jewish law.

**வேதபாராயணம்** *vēta-pārāyaṇam*, பெ. (n.) கோயில் முதலிய இடங்களிற் பிராமணர் வேதத்தை ஓதுகை; chanting of the Vēdas, in temple, etc., by Brahmins.

**வேதபாராயணன்** *vēta-pārāyaṇaṉ*, பெ. (n.) வேதத்தை ஓதுபவன் (அஷ்டப். திருவேங்கடமா. காப்பு); reciter of the Vēdas.

**வேதபீசம்** *vēta-pīcam*, பெ. (n.) வேதமூலமான பிரணவ மந்திரம்; the mystic letter om or pranava, as the source or origin of the Vēdas.

**வேதம்[1]** *vētam*, பெ. (n.) 1. இந்து சமயங்களுக்குரிய சுருதி (பிங்.); the Vēdas, the sacred books of the Hindus. 2. விவிலியநூல்; the bible. 3. சாத்திரம்; art of science. "ஆயுர்வேதம், தனுர்வேதம்" 4. சமயமுதனூல்; religious code of any sect. 5. அறிவு (யாழ். அக.); knowledge. 6. விவரிக்கை (யாழ். அக.); exposition.

**வேதம்[2]** *vēṭam*, பெ. (n.) 1. துளையிடுகை; boring, drilling. *"வேத நன்மணி"* (கம்பரா. மீட்சிப். 29). 2. ஆழம் (யாழ். அக.); depth.

**வேதமத்தியம்** *vēṭa-mattiyam*, பெ. (n.) தாளத்துக்குரிய யதியுள் ஒன்று (பரத. தாள. 52.); a yati in time-measure.

**வேதமந்திரம்** *vēṭa-mantiram*, பெ. (n.) வேதத்திலுள்ள மந்திரம்; Vēdic mantra.

**வேதமாதா** *vēṭa-mātā*, பெ. (n.) (வேதங்களின் தாய்) காயத்திரி மந்திரம்; Gāyatri mantra, as the mother of the Vēdas. *"வேதமாதவெனு விமலமுற்றிடும் .......காயத்திரி"* (சேதுபு. சேதுபல. 131.);

**வேதமாந்தர்** *vēṭa-māntār*, பெ. (n.) பார்ப்பனர்; brahmins. *"வேதமாந்தர் வேந்தரென்று"* (நம்பியகப். 75.).

**வேதமார்க்கம்** *vēṭa-mārkkam*, பெ. (n.) வேதத்திற் சொல்லப்பட்ட மதம் (பிங்.) (தக்கயாகப் 7, உரை); Vēdic religion or faith.

**வேதமுதல்வன்** *vēṭa-mutalvaṉ*, பெ. (n.) 1. கடவுள்; God. *"வேதமுதல்வனென்ப தீதற விளங்கிய திகிரியோனே"* (நற். 1) 2. பிரமன்; Brahma. *"வேதமுதல்வற் பயந்தோன்"* (சிலப். 14, 48.);

**வேதமுதல்வி** *vēṭa-mutalvi*, பெ. (n.) 1. நாமகள் (சரசுவதி); Sarasvatī 2. திருமகள் இலக்குமி; Lakṣmī. 3. மலைமகள், பார்வதி; Pārvatī.

**வேதமுனி** *vēṭa-muṉi*, பெ. (n.) **வேதவியாசன்** பார்க்க; see vēda-vīyacan *"வேதமுனி சூதமுனி"* (திருக்காளத். பு. அவையடக். 1).;

**வேதர்** *vēṭar*, பெ. (n.) பிராமணர்; Brahmins. *"வேதராரத்தனர்"* (கந்தபு. தெய்வயா. 195);

*[Skt. vēda > த. வேதம் – வேதர்]*

**வேதரஞ்சகன்** *vēṭa-rañcakaṉ*, பெ. (n.) பிரமன்; Brahmā. *"வேதரஞ்சகன் மால்புரந்தான்"* (சௌந்த. 26.);

**வேதவாக்கியசொரூபம்** *vēṭa-vākkiyacorūpam*, பெ. (n.) விதிவாதம் அர்த்தவாதம், மந்திரவாதம், நாமதேயம் என்று நான்கு வகைப்படும் வேதவாக்கிங்களின் இயல்பு; (விவேகசிந். வேதாந்தபரிச். 5.); nature of Vēdic text, of four kinds, viz., viti-vātam, arttaavātam, mantira-vātam, nāmatēyam.

**வேதவாக்கியம்** *vēṭa-vākkiyam*, பெ. (n.) 1. வேதத்திலுள்ள சொற்றொடர்; Vēdic text. 2. உண்மை; gospel. *"அவன் சொல்வது வேத வாக்கியமாக வழங்குகின்றது"*

**வேதவாக்கு** *vēṭa-vākku*, பெ. (n.) **வேதவாக்கியம்** பார்க்க; see vēda-vākkiyam

**வேதவாணர்** *vēṭa-vākku*, பெ. (n.) பார்ப்பனர்; Brahmins. வேதவாணர் .........நீதியால் வணங்குகின்ற நீர்மை (திவ். திருச்சந். 9).

**வேதவாதம்** *vēṭa-vātam*, பெ. (n.) வைதிக மதத்தைப்பற்றிய வாதம்; exposition of the Vēdic religion. வேதவாதச் சருக்கம் (நீல.)

**வேதவிண்ணப்பம்** *vēṭa-viṇṇappam*, பெ. (n.) சிறப்பான காலங்களிற் கோயில் முதலிய இடங்களில் வேத மோதுகை; the chanting of the Vēdas, in temples, etc. on ceremonial occasions.

**வேதவித்து** *vēṭavittu*, பெ. (n.) 1. வேதங்களை நன்கறிந்தவன்; one who is learned in the Vēdas. *"வேதவித்தாய மேலோன் மைந்த"* (கம்பரா. பாசு. 36); 2. கடவுள்; God. *"வேதியனை வேதவித்தை"* (தேவா. 162, 7);

**வேதவியாக்கியானம்** *vēṭa-viyākkiyāṉam*, பெ. (n.) 1. வேதத்தின் விளக்கவுரை; one commentaries on the Vēdas. 2. விவிலியநூற்பொருளை விவரிக்கை; expounding the Bible. (வின்.)

**வேதவியாசன்** *vēṭa-viyācaṉ*, பெ. (n.) 1. (வேதத்தைத் தொகுத்தோன்) வியாச முனிவன் (தக்கயாகப் 334, உரை.); Vyāsa, as the compiler of the Vēdas.

**வேதவியாதன்** *vēṭa-viyātaṉ*, பெ. (n.) **வேதவியாசன்** பார்க்க; (மணி. 27, 5). see vēda-viyācan

**வேதவிருத்தம்[1]** *vēṭa-viruttam*, பெ. (n.) 1. வேதத்துக்கு மாறானது; that which is contrary to or against the Vēdas.

**வேதவிருத்தம்[2]** *vēṭa-viruttam*, பெ. (n.) வேதபோதனை (யாழ். அக.); teaching of the Vēdas.

*[Skt. vēda + vrtta > த. வேதவிருத்தம்]*

**வேதவிருத்தி** *vēṭa-virutti*, பெ. (n.) வேதமோதற்காக அளிக்கப்படும் இறையிலி நிலம்; (Insc.) Inam land for reciting the Vēdas

**வேதவீணை** *vēṭa-viṇai*, பெ. (n.) வீணைவகை; a kind of viṇai. *"நாரதாதிகள் வேதவீணை தொடங்கவே"* (தக்கயாகப். 623, விசேடக்.);

**வேதவேத்தன்** *vēṭavēttaṉ*, பெ. (n.) **வேதவேத்தியன்** பார்க்க; வேதவேத்தனு மவன் மலர்த் தாண்மிகை வீழ்ந்தான் (கம்பரா. மீட்சிப். 116.) see vēda-vēttiyan.

**வேதவேத்தியன்** *vēṭa-vēttiyaṉ*, பெ. (n.) வேதத்தினாலே அறியக்கூடியவனான கடவுள்; God, as knowable through the Vēdas.

**வேதவேதாந்தன்** *vēṭa-vētāntaṉ*, பெ. (n.) கடவுள்; God, as revealed in the Vēdas and the Vēdāntas. *"விண்ணிலா ரறிகிலா வேதவேதாந்தனூர்"* (தேவா. 399,4);

**வேதவொலி** *vēṭa-v-oli*, பெ. (n.) வேதத்தை யோதும் ஒலி; the sound of chanting the Vēdas. *"வேதவொலியும் விழாவொலியும்"* (திவ். திருவாய். 7,3,1);

**வேதன்** *vēṭaṉ*, பெ. (n.) 1. பிரமன் (பிங்.); brahmā. 2. கடவுள்; God. *"வேதனை வெண்புரி நூலனை"* (திவ். இயற். திருவிருத். 79); 3. வியாழன் (பிங்.); Brhaspati.

**வேதனம்[1]** *vēṭaṉam*, பெ. (n.) 1. கூலி; hire. (Loc). 2. கூலியாகக் கொடுக்கப்படும் சம்பளம்; salary, monthly wages.

**வேதனம்[2]** *vēṭaṉam*, பெ. (n.) 1. அறிவு; knowledge, wisdom. வேதனவடிவானான் (ஞானவா. உத்தா. 68); 2. வேதம்; the Vēdas. வேதனத்ரய வேளே நமோநம (திருப்பு. 996) 3. உணர்ச்சி (சுக்கிரநீதி. 98); feeling, sensation. 4. வேதனை (யாழ். அக.); pain, torment, agony.

**வேதனம்[3]** *vēṭaṉam*, பெ. (n.) பொன் (யாழ். அக.); gold.

**வேதனம்[4]** *vēṭaṉam*, பெ. (n.) துளைக்கை; piercing, perforating. கர்ண வேதனச் சடங்கு.

**வேதனி** *vēṭaṉi*, பெ. (n.) யானையின் காது (செவி)களைத் தொளையிடுங் கருவி (யாழ். அக.); an instrument for perforating elephant's ear.

**வேதாக்கினி** *vēṭākkiṉi,* பெ. (n.) வேதமந்திரத்தினால் வளர்க்கப்படும் காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி என்னும் மூவகைத் தீ (அக்கினி); sacred fire, of three kinds, viz., kāruka-pattiyam, ākavaṉiyam, taṭciṇākkiṉi.

*[Skt. vēdagni > த. வேதாக்கினி]*

**வேதாகமம்** *vēṭākamam,* பெ. (n.) 1. வேதமும் ஆகமமும்; the Vēdas and the Āgamas. *"வேதாகமங்கள் விரிப்போரும்"* (அருட்பா, நெஞ்சறி. 668); 2. விவிலிய நூல்; the Bible. (Chr).

**வேதாங்கம்** *vēṭākam,* பெ. (n.) சிட்சை வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம் என ஆறுவகைப்பட்ட வேதப் பொருளை யுணர்தற்குரிய கருவி; (மணி. 27, 100 - 102, உரை). works, regarded as helps to the study of the Vēdas six in number, viz., ciṭcai, viyākaraṇam, cantacu, niruttam, cotiṭam, kaṟpam.

**வேதாசாரியர்** *vēṭācāriyar,* பெ. (n.) வேதப்பொருளைக் கற்பிக்கும் (உபதேசிக்கும்) ஆசிரியர்; preceptor who teaches the Vēdas.

**வேதாத்தியயனம்** *vēṭāttiyaṉam,* பெ. (n.) வேதமோதுகை; chanting of the Vēdas.

**வேதாத்தியாபகன்** *vēṭāttiyāpakaṉ,* பெ. (n.) வேதத்தை யோதுவிப்பவன்; on who teaches the Vēdas.

**வேதாத்தியாபனம்** *vēṭāttiyāpaṉam,* பெ. (n.) வேதமோதுவிக்கை; teaching the Vēdas.

**வேதாத்தியாயி** *vēṭāttiyāyi,* பெ. (n.) வேதமோதுவோன்; one who chants the Vēdas.

**வேதாந்தகூத்திரம்** *vēṭānta-cūttiram,* பெ. (n.) வியாசமுனிவர் இயற்றிய உத்தரமீமாஞ்சை சூத்திரம்; a treatise on Vēdānta by Vyāsa, in the form of sūtras.

**வேதாந்தசூளாமணி** *vēṭānta-cūḷāmaṇi,* பெ. (n.) சிவப்பிரகாசர் இயற்றிய வேதாந்தசமய நூல்; a metaphysical treatise on the Advaita philosophy, by Civappirakācar.

**வேதாந்ததேசிகர்** *vēṭānta-tēcikar,* பெ. (n.) 14ஆம் நூற்றாண்டில் விளங்கியவரும் மாலிய (வைஷ்ணவ)ருள் வடகலையாரால் தலைமையகப் போற்றப்படுபவருமான மாலிய (வைஷ்ண)வாசாரியர் (தேசிகப். வாழித். 3.); a famous Vaiṣṇava acarya who lived in 14th C., specially revered by the vatakalai sect of Vaiṣṇavites.

**வேதாந்தம்** *vēṭāntam,* பெ. (n.) 1. உபநிடதம்; the upaniasads, as the concluding portions of Vēdas. *"வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை"* (திவ். பெரியாழ். 4,3,11); 2. வியாசராற் செய்யப்பட்டதும் உபநிடதங்களின் பொருளைக் கொண்டதுமான வேதாந்தசூத்திரத்திற் கூறும் உத்தரமீமாஞ்சை மதம் (தக்கயாகப். 246, உரை.); the Uttara-mīmāmsā system of philosophy founded by vyāsa and expounded in his vēdānta sūtras, as containing the essence of the upanisads.

**வேதாந்தமோது-தல்** *vēṭāntām-ōtu,* 5 செ.கு.வி. (v.i.) 1. உத்தரமீமாஞ்சை கற்றல்; to study the Vēdānta. 2. ஞானிபோலத் தத்துவம் பேசுதல்; to speak with affected wisdom or spirituality. நீ என்னிடத்து வேதாந்தமோத வேண்டாம்.

**வேதாந்தாசாரியர்** *vēṭāntāśāriyar,* பெ. (n.) **வேதாந்ததேசிகர்** பார்க்க; see Vēdanta-tēcikar. (தேசிகப். வாழித். 5.)

**வேதாந்தி** *vēṭānti,* பெ. (n.) 1. உத்தரமீமாஞ்சையாகி வேதாந்தக் கொள்கையினன்; follower of the Vēdānta or Uttara-mīmāṃsā system, of philosophy. 2. அத்துவைதி (சி.சி. அளவை, 1, மறைஞா.); follower of the Advaita system. 3. உலகப் பற்றற்றவ-ன்-ள்; unworldly person.

**வேதாப்பியாசம்** *vēṭāppiyācam,* பெ. (n.) வேதங்களைப் பயிலுகை; learning the Vēdās.

**வேதாரம்பம்** *vēṭārampam,* பெ. (n.) சிராவணதினத்தினன்று வேதாத்தியயனந் தொடங்குஞ் சடங்கு; the ceremony of beginning the study of the Vēdās, on the Upakarma day.

**வேதாளம்** *vēṭāḷam,* பெ. (n.) 1. பேய் (திவா.); demon, ghost, goblin, vampire. 2. பிசாசு; devil. *"வேதாள கடகமேய மாயோளே"* (தக்கயாகப். 104.).

**வேதாளி** *vēṭāḷi,* பெ. (n.) காளி (பிங்.); Kali.

*[Skt. vētāli> த. வேதாளி]*

**வேதாளிகர்** *vēṭāḷikar,* பெ. (n.) **வைதாளிகர்** பார்க்க; (சிலப். 5, 48.) (பிங்.) see vaidāḷigar.

**வேதாளியர்** *vēṭāḷiyar,* பெ. (n.) **வைதாளிகர்** பார்க்க; (சிலப். 5, 48.) (பிங்.) see vaidāḷigar.

**வேதி¹** *vēṭi,* பெ. (n.) 1. அறிந்தவன்; one who knows. *"வேதிபோற்றி விமலாபோற்றி"* (திருவாச. 4, 106.); 2. பிரமன் (அரு.நி.); Brahmā. 3. பண்டிதன் (இலக். அக.); learned person.

**வேதி²** *vēṭi,* பெ. (n.) 1. மணம் முதலிய சடங்கு நிகழ்த்தும் மேடை; low platform within a house, for sacrifice, weddings, etc., *"மைந்தனைச் செம்பொன்வேதி யெறிக்குங் கிரணமணிப் பீடம தேற்றினரே"* (பாரத. திரௌ. 91) 2. **வேதிகை¹** பார்க்க; see vētigai. கீதசாலை வேதிநிறைய (பெருங். உஞ்சைக். 34, 224.); 3. மதில் (சூடா.); outer wall of a fortification; compound wall.

**வேதி³-த்தல்** *vēṭi,* 4 செ.கு.வி. (v.i.) 1. வேறுப்படுத்துதல் (யாழ். அக.); to cause change. 2. தாழ்ந்தவற்றை யுயர்பொருளாக மாற்றுதல்; to change, transmute, as baser metals. *"புகலிக்கிறை ........வேதிக்க வுடம் பொரு பொன்மயமாயொளிவிட்டு"* (தக்கயாகப். 217). வெந்தழலி னிரதம்வைத் தைந்து லோகத்தையும் வேதித்து விற்றுண்ணலாம் (தாயு. தேசோ. 8.); 3. முரண் (விரோதப்)படுத்துதல்; to render hostile.

**வேதி⁴** *vēṭi,* பெ. (n.) தாழ்ந்தவற்றை யுயர்பொருளாக மாற்றுகை; transmuting. "குளிகை கொடு பரிசித்து வேதி செய்து" (தாயு. சின்மயா. 7);

**வேதி⁵-த்தல்** *vēṭi,* 4 செ.கு.வி. (v.i.) நலிதல்; to oppress. *"வேதியா நிற்கு மைவரால்"* (திவ். திருவாய். 7,1,3).

**வேதிகை¹** *vēṭikai,* பெ. (n.) 1. திண்ணை (பிங்.); platform, pial. *"பவளத் திரள்காற் பைம் பொன் வேதிகை"* (சிலப். 5, 148). 2. மணமேடை; (பிங்.) marriage dais. 3. காலுள்ள பீடம் (கோயிலொ.); stool, pedestal. 4. பலிபீடம் (யாழ். அக.); altar, raised platform for oblations of rice, etc., in temples. 5. பூசை செய்யும் இடம்; (Loc) (Šaiva.) place of worship. 6. பலகை (அக. நி.); plank. 7. தெரு (பொதி. நி.); street.

*[Skt. vēdika> த. வேதிகை]*

**வேதிகை²** *vēṭikai,* பெ. (n.) 1. வேறுபடுத்துகை; transmuting. *"வேதிகை செய்தெய்வமணி கொல்லோ"* (கம்பரா. உருக். 68); 2. கேடகம்; (பிங்.) shield. 3. அம்பு (பொதி. நி.); arrow.

*[Skt. vēdika > த. வேதிகை]*

**வேதித்தார்** *vēṭittār,* பெ. (n.) பகைவர்; enemies. *"வேதித்தார் புரமூன்றும்"* (தேவா. 159, 9);

**வேதிதம்** *vēṭitam,* பெ. (n.) 1. துளைக்கை; perforating, drilling. 2. துளையுடைப்பொருள்; tube.

*[Skt. vēdika > த. வேதிதம்]*

**வேதிப்பான்** *vēṭippāṉ,* பெ. (n.) வேதகஞ்செய்வோன்; one who transmutes. *"தானெல்லாம் வேதிப்பானாகி"* (சி.சி.11, 12);

**வேதியன்**[1] *vēṭiyaṉ,* பெ. (n.) 1. பார்ப்பனன்; Brahmin. *"நான்மறை வேதியர்தேத்து"* (திருவாலவா. 40,2) 2. பிரமன்; Brahmā. *"வேதியன் முதலாவமரரும்"* (கல்லா. 25 13) 3. கடவுள்; God. *"வேதியா வேதகீதா"* (தேவா. 870, 1).

**வேதியன்**[2] *vēṭiyaṉ,* பெ. (n.) சீனக்காரம் (மூ.அ.); alum.

**வைகட்சம்** *vaikaṭcam,* பெ. (n.) மேலாடை (உத்தரியம்) (யாழ்.அக.); upper garment.

**வைகடிகன்** *vaikaṭikaṉ,* பெ. (n.) இரத்தினங்களைச் சாணைதீட்டுவோன்; jeweller, one who cuts and polishes gems. (w).

**வைகத்தன்** *vaikaṭṭaṉ,* பெ. (n.) துவாதசாதித்தருள் ஒருவர் (பிங்.); a sun-god, one of tuvātacātittar, q.v.

**வைகரி**[1] *vaikari,* பெ. (n.) வாக்கு நான்கனுள் தெளிவாக காது (செ[illegible]க் கேட்கும் திருந்திய (அட்சர) [illegible]ான ஒலி (சி.சி. 1, 20.); articulate utterance, audible utterance of sounds or worlds, one of four vākku, q.v.

*[Skt. vaikhari > த. வைகரி]*

**வைகரி**[2] *vaikari,* பெ. (n.) 1. **வைகரியங்காரம்** பார்க்க; see vaikari-y-akaṅkāram. 2. திட்டம்; regulation.

**வைகரியகங்காரம்** *vaikari-y-akaṅkāram,* பெ. (n.) அகங்காரத்திரயத்துள் சத்துவ குணமேனும் இராசதகுணமேனும் மேலிட்டிருப்பது (சி.போ.பா.2,2. (வேதா. சூ. 69.); Akaṅkāram or egoism in which cattiuva-kuṇam or irācata-kuṇam predominates, one of akaṅkāra-t-tirayam. q.v.

**வைகற்பிகம்** *vaikaṟpikam,* பெ. (n.) திண்ணமாய்க் கொள்ளப்படாதது; (யாழ். அக.) that which is optional.

**வைகாசி** *vaikāci,* பெ. (n.) 1. சுமை விண்மீன் **விசாகம்** (பிங்.) பார்க்க; the 16th nakṣatra. தமிழ் மாதம் விடை; the month of the Tamil year, corresponding to May-June.

த.வ. விடை

**வைகாசிவசந்தன்** *vaikāci-vacantaṉ,* பெ. (n.) 1. விடை (வைகாசி) மாதத்திற் பெருகியோடுங் காவிரியாறு (யாழ். அக.); the river Cauvery in floods during the month of Vaikāci.

**வைகாரி** *vaikāri,* பெ. (n.) 1. **வைகரியகங்காரம்** பார்க்க; see Vaikāri-y-akaṅkāram. இராசதஞ்சேர் வாக்காதி வைகாரி மருவிவரும் (சிவப்பிர. 27).; (phil.) 2. சத்துவகுணம்; (வேதா. சூ. 69) goodness. or virtue.

**வைகாரிகம்** *vaikārikam,* பெ. (n.) **வைகரியகங்காரம்** பார்க்க; see vaikar-y-akaṅkāram. *"வளர் தைசதம் வைகாரிகமென்று"* (திருக்காளத். பு. சிவலிங்க. 11).

**வைகானசம்** *vaikāṉacam,* பெ. (n.) 1. மாலிய (வைணவ) ஆகமங்களுள் ஒன்று; a Vaiṣṇava agama. 2. கிருகிய சூத்திரவகை; an aphoristic work on household rites. ஆத்திரேய கோத்திரத்து வைகானச சூத்திரத்து; (s.i.i.vi,5).

**வைகானசன்** *vaikāṉacaṉ,* பெ. (n.) 1. வைகானச ஆகமத்தின் படி ஒழுகுபவன் (நாமதீப. 128); follower of the Vaikhāṉasa agama. 2. கான (வன)வாசி (யாழ். அக.); hermit, dweller in the forest.

**வைகிராந்தம்** *vaikirāntam,* பெ. (n.) ஒரு வகை மணி (யாழ். அக.); a kind of gem.

**வைகிருத்தியம்** *vaikiruttiyam,* பெ. (n.) **வைகிருதம்** பார்க்க (யாழ். அக.); see *vaikirudam*

**வைகிருதம்** *vaikirutam,* பெ. (n.) வெறுப்பு; aversion.

**வைகுண்டம்** *vaikuṇṭam,* பெ. (n.) திருமாலுலகம்; (பரிபா. 13, 13, உரை.); Viṣṇu's heaven.

**வைகுண்டவேகாதசி** *vaikuṇṭa-v-ēkātaci,* பெ. (n.) சிலை (மார்கழி) மாதத்துச் வெண்பக்கத்து (சுக்கிலபட்சத்து) ஏகாதசியன்று திருமாலின் பொருட்டுக் கொண்டாடப்படுந் திருநாள்; the 11th titi of the waxing moon in the month of Maṟkali, as a special day of festivity in honour of Viṣṇu.

த.வ. மாலுலகு பதினோரி

**வைகுண்டன்** *vaikuṇṭaṉ,* பெ. (n.) திருமால் (நாம. தீப. 47.); Viṣṇu.

**வைகுந்தம்** *vaikuṇṭam,* பெ. (n.) **வைகுண்டம்** பார்க்க; see vaikuṇtan. "வைகுந்தங் காண்பார் விரைந்து" (திவ். இயற். நான்மு. 70)

**வைச்சிரவணன்** *vaicciravaṇan,* பெ. (n.) 1. குபேரன் (பிங்.); Kubēra. 2. இராவணன் (திவ். பெரியாழ். 1,3,5.) Rāvaṇa.

*[Skt. vaišravaṇa>* த. *வைச்சிரவணன்]*

**வைச்சிரவன்** *vaicciravaṉ,* பெ. (n.) **வைச்சிரவணன்** பார்க்க; (நாமதீப.88) see vaicciravaṉ

**வைச்சிரவனாலயம்** *vaicciravaṉ-ālayam,* பெ. (n.) ஆலமரம்; (யாழ். அக.) banyan tree.

**வைசகி** *vaicaki,* பெ. (n.) **வைகாசி** பார்க்க; see vaikaci. *"பூசனையை ........வைசகியிற் புரிந்தவரும்"* (சிவதரு. சிவஞானதா. 46).

**வைசத்தியம்** *vaicattiyam,* பெ. (n.) தூய்மை; purity. (யாழ். அக.) 2. உண்மை; truth.

**வைசத்திரம்** *vaicattiram,* பெ. (n.) அரசாட்சி (யாழ். அக.); government rule.

*[Skt. vaišastra>* த. *வைசத்திரம்]*

**வைசம்பாயனன்** *vaicampāyaṉaṉ,* பெ. (n.) ஒரு முனிவன் (பாக. வத.i மாயவ. 34); a sage.

**வைசயந்தம்** *vaicayantam,* பெ. (n.) 1. இந்திரன் வளமனை (மாளிகை); the palace of Indra. 2. இந்திரன் கொடி; Indra's flag.

**வைசயந்தி** *vaicayanti,* பெ. (n.) 1. திருமால் அணியும் மாலை; the garland or necklace of Viṣṇu. *"வைசயந்திப் பெயர் மாலையும் மிலைந்திட்டார்"* (சேதுபு. இலக். 22) 2. பெருங்கொடி கட்டப்பெற்றதும் மாளிகையின் முன்புறத்ததுமான கட்டடம்; terraced building in front of a mansion, with a large flag hoisted over it. *"வைசயந்திப் பொன்னிலத்தும்"* (தேவை. 140) 3. கடம்பரது தலைநகரான வனவாசி; Vaṉavāci, the capital of the Kadambas. 4. தழுதாழை (மலை); wind-killer.

**வைசனனம்** *vaicaṉaṉam,* பெ. (n.) பிள்ளைப் பேற்றுக்குரிய மாதம் (யாழ். அக.); closing month of gestation, the period when confinement is expected.

**வைசாகநிலை** *vaicāka-nilai,* பெ. (n.) கூத்து நிலையுள் ஒன்று (சிலப். 3,12, உரை.); a pose in dancing.

**வைசிகம்** *vaicikam,* பெ. (n.) 1. தளிர்; (யாழ். அக.) tender leaf. 2. காரணம்; cause.

**வைசித்திரி** *vaicittiri,* பெ. (n.) புதுமை; strangeness novelty. *"மாயாமற் றன்னை வைத்த வைசித்திரியாலே"* (திருவாய். நூற். 68).

**வைசியநாபி** *vaiciya-nāpi,* பெ. (n.) நீலநிறமுள்ள நாபிவகை; (மூ.அ.) blue variety of aconite.

**வைசியன்** *vaiciyaṉ,* பெ. (n.) நால்வகை வருணத்துள் தனவைசியர், பூவைசியர், கோவைசியர் என்ற முப்பிரிவுள்ள வணிக சாதியான்; trader, merchant, one of nāl-vakai-varunam, q.v., of three classes, viz., taṉa-vaiciyar, pū-vaiciyar, kō-vaiciyar.

**வைசேடி** *vaicēṭi,* பெ. (n.) **வைசேடிகம்** பார்க்க; see vaicetikan. இது தான் வைசேடி யியல்பாகும் (தத்துவப். 177)

**வைசேடிகம்** *vaicēṭikam,* பெ. (n.) கணாதரால் தோற்றுவிக் (தாபிக்)கப்பட்ட மதம்; (மணி. 27, 79.); a system of philosophy, founded by Kaṇātar.

**வைட்டணவன்** *vaiṭṭaṇavaṉ,* பெ. (n.) **வைணவன்** பார்க்க; see vaiṇavan. *"உன் கோயிலில் வாழும் வைட்டணவனெனும் வன்மை கண்டாயே"* (திவ். பெரியாழ். 5,1,3)

*[Skt. vaiśṇava> த. வைட்டணவன்]*

**வைடம்மியம்** *vaiṭammiyam,* பெ. (n.) 1. மாறுபாடு; contrariety. 2. பகைமை (யாழ். அக.); enmity.

*[Skt. vaisamya> த. வைடம்மியம்]*

**வைடாலம்** *vaiṭālam* , ı. பூனை; (யாழ். அக.) cat. 2.மாய்மாலம்; pretence.

**வைடாலவிரதிகன்** *vaiṭāla-viratikaṉ,* பெ. (n.) அறச் (தரும) சிந்தையுள்ளவன் போல நடிப்பவன்; (யாழ். அக.) hypocrite, one who simulates virtue or goodness.

**வைடூரியப்பப்பளி** *vaiṭūriya-p-pappaḷi,* பெ. (n.) சேலை வகை; a kind of saree.

**வைடூரியம்** *vaiṭūriyam,* பெ. (n.) நவமணியி லொன்று; cat's eye, an opalescent gem, one of navamaṇi q.v.

*[Skt. vaidūrya> த. வைடூரியம்]*

**வைணவநிலை** *vaiṇava-nilai,* பெ. (n.) ஒரு வகைக் கூத்துநிலை (சிலப். 3, 12, கீழ்க் குறிப்பு.); a pose in dancing.

**வைணவன்** *vaiṇavaṉ,* பெ. (n.) மாலிய (வைணவ) சமயத்தான்; follower of Vaiṣṇavism.

**வைணவாகமம்** *vaiṇavakamam,* பெ. (n.) பாஞ்சராத்திரம், வைகானசம் என இருவகைப்பட்ட வைணவரின் ஆகமங்கள்; the Vaiṣṇava Agamas or scriptures, of which there ae two, viz., pāñca-rāttiram, and vaikāṉacam.

**வைணவி** *vaiṇavi,* பெ. (n.) வேய்ங்குழல்; (யாழ். அக.); flute, bamboo reed.

**வைணவிகன்** *vaiṇavikaṉ,* பெ. (n.) வேய்ங்குழ லூதுவோன்; (யாழ். அக.); flute player.

*[Skt. vaiṇavika> த. வைணவிகன்]*

**வைணவிகன்**[2] *vaiṇavikaṉ,* பெ. (n.) **வைணிகன்** பார்க்க; (யாழ். அக.); see vainikan.

**வைணிகன்** *vaiṇikaṉ,* பெ. (n.) வீணைவாசிப்பவன்; (யாழ். அக.); one who plays on the viṇai.

**வைணுகம்** *vaiṇukam,* பெ. (n.) யானைத்தோட்டி; (யாழ். அக.) elephant goad.

**வைத்தியசாத்திரம்** *vaittiya-cāttiram,* பெ. (n.) அறுபத்துநான்குகலையுள் ஒன்றான மருத்துவநூல்; medical science, one of aṟupattunālu-kalai, q.v.

**வைத்தியசாலை** *vaittiya-cālai,* பெ. (n.) மருத்துவச்சாலை; hospital, dispensary.

**வைத்தியபாகம்** *vaittiya-pākam,* பெ. (n.) நோயாளிக்காகச் செய்யப்பட்ட மருந்தில் மருத்துவனுக்குரிய பகுதி; physician's share of a medicine prepared by him or under his direction for his patient.

**வைத்தியம்** *vaittiyam,* பெ. (n.) நோய்க்குச் செய்யும் பண்டுவம்; medical treatment.

**வைத்தியன்** *vaittiyan,* பெ. (n.) 1. மருத்துவன்; physician, medical practitioner. 2. வேதாப்பியாசஞ் செய்பவன் (யாழ். அக.); one who studies the Vēdas.

*[Skt. vaidya > த. வைத்தியன்]*

**வைதருப்பநெறி** *vaitaruppa-neri,* பெ. (n.) செறிவு தெளிவு முதலிய பத்துக் குணங்களும் அமையப் பாடுமுறை. (தண்டி. 14.); a style of poetry having ten characteristics, such as terseness, perspicuity, dist. fr. kauta-neri.

**வைதருப்பபாகம்** *vaitaruppa-pākam,* பெ. (n.) **வைதருப்பநெறி** பார்க்க; see Vaitaruppaneri.

**வைதலம்** *vaitalam,* பெ. (n.) ஒருவகை ஏனம் (யாழ். அக.); a kind of vessel.

**வைதவியம்** *vaitaviyam,* பெ. (n.) கைம்மை, (பு. வெ. 10, சிறப்பிற் பொது. 4, கொளு, உரை.); widowhood.

**வைதன்மியதிட்டாந்தம்** *vaitanmiyatiṭṭāntam,* பெ. (n.) சாத்தியமெய்தாவிடத்தில் ஏதுவுமின்மையைக் குறிக்குந் திட்டாந்தம் (மணி. 29, 140.); dissimilar example in which both cāthyam and ētu are absent.

**வைதன்மியதிட்டாந்தவாபாசம்** *vaitanmiya-tiṭṭānta-v-āpācam,* பெ. (n.) சாத்தியாவியாவிருத்தி, சாதனாவியாவிருத்தி, உபயாவியாவிருத்தி, அவ்வெதிரேகம், விபரீதவெதிரேகம் என ஐவகைப்பட்ட போலியான வைதன்மியதிட்டாந்தம் (மணி. 29, 334–5.); semblance of vaitanmiya-tittāntam, of five kinds, viz., cāttiyāviyāvirutti, cātanāviyāvirutti, upayāviyāvirutti, avvetirēkam, viparīta-vetirēkam.

**வைதன்மியம்** *vaitanmiyam,* பெ. (n.) ஒப்பின்மை; dissimilarity.

**வைதனிகம்** *vaitanikam,* பெ. (n.) அற்றைக்கூலி; (யாழ். அக.) daily hire or wage.

**வைதாளி** *vaitāḷi,* பெ. (n.) புகழ்ந்து பாடும் பாட்டு; panegyric song.

**வைதாளிகர்** *vaitāḷikar,* பெ. (n.) அரசரைப் புகழ்ந்து பாடுவோருள் ஒரு வகையினர்; a class of panegyrists attached to kings. *"மாகதப் புலவரும் வைதாளிகரும்"* (சிலப். 26, 74).

**வைதாளியாடுவார்** *vaitāḷi-y-āṭuvār,* பெ. (n.) **வைதாளிகர்** பார்க்க (சிலப். 5, 48, அரும்.); see vaitālikar.

**வைதிககாரியம்** *vaitika-kāriyam,* பெ. (n.) வைதிகச் சடங்கு; religious rite.

**வைதிகச்செலவு** *vaitika-c-celavu,* பெ. (n.) மறைநெறி (வைதிக)காரியங்கட்குரிய பணச் செலவு; expenses incurred in performing religious rites.

**வைதிகச்சொல்** *vaitika-c-col,* பெ. (n.) மறை (வேத) வழக்கான **சொல்**; word occurring in the Vēdas. *"உலகியற்சொல்லை யொழித்து வைதிகச் சொல்லை ஆராயும் நிருத்தமும்"* (தொல். பொருள். 75, உரை)

**வைதிகசைவம்** *vaitika-caivam,* பெ. (n.) மறை (வேத)நெறிப்பட்ட சிவனிய (சைவ) மதம்; the Śaiva religion which is in conformity with the Vēdas. *"ராசாங்கத்தி லமர்ந்தது வைதிகசைவமாதோ"* (தாயு. ஆகாரபு. 10)

**தர்மபத்தர்** *tarmapattar,* பெ.(n.) அறமுறை உசாவல் செய்வோர்; officer in charge of the administration of charities.

**தாசிகம்** *tāsigam,* பெ. (n.) அடிமைத்தனம்; slavery (Pond.)

*[Skt. dāsya > த. தாசிகம்.]*

**தாதிரி**[1] *tātiri,* பெ. (n.) கொடையாளி; (யாழ். அக.) donor.

*[Skt. dātr > த. தாதிரி.]*

**தாதுமான்** *tādumāṉ,* பெ. (n.) 344 (சிகரங்களை) முகடுகளையும் 44 மேனிலைக் கட்டுகளையுமுடைய கோயில் (சுக்கிரநீதி 230); temple with 344 towers and 44 storeys.

*[Skt. dhātumān > த. தாதுமான்.]*

**தாதுராகம்** *taduragam,* பெ.(n.) காவிக்கல் (கம்பரா. வரைக்காட்.44); red ochre.

**தாமதி-த்தல்** *tāmati-,* 11 செ.கு.வி. (v.i.) தங்குதல்; to stay. *"அந்த ஊரில் இரண்டு நாள் தாமதிப்பேன்"* (இ.வ.)

**தார்ச்சூடன்** *tārcūdan,* பெ. (n.) கீலெண்ணெயி லிருந்து செய்யப்படுஞ் சூடன் போன்ற பண்டம்; naphthalene ball.

த.வ. சூடன் குண்டு

**திட்சம்** *tišam,* பெ. (n.) நிகழ்வனவற்றை வெறுப்பின்றி நுகர்தல் (யாழ்.அக.); experiencing without aversion whatever happens.

**தீபாதனம்** *dipātanam,* பெ.(n.) ஓக வகை; a yogic posture.

*[Skt. dipāsana > த. தீபாதனம்.]*

**தீர்க்கன்** *dikkan,* பெ.(n.) முற்காண்பறிவன்; முற்காணி (தீர்க்கதரிசி); prophet. *"தீர்க்கருரை நாடி யறியார் பலர்"* (இரட்சணிய பக்.51)

*[Skt. dirgha > த. தீர்க்கன்.]*

**துகிரிகை** *tukirigai,* பெ.(n.) எழுதுகோல்; writing material

**துச்சம்** *tuccam,* பெ.(n.) இழிவு; low mean habit.

**துர்வியாதி** *turviyādi,* பெ.(n.) கெட்ட நடத்தையால் உண்டாகும் நோய்; venereal disease.

**துரு** *turu,* பெ. (n.) வேதம் முதலியன ஓதும் சந்தவகை; recital of a vēdic text, etc. by a disciple following his preceptor's lead. *"சாகையிலும் கற்பத்திலும் கணத்திலுந் துருச்சொல்லி" (தெய்வச். விறலிவிடு. 243).*

**துர்மார்க்கம்** *tur-mārkkam,* பெ.(n.) தீயவழி; ill way.

*[Skt. dur-mārga > த. துர்மார்க்கம்]*

**தூமகேது** *tūmakēdu,* பெ.(n.) விண்வீழ் கொள்ளி; comet, falling-star.

**தூமியம்** *dūmiyam,* பெ.(n.) புகை; smoke.

*[Skt. dhūmya > த. தூமியம்]*

**தேக்சா**[2] *tēkšā,* பெ.(n.) வாய்கன்றகுடம்; broad vessel.

*[U. tēks > த. தேக்சா.]*

**தேகாந்தம்** *tēgāndam,* பெ.(n.) உடலின் இறுதி சாவு; death.

**தைலி**[1] *taili,* பெ.(n.) பணப்பை; money bag.

*[Skt. thaili > த. தைலி]*

**நக்கல்** *nakkal,* பெ.(n.) பகடி, ஏகடியம்; redicule.

*[Arb. naqqāl > த. நக்கல்.]*

**நமசிவாய** *namasivāya,* பெ.(n.) ஐந்தெழுத்து மந்திரம்; the five sacred syllables of saivites.

*[Skt. namaš-šivāya > த. நமசிவாய.]*

**நயனதீட்சை** *nayanatitcai,* பெ. (n.) அருணோக்க நோன்புறுதி; generosity ceremonial fast.

*[Skt. nayana-diksā > த. நயனதீட்சை.]*

**நரசிங்கம்** *narašingam,* பெ.(n.) மாந்தஅரி; incarnation of vishnu in the form of lion and man.

**நவக்கிரகம்** *nava-k-kiragam,* பெ. (n.) தொண்கோள்; nine planets

*[Skt. nava-graha > த. நவக்கிரகம்.]*

**நவம்** *navam,* பெ. (n.) ஒன்பது, தொண்டு; nine.

*[Skt. nava > த. நவம்.]*

**நாசூக்கு** *nāšū-k-ku,* பெ.(n.) நயத்திறம்; nice and talented approach.

*[U. nāzūk > த. நாசூக்கு.]*

**நாத்திகன்** *nāttigan,* பெ.(n.) இறை மறுப்பாளன் நம்பா மதத்தன்; atheist.

*[Skt. nāstika > த. நாத்திகன்.]*

**நாதன்** *nādan,* பெ. (n.) 1. தலைவன்; headman. 2. முனிவன்; sage. 3. கடவுள்; god. 4. கணவன்; husband.

*[Skt. nātha> த. நாதன்.]*

**நாதசுவரம்** *nādašuvaram,* பெ.(n.) பெரு வங்கியம்; ஓலகம்; a musical wind instrument.

த.வ. ஓலகம்

*[Skt. nad-švara> த. நாதசுவரம்.]*

**நாதி** *nādi,* பெ. (n.) 1. உறவினன்; relatiive. 2. பேணுநன்; care taker.

*[Skt. nāti > த. நாதி.]*

**நாமா** *nāmā,* பெ.(n.) ஆவணம்; document.

*[U. nāma > த. நாமா.]*

**நாவி** *nāvi,* பெ.(n.) கொப்பூழ்; navel.

*[Skt. nābhi > த. நாவி.]*

**நாவிதன்** *nāvidan,* பெ.(n.) முடி திருத்தாளன் மழிக்குநன்; barbar.

*[Skt. nāvita > த. நாவிதன்.]*

**நித்தியானந்தன்** *nittiyānandan,* பெ.(n.) நீடுமகிழ்நன்; an happy person for ever.

*[Skt. nity-ā-nanda > த. நித்தியானந்தன்]*

**நீதிபதி** *nīdipadi,* பெ.(n.) நயனகர்; அறமன்ற நடுவர்; judge.

*[Skt. nīti-bati > த. நீதிபதி.]*

**பசு** *pašu,* பெ.(n.) 1. ஆ; cow. 2. எருது; ox. 3. விடையோரை; rishaba. 4. வேள்விவிலங்கு; animal meant for sacrifice.

*[Skt. pašu > த. பசு.]*

**பசுபதி** *pašupadi,* பெ. (n.) சிவன்; God.

*[Skt.pašu-pati > த. பசுபதி.]*

**பண்டிதன்** *pandidan,* பெ.(n.) 1. புலவன்; scholar. 2. மருத்துவன்; doctor.

*[Skt. pandita>த. பண்டிதன்.]*

**பத்தினி** *pattini,* பெ.(n.) கற்புக்கரசி கற்புடையாட்டி; a chaste woman.

**பத்மநாபன்** *padmanāpan,* பெ.(n.) உந்தித் தாமரையான்; Vishnu

**பத்மபூசன்** *padmapūšan,* பெ. (n.) அரசு தரும் விருதின் பெயர் – தாமரை நல்லணி; padmabushan-an award given by Govt. of India.

*[Skt. padma-būshan > த. பத்மபூசன்.]*

**பத்மவிபூசண்** *padmavāpūšan,* பெ.(n.) அரசு தரும் விருதின் பெயர் – தாமரை எழிலணி; a higher award given by Govt. of India.

*[Skt. padma-vi-būshan > த. பத்மவிபூசன்.]*

**பத்மசிரி** *padmaširi,* பெ.(n.) அரசு தரும் விருதின் பெயர் – தாமரைத் திரு; award given by Government.

*[Skt. padma-sri > த. பத்மசிரி.]*

**பயம்** *payam,* பெ.(n.) அச்சம்; fear.

*[Skt. bhaya > த. பயம்.]*

**பர்பி** *parpi,* பெ.(n.) தெங்கின்மா; a sweet.

*[U. bar-fi > த. பர்பி.]*

**பரிசோதனை** *parišōdanai,* பெ.(n.) நன்கு ஆராய்கை; நெடுநோட்டம்; check up.

**பரீட்சை** *parītšai,* பெ. (n.) 1. தேர்வு; examination. 2. ஆய்வு; test. 3. ஆராய்ச்சி; investigation.

*[Skt. parikša> த. பரீட்சை.]*

**பலூன்** *palūn,* பெ.(n.) ஊதுபை, காற்று மூட்டை; balloon.

*[E. balloon> த. பலூன்.]*

**பன்** *pan,* பெ.(n.) மாவினால் செய்த பண்டம்; bun.

**த.வ. வள்ளப்பம்**

**பாக்கியசாலி** *bākki-yā-sāli,* பெ. (n.) நல்வினையாளன்; a lucky person.

**த.வ. பேற்றாளன்**

**பாண்டித்தியம்** *paṇḍi-t-tiyam,* பெ.(n.) கல்வித்திறம்; erudite scholarship.

**பிச்சை** *piccai,* பெ.(n.) இரப்புணவு; taking alms.

*[Skt. bhiksā > த. பிச்சை.]*

**பிசாசு** *piśāsu,* பெ.(n.) பேய்; devil, gost.

*[Skt. piśaca > த. பிசாசு.]*

**பிதா** *pidā,* பெ.(n.) 1. தந்தை; father. 2. கடவுள்; god.

**பிதிர்** *pidir,* பெ.(n.) இறந்த ஈன்றோர் ஆதன்; souls of the deceased ancestors.

**பிரபாகரன்** *pirabākaran,* பெ. (n.) 1. கதிரவன்; sun. 2. நெருப்பிறை; God of fire.

*[Skt. prabhākara> த. பிரபாகரன்.]*

**பிரமரிசி** *pirama-risi,* பெ.(n.) பார்ப்பனமுனிவன்; a brahmin priest.

*[Skt. brahna-ṛsi > த. பிரமரிசி.]*

**பிராணி** *pirāṇi,* பெ.(n.) உயிரி; animal.

*[Skt. prāṇin > த. பிராணி.]*

**பீதி** *pīti,* பெ.(n.) அச்சம், விதிர் விதிப்பு; sudden fear.

*[Skt. bhiti> த.பீதி.]*

**புகார்** *pugār,* பெ. (n.) 1. பெருங்கூச்சல்; loud noise. 2. குறையீடு; report.

**புண்ணியம்** *punniyam,* பெ.(n.) 1. அறம்; virtue. 2. நல்வினைப் பயன்; effect of virtue.

*[Skt. puṇya > த. புண்ணியம்.]*

**புத்தி** *putti,* பெ.(n.) கரணியம் காணும் அறிவு; rational thinking.

*[Skt. buddhi > த. புத்தி.]*

**புரட்டாசி** *puraṭṭāci,* பெ.(n.) கன்னிமாதம்; name of a month.

*[Skt. prōsthapada > த. புரட்டாசி.]*

**பூ** *pū,* பெ.(n.) பிறப்பு; birth.

*[Skt. bhū > த. பூ.]*

**பூமத்தியரேகை** *pūmattiyarēgai,* பெ.(n.) நண்ணிலக்கோடு; equator.

*[Skt. bhū-madgya-rēkha > த. பூமத்தியரேகை.]*

**பெட்ரோல்** *petrōl,* பெ.(n.) கன்னெய்; petrol.

*[E. petrol > த. பெட்ரோல்.]*

**பெல்ட்** *pelt,* பெ. (n.) 1. வார்; waist-band. 2. அரைக்கச்சை; strap of leather.

*[E. belt > த. பெல்ட்.]*

**பெனாயில்** *penāil,* பெ. (n.) அழுக்கு நீக்கியாகப் பயன்படும் ஒருவகை நெய்மி; an oil substance.

*[E. phenol > த. பெனாயில்.]*

**மக்கர்** *makkar,* பெ.(n.) இடக்கு, இடைஞ்சல்; rudeness.

*[Ar. makr > த. மக்கர்.]*

**மகம்மது** *magammadu,* பெ.(n.) புகழாளி; a respectable epithet in Islam.

*[Ar. muhammad > த. மகம்மது.]*

**மஞ்சுளா** *mañjulā,* பெ. (n.) அழகி, எழிலி; beautiful woman.

*[Skt.mañjula>த. மஞ்சுளா.]*

**மண்டூகம்** *maṇḍūgam,* பெ.(n.) தவளை; frog.

*[Skt.mañdūka >த. மண்டூகம்.]*

**மயினா** *mayānā,* பெ.(n.) நாகணவாய்ப்புள்; maina bird.

*[U. myna > த. மயினா.]*

**மார்க்கடம்** *markkadam,* பெ.(n.) குரங்கு; monkey.

*[Skt.markaṭa >த. குரங்கு.]*

**மரியாதை** *mariyādai,* பெ. (n.) நன்மதிப்பு, மதிப்புரவு; respect.

*[Skt. maryādā> த. மரியாதை.]*

**மனோரமா** *manōramā,* பெ.(n.) மனவெழிலி; a proper name.

*[Skt. manō-ramā > த. மனோரமா]*

**மிட்டாதார்** *mittātār,* பெ. (n.) நிலக்கிழார்; land lord.

*[H. mitthā-dhār > த. மிட்டாதார்.]*

**மிதவாதி** *mitavādi,* பெ.(n.) மென்போக்காளன்; moderate person.

*[Skt. mita-vādi(n) > த. மிதவாதி.]*

**முசாபர்** *mušabar,* பெ.(n.) 1. பயணி; traveller. 2. சுற்றுச் செலவு; tour.

**மூலாதாரம்** *mūlādāram,* பெ.(n.) அடிப்படை; basis, fundamental.

*[Skt. mūlādhāra > த. மூலாதாரம்.]*

**யாகசாலை** *yāgašālai,* பெ.(n.) வேள்வி மண்டபம்; sacrificial hall.

*[Skt. yāga-šālā > த. யாகசாலை.]*

**ரங்கநாதன்** *ranganādan,* பெ.(n.) அரங்கநம்பி (பிங்.); a proper name.

*[Skt. ranga-nātha > த. ரங்கநாதன்.]*

**ரசம்** *rasam,* பெ.(n.) தெளிசாறு, சாறு; juice.

*[Skt. rasa > த. சாறு.]*

**ரசீது** *rašedu,* பெ.(n.) பற்றுச்சீட்டு; receipt.

*[Skt. rasid > த. ரசீது.]*

**ரட்சகன்** *ratcagan,* பெ.(n.) பாதுகாப்பாளன், புரவலன்; patron.

*[Skt. raksaka > த. ரட்சகன்.]*

**ரணம்** *ranam,* பெ. (n.) புரைக்காயம்; deep sore.

*[Skt. vrana > த. ரணம்.]*

**ரணவைத்தியம்** *rana-vaidyam,* பெ.(n.) அறுவைப்பண்டுவம்; surgery.

*[Skt. vrana-vaidya > த. ரணவைத்தியம்.]*

**ரவாலட்டு** *ravāladdu,* பெ.(n.) நொய்யுலட்டு; a sweet.

*[H. ravā+ Skt. laddu > த. ரவாலட்டு]*

**ராக்கெட்** *rākket,* பெ.(n.) ஏவுகணை; rocket.

*[E. rocket > த. ராக்கெட்.]*

**ராகு** *rāgu,* பெ. (n.) கருங்கோள்; rāgu.

*[Skt. rāhu > த. ராகு.]*

**ரிசபம்** *risapam,* பெ.(n.) எருது, காளை; ox.

*[Skt. rsabha > த. ரிசபம்.]*

**ரேடியோ** *rēdiyō,* பெ.(n.) வானொலி; radio.

*[E. radio > த. ரேடியோ.]*

**ரோசா** *rōšā,* பெ.(n.) முளரி; rose.

*[Lentin. rosa > த. ரோசா.]*

**வங்கி** *vangi,* பெ.(n.) வைப்பகம்; bank.

*[E. bank > த. வங்கி.]*

**வசனம்** *vasanam,* பெ. (n.) 1. உரை; prose. 2. உரையாடல்; dialogue

*[Skt. vacana > த. வசனம்.]*

**வதந்தி** *vadandi,* பெ.(n.) அலர், பொய்ப்பரப்பு; rumour.

*[Skt. vadanti > த. வதந்தி.]*

**வரதட்சணை** *varadatcanai,* பெ. (n.) மாப்பிள்ளைக் கட்டணம்; dowery.

*[Skt. vara-daksinā > த. வரதடசனை.]*

**வராகம்** *varāgam,* பெ.(n.) பன்றி; pig.

*[Skt. varāha > த. வராகம்.]*

**வாசனை** *vāsanai,* பெ.(n.) நறுமணம்; frogrance.

*[Skt. vāsanā > த. வாசனை.]*

**வாசத்தலம்** *vācattalam,* பெ.(n.) வாழ்விடம், இருப்பிடம்; residence.

**வாத்தியம்** *vāddiyam,* பெ.(n.) இன்னியம்; musical instrument.

*[Skt. vādya > த. வாத்தியம்.]*

**வாத்தியார்** *vāddiyār,* பெ.(n.) ஆசிரியர்; teacher.

*[Skt.upādhyāya>த. வாத்தியார்.]*